# யுத்த காண்டம்

(இரண்டாம் பகுதி)




அண்ணாமலைப் பல்கலைக் கழகம்

உ

கவிச்சக்கரவர்த்தி

## கம்பர்

இயற்றிய

# இராமாயணம்

## யுத்த காண்டம்

(இரண்டாம் பாகம்)




அண்ணாமலைப் பல்கலைக் கழகம்

1969

# உள்ளுறை

# கம்பராமாயணப் பதிப்பாசிரியர் குழு

--: o :--

தலைவர் :

பேராசிரியர், வித்துவான், திரு. கோ. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள், M.A., B.L.

உறுப்பினர்கள் :

பேராசிரியர், திரு. லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார் அவர்கள்

திருவாளர், பி. ஸ்ரீ. ஆச்சாரியார் அவர்கள்

" நீ. கந்தசாமிப் பிள்ளை அவர்கள்

" மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை அவர்கள்

" பு. ரா. புருஷோத்தம நாயுடு அவர்கள்

# பதிப்புரை

உலகம் யாவையுந் தாமுள வாக்கலும்
நிலைபெ றுத்தலு நீக்கலு நீங்கலா
அலகி லாவிளை யாட்டுடை யாரவர்
தலைவ ரன்னவர்க் கேசர ணுங்களே.

கல்வியிற் பெரியராகிய கம்பர் இயற்றிய இராமாவதாரமாகிய பெருங்காப்பியம் இதுவரை கிடைத்துள்ள பழைய ஏட்டுச் சுவடிகள் அச்சுப் புத்தகங்கள் ஆகியவற்றுடன் ஒப்பு நோக்கித் தொகுக்கப் பெற்ற பாடபேதங்களோடும் உரை விளக்கத்தோடும் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் சார்பில் திருந்திய பதிப்பாக வெளியிடப்பெற்று வருவதனைத் தமிழகம் நன்குணரும். இந்நூலின் முதல் ஐந்து காண்டங்களும் பத்துத் தொகுதிகளாக வெளியிடப் பெற்றன. ஆறுவது காண்டமாகிய யுத்த காண்டம் ஆறு பகுதிகளாகப் பகுக்கப் பெற்று அதன் முதற் பகுதி சென்ற ஆண்டு வெளியிடப் பெற்றது. இரண்டாம் பகுதி இப்பொழுது வெளிவருகின்றது. இதன்கண் இராவணன் வானரத்தானைகாண் படலம் முதல் கும்பகருணன் வதைப் படலம் முடிய ஆறு படலங்கள் உள்ளன. இராவணன் வானரத்தானைகாண் படலம், முதற்போர்ப் படலம், கும்பகருணன் வதைப் படலத்தில் 171 முதல் 363 முடியவுள்ள செய்யுட்கள் ஆகிய வற்றுக்கு வித்துவான் திரு. செ. வேங்கடராமச் செட்டியார் அவர் களும், கும்பகருணன் வதைப் படலத்தில் 1 முதல் 170 முடியவுள்ள செய்யுட்களுக்கு வித்துவான் திரு. உ. பழநி M.O.L. அவர்களும், மகுடபங்கம் படலம், அணிவகுப்புப் படலம், அங்கதன் தூதுப் படலம் ஆகியவற்றுக்கு வித்துவான் திரு. க. வெள்ளைவாரணன் அவர்களும் உரை வரைந்துள்ளார்கள்.

தமிழாராய்ச்சித்துறைத் தலைவர் தலைமையில் சிரோமணி வித்துவான் திரு. P. S. இராமாநுஜாச்சாரியார், புலவர் திரு, K. இராமச்சந்திரன் முதலிய தமிழாராய்ச்சித்துறை ஆசிரியர்கள் முப்பத்தேழு சுவடிகளை ஒப்பு நோக்கித் தொகுத்த பாட வெறு பாடுகள் இந்நூலிற் பிற்சேர்க்கையாகத் தரப்பெற்றுள்ளன.

இப்பதிப்புக்கு வேண்டிய ஏட்டுச் சுவடிகளைக் கொடுத்துதவிய மதுரைத் தமிழ்ச் சங்கத்தார்க்கும் தஞ்சைச் சரசுவதிமகால் நூல் நிலையத்தார்க்கும் சென்னை அரசாங்கக் கையெழுத்து நூல் நிலையத்தார்க்கும் திருப்பதி ஸ்ரீ வேங்கடேசுவரர் கீழ்த்திசைக் கல்லூரி நூல் நிலையத்தார்க்கும், ஈரோடு தமிழாசிரியர் திரு. வே. ரா

தெய்வசிகாமணிக் கவுண்டர் அவர்களுக்கும், தெங்கம்புதூர் சாத்தான் குட்டிப் பிள்ளையவர்களுக்கும் பல்கலைக் கழகத்தின் நன்றியுரியதாகும். இப்பதிப்புப் பணி இனிது நிறைவேற உதவிபுரிந்த கம்பராமாயணப் பதிப்பாசிரியர்குழு உறுப்பினர்களாகிய பேராசிரியர் திரு. லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார், திரு. பி. ஸ்ரீ. ஆச்சாரியார், திரு. தீ. கந்தசாமிப் பிள்ளை, திரு. மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை, திரு. பு. ரா. புருஷோத்தம நாயுடு ஆகிய பெருமக்களுக்கும், இக்குழுவின் தலைவராக இருந்து இப்பணியினை இனிது நிறைவேற்றிய பேராசிரியர் வித்துவான் திரு. கோ. சுப்பிரமணிய பிள்ளை M.A., B.L. அவர்களுக்கும், பல்லாண்டுகள் இக்குழுவின் செயலாளராக இருந்து பயனுள்ள பணிபுரிந்த அறிஞர் திரு. தி. கி. இராமாநுஜையங்கார் அவர்களுக்கும், தமிழாராய்ச்சித்துறை ஆசிரியர்களாக இருந்து அவ்வப்பொழுது கம்பராமாயணப் பணியில் ஈடுபட்டுத் தொண்டாற்றிய அன்பர்களுக்கும் பல்கலைக் கழகச் சார்பில் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

இத்தகைய தமிழ்ப்பணிகள் இனிது நிகழ்தற்கு வேண்டிய பொருளுதவியினைப் புரிந்துவரும் இந்தியப் பல்கலைக் கழக மானியக் குழுவினர்க்கு நமது நன்றியும் பாராட்டும் என்றும் உரியனவாகும்.

இங்ஙனம் தண்ணார் தமிழ் வளர்க்கும் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் சார்பில் சிறந்த தமிழ் நூல்கள் பல திருந்திய பதிப்பாக வெளிவருதற்கு இந்தியப் பேரரசும் தமிழ் நாட்டரசும் வேண்டும் பொருளுதவி புரிந்து ஆதரித்துவரும் என நம்புகின்றோம்.

இந்நூலினை வனப்புற அச்சிட்டுதவிய சென்னைக் கமர்ஷியல் அச்சகத்தாரது பணி பாராட்டற்குரியதாகும்.

அண்ணாமலைநகர்
16—5—69

க. வெள்ளைவாரணன்
துணைப்பேராசிரியர் தமிழாராய்ச்சித்துறை
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

# 10. இராவணன் வானரத்தானை காண் படலம்

இராவணன் வடக்கு வாயிற் கோபுரத்தின் மீதேறி இராமனுடைய வானர சேனையினைக் கண்டதைத் தெரிவிக்கும் படலம் என்பது இத்தலைப்பின் பொருள். இப்படலப் பெயர் 'இராவணன் தானைகாண் படலம்' என அச்சிட்ட சில பிரதிகளிலும், சில ஏட்டுப் பிரதிகளிலும் காணப்படுகிறது. 31, 40, 23, 44, 70, 41, ஆகிய எண்ணுள்ள பிரதிகளில் கோபுரப் படலம்' எனக் குறிக்கப்பட்டுள்ளது. 61 ஆம் எண்ணுள்ள மதுரைத் தமிழ்ச் சங்க ஏட்டுப் பிரதியில் மட்டும் 'தானைகாண் படலம்' எனக் காணப்படுகின்றது. பெரும்பாலான சிறந்த பல ஏடுகளில் 'இராவணன் வானரத்தானை காண் படலம்' என்னுந் தலைப்பே காணப்படுகின்றமையின் அத்தலைப்பே ஈண்டுக் கொள்ளப்படுவதாயிற்று.

இதற்கு முன்னதாகிய இலங்கைகாண் படலம் 'அன்னமாநகரின் வேந்தன் அரிக்குலப் பெருமை காண்பான், சென்னி வான் தடவுஞ் செம்பொற் கோபுரத்தும்பர்ச் சேர்ந்தான்' என முடிகின்றது. வடக்கு வாயிற் கோபுரத்தேறிய இராவணன், பல சிகரங்களையுடைய ஒரு குன்று ஒரு மலைமேல் நிற்பதுபோல் காணப்பட்டான். இனிப் போர் [illegible] ாகின்ற தென்னும் எண்ணத்தால் அவனுடைய தோள்கள் [illegible] உள்ளம் கிளர்ச்சியுற்றது. அவனுடைய குடை பத்துத் திசைகளிலும் நிழலைப் பரப்பி மிகச் சிறப்புற விளங்கிற்று. இராவணன் பக்கத்திலிருந்தோர் கவரி வீசிக்கொண்டிருந்தனர். அதனல் அவனுடைய மேலாடை மலையிலிருந்து விழும் அருவியை ஒத்து விளங்கிற்று. வானத்திலுள்ள உருப்பசி, திலோத்தமை முதலிய தெய்வப் பெண்கள் சானகியின் அழகுக்குத் தோற்றமையால் அழகிழந்து இராவணனுக்குப் புறம்பே ஒதுங்கி நின்றனர். அவனுடைய பற்கள் வெள்ளிய நிலவை வீசத் தோளில் நீலமணி மாலை கண்ணுக்கினிதாய் விளங்கிற்று. அறிஞர் அரிய நூற்பொருள்களை எடுத்துச் சொல்லிக்கொண்டிருந்தனர். நாரதர் அவனுக்கு விருப்பமான சாமகீதத்தைப் பாடிக்கொண்டிருந்தார். ஆயினும் இராவணன் உள்ளம் அவைகளில் ஈடுபடாமல் சீதையையே நினைத்துக் கொண்டிருந்தது. வில்லும் வாளும் ஏந்திய நூறு கோடி அரக்கர்கள் சூழ்ந்து கொண்டிருந்தனர். பூமியிலும் ஆகாயத்திலும் இயங்குபவர்களாகிய பலர் மேகத்தின் குரலையொத்த பல வாச்சியங்களை இசைத்தனர். நாகியரும் வித்தியாதரப் பெண்களும் தேவ

மாதர்களும் பஞ்சமம் என்னும் இனிய இசையைப் பாடிக்கொண் டிருந்தனர். நஞ்சைக் கக்கும் கண்ணிணையுடைய சிலர் தண்டம் ஏந்தியவராய்க் காவல் செய்து கொண்டிருந்தனர். அரண்மனையைக் காவல் செய்யும் பிரம்பேந்திய பதினுயிரவர் அவனைச் சூழ்ந்து நின்றனர். இவ்வாறு நின்ற இராவணன் இராமனைக் கண்டதும் கோபத்தால் வாயை மடித்தான்; கண்களினின்றும் நெருப்புப் பொறிகள் வெளிப்பட்டன; ஆதலின் சூரியனை வெகுண்டு பற்றும் இராகுவை ஒத்துத் தோன்றினன். இராமனைத் தானே தெரிந்து கொண்ட இராவணன் மற்றையோர்களைத் தெரிவிக்குமாறு சாரனைக் கேட்டான். சாரன் இலக்குவன், சுக்கிரீவன் அங்கதன், அநுபன், நீலன், நளன், சாம்பவான், மருத்துவர் மைந்தர் ஆகியோருடைய வீரச் செயல்களை விளங்கக் கூறியதோடு குமுதன், குமுதாக்கன், கவயன் கவயாக்கன், கேசரி, முரபன், சரபன், சதவலி, பனசன், இடபன், சுசேடணன், ததிமுகன், சங்கன் ஆகியோரையும் காட்டி இவர்களை எண்ணி யுரைப்பதென்பது இயலாதெனக் கூறினன். அதுகேட்ட இராவணன் சினங்கொண்டு சிறு நகை செய்து 'காட்டி லும் மலையிலும் திரியும் மான் இனங்கள் சிங்கத்தை என்செய்ய வல்லன?' என்று இகழ்ந்துரைத்தான். இதுவே இப்படலத்தின் பொருட் சுருக்கமாகும்.

இப்படலத்தில் மூன்று வகைச் சந்தங்கள் அமைந்துள்ளன.

இப்படலத்தில் கூறப்பட்டுள்ள செய்திகள் வான்மீகி ராமாய ணத்தில் 26, 27, 28, 29, 30ஆம் சருக்கங்களிற் கூறப்பட்டுள்ளன.

இராவணன் பல பனை மரங்களின் உயரத்தையுடைய மாளிகை யில் ஏறி நின்று இராமனுடைய சேனையைக் கண்டானென்றும், இராமனைக் கண்டதும் வெகுண்டானென்றும் வான்மீகி கூறுகிறார். கம்பர், இராவணன் கோபுரத்தின் மீது ஏறி நின்ற தோற்றத்தினைப் பதினுறு செய்யுட்களில் வருணனை நயம்படக் கூறுகிறார்.

சாரன் இராவணனுக்கு நீலன், அங்கதன், சுக்கிரீவன், நளன், சுவேதன், குமுதன், ரம்பன், சரபன், பனசன், வினதன், கிரோத னன், கவயன், தாரன், தும்மிரன், சாம்பவான், தம்பன், சன்னுதன், கிரதனன், பிரமாதி, கவாக்ஷன், கேசரி, மைந்தன், துவிதன், அநுமன் ஆகியோரைக் காட்டிப் பின்னரே இராமனைக் காட்டுகின்றான் என்று வான்மீகி கூறுகிறார். ஆனால் கம்பர், இராவணன் இராமனைத் தானே தெரிந்து கொண்டதாகக் கூறி மற்றையோரை அறிவிக்கு மாறு சாரனை வினவியதாகக் கூறுகின்றார்.

இப்படலத்தில் ஒன்பது மிகைப்பாடல்கள் உள்ளன.

# 10. இராவணன் வானரத்தானை காண் படலம்

இராவணன் கோபுரத்தின்மேல் நின்ற நிலை

6987. கவடுகப் பொருத காய்களி றன்னான்
அவடுயக் கின்மல ரம்புற வெம்பும்
சுவடுடைப் பொருவி றோள்கொ டனேகம்
குவடுடைத் தனியொர் குன்றென நின்றான்.

கவடு உகப் பொருத காய்களிறு அன்னான்,
அவள் துயக்கின் மலர் அம்புஉற வெம்பும்
சுவடுடைப் பொருவு இல் தோள்கொடு அனேகம்
குவடுடைத் தனி ஓர் குன்று என, நின்றான்.

பொ :—(தன்னைக் கட்டிய) மரக்கிளை முறிந்திடும்படி (அதனை) மோதித் தாக்கிய சினத்தையுடைய ஆண் யானையை ஒத்த இராவணன், சீதாபிராட்டியின் மேல் வைத்த ஆசையால் (மன்மதனுடைய) மலரம்பு வந்து தைக்க, அதனால் வருந்தும், (படைக்கலங்களைத் தாங்குதலால்) சுவடு பொருந்திய ஒப்பற்ற தோள்களோடு, பல சிகரங்களையுடைய ஒப்பற்ற ஒரு மலைபோல நின்றான்.

கு :—யானை தான் கட்டப்பட்டுள்ள கட்டுத் தறியை மோதித் தாக்கி முறிக்கும் இயல்புடையதாதலின் 'கவடுகப் பொருத காய் களிறு' எனப்பட்டது. சீவக சிந்தாமணி யுள்ளும் 'கந்தடு களிறு' (1219) என வந்துள்ளது. படைக்கலங்களைத் தாங்குதலால் தோள் கள் சுவடு பொருந்துவனவாயின. இராவணன் ஏறி நின்ற கோபுரம் ஒரு மலை போன்றிருக்க, அதன்மீது பத்துத் தலைகளையுடைய இராவணன் நின்ற தோற்றம், பல சிகரங்களையுடைய குன்று ஒன்று அதன் மேல் நின்ற தோற்றத்தை ஒத்திருந்தது. தலைகள் சிகரங்களைப் போன்றிருக்க இராவணன் குன்று போன்றான். வெம்பும் தோள், சுவடுடைத் தோள், பொருவில் தோள் எனத் தனித்தனி கூட்டுக. படைக்கலம் தாங்கும் வலிய தோள்கள் மன்மதனுடைய மலரம்பால் வெம்புவன ஆயின என இகழ்ச்சிக் குறிப்புத் தோன்றக் கூறினர்: "ஒண்ணுதற் கோஒ உடைந்ததே ஞாட்பினுள், நண்ணாரு முட்கு மென் பீடு" (1088) என்னும் குறட் கருத்தினை ஒப்புநோக்குக. (1)

**6988.** பொலிந்த தாமினிது போரென லோடும்
மலிந்த நங்கை யெழிலால் வலிநாளும்
மெலிந்த தோள்கள் வடமேருவின் மேலும்
வலிந்து செல்ல மிசைசெல்லும் மனத்தான்.

பொலிந்த தாம் இனிது போர் எனலோடும்,
மலிந்த நங்கை எழிலால் வலி நாளும்
மெலிந்த தோள்கள் வடமேருவின் மேலும்
வலிந்து செல்ல, மிசை செல்லும் மனத்தான்.

பொ :—(அங்ஙனம் நின்ற இராவணன்), பெரும் போர் இனிதாகத் தோன்றிவிட்டது என்ற மாத்திரத்தில், சிதாபிராட்டியின் மிக்க அழகை நினைத்தலினுல் வலிமை நாளுக்கு நாள் மெலியப்பெற்ற தோள்கள் வட மேருவைக் காட்டிலும் வலிமையுற்று வளர்ந்து செல்ல, (அப்போர்) மேல் செல்லும் மனத்தை யுடையவனுனன்.

கு :—பொலிதல் என்றது ஈண்டு யாரும் அறிய முற்பட்டுத் தோன்றுதலே. எனலோடும் மிசைசெல்லும் மனத்தான் என முடிக்க. சீதாபிராட்டியின் அழகில் ஈடுபட்டு மெலிந்த தோள்கள் போர் தோன்றிவிட்டது என்ற மாத்திரத்தில் போரில் வென்று அவளைத் திண்ணமாக அடையலாம் என்னும் எண்ணத்தால் வட மேருவைக் காட்டிலும் வலிமையுற்று விளங்குவனவாயின. போர் தோன்றிவிட்டது என்று கேட்ட மாத்திரத்தில் வீரர்கள் தோள் பூரித்தல், 'போரெனிற் புகலும் புனைகழல் மறவர்' (31) என்னும் புறநானூற்று அடியாலும், 'போரென்ன வீங்கும் பொருப்பன்ன பொலங்கொள் திண்தோள்' (பாலகாண்டம் - 992) என்பதாலும் அறியப்படும். மிசை செல்லும் - (போர்) மேல் செல்லும். (2)

**6989.** செம்பொன் மௌலி சிகரங்க டயங்க
அம்பொன் மேருவரை கோபுர மாக
வெம்பு காலினை விழுங்கிட மேனாள்
உம்பர் மீதுநிமிர் வாசுகி யொத்தான்.

செம்பொன் மௌலி சிகரங்கள் தயங்க,
அம்பொன் மேரு வரை கோபுரம் ஆக,
வெம்பு காலினை விழுங்கிட, மேல் நாள்
உம்பர் மீது நிமிர் வாசுகி ஒத்தான்.

பொ :—(அக்கோபுரத்திலுள்ள) செம்பொன்னாலாகிய கலசங்களைக் கொண்ட உச்சிகள் சிகரங்களைப் போல விளங்க, கோபுரம் அழகிய பொன்மயமான மேரு மலையாக, (தன்னோடு) சினந்து மாறுபட்ட வாயுதேவனை வெல்லுதற் பொருட்டு முற்காலத்திலே (மேரு மலையின்) உச்சியின்மீது உயர்ந்தெழுந்து கவித்துக்கொண்ட வாசுகியை ஒத்துத் தோன்றினான்.

கு :—இராவணன் ஏறி நின்ற கோபுரம் மேரு மலை போலவும், அக்கோபுரத்திலுள்ள கலசங்களைக் கொண்ட உச்சிகள் அம் மேரு மலையிலுள்ள சிகரங்கள் போலவும் விளங்கின. அக்கோபுரத்தில் நின்ற இராவணன். வாயுதேவனோடு போட்டியிட்டு மேருமலையைக் கவித்து நின்ற வாசுகியை ஒத்து விளங்கினான். வாயுதேவனுக்கும் ஆதிசேடனுக்கும் தம்மில் யார் வலிமிக்கவர் என்பது காரணமாகப் போட்டியெழத் தேவர்களின் சொற்படி ஆதிசேடன் மேருமலையின் ஒரு சிகரத்தை மூடிக்கொள்ள. வாயுதேவன் தன் ஆற்றல் மிகுதியால் அச்சிகரத்தைப் பெயர்த் தெறிந்தனன். அதுவே இலங்கையாயிற்று என்று கூறுவர். வாசுகி என்றது ஈண்டு ஆதிசேடனை. செம்பொன் என்பது ஆகுபெயராய்ச் செம்பொன்னாலாகிய கலசங்களை உணர்த்திற்று. மௌலி - கோபுரத்தின் உச்சி. உம்பர் - மேலிடம். கால் - காற்று; ஈண்டு வாயுதேவனைக் குறித்தது. விழுங்குதல் என்பது கருத்துப் பொருளாய் வெல்லுதலைக் குறித்தது. (3)

**6990.** தொக்க பூதமவை யைந்தொடு துன்னிட்
டொக்க நின்றதிசை யொன்பதொ டொன்றும்
பக்க முந்நிழல் பரப்பி வியப்பால்
மிக்கு நின்றகுடை மீது விளங்க.

தொக்க பூதம் அவை ஐந்தொடு துன்னிட்டு
ஒக்க நின்ற திசை ஒன்பதொடு ஒன்றும்,
பக்கமும், நிழல் பரப்பி, வியப்பால்
மிக்கு நின்ற குடை மீது விளங்க.

பொ :—ஒன்றுகூடியுள்ள (மண், நீர், தீ, காற்று, வான் என்னும் பூதங்கள் ஐந்தோடும் நெருங்கி ஒன்றுபட்டுள்ள பத்துத் திசைகளிலும் அவற்றின் பக்கங்களிலும் நிழலைப் பரப்பி யாவரும் வியக்கும்படி மேம்பட்டு நின்ற குடை (இராவணன்) மீது நிழலைத் தந்து விளக்க முற்றுத் தோன்றவும்.

கு :—ஒடுங்குங் காலத்து மண் நீரிலும், நீர் தீயிலும். தீ காற்றிலும், காற்று வானிலும் ஒடுங்குமாதலாலும், தோன்றுங் காலத்து வானிலிருந்து காற்றும், காற்றிலிருந்து தீயும், தீயிலிருந்து நீரும், நீரிலிருந்து மண்ணும் தோன்றுமாதலானும் 'தொக்க பூதமவை ஐந்து' என்றார். பெருந்திசை நான்கும் கோணத்திசை நான்கும் வானமும் பூமியுமாகத் திசை பத்தாயின. 'உலகே ழெனத் திசை பத்தெனத்தா னொருவனுமே' (திருவாசகம்-திருத்தோணோக்கம்-5) என்னும் திருவாசக அடியாலும் திசை பத்தென்பது உணரப்படும். உலகங்களுக்கெல்லாம் நிழல் செய்து நின்ற குடையாதலின் 'வியப்பால் மிக்கு நின்ற குடை' என்றார். இது முதல் பதினாறும் செய்யுள் வரையில் ஒவ்வொரு செய்யுளிறுதியிலும் வரும் செயவென் எச்சங்கள் அடுக்கிப் பதினேழாம் செய்யுளிலுள்ள 'நின்றான், கண்டான்' என்பதனோடு முடிவுபெறும். துன்னுதல் - நெருங்குதல். ஐப்பெரும் பூதங்களும் கலந்த மயக்கமே உலகமாதலின் அக்குடை உலகிற்கு நிழல் செய்து விளங்கியதனை 'பூதமவை ஐந்தொடு துன்னிட்டு, ஒக்கநின்ற திசை ஒன்பதொ டொன்றும், பக்கமும் நிழல்பரப்பி, என்பதனாற் குறித்தார். உலகம் முழுவதற்கும் அவன்குடை நிழல் செய்து நின்றதென்பது இதனாற் பெறப்பட்டது. (4)

**6991.** கைத்த ருங்கவரி வீசிய காலால்
நெய்த்தி ருண்டுயரு நீள்வரை மீதில்
தத்தி வீழுமரு வித்திரள் சாலு
முத்த ரீகநெடு மார்பி னுலாவ.

கைத் தரும் கவரி விசிய காலால்,
நெய்த்து இருண்டு உயரும் நீள்வரை மீதில்
தத்தி வீழும் அருவித் திரள் சாலும்
உத்தரீகம், நெடு மார்பின் உலாவ.

பொ :—கையில் கொண்ட சாமரத்தை வீசுதலால் எழுந்த காற்றால், பளபளப்புடையதாய்க் கருநிறமுற்று உயர்ந்துள்ள நீண்ட மலைமீது தத்தி விழும் அருவிக் கூட்டத்தின் தன்மையை ஒத்துள்ள (இராவணனுடைய) மேலாடை. (அவனுடைய) அகன்ற மார்பினிடையே அசையவும்,

கு :—மலை இயற்கை வளத்தால் பளபளப்புடையதாகவும் அடர்ந்த சோலைகளையுடைமையால் இருண்டும் விளங்குகிறது. நெய்த்து - பளபளப்புடையதாகி. மலையிலிருந்து விழும் அருவிக்குத் துகிலை உவமையாகக் கூறுதல், 'அவிர் துகில் புரையும் அவ்வெள்

ளருவி' (குறிஞ்சிப் பாட்டு-55) என்பதனாலும், 'வேறு பல் துகிலின் நுடங்கி' (திருமுருகாற். 296) என்பதனாலும் அறியப்படும். ஈண்டுத் துகிலுக்கு அருவி உவமையாகக் கூறப்பட்டுள்ளது. கவரி வீசிய காற்றால் மேலாடை இராவணன் மார்பில் அசைந்த தோற்றம் மலையின் மீது தத்தி விழும் அருவித் திரளை ஒத்து விளங்கியது. உத்தரீகம் - மேலாடை. (5)

6992. வான கத்தமு துருப்பசி வாசத்
தேன கத்திரு திலோத்தமை செவ்வாய்
மேன கைக்குயிலின் மென்மையர் யாரும்
சான கிக்கழ குகுத்தயல் சார.

வானகத்து அமுது உருப்பசி, வாசத்
தேன் அகத் திரு திலோத்தமை, செவ்வாய்
மேனகைக் குயிலின் மென்மையர் யாரும்
சானகிக்கு அழகு உகுத்து, அயல் சார.

பொ :—வானுலகத்திலுள்ள அமுதுபோல்பவளான உருப்பசியும் நறுமணத்தோடு தேனையும் கொண்ட (மலரின்) இடத்து (உறைபவளான) திருமகளை ஒத்த திலோத்தமையும், சிவந்த வாயினையுடைய மேனகை முதலிய குயிலின் குரல்போலும் இனிய மொழியினையுடைய மெல்லியலாராகிய மகளிர் யாவரும் சானகிக்கு(த் தாம் அழகில் தோற்றமையால் தம்முடைய) அழகு கெட்டு, (இராவணன்) புறம்பே ஒதுங்க,

கு :—'மேனகை குயிலின் மென்மையர்' எனற்பாலது சந்த இன்பம் நோக்கி 'மேனகைக் குயிலின் மென்மையர்' என வல்லொற்று மிக்கது. அழகுஉகுத்து - அழகைச் சிதறவிட்டு; ஈண்டு அழகு கெடுதலை உணர்த்தி நின்றது. உருப்பசியும் திலோத்தமையும் மேனகை முதலிய ஏனைய மெல்லியலார் யாவரும் அணியினுக்கு அழகு செய்யும் சானகியை நோக்கத் தாம் அழகில் தோற்றமையால் பொலிவிழந்த தோற்றத்தோடே இராவணன் புறம்பே ஒதுங்க என்பதாம். இராவணன் கருத்தில் இத்தெய்வ மங்கையர் சீதையின் அழகுக்குத் தோற்று நின்றனர் என்பது குறித்தவாறாயிற்று (6)

6993. வீழி யின்கனி யிதழ்ப்பணை மென்றோள்
ஆழி வந்த வரமங்கைய ரைஞ்ஞூற்

றேழி ரண்டினி னிரண்டு பயின்ரோர்
சூழி ரண்டு புடையும் முறைசுற்ற.

வீழியின் கனி இதழ், பணை மென தோள்,
ஆழி வந்த அரமங்கையர், ஐஞ்ஞூற்று
ஏழ் இரண்டினின் இரண்டு பயின்ரோர்,
சூழ் இரண்டு புடையும் முறை சுற்ற.

பொ :—வீழிப்பழம் போன்ற வாயிதழையும் மூங்கில் போன்ற மெல்லிய தோள்களையுமுடைய திருப்பாற் கடலினின்றும் தோன்றி வந்த தெய்வப் பெண்கள் பதினான்காயிரம் என்னும் எண்ணிக்கை யமைந்தோர் சூழ்ந்த (இராவணனது) இரண்டு பக்கத்திலும் முறையே சுற்றி நிற்கவும்.

கு :—பணை மென் தோள் என்பதற்குப் பெருத்த மென்மை வாய்ந்த தோள்கள் என்றும் பொருள் கூறலாம். ஐஞ்ஞூற்று ஏழிரண்டின் இரண்டு—ஐந்நூற்றால் பெருக்கிய எழினை இரண்டாகிய இரண்டால் பெருக்குதல்; அஃதாவது பதினான்காயிரம் என்றபடி. $(7 \times 500 \times 2 \times 2 = 14000)$. (7)

**6994.** முழைப டிந்தபிறை முள்ளெயி றொள்வாள்
இழைப டிந்தவிள வெண்ணில வீனக்
குழைப டிந்ததொரு குன்றின் முழங்கா
மழைப டிந்தனைய தொங்கல் வயங்க.

முழை படிந்த பிறை முள் எயிறு, ஒள்வாள்
இழை படிந்த இள வெண்ணிலவு ஈன,
குழை படிந்தது ஒரு குன்றில், முழங்கா
மழை படிந்தனைய தொங்கல் வயங்க.

பொ :—குகையின்கண் படிந்த பிறை போன்ற (வாயின்கண் உள்ள) கூரிய கோரப்பற்கள், சிறந்த ஒளியை ஆபரணங்களி லிருந்து தோன்றுகின்ற இள வெண்ணில வொளியோடு வீசவும், குண்டலம் படியப்பெற்ற (தோளாகிய) ஒப்பற்ற குன்றிலே முழங்கி மேகம் படிந்தாற்போன்ற நீல மணி மாலை விளங்கவும்.

கு :—குகையிற் படிந்திருக்கின்ற பிறை போன்று வாயிலுள்ள கோரப் பற்கள் விளங்குகின்றன. அவை ஆபரணங்களின் ஒளி யோடு ஒளியை வீசுகின்றன. ஈண்டுக் குன்று என்பது குண்டலம் படிய விளங்கும் குன்று போன்ற தோளைக் குறித்து நின்றது

முழுங்கா - முழங்கி ; செய்யா என்னும் வாய்பாட்டு வினை எச்சம். நீலமணிமாலை நிறத்தாலும் ஒலியாலும் மேகத்தை ஒத்துள்ளமை யின், 'முழங்கா மழைபடிந்தனைய தொங்கல்' எனப்பட்டது. (8)

**6995.** ஓத நூல்கள் செவியின்வழி உள்ளம்
சீதை சீதையென வாருயிர் தேய
நாத வீணையிசை நாரதர் பாட
வேத கீதவமிழ் தள்ளி விழுங்க.

ஓத நூல்கள் செவியின் வழி, உள்ளம்
சீதை சீதை என ஆர் உயிர் தேய,
நாத வீணை இசை நாரதர் பாட
வேத கீத அமிழ்து அள்ளி விழுங்க.

பொ :—(அறிஞர்கள்) நூற்பொருளைச் செவியினிடத்து ஓதவும் சாம வேத கீதமாகிய அமிழ்தத்தினை அள்ளிப் பருகுமாறு நாரதர் ஒலியோடு கூடிய வீணையின் இசையோடு பாடவும், (இவைகளிற் செல்லாது இராவணனது) உள்ளம் சீதை சீதை எனவே நினைத்துக் கொண்டிருத்தலால் (அவனது) அரிய உயிர் தேயவும்.

கு :—அறிஞர்கள் நூற்பொருளை ஓதவும், நாரதர் வீணையிசை யோடு பாடவும், இராவணன் மனம் அவைகளிற் செல்லாமல் சீதை சீதை எனவே நினைத்து அரிய உயிரும் தேயுமாறு வருந்துவதா யிற்று. இராவணன் சாமவேதத்தில் மிகுந்த ஈடுபாடுடையவனாத லின் நாரதர் சாமவேத கீதத்தைப் பாடுவாராயினர். (9)

**6996.** வெங்க ரத்தரயில் வாளினர் வில்லோர்
சங்க ரற்கும்வலி சாய்வில் வலத்தோர்
அங்க ரக்கர்சத கோடி யமைந்தோர்
பொங்க ரத்தவிழி யோர்புடை சூழ.

வெங்கரத்தர், அயில் வாளினர், வில்லோர்,
சங்கரற்கும் வலி சாய்வு இல் வலத்தோர்,
அங்கு அரக்கர் சதகோடி அமைந்தோர்,
பொங்கு அரத்த விழியோர் புடை சூழ.

பொ :—கொடிய கையையுடையவரும் கூரிய வாளேந்தியவரும் வில்லேந்தியவரும் சிவபெருமானுக்கும் வலிமையில் தோலாத

வலிமை பெற்றவரும் நூறு கோடியென்னும் எண்ணிக்கை யமைந்த வருமாகிய அரக்கர்கள் இரத்தம் பொங்கும் விழியினையுடையோராய்ப் பக்கத்திலே சூழ்ந்து வரவும்,

கு :—தாங்கிய வாளாலும் வில்லாலுமன்றியும் கைகளாலும் கொடியர் என்பது புலப்பட, 'வெங்கரத்தர்' என்றார். சங்கரன் எல்லாவற்றையும் அழித்தொழிக்கும் கடவுளாதலின் ஆற்றல் மிகுந் தவனாவன். அத்தகைய சங்கரனுக்கும் தோலாத வலிமையுடையோர் என்பது புலப்படச் 'சங்கரற்கும் வலி சாய்வில் வலத்தோர்' என்றார். சாய்வு இல் - குறைவில்லாத. வலத்தோர் - வலிமையுடையவர். அங்கு - அசைச்சொல். (10)

6997. கல்லி லங்கை யுலகங் கவர்கிற்போர்
நல்லி லங்கை முதலோர் நவையில்லோர்
சொல்லி லங்கொர் சதகோடி தொடர்ந்தோர்
வில்லி லங்குபடை யோர்புடை விம்ம.

கல்லில் அம்கை உலகம் கவர்கிற்போர்,
நல் இலங்கை முதலோர், நவை இல்லோர்,
சொல்லில் அங்கு ஓர் சத கோடி தொடர்ந்தோர்,
வில் இலங்கு படையோர் புடை விம்ம.

பொ :—கல்லி எடுப்பதாயின் அழகிய கையினாலே உலகத்தைக் கவர வல்லவர்களும் நல்ல இலங்கையிலே முதன்மைபெற்று விளங் குபவர்களும் குற்றமற்றவர்களும் சொல்லுமிடத்து ஒரு நூறு கோடி என்னும் எண்ணிக்கை யமைந்தவரும் ஆகிய விளங்குகின்ற வில்லா கிய படையினை யுடையோர் (இராவணன்) பக்கத்திலே பெருகி வரவும்,

கு :—கல்லுதல் - தோண்டுதல். கவர்கிற்போர் - கவர்ந்தெடுக் கும் ஆற்றலுடையோர். கில்-ஆற்றலுணர்த்தும் இடைநிலை. அங்கு என்பது அசை. சதம் - நூறு. சதகோடி தொடர்ந்தோர்-நூறு கோடி என்னும் எண்ணிக்கை யமைந்தோர். (11)

6998. பாரி யங்குநர் விசும்பு பரந்தோர்
வாரி யங்குமழை யின்குரல் மானும்
பேரி யங்கண்முரு டாகுளி பெட்கும்
தூரி யங்கடலி னின்று துவைப்ப.

பார் இயங்குநர், விசும்பு பரந்தோர்,
வார் இயங்கு மழையின் குரல் மானும்
பேரி, அம்கண் முருடு, ஆகுளி, பெட்கும்
தூரியம் கடலின் நின்று துவைப்ப.

பொ :—பூமியில் சஞ்சரிப்பவர்களும் வானுலகத்தில் பரவியுள்ள வர்களுமாகிய பலர், நீருடன் சஞ்சரிக்கின்ற மேகத்தின் குரலை ஒக்கும் முரசும், அழகிய கண்ணையுடைய முருடும், சிறு பறையும் ஆகிய (யாவரும்) விரும்பும் வாச்சியங்களைக் கடலைப் போல நின்று ஒலிக்கவும்,

கு :—வார் - நீர். 'மழையின் குரல் மானும் பேரி' என்பதனோடு 'இடியென முழங்கு முரசின்' (புறம். 17 : 39) என்னும் பகுதி ஒப்பு நோக்கத்தக்கது. ஆகுளி - சிறு பறை. தூரியம்-வாச்சியப்பொது. துவைத்தல் - ஒலித்தல். (12)

6999. நஞ்சு மஞ்சுவிழி நாகியர் நாணி
வஞ்சி யஞ்சுமிடை விஞ்சையர் வானத்
தஞ்சொ லின்சுவை யரம்பைய ரோடும்
பஞ்ச மஞ்சிவணு மின்னிசை பாட.

நஞ்சும் அஞ்சும் விழி நாகியர், நாணி
வஞ்சி அஞ்சும் இடை விஞ்சையர், வானத்து
அம்சொல் இன்சுவை அரம்பையரோடும்
பஞ்சமம் சிவணும் இன் இசை பாட.

பொ :—விடமும் (தன்னிடத்து அத்தகைய கொடுமைத்தன்மை இல்லை என்று) அஞ்சுகின்ற விழியையுடைய நாகலோகத்துப் பெண் களும், வஞ்சிக்கொடி நாணமுற்று அஞ்சும் இடையையுடைய வித்தியாதரப் பெண்களும், வானத்திலுள்ள இன்சுவையமைந்த அழகிய சொல்லினைக்கொண்ட தெய்வ மகளிரோடு சேர்ந்து, பஞ்ச மம் என்னும் பண் பொருந்திய இனிய இசையைப் பாடவும்,

கு :—நாகியர் - நாகலோகத்துப் பெண்கள். கண்டமாத்திரத்தி லேயே எதிர்ப்பட்டாருயிரைக் கொல்லும் கொடுமையுடைய விழிக் குத் தன்னை உண்டாலன்றி உயிர் கவரும் ஆற்றலில்லாத நஞ்சு அஞ்சுவதாயிற்று. நாகியரும் விஞ்சையரும் அரம்பையரோடு சேர்ந்து இன்னிசை பாட என்க. பஞ்சமம் சிவணும் இன்னிசை - பஞ்சமம் என்னும் பண்ணமைந்த இனிய இசை. (13)

7000. நஞ்சு கக்கியெரி கண்ணினர் நாமக்
கஞ்சு கத்தர்கதை பற்றிய கையர்
மஞ்சு கக்குமுறு சொல்லினர் வல்வாய்க்
கிஞ்சு கத்தர்கிரி யொத்தனர் சுற்ற.

நஞ்சு கக்கி எரி கண்ணினர், நாமக்
கஞ்சுகத்தர், கதை பற்றிய கையர்,
மஞ்சு உகக் குமுறு சொல்லினர், வல்வாய்க்
கிஞ்சுகத்தர், கிரி ஒத்தனர், சுற்ற.

பொ :—நஞ்சினை வெளிப்படுத்திக் கொண்டு எரிகின்ற கண்களை யுடையவர்களும், தண்டு பற்றிய கையை உடையவர்களும், மேகமும் அஞ்சி உருகும்படியாகக் குமுறி ஒலிக்கும் சொல்லையுடையவர்களும், முள் முருக்கம் பூப்போன்று சிவந்த லலிய வாயையுடையவர்களும், மலைபோன்ற பெருந் தோற்ற முடையவர்களும் ஆகிய அச்சத்தை விளைக்கத்தக்க சட்டையணிந்த சேவகரென்போர் சுற்றிக்கொண்டே இருக்கவும்.

கு :—கஞ்சுகம் - சட்டை. ' கஞ்சுக முதல்வர் ஈரைஞ் நூற்று வரும். (சிலம்பு - கால்கோள் - 138) கதை - தண்டு. 'மஞ்சு உக' என்பதற்கு மஞ்சும் உக என உம்மை விரித்துப் பொருள் கொள்க. கிஞ்சுகம் - முள் முருக்கு. கிஞ் சுகத்த வல் வாயர் என விகுதி பிரித்துக் கூட்டப்பட்டது. பலரையுங் கொன்றுண்ணுதலால் குருதி படிந்த கொடிய வாயினையுடையராதலின், 'வல்வாய்க் கிஞ்சுகத்தர்' என்றார். சட்டை யணிந்த மலையை ஒத்த சேவகர்கள் நஞ்சை வெளிப்படுத்துங் கண்ணினராய், கதைபற்றிய கையினராய், மேகமும் உதிரும் கடுஞ் சொல்லினராய்ச், சிவந்த வாயினராய்க் கூட்டத்தை விலக்கிக் காவல் புரிந்துகொண்டு நின்றனர் என்க. (14)

7001. கூயு ரைப்ப குலமால் வரையேனும்
சாயு ரைப்பரிய வாய தடந்தோள்
வாயு ரைத்த கலவைக்களி வாசம்
வேயு ரைப்பதென வந்து விளம்ப.

கூய் உரைப்ப குலமால் வரையேனும்,
சாய் உரைப்ப அரியவாய தடந்தோள்
வாய் உரைத்த கலவைக்களி வாசம்,
வேய் உரைப்பது என வந்து விளம்ப.

பொ :—(உவமை யாதற்கு ஏற்றன என்று யாவரும்) தெளிவாகச் சொல்லுதற்குரிய எட்டுத் திக்கு மலைகளும் கூட ஒப்புமை கூறுதற்கு அரியவாய பெரிய தோள்களினிடத்தே பூசிய கலவைச் சாந்தின் மணம், (இராவணன் வந்து விட்டா னென்பதை) ஒற்று வந்து உரைப்பது போல உரைக்கவும்.

கு :—குல மால் வரை – கூட்டமாயுள்ள பெரிய மலைகள்; ஈண்டு எட்டுத் திக்கு மலைகளை உணர்த்திற்று. சாய் - சாயல்; ஈண்டு இது ஒப்பு என்னும் பொருளை உணர்த்திற்று. தோளில் பூசிய கலவைச் சாந்தின் மணம், இராவணன் வருவதனை அறிவித்து நின்றது. உரைப்ப என்பதனுள் அகரம் தொக்கது. 'கலவைக் கனிவாசம் வே யுரைப்ப தென் வந்து விளம்ப' என்றது, சொல்லாதது சொல்லு வது போலக் கூறப்பட்டது. தடந்தோள்வாய் உரைத்த – பெரிய தோளினிடத்துப் பூசிய. வாய் - ஏழாம் வேற்றுமை உருபு. வேய் – ஒற்று. (15)

**7002.** வேத்தி ரத்த ரெரிவீசி விழிக்கும்
நேத்தி ரத்த ரிறைநின்றுழி நில்லாக்
காத்தி ரத்தர் மனைகாவல் விரும்பும்
சூத்தி ரத்தர் பதினுயிரர் சுற்ற.

வேத்திரத்தர், எரி வீசி விழிக்கும்
நேத்திரத்தர், இறை நின்றுழி நில்லாக்
காத்திரத்தர், மனை காவல் விரும்பும்
சூத்திரத்தர், பதினுயிரர் சுற்ற.

பொ :—(கையில்) பிரம்பை யுடையவரும் நெருப்பினை வெளிப் படுத்தி விழிக்கும் கண்களை யுடையவரும் சிறிது பொழுது கூட நின்ற விடத்து நில்லாத உடம்பை யுடையவரும் அரண்மனை யினைக் காவல் செய்தலை விரும்பும் சூட்சுமத் தன்மை உடையவருமாகிய பதினுயிரவர் (காவலாகச்) சுற்றிக் கொண்டே இருக்கவும்.

கு :—வேத்திரம் - பிரம்பு. இறை - சிறிது பொழுது. இறையும் என உம்மை விரிக்க: காத்திரம் – உடம்பு. சூத்திரம் – திட்ப நுட்ப மமைந்த நூற்பா. ஆதலின் சூத்திரத்தர் என்பது சூட்சுமத் தன்மை உடையோரைக் குறிப்பதாயிற்று. (16)

## இராவணன் இராமனைக் காணுதல்

**7003.** தோர ணத்தமணி வாயின் மிசைச்சூல்
நீர ணைத்தமுகி லாமென நின்ருன்
ஆர ணத்தையரி யைம்மறை தேடும்
கார ணத்தைநிமிர் கண்கொடு கண்டான்.

தோரணத்த மணி வாயில் மிசை, சூல்
நீர் அணைத்த முகில் ஆம் என நின்ருன்,
ஆரணத்தை, அரியை, மறை தேடும்
காரணத்தை, நிமிர் கண்கொடு கண்டான்.

பொ :—தோரணம் கட்டப்பட்ட அழகிய வாயிலை யுடைய (கோபுரத்தின்) மீது நீராகிய கருவைக் கொண்ட மேகம் போல நின்றவனுகிய இராவணன், வேதப் பொருளா யிருப்பவனும், அரி என்னும் பெயரை யுடையவனும், வேதங்களால் தேடப்படும் மூலப் பொருளா யிருப்பவனுமாகிய இராமனை நிமிர்ந்த கண்களால் பார்த்தான்.

கு :—கோபுர வாயிலுக்கு அழகு தரும்படி தோரணங் கட்டப்பட்டுள்ள தாதலின், 'தோரணத்த மணி வாயில்' என்ருர். இராவணன் கருநிற முடையனுதலின் அவன் கோபுரத்தின் மீது நின்ற தோற்றம் நீர் கொண்டு கருத்த மேகம் மேலே நின்ற தோற்றத்தை ஒத்திருந்தது. அரி என்றது திருமாலின் அவதாரமாகிய இராமனை. இறைவனுடைய இயல்பை மறை உணர்த்துவதாயினும் முற்ற உணர்த்த இயலாமையின் 'மறை தேடும்' என்ருர். வேதத்தின் சாரமாகிய இறைவனை அகக் கண்ணுல் ஆர்வ முறக் காணுமல் புறத்தேயுள்ள ஊனக் கண்ணுல் செருக்குற்றுப் பார்த்தான் என்பது புலப்பட 'நிமிர் கண்கொடு கண்டான்' என்ருர். (17)

## இராவணன் கோபங் கொள்ளுதலும் தீநிமித்தம் தோன்றுதலும்

**7004.** மடித்த வாயினன் வயங்கெரி வந்து
பொடித்தி ழிந்தவிழி யன்னது போழ்தின்
இடித்த வன்றிசை யெரிந்தது நெஞ்சம்
துடித்த கண்ணிணெ டிடத்திர டோள்கள்.

மடித்த வாயினன்; வழங்கு எரி வந்து
பொடித்து இழிந்த விழியன்; அது போழ்தின்,
இடித்த வன்திசை; எரிந்தது நெஞ்சம்;
துடித்த, கண்ணிணெடு இடத் திரள் தோள்கள்.

பொ :—(இராவணன், கோபத்தால்) உதட்டை மடித்துக் கவ்விய வாயினை யுடையவனாய் விளங்குகின்ற (சினத்) தீத் தோன்றிச் சிறு சிறு பொடியாய் வெளிப்படும் விழியினை உடையவனானான்; அப்பொழுது வலிய திசைகளெல்லாவற்றிலும் பேரொலி தோன்றிற்று; (அவனுடைய கோபத்தால்) நெஞ்சம் பற்றி எரியலாயிற்று; (தீ நிமித்தமாக அவனுடைய) இடக் கண்ணினோடு திரண்ட இடத் தோள்களும் துடித்தன.

கு :—இராவணன் உதட்டை மடித்துக் கவ்வியமையாலும், கண்களினின்றும் நெருப்புப் பொறி தோன்றியமையாலும் அவன் வெகுண்டமை புலப்படும். ஆடவர்க்கு இடக் கண்ணும் இடத் தோளும் துடித்தல் தீ நிமித்தமாகும் இவ்வாறு தீ நிமித்தம் தோன்றி இராவணனுக்கு வருங் கேட்டினைப் புலப்படுத்தியுங் கூட அவன் அதனைச் சிறிதும் உணராதவனாயினன். துடித்தன என்னும் பலவின்பால் வினை முற்று அன் சாரியை பெறாமல் துடித்த என நின்றது. (18)

## இராமனைக்கண்ட இராவணன் வெகுளுதல்

**7005.** ஆக ராகவனை யவ்வழி கண்டான்
மாக ராகநிறை வாளொளி யோனை
ஏக ராசியினி னெய்த வெதிர்க்கும்
வேக ராகுவென வெம்பி வெகுண்டான்.

ஆக, ராகவனை அவ்வழி கண்டான்;
மாக ராக நிறை வாள் ஒளியோனை
ஏக ராசியினின் எய்த எதிர்க்கும்
வேக ராகு என, வெம்பி வெகுண்டான்.

பொ :—இவ்வாறு தீ நிமித்தம் தோன்றவும், இராமபிரானை அப்போது கண்டவனான இராவணன், ஆகாயத்திலே நிறைந்த செந்நிறமான மிக்க ஒளியை யுடைய சூரியனை, தான் இருந்த இராசியில் வர, (அப்போது) எதிர்க்கும் வேகமுள்ள இராகுவைப் போல மனம் புழுங்கிக் கோபித்தான்.

கு :—மாகம் – ஆகாயம். மாகம் நிறை ராக வாளொளியோனை எனக் கூட்டுக. இராகு, கேது இரண்டும் ஓர் இராசியில் ஒன்றரை ஆண்டுகள் இருக்கும். சூரியன் ஓர் இராசியில் ஒரு மாதமிருக்கும். இராகு இருக்கின்ற இராசியின் நட்சர பாதத்தில் சூரியன் வரும் போது அது சூரியனைப் பற்றும். இராகு இருந்த இராசியில் சூரியன்

வரும் போது இரண்டும் ஒரே இராசியில் இருத்தலின் அது 'ஏகராசி' எனப்பட்டது. சூரியனும் சந்திரனும் ஒருங்கு சேரும் அமாவாசையை 'ஏக ராசி' என்றுங் கூறுவர். இராகு சூரியனைப் பற்றுதல் அமாவாசையில் தான் நிகழும். ஈண்டு இராகு என்றது அதன் வால் பகுதியாகிய கேதுவை உணர்த்திற்று. (19)

இராவணன் வினவும், சாரனது விடையும்

**7006.** ஏனை யோனிவ னிராம னெனத்தன்
மேனி யேயுரைசெய் கின்றது வென்றிச்
சேனை வீர ரையுந் தெரிக்கென்று
தான்வி னுவவெதிர் சாரன் விளம்பும்.

**'ஏனையோன் இவன் இராமன் எனத் தன்**
**மேனியே உரை செய்கின்றது; வென்றிச்**
**சேனை வீரரையும் தெரிக்(க)' என்று**
**தான் வினவ, எதிர், சாரன் விளம்பும்.**

பொ :—'யாவரினும் வேறுபட்டுத் தோன்றுகின்றவனாகிய இவன் இராமன் என இவனுடைய மேனியே தெரிவிக்கின்றது; வெற்றியையுடைய இச் சேனைக் குரிய படை வீரர்களையும் தெரிவிப்பாயாக' என்று (இராவணன் சாரனைக்) கேட்கச் சாரன் மறுமொழி கூறுபவன் ஆனான்.

கு :—இராமபிரான் தெய்வீக ஒளியால் யாவரினும் மேம்பட்டுத் தோன்றுகின்றமையின் மேனியின் விளக்கத்தைக் கொண்டே 'இவன் இராமன்' என இராவணன் நினைத்தான், 'கண்டவர் தம்மனம் வழங்கும் கண்ணபுரத் தம்மானை.' (பெரிய திருமொழி 8-1-9) என்னும் திருமங்கை யாழ்வார் வாக்கும் இராமன் என்னும் பெயரின் பொருளாகிய தன்னைக் காண்பவர்களைத் தன்பால் ஈடுபடச் செய்பவன் என்பதும் ஈண்டு நினைவு கூர்தற்குரியன. 'மேனியே உரை செய்கின்றது' என்பது சொல்லாதது சொல்லுவது போலச் சொல்லப்பட்டது. தெரிவிக்க என்பதிலுள்ள விவ்விகுதி தொக்கது. விளம்பும் என்பது செய்யுமென் முற்று. (20)

**7007.** இங்கி வன்படை யிலங்கையர் மன்னன்
தங்கை யென்னலு முதிர்ந்த சலத்தால்
அங்கை வாள்கொடவ ளாகம் விளங்கும்
கொங்கை நாசிசெவி கொய்து குறைத்தான்.

'இங்கு இவன், "படை இலங்கையர் மன்னன்
தங்கை" என்னலும், முதிர்ந்த சலத்தால்,
அங்கை வாள்கொடு அவள் ஆகம் விளங்கும்
கொங்கை, நாசி, செவி, கொய்து குறைத்தான்.

பொ:—'இங்குள்ள இவன்,' படை வலி சான்ற இலங்கையர்க்கு அரசனாகிய இராவணனுடைய தங்கையாவள், (இவள்)' என்று சொல்லக் கேட்டதும் பொங்கிய கோபத்தால் (தன்னுடைய) அழகிய கையிலிருந்த வாளினைக் கொண்டு அந்தச் சூர்ப்பணகையின் மார்பில் விளங்கும் தனங்களையும் நாசியையும் செவியையும் அறுத்து வீழ்த்தின இலக்குவனாவன்.

கு:—சலம் - கோபம். சாரன் இலக்குவனைப் பற்றி இச் செய்யுளாலும் அடுத்து வரும் செய்யுளாலும் கூறுகின்றான். இச் செய்யுளால் இலக்குவனது அஞ்சாத் தன்மை புலப்படுத்தப்பட்டது. (21)

**7008.** அறக்க ணல்லதொரு கண்ணில னாகி
நிறக்க ருங்கடலு ணேமியி னின்று
துறக்க மெய்தியவ ருந்துற வாத
உறக்க மென்பதனை யோட முனிந்தான்.

'அறக்கண் அல்லது ஒரு கண் இலன் ஆகி,
நிறக் கருங்கடலுள் நேமியின் நின்று,
துறக்கம் எய்தியவரும் துறவாத
உறக்கம் என்பதனை ஓட முனிந்தான்.

பொ:—'தருமத்தினிடத் தல்லது வேறோரிடத்தும் தன் கண்ணைச் செலுத்தாதவனாகிக் கருமை நிறம் வாய்ந்த கடலுக்குப் (பாதுகாப்பாக நிற்கும்) சக்கர வாள கிரியைப் போல நின்று, சுவர்க்க லோகத்தை யடைந்தவர்களும் கூட விடுதற் கியலாத உறக்கம் என்பது (தன்னை விட்டு) ஓடும்படி அதனைக் கோபித்தவனாவன்.

கு:—'அறக்கண் அல்லது ஒரு கண்ணிலனாகி' என்பதற்கு அறமே உருவான இராமனாகிய கண்ணிடத்துத் தன் கண்ணைச் செலுத்துவ தல்லது வேறோரிடத்தும் கண்ணைச் செலுத்தாதவனாகி என்றும் பொருள் கூறலாம். நேமி - சக்கரவாளகிரி. 'நிறக் கருங் கடலுள் நேமியின் நின்று' என்பதற்குக் கருநிறக் கடல் போன்ற இராமனுடைய ஆணைக்கு உட்பட்டு நின்றும் சக்கர வாளகிரி போல அவனுக்குப் பாதுகாப்பாக இருந்து என்றும் பொருள் கொள்ளலாம்.

2

இவ்வாறு பொருள் கொள்ளுதற்கு 'நின்று' என்பதனைக் கருநிறக் கடலுள் நின்று எனவும் நேமியின் நன்று எனவும் ஈரிடத்தும் கூட்டுக. உறக்கம் யாவராலும் துறத்தற்கரி தென்பது 'துறக்கம் எய்தியவரும் துறவாத உறக்கம்' என்பதனுல் பெறப்பட்டது. அத்தகைய உறக்கத்தையும் துறந்து இராமனுக்குப் பாதுகாவலாக இலக்குவன் விளங்கிய திறம் இதனுல் கூறப்பட்டது. (22)

**7009.** கைய வன்ருெட வமைந்த கரத்தான்
ஐய வாலியொடிவ் வண்ட நடுங்கச்
செய்த வன்செருவி னிற்றிகழ் கின்ருன்
வெய்ய வன்புதல்வன் யாரினும் வெய்யான்.

'கை அவன் தொட அமைந்த கரத்தான்,
ஐய! வாலியொடு இவ் அண்டம் நடுங்கச்
செய்த வன்செருவினில் திகழ்கின்ருன்
வெய்யவன் புதல்வன்; யாரினும் வெய்யான்.

பொ :—'ஐயனே, அந்த இலக்குவ்ன் (தன்) கையினுல் பிடித்துக் கொள்ள அமைந்த கையை யுடையவன், வாலியோடு இவ்வுலகம் நடுங்கச் செய்த கொடிய போரினில் விளங்கியவனுகிய சூரியன் புதல்வன் சுக்கிரீவன்; யாவரினும் கொடுமைத் தன்மை யுடையான்.

கு :—செய்த வன் செருவினில் திகழ்ந்தான் என இறந்த காலத்தில் வர வேண்டியது 'திகழ்கின்ருன்' என நிகழ் காலத்தில் வந்தது கால வழுவமைதி. வெய்யவன் - சூரியன். வெய்யான் - இச் சொல் வெம்மை என்பதன் அடியாகத் தோன்றிக் கொடியவன் என்னும் பொருளைத் தந்தது. இலக்குவன் சுக்கிரீவனேடு உடன் பிறப்பு முறை பாராட்டிக் கை கோத்து நின்ற தோற்றம் இதனுல் கூறப்பட்டது. (23)

**7010.** தந்தை மற்றையவன் சார்வில் வலத்தோன்
அந்த ரத்தரமு தார்கலி காண
மந்த ரத்திநெடும் வாசுகி யோடும்
சுந்த ரப்பெரிய தோள்க டிரித்தான்.

'தந்தை மற்றையவன் சார்வு இல வலத்தோன்;'
அந்தரத்தர் அமுது ஆர்கலி காண,

மந்தரத்தினொடும் வாசுகியோடும்
சுந்தரப் பெரிய தோள்கள் திரித்தான்.

பொ :—'(அந்தச் சுக்கிரீவன் பக்கத்திலிருக்கும்) மற்றொருவ(னாகிய அங்கத) னுடைய தந்தை, (எதிரியினுடைய வலி) தன்னை வந்து சார்தலை இடமாகக் கொண்ட வலியை யுடையவன்; தேவ லோகத்திலுள்ள தேவர்கள் அமுதத்தைக் கடலினின்றும் காணும்படி மந்தர மலையிலே வாசுகி என்னும் கயிற்றைப் பூட்டித் (தன்னுடைய) அழகிய பெரிய தோள்களால் (அம்மலை) சுழலும்படி கடைந்தவனாகிய வாலியாவன்.

கு :—இப் பாடலில் வாலியின் வலிமைச் சிறப்புக் கூறிய வாற்றான் அவன் புதல்வன் அங்கதன் பெருமை சொல்லாமலே விளங்க வைத்த தாயிற்று. சார்வு இல் வலத்தோன் - (எதிரியினுடைய வலி) தன்னை வந்து சார்தலை இடமாகக் கொண்ட வலியை யுடையவன். இல் - இடமாகக் கொண்ட என்னும் பொருளது. 'சிறப்பில் வீடு' (திருவாய் மொழி 2-9-5) என்றாற் போல. சார்வு இல் வலத்தோன் என்பதற்குப் பிறர்பால் சார்தலில்லாத வலிமை யுடையவனென்றும் பிறர் துணை வேண்டாத வலிமை உடையவனென்றும் பொருள் கூறுதலும் பொருந்தும். மற்றைவன் தந்தை, வலத்தோன், திரித்தான் என முடியும். மற்றைவன் என்றது அங்கதனை. அவன் தந்தை வாலி. வாலி இறந்தவிடத்து வருந்திய தாரையாலும், அங்கதன் தன்னை இராவணனிடத்து இன்னானென்று உணர்த்தும் போது கூறிய கூற்றாலும், வாலி கடல் கடைந்து தேவர்க்கு அமுதம் தந்தது சிறப்பித்துக் கூறப்பட்டது. (கிட்கிந்தா. அரசியற் படலம் - 6, 11, யுத்த காண். அங்கதன் தூதுப் படலம் - 24).

**7011.** நடந்து நின்றவ னகுங்கதிர் முன்பு
தொடர்ந்த வன்னுலகு சுற்று மெயிற்றின்
இடந்தெ ழுந்தவனை யொத்தவன் வேலை
கடந்த வன்சரிதை கண்டனை யன்றே.

'நடந்து நின்றவன், நகும் கதிர் முன்பு
தொடர்ந்தவன்; உலகு, சுற்றும் எயிற்றின்
இடந்து எழுந்தவனை ஒத்தவன்; வேலை
கடந்தவன் சரிதை கண்டனை அன்றே.

பொ—'(அங்கு) நடந்து கொண்டிருப்பவன், விளங்குகின்ற சூரியனுக்கு முன்னே (எல்லாக் கலைகளையும் கற்குமாறு) தொடர்ந்து சென்றவனும், உலகத்தை நெருங்கிய பற்களால் பெயர்த்தெடுத்த திருமாலை ஒத்தவனும், கடலைக் கடந்தவனுமாகிய அநுமனுவன். (அவனுடைய) செயலை நீயே அறிந்துள்ளா யல்லவா?

கு:—சூரியனிடமிருந்து பல கலைகளையுங் கற்றற் பொருட்டு அநுமன் சூரியனுக்கு முன்னே அவனை நோக்கி நடந்து கொண்டே சென்று கற்றவனுதலின், 'நகுங் கதிர் முன்பு தொடர்ந்தவன்' என்று அவன் கூறப்பட்டான். 'காதல் நான் முகனுலும் கணிப்பரிய கலையனைத்தும் கதிரோன் முன் சென் ரேுதினுன்' (வீடணன் அடைக்கலப் படலம் - 105) என முன்னரும் கூறப்பட்டது. கடலுள் ஆழ்ந்த நில வுலகத்தை வராக உருக்கொண்டு பெயர்த்துக்கொண்டு வந்தவர் திருமாலாதலின் அநுமனுடைய வலிமைக்கு அவர் உவமையாகக் கூறப்பட்டுள்ளார். வேலை - கடல். சரிதை - ஒழுகலாறு, செயல். (25)

**7012.** நீல னின்றவ னெருப்பின் மகன்றிண்
சூல முங்கயிறு மின்மை துணிந்தும்
ஆல முண்டவ னடுந்திறல் மிக்கான்
கால னென்ப ரிவனைக் கருதாதார்.

'நீலன் நின்றவன், நெருப்பின் மகன்; திண்
சூலமும் கயிறும் இன்மை துணிந்தும்,
ஆலம் உண்டவன் அடும் திறல் மிக்கான்,
காலன் என்பர், இவனைக் கருதாதார்.

பொ:—'(இதோ) நின்றவனுகிய நீலன், நெருப்பின் மகனுவன்; (இவனுடைய) பகைவர்கள் திண்ணிய சூலமும் கயிறும் (இவனிடத்து) இல்லாமையைத் தெளிவாக அறிந்தும், இவனை (உலகத்தை) அழிக்கும் வலிமையில் மேம்பட்டவனுகிய நஞ்சுண்ட சிவபெருமானென்றும், இயமன் என்றும் கூறுவர்.

கு:—சிவபெருமான் சூலப் படை யுடையான் என்பது 'சூலப் படையானைச் சொன்ன தமிழ் மாலை' (தேவாரம் - 1 - 80 - 11) என்பதனுல் உணரலாம். கயிறு இயமனுக்குரிய படையாகும். சூலம் இன்மை துணிந்தும அடுந் திறல் மிக்கான் (ஆகிய) ஆல முண்டவன் என்றும், கயிறு இன்மை துணிந்தும் காலன் என்றும் கூறுவர் என நிரனிறையாகக் கொள்க. கருதாதார் - பகைவர்கள். (26)

7013. வேருக நின்ரு னளனென்னும்
★ விலங்க லன்னுன்
ஏரு வருணன் வழிதந்தில
னென்றி ராமன்
சீருத வுள்ளத் தெழுசீற்ற
முகுத்த செந்தீ
ஆருத முன்னம் மகன்வேலையை
யாறு செய்தான்.

'வேருக நின்ருன், நளன் என்னும் விலங்கல் அன்னுன்;
ஏரு வருணன் வழிதந்திலன் என்று இராமன்
சீருத உள்ளத்து எழுசீற்றம் உகுத்த செந்தீ
ஆருத முன்னம், அகன் வேலையை ஆறு செய்தான்.

பொ :—'(இவர்களை விட்டு) வேருக நிற்பவன் நளன் என்னும் பெயரையுடைய மலையை ஒத்தவன்; வருணன் (தான் வாழும் கடலை விட்டு) வெளிப்போந்து (தனக்கு) வழி தந்திலன் என்று இராமன் என்றுமே கோபம் தோன்ருத தன் உள்ளத்துக் கொண்ட கோபம் புறப்படவிட்ட செந்நிறத் தீ அடங்குவதற்கு முன்னரே அகன்ற கடலில் (அணை கட்டி) வழியை உண்டாக்கினுன்.

கு :—பெரியோனுகிய இராமனது உள்ளம் சினத்திற்கு இடந் தராத சிறப்பினதென்பதும், கொடியோர் செய்த கொடுமை பற்றி ஒருகாற் சினந் தோன்றுவதாயினும் அது சிறிது பொழுதே நிற்கு மென்பதும், அங்ஙனம் தோன்றிய சீற்றம் ஆறித் தணியும் கணப் பொழுதிற் குள்ளேயே கடலில் விரைந்து அணைகட்டி முடித்தவன் நளன் என்பதும் புலப்படச் 'சீருத உள்ளத்தெழு சீற்றம் உகுத்த செந்தீ, ஆருத முன்னம் அகன் வேலையை ஆறு செய்தான்' என்ருர். "குணமென்னுங் குன்றேறி நின்ருர் வெகுளி, கணமேயுங் காத்த லரிது" (29) என்னும் குறள் ஈண்டு நினைத்தற்குரியது. இராமன் கொண்ட கோபம் தணிவதற்கு முன்னரே நளன் கடலில் அணைகட்டி முடித்தான் என்பது பொருளாயினும் சீற்றம் உகுத்த செந்தீ ஆருத முன்னம் ஆறும்படி (தணியும்படி) செய்தான் என்னும் பொருளும், 'அகன் வேலையை ஆறு செய்தான்' என்றதனுல் நீர்ப் பெருக் குடைய கடலை ஆறு போலச் சிறிதாக ஆக்கினுன் என்னும் பொருளும் தோன்றி நிற்றல் காண்க. ஏரு - ஏறி; வெளிப்பட்டு. ஏரு என்னும் வினையெச்சம், தந்திலன் என்பதில் தருதலாகிய வினை கொண்டு முடிந்தது. (27)

இச் செய்யுளுக்குப் பின் 1, 2, 11, 41, 52, 63 ஆகிய எண்ணுள்ள சுவடிகளில் பின்வரும் மிகைப் பாடல்கள் காணப்படுகின்றன.

7013 (a) ஏறிட்ட கல்லு வீழு
மிடமற வெண்கி ஞலே
நாறிட்ட தென்ன வொவ்வோ
ரோசனை நாலு பாலும்
சூறிட்ட சேனை நாப்பட்
டோன்றுவோ னிடும்ப னென்றே
கூறிட்ட வயிரத் திண்டோட்
கொடுந்தொழின் மடங்கல் போல்வான்.

(b) மற்றிவன் படையி லொன்ஞு
ரன்றிவா னவர்க ளேவந்
துற்றன ரெனினும் பற்றி
யுயிருகப் பிசைந்திட் டுதக்
கொற்றவ னருளுங் கொண்டோன்
குடாவடிக் கிறைவன் கூற்றம்
பெற்றவ னடைந்தோர் தம்மை
யுயிரெனப் பேணு நீரான்.

(c) ஆங்கவ னெதிரே வேரு
ராடகக் குன்ற மொன்றை
வாங்குநீர் மகர வேலை
வந்துடன் வளைந்த தென்ன
வோங்குமைம் முகத்தின் ருனை
யுட்பொலிந் திடுவான் வெற்றி
ஓங்கிய குவவுத் திண்டோள்
வினதனென் றுரைக்கும் வெய்யோன்.

(d) அன்னவன் றனக்கு வாமத்
தைம்பது கோடி யூகம்
தன்னைவந் திடையிற் சுற்றத்
தடவரை யென்ன நிற்பான்
கொன்னவில் குலிசத் தண்ணல்
கொதித்தெதிர் கொடுக்கு மேனும்
வென்னிடக் குமைக்கும் வேக
தெரிசியென் றுரைக்கும் வீரன்.

(e) பிளக்கும்மன் பதையும் நாகர்
பிலனையுங் கிழிக்கும் வேரோ
டிளக்கமில் குடுமிக் குன்றத்
தினமெலாம் பிடுங்கி யேந்தி
அளக்கர்கட் டவனு மாட்டா
தலக்கணுற் றிடவிட் டார்க்குந்
துளக்கமில் மொய்ம்பிற் சோதி
முகனுந்துன் முகனு மென்பார்.

(f) குன்ருெடு குணிக்குங் கொற்றக்
குவவுத்தோட் குரக்குச் சேனை
ஒன்றுபத் தைந்தொ டாறு
கோடிவந் தொருங்கு சுற்ற
மின்ருெகுத் தமைந்த போல
விளங்கெயி றிலங்க மேருச்
சென்றென வந்து நிற்பான்
றிறல்கெழு தீர்க்க பாதன்.

(g) நூற்றிரண் டாய கோடி
நோன்கவித் தானை சுற்றக்
காற்றின்மா மகற்குக் கீழ்பாற்
கனவரை யென்ன நிற்பான்
கூற்றின்மா மைந்தன் கூற்றுங்
குலுக்கமுற் றலக்க ணெய்தச்
சீற்றமே சிந்துஞ் செங்கட்
டெதிமுக னென்னுஞ் சீயம்.

**7014.** முக்கா லமுமொய்ம் மதியான்
முறையின் னுணர்வான்
புக்கா லமெழப் புணரிப்
புலவோர் கலக்கும்
அக்கால முள்ளான் கரடிக்
கரசாகி நின்ருன்
இக்கால நின்று முலகேழு
மெடுக்க வல்லான்.

முக் காலமும் மொய்ம் மதியால் முறையின் உணர்வான்,
புக்கு ஆலம் எழப் புணரிப் புலவோர் கலக்கும்

அக்காலம் உள்ளான், கரடிக்கு அரசு ஆகி நின்றான்,
இக்காலம் நின்றும் உலகு ஏழும் எடுக்க வல்லான்.

பொ :—கரடிக்கு அரசனாகிய சாம்பவான், மூன்று கால நிகழ்ச்சிகளையும் தன்னுடைய நிறைந்த அறிவால் முறைமையாக உணர வல்லவனும், நஞ்சு எழும்படி கடலுள் புகுந்து தேவர்கள் அதனைக் கடைந்த அக்காலத்திலும் இருந்தவனும் ஆவன். இக்காலத்திலுங்கூட ஏழு உலகங்களையும் (தன் ஆற்றலால்) பெயர்த்தெடுக்க வல்லவன்.

கு :—இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்னும் மூன்று கால நிகழ்ச்சிகளையும் முறைமையாக உணர்தல் 'அறிவன் வாகை' எனப்படும். மொய்மதி - நிறைந்த அறிவு. கடல் கடைந்த அக்காலத்திலும் இருந்த சாம்பவானாகிய இவன் இவ்வளவு முதுமைத் தன்மையடைந்த இக்காலத்திலுங்கூட ஏழு உலகங்களையும் பெயர்த்தெடுக்கும் ஆற்ற லுடையவனாக உள்ளான் என்றபடி. புணரி-கடல். புலவோர் - தேவர்கள். கலக்குதல் - கடைதல். (28)

7015. சேனா பதிதன் னயலே
யிருள்செய்த குன்றின்
ஆனா மருங்கே யிரண்
டாடகக் குன்றி னின்றார்
ஏனோரி லிராம னிலக்குவ
னென்னு மீட்டார்
வானோர்த மருத்துவர் மைந்தர்
வலிக்கண் மிக்கார்.

'சேனாபதிதன் அயலே, இருள் செய்த குன்றின்
ஆனா மருங்கே, இரண்டு ஆடகக் குன்றின் நின்றார்,
ஏனோரில் இராமன் இலக்குவன் என்னும் ஈட்டார்;
வானோர்தம் மருத்துவர் மைந்தர், வலிக்கண் மிக்கார்.

பொ :—'(சேனாபதியாகிய நீலனுக்குப் பக்கத்தே கருநிறக் குன்றின் நீங்காத (இரு) பக்கத்திலும் இரண்டு பொற்குன்று போல நின்றவர்கள், சேனையிலுள்ள மற்றவர்களுக்குள்ளே இராம இலக்குவர் போன்ற வலிமை படைத்தவர்களாவர்; (அவர்கள்) வானோர்தம் மருத்துவரான அசுவினி தேவரின் புதல்வர்; வலிமையால் மிகவும் மேம்பட்டவர்கள்.

கு :—சேனாபதி என்றது நீலனை. நீலன் கருநிற முடையவன் என்பது 'இருள் செய்த குன்றின் ஆறு மருங்கே' என்பதனால் பெறப்பட்டது, பொன்னிறத்தவராகிய மருத்துவர் புதல்வர் இருவரும் நீல நிறத்தினனாகிய சேனாபதியின் இருமருங்கும் நின்ற தோற்றத்திற்கு, இருள் செய்த குன்றின் மருங்கே அமைந்த இரண்டு ஆடகக் குன்று உவமை. ஆடகம் – நால்வகைப் பொன்னுள் ஒன்று. ஈடு – வலிமையாதலின் ஈட்டார் என்பது வலிமையுடையவர் என்னும் பொருள் குறித்து நின்றது. 'ஏவர்க்கும் சிறியையல்லை யாருனை நலியும் ஈட்டார்' (கும்பகருணன் வதைப் படலம் – 149). வானோர்தம் மருத்துவர் – அசுவினி தேவர். (29)

7016. உவன்காண் குமுதன் குமுதாக்கனு
மூங்க வன்காண்
இவன்காண் கவையன் கவயாக்கனு
மீங்கி வன்காண்
சிவன்கா ணயன்கா ணெனுந்தூதனைப்
பெற்ற செல்வன்
அவன்கா ணெடுங்கேசரி யென்பவ
னாற்றன் மிக்கான்.

'உவன்காண் குமுதன்; குமுதாக்கனும் ஊங்கு அவன்காண்; இவன்காண் கவையன்; கவயாக்கனும் ஈங்கு இவன்காண்; சிவன்காண் அயன்காண் எனும் தூதனைப் பெற்ற செல்வன் அவன்காண், நெடுங்கேசரி என்பவன், ஆற்றல் மிக்கான்.

பொ :—'அதோ நடு இடத்திலிருப்பவன் குமுதன் என்னும் பெயரினன்; அவ்விடத்தே இருக்கும் அவன் குமுதாக்கனாவன்; இவ்விடத்தே இருப்பவன் கவயன் என்னும் பெயரினன்: ஈங்குள்ள இவன் கவயாக்கன் என்பவனாவன்; சிவன் என்றும் அயன் என்றும் கண்டோர் சொல்லும் தூதனாகிய அநுமனைப் பெற்ற செல்வனாகிய பெருமை பெற்ற கேசரி என்பவன் அவனாவன்; (அவன்) மிகுந்த ஆற்றலையுடையவன்.

கு :—குமுதாக்கன் – குமுதம் போன்ற கண்ணை யுடையவன். குமுதம் – அல்லி. அக்கம் – கண். கவயாக்கன் – பசுவின் (கண்ணைப் போன்ற) கண்ணை யுடையவன் 'ஆனுறக் கண்ணனென்றொருவன்' (சேது பந்தனப் படலம்–12). அநுமன் யாவரினும் சிறந்த வல்லமை

பெற்று விளங்கினனுதலின் வலிமை கருதிச் சிவனென்றும் அயனென்றும் சிறப்பித்துச் சொல்லப்பட்டான். அநுமன் கேசரிக்கு அஞ்சனை தேவியின்பாற் பிறந்தவன். (30)

**7017.** முரபன்னகு தோளவன் மூரி
மடங்க லென்னக்
கரபன்னக மன்னவை மின்னுகக்
காந்து கின்றான்
வரபன்னகந் தன்னையும் வேரொடு
வேண்டின் வாங்கும்
சரபன்னவ னிவன் சதவலி
யாய தக்கோன்.

'முரபன், நகுதோளவன், மூரி மடங்கல் என்னக்
கரபல் நகம் அன்னவை மின் உகக் காந்துகின்றான்;
வர பல் நகம் தன்னையும் வேரொடு வேண்டின் வாங்கும்
சரபன் அவன்; இவன் சதவலி ஆய தக்கோன்.

பொ :—'வலிய நரசிங்கம் என்று சொல்லும்படியாகப் பற்களும் கையில் தோன்றிய நகங்களும் ஆகியவை ஒளி வீசக் கோபித்து நிற்பவனாகிய விளங்குகின்ற தோளையுடையவன் முரபன் என்னும் பெயரினை யுடையான்; (அதோ உள்ள) அவன் மேலான பல மலைகளையும் வேரொடு பெயர்த்தெடுக்க வேண்டுமாயினும் பெயர்த்தெடுக்க வல்ல சரபன் என்னும் பெயரினன்; இவன் சதவலி என்னும் பெயர் படைத்த தகுதியில் மேம்பட்டவனாவன்.

கு :—கரம் + பல் + நகம் = கர பன்னகம் = பற்களும் கையிலுள்ள நகங்களும். காந்துதல் - கோபித்தல். வரம் + பல் + நகம் = வரபன்னகம் = மேலான பல மலைகள். வாங்குதல் - பெயர்த்தெடுத்தல். இச் செய்யுளில் திரிபு என்னும் சொல்லணி யமைந்திருத்தல் காண்க. (31)

**7018.** மூன்று கண்ணில னாயினு

மூன்றெயி லெரித்தோன்
போன்று நின்றவன் பனசனிப்
போர்க்கெலாந் தானே

ஏன்று நின்றவ னிடபன்மற்
றிவன்றனக் கெதிரே
தோன்று கின்றவன் சுசேடண
னறிவொடு தொடர்ந்தோன்.

'மூன்று கண் இலன் ஆயினும்
மூன்று எயில் எரித்தோன்
போன்று நின்றவன் பனசன்;
இப் போர்க்கு எலாம் தானே
ஏன்று நின்றவன் இடபன்;
மற்று இவன் தனக்கு எதிரே
தோன்றுகின்றவன் சுசேடணன்,
அறிவொடு தொடர்ந்தோன்.

பொ :—'மூன்று கண்களையுடையனல்லனாயினும் முப்புரங்களையு மெரித்த சிவ பெருமான் போன்று நின்றவன் பனசன்; இப் போர்க்குரிய எல்லாவற்றையும் தானே ஏற்றுக்கொண்டு நின்றவன் இடபன்; இவன் தனக்கு எதிரே தோன்றுகின்றவன் சுசேடணன்; (அவன்) பேரறிவுடையான்.

கு :—திரிகின்ற புரங்களைச் சிரித்தே அழித்த ஆற்றலுடைய சிவபெருமானைப் போலும் ஆற்றல் மிக்கோன் பனசன் என அவனது ஆற்றலை வியந்துரைத்தவாறு. 'இப் போர்க் கெலாந் தானே என்று நின்றவன்' என்பதற்கு இப் போர் முழுவதையும் தானே எதிர்த்து நின்றவன் என்றும் பொருள் கூறலாம். (32)

**7019.** வெதிர்கொள் குன்றெலாம் வேரொடும்
வாங்கி மேதினியை
முதுகு நொய்தெனச் செய்தவன்
கனலையு முனிவோன்
கதிரவன் மகற்கிட மருங்கே
நின்ற காளை
ததிமு கன்னவன் சங்கனென்
றுரைக்கின்ற சிங்கம்.

'வெதிர்கொள் குன்று எலாம் வேரொடும்
வாங்கி, மேதினியை
முதுகு நொய்து எனச் செய்தவன்,
கனலையும் முனிவோன்,

கதிரவன் மகற்கு இடமருங்கே
நின்ற காளை
ததிமுகன், அவன், சங்கன்
என்று உரைக்கின்ற சிங்கம்.

பொ :—'சூரியன் புதல்வனாகிய சுக்கிரீவனுக்கு இடப் பக்கத்தே நின்ற காளை போல்வான், மூங்கிலைத் தன்னகத்தே கொண்ட குன்றுகளெல்லாவற்றையும் வேரொடும் பெயர்த்துப் பூமியின் நடு விடம் பாரமற்ற தாம்படி செய்தவனும், நெருப்பையும் கோபித்தவனு மாகிய ததிமுகன் என்பவன்; (அயலே நிற்கின்ற) அவன் சங்கன் என்று உரைக்கப்படுகின்ற சிங்கம் போல்வான்.

கு :—இடமருங்கே நின்ற காளை ததிமுகன். (அயலே நின்ற) அவன் சங்கன் என்றுரைக்கின்ற சிங்கம் என முடிக்க. மகன்+கு= மகற்கு. மலைகளை யெல்லாம் பெயர்த்து அகற்றினமையின் பூமியின் பாரம் குறைந்தது. மூங்கில்களை உடைமை பற்றியே மலைக்கு 'வரை' என்னும் பெயர் வழங்குவதாயிற்று. நொய்து – இலேசா னது; பாரமற்றது. (33)

இச் செய்யுளின் பின் 52 ஆம் எண்ணுள்ள பிரதியில் பின் வருமாறு ஒரு மிகைப் பாடல் காணப்படுகிறது.

6919 (a) நாடில் இங்கு இவர் ஆதியால் நவின்ற மூ-எழுவர்
ஆடல் வெம்படைத் தலைவர்கள் ஆறுபத்து ஏழு
கோடி வீரர்கள் குன்று எனக் குவவிய தோளாய்
கூடு சேனையும் எழுபது வெள்ளமாய்க் குறிப்பார்.

**7020.** அண்ணல் கேளிதற் கவதியு
மளவுமொன் றுளதோ
விண்ணின் மீனினைக் குணிப்பினும்
வேலையின் மீனை
எண்ணி நோக்கினு மிக்கடன்
மணலினை யெல்லாம்
கண்ணி நோக்கினுங் கணக்கில
தென்றனன் காட்டி.

'அண்ணல்! கேள்; இதற்கு அவதியும்
அளவும் ஒன்று உளதோ?
விண்ணின் மீனினைக் குணிப்பினும்,
வேலையின் மீனை

எண்ணி நோக்கினும், இக்கடல்
மணலினை எல்லாம்
கண்ணி நோக்கினும், கணக்கிலது'
என்றனன் காட்டி.

பொ:—'பெருமையில் மிக்கோனே, (இதனைக்) கேட்பாயாக (என்று சொல்லி, அச்சேனையைக்) காட்டி, இச்சேனைக்கு எல்லை யேனும் எண்ணிக்கையேனும் ஒன்று உண்டோ? வானத்திலுள்ள விண்மீன்களைக் கணக்கிட்டாலும், கடலிலுள்ள மீன்களை யெல்லாம் எண்ணிப் பார்த்தாலும், இந்தக் கடல் மணலினையெல்லாம் (எண்ண வேண்டுமென்று) கருதிப் பார்த்தாலும் (ஒருகால் இயலுதல் கூடும். ஆனால் இச்சேனைக்கு மட்டும்) எண்ணிக்கை கிடையாது' என்று கூறினன் (சாரன்).

கு:—'அண்ணல், கேள்: இதற்கு அவதியும் அளவும் ஒன்றுளதோ? கணக்கு இலது என்றனன்' என முடிக்க அவதி-எல்லை. விண்மீனையும் கடல்மீனையும் கடல் மணலையும் எண்ணினும் எண்ணலாம். இச்சேனையை மட்டும் எண்ண முடியாது என்றபடி. குணித்தல் – எண்ணுதல், வரையறுத்தல். வேலை - கடல். கண்ணுதல் - ஆராய்தல். (34)

'இச்சேனைகள் நம்மை என் செய்யும்' என
இராவணன் புன்னகை புரிதல்

**7021.** சினங்கொ டிண்டிற லரக்கனுஞ்
சிறுநகை செய்தான்
புனங்கொள் புன்றலைக் குரங்கினைப்
புகழுதி போலாம்
வனங்க ளும்படர் வரைதொறுந்
திரிதரு மானின்
இனங்க ளும்பல வென்செயு
மரியினை யென்றான்.

சினங்கொள் திண்திறல் அரக்கனும்,
சிறுநகை செய்தான்,
'புனம்கொள் புன்தலைக் குரங்கினைப்
புகழுதி போலாம்;

வனங்களும் படர் வரைதொறும்
திரிதரு மானின்
இனங்களும் பல என் செயும்,
அரியினை?' என்ருன்.

பொ :—(சாரன் கூறியது கேட்டுக்) கோபங் கொண்ட மிக்க வலிமையை யுடைய இராவணனும் புன்முறுவல் செய்தவனுய்க் கொல்லையினை (வாழுமிடமாகக்) கொண்ட இழிந்த தலையை யுடைய குரங்குகளைப் புகழுகின்ருய் போலும்; காடுகளிலும் (கொடிகள்) படர்ந்துள்ள மலைகளிலும் திரிகின்ற மானின் கூட்டங்கள் மிகப் பலவாயினும் (அவை) சிங்கத்தினை என் செயக் கூடும்? என்று கூறினன்.

கு :—இராவணனது நகை ஈண்டு எள்ளற் பொருளது. புகழுதி - புகழுகின்ருய். இகர விகுதி ஈண்டு 'வருதி பெயர்தி வருந்துதி துஞ்சாய், பொருதி புலம்புதி நீயும்' என்ற விடத்துப் போல நிகழ்காலம் உணர்த்தி நின்றது. 'மறப்புலி உடலின் மான் கணம் உளவோ?' (புறம். 90 : 3) என்ருற்போல 'மானின் இனங் களும் பல என் செயும் அரியினை' என்ருன். 'எலிப்பகை நாகம் உயிர்ப்பக்கெடு'வது (குறள் 763) போலச் சிங்கம் போன்ற என்னி டத்து இச்சேனையெல்லாம் அழிந்துபடும் என்னும் கருத்துப்பட 'அரியினை என் செயும்' என்ருன். பின்னிரண்டடிகள் பிறிது மொழிதல் என்னும் அணியாகும்.

இச் செய்யுளின் பின் 52 ஆம் எண்ணுள்ள பிரதியில் பின்வருமாறு ஒரு மிகைப் பாடல் காணப்படுகிறது.

7021 (a) அழிவு இலா வலி படைத்துள நம் படை அரக்கர்
ஒழிவு இலாத பல் ஆயிர வெள்ளத்துக்கு உறை ஓர்
துளியும் ஒவ்விடா எழுபது வெள்ளத்தின் தொகை சேர்
எளிய புன் குரங்கு என் செயும் என்றனன் இகலோன்.

இராவணன் வானரத்தானை காண் படலம் முற்றிற்று.

# 11. மகுட பங்கப் படலம்

சுக்கிரீவன் இராவணனெடு போர் செய்து அவனது முடியின் மணிகளைப் பறித்து அவனை அவமானப்படுத்திய நிகழ்ச்சியை விரித்துரைக்கும் படலமாதலின், இது மகுட பங்கப் படலம் என்னும் பெயர்த்தாயிற்று. மகுடம் - முடி. பங்கம் - இழிவு; அவமானம். 23, 26, 44, 70 என்னும் எண்ணுள்ள சுவடிகளில் இது சிகாமணிப் படலம் எனக் குறிக்கப்பட்டுளது.

சுவேலமலைமேல் ஏறி நின்று இலங்கையைக் கண்ட இராமபிரான் இலங்கையின் வடதிசைக் கோபுரத்தின்மீது ஏறி நின்று வானர சேனைகளைக் காணும் இராவணனையும் அவனுடைய படைத் தலைவர் முதலியோரையும் இன்னின்னர் எனத் தெரிவிக்கும்படி வீடணனை நோக்கிக்கூற, வீடணன் அரக்கர் குழுவில் உள்ளோரை இன்னின்னர் எனக் காட்டி, 'திலோத்தமை முதலிய தேவமகளிர் சூழக் கோபுரக் குன்றத்து உச்சியில் நிற்கும் இவன்தான் இராவணன்' என அவனைச் சுட்டிக்காட்டி அவனது பெருவன்மையினை விரித்துக் கூறுமுன், கொடியோனாகிய அவ்விராவணனை நெடுந் தூரத்தே கண்டு கொதிக்கும் உள்ளத்தானாகிய சுக்கிரீவன். சுவேல மலையினின்றும் குதித்தெழுந்து இராவணன்மேற் பாய்ந்தான். அவ்விருவரும் வெகுண்டு வானிலும் இலங்கை மதிற்புறத்தும் அகழியிலும் திரிந்து கடும்போர் விளைத்தனர். அந்நிலையில் தன் அருகே நின்ற சுக்கிரீவனைக் காணாத இராமன், அவன் தன் பாதுகாவலைக் கடந்து இராவணனது காவல் எல்லையில் அகப்பட்டுக்கொண்ட எளிமையினை நினைந்து ஆற்ருது வருந்திப் புலம்பினன். அந்நிலையில் இராவணனுடன் மற்போர் விளைத்த சுக்கிரீவ மன்னன், இராவணனுடைய பத்துத் தலைகளிலும் கவிக்கப் பெற்றுள்ள மகுடத்திற் பதிக்கப் பெற்றிருந்த நாயக மணிகளைப் பறித்துக்கொண்டு சுவேல மலைமேற் குதித்து இராமபிரான் திருவடிகளில் வைத்து வணங்கினன். தனது உடன்பாடு பெருது பகைவன்மேற் சென்ற சுக்கிரீவனை நோக்கிய இராமன், அவனது பிரிவினல்தனக் கேற்பட்ட துயரத்தையும் ஆராய்ந்துணராது செயல் மேற்கொள்ளுதலால் வரும் தீங்கினையும் எடுத்துக் காட்டிக் கடிந்துரைத்தான். அதுகேட்ட சுக்கிரீவன் தன்னை இடர் நீக்கி யுயர்த்திய தலைவனாகிய இராமனுக்கு பகைவென்று நலம் விளைக்கும் உதவியெதுவும் செய்ய இயலாது போன தனது எளிமைத் திறத்தை எடுத்துக்கூறி இரங்கினன். அருகே நின்ற வீடணன், இராவணனது மகுட மணிகளைப் பறித்துக் கொணர்ந்த வானர மன்னனாகிய சுக்கிரீவனது வெற்றித் திறத்தை வியந்து பாராட்டினன். சுக்கிரீவனது வருகையால் துயர்தீர்ந்த

இராமனும் 'இன்று இது வெற்றி' என்று கூறிச் சுக்கிரீவனது பேராற்றலை உளமுவந்து பாராட்டினுன். அப்பொழுது கதிரவன் மறைய இரவுப்பொழுது வந்தது. இராமன் தன் பரிவாரங்களுடன் சுவேல மலையினின்றும் இறங்கித் தனது பாடி வீட்டினை அடைந்தான். எந்த நாளிலும் இத்தகைய இழிவினையடையாத இராவணனும் கோபுரத்தினின்றும் இறங்கிச் சென்ருன் என்பது இப் படலத்தின் பொருட் சுருக்கமாகும்.

இப் படலம், பல சுவடிகளிலும் 'காலவிருள்' என்னும் முதற் குறிப்புடைய செய்யுளை முதலாகக்கொண்டு தொடங்குகிறது. 9, 19, 21, 25, 29, 60, 61, 62, 65, 66 என்னும் எண் பெற்ற சுவடிகளில் இதன்முன் 'இராவணன் வானரத்தானை காண் படலத்தின்' இறுதியிலுள்ள 'கருதி மற்ருென்று' என்னும் முதற் குறிப்புடைய செய்யுள் மகுட பங்கப் படலத்தின் முதற் செய்யுளாக அமைந்துளது. இராவணன் வானரத்தானை காண் படலத்தின் 36ஆம் செய்யுளாகிய 'என்னும் வேலையின்' என்பது முதல் 41ஆம் செய்யுளாகிய 'கரிய கொண்டலை' என்பது முடியவுள்ள ஆறு செய்யுட்களும் அப்படலத் தலைப்பிற்கேற்ப இராவணன் வானரத்தானையைக் கண்ட செய்தியைக் குறிப்பனவாகாமல் சுக்கிரீவன் வெகுண்டு இராவணன் மேற் பாய்ந்து அவனது மகுட மணியைப் பறித்துக் கொணரும் நிகழ்ச்சிக்குத் தொடர்புடைய செய்தியைக் குறிப்பனவாக அமைந்திருத்தலால் 41, 52 என்னும் எண் பெற்ற அச்சுப் புத்தகங்களில் உள்ளபடி மகுட பங்கப் படலத்தின் தொடக்கத்தில் உள்ளனவாக இப் பதிப்பிலும் கொள்ளப் பெறுவனவாயின.

இவன் இராவணன் என்று சுட்டிக் காட்டிய அளவில் சினம் பொங்கி அவன்மேற் பாய்ந்து தாக்கிய சுக்கிரீவனும் அவனை எதிர்த்துப் பற்றிய இராவணனும் இலங்கையின் வடதிசைக் கோபுரத்தும் வானிடத்தும் மதிற்புறத்தும் அகழியிலும் உருத்துத் தாக்கிக் கட்டிப் புரண்டு கடும் போர் புரிந்த திறத்தினையும், இராமன் தன் ஆருயிர்த் துணைவனுகிய சுக்கிரீவனைப் பிரிந்தமையால் அடைந்த பெருந் துயரத்தையும், இராவணனது முடியினின்றும் நாயக மணிகளைப் பறித்துக் கொணர்ந்து இராமன் திருவடிகளில் வைத்து வணங்கிய சுக்கிரீவன் பிரிவுத் துயரால் தன்னைக் கடிந்து கூறிய இராமபிரான்பால் பேரன்பின் வழிபட்ட நன்றியுணர்வுடன் தன் செயலறவு தோன்றக் கூறிய பணி மொழிகளையும், சுக்கிரீவனது வீரச் செயலை வீடணன் வியந்து போற்றிய நிலையில் இராமபிரான் தன் பிரிவுத்துயர் தோன்ற அதனை உடன்பட்டுப் பாராட்டிய அன்பின் திறத்தையும் கம்பர் இப்படலத்தில் விரித்துக் கூறிய பகுதிகள் படித்து இன்புறத் தக்கனவாகும்.

# 11. மகுட பங்கப் படலம்

'சேனையைக் காணுமாறு கோபுரத்தின்மீதுள்ள அரக்கர்களை இன்னின்னாரென்று தெரிவி' என்று இராமன் வீடணனைக் கேட்டல்

**7022.** என்னும் வேலையி னிராவணற் கிளவலை யிராமன்
கன்னி மாமதி னகர்நின்று நம்வலி காண்பான்
முன்னி வானக மூடிநின் றார்களை முறையால்
இன்ன நாமத்த ரினையரென் றியம்புதி என்றான்.

என்னும் வேலையின், இராவணற்கு இளவலை, இராமன்
'கன்னி மாமதில் நகர்நின்று நம்வலி காண்பான்
முன்னி, வானகம் மூடி நின்றார்களை, முறையால்
இன்ன நாமத்தர், இனையர் என்று இயம்புதி' என்றான்.

பொ :—என்று (இராவணன் சாரனிடம்) சொல்லிக் கொண்டிருக்கும் சமயத்தில் இராமன், இராவணன் தம்பியாகிய வீடணனை (நோக்கி). 'அழியாத பெரிய மதிலையுடைய இலங்கையிலிருந்து நம் வலியைக் காணுதல் கருதி ஆகாயத்தை மூடி நின்றவர்களை முறைமையாக இன்ன பெயரினையுடையவர், இன்ன தன்மையினையுடையவர் என்று சொல்லுவாயாக' என்றான்.

கு :—வேலை - சமயம். கன்னி - அழிவின்மை. முன்னி - நினைத்து. இராமன் வீடணனை நோக்கி 'எதிர்ப்பக்கத்தில் ஆகாயத்தை மூடி நின்றவர்களுடைய பெயரையும் இயல்பையும் கூறுவாய்க' என்று கூறினான். (1)

வீடணன் இராவணனைக் காட்டுதல்

**7023.** நாறு தன்குலக் கிளையெலா
நரகத்து நடுவான்
சேறு செய்துவைத் தானும்பர்
திலோத்தமை முதலாக்

கூறு மங்கையர் குழாத்திடைக்
கோபுரக் குன்றத்
தேறி நின்றவன் புன்ரெழி
லிராவண னென்ருன்.

'நாறு தன்குலக் கிளை எலாம் நரகத்து நடுவான்
சேறு செய்து வைத்தான், உம்பர் திலோத்தமை முதலாக்
கூறு மங்கையர் குழாத்திடைக் கோபுரக் குன்றத்து
ஏறி நின்றவன், புன்தொழில் இராவணன்' எள்ருன்.

பொ :—'கோபுரமாகிய குன்றத்திலே ஏறித் தேவலோகத்தவரான திலோத்தமை முதலாகக் கூறப்படும் தெய்வப் பெண்களின் கூட்டத்தினிடையே நின்று கொண்டிருப்பவன், தன் குலத்தில் தோன்றிய உறவினர்களாகிய நாற்றுக்களை எல்லாம் நரகத்து நடுதற்பொருட்டு (அந்த நரகத்தைச்) சேறு செய்து வைத்தவனுகிய இழி தொழிலையுடைய இராவணன்' என்று (வீடணன்) கூறினுன்.

கு :—ஏறி நின்றவன் சேறு செய்து வைத்தவனும் புன்தொழிலையுடையவனுமாகிய இராவணன் என்க. கிளையை நாறு எனவும், நரகத்தைச் சேறு எனவும் உருவகித்தார். நாறு - நாற்று. அரக்கர்களை யெல்லாம் தன் தீத்தொழிலுக்குத் துணையாக வைத்துக் கொண்டு தீத் தொழில் புரிகின்ருனுதலின் அவர்கள் செய்யும் பாவத்தால் அவர்களை யெல்லாம் நரகத்துக் கொண்டுபோய் உய்ப்பவனுயினன். உம்பர் - வானுலகம். இராவணன் 'பிறன் கடை நின்ற' (குறள்-142) பேதையன் ஆதலின் 'புன்ருெழில் இராவணன்' எனப்பட்டான். (2)

## இராவணன்மேல் சுக்கிரீவன் பாய்தல்

**7024.** கருதி மற்ருென்று கழறுதன்
முனம் விழிக்கனல்கள்
பொருது புக்கன முந்துறச்
சூரியன் புதல்வன்
சுருதி யன்னவன் சிவந்தநற்
கனியென்று சொல்லப்
பருதி மேற்பண்டு பாய்ந்தவ
னுமெனப் பாய்ந்தான்.

கருதி மற்றென்று கழறுதல் முனம் விழிக்கனல்கள்
பொருது புக்கன முந்துற, சூரியன் புதல்வன்
சுருதி அன்னவன், 'சிவந்த நல்கனி' என்று சொல்ல,
பருதிமேல் பண்டு பாய்ந்தவன் ஆம்என, பாய்ந்தான்.

பொ :—மனத்தில் நினைத்து (வீடணன்) மற்றென்று சொல்லு வதற்கு முன்பு சூரியன் புதல்வனாகிய சுக்கிரீவன், (தன்) கண்களி னின்றும் நெருப்புப் பொறிகள் ஒன்றோடொன்று நெருங்கி முற்பட்டுச் சென்றனவாக, வேதத்தை ஒத்தவனும், ('உனக்கு உணவு, சோலை யில் பழுத்த) சிவந்த நல்ல பழம்' என்று (தாய்) சொல்லச் (சிவந்த பழமெனக் கருதிச்) சூரியன் மேல் முன்பு பாய்ந்தவனுமாகிய அநுமனைப் போன்று (இராவணன்மேல்) பாய்ந்தான்.

கு :—வீடணன் 'இராவணன் இவன்' என்று சுட்டியவுடனே, சுக்கிரீவன் கண்களினின்றும் நெருப்புப் பொறி பிறக்கக் கோபித்து இராவணன்மேற் பாய்ந்தான். கழறுதல் - சொல்லுதல். சுருதி - வேதம். எல்லாக் கலைகளையும் தன்னுட் கொண்ட சுருதியைப்போல எல்லாக் கலைகளையுங் கற்றுத் தன்னுட் கொண்டவன் அநுமனாதலின் அவன் 'சுருதியன்னவன்' என்று சிறப்பித்துக் கூறப்பட்டான். அநுமன் எல்லாக் கலைகளையுங் கற்றுணர்ந்தமை, 'இல்லாத வுலகத் தெங்கும் ஈங்கிவன் இசைகள் கூரக், கல்லாத கலையும் வேதக் கடலுமே' (கிட்கிந்தாகாண். அநுமப் படலம்-20) என்பதால் புலப் படுத்தப்பட்டது. 'இனியதா மிரை யாதெனக் கியம்புதி என்னப் பனியுலாவிய சோலையிற் பருவத்திற் சிவந்த கனியெலாம் உனக்காவ தென்றன்னை தான்கழற' எனவும்......'பசியினால் பதை பதைத் திரங்கி அழுதரற்றிய பாலகன் அன்னை முன் உரைத்த பழம் நமக் கிதுவாமெனப் பரிதிமேற் பாய்ந்தான்' எனவும் வரும் (உத்தரகாண். அநுமப் படலம்-11, 12) பாடல்களால் தாய் சோலையில் பருவத்தில் பழுத்த பழம் அநுமனுக்கு உணவு என்றமையும் அதுகேட்ட அநுமன் பசியினால் வருந்தியபோது சூரியனைச் சிவந்த பழமென்று கருதி அவன்மேற் பாய்ந்தமையும் புலனாம். அநுமன் சூரியன்மேற் பாய்ந்தது போன்று சுக்கிரீவன் இராவணன்மேற் பாய்ந்தான். (3)

## இராவணன்மேற் பாய்ந்த சுக்கிரீவனது தோற்றம் 7025-7026

**7025.** சுதையத் தோங்கிய சுவேலத்தி
னுச்சியைத் துறந்து
சிதையத் திண்டிற லிராவணக்
குன்றிடைச் சென்றான்

தகையச் செங்கரம் பரப்பிய
தன்பெருந் தாதை
உதயக் குன்றினின் றுதகுன்றிற்
பாய்ந்தவ னொத்தான்.

சுதையத்து ஓங்கிய சுவேலத்தின் உச்சியைத் துறந்து,
சிதையத் திண் திறல் இராவணக் குன்றிடைச் சென்ருன்,
தகையச் செங்கரம் பரப்பிய தன்பெருந்தாதை
உதயக் குன்றின்நின்று உகுகுன்றில் பாய்ந்தவன் ஒத்தான்.

பொ :—வெண்ணிறத்தோடு உயர்ந்த சுவேல மலையின் உச்சியைவிட்டு, இராவணனுகிய குன்றினிடத்தே (அவனுடைய) மிக்க வலிமை அழியும்படி பாய்ந்து சென்றவனுகிய சுக்கிரீவன், செறியச் சிவந்த கிரணங்களைப் பரப்பிய தன்னுடைய பெருமை பெற்ற தந்தையாகிய சூரியன் உதயகிரியினின்றும் அத்தமனகிரியில் பாய்ந்தானை ஒத்துத் தோன்றினன்.

கு :—சுதையம் - வெண்ணிறம். சுவேல மலையிலிருந்து இராவணன்மீதுபாய்ந்த சுக்கிரீவன், உதயகிரியிலிருந்து அத்தமனகிரியிற் பாய்ந்த தன் தந்தையாகிய சூரியனை ஒத்துத் தோன்றினன். தாதை (ஆகிய) பாய்ந்தவன் ஒத்தான் என முடிக்க. ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குச் செல்லுதலுக்கு மட்டும் இவ்வுவமையைக் கொள்க. உகு குன்று - சூரியன் மறையும் குன்று. சூரியன் உதய கிரியினின்று அத்தமனகிரிக்குச் செல்லும் பொழுது ஒளியிழக்கின்ருனதலின் அவ்வுவமை இனி ஒளி மிகப் போகும் சுக்கிரீவனுக்குப் பொருந்தாதென்று கூறுபவர், 'உதயக் குன்றினின்று ஒரு குன்றிற் பாய்ந்தவ னொத்தான்' எனப் பாடங் கொண்டு உதயமலையிலிருந்து அந்தக் கோபுரக் குன்றத்திற் பாய்ந்த சூரியனை ஒத்தான் என உரை கூறுவர். (4)

**7026.** பள்ளம் போய்ப்புகும் புனலெனப்
படியிடைப் படிந்து
தள்ளும் பொற்கிரி சலிப்புறக்
கோபுரஞ் சார்ந்தான்
வெள்ளம் போற்கண்ணி யழுதலு
மிராவணன் மேற்றன்
உள்ளம் போற்செலும் கழுகினுக்
கரசனு மொத்தான்.

பள்ளம் போய்ப் புகும் புனல் எனப் படியிடைப் படிந்து
தள்ளும் பொற்கிரி சலிப்புறக் கோபுரம் சார்ந்தான்,
வெள்ளம்போல் கண்ணி அழுதலும், இராவணன் மேல்தன்
உள்ளம்போல் செலும் கழுகினுக்கு அரசனும் ஒத்தான்.

பொ :—பள்ளமான இடத்திலே சென்று பாய்கின்ற நீரென்னும் படி, பூமியினிடத்தே தள்ளப் பெற்றுப் படியும் திரிகூடமலை சலிப் படையும்படி கோபுரம் சார்ந்தவனான சுக்கிரீவன், வெள்ளம்போற் பெருகிய நீரைக் கொண்ட கண்களையுடைய சீதை அழுத அளவிலே, இராவணன்மீது தன் மனத்தினைப் போன்று (போருக்கு விரைந்து) சென்ற கழுகினுக்கரசனாகிய சடாயுவையும் ஒத்தான்.

கு :—சுக்கிரீவன் சுவேலமலை உச்சியிலிருந்து கோபுரத்தை அடைந்தமைக்குப் பள்ளம் போய்ப் புகும் புனல் உவமை. இனி இவ்வுவமையைக் காற்றினால் தள்ளப்பட்டு வீழ்ந்து கிடக்கும்திரிகூட மலைக்கு ஏற்றி உரைப்பினும் அமையும். 'மழைக்கண் என்பது காரணக் குறியென வகுத்தாள்' (சுந்தரகாண்-335) என்று முன்பு கூறியதுபோல ஈண்டு 'வெள்ளம்போற் கண்ணி அழுதலும்' என்றார். கோபுரஞ் சார்ந்தவனான சுக்கிரீவன், இராவணன்மீது முன்பு பாய்ந்த சடாயுவை ஒத்துத் தோன்றினான் என்க. கழுகினுக் கரசனும் என்பதிலுள்ள உம்மை இறந்தது தழீஇய எச்சவும்மை இராவணன்மேல் கழுகினுக்கரசன் விரைந்து சென்றமைக்கு அவன் உள்ளத்தின் விரைவையே உவமையாகக் கூறினார். மேரு பொன், மலையாதலின் அதனினின்றும் பிரிந்த திரிகூட மலையும் , பொற்கிரி எனப்பட்டது. கழுகினுக்கரசன் – சடாயு. (5)

### அரம்பையரும் பிறரும் நிலைகெட்டு ஓடுதல்

7027. கரிய கொண்டலைக் கருணையங்
கடலினைக் காணப்
பெரிய கண்கள்பெற் றுவக்கின்ற
வரம்பையர் பிறரும்
உரிய குன்றிடை யுருமிடி
வீழ்தலு முலைவுற்
றிரியல் போயின மயிற்பெருங்
குலமென விரிந்தார்.

கரிய கொண்டலை, கருணை அம் கடலினைக் காணப்
பெரிய கண்கள் பெற்று உவக்கின்ற அரம்பையர், பிறரும்,
உரிய குன்றிடை உரும்இடி வீழ்தலும், உலைவுற்று
இரியல் போயின மயிற் பெருங் குலம் என இரிந்தார்.

பொ :—கரு நிறமுள்ள மேகம் போன்றவனும் கருணைக் கடலுமான இராமபிரானைக் காணுதற்குப் பெரிய கண்களைப் பெற்று மகிழ்கின்ற (இராவணன் பக்கத்தில் நின்ற) தேவப் பெண்களும் பிறரும் (தமக்கு இடமாதற்கு) உரிய மலையினிடையே அச்சத்தைச் செய்யும். இடி விழுந்த அளவிலே, கெட்டு ஓடிப் போகின்ற பெரிய மயிற் கூட்டம்போல நிலை கெட்டு ஓடினர்.

கு :—கரிய கொண்டல், கருணையங் கடல் என்பன இராமன் என்னும் ஒரு பொருள் குறித்த பல பெயர்கள். 'பிறரும்' என்பதிலுள்ள உம்மை 'அரம்பையர்' என்பதனோடும் கூட்டப்பட்டது. 'அரம்பையர் பிறரும்' என்பதற்கு அரக்கியரினும் பிறரான தேவப் பெண்கள் யாவரும் என்றும் உரை கூறலாம். இதற்குப் 'பிறரும்' என்பதிலுள்ள உம்மையைப் பிரித்து 'அரம்பையர்' என்பதனோடு இயைக்க. இராவணன் பக்கத்திலிருந்து இராமனைக் கண்டு மகிழ்ந்து கொண்டிருந்த மயிற் கூட்டம் போன்ற மகளிர், இராவணன்மேல் சுக்கிரீவன் பாய்ந்த அளவிலே இடியோசை கேட்டு அஞ்சி அகன்ற மயிற் கூட்டம்போல அவ்விடத்தை விட்டு அஞ்சி நீங்கினர் என்க. உரும் இடி - அச்சத்தைச் செய்யும் இடி. இரிதல் - நிலைகெட்டு ஓடுதல். (6)

### சுக்கிரீவன் இராவணன் முன்னே சென்று நிற்றல்

**7028.** ★ காலவிருள் சிந்துகதி ரோன்மதலை கண்ணுற்
றேலவெதிர் சென்றடலி ராவணனை யெய்தி
நீலமலை முன்கயிலை நின்றதென நின்றான்
ஆலவிட மன்றுவர நின்றசிவ னன்னான்.

கால இருள் சிந்து கதிரோன்மதலை, கண்ணுற்று,
ஏல எதிர்சென்று அடல் இராவணனை எய்தி,
நீலமலை முன் கயிலை நின்றது என, நின்றான்;
ஆலவிடம் அன்று வர, நின்ற சிவன் அன்னான்.

பொ :—நெடுங்காலமாக அடர்ந்து நின்ற இருளை ஒழிக்கும் ஒளிக்கற்றைகளையுடைய சூரியன் புதல்வனாகிய சுக்கிரீவன், இராவணனைக் கண்டு அவன் எதிரே பொருந்தச் சென்று நீல நிறம்

வாய்ந்த மலையொன்றின் முன்னே (வெள்ளிய) கயிலாயமலை நின்றாற் போன்று நின்றனன்; முன் ஒருநாள் ஆலகால விடம் (பொங்கி) மேல்வர (அதன்முன் அச்சமின்றி) நின்ற சிவபெருமானையும் ஒத்துத் தோன்றினன்.

கு:—கால இருள் - நெடுங்காலமாகச் செறிந்து நிற்கும் புற இருள்; இரவுப் பொழுதின் மிக்கிருக்கும் இருள் எனினும் அமையும். கதிரோன் – சூரியன். மதலை - மகன்; என்றது சுக்கிரீவனை. கதிரோன் மதலை, இராவணனைக் கண்ணுற்று எதிர் சென்று எய்தி நின்றான்; அன்று ஆலவிடம் வரநின்ற சிவன் அன்னான் என முடிக்க ஏல - பொருந்த. அடல் - வெற்றி வன்மை. நீலமலை இராவணனுக்கும் கயிலை சுக்கிரீவனுக்கும் நிறத்தால் உவமை. அன்று - தேவர்களும் அசுரர்களும் கூடிப் பாற்கடலைக் கடைந்த அந்நாளில். (7)

## 'வந்த காரியம் யாது' என வினவிய இராவணனது மார்பிற் சுக்கிரீவன் குத்துதல்

**7029.** இத்திசையின் வந்தபொரு
      ளென்னென வியம்பான்
தத்தியெதிர் சென்றுதிசை
      வென்றுயர் தடந்தோள்
பத்திநெடு பத்துடைய
      வன்னுடல் பதைப்பக்
குத்தின னுரத்தினிமிர்
      கைத்துணை குளிப்ப,

'இத்திசையின் வந்த பொருள் என்?' என, இயம்பான்,
தத்தி எதிர் சென்று, திசை வென்று உயர் தடந்தோள்
பத்திநெடு பத்துடையவன் உடல் பதைப்ப,
குத்தினன் உரத்தில், நிமிர் கைத்துணை குளிப்ப.

பொ:—'(நீ) இவ்விடத்தே வந்த காரியம் யாது?' என்று (இராவணன்) வினவ, (சுக்கிரீவன்) அதற்கு மறுமொழி கூறாதவனாய், அவனெதிரே தாவி மேற்சென்று, எல்லாத் திசைகளில் உள்ளாரையும் வென்று ஓங்கிய பெரிய தோள்கள் இருபது படைத்துடையவனாகிய இராவணனது உடல் வருந்தி நடுங்குமாறு ஓங்கிய (தன்) கைகள் இரண்டும் (அவ் இராவணனது) மார்பிலே அழுந்தும்படி குத்தினான்.

கு :—தன்முன் வந்து நின்ற சுக்கிரீவனை நோக்கி, 'நீ இத் திசையின் வந்த பொருள் என் ?' என வினவினனாக, அறங்கெட நின்ற கொடியோனாய அவனது வினாவுக்குச் சொல்லால் விடையிறுக்க விரும்பாத சுக்கிரீவன், இராவணனது மார்பில் தன் இரு கைகளும் அழுந்துமாறு குத்தியவனாய், 'நான் வந்த காரியம் தீயோனாகிய உன்னை அழித்தொழிப்பதே' எனச் செயலால் விடையிறுத்தான் என்பதாம். திசை - இடம். வந்தபொருள் – வருதற்கு ஏதுவாகிய காரியம். தத்துதல் - தாவி மேற்சேறல். பத்தினொடு பத்து - இருபது. உரம் - மார்பு. நிமிர்தல் - ஓங்குதல். கைத்துணை - கையிரண்டும்; துணை என்னுஞ் சொல் இரண்டு என்னும் பொருளில் இங்கு ஆளப்பட்டது. குளித்தல் - அழுந்துதல்; ஆழப்பதிதல். (8)

## இராவணன் இருபது கைகளாலும் சுக்கிரீவனைத் தாக்குதல்

**7030.** திருகிய சினத்தொடு செறுத்தெரி விழித்தான்
ஒருபது திசைக்கணு மொலித்தவொலி யொப்பத்
தருவன மெனப்புடை தழைத்துயர் தடக்கை
இருபது மெடுத்துரு மிடித்தென வடித்தான்.

திருகிய சினத்தொடு செறுத்து எரி விழித்தான்,
ஒருபது திசைக்கணும் ஒலித்த ஒலி ஒப்ப,
தரு வனம் எனப் புடை தழைத்து உயர் தடக் கை
இருபதும் எடுத்து, உரும் இடித்தென அடித்தான்.

பொ :—(இவ்வாறு சுக்கிரீவன் தன்னைக் குத்தியநிலையில் இராவணன்) முதிர்ந்த கோபத்தால் இகல் மேற்கொண்டு தீப்பொறி பறக்க நோக்கியவனாய், மரங்கள் அடர்ந்து வளர்ந்த காட்டினையொத்துப் பக்கங்களில் செறிந்து நீண்ட பெரிய கைகள் இருபதினையும் உயர்த்தெடுத்து முழங்கிய பேரொலி பத்துத் திசைகளிலும் (ஒருசேர) ஒலிக்கப் பேரிடி இடித்தாற்போன்று (சுக்கிரீவனை) அடித்தான்.

கு :—திருகுதல் - முதிர்தல். செறுத்தல் - பகைத்தல். தரு - மரம். வனம் - காடு. தழைத்தல் - செறிதல். ஒலித்த ஒலி, ஒருபது திசைக்கணும் ஒப்ப, உரும் இடித்தென தடக்கை இருபதும் எடுத்து அடித்தான் என இயையும். உரும் - இடி. இச் செய்யுளின் இறுதியிலுள்ள அடித்தான் என்ற சொல், அடுத்த செய்யுளுக்கு முதலாகவும், இவ்வாறே பின்வரும் ஆறு செய்யுட்களிலும் ஈற்றி

லுள்ள சொற்கள் முறையே அடுத்துவரும் செய்யுட்களுக்கு ஆதியாகவும் அந்தாதித் தொடையமைய வத்துள்ளமை நோக்கத்தக்கதாகும். (9)

இராவணனைச் சுக்கிரீவன் உதைத்தல்

**7031.** அடித்தவிரல் பட்டவுட லத்துழி யிரத்தம்
பொடித்தெழ வுறுக்கியெதிர் புக்குடல் பொருந்திக்
கடித்தவிசை யிற்கடி தெழுந்துகதிர் வேலான்
முடித்தலைகள் பத்தினு முகத்தினு முதைத்தான்.

அடித்த விரல் பட்ட உடலத்துழி இரத்தம்
பொடித்து எழ, உறுக்கி எதிர் புக்கு, உடல் பொருந்தி,
கடித்த விசையின் கடிது எழுந்து, கதிர் வேலான்
முடித் தலைகள் பத்தினும் முகத்தினும் உதைத்தான்.

பொ :—(இவ்வாறு இராவணன் ஓங்கி) அடித்த (கைகளின்) விரல்கள் உடம்பின்கண்பட்ட இடத்தினின்றும் குருதிநீர் குமிழியிட்டுத் தோன்ற(ச் சுக்கிரீவன்) அதட்டி (இராவணனது) எதிரே சென்று (அவனுடைய) உடம்புடன் பொருந்திக் கடித்த வேகத்தினும் விரைந்து மேல் எழுந்து, ஒளிமிக்க வேற்படையை யுடையவனாகிய அவனுடைய முடிகள் அணியப்பெற்ற பத்துத் தலைகளிலும் முகங்களிலும் (தன் கால்களால்) உதைத்துத் தாக்கினான்.

கு :—'அடித்த விரல்' என்புழி அடித்த என்னும் பெயரெச்சம் 'போழ்ந்தவாள்' என்புழிப் போன்று கருவிப் பெயர்கொண்டு முடிந்தது. அடித்த விரல் என்றது, அடித்தற்குக் கருவியாயமைந்த இராவணனுடைய கைவிரல்களை. அவ்விரல்கள் பட்டமையால் சுக்கிரீவனது உடம்பின்கண் இரத்தம் பீரிட்டெழுந்த தென்பார், 'அடித்த விரல்பட்ட உடலத்துழி இரத்தம் பொடித்து எழ' என்றார். அடித்த விரல் உடலத்துப் பட்டுழி எனப் பிரித்துக் கூட்டுக. உறுக்குதல் - அதட்டுதல். (10)

சுக்கிரீவனை இராவணன் தலத்திலிட்டுத் துகைத்தல்

**7032.** உதைத்தவ னடித்துணை பிடித்தொரு கணத்திற்
பதைத்துலை வுறப்பல திறத்திகல் பரப்பி
மதக்கரியை யுற்றரி நெரித்தென மயக்கிச்
சுதைத்தல னிடைக்கடி தடிக்கொடு துகைத்தான்.

உதைத்தவன் அடித்துணை பிடித்து, ஒரு கணத்தில்,
பதைத்து உலைவுறப் பலதிறத்து இகல் பரப்பி,
மதக் கரியை உற்று அரி நெரித்தென மயக்கி,
சுதைத் தலனிடை, கடிது அடிக்கொடு துகைத்தான்.

பொ :—(தன் தலைகளிலும் முகங்களிலும்) உதைத்தவனாகிய சுக்கிரீவனுடைய கால்கள் இரண்டினையும் ஒருங்கே பிடித்து ஒரு நொடிப்பொழுதிற்குள் (அச் சுக்கிரீவன்) மன நடுக்கமுற்று வருந்தப் பல திறத்தாலும் தன் போர் வன்மையை வெளிப்படுத்தி, மதத்தாற் செருக்குற்ற யானை யொன்றைச் சிங்கமானது பற்றி நெரித்து வருத்தினாற் போன்று (சுக்கிரீவனைக்) கலக்கமுறச் செய்து சுண்ணாம்பு தீற்றிய அத்தரையிடத்திலே தன் கால்களால் விரைந்து மிதித்து உழக்கினான் (இராவணன்).

கு :—உதைத்தவன் – சுக்கிரீவன். இகல் - வன்மை. அரி - சிங்கம். மயக்குதல் - கலக்கம் உறுவித்தல். சுதைத்தலன் - சுண்ணாம்பு தீற்றப்பட்ட தரை. தலம் தலன் என மகரத்திற்கு னகரம் போலியாய் வந்தது. துகைத்தல் - கால்களால் மிதித்து உழக்குதல். (11)

## சுக்கிரீவன் இராவணனை அமுக்கி அவன் இரத்தத்தைக் குடித்தல்

**7033.** துகைத்தவ னுடற்பொறை
சுறுக்கொள விறுக்கித்
தகைப்பரு வலத்தொடு
தலத்திடை யமுக்கி
வகைப்பிறை நிறத்தெயி
றுடைப்பொறி வழக்கிற்
குகைப்பொழி புதுக்குருதி
கைக்கொடு குடித்தான்.

துகைத்தவன் உடற் பொறை சுறுக்கொள இறுக்கி,
தகைப்(ப)அரு வலத்தொடு தலத்திடை அமுக்கி,
வகைப் பிறை நிறத்து எயிறுடைப் பொறி வழக்கின்
குகைப் பொழி புதுக் குருதி கைக்கொடு குடித்தான்.

பொ :—(தன்னைக் கால்களால்) மிதித்து உழக்கிய இராவணனது உடலாகிய சுமை சுறு நாற்றங் கொள்ளும்படி (தீப்பொறி பறக்க)

இறுகப் பிணித்துத் தடுத்தற்கு அரிய வன்மையால் (அவனைத்) தரையிலே அழுத்தி (இரு) பிளவாகப் பகுக்கப்பட்ட பிறைச் சந்திரனையொத்த நிறம் பொருந்திய பற்களையுடைய வாயென்னும் இந்திரியமாகிய வழியினையுடைய (இராவணனது உடம்பாகிய) குகையிலிருந்து வெளிப்படும் புதிய இரத்தத்தினைத் தன் கையினால் (தேக்கிப்) பருகினான் (சுக்கிரீவன்).

கு :—பொறை - சுமை. தீராப் பழியுடைய கொடியோனாகிய இராவணனது உடல் நிலத்திற்குப் பெருஞ் சுமையாய்த் தோன்றியது என்பார் அதனை உடல் என்னாது 'உடற்பொறை' எனக் குறித்தார். சுறு - தீப்பட்டுக் கருகும் சுடுநாற்றம். தகைப்ப அரு - தடுத்தற்கு அரிய. தகைத்தல் - தடுத்தல். வலம் - வன்மை. வகை - பகுப்பு. பிறை எயிறு - வக்கிர தந்தம். எயிறுடைப்பொறி - பற்களையுடைய இந்திரியமாகிய வாய். வழக்கின் குகை – வழியினையுடைய குகை. வழக்கு – வழி. இச் செய்யுளின் பாடமும் பொருளும் மேலும் ஆராயத்தக்கன. (12)

## இராவணன் சுக்கிரீவனைப் பற்றி யெடுத்துச் சுழற்றுதல்

**7034.** கைக்கொடு குடித்தவ னுடற்கனக வெற்பைப்
பைக்கொடு விடத்தர வெனப்பலகை பற்றி
மைக்கடு நிறத்தவன் மறத்தொடு புறத்தில்
திக்கொடு பொருப்புற நெருப்பொடு திரித்தான்.

**கைக் கொடு குடித்தவன் உடல் கனக வெற்பை,
பைக் கொடு விடத்து அரவு எனப் பல கை பற்றி,
மைக் கடு நிறத்தவன், மறத்தொடு புறத்தில்
திக்கொடு பொருப்பு உற நெருப்பொடு திரித்தான்.**

பொ :—கரிய நஞ்சினது நிறம்போலும் நிறத்தினையுடையவனான இராவணன், கையினால் (தன் உடம்பின் உதிரத்தைப்) பருகியவனாகிய சுக்கிரீவனது உடலாகிய பொன்மலையினைப் படத்தொடு கூடிய கொடிய நஞ்சினையுடைய பாம்பினையொப்பக் கைகள் பலவற்றாலும் பற்றிப் பெருவன்மையினால் புறத்தே (எட்டுத்) திசைகளோடும் மலைகளோடும் மோதும்படி நெருப்புப் பறக்கச் சுழற்றினான்.

கு :—'கைக்கொடு குடித்தவன்' என்றது சுக்கிரீவனை. உடற் கனக வெற்பு – உடலாகிய பொன்மலை. கனக வெற்பு – பொன்னிறம் வாய்ந்த மேருமலை. சுக்கிரீவனுக்கு மேருமலையும் இராவணனுக்குக் கொடுவிடத்தினையுடைய பாம்பும் உவமை. இராவணன் இருபது

கைகளாலும் சுக்கிரீவனுடம்பினை இறுகப்பற்றினமை, அனந்தன் என்னும் பாம்பு பல படங்களாலும் மேருமலையினை அழுந்தப் பற்றியதுபோன்று தோன்றியது என்பதாம். பை – படம். அரவு – பாம்பு. மை – கருமை. கடு – நஞ்சு. (13)

## இராவணனைச் சுக்கிரீவன் அகழியில் தள்ளுதல்

**7035.** திரித்தவ னுரத்தினுகிர் செற்றும்வகை குத்திப்
பெருத்துயர் தடக்கைகொ டடுத்திடை பிடித்துக்
கருத்தழி வுறத்திரி திறத்தெயில் கணத்தன்
றெரித்தவனை யொத்தவ னெடுத்தகழி யிட்டான்.

திரித்தவன் உரத்தின் உகிர் செற்றும் வகை குத்தி,
பெருத்து உயர்தடக் கைகொடு அடுத்து இடை பிடித்து,
கருத்து அழிவுற—திரி திறத்து எயில், கணத்து அன்று
எரித்தவனை ஒத்தவன்,—எடுத்து அகழி இட்டான்.

பொ :—முன்னொருகாலத்தே (ஆகாயத்தில்) திரியும் தன்மையினவாகிய முப்புரங்களையும் ஒரு கணப்பொழுதிலே (சிரித்து) எரித்த உருத்திரமூர்த்தியை ஒத்தவனாகிய சுக்கிரீவன், (தன் கால்களைப்பற்றிச்) சுழற்றியவனாகிய இராவணனது மார்பிலே (தன் விரல் நகங்கள்) ஊன்றி அழுந்தும் வண்ணம் குத்தி (அவனை) அடுத்துப் பருத்து நீண்ட விசாலமான (தன்) கைகளால் (அவனுடைய) இடுப்பினை (இறுக)ப் பிடித்து எடுத்து அவனது மனத்தின் எண்ணமெல்லாஞ் சிதைந்தொழியுமாறு (அவனை) அகழியில் வீழ்த்தினான்.

கு :—அன்று திரிதிறத்து எயில் கணத்து எரிந்தவனை ஒத்தவன், திரித்தவன் உரத்தின் உகிர் செற்றும்வகை குத்திப் பெருத்து உயர் தடக்கைகொடு அடுத்து இடைபிடித்து எடுத்துக் கருத்து அழிவுற அகழி இட்டான் என இயையும். திரிதிறந்து எயில் – திரியும் இயல்புடையனவாகிய முப்புரங்கள். எரித்தவன். உருத்திரமூர்த்தி எரித்தவனை ஒத்தவன், சுக்கிரீவன். திரித்தவன்–(சுக்கிரீவனைப் பற்றிச்) சுழற்றியவனாகிய இராவணன். உகிர் - நகம், செற்றுதல் – ஊன்றி அழுந்துதல். (14)

## இராவணன் சுக்கிரீவனை அகழியில்தள்ள அவ்விருவரும் ஒருசேர அகழியில் வீழ்தல்

**7036.** இட்டவனை யிட்டவக ழிற்கடிதி னிட்டான்
தட்டவுய ரத்தினிமி ருந்தச முகத்தான்
ஒட்டவுட னேயவனும் வந்தவனை யுற்றான்
விட்டிலர் புரண்டிருவ ரோரகழின் வீழ்ந்தார்.

இட்டவனை இட்ட அகழில் கடிதின் இட்டான்,
தட்ட உயரத்தின் நிமிரும் தசமுகத்தான்;
ஒட்ட உடனே அவனும் வந்து அவனை உற்றான்;
விட்டிலர் புரண்டு இருவர், ஓர் அகழின் வீழ்ந்தார்.

பொ :—(பகைவனைத்) தடுத்து நிறுத்தற்பொருட்டு உயர்ந்த (வானின்) இடத்தே நிமிர்ந்து எழுந்த பத்துத் தலையினனாகிய இராவணன், (தன்னை அகழியில்) தள்ளியவனாகிய சுக்கிரீவனை(த் தன்னை அவன்) தள்ளிய (அதே) அகழியில் (தானும்) விரைந்து தள்ளினான். (அங்ஙனம் தள்ளப்பட்ட) அச் சுக்கிரீவனும் உடனே விரைந்து வந்து அவ்விராவணனுடன் பொருதற்கு நெருங்கினான். அவ்விருவரும் (ஒருவரையொருவர் நெகிழ) விடாதவர்களாய்க் கட்டிப் புரண்டு ஓர் அகழியிலே விழுந்தார்கள்.

கு :—தட்ட உயரத்தின் நிமிரும் தசமுகத்தோன்; இட்டவனை இட்ட அகழில் கடிதின் இட்டான்; அவனும் உடனே வந்து ஒட்ட உற்றான்; இருவர் விட்டிலர் புரண்டு ஓர் அகழின் வீழ்ந்தார் என இயையும். இட்டவன், சுக்கிரீவன். தட்ட – தடுத்தற்பொருட்டு. நிமிர்தல் – மேல் எழுதல். தசமுகத்தோன்–பத்துத் தலைகளையுடையவன்; இராவணன். ஒட்டுதல் – இணைந்து பொருதல். (15)

## சுக்கிரீவன் இராவணன் இருவரும் மற்போர் புரிதல் 7037-7046

**7037.** விழுந்தனர் சுழன்றனர்
வெகுண்டனர் திரிந்தார்
அழுத்தின ரழுந்தில
ரகன்றில ரகன்றார்
எழுந்தன ரெழுந்தில
ரெதிர்ந்தனர் முதிர்ந்தார்
ஒழிந்தன ரொழிந்தில
ருணர்ந்திலர்க ளொன்றும்.

விழுந்தனர், சுழன்றனர்; வெகுண்டனர், திரிந்தார்;
அழுந்தினர், அழுந்திலர்; அகன்றிலர். அகன்றார்;
எழுந்தனர், எழுத்திலர்; எதிர்ந்தனர், முதிர்ந்தார்;
ஒழிந்தனர், ஒழிந்திலர்; உணர்ந்திலர்கள், ஒன்றும்.

பொ :—(ஓரகழில்) விழுந்தவராகிய அவ்விருவரும் (நீர்ச்சுழியிற்) சுழன்றார்கள்; ஒருவரையொருவர் சினந்து எதிர்த்து (அவ்வகழியில் நீந்தித்) திரிந்தார்கள்; (அவ்விருவரும் ஒருவர் ஒருவரால் அழுத்தப் பட்டு நீரினுள்ளே) அமிழ்ந்தி மறைந்தார்கள். (அவ்வாறு) அழுந் துதல் இலராய் (மீண்டும் மேலே) எழுந்தார்கள்; (ஒருவரையொரு வர்) விடாது நெருங்கினார்கள்; (பற்றவொண்ணாது) விலகிச் சென் றார்கள்; (அகழியினை விட்டு மேலே) எழுந்தார்கள்; (அவ்வாறு எழுந் தவர்கள் ஒருவர் ஒருவரால் தடுக்கப்பட்டு) எழுதற்கியலாதவரா யினர்; சினம் மூண்டு எதிர்த்துப் பொரும் அவர்கள் (ஆற்றல்) சிதைந்தார்கள்; (ஆயினும்) இறந்திலர்; தம்முணர் வென்பது சிறிதும் இலராயினர்.

கு :—இராவணன் சுக்கிரீவன் என்னும் இருவரும் ஒருவரை யொருவர் தள்ளிக்கொண்டு இலங்கையின் எயிற்புறத்து அகழியி னுள்ளே வீழ்ந்து அவ் அகழியின் இரு கரையினையும் பற்றி நீரிடைப் படர்ந்து நீர்ப்பாசிபோன்று ஒருவரையொருவர் நீங்காமல் அடர்ந்து அக்கிடங்கின்கண்ணே பொருது திரியும் போர்ச் செயல், உழிஞைத் திணையுள், 'நீர்ச்செரு வீழ்ந்தபாசி' என்னுந் துறையின்பால் அடங்கும். (16)

**7038.** அந்தர வருக்கன்மக னாழியக ழாகச்
சுந்தர முடைக்கரம் வலிப்பவொர் சுழிப்பட்
டெந்திர மெனத்திரி யிரக்கமி லரக்கன்
மந்தர மெனக்கடையும் வாலியையு மொத்தான்.

**அந்தர அருக்கன் மகன்,—ஆழி அகழ் ஆக,
சுந்தரமுடைக் கரம் வலிப்ப, ஒர் சுழிப்பட்டு
எந்திரம் எனத் திரி இரக்கம் இல் அரக்கன்
மந்தரம் என,—கடையும் வாலியையும் ஒத்தான்.**

பொ :—வானத்தில் இயங்கும் சூரியனுடைய புதல்வனாகிய சுக்கிரீவன், அவ் அகழே கடலாக, அழகினை யுடைய கைகளால் இழுத்துக் கடைதலால் நீர்ச் சுழியில் அகப்பட்டு, (திரியும்) எந்திரம் போன்று சுழலும் இரக்கமற்ற அரக்கனாகிய இராவணன் மந்தரமலை

போன்று அமைய (முன்னுளில்) பாற்கடலைக் கடைந்த (தமைய ஞகிய) வாலியையும் ஒத்துத் தோன்றினன்.

கு :—அந்தரம் – வானம். அருக்கன் – சூரியன். அவன் மகன்– சுக்கிரீவன். மந்தரம் – பாற்கடலைக் கடைதற்கு மத்தாகக் கொள்ளப் பட்ட மந்தரம் என்னும் மலை. அருக்கன் மகன், அகழ் ஆழியாக, அரக்கன் மந்தரம் என, வாலியையும் ஒத்தான் என இயையும். இச் செய்யுள் உருவகத்துடன் கூடிய உவமையணி. (17)

**7039.** ஊறுபடு செம்புன லுடைந்தகழை யுற்ற
ஆறுபடர் கின்றன வெனப்படர வன்ஞர்
பாறுபொரு கின்றன பரந்தவை யெனப்போய்
ஏறினர் விசும்பிடை யிரிந்தவுல கெல்லாம்.

ஊறுபடு செம்புனல் உடைந்து அகழை உற்ற,
ஆறு படர்கின்றன எனப் படர, அன்ஞர்,
பாறு பொருகின்றன பரந்தவை எனப் போய்,
ஏறினர் விசும்பிடை; இரிந்த, உலகு எல்லாம்.

பொ :—(இராவணன் சுக்கிரீவன் ஆகிய) அவ் இருவருடைய உடம்பிலும் கசிந்து ஊறும் செந்நிறம் வாய்ந்த குருதி நீர்த் தாரை கள், ஆறுகள் கரையுடைந்து அவ் வகழியை யுற்றனவாய் (ப் பெருக் கெடுத்து) வருகின்றன என்னும்படி (பெருக்கெடுத்துச்) செல்ல அவ்விருவரும், பருந்துகள் (வானத்திற்) பரவியனவாய் (த் தம்மிற் பகைத்து)ப் பொருகின்றன எனக் (கண்டோர்) கருதுமாறு சென்று வானப் பரப்பிலே ஏறினர். (அது கண்டு) உலக வுயிர்களெல்லாம் (அஞ்சி) ஓடி ஒளிந்தன.

கு :—ஊறுதல் – உள்ளிருந்து சுரத்தல். செம்புனல் – செந்நீர் ; இரத்தம். படர்தல் – செல்லுதல். அன்ஞர் – இராவணன், சுக்கிரீ வன் ஆகிய அவ்விருவர். ஊறுபடு செம்புனல், ஆறு உடைந்து அகழை உற்ற படர்கின்றன எனப் படர, அன்ஞர், பாறு பரந்தவை பொருகின்றன எனப் போய் விசும்பிடை ஏறினர் ; உலகு எல்லாம் இரிந்த என இயையும். பாறு – பருந்து. இரிதல் – அஞ்சி ஓடுதல். (18)

**7040.** தூரநெடு வானின்மலை யுஞ்சுடர வன்சேய்
காரினெடு மேருநிகர் காய்சின வரக்கன்

தாருடைய தோள்கள்பல வுந்தழுவ நின்ருன்
ஊரிநெடு கோள்கதுவு தாதையையு மொத்தான்.

தூர நெடு வானின் மலையும் சுடரவன் சேய்,
காரிநெடு மேரு நிகர், காய்சின அரக்கன்
தாருடைய தோள்கள் பலவும் தழுவ நின்ருன் ;
ஊரிநெடு கோள் கதுவு தாதையையும் ஒத்தான்.

பொ :—சேய்மையதாய் நீண்டுயர்ந்த விசும்பின் கண்ணே போர் செய்யும் சூரிய குமாரனுகிய சுக்கிரீவன், மேகம் படிந்த மேருமலையினை ஒப்ப, கனலும் சீற்ற முடைய அரக்கனுகிய இராவணனுடைய மாலை யணியப் பெற்ற தோள்கள் பலவற்ருலும் தழுவப் பெற்றவனுய் (அசைவின்றி) நின்றனன் ; (கருநிறப்) பரிவேடத்தாற் சூழப்பெற்ற கதிரவனுகிய தந்தையையும் ஒத்துத் தோன்றினுன்.

கு :—சுடரவன் சேய், காரிநெடு மேரு நிகர்(ப்ப), அரக்கன் தோள்கள் பலவும் தழுவ நின்ருன் ; ஊரிநெடு கோள் கதுவு தாதை யையும் ஒத்தான் என இயையும். காரிநெடு மேரு - மேகத்துடன் பொருந்திய மேருமலை, நிகர்ப்ப என்னும் எச்சம் நிகர் எனப் பகுதி யளவாய் நின்றது. ஊரிநெடு கோள் - ஊர் கோள் ; பரிவேடம் இராவணனுற் பற்றப் பட்டுள்ள சுக்கிரீவனுக்குக் கருமேகத்தாற் சூழப்பட்ட மேரு மலையும் கருநிறப் பரிவேடத்தாற் சூழப்பட்ட கதிர வனும் உவமை. (19)

**7041.** பொங்கமர் விசும்பிடை யுடன்றுபொரு போழ்தில்
செங்கதிர வன்சிறுவ னைத்திரள் புயத்தால்
மங்கல வயங்கொளி மறைத்தவ லரக்கன்
வெங்கதிர் கரந்ததொரு மேகமென லானுன்.

பொங்கு அமர் விசும்பிடை உடன்று பொரு போழ்தில்,
செங் கதிரவன் சிறுவனைத் திரள் புயத்தால்,
மங்கல வயங்கு ஒளி மறைத்த வல் அரக்கன்,
வெங் கதிர் கரந்தது ஒரு மேகம் எனல் ஆனுன்.

பொ :—(இவ்வாறு இருவரும்) ஆகாயத்தின் கண்ணே மனங் கொதித்துச் செய்யும் போர்த் தொழிலை மாறு கொண்டு செய்யும் பொழுது சிவந்த ஒளிக் கற்றைகளை யுடைய சூரியனுக்கு மகனுகிய சுக்கிரீவனை (அவனது) நலத்தால் விளங்கும் மேனி ஒளியினை(த்தன்) திரட்சியுற்ற தோள்களால் மறைத்த வலிய அரக்கனுகிய இராவ

ணன், வெய்ய கதிர்களையுடைய சூரியனை மறைத்து நிற்பதொரு மேகம் என்று சொல்லுமாறு தோன்று வானையினன்.

கு :—மங்கல வயங்கு ஒளி – (காண்போர் கண்களுக்கு விருந்தாய்) நலத்துடன் விளங்கும் (மேனியின்) ஒளி. கரு நிறத்தாலும் மறைத்தற் றெழிலாலும் இராவணனுக்கு மேகம் உவமையாயிற்று. (20)

**7042.** நூபுர மடந்தையர் கிடந்தலற நோனர்
மாபுர மடங்கலு மிரிந்தயர வன்றாள்
மீபுர மடங்கலென வெங்கதிர வன்சேய்
கோபுர மடங்கவிடி யத்தனி குதித்தான்.

**நூபுர மடந்தையர் கிடந்து அலற, நோனர்**
**மாபுரம் அடங்கலும் இரிந்து அயர, வன் தாள்**
**மீபுர மடங்கல் என, வெங் கதிரவன் சேய்,**
**கோபுரம் அடங்க இடிய, தனி குதித்தான்.**

பொ :—சதங்கையணிந்த மகளிர் மனம் பதைத்து வீழ்ந்து அலறவும், பகைவரது பெரிய நகரமாகிய இலங்கை முழுவதும் நிலை கெட்டு ஓடி வருந்தவும், வெம்மை வாய்ந்த கதிரவன் மகனாகிய சுக்கிரீவன், வலிய பாதங்களையும் உடலின் மேற்பகுதி சிங்கவுருவினையும் உடைய நரசிங்க மூர்த்தியைப் போன்று (இலங்கை நகரத்ததாகிய அக்) கோபுரம் முழுவதும் இடிந்து சிதையுமாறு (விசும்பினின்றும்) தனியே குதித்தான்.

கு :—நூபுரம் - சதங்கை. நோனர் – பகைவர். பாதத்தின் கூறு மக்கள் வடிவமும் உடம்பின் மேற் கூறு சிங்க வடிவமும் ஆக அமைந்தது நரசிங்க மூர்த்தம் என அதன் அமைப்பினைப் புலப்படுத்தும் நிலையில், 'வன்தாள் மீபுர மடங்கல்' எனக் குறித்தார். மீபுரம் - உடலின் மேற்பகுதி; மீகண் என்றாற் போலப் பின் முன்னாகத் தொக்க ஆறும் வேற்றுமைத் தொகை. புரம் - உடம்பு. மடங்கல் - சிங்கம். அடங்க - முழுவதும். சுக்கிரீவன் இராவணனது பிடிப்பினின்றும் தப்பி அவனை வானத்தில் நிறுத்தித் தான் மட்டும் தனித்து இலங்கை நகரத்துக் கோபுரத்தின்மேல் குதித்தான் என்பார், 'கோபுரம் அடங்க இடியத் தனி குதித்தான்' என்றார். கதிரவன் சேய், அலற, அயர, இடிய, குதித்தான் என இயையும். சுக்கிரீவன் குதித்த அதிர்ச்சியால் அங்குள்ள கோபுரம்

முழுவதும் இடிந்து சிதைந்தன; இலங்கை நகரத்துள்ளார் அஞ்சி ஓடினர்; நூபுரமணிந்த இளமகளிர் வெருவி நிலமிசை வீழ்ந்து அரற்றினர் என்பதாம். (21)

**7043.** ஒன்றுற விழுந்தவுரு மைத்தொடர வோடா
மின்றெரி யெயிற்றினொரு மேகம்விழு மென்னத்
தின்றிடுவ னென்றெழு சினத்திற லரக்கன்
பின்றொடர வந்திரு கரத்துணை பிடித்தான்.

ஒன்றுற விழுந்த உருமைத் தொடர ஓடா,
மின்தெரி எயிற்றின் ஒரு மேகம் விழும் என்ன,
'தின்றிடுவன்' என்று எழு சினத்திறல் அரக்கன்
பின் தொடர வந்து, இரு கரத் துணை பிடித்தான்.

பொ:—(என்னை மதியாது எதிர்த்த இவனை மென்று) தின்றிடுவேன் என்று பொங்கி யெழுந்த வெகுளியையும் ஆற்றலையும் உடைய இராவணன், மின்னலை யொத்து விளங்கும் பல்லினை யுடைதொரு மேகம் (நிலத்திற்) பொருந்துதல் உற (வானினின்றும்) விழுந்த இடியொன்றினைப் பின் தொடர்ந்து ஓடி விழுந்து பற்றினாற் போன்று (சுக்கிரீவனைப்) பின் தொடர்ந்து வந்து (அவனுடைய) இரண்டு கைகளையும் (வலிந்து) பிடித்துக் கொண்டான்.

கு:—ஒன்றுற - ஒன்றுதல் உற (தரையிற் பொருந்துமாறு); உரும் - இடி. ஓடா - ஓடி. மின் தெரி எயிற்றின் ஒரு மேகம், விழுந்த உருமைத் தொடர ஓடா விழும் என்ன, அரக்கன், பின் தொடர வந்து இருகரத்துணை பிடித்தான் என இயையும். ஒன்றுதல் உற விழும் உரும் வானிலிருந்து குதித்த சுக்கிரீவனுக்கும், அதனைத் தொடர ஓடி விழும் மேகம் இராவணனுக்கும் உவமையாய் வந்தன. (22)

இச் செய்யுளை யடுத்து 52-ஆம் எண்ணுள்ள பிரதியில் பின்வரும் இரண்டு செய்யுட்களும் மிகைப் பாடல்களாகக் குறிக்கப்பட்டுள்ளன.

7043 (a) பிடித்தவன் விழித்துணை பிதுங்கிட நெருக்கி,
இடித்து அலம் வரக் கதறி எய்த்திட இரங்காது
அடிக்கொடு துகைத்து அலை கடற்குள் ஒரு கையால்
எடுத்து உக, இராவணன் எறிந்து இகலின் ஆர்த்தான்.

(b) எறிந்திட விழுந் திரவி சேய் அறிவு சோர்வுற்று
அறிந்ததொர் இமைப்பளவில் ஆகமது தேறி,
பிறந்திலன் எனத் தொனி பிறந்திட மருங்கில்
செறிந்து, 'அமர் அரக்கனொடு செய்வென்' என வந்தான்.

**7044.** வந்தவனை நின்றவன் வலிந்தெதிர் மலைந்தான்
அந்தகனு மஞ்சிட நிலத்திடை யரைத்தான்
எந்திர மெனக்கடி தெடுத்தவ னெறிந்தான்
கந்துக மெனக்கடி தெழுந்தெதிர் கலந்தான்.

வந்தவனை நின்றவன் வலிந்து, எதிர் மலைந்தான்,
அந்தகனும் அஞ்சிட, நிலத்திடை அரைத்தான் ;
எந்திரம் எனக் கடிது எடுத்து, அவன் எறிந்தான்;
கந்துகம் எனக் கடிது எழுந்து, எதிர் கலந்தான்.

பொ :—(வானினின்றும் தன்னை நோக்கி) வந்தவனாகிய இராவணனை(த் தரையில்) நின்றவனாகிய சுக்கிரீவன் ஆற்றலொடு எதிர்த்துப் பொருதவனாய் (உயிர் கொள்ளும்) கூற்றுவனும் அஞ்சுமாறு பூமியிலிட்டுத் தேய்த்தான். (அந்நிலையில் இராவணனாகிய) அவன் (சுழலும்) இயந்திரம் என்னும்படி (சுக்கிரீவனை) விரைந்து எடுத்து வீசி எறிந்தான். (அவ்வாறு வீசியெறியப்பட்ட சுக்கிரீவன்) பந்தினைப் போன்று விரைவிற் கிளர்ந்தெழுந்து அவனோடு பொருதற்கு நெருங்கினான்.

கு :—அந்தகன் - இயமன். கந்துகம் - பந்து. வீசி யெறிந்த நிலையில் எறிந்தாரை நோக்கி எதிர்த் தெழுதற்குப் பந்து உவமை. (23)

**7045.** படிந்தனர் பரந்தனர் பரந்ததொர் நெருப்பின்
கொடுஞ்சின முதிர்ந்தன ருரத்தின்மிசை குத்த
நெடுஞ்சுவர் பிளந்தன நெரிந்தநிமிர் குன்றம்
இடிந்தன தகர்ந்தன விலங்கைமதி லெங்கும்.

படிந்தனர், பரந்தனர், பரந்தது ஒர் நெருப்பின்
கொடுஞ் சினம் முதிர்ந்தனர், உரத்தின்மிசை குத்த,
நெடுஞ் சுவர் பிளந்தன ; நெரிந்த நிமிர் குன்றம் ;
இடிந்தன, தகர்ந்தன, இலங்கை மதில் எங்கும்.

பொ :—(அவ்விருவரும், நிலத்திற்) படிந்து வீழ்ந்தவர்களாய்ப் (பலதிசைகளிலும்) பரவிச் சென்று பொருதனர் ; (எவ்விடத்தும்) பரவி யெரியும் தீயினை யொத்து வெவ்விய வெகுளி மூளப் பெற்றவர்களாய் (ஒருவர் ஒருவர்) மார்பின் மேல் (வலிந்து) குத்தினராக, (அவ்வதிர்ச்சியால்) நீண்ட அண்டப் புறச் சுவர்கள் பிளவுற்றன;

(அவற்றையடுத்துள்ள) உயர்ந்த மலைத் தொடர்கள் நெரிவுற்றன; இலங்கை நகரத்தின் மதில்கள் எங்கும் இடிந்து சிதைந்தன.

கு :—படிதல் - தரையிற் படிந்து பொருதல். பரத்தல் - பல திசைகளிலும் பரவித் திரிந்து பொருதல். நெடுஞ் சுவர் என்றது, அண்டப் பரப்பின் புறத்தே யமைந்த நீண்ட சுவரினை. நிமிர் குன்றம் என்றது அம் மதிற்சுற்றினுள்ளே யமைந்த - மலைத் தொடரினை. (24)

7046. செறிந்துயர் கறங்கனையர்
மேனிநிலை தேரார்
பிறிந்தனர் பொருந்தின
ரெனத்தெரிதல் பேணார்
எறிந்தனர்க ளெய்தினர்க
ளின்னரென முன்னின்
றறிந்தில ரரக்கரு
மமர்த்தொழி லயர்ந்தார்.

செறிந்து உயர் கறங்கு அனையர் மேனிநிலை தேரார்,
பிறிந்தனர் பொருந்தினர் எனத் தெரிதல் பேணார்,
எறிந்தனர்கள், எய்தினர்கள் இன்னர் என, முன் நின்று
அறிந்திலர் அரக்கரும்; அமர்த்தொழில் அயர்ந்தார்.

பொ :—நெருங்கி மேலெழும் காற்றுடியினை ஒத்தார் அவ்விருவருடைய உடம்பின் தோற்ற நிலையைத் தெரிந்துணர முடியாதவராயும், (அவ்விருவரும் ஒருவரை யொருவர்) நீங்கிச் சென்றனர் (அன்றி) நெருங்கிப் பொருந்தினர் என்பதனைத் தெரிந்து கொள்ள விரும்பி (அவ்வாறு) தெரிய இயலாதவராயும், (அவ்விருவருள்) ஒருவரைத் தூக்கி எறிந்தவரும் (அங்ஙனம் எறியப்பட்டு மீண்டு) எதிர்த்து வந்தவரும் இன்னின்னார் என்பதனை (அவர்க்கு) முன்னே நின்றும் கண்டறிய மாட்டாதவராயும் (ஆற்றல் மிக்க) அரக்கர்களும் (அவ்விருவரது) போர்த் தொழிலால் மனஞ் சோர்வுற்று வருந்தினார்கள்.

கு :—செறிதல் - ஒரு சேர நெருங்குதல். உயர்தல் - மேலெழுதல். கறங்கு - காற்றுடி; பட்டம். அரக்கரும் என்புழி உம்மை உயர்வுசிறப்பு. அரக்கரும், தேரார், பேணார், அறிந்திலர், அயர்ந்தார் என முடிக்க. அயர்தல் - சோர்வுறுதல். (25)

சுக்கிரீவன் வரக் காணாது இராமன் தளர்ந்து சாய்தல்

7047. இன்னதோர் தன்மை யெய்து
★ மளவையி னெழிலி வண்ணன்
மன்னுயி ரனைய காதற்
றுணைவனை வரவு காணான்
உன்னிய கரும மெல்லா
முன்னொடு முடிந்த வென்னாத்
தன்னுணர் வழிந்து சிந்தை
யலம்வந்து தளர்ந்து சாய்ந்தான்.

இன்னது ஓர் தன்மை எய்தும்
அளவையின், எழிலி வண்ணன்,
மன்னுயிர் அனைய காதல்
துணைவனை வரவு காணான்,
'உன்னிய கருமம் எல்லாம்
உன்னொடு முடிந்த' என்னா,
தன் உணர்வு அழிந்து, சிந்தை
அலம்வந்து தளர்ந்து, சாய்ந்தான்

பொ:—இவ்வாறு (அவ் விருவர்க்கு மிடையே கடுமையான) போர் நிகழும் சமயத்தில் கருமுகில் போலும் நிறத்தினனாகிய இராம பிரான் (தன்னுடைய) நிலை பெற்ற உயிரை யொத்த பேரன்புடைய துணைவனாகிய சுக்கிரீவன் மீண்டு (தன்பால்) வருதலைக் காணாத வனாய், '(யான் செய்து முடிக்கக்) கருதியிருந்த செயல்கள் யாவும் (சுக்கிரீவனாகிய) உன்னுடனேயே முடிந்தொழிந்தன' என்று புலம்பித் தன் அறிவு கலங்கி (மனஞ்) சுழன்று (உடல்) மெலிந்து (தரையிற்) சாய்ந்தனன்.

கு:—எழிலி வண்ணன் என்றது, கருமுகில் போலும் நிறம் வாய்ந்த திருமேனியையுடைய இராமனை. எழிலி - மேகம். காதற் றுணைவன் என்றது, இராமனொடு உயிரோரன்ன செயிர்தீர் நட்புக் கொண்ட பேரன்பினனாகிய சுக்கிரீவனை. வரவு காணான் - (இராவணனது பிடியினின்றும் தப்பி) மீண்டு வருதலைக் காணாத வனாய். காணான், முற்றெச்சம். தன்னைச் சரண் அடைந்த துணைவ னாகிய சுக்கிரீவன், தன் பகைவனாகிய இராவணனைச் சேய்மையிற் கண்ட அளவிலேயே பெருஞ்சினங் கொண்டு அவன்மேற் பாய்ந்து தாக்கியவன், பகைவனது பிடிப்பினின்றும் விரைவில் தன்கண் மீண்டு வாராமையை எண்ணி மனங் கலங்கிய இராமபிரான், தன்

பால் அன்புடைய சுக்கிரீவனை நினைந்து வருந்துகின்றவன், 'யான் முடிக்கக் கருதியிருந்த செயல்கள் யாவும் என்றும் பாதுகாக் கத்தக்க துணைவனாகிய உன்னை யான் பாதுகாவாமல் நெகிழ விட்டமையால் உன்னிடனே ஒரு சேரக் கெட்டொழிந்தன' என அச் சுக்கிரீவனை முன்னிலை யாக்கிப் புலம்புத லுற்றுத் தளர்ந்து வீழ்ந்தனன் என்பார், "உன்னிய கருமம் எல்லாம் உன்னொடு முடிந்த, என்று......சாய்ந்தான்" என்றார் காணுன், என்று, அழிந்து, அலம்வந்து, தளர்ந்து, சாய்ந்தான் என முடியும். கருமம் – செய்யக் கருதித் துணிந்த செயல்கள்; அவையாவன: உலகிற்கு இடர் விளைக்கும் கொடியோர்களாகிய அரக்கர்களைக் கொன்று முனிவர்கள் முதலிய நல்லோர்களைக் காத்தலும், தன் ஆருயிர்த் தலைவியாகிய சீதையைச் சிறை மீட்டலும், அடைந்தாரைப் புரத்தலும், தன்னைச் சரண்புக்க வீடணற்கு இலங்கையின் ஆட்சி யுரிமையினை வழங்குதலும் முதலான செயல்கள். (26)

### இராமன் வருந்திப் புலம்புதல்

**7048.** ஒன்றிய வுணர்வே யாய
வோருயிர்த் துணைவ வுன்னை
இன்றியா னுளனாய் நின்றேன்
றியற்றுவ தியைவ தன்றால்
அன்றியுந் துயரத் திட்டா
யமரரை யரக்கர்க் கெல்லாம்
வென்றியுங் கொடுத்தா யென்னைக்
கொடுத்ததுன் வெகுளி யென்றான்.

'ஒன்றிய உணர்வே ஆய ஓர்
உயிர்த் துணைவ! உன்னை
இன்றி யான் உளனாய் நின்று, ஒன்று
இயற்றுவது இயைவது அன்றால்;
அன்றியும் துயரத்து இட்டாய்,
அமரரை; அரக்கர்க்கு எல்லாம்
வென்றியும் கொடுத்தாய், என்னைக்
கெடுத்தது உன்வெகுளி' என்றான்.

பொ:—(என்னோடு) ஒத்தவுணர்வினையேயுடைய ஒப்பற்ற உயிர்த்துணைவனே! (என்னுயிரினுஞ்சிறந்த) நின்னையிழந்து யான் உயிருடையனாய் நிலைபெற்று ஒரு காரியத்தைச் செய்வதென்பது

இயலாத தொன்றுகும். (இவ்வாறு என்னைச் செயலற்றவனாக்கிய) அதுவல்லாமலும் (என்னைப் பாதுகாத்தற்குரிய) தேவர்களையும் துன்பத்திற்குள்ளாக்கினாய்; (கொடியோர்களாகிய) அரக்கர்க்கெல்லாம் வெற்றியையும் கொடுத்தாய். (தீயோனாகிய இராவணன் மேற் பொங்கியெழுந்த) உனது கோபம் (உன்பால் அன்புடைய துணைவனாகிய) என்னைக் கெடுத்துவிட்டது என்று வருந்திக் கூறினான்.

கு :—ஒன்றிய உணர்வு – தான் அவன் என்னும் வேற்றுமையின்றி ஒத்த உணர்வு; செல்வக் காலத்தும் அல்லற் காலத்தும் மலர்தலும் கூம்பலும் இன்றி ஒரு பெற்றியதாக நிகழும் உணர்வு எனினும் ஆம். 'உணர்ச்சியொத்த நண்பனாகிய உன்னையின்றி யான் உயிர்தாங்கியிருந்து ஒரு காரியத்தைச் செய்யும் வலியுடையேனல்லேன்; உன்னோடு உடனுயிர் துறக்கும் உரிமையுடையேன்' என்பான், உன்னை இன்றி யான் உளனாய் நின்று ஒன்று இயற்றுவது இயைவது அன்று' என்றான். ஆல் – அசை. 'அன்றியும், அமரரைத் துயரத்து இட்டாய்; அரக்கர்க்கு எல்லாம் வென்றியும் கொடுத்தாய்; உன் வெகுளி என்னைக் கெடுத்தது' என்றான் என இயையும். (27)

**7049.** தெய்வவெம் யடையுந் தீரா
மாயமும் வல்ல தீயோன்
கையிடைப் புக்காய் நீவே
றெவ்வண்ணங் கடத்தி காவல்
வையமோ ரேழும் பெற்றால்
வாழ்வெனே வாரா யாகின்
உய்வனே தமிய னேனுக்
குயிர்தந்த வுதவி யோனே.

'தெய்வ வெம்படையும், தீரா மாயமும், வல்ல தீயோன்
கையிடைப் புக்காய்; நீ வேறு எவ்வணம் கடத்தி, காவல்?
வையம் ஓர் ஏழும் பெற்றால் வாழ்வெனே? வாராய் ஆகின்,
உய்வனே? தமியனேனுக்கு உயிர் தந்த உதவியோனே!

பொ :—(சீதையைப் பிரிந்து) தனிமையுற்றேனுக்குத் (துன்பத்தைத் துடைக்கும் துணைவனாக அமர்ந்து) உயிரை (நீங்காமல் நிறுத்தித்) தந்த பெருநன்றியாளனே! தெய்வத் தன்மை வாய்ந்த கொடிய ஆயுதங்களைச் செலுத்துவதிலும் தவிர்க்க வொண்ணாத

வஞ்சனைச் செயல்களிலும் வல்ல கொடியோனாகிய இராவணனுடைய கையிலே வலியப் புகுந்து அகப்பட்டுக் கொண்டாய். (அவனுடைய) காவலினின்றும் எவ்வாறு தப்பி வரப் போகின்றாய்? (நீ என்பால்) வாராதொழிந்தனையாயின், உலகம் ஏழின் ஆட்சியையும் யான் ஒரு சேரப் பெற்றேனாயினும் (இவ்வுலகில்) வாழப் பெறுவேனோ? உயிர் தாங்கிப் பிழைத்திருக்கவும் வல்லேனோ?

கு:—தெய்வப் படை. வெம்படை எனத் தனித்தனி இயையும். படை—அம்பு முதலியன. தீராமாயம்—(எத்தகைய உபாயங்களாலும்) தீர்க்கவொண்ணாத வஞ்சனைச் செயல். தீயோன் என்றது, இராவணனை. பெற்றாலும் என உம்மை வருவித்துரைக்கப்பட்டது. வாராயாயின் என்பது, இடைநிலை விளக்காய் நின்று, வையம் ஏழும் பெற்றால் வாழ்வெனோ? என்பதனோடும் உய்வனோ? என்பதனோடும் தனித்தனி இயைந்தது. 'யான் என் ஆருயிர்த் தேவியாகிய சீதையின் பிரிவாற் பெருந்துயருழந்து என் உயிரைத் துறத்தலே நலம் என்றெண்ணிய அல்லற் காலத்தில் நீ என்னுடன் நண்பு கொண்டு அவளுடைய அணிகலன்களை எனக்குக் காட்டியும் அவளைத் தேடி மீட்டுத் தருவதாக உறுதி கூறியும் நின்னுடைய வானர சேனைகளை நாற்றிசைகளிலும் அனுப்பித் தேடச் செய்து அவளிருக்குமிடத்தை அறிந்து வந்து அறிவிக்கச் செய்தும் என் பகைவனாகிய இராவணனை அவன் குலத்தொடும் ஒருங்கே கொன்று சீதையை மீட்டற் பொருட்டு நின் சேனைகளொடும் உடன்வந்தும் உதவி செய்தலால் எனது உயிரை எனக்கு அளித்த பெருநன்றியாளன் நீயே' என்பான். 'தமியனேனுக்கு உயிர்தந்த உதவியோனே' என இராமன் சுக்கிரீவனை நினைந்து இரங்கினான் என்க. (28)

**7050.** ஒன்றாக நினைய வொன்றாய்
விளைந்ததென் கரும மந்தோ
வென்றானும் யானோ வாழே
னீயிலை யெனவுங் கேளே
னின்றாய பழியு நிற்க
நெடுஞ்செருக் களத்தி லென்னைக்
கொன்றாய்நீ யன்றோ நின்னைக்
கொல்லுமேற் குணங்க டீயோன்.

'ஒன்ருக நினைய ஒன்ருய்
விளைந்தது என் கருமம்; ஆந்தோ!
என்ருனும் யானே வாழேன்.
'நீ இலை' எனவும் கேளேன்;
இன்று ஆய பழியும் நிற்க,
நெடுஞ் செருக்களத்தில் என்னைக்
கொன்ருய் நீ அன்ருே? நின்னைக்
கொல்லுமேல் குணங்கள் தீயோன்.

பொ:—யான் மேற்கொண்ட செயலானது (நான்) ஒன்ருக நினைக்க (என் கருத்துக்கு மாறுபட்ட) வேருென்ருகி முடிந்து விட்டது. ஐயோ! (நின்னைப் பிரிந்த) யானே ஒருநாளும் வாழமாட்டேன். 'நீ இறந்து இல்லாதவன் ஆயினுய்' எனப் பிறர் கூறவும் கேட்கப் பொறேன். குணங்களாற் கொடியோனுகிய அவ் இராவணன் நின்னைக் கொல்வானுயின், இன்றளவும் (எனக்கு) உண்டாகிய பழிகளெல்லாம் (என்னை விட்டு நீங்காது) நிலைத்திருக்க, நீண்ட போர்க்களத்திலே என்னைக் கொன்றவனும் (என் உயிர்த்துணைவனுகிய) நீயேயாவாய்.

கு:—கருமம் - எண்ணித் துணிந்த செயல். 'என் கருமம் ஒன்ருக நினைய ஒன்ருய் விளைந்தது' என்பது, சீதையைப் பெறுதலாகிய நற்பயனைத் தருவதாக எண்ணி நான் மேற்கொண்ட செயலானது ஆருயிர் நண்பனுகிய உன்னை யிழத்தலாகிய தீய பயனைத் தருவதாய் முடிந்துவிட்டது' என்றவாறு. 'நினைந்ததொன்று நிகழ்ந்ததொன்று' என நினைந்திரங்கும் நிலையில் அமைந்த இத் தொடர் 'ஒன்றை நினைக்கின் அது ஒழிந்திட் டொன்ருகும்' என வரும் மூதுரையுடன் ஒப்புநோக்கத்தக்கதாகும். அந்தோ, இரக்கக் குறிப்பு. என்ருனும் - என்ருயினும்; ஒருநாளும். நீ இலை - நீ இல்லையாயினுய் (இறந்தொழிந்தாய்). எனவும் - என்று பிறர் சொல்லவும். பொறேன் - கேட்டு (உயிர்தாங்கி) இருக்கப் பொறேன். "என்னுயிர்த் துணைவனுகிய உன்னைக் குணங்களாற் கொடியோனுகிய இராவணன் கொல்வானுயின், நினது பிரிவால் வருந்தும் யான், பெரிய போர்க்களத்திலே அரக்கரொடு பொருது அவர்களைக் கொன்ருெழித்தலாகிய என் கடமையினை நிறைவேற்றும் வன்மையினையிழந்து இன்றளவும் என்பாற் சேர்ந்துள்ள பழிகளெல்லாம் நீங்காது நிற்க எனது உயிரை இழக்க நேரிடும். அந்நிலை ஏற்படுமானல் எனது இறப்புக்குக் காரணமானவர் பகைவரல்லர்; என் பழிகளை இவ்வுலகில் நிலைக்கச் செய்து என்னுயிரைப் போக்கியவன் என் உயிர்த் துணைவனுகிய நீயேயாவாய்" என்பான், 'குணங்கள்

தீயோன் கொல்லுமேல், இன்று ஆய பழியும் நிற்க நெடுஞ்செருக் களத்தில் என்னைக் கொன்றாயும் நீயே' என இராமன் சுக்கிரீவனை நினைந்து வருந்தினான் என்பதாம். நீயே என்புழி ஏகாரம், பிரிநிலை. (29)

**7051.** இறந்தனை யென்ற போது
மிருந்தியா னரக்க ரென்பார்
திறந்தனை யுலகி னீக்கிப்
பின்னுயிர் தீர்வெ னேனும்
புறந்தரும் பண்பி னாய
வுயிரொடும் பொருந்தி னானை
மறந்தனன் வலிய னென்பா
ராதலா லதுவு மாட்டேன்.

'இறந்தனை என்ற போதும்
இருந்து யான், அரக்கர் என்பார்
திறம்தனை உலகின் நீக்கி,
பின் உயிர் தீர்வெனேனும்,
"புறந்தரும் பண்பின் ஆய
உயிரொடும் பொருந்தினானை
மறந்தனன், வலியன்" என்பார்;
ஆதலால் அதுவும் மாட்டேன்.

பொ:—(என் துணைவனாகிய நீ) இறந்து விட்டாய் என்பதனை அறிந்த போதும் (நின்னையின்றி யான்) உயிர்தாங்கியிருந்து அரக்கர் எனப்படுவோர் இனங்களை யெல்லாம் இவ்வுலகினின்றும் அறவே ஒழித்து அதன் பின்னர் எனது உயிரைத் துறப்பேன் ஆனாலும் ("இறுதி வந்த காலத்து அல்லல் நீக்கிப்) பாதுகாக்கும் நற்பண் புடைய உயிரொத்த பெருங்கேண்மையாளனை மறந்தவனாகி(ப் போரில் தன் பகைவர்களைக் கொன்று) வெற்றிபெற்றான்; (ஆதலால், உயிர்த்துணைவன் பிரிவுக்குத் தளர்ச்சியுறாத) மனவலிபடைத்தவன் (இராமன்)" என உலகத்தார் என்னைப் பழிப்பார்கள். ஆதலால் அவ்வாறு செய்தற்கும் இயலாதவனாயினேன்.

கு:—" நண்பனாகிய உனது பிரிவுத் துயரத்தை ஒருவாறு ஆற்றி யிருந்து என்னைச் சார்ந்த பழிகளெல்லாம் நீங்கக் கொடியோர்க ளாகிய அரக்கர்களைக் கொன்று தீர்த்து எனது கடமையினை நிறை வேற்றி அதன் பிறகு எனது உயிரைத் துறந்தேனாயினும், நின் பிரிவு

கேட்டவுடனேயே உடனுயிர் துறக்கும் அன்பின் திறனின்றி மேற் சொன்ன கடமையினைப் பொறுத்திருந்து நிறைவேற்றுமளவு கற்போலும் வலிய மனத்தினனாய் இருந்தான் இராமன்' என உலகத்தார் என்னைப் பழித்துரைப்பர். அத்தகைய பெரும்பழி என்னைச் சாராதவாறு யானும் இப்பொழுதே என்னுயிரைத் துறக்கும் நிலையில் உள்ளேன்'' என இராமன் சுக்கிரீவனது பிரிவாற்றாது பெரிதும் வருந்தினான் என்பதாம். (30)

**7052.** அழிவது செய்தா யைய
வன்பினா லளியத் தேனுக்
கொழிவரு முதவி செய்த
வுன்னையா னொழிய வாழேன்
எழுபது வெள்ளந் தன்னி
னீண்டொர்பே ரெஞ்சா தேகிச்
செழுநக ரடைந்த போது
மித்துயர் தீர்வ துண்டோ.

'அழிவது செய்தாய், ஐய! அன்பினால் அளியத் தேனுக்கு
ஒழிவு அரும் உதவி செய்த உன்னை யான் ஒழிய வாழேன்;
எழுபது வெள்ளந் தன்னின் ஈண்டு ஓர்பேர் எஞ்சாது ஏகிச்
செழுநகர் அடைந்த போதும், இத் துயர் தீர்வது உண்டோ?

பொ :—ஐயனே! (நின்னால்) பாதுகாத்து அளிக்கத்தக்கவனாகிய எனக்கு அன்பின் மிகுதியால் அழிதற்கு ஏதுவான காரியத்தைச் செய்துவிட்டாய். அழியாத பேருதவியைச் செய்த (பெருங்கேண்மையுடைய) உன்னையின்றி யான் உயிர் வாழ மாட்டேன். (அவ்வாறன்றி யான் உயிருடையனாய்ப் பகைவரை வென்று) எழுபது வெள்ளஞ் சேனை (வானர) வீரர்களுள் ஒருவரும் குறையாதவாறு வளம்பொருந்திய(அயோத்தி) நகரத்தை அடைந்த காலத்தும் (என் உயிர்த்தோழனாகிய உன்னைப் பிரிந்த) இத்துயரம் நீங்குமாறுளதோ?

கு :—ஒழிவு அரும் உதவி – உதவி செய்யப் பெற்றாரது நெஞ்சை விட்டு நீங்குதலரிய அழியாத பேருதவி. யான் உன்னை யொழிய வாழேன் என இயையும். (31)

## சுக்கிரீவன் இராவணன் அவமானமடைய அவனது முடிமணிகளைப் பறித்துக்கொண்டு இராமனையடைதல்

**7053.** என்றவ னிரங்குங் காலத்
திருவரு மொருவர் தம்மில்
வென்றிலர் தோற்றி லாராய்
வெஞ்சமம் விளைக்கும் வேலை
வன்றிற லரக்கன் மௌலி
மணிகளை வலியின் வாங்கிப்
பொன்றினெ னாகி னன்றென்
றவன்வெள்க விவனும் போந்தான்.

என்று அவன் இரங்கும் காலத்து,
இருவரும் ஒருவர் தம்மில்
வென்றிலர் தோற்றிலாராய்
வெஞ்சமம் விளைக்கும் வேலை,
வன்திறல் அரக்கன் மௌலி
மணிகளை வலியின் வாங்கி,
'பொன்றினென் ஆகின் நன்று' என்று,
அவன் வெள்க, இவனும் போந்தான்.

பொ :—என்று இவ்வாறு அவ் இராமன் (சுக்கிரீவனை நினைந்து) புலம்பி வருந்தும்பொழுது (இராவணன் சுக்கிரீவன் என்னும்) அவ் இருவருள் எவரும் வெற்றி பெருதவராய்த் தோல்வியும் எய்தாதவராய்க் கடும்போர் புரியுங்காலத்து, சுக்கிரீவனாகிய இவனும், பெருவலி படைத்த அரக்கனாகிய இராவணனுடைய முடிகளின் மணிகளை (த்தன்) வலிமையாற் பறித்துக் கொண்டு, ('முடிகளின் மணிகளைப் பறிகொடுத்த யான்) இறந்தொழிந்தேனாயின் நன்றாயிருந்திருக்கும்' என்று அவ் இராவணன் (தன்மானமழிவுக்கு) நாணி வருந்துமாறு (இராமன்பால்) வந்து சேர்ந்தான்.

கு :—இவனும், வன்திறல் அரக்கன் மௌலி மணிகளை வலியின் வாங்கி, 'பொன்றினெனாகின் நன்று' என்று அவன் வெள்கப் போந்தான் என இயையும். இவன் என்றது சுக்கிரீவனை. அவன் என்றது இராவணனை. 'பொன்றினென் ஆகின் நன்று' என்பது, முடிமணிகளைப் பறிகொடுத்த இராவணனது உட்கோள். பொன்றுதல் – இறத்தல். வெள்குதல் – நாணுதல். (32)

சுக்கிரீவன் தான் கொணர்ந்த மணிகளை இராமபிரான் திருவடியில் வைத்து வணங்குதல்

7054. கொழுமணி முடிக டோறுங்
கொண்டநன் மணியின் கூட்டம்
அழுதயர் வுறுகின் றான்ற
னடித்தல மதனிற் சூட்டித்
தொழுதய னாணி நின்றான்
றூயவ ரிருவ ரோடும்
எழுபது வெள்ள யாக்கைக்
கோருயி ரெய்திற் றன்றே.

**கொழு மணி முடிகள் தோறும் கொண்ட நல் மணியின் கூட்டம் அழுது அயர்வுறுகின்றான் தன் அடித்தலம் அதனிற் சூட்டி, தொழுது, அயல் நாணி நின்றான்; தூயவர் இருவ ரோடும் எழுபது வெள்ளம் யாக்கைக்கு ஓர் உயிர் எய்திற்று அன்றே.**

பொ :—(ஒளியாற்) செழித்து முதிர்ந்த மணிகள் பதிக்கப் பெற்ற முடிகள் தோறும் பறித்துக் கொணர்ந்தனவாகிய மணித்திரள்களை (த் தனது பிரிவினால்) அழுது வருந்துகின்றவனாகிய இராமனுடைய திருவடிகளில் வைத்து வணங்கி அவனது அருகே வெள்கி நின்றனன். (அவனது வருகை) தூய்மையுடையராகிய இராம இலக்குவர் இருவரோடு எழுபது வெள்ளம் என்னும் தொகையின வாகிய (வானர சேனையின்) உடம்புகட்கும் ஓர் உயிர் வந்தது (போல்) ஆயிற்று.

கு :—தன் பிரிவினால் இராமன் தனித்து வருந்துமாறு தான்காலம் நீட்டித்தமையும், அங்ஙனம் தாமதித்த நிலையிலும் தான் இராவண னுடைய தலைகளைக் கொய்து கொணராது அவனை உயிரோடு விட்டு வந்தமையும் நினைந்து சுக்கிரீவன் நாணினன் என்க. "பையல் தலையைப் பிடுங்கிக்கொண்டு திருவடிகளிலே இடப்பெறாத நாம் என் சொல்லி முன்னே நிற்பது? என்று பெருமாளருகே வந்து நின்றான்" எனவரும் பெரியவாச்சான் பிள்ளையவர்கள் கூற்று இச் செய்யுளில் வரும் 'தொழுது அயல் நாணி நின்றான்' என்னும் தொடருக்குரிய விளக்கமாக அமைந்திருத்தல் கூர்ந்து நோக்கத்தக்கதாகும். சுக்கி ரீவன் இராவணனது பிடியிற் சிக்கினமையால் கலக்கமுற்ற இராம இலக்குவரும் அங்கதன் முதலிய எழுபது வெள்ளம் வானர வீரர் களும் உயிர் நீங்கியவர்களைப் போன்று உணர்விழந்து உயிர்ப் பொடுங்கியிருந்தவர்கள், சுக்கிரீவன் மீண்டு வந்து இராமனை

யடைந்த நிலையில் தத்தம் உயிர்வரப் பெற்றவராய் உணர்வு பெற்றெழுந்தனர் என்பார், 'தூயவர் இருவரோடும் எழுபது வெள்ளம் யாக்கைக்கு ஓருயிர் எய்திற்றன்றே' என்றார் ஆசிரியர். தூயவர் இருவர் என்றது இராம இலக்குவர்களை. கொழுமை – செழுமை.

(33)

இராமன் சுக்கிரீவனை மார்புறத் தழுவிக் கண்ணீர் சொரிதல்

**7055.** என்புறக் கிழிந்த புண்ணி
ணிழிபெருங் குருதி யோடும்
புன்புலத் தரக்கன் றன்னைத்
தீண்டிய தீமை போக
அன்பனை யமரப் புல்லி
மஞ்சன மாட்டி விட்டான்
தன்பெரு நயன மென்னுந்
தாமரை சொரியு நீரால்.

என்பு உறக் கிழிந்த புண்ணின் இழி பெருங் குருதியோடும்
புன்புலத்து அரக்கன் தன்னைத் தீண்டிய தீமை போக,
அன்பனை அமரப் புல்லி, மஞ்சனம் ஆட்டி விட்டான்,
தன்பெரு நயனம் என்னும் தாமரை சொரியும் நீரால்.

பொ :—(அந்நிலையில் இராமன்) தன்பால் அன்புடையனாகிய சுக்கிரீவனை இறுகத் தழுவி, எலும்பினைப் பொருந்தும் அளவு (தசை) அறுபட்டு ஆழ்ந்த புண்களினின்றும் வழியும் மிக்க இரத்தத்துடனே இழிந்த அறிவினையுடை அரக்கனாகிய இராவணனைத் தீண்டினமையால் உளதாகிய தீட்டும் (கழுவப்பட்டு) நீங்கிப் போகுமாறு தன்னுடையபெரிய கண்ணாகிய தாமரை மலர் சொரியும் தூய நீரினால் திருமஞ்சனம் ஆட்டினான்.

கு :—(இராமன்) அன்பனை அமரப்புல்லி (அவனுடம்பின்) என்பு உறக்கிழிந்த புண்ணின் இழிபெருங் குருதியோடும் அரக்கன் றன்னைத் தீண்டிய தீமை போகத் தன்பெரு நயனம் என்னும் தாமரை சொரியும் நீரால் மஞ்சனம் ஆட்டி விட்டான் என இயையும். என்பு – எலும்பு புன்புலம் – புன்மைச் செயல்களிற் செல்லும் (இழிந்த) அறிவு. அரக்கன்றன்னை–அரக்கனை. தீமை–தீட்டு; தீண்டத்தகாத தீவினையாளனாகிய இராவணனைத் தீண்டினமையால் ஏற்பட்ட அசுத்தம். மஞ்சனம் ஆட்டுதல் – நீராட்டுதல்.

(34)

## சுக்கிரீவனை நோக்கி இராமபிரான் கூறுதல்

7056 ஈர்கின்ற தன்றே யென்ற
னுள்ளத்தை யிங்கு மங்கும்
பேர்கின்ற தாவி யாக்கை
பெயர்கின்ற தில்லைப் பின்னைத்
தேர்கின்ற சிந்தை யன்றே
திகைத்தனை யென்று தெண்ணீர்
சோர்கின்ற வருவிக் கண்ணன்
றுணைவனை நோக்கிச் சொல்லும்.

'ஈர்கின்றது அன்றே, என்றன்
உள்ளத்தை; இங்கும் அங்கும்
பேர்கின்றது ஆவி; யாக்கை
பெயர்கின்றது இல்லை; பின்னை,
தேர்கின்ற சிந்தை அன்றே
திகைத்தனை?' என்று, 'தெள் நீர்'
சோர்கின்ற அருவிக் கண்ணன்
துணைவனை நோக்கிச் சொல்லும்:

பொ :—(என் உயிர்த்துணைவனாகிய நீ என்பொருட்டுப் பகைவன் பிணிப்பிற்பட்ட இப்பிரிவுத்துயர் கூரிய வாட்படையினைப் போன்று) என்னுடைய மனத்தைப் பிளக்கின்றதல்லவா? எனது உயிர் (உடம்பின் அகத்ததோ புறத்ததோ என்று ஐயுறும்படி என்னுடலில்) இங்கும் அங்கும் (வருவதும் போவதும்) ஆக இடம் பெயர்ந்து அலைகின்றது. (உயிர் ஒருநிலைப் படாமையால்) எனது உடம்பு பின்னரும் இயங்குதற்கு இயலாததாகிவிட்டது. (எதனையும்) ஆராய்ந்து துணியும் ஆற்றல் வாய்ந்த (நின்) மனத்தில் திகைப்பினை மேற்கொண்டாய் அல்லையோ? என்று வருந்தி வழிகின்ற தெளிந்த கண்ணீராகிய அருவியினைப் பொகுந்திய கண்களையுடைய இராமன் தன் நண்பனாகிய சுக்கிரீவனை நோக்கி(ப் பின்வருமாறு) கூறுவானாயினன்.

கு :—('நின் பிரிவுத்துயர்) என்றன் உள்ளத்தை ஈர்கின்றது அன்றே? ஆவி இங்கும் அங்கும் போகின்றது; யாக்கை பின்னைப் பெயர்கின்றது இல்லை; தேர்கின்ற சிந்தை திகைத்தனை யன்றே?" என்று சோர்கின்ற தெண்ணீர் அருவிக் கண்ணன் துணைவனை நோக்கிச் சொல்லும என இயையும். ஈர்தல் – பிளத்தல். இங்கு – உடம்பின் அகம். அங்கு – யாக்கையின் புறம். பேர்தல் – பெயர்தல்;

இடம்விட்டு இடம் மாறிச் செல்லுதல். தேர்கின்ற சிந்தை - எதனையும் ஆராய்ந்து துணியவல்ல தெளிவுடைய மனம். திகைத்தல் - உணர்வு கலங்கி மயங்குதல். தெண்ணீர் சோர்கின்ற அருவிக் கண்ணன் என்றது இராமனை. துணைவன் என்றது சுக்கிரீவனை.

(35)

**7057.** கல்லினும் வலிய தோளாய்
நின்னையக் கருணை யில்லோன்
கொல்லுதல் செய்தா ளுகிற்
கொடுமையாற் குற்றம் பேணிப்
பல்பெரும் பகழி மாரி
வேரொடும் பறிய நூறி
வெல்லினுந் தோற்றேன் யானே
யல்லனோ விளிந்தி லாதேன்.

'கல்லினும் வலிய தோளாய்!
நின்னை அக் கருணையில்லோன்
கொல்லுதல் செய்தான் ஆகின்,
கொடுமையால் குற்றம் பேணி,
பல்பெரும் பகழி மாரி
வேரொடும் பறிய நூறி,
வெல்லினும், தோற்றேன் யானே
அல்லனோ, விளிந்திலாதேன்?'

பொ:—மலையினும் திண்மை படைத்த தோள்களையுடைய சுக்கிரீவனே! (என் உயிர்த்துணைவனாகிய) உன்னை இரக்கமற்ற கொடியோனாகிய அவ் இராவணன் (ஒருகால்) கொன்று ஒழித்தலைச் செய்திருப்பானாயின் (நின் பிரிவினால்) உயிர் துறவாத யான் (அவன் செய்த) கொடுஞ்செயல் காரணமாக (அவனது) குற்றத்தைப் பாராட்டி எண்ணி (அவற்றிற்குரிய தண்டனையாக) மிகப் பலவாகிய அம்பு மழையினால் (அவனும் அவனுடைய சுற்றமும்) வேருடன் பறித்தெறியப்பட்டு அழியும்படி கொன்று வெற்றி பெற்றேன் ஆனாலும் (அடைக்கலம் புகுந்த நின்னைப் பாதுகாத்தலாகிய எனது கடமையில் தவறினமையால்) யானே தோல்வியுற்றேன் அல்லேனோ?

கு:—கல் - மலை; திரண்ட கல் எனினும் அமையும். கருணையில்லோன் - இரக்க மற்ற கொடியோன்; என்றது இராவணனை. பகழிமாரி - அம்புமழை. நூறுதல் - அழித்தல். விளிதல் - இறத்தல்.

என்னையே தஞ்சமாக அடைந்த நீ என்பகைவனால் கொல்லப்பட்டு இறக்கவும், உன்னைப் பாதுகாக்கவேண்டிய கடமையில் தவறிய யான், அது பற்றி எனது உயிரைப் போக்கிக்கொள்ளாது உயிர் தாங்கியிருந்து என் பகைவனைப் போர்க்களத்தில் அலறத் தாக்கிக்கொன்று வெற்றியடைந்தேன் ஆயினும் அச்செயல் எனக்கு உண்மையான வெற்றியாக அமையப்போவதில்லை; முதலிற் செய்யவேண்டிய கடமையில் வழுவிய யானே தோல்வியுற்றவன் ஆவேன் என்பான், 'நின்னை அக் கருணையில்லோன் கொல்லுதல் செய்தான் ஆகின், பகழிமாரி வேரொடும் பறிய நூறி வெல்லினும் யானே தோற்றேன் அல்லனோ' என இராமன் சுக்கிரீவனை நோக்கிக் கூறினான் என்பதாம். (36)

**7058.** பெருமையும் வன்மை தானும்
பேரெழி லாண்மை தானும்
ஒருமையி னுணர நோக்கிற்
பொறையின தூற்ற மன்றே
அருமையு மடர்ந்து நின்ற
பழியையு மயர்த்தாய் போல
இருமையுங் கெடுத்தா யன்றே
யென்னினைந் தென்செய் தாய்நீ.

'பெருமையும் வன்மை தானும்,
பேர் எழில் ஆண்மை தானும்,
ஒருமையின் உணர நோக்கின்,
பொறையினது ஊற்றம் அன்றே!
அருமையும் அடர்ந்து நின்ற
பழியையும் அயர்த்தாய் போல,
இருமையும் கெடுத்தாய் அன்றே?
என் நினைந்து என் செய்தாய் நீ?

பொ:—மன ஒருமையுடன் சிந்தித்துப் பார்க்குங்கால் (செயற்கரிய செய்தலாகிய) பெருமையும் (வன்மையுளெல்லாம் சிறந்த) வன்மையும் மிக்க எழுச்சியையுடைய ஆண்மைத்தன்மையாகிய வீரமும் பொறையுடைமையாகிய குணத்தினின்றும் ஊறிச் சுரப்பன அல்லவோ? (பிறரால் எளிதில் வெல்லுதற்கியலாத பகைவரது) அருமைத்தன்மையினையும் (அவர்களால் நம்மை) நெருங்கி நிலைத்துள்ள பழியினையும் மறந்தாய்போல (ப் பொறுமையினையிழந்து புகழும் அறமும் ஆகிய) இருமைப் பயன்களையும் கெடுத்துவிட்டாய்

அல்லையோ? நீ என்ன நினைந்து என்ன காரியத்தைச் செய்து விட்டாய்?

கு:—ஒருமையின் உணரநோக்கின், பெருமையும் வன்மை தானும் பேர் எழில் ஆண்மைதானும் பொறையினது ஊற்றம் அன்றே என இயைத்துப் பொருள்கொள்க. ஒருமை - மனம் ஒரு வழிப்பட நிற்கும்நிலை. பெருமை - செயற்கரிய செய்தலாகிய பெருந் தகைமை. வன்மை - வலிமை. எழில் - எழுச்சி. ஆண்மை - வீரம். ஊற்றம் - ஊற்றெடுத்துச் சுரத்தல். ஊறிச் சுரப்பனவற்றை ஊற்றம் என்றது ஆகுபெயர். பெருமை, வன்மை, ஆண்மை முதலிய பண்புகள் பலவும் பொறையுடைமையினை நிலைக்களமாகக் கொண்டு ஊற்றெடுத்துப் பெருகுவன என்பான், 'பெருமையும் வன்மைதானும் பேரெழில் ஆண்மைதானும் பொறையினது ஊற்றம்' என்றான். தான் இரண்டும் அசைகள். போற்றார்ப் பொறுத்தல் வன்மையுளெல்லாந்தலை என்பான், 'வன்மைதானும் பொறையினது ஊற்றம்' என்றான் என்க. 'வன்மையுள் வன்மை மடவார்ப்பொறை' (திருக்குறள் - 153) என்றார் தெய்வப்புலவரும். அருமை - வெல்லுதற்கு அருமை. அடர்தல் - நெருங்குதல். நீ இவற்றை மறந்திலையாயினும் மறந்த நிலையில் உளதாம் பொறுமை யிழந்த நிலையை மேற்கொண்டு இராவணன்மேற் பாய்ந்த நினது செயல் புகழும் அறமும் ஆகிய இருமைப் பயன்களையும் ஒருங்கே கெடுப்பதாய் நினது அறிவின் திறத்திற்கும் இழுக்காய் முடிந்தது என்பான், 'அயர்த்தாய்போல, இருமையும் கெடுத்தாய் அன்றே! நீ என் நினைந்து என் செய்தாய்?' எனச் சுக்கிரீவனை நோக்கிக் கூறினான் இராமன். (37)

**7059.** இந்நிலை விரைவி னெய்தா
  தித்துணை தாழ்த்தி யாயின்
நன்னுதற் சீதை யாலென்
  ஞாலத்தாற் பயனென் னம்பி
உன்னையான் றொடர்வெ னென்னைத்
  தொடருமிவ் வுலக மென்றால்
பின்னையெ னிதனைக் கொண்டு
  விளையாடிப் பிழைப்ப செய்தாய்.

'இந் நிலை விரைவின் எய்தாது,
  இத்துணை தாழ்த்தி ஆயின்,
நல் நுதல் சீதையால் என்?
  ஞாலத்தால் பயன் என்? நம்பி!

உன்னை யான் தொடர்வென்; என்னைத்
தொடரும் இவ் உலகம்; என்றால்,
பின்னை என், இதனைக் கொண்டு?
விளையாடி, பிழைப்ப செய்தாய்!'

பொ :—விரும்பத்தக்க தோழனே! (யான் ஆற்றொணாத்துயர டைந்த) இந்த நிலைமையில் விரைவில் வந்து சேராமல் இவ்வள விற்கு மேலும் தாமதித்திருப்பாயானால் (உனக்குத் தீங்கு நேர்ந்தி ருக்குமாயின்) நல்ல நெற்றியினையுடைய சீதை(யை அடைந்தமை) யால்தான் (எனக்குப் பயன்) யாது? உலகில் (உயிர்தாங்கி) வாழ்வ தனால் யாது பயன்? யானும் (உயிர்துறந்து) உன்னைத் தொடர் வேன். இவ்வுலகமும் (உயிர் துறந்து) என்னைப் பின்பற்றும். ஆனால் (இவ்வாறு) நீ பொறுமையின்றி மேற்கொண்ட இச்செயலைத் துணை யாகக்கொண்டு பின் விளையும் நன்மையாது? (கருத்தின்றி) விளை யாடுவது போலும் இச்செயலை மேற்கொண்டு தவறான காரியத்தைச் செய்துவிட்டாய்.

கு :—'இந்நிலை' என்றது, தனது ஆற்றொணாப் பிரிவுத்துன்பத் தினை. இத்துணை – இவ்வளவின்மேலும். 'யான் உன்னைத் தொடர் வென், இவ்வுலகம் என்னைத் தொடரும் என்றால் இதனைக்கொண்டு பின்னை என்?' என இயைத்துரைக்க. 'இத்துயர் நிலையில் ஈண்டு விரைவின் வந்து சேராமல் இன்னும் சிறிது நேரம் தாமதித்து வருவாயாயின் உனக்குத் தீங்கு நேர்ந்து விட்டதென்றே யெண்ணி யானும் உயிர் துறப்பேன், இங்குள்ள இலக்குவன் முதலிய எல் லோரும் என்னைப் பின்பற்றித் தம்முயிரைத் துறப்பர். இங்ஙனம் நின்பால் அன்புடையார் பலர்க்கும் இறுதி நேரும் நிலையில் நீ பொறுமையின்றி மேற்கொண்ட இச் செயலால் விளையக்கூடிய நன்மைதான் யாதுளது? இவ்வாறு பின் விளைவினைச் சிந்தித் துணராமல் ஒரு செயலை மேற்கொள்வது தகுதியாகாது' என இராமன் சுக்கிரீவனை அன்பின் மிகுதியாற் கடிந்துரைத்தனன் என்பதாம். (38)

இதன்பின் அச்சுப்பிரதிகள் பலவற்றில் பின்வருமாறு ஒரு செய்யுள் காணப்படுகிறது :—

**7059** (a) என்றன னென்ற லோடு
மிணையடி யிறைஞ்சி டாங்குக்
குன்றுறழ் குவவுத் திண்டோட்
கொற்றவல் வீரற் காணத்

தன்றனி யுள்ள நாணுற்
றழல்விழிக் கொலைவெஞ் சீயம்
நின்றென வெருத்தங் கோட்டி
நிலனுற நோக்கிக் கூறும்.

இச்செய்யுள் பழமைவாய்ந்த சுவடிகள் பலவற்றிலும் கோவிந்த பிள்ளை பதிப்பு, மலிவுப்பதிப்பு முதலிய அச்சுப் பிரதிகள் சில வற்றிலும் காணப்படாமையாலும், கதையில் வரும் உரையாடல்களைக் கொண்டே கூறுவோரும் கேட்போரும் இன்னின்னர் எனக் கற்போர் உணருமாறு செய்யும் இயல்பு இந்நூலில் ஆங்காங்கே அமைந் திருத்தலானும், இச் செய்யுளிற் குறித்த வண்ணம் சுக்கிரீவன் முன் யோசனையின்றித் தான் செய்த செயலுக்கு நாணி இராமனை நிமிர்ந்து நோக்காது நிலம் நோக்கித் தலை குனிந்து நின்றான் என்பது, 'இன்னன பலவும் பன்னி இறைஞ்சிய முடியன் நாணி, மன்னவர் மன்னன் முன்பு வானர மன்னன் நிற்ப' என வரும் பாடலிற் பின்னர்க் கூறப்பட்டிருத்தலால் அதனையே முன்னரும் ஆசிரியர் கூறியுள்ளாரெனக் கொள்ளுதல் கூறியது கூறல் என்னுங் குற்றத்திற்கு இடனும் ஆதலானும் மேற்காட்டிய செய்யுள் பின்வந் தோராற் கவிக் கூற்றாகப் பாடிச் சேர்க்கப்பட்ட மிகைப்பாடல் என்று கருதி மூலத்தொடு சேர்க்கப்படாதாயிற்று.

52-ஆம் பிரதியில் இம் மிகைப்பாடலுக்குமுன்,

7059(b) என இவை அமலன்கூற, இருகையும் எடுத்துக் கூப்பி
மனமிக நாணி, ஒன்றும் வாய்திறந் துரைக்கலாற்றான்,
பனியினை வென்றோன் மைந்தன் பின்னரும் பணிந்து நின்றே
அனகனுக்கு அன்பினோடும் அடுத்தமை அறையலுற்றான்.

என்றதொரு மிகைப்பாடல் உள்ளது.

63-என்னும் எண்ணுள்ள சுவடியில் 'இந்நிலை விரைவின்' என்னும் செய்யுளை யடுத்துப் பின்வருமாறு ஒரு மிகைப்பாடல் காணப்படுகின்றது :—

7059(c) என்றுரைத் தினைய யாவு மியம்பிய கமலக் கண்ணன்
தன்றுணைத் தாளில் வீழ்ந்து தாமரை வதன நோக்க
அன்றென நாணி நின்றான் அவனியை அமைய நோக்கி
........................ மிக்க வானர வீரன் சொல்வான்.

31-ஆம் பிரதியில் 'என்றனன்' என்ற பாடலுக்குப் பிரதியாக,

7059(d) "ஏரணி மாடகூட மிலங்கிய விலங்கை வேந்தை
காரண மாகவாலாற் கட்டிய வாலியன்றிப்
போரண மாளுமம்பாற் புடைத்தமால் பாதம் போற்றிக்
காரணச் சுடரோன் மைந்தன் தலைவனை வணங்கிச் [சொல்லும்"

என்ற பாடல் உள்ளது.

சுக்கிரீவன் தான் இராவணனைக் கொன்று சீதையைச் சிறை மீட்டு வாராததன் செயலறவு தோன்ற வருந்திக் கூறுதல்

**7060.** காட்டிலே கழுகின் வேந்தன்
செய்தன காட்ட மாட்டேன்
நாட்டிலே குகனார் செய்த
நன்மையை நயக்க மாட்டேன்
கேட்டிலே நின்று கண்டு
கிளிமொழி மாத ராளை
மீட்டிலேன் றலைகள் பத்துங்
கொணர்ந்திலேன் வெறுங்கை வந்தேன்.

'காட்டிலே கழுகின் வேந்தன்
செய்தன காட்ட மாட்டேன்;
நாட்டிலே குகனார் செய்த
நன்மையை நயக்க மாட்டேன்;
கேட்டிலே நின்று கண்டு,
கிளிமொழி மாத ராளை
மீட்டிலேன்; தலைகள் பத்தும்
கொணர்ந்திலேன், வெறுங்கை வந்தேன்.'

பொ:—கழுகரசனாகிய சடாயு காட்டின் கண்ணே செய்தாற் போன்ற செயலை (நின்பொருட்டு)ச் செய்து காட்டினேனல்லேன். குகனார் (தம்முடைய) நாட்டினிடத்தே செய்த நற்செயலை விரும்பிச் செய்ய மாட்டாதவனாயினேன். கிளியின் மொழிபோலும் இனிய மொழியினையுடையாளாகிய நின் தேவியை (அன்று துயரநிலையிற்) கண்டும் (அத்) துன்ப நிலையினின்றும் மீட்டேன் அல்லேன். (கொடியோனாகிய இராவணனை இன்று நேரிற் கண்டும் அவனுடைய) தலைகள் பத்தினையும் (கொய்து) கொணராதவனாய் வெறுங்கையோடு வந்தேன்.

கு:—கழுகின் வேந்தன் - கழுகரசனாகிய சடாயு. செய்தன, சீதையை இராவணன் வஞ்சனையாற் கவர்ந்து செல்லும் நிலையில் அவனை வழிமறித்துத் தடுத்துச் சீதையை மீட்டற் பொருட்டுத் தன் உயிரைப் பொருட்படுத்தாது தன் முழுவலி கொண்டு போர் செய்தமையும் தனக்குச் சாதல் நேர்ந்த நிலையிலும் இராமபிரான் வருமளவும் அரிதின் உயிர் தாங்கியிருந்து நிகழ்ந்ததுகூறிப் பின் உயிர் துறந்தமையும் ஆகிய செயல்கள். காட்டின்கண்ணே கழுகரசன் சீதையை மீட்டற்பொருட்டுத் தன்னுயிர் துறந்தமைபோன்று என்

னுயிரைத் துறக்க முற்பட்டிலேன் என்பான், 'காட்டிலே கழுகின் வேந்தன் செய்தன காட்டமாட்டேன்' என்ருன். அவ்வாறு செய் தற்கு ஏதுவாக நினது நட்புரிமை எனக்கு முன்னரே கிடைத்திலது எனினும் அது கிடைத்த பின்பாயினும் என்னுயிரினும் சிறந்த நீ எனது தீராப் பகையைப் போக்கி எனக்கு அரசளித்து என் நாட் டிலே தங்கியிருந்த காலத்தும் யான் குகனுரையொத்து நின்னை அன்பினுற் பேணிப் போற்றுதலைச் செய்யாது எனது கடமையினை மறந்து கள்ளுண்டு களித்துக் காலத்தைக் கொன்னே கழித்தேன் என்பான், 'நாட்டிலே குகனுர் செய்த நன்மையை நயக்கமாட்டேன்' என்ருன். தன்னை உய்வித்த இராமபிரானுல் முன்னரே தம்பியென அன்பினுல் தழுவிக்கொள்ளப்பெற்ற குகன், அவ்வாறே இராம பிரானுல் தம்பியெனப் பின்னர்த் தழுவிக்கொள்ளப்பெற்ற தன்னுல் தமையனெனப் போற்றத்தக்க சிறப்புடையானுதலின், அவ்வுயர்வு தோன்றக் 'குகனுர்' எனக் குறித்தான் சுக்கிரீவன். 'குகப்பெருமாள்' என்று வழங்கும் உயர்வும் ஈண்டு நினைக்கத்தக்கதாகும். குகனுர், நாட்டிலே செய்த நன்மையாவது, அரசு துறந்து வனம்புக்க இராம பிரானைக் கண்டதும் எல்லையற்ற பேரன்புடன் வரவேற்றுத் தன் நாவாய்களையுதவிக் கங்கையினின்றும் கரையேற்றியதுடன் இராமன் திருமேனிக்கு எத்தகைய இன்னலும் நேராதவாறு இரவும் பகலும் விழிப்புடன் பேணிக்காத்து நின்றமை. நயத்தல் – விரும்புதல். கிளிமொழி மாதராள் என்றது, சீதாபிராட்டியை. கண்டும் என உம்மை விரித்து, கிளிமொழி மாதராளைக் (கேட்டிலே) கண்டும் கேட்டிலே நின்று மீட்டிலேன் என இயைத்துரைக்க. கேடு–துன்பம். (திருக்குறள்-796). சுக்கிரீவன் இராமனது நட்பினைப் பெறுதற்கு முன்னரே இராவணனுல் வலிதிற் கவரப்பட்டு விசும்பின்வழியே கொண்டு செல்லப்பட்ட சீதையின் அவல நிலையை நேரிற் கண்டவன் என்பது, கிட்கிந்தை-கலன்காண் படலம் 1, 2-ஆம் செய்யுளால் அறியப்படும். (39)

**7061.** வன்பகை நிற்க வெங்கள்
வானரத் தொழிலுக் கேற்ற
புன்பகை காட்டும் யானே
புகழ்ப்பகைக் கொருவன் போலாம்
என்பகை தீர்த்தென் னுவி
யரசொடு மெனக்குத் தந்த
உன்பகை யுனக்குத் தந்தே
னுயிர்சுமந் துழலா நின்றேன்.

'வன்பகை நிற்க, எங்கள்
வானரத் தொழிலுக்கு ஏற்ற
புன்பகை காட்டும் யானே
புகழ்ப் பகைக்கு ஒருவன் போலாம்?
என்பகை தீர்த்து என் ஆவி
அரசொடும் எனக்குத் தந்த
உன்பகை உனக்குத் தந்தேன்;
உயிர் சுமந்து உழலா நின்றேன்.'

பொ :—வலிய பகைவனாகிய இராவணன் (என்னாற் கொல்லப் படாது தப்பி உய்ந்தமை) ஒருபுறம் இருக்க, எங்கள் (இழிந்த) குரங்கின் சாதித் தொழிலுக்கு ஒத்த புல்லிய பகைமையினை (என் சிறுமைச் செயல்களால் மேலும்) உண்டாக்கிக் கொண்டிருக்கும் யானே நின் பெரும் புகழுக்குப் பகையாய்த் தோன்றிய பழியைப் போக்குதற்குரிய ஒருவன் ஆவேன்?( என் உடன்பிறந்தே கொல்லும் பிணியெனத்தக்க) பகைவனாகிய வாலியைக் கொன்று போக்கி, உயிரையும் அரச பதவியையும் எனக்கு அளித்துக் காப்பாற்றிய (என்னுயிரினுஞ் சிறந்த) உன்னுடைய பகைவனை(க் கொன்று தீர்க்கும் கடமையினையுடையேனாகிய யான், அதனைச் செய்து முடிக்கும் திறனின்றி, உன் பகையினை நீயே ஒழிக்கும்படி) உனக்குக் கொடுத்தவனாய் (என்னால் தாங்கமாட்டாத பெருஞ் சுமையாக எனது) உயிரைச் சுமந்துகொண்டு திரிகின்றேன்.

கு :—'வன்பகை' என்றது, இராமனாலன்றிப் பிறர் எவராலும் தொலைக்கவொண்ணாத வன்மை வாய்ந்த பகைவனாகிய இராவணனை. மனத்தினை ஒரு நெறியில் நிறுத்திக் குறித்த செயலொன்றில் ஈடுபடும் ஒருமைநிலை இன்மையால் அங்கு மிங்கும் மனத்தைப் பறிகொடுத்துக் கணந்தோறும் கருத்து வேறுபட்டு அலைதலாகிய சிறுமை குரங்கினத்தின் இயல்பாகும். என் சாதித் தொழிலாகிய இச் சிறுமை காரணமாக யாவரினும் மேலோனாகிய உனக்கும் புல்லிய சிறு பகைகளை மேன்மேலும் உண்டாக்கிக் கொண்டிருக்கும் யான், புகழுக்குப் பகையாக உன்னைத் தொடர்ந்துள்ள பெரும் பழியினை மாற்றும் ஆற்றலுடையேன் ஆகமாட்டேன் என்பான், 'எங்கள் வானரத் தொழிலுக்கேற்ற புன்பகை காட்டும் யானே புகழ்ப்பகைக்கு ஒருவன் போலாம்?' என்றான். 'ஒருவன் போலாம்' என்றது, 'ஒருவன் ஆவேனோ?' என வினாவாய் நின்று 'ஒருவன் ஆகமாட்டேன்' என எதிர்மறைப் பொருள் தந்தது. நீ என்னுடைய தீராப் பகையைத் தொலைத்து என் உயிரையும் அரசையும் எனக்கு அளித்தாற்போன்று அத்தகைய பெரும் பொருளை உனக்குத்தரும் ஆற்றல் என்பால் இல்லை; ஆற்றலில்

லாத யான், உன் செயலுக்குக் கைம்மாருக உன்னுடைய பகைவனை உனக்கே உரியவனுக (உன்னுலேயே கொல்லத் தக்கவனுக) உரிமை செய்து கொடுத்து விட்டேன் என்பான், 'என்பகை தீர்த்து என் ஆவிஅரசொடும் எனக்குத் தந்த, உன்பகை உனக்குத் தந்தேன்' என்ருன். இத்தொடர் கொள்ளலும் கொடுத்தலும் ஆகிய பரிவருத்தனை என்னும் அணிநலம் அமைய வந்தமை காண்க. புகழ்ச் செயலை மேற்கொள்ளாத எனது உயிர் எனக்கே தாங்கொணுச் சுமையாயிற்று என்பான், 'உயிர் சுமந்து உழலா நின்றேன்' என்ருன். உழலுதல் – திரிதல்; வருந்துதல். 'புகழ்ப் பகைக்கு ஒருவன்' என்புழிக் குவ்வுருபு 'பிணிக்கு மருந்து' என்ருற் போன்று பகைப் பொருளில் நின்றது. மேல் 'அருமையும் அடர்ந்து நின்ற பழியையும் அயர்த்தாய் போல' என இராமன் கூறியதை யொட்டி, 'வன்பகை நிற்க, எங்கள் வானரத் தொழிலுக்கேற்ற, புன்பகை காட்டும் யானே புகழ்ப்பகைக்கு ஒருவன் போலாம்' எனச் சுக்கிரீவன் தான் ஆராயாமற் செய்யும் செயலால் விளையும் தீமை யினை எண்ணி வருந்தினுன் என்க. (40)

**7062.** செம்புக்குஞ் சிவந்த செங்கட்
டிசைநிலைக் களிற்றின் சீற்றக்
கொம்புக்குங் குறைந்த வன்றே
யென்னுடைக் குரக்குப் புன்ருேள்
அம்புக்கு முன்பு சென்று
னரும்பகை யறுப்ப னென்று
வெம்புற்ற மனமும் யானுந்
தீதின்றி மீள வந்தேன்.

'செம்புக்கும் சிவந்த செங்கண்
திசை நிலைக் களிற்றின் சீற்றக்
கொம்புக்கும் குறைந்த அன்றே,
என்னுடைக் குரக்குப் புன்தோள் ?
"அம்புக்கு முன்பு சென்று உன்
அரும்பகை யறுப்பன்" என்று
வெம்புற்ற மனமும், யானும்,
தீது இன்றி, மீள வந்தேன்.

பொ :—உன்னுடைய (இராமபாணம் எனப்படும்) அம்புக்கு முன்னே (விரைந்து) சென்று வெல்லுதற்கு அரிய உன் பகைவ னுகிய இராவணனை அழித்தொழிப்பேன் என்று கொதித்தெழுந்த

எனது மனத்துடன் யானும் எத்தகைய இடையூறுமின்றித் திரும்பி வந்தேன். (ஆதலால்) என்னுடைய அற்பமான குரங்கின் தோள்கள் செம்பைவிட நிறத்தாற் சிவந்த செம்மை வாய்ந்த கண்களையுடையனவாய்த் திசைகளில் நிற்றலையுடைய சினம் மிக்க யானைகளின் தந்தங்களைக் காட்டிலும் சிறுமையை அடைந்தன அல்லவோ ?

கு:—'அம்பு' என்றது. ஈண்டு இராமபாணத்தினை. விரைந்து சேறலும் பகைவரைத் தப்பாது தடிந்து மீளுதலும் அதன் தனிச் சிறப்பு. 'அம்புக்கு முன்னஞ் சென்று உன் அரும்பகை அறுப்பன் என்று வெம்புற்ற மனமும் யானும் தீது இன்றி மீளவந்தேன்; (ஆதலால்) என்னுடைக் குரக்குப் புன்தோள், செம்புக்கும் சிவந்த செங்கண் திசைநிலைக் களிற்றின் சீற்றக் கொம்புக்கும் சிதைந்த அன்றே?' என இயைத்துரைக்க. கொம்பு – தந்தம். 'சினமிக்க திசை யானையின் தந்தங்களோ இராவணனது வலிய மார்பின்கண்ணே ஆழக் குத்தி வடுச்செய்து பின்பு ஒடிந்தன ; என்னுடைய புல்லிய தோள்களோ அவனுடம்பிற்கு எத்தகைய ஊறுபாடும் விளைக்கும் வலியற்றனவாய், யானைகளின் தந்தங்களைக் காட்டிலும் தாழ்வுற்றன' எனச் சுக்கிரீவன் தன்பால் தோன்றிய இழிவினை நினைந்து இரங்கினான் என்பதாம். குறைதல் - (வன்மையால்) தாழ்வுறுதல். குரங்கு குரக்கு என மென்றொடர் வன்றொடராயிற்று. குரக்குத் தோள், புன் தோள் எனத் தனித்தனி இயைக்க. வெம்புதல் - கொதிப்புறுதல். (41)

**7063.** நூல்வலி காட்டுஞ் சிந்தை
 நுன்பெருந் தூதன் வன்போர்
வேல்வலி காட்டு வார்க்கும்
 வில்வலி காட்டு வார்க்கும்
வால்வலி காட்டிப் போந்த
 வளநகர் புக்கு மற்றென்
கால்வலி காட்டிப் போந்தேன்
 கைவலிக் கவதி யுண்டோ.

**நூல்வலி காட்டும் சிந்தை நுன் பெருந்தூதன், வன்போர் வேல்வலி காட்டுவார்க்கும், வில்வலி காட்டுவார்க்கும், வால்வலி காட்டிப் போந்த வளநகர் புக்கு, மற்று என் கால்வலி காட்டிப் போந்தேன் ; கைவலிக்கு அவதி உண்டோ?**

பொ :—(சிறந்த) நூல்(களைக் கசடறக் கற்றுணர்ந்த கல்வி) வல்லமையை(த் தன் சொல்வன்மையாற் புலப்படுத்தி)க் காட்டும் (தெளிந்த) மனத்தினையுடைய உன் பெருமை வாய்ந்த தூதனாகிய அநுமான், வேற்படையால் தம் வன்மையினைப் புலப்படுத்தும் (வேல் வீரராகிய) அரக்கர்க்கும் விற்படையால் தம் வன்மையினைப் புலப்படுத்தும் (வில் வீரராகிய) அரக்கர்க்கும் தன்னுடைய வாலின் வன்மையினை (அவர்களாற் கிழி சுற்றி எண்ணெய் இட்டுத் தீக் கொளுவப்பட்ட தன் வாலினால் இலங்கை நகரைச் சுட்டெரித்து)க் காட்டி மீண்ட வளமுடைய (இலங்கையின் புற) நகர்க்கண்ணே புகுந்து (பகைவனை எதிர்த்து வெல்லமாட்டாது திரும்பி விரைந்து ஓடிவந்தமையால்) என்னுடைய காலின் வன்மையினைக் காட்டி மீண்டேன். (இனி என்) கைவன்மைக்கும் ஓர் எல்லை உளதோ? (இல்லை).

கு :—'நூல் வலி' என்றது, நூலாருள் நூல் வல்லனாதலாகிய கல்வி வன்மையினை. இராமனைச் சரண்புக்க அன்றே தானும் தன் அமைச்சர் படைத் தலைவர் முதலிய அனைவரும் இராமனுக்குத் தொண்டு செய்யத்தக்க கொத்தடிமையாவர் என்னும் கருத்துடன் அம்முதல்வனது தலைமைக்குள் அடங்கியொழுகும் தனது அடிமை நிலை தோன்றத் தன் அமைச்சனாகிய அநுமனை 'நுன்பெருந்தூதன்' (இராமதூதன்) எனச் சுட்டினான் சுக்கிரீவன். நூற்பயிற்சியால் மனத்திண்மை பெற்றோரே வேல் வீரர்களும் வில் வீரர்களும் ஆகிய பகைவர்கள் நடுவே சென்று தூதுரைத்து வெற்றியுடன் மீளவல்ல ஆற்றலுடையவராவர் என்பது "நூலாருள் நூல் வல்லனாகுதல் வேலாருள், வென்றி வினையுரைப்பான் பண்பு" (திருக்குறள் - 683) எனவரும் தெய்வப் புலவர் வாய்மொழியாற் புலனாம். இவ்வாய்மொழிக்குரிய இலக்கியமாக அமைந்தது, இராவணன்பால் தூது சென்று அநுமன் இலங்கையிற் செய்த செயல் என்பார், 'நூல் வலி காட்டுஞ் சிந்தை நுன்பெருந் தூதன் வன்போர், வேல்வலி காட்டுவார்க்கும் வில்வலி காட்டுவார்க்கும், வால்வலி காட்டிப் போந்த வளநகர்' என்றார். 'நின்னுடைய தூதனாகிய அநுமன் வளம் பொருந்திய இலங்கை நகரத்தினுள்ளே புகுந்து தன் வாலின் வன்மையினைப் பகைவர்க்கு நன்கு காட்டி மீண்டிருக்கவும், நான் அந்நகரத்தின் புறவெல்லையிலே புக்கு நின்று பகைவனை வெல்லாது வறிதே திரும்பி ஓடி வந்தமையால் என் கால்களின் வன்மையினைப் பகைவர் உணரும்படி செய்தேன்' எனச் சுக்கிரீவன் இராம தூதனாகிய அநுமனது உயர்வும் தனது இழிவும் தோன்றக் கூறித் தன் சிறுமை நினைந்து இரங்கினான் என்பதாம். பகைவன் முன்னே நிலைத்து நின்று பின்னிடாதிருத்தற்கு இன்றியமையாத என் காலின் வன்மையே இங்ஙனம் சிதைந்தொழிந்ததாயின், அடிபெயர்த்திடாது

நின்று பகைவனை வளைத்துப் பிடித்து வெற்றி விளைத்தற்குரிய என் கையின் வன்மையளவைப்பற்றி நினைத்தற்கே இடமில்லை என்பான், 'என் கால்வலி காட்டிப் போந்தேன் கைவலிக்கு அவதியுண்டோ' என்றான். அவதி – எல்லை. உண்டோ என்புழி ஓகாரம் எதிர் மறை; இல்லை என்றவாறு. (42)

### சுக்கிரீவனது வெற்றிச் செயலை வீடணன் வியந்துரைத்தல்

**7064.** இன்னன பலவும் பன்னி
யிறைஞ்சிய முடிய ஞணி
மன்னவர் மன்னன் முன்பு
வானர மன்ன னிற்ப
அன்னவன் றன்னை நோக்கி
யழகனை நோக்கி யாழி
மின்னென விளங்கும் பைம்பூண்
வீடணன் விளம்ப லுற்றான்.

**இன்னன பலவும் பன்னி, இறைஞ்சிய முடியன் நாணி,
மன்னவர் மன்னன் முன்பு, வானர மன்னன் நிற்ப,
அன்னவன் தன்னை நோக்கி, அழகனை நோக்கி, ஆழி
மின் என விளங்கும் பைம்பூண் வீடணன் விளம்பலுற்றான்.**

பொ :—குரக்கினத்தரசனாகிய சுக்கிரீவன் வேந்தர் பெருமானாகிய இராமன் முன்னிலையிலே (இவ்வாறு தன் செயலற்ற தன்மையினை நினைந்திரங்கும்) இத்தன்மையவான பல வார்த்தைகளையும் சொல்லி வணங்கிய தலையினனாய் நாணி நின்றானாக, (கரிய) கடலின் கண்ணே மின்னற்கொடி (தோன்றினாற்) போன்று (கரிய மேனியின் கண்ணே ஒளியுடன்) விளங்கும் பசிய பொன்னினாலாகிய அணிகலன் களையணிந்த வீடணன் என்பான், அந்தச் சுக்கிரீவனை நோக்கி (அவனுக்கு முன்னேயுள்ள) அழகனாகிய இராமனையும் பார்த்து(ப் பின்வருமாறு) கூறுவானாயினான்.

கு :—வானர மன்னன், மன்னவர் மன்னன் முன்னே இன்னன பலவும் பன்னி இறைஞ்சிய முடியன் நாணி நிற்ப, ஆழி மின் என விளங்கும் பைம்பூண் வீடணன், விளம்பலுற்றான் என இயைத் துரைக்க. மன்னவர் மன்னன் - அரசர்க்கு அரசனாகிய இராமன். வானர மன்னன் – குரக்கினத்தரசனாகிய சுக்கிரீவன். தன் செயலின் தாழ்வினை நினைந்து வருந்தும் சுக்கிரீவனை நோக்கி, 'பெரு வீரனாகிய நீ வீரரெல்லாம் வியந்து போற்றத்தக்க வெற்றிச் செயலையே செய்து

மீண்டாய். இச்செயலினும் மேலாகச் சொல்லுதற்குரிய வெற்றிச் செயல் பிறிதொன்றில்லை' என அவனைப் பாராட்ட விரும்பிய வீடணன் அவனை நோக்கித் தான் கூறும் பாராட்டுரையினை இராம பிரானும் கேட்டு இசைந்து ஏற்றுக்கொள்ளும் முறையில் சுக்கிரீவன் இராமன் ஆகிய இருவரையும் ஒருங்கே நோக்கிக் கூறத் தொடங் கினன் என்பார், 'அன்னவன்றன்னை நோக்கி அழகனை நோக்கி... வீடணன் விளம்பலுற்றான்' என்றார். வீடணனது கரிய மேனிக்குக் கடலும் அம்மேனியில் ஒளிவிட்டு விளங்கும் அணிகலன்களுக்கு மின்னலும் உவமை. (43)

**7065.** வாங்கிய மணிக ளன்னான்
றலைமிசை மௌலி மேலே
ஓங்கிய வல்ல வோமற்
றினியப்பா லுயர்ந்த துண்டோ
தீங்கினன் சிரத்தின் மேலு
முயிரினுஞ் சீரி தம்மா
வீங்கிய புகழை யெல்லாம்
வேரொடும் வாங்கி விட்டாய்.

'வாங்கிய மணிகள், அன்னான்
தலைமிசை மௌலி மேலே
ஓங்கிய அல்லவோ? மற்று,
இனி அப்பால் உயர்ந்தது உண்டோ?
தீங்கினன் சிரத்தின் மேலும்,
உயிரினும், சீரிது அம்மா!
வீங்கிய புகழை எல்லாம்
வேரொடும் வாங்கி விட்டாய்!

பொ:—(வானரர் மன்னனே! நீ இராவணன் முடியினின்றும்) பறித்துக் கொணர்ந்த மணிகள் அவ் இராவணனுடைய தலைகளுக்கு மேலே புனையப் பெற்ற கிரீடத்தின் மேலே (ஒளியால்) உயர்ச்சி பெற்று விளங்கியன அல்லவோ? இனி, அத்தகைய முடிமணிகளி னும் உயர்ந்ததாக (அப்பகைவன்பால்) ஏதேனும் உளதோ? (நீ பறித்துக் கொணர்ந்த இம்மணித் தொகுதி) தீவினையாளனாகிய இராவணனுடைய சிரங்களைக் காட்டிலும் (அவனது இனிய) உயி ரைக் காட்டிலும் மிகவும் சிறப்புடையதாகும். (நீ இவற்றை வலிதிற் பறித்துக் கொணர்ந்தமை காரணமாக, மூவுலகங்களிலும்) பரவிப்

பெருகிய (அவ்விராவணனுடைய) புகழ் அனைத்தையும் வேரோடும் அகழ்ந்து களைந்து விட்டாய்.

கு :—வாங்குதல் - பறித்து எடுத்தல். 'அன்னுன்' என்றதும் 'தீங்கினன்' என்றதும் இராவணனை. மௌலி - முடி; கிரீடம். வீங்குதல் – மிகுதல். வேரொடும் வாங்குதல் – சிறிதும் எஞ்சாது முழுவதும் களைந்தெறிதல். இராவணனுடைய தலைகளைக் கொய்து கொணர்தலாலுளதாம் வெற்றியைக் காட்டிலும் அவன் தலையிற் புனையப்பட்ட கிரீடத்தின் மணிகளைப் பறித்துக் கொணர்ந்த இச் செயலாலுளதாம் வெற்றியே மிகவும் பாராட்டத்தக்கதாகும் என்று வீடணன் சுக்கிரீவனது அருஞ் செயலை வியந்து பாராட்டினுன் என்பதாம். அம்மா, வியப்பிடைச்சொல். முடிமணியினைப் பறித்துக் கொணர்ந்த சுக்கிரீவனது வீரச் செயல், பகைவனுகிய இராவணனுக்கு உயிரிழப்பினும் பேரிழப்பான புகழ்இழப்பினையுண்டாக்கியது என்பது கருத்து. மணி என்பது தொகுதியொருமையாய் நின்று சீரிது என்னும் ஒருமை வினைகொண்டு முடிந்தது. (44)

**7066.** பாரகஞ் சுமந்த பாம்பின்
பணுமணி பறிக்க வேண்டின்
வார்கழற் காலி னுலே
கல்லவல் லவனை முன்னுத்
தார்கெழு மௌலி பத்தின்
றனிமணி வலிதிற் றந்த
வீரதை விடைவ லோற்கு
முடியுமோ வேறு முண்டோ.

'பாரகம் சுமந்த பாம்பின் பணுமணி பறிக்க வேண்டின்,
வார் கழல் காலினுலே கல்ல வல்லவனை முன்னு,
தார்கெழு மௌலி பத்தின் தனிமணி வலிதின் தந்த
வீரதை, விடை வலோற்கும் முடியுமோ? வேறும் உண்டோ?'

பொ :—பூமியின் பரப்பு முழுவதனையும் சுமந்துள்ள பாம்பினது படத்திலுள்ள மாணிக்க மணியினை வலிதிற்கொள்ள விரும்பினுல் நீண்ட கழலணிந்த காலினுலேயே கிளைத்து எடுக்கவல்ல (பேராற்றல் படைத்த) இராவணனை முற்பட்டுச் சென்று மாலைகள் பொருந்திய கிரீடங்கள் பத்தின்கண்ணும் பதிக்கப் பெற்றிருந்த நாயகமணிகளை வலிந்து பறித்துத் தந்த வீரச் செயல், ஏற்றூர்தியானுகிய உருத்திரமூர்த்திக்கும் இயல்வதாமோ? (இதனினும் சிறந்த வீரச் செயல்)வேறேதேனும் உளதோ?

கு:—பாரகம் சுமந்த பாம்பு என்றது ஆதிசேடனை. கல்லுதல் - கிளைத்து எடுத்தல். பணமணி எனற்பாலது, பணாமணி என நீண்டது. பணம் - பாம்பின் படம். முன்னா - முற்பட்டுச் சென்று. வீரதை - வீரச்செயல். ஆதிசேடனது படத்தின் உச்சியிலுள்ள மாணிக்க மணியினைக் கவர்ந்து கொள்ள விரும்பினால், தன் கைகளாலன்றிக் காலினாலேயே கிளைத்தெடுக்கவல்ல பேராற்றலுடைய இராவணனது முடியின் மணிகளைப் பறித்துக் கொணர்ந்த வீரச் செயல் உருத்திரமூர்த்தியாலும் செய்ய முடியாத அருமையுடைய தென்பதாம். (45)

**7067.** கருமணி கண்டத் தான்றன்
சென்னியிற் கறைவெண் டிங்கள்
பருமணி வண்ணன் மார்பிற்
செம்மணி பறித்திட் டாலும்
தருமணி யிமைக்குந் தோளாய்
தசமுகன் முடியிற் றைத்த
திருமணி பறித்துத் தந்த
வென்றியே சீரி தன்றோ.

'கரு மணி கண்டத்தான் தன்
சென்னியில் கறைவெண் திங்கள்,
பரு மணிவண்ணன் மார்பின்
செம்மணி, பறித் திட்டாலும்—
தரு மணி இமைக்கும் தோளாய்!—
தசமுகன் முடியில் தைத்த
திருமணி பறித்துத் தந்த
வென்றியே சீரிது அன்றோ?

பொ:—புனையப்பெற்று ஒளிரும் மணியணிகள் விளங்கும் தோள்களையுடைய சுக்கிரீவனே! நீலமணிபோலும் கரிய திருமிடற்றினையுடையவனாகிய சிவபெருமானது முடிமீது அணியப்பெற்றுள்ள களங்கத்தினையுடைய வெள்ளிய பிறைச் சந்திரனையும் ஒளியால் முதிர்ந்த நீலமணிபோலும் நிறத்தினையுடைய திருமாலது மார்பின்கண்ணே திகழும் செம்மை வாய்ந்த கவுத்துவமணியையும் ஒருங்கே பறித்துக் கொண்டு வந்தாலும் (அச் செயலைக் காட்டிலும்) பத்துத் தலையினன் ஆகிய இராவணனது கிரீடத்திலே பதிக்கப்பெற்ற அழகிய (நாயக) மணிகளைப் பறித்துக் கொணர்ந்த இவ் வெற்றிச்செயலே (யாவராலும் உயர்த்துப் பாராட்டத்தகும்) சிறப்புடையதாகும் அல்லவா?

கு :—கருமணி - நீலமணி. பருமணி – பருமையுடையதாய் ஒளியாற் செழித்துள்ள மணி. செம்மணி - கவுத்துவமணி. தருதல் - புனைதல். இமைத்தல் - ஒளி செய்தல். 'தொடிமணி யிமைக்குந் தோளாய்' (மகுடபங்கம் - 47) எனப் பின்வருதல் காண்க. தசமுகன் - இராவணன். தைத்தல் - ஆழப் பதித்தமைத்தல். (46)

**7068.** தொடிமணி யிமைக்குந் தோளாய்
சொல்லினி வேறு முண்டோ
வடிமணி வயிர வொள்வாள்
சிவன்வயின் வாங்கிக் கொண்டான்
முடிமணி பறித்திட் டாயோ
விவனினி முடிக்கும் வென்றிக்
கடிமணி யிட்டா யன்றே
யரிகுலத் தரச வென்றான்.

'தொடி மணி இமைக்கும் தோளாய்!
சொல் இனி வேறும் உண்டோ?
வடி மணி வயிர ஒள் வாள்
சிவன்வயின் வாங்கிக் கொண்டான்
முடி மணி பறித்திட்டாயோ?
இவன் இனி முடிக்கும் வென்றிக்கு
அடி மணி இட்டாய் அன்றே?—
அரிகுலத்து அரச!' என்றான்.

பொ :—வீரவளையிற் பதிக்கப்பெற்ற மணிகள் ஒளிவிட்டு விளங்கும் தோள்களையுடையவனே! வானரகுல வேந்தனே! ஆராய்ந்தெடுத்த மணிகள் பதிக்கப்பெற்ற ஒளி பொருந்திய வயிர வாளாகிய படையினைச் சிவபெருமான்பாற் பெற்றுக் கொண்டவனாகிய (வரத்தின் ஆற்றல் வாய்ந்த) இராவணனது முடியிற் பதிக்கப் பெற்ற மணிகளைப் பறித்துக் கொணர்தலாகிய இச் செயலை மட்டுமா செய்தனை? இராமபிரானாகிய இவன் இனி நிலைநாட்ட எண்ணிய வெற்றிமாளிகையின் கால்கோளுக்கு (இன்று) அதன் அடிப் படையில் மணிகள் இடுதலையும் செய்தனை அல்லையோ? இனி இதனினும் மேலாகப் புகழத்தக்க வெற்றிச் செயல் வேறும் உளதோ? என்று (சுக்கிரீவனைப் பாராட்டிக்) கூறினான்.

கு :—தொடி - வீரவளை. சொல் - புகழ்; ஈண்டு ஆகுபெயராய்ப் புகழுக்குரிய வெற்றிச் செயலைச் சுட்டியது. சிவன்வயின் வயிர ஒள்

வாள் வாங்கிக் கொண்டான் என்றது இராவணனை. வாங்குதல் - பெறுதல்; ஈண்டு இச்சொல் இரட்டுற மொழிதலாய் 'வலிதிற் கவர்ந்து கோடல்' என்ற குறிப்புப் பொருளையும் உணர்த்தி நிற்றல் அறியத்தக்கதாகும். இராவணன் முடியிலுள்ள மணிகளைப் பறித்தெடுத்த இச் செயல், இனி இராமன் அமைக்கப்போகும் வெற்றி மாளிகைக்கு அடிப்படையில் நன்மணிகளை யிடுதலாகிய கால்கோள் விழாவாகவும் அமைந்தது என வீடணன் சுக்கிரீவன் செயலைப் பாராட்டிப் போற்றினன் என்பதாம். 'அடிமணியிட்டாய்' என்ற தொடர், இராமன் அமைக்க எண்ணிய வெற்றி மாளிகைக்கு அடிப்படையில் மணியிடுதலாகிய கால்கோள் விழாச் செய்தாய் எனவும், இராமனுடைய திருவடிகளில் மணிகளையிட்டு அருச்சித்து வணங்கினாய் எனவும் இருபொருள் தந்து நின்றது. மனைக்குக் கால் கொள்ளும்பொழுதும் தெய்வத் திருவுருவினை நிலைநாட்டும் நிலையிலும் ஒளி பொருந்திய நன்மணிகளை அடிப்படையில் இடுதல் மரபு. (47)

## இராமனும் சுக்கிரீவனது வெற்றியை வியந்து பாராட்டுதல்

**7069.** வென்றியன் றென்றும் வென்றி
வீரற்கு விளம்பத் தக்க
நன்றியன் றென்று மன்று
நானில மெயிற்றிற் கொண்ட
பன்றியன் றாகி லீதா
ரியற்றுவார் பரிவி னென்னா
இன்றிது வென்றி யென்றென்
றிராமனு மிரங்கிச் சொன்னான்.

'வென்றி அன்று என்றும், வென்றி
வீரர்க்கு விளம்பத் தக்க
நன்றி அன்று என்றும் அன்று;
நானிலம் எயிற்றில் கொண்ட
பன்றி அன்று ஆகில், ஈது ஆர்
இயற்றுவார் பரிவின்?' என்னா,
'இன்று இது வென்றி' என்று என்று
இராமனும் இரங்கிச் சொன்னான்.

பொ :—(அது கேட்ட) இராமன் (சுக்கிரீவன் தன்பால் வைத்த பேரன்பினை நினைந்து) உளம் இரங்கியவனாய் (இச் செயல்), வெற்றி

யுடையதன்றென்றும் வெற்றியுடைய வீரர்பால் அமையவேண்டிய புகழத்தக்க நன்றியுணர்வினைக் காட்டுவதன்றென்றும் (ஒதுக்கப்படும் எளிமையுடையது) அன்று. பூமியைத் (தனது) தந்தத்தின் நுனியிலே ஏந்திக்கொண்ட (பேராற்றல் படைத்த) வராக மூர்த்தியாகிய திருமாலையல்லது இதனை இத்துணைவிரைவில் அன்புடன் செய்யவல்லார் பிறர் யாருளர்? என்று கூறி, இன்று (நிகழ்த்திய) இதுவே (சிறப்புடைய) வெற்றிச் செயலாம் என்று பலமுறை பாராட்டிக் கூறினான்.

கு:—இராமனும் இரங்கி ('ஈது,) வென்றி அன்று என்றும் வீரற்கு விளம்பத்தக்க நன்றி அன்று என்றும் அன்று; நானிலம் எயிற்றில் கொண்ட பன்றி அன்றுகில் ஈது பரிவின் இயற்றுவார் ஆர்?' என்று, 'இன்று இதுவென்றி' என்று என்று சொன்னான் என இயையும். ஈது என்னும் எழுவாய் முன்னும் கூட்டப்பட்டது. பரிவு - அன்பு. சுக்கிரீவன் இராவணனது முடியின் மணிகளைப் பறித்துக் கொணர்ந்தமை எல்லாவற்றினும் மேம்பட்ட வெற்றிச் செயல் என்பதனையும் அவன் தன்பாற் கொண்டுள்ள நன்றிக்கடப் பாட்டினை உணர்த்துவ தென்பதனையும் இராமன் நன்குணர்வானாயினும், அவ் வெற்றிச் செயலை நினைப்பதற்கு முன்னே, தன் பாதுகாப்பில் அடங்கியிருத்தற்குரிய சுக்கிரீவன் தன்னுடைய இசைவு பெறாது பெருஞ் சினங்கொண்டு பகைவனை அடைந்து தாக்கி அவனது பிடிப்பில் அகப்பட நேர்ந்த இடர்நிலையே அவன் மனத்திற் குடிகொண்டு வருத்தியதாதலின் அவ்வருத்தத்தின் மிகுதியால் உந்தப்பட்டுச் சுக்கிரீவன் செய்த தவற்றினை எடுத்துரைத்து இத்தகைய தவறுகள் இனிமேலும் நிகழாதபடி அவனை முதலில் கண்டித்துரைத்தான் என்பதும், அவன் பெரு வெற்றியுடன் தன்னையடைந்தமை கண்டு தன் ஆற்றாமைத் துயரந் தணிந்த நிலையில் வீடணன் கூறிய வண்ணம் சுக்கிரீவனது செயல் எவராலும் எளிதிற் பெற வொண்ணாத பெரு வெற்றியே என்பதனை உடன்பட்டு அச்செயல் சுக்கிரீவன் தன்பாற்கொண்ட எல்லையற்ற பேரன்பின் தூண்டுதல் என்பதனையும் உணர்ந்து 'ஈதுபரிவின் இயற்றுவார் ஆர்? இன்று இதுவென்றி' என்று என்று இரங்கிச் சொன்னான் என்றார். இங்ஙனம் இராவணனது முடிமணி பறித்த கொற்றம் பிறரெவராலும் பெறுதற்கரிய பெருமையுடைய தென்பதனை இராமனது ஏவலால் இராவணன்பால் தூது சென்ற அங்கதன் அவனை நேரிற்கண்டு யாவராலும் வெல்லவொண்ணாத அவனது பெரு வன்மையினைத் தன்னுள்ளத்தில் எண்ணியவன், "படிக்கண் பேழ்வாய், பணிபறித் தெழுந்தமானக் கலுழனின் இவனைப்பற்றி, முடிமணி பறித்த எந்தை யாரினும் வலியன்" எனத் தன் சிறிய தந்தையாகிய சுக்கிரீவனை வியந்து பேசுவதாக ஆசிரியர் பின்னர்க் கூறியுள்ளமை ஈண்டு நினைக்கத்தக்கதாகும். (48)

### கதிரவன் மறைதல்

**7070.** தன்றனிப் புதல்வன் வென்றித்
தசமுகன் முடியிற் றந்த
மின்றளிர்த் தனைய பன்மா
மணியினை வெளியிற் கண்டான்
ஒன்றொழித் தொன்று மென்றவ்
வரக்கனுக் கொளிப்பான் போல
வன்றனிக் குன்றுக் கப்பா
லிரவியு மறையப் போனான்.

'தன் தனிப் புதல்வன், வென்றித்
தசமுகன் முடியின் தந்த,
மின் தளிர்த்தனைய பல்மா
மணியினை வெளியில் கண்டான்;
'ஒன்று ஒழித்து ஒன்று ஆம்' என்று, அவ்
அரக்கனுக்கு ஒளிப்பான் போல,
வன் தனிக் குன்றுக்கு அப்பால்,
இரவியும் மறையப் போனான்.

பொ :—சூரியன், தன்னுடைய ஒப்பற்ற புதல்வனாகிய சுக்கிரீவன் (யாவரையும் வென்ற) வெற்றித்திறம் வாய்ந்த இராவணனது முடியினின்றும் பறித்துக் கொணர்ந்த மின்னற்கொடி தளிர்விட்டுப் படர்ந்தாற்போன்று ஒளிரும் பெருமை வாய்ந்த பல மணிகளையும் வெளியிடத்தே கண்டான். (தனக்கு மகிழ்ச்சியைத் தரும் இச் செயலால்) 'ஒன்றுபோய் வேறொன்றாய் விளையும்' என்று எண்ணி அந்த இராவணனாகிய அரக்கனுக்கு அஞ்சி ஓடி மறைபவனைப் போன்று அத்தமன மலைக்கு அப்புறம் சென்று மறைந்தான்.

கு :—'என் மைந்தனாகிய சுக்கிரீவனால் அவமானமடைந்த இராவணன் அவனை ஒறுத்தடக்க ஒண்ணாத தன் எளிமை நிலையில் சுக்கிரீவனுக்குத் தந்தையாகிய என்னைக் காண நேர்ந்தால் அவனது வெகுளிக்கு யான் இலக்காக, என்னை அவன் உருத்தெழுந்து ஒறுத்தலும் கூடும்' என்று எண்ணி விரைந்து ஓடி ஒளிப்பவனையொத்துச் சூரியன் அத்தமன மலையில் மறைந்தான் என்று தற்குறிப்பேற்ற அணி அமையச் சூரியன் மறைவினை ஆசிரியர் புனைந்துரைத்தவாறு. 'ஒன்றொழித்தொன்றாம்' என்பது ஒரு பழமொழி. (49)

இச் செய்யுளின்பின் 52-ஆம் பிரதியில்,

'இரவிபோய் மறையும் முன்பங் கிராமனும் இலங்கை நின்ற
வரையிழிந் தனைவரோடும் வந்துதன் இருக்கை யெய்தி,
நிருதர்தங் குலத்தை யெல்லாம் நீறெழப் புரியுமாறே
பொருதிறம் முயன்ற செய்கை புகலுவான் எடுத்துக்கொண்டாம்'

என்ற செய்யுளும், இதன்பின் 23, 26, 43, 63, 70-ஆம் சுவடிகளில்,

7070 (a) தெய்வத்தா மரையோனுகி
யாவையுந் தெரியக்காட்டி
மெய்வைத்த அருளினுலே
அவையெலாம் விரும்பிக்காத்துச்
சைவத்த னுகியாவும்
தடிந்திடும் செயலின்மேவும்
கைவைத்த நேமியோன்றன்
கால்வைத்த கருத்தமேயாம்.

என்ற செய்யுளும், இதன்பின் 52-ஆம் பிரதியில்

7070 (b) பூசலைக் குறித்திராமன்
பொருங்கவிச் சேனைவெள்ளம்
மாசற வகுத்துநாலு
திக்கினும் வளையச்செய்து
பாசமுற் றுடைய நண்பின்
படைத்துணையவர்களோடும்
பாசறையிருந்தான் அந்தப்
பதகனும் இழிந்துபோனுன்.

என்ற செய்யுளும் மிகைப் பாடல்களாகக் குறிக்கப்பெற்றுள்ளன.

## இராமன் தன் இருப்பிடத்தை அடைதல்

7071. கங்குல்வந் திறுத்த காலைக்
கைவிளக் கெடுப்பக் காவல்
வெங்கழ லரக்கன் மௌலி
விளக்கமே விளக்கஞ் செய்யச்
செங்கதிர் மைந்தன் செய்த
வென்றியை நிறையத் தேக்கிப்
பொங்கிய தோளி னுனு
மிழிந்துபோ யிருக்கை புக்கான்.

கங்குல் வந்து இறுத்த காலை, கைவிளக்கு எடுப்ப, காவல்
வெங் கழல்அரக்கன் மௌலி விளக்கமே விளக்கம் செய்ய,
செங்கதிர் மைந்தன் செய்த வென்றியை நிறையத் தேக்கிப்
பொங்கிய தோளினானும் இழிந்து போய், இருக்கை புக்கான்.

பொ :—சூரியன் புதல்வனாகிய சுக்கிரீவன் செய்த (செயலால் விளைந்த) வெற்றிப் புகழினைத் தன்னுள்ளத்தில் நிரம்ப நினைந்து (அம்மகிழ்ச்சியாற்) கிளர்ந்தோங்கிய தோள்களையுடையவனாகிய இராமனும் இரவுப் பொழுது வந்து தங்கியபோது (இருள் நீங்கக்) கைவிளக்குகளை(ப் பரிசனங்கள்) எடுத்து உடன் வரவும், (இலங்கையைக்) காக்கும் வெவ்விய வீரக் கழலையணிந்த அரக்கனாகிய இராவணனது முடியினின்றும் பறித்துக் கொணரப்பட்ட மணிகளின் ஒளியே இருளைப்போக்கி (எல்லா விளக்குகளின் ஒளியையும் கீழ்ப் படுத்திப்) பேரொளியை உண்டாக்கவும் அவ்விடத்தினின்றும் இறங்கிச் சென்று தன் பாசறையினுள்ளே புகுந்தான்.

கு :—கங்குல் - இரவு. இறுத்தல் - தங்குதல். செங்கதிர் மைந்தன் - சூரிய குமாரனாகிய சுக்கிரீவன். பொங்கிய தோளினான் என்றது இராமனை. தேக்குதல் - முழுவதும் நிரம்புமாறு நிறைத்தல். செங்கதிர் மைந்தன் செய்த வென்றியை நிறையத் தேக்கிப் பொங்கிய தோளினானும், கங்குல் வந்து இறுந்தகாலை, கைவிளக்கு எடுப்ப, மௌலி விளக்கமே விளக்கம் செய்ய, இழிந்து போய் இருக்கை புக்கான் என இயையும். இழிதல் - இறங்குதல். (50)

இச்செய்யுளையடுத்து 31-ஆம் எண்ணுள்ள சுவடியில் மேலே சுட்டிய 'தெய்வத் தாமரையோனாகி' என்ற முதற் குறிப்புடைய பாடல் காணப்படுகிறது.

### தாழ்வுற்ற இராவணன் கோபுரத்தை விட்டிறங்கிச் செல்லுதல்

**7072.** என்றானு மினைய தன்மை
யெய்தாத விலங்கை வேந்தன்
நின்றார்க டேவர் கண்டா
ரென்பதோர் நாண நீள
அன்றாய மகளிர் நோக்க
மாடவர் நோக்க மாகப்
பொன்றாது பொன்றி னான்றன்
புகழென விழிந்து போனான்.

என்றானும் இனைய தன்மை எய்தாத இலங்கை வேந்தன், 'நின்றார்கள் தேவர் கண்டார்' என்பது ஓர் நாணம் நீள,

**அன்று ஆயமகளிர் நோக்கம் ஆடவர் நோக்கம் ஆக,**
**பொன்றுது பொன்றினன்; தன் புகழ் என இழிந்து, போனன்.**

பொ :—(தான் இலங்கை வேந்தனுக முடிசூட்டப் பெற்ற நாள் தொடங்கி இந்நாள்வரை) என்ருயினும் இப்படிப்பட்ட இழிநிலையை அடையாத இலங்கை வேந்தனுகிய இராவணன், (தனக்கு அஞ்சி ஓடி யொளியுந் தன்மையராகிய) தேவர்கள் (தனக்கும் சுக்கிரீவனுக்கும் நிகழ்ந்த மற்போரில் சுக்கிரீவனல் முடிமணிகள் பறிக்கப்பட்ட திறத்தை அஞ்சாது நேர் நின்று) பார்த்துவிட்டார்களே என்பதனுலுண்டாகிய வெட்கம் மிகாநிற்க, அன்று தன்னுடன் வந்த ஆய மகளிரின் கண்கள் (காதற் குறிப்பினல் மனக் கிளர்ச்சியினையூட்டும் ஆற்றலையிழந்து, காதற் குறிப்பற்ற) ஆண்மக்களுடைய கண்களை யொத்துத் தோன்ற, உயிர் உடம்பினை விட்டுப் பிரியாத நிலையிலும் இறந்தவனை யொத்துக் காணப்பட்டவனுய், (உயர்ந்து ஓங்கிய நிலையிலிருந்து தாழ்வுற்ற) தனது புகழைப் போன்று கோபுரத்து உச்சியினின்றும்) இறங்கி(த் தன் மாளிகையை நோக்கி)ச் சென்றுன்.

கு :—என்ருனும் - என்ருயினும்; ஒன்ருயினும் எனற்பாலது "ஒன்ருனும்' (திருக்குறள் - 128) என வந்தாற்போன்று, என்ருயினும் எனற்பாலது என்ருனும் என வந்தது. இனைய தன்மை - இத்தகைய பெருமைக் குறைவாகிய அவமானம். ஆயமகளிர்-பலராய்க் குழுமி வந்த அந்தப்புர மகளிர். இராவணனது பெருவீரத்தினை மதித்து அதனை மேலும் மிகுவிக்கும் நிலையிற் காதற்குறிப்புடையன வாய்த்திகழும் மகளிருடைய கண்கள், சுக்கிரீவனல் முடிமணி பறிக்கப்பட்ட இராவணனைக்கண்ட அப்பொழுது அவனுக்கு நேர்ந்த இழிநிலையின் காரணமாக அவனுக்கு மனக்கிளர்ச்சி தரவல்ல அக் குறிப்பினை இழந்தனவாய், ஆடவர்கள் ஆடவர்களை நோக்குங்கால் அவர்களுடைய கண்களைப் போன்று அயன்மைக் குறிப்பினவாமாறு நிமிர்ந்து நோக்கின என்பார், 'அன்று ஆயமகளிர் நோக்கம் ஆடவர் நோக்கம் ஆக' என்ருர். உடம்பின் கண்ணே உயிர்நிலை பெற்றிருந்தும் இறந்தவனை ஒத்து உயிர்ப்படங்கி நாணத்தால் ஒடுங்கினன் என்பார், 'பொன்றுது பொன்றினன்' என்ருர். அவனது ஓங்கிய பெரும்புகழ் சுக்கிரீவனல் முடிமணி பறிக்கப்பட்ட நிலையில் மிகமிகக் கீழ் நிலையில் இறங்கினமை போன்று, உயர்ந்தோங்கிய கோபுரத்துச்சியின்மேல் நின்ற அவனும் உயர்ந்த நிலையினை விட்டுக் கீழ்நிலைக்கு இறங்கிச் சென்றுன் என்பார், 'தன் புகழ் என இழிந்து போனன்' என்ருர். பொன்றுது பொன்றுதல் - சாவாது சாதல்; உயிர் உடம்பினை விட்டுப் பிரியாது நிலைத்திருந்தும் அறம் பொருள் இன்பங்களாகிய பயன் எய்தப்பெருமை. (51)

**மகுட பங்கப் படலம் முற்றிற்று.**

# 12. அணிவகுப்புப் படலம்

இராமபிரான் இராவணனை வென்றழித்தற் பொருட்டு இலங்கையினை முற்றுகையிட்டு வானர சேனைகளை அணியாக வகுத்து இலங்கையின் நாற்றிசை வாயில்களில் நிறுத்தியதனையும், இராவணன் தன்மேற் படையெடுத்து வந்துள்ள இராமன் முதலியோரை வெல்லுதல் கருதி அரக்கர்களை அணியணியாக வகுத்து நிறுத்தியதனையும் விரித்துக் கூறும் படலமாதலின், அணிவகுப்புப் படலம் என்னும் பெயருடையதாயிற்று. 1, 2, 11, 18 என்னும் எண்பெற்ற சுவடிகளில் இப்படலம் மகுடபங்கப் படலத்தின் இறுதியிலுள்ள 'கங்குல் வந்திறுத்த காலை', 'என்ருனுமினையதன்மை' என்னும் முதற்குறிப்புடைய இரண்டு பாடல்களையும் முதற்கண் கொண்டு தொடங்குகின்றது. இது 23, 26-ம் சுவடிகளில் நகர்காவற் படலம் எனவும் 63-ம் சுவடியில் நகர்காவல் அணி வகுப்புப் படலம் எனவும் குறிக்கப் பெற்றுளது.

வானர மன்னனுகிய சுக்கிரீவனுடன் கடும்போர் புரிந்து தன் மகுட மணிகளைப் பறிகொடுத்து இறந்தானைப் போன்று வடதிசைக் கோபுரத்தினின்றும் இறங்கிச் சென்ற இராவணன், தன் மானம் அழிதலால் ஆடல் பாடல் முதலிய இன்ப நுகர்ச்சிகள் ஒன்றிலும் விருப்பில்லாதவனுய்த் தன் அரண்மனையிற் புக்கு மலரணையிற் படுத்தனன். அந்நிலையில் பகைப் புலத்தினை ஒற்றியறிந்து சார்த்தூலன் என்னும் தூதன் வந்த செய்தியை வாயில் காவலன் இராவணனுக்கு அறிவிக்க, அத்தூதனைத் தன்பால் அனுப்புமாறு பணித்தான். வாயில் காவலன் அனுப்ப உள்ளே வந்து தன்னை வணங்கி நின்ற தூதனை நோக்கிய இராவணன், 'நீ பகைவர் சூழலில் ஒற்றி அறிந்த செய்திகள் அனைத்தையும் சொல்லுக' எனப் பணித்தான். அவனது முகத்தினுல் அகக் குறிப்பினைக் கூர்ந்துணர்ந்த தூதன், இலங்கையின் மேற்றிசை வாயிலில் அநுமனும், கீழ்த்திசை வாயிலில் நீலனும், தென்றிசை வாயிலில் அங்கதனும், வடதிசை வாயிலில் தானும் தம்பி இலக்குவனும் காத்து நிற்க ஒவ்வொரு வாயிலிலும் பதினேழு வெள்ளம் வானர சேனைகள் சூழ்ந்து நிற்க இராமன் தன் படைகளை வகுத்து நிறுத்திய செய்தியையும், வானர மன்னனுகிய சுக்கிரீவன் எப்பொழுதும் தன்னைப் பிரியாது நிற்குமாறும், போரில் ஈடுபட்டுள்ள வானர வீரர்கட்கு உணவாக நாற்றிசைகளிலும் சென்று காய்கனிகளைப் பறித்துக் கொணர்ந்து உதவும் பணியில் இரண்டு வெள்ளம் வானர வீரர்கள் ஈடுபட்டுழைக்குமாறும், வீடணன் இலங்கையின் நாற்றிசை வாயில்களிலும் சென்று போரின் நிலைமைகளை அவ்வப்

பொழுது அறிந்து வந்து சொல்லுமாறும் இராமன் ஏற்பாடு செய்த திறத்தையும் தெரிவித்தான். அது கேட்ட இராவணன் படுக்கையை விட்டெழுந்து, மந்திராலோசனை மண்டபத்தையடைந்து அமைச்சர் களை யெல்லாம் வரவழைத்துப் பகைவர் சேனை இலங்கையை வளைத் துள்ள செய்தியைக் கூறி 'இனி நாம் ஆராய்ந்து செய்தற்குரியது யாது?' என வினவினன். அந்நிலையில் நிகும்பன் என்பான், 'தேவர்களும் அஞ்சியோடும் வண்ணம் ஆயிரம் வெள்ளஞ் சேனை களையும் ஆற்றல் மிக்க பலவகைப் படைக் கலங்களையும் பெற்றுள்ள அரக்கர்களாகிய நாம் வெறுங் கையினவாய் வந்த எழுபது வெள்ளம் வானர சேனைகளைக் கண்டு அஞ்சுவது அடாது' எனக் கூறினன். இராவணனுக்கு மாமனாகிய மாலி என்பான், 'வேதனையை விளைக் கும் காமம் நம்மை வேரொடுங் கெடுத்தது' என மனம் வருந்தியவ னாய் இலங்கையில் அநுமனும் சுக்கிரீவனும் செய்த பெருவன்மை களை எடுத்துரைத்து, 'சீதையைச் சிறையினின்றும் நீக்கி இரா மனைச் சரணடைவதே அரக்கர்களாகிய நாம் உய்தி பெறுதற்குரிய வழியாகும்' என அறிவுறுத்தினன். அது கேட்ட இலங்கை வேந்தன் மாலியைக் கடிந்துரைத்தான். மாலி ஒன்றும் கூறாது மௌனமாக இருந்தான். பின்பு இராவணன் சேனைத் தலைவனாகிய பிரகத்தனை இருநூறு வெள்ளஞ் சேனையோடு கீழ்த்திசை வாயிலிலும், மகோ தரனை மகாபாரிசுவனுடன் இருநூறு வெள்ளம் சேனை சூழத் தெற்கு வாயிலிலும், இந்திரசித்தை இருநூறு வெள்ளம் சேனைகளோடு மேற்கு வாயிலிலும் செல்லுமாறு ஏவி, தான் இருநூறு வெள்ளம் சேனைகளோடு வடதிசை வாயிலையடைவதாகவும், விரூபாட்சன் இருநூறு வெள்ளம் சேனைகளைத் தன்னுடன் கொண்டு இலங்கை நகரைப் பாதுகாத்தல் வேண்டும் எனவும் பணித்து, இவ்வாறு ஆயிர வெள்ளம் அரக்கர் சேனைகளையும் அணிவகுத்தமைத்தனன். அந் நிலையில் இரவு நீங்கிப் பொழுது புலர்ந்தது. புறத்தேயுள்ள வானர சேனைகள் இலங்கையின் நாற்றிசை வாயில்களையும் வளைந்து கொண்டு ஆரவாரித்தன. சூரியகுமாரனாகிய சுக்கிரீவனும் இலக்கு வனும் முன்னே செல்ல இந்திரன் தொழுது வாழ்த்த இராமன் போர் கருதி எழுந்தான். நாற்புறமும் கருங்கடலாற் சூழப்பட்ட அவ்விலங்கைமூதூர் வெண்மை நிறம் வாய்ந்த வானர சேனைக ளால் வளைக்கப் பெற்றபோது பாற்கடல் நடுவிலே தோன்றும் நிலப் பரப்பை ஒத்து விளங்கியது என்பது இப்படலத்தின் பொருட் சுருக்கமாகும்.

# 12. அணிவகுப்புப் படலம்

மானத்தால் வருந்திய இராவணன் அரண்மனையிற் புகுந்து படுத்தல்

**7073.** மானத்தா லூன்றப் பட்ட
மருமத்தான் வதன மெல்லாங்
கூனற்ரு மரையிற் ருேன்ற
வான்ருெடுங் கோயில் புக்கான்
பானத்தா னல்லன் றெய்வப்
பாடலா னல்ல ஞடற்
ருனத்தா னல்லன் மெல்லென்
சயனத்தா னுரையுந் தாரான்.

மானத்தால் ஊன்றப் பட்ட
மருமத்தான், வதனம் எல்லாம்
கூனல் தாமரையின் தோன்ற,
வான்தொடும் கோயில் புக்கான்;
பானத்தான் அல்லன்; தெய்வப்
பாடலான் அல்லன்; ஆடல்
தானத்தான் அல்லன்; மெல்லென்
சயனத்தான்; உரையும் தாரான்.

பொ :—மானமாகிய படையினுல் ஊன்றித் தாக்கப்பட்ட நெஞ்சினையுடையனுய இராவணன், (தன்) முகங்கள் யாவும் வளைந்(து தலை கவிழ்ந்)த தாமரை மலர்போன்று (குவிந்து) தோன்ற, வானத்தைத் தொடும் (தன்) அரண்மனையினுள்ளே புகுந்தவன், (மகிழ்ச்சிதரும்) தேறலைப் பருகினுன் அல்லன்; தெய்வ இசைப் பாடல்களைக் கேட்டு மகிழ்ந்தான் அல்லன்; (நாடக மகளிர்) ஆடும் அரங்குகளிற் சென்ருன் அல்லன்; யாவரோடும் உரையாடும் விருப்பமில்லாதவனுய் மெத்தென்ற படுக்கையிற் கிடப்பவன் ஆயினுன்.

கு :—மானம் என்றது, ஒரு குரங்கினுல் முடிமணி பறிக்கப்பட்டுத் தன் வீரத்திற்கு இழுக்கு நேர்ந்துழி ஏற்பட்ட அவமானமாகிய பெருமைக் குறைவினை. ஊன்றல் – அழுந்தத் தைத்தல். மருமம் – மார்பு; என்றது நெஞ்சினை. வதனம் - முகம். கூனல் - வளைவு;

வளைந்து தலை கவிழ்தல். கோயில் – அரண்மனை. பானம் – தேறல் முதலியவற்றைப் பருகுதலாகிய நுகர்ச்சி. மருமத்தான், கோயில் புக்கான், பானத்தான் அல்லன்; பாடலான் அல்லன்; ஆடல் தானத்தான் அல்லன்; உரையும் தாரான், மெல்லென் சயனத்தான் என முடிக்க. முக்கோடி வாழ்நாளும் முயன்றுடைய பெருந்தவமும் உடைய பேரரசனாகிய இராவணன், ஒரு குரங்கினால் தன் முடி மணிகள் பறிக்கப்பட்டமையால் தனக்கு உண்டாகிய பெருமைக் குறைவு, வேற்படையினைப் போன்று தன் னெஞ்சினைத் துளைத்து வருத்த, தேறல் பருகுதல், பாடல், ஆடல் முதலிய இனிய நுகர்ச்சி களெல்லாவற்றையும் வெறுத்து யாவருடனும் உரையாடாது படுக் கையிற் படுத்தனன் என்பதாம். (1)

## இராவணனது வெய்துயிர்க்குந் தோற்றம்

**7074.** வையெயிற் றாலு நேரா
மணியிழந் திரங்க லாலும்
பையுயிர்த் தயரும் பேழ்வாய்ப்
பஃறலைப் பரப்பி னாலும்
மெய்யனைத் திரையின் வேலை
மென்மலர்ப் பள்ளி யான
ஐயனைப் பிரிந்து வைகு
மநந்தனே யரக்கர் வேந்தன்.

வை எயிற்றாலும், நேரா மணி இழந்து இரங்கலாலும்,
பையுயிர்த்து அயரும் பேழ் வாய்ப் பல்தலைப் பரப்பினாலும்
மெய்யனை, திரையின் வேலை மென்மலர்ப் பள்ளி ஆன
ஐயனை, பிரிந்து வைகும் அநந்தனே—அரக்கர் வேந்தன்.

பொ:—அரக்கர்க்கு அரசனாகிய இராவணன், கூரிய பற்களை யுடைமையாலும், (கிடைத்தற்கரிய) ஒப்பற்ற மணியினையிழந்து இரங்குதலாலும், மெல்லப் பெருமூச்சு விட்டு வருந்தும் திறந்த வாயுடன் பொருந்திய பல தலைகளின் பரப்பினையுடைமையாலும், மெய்ம்மையின் உருவாக விளங்குபவனும் அலைகளையுடைய பாற் கடலின் கண்ணே மெல்லிய மலர்களையுடைய படுக்கையிலே (அறி துயில்) அமர்ந்த தலைவனும் ஆகிய திருமாலைப் பிரிந்து தனித்து வருந்தும் ஆதிசேடனையே ஒத்துத் தோன்றினான்.

கு:—அரக்கர் வேந்தன், வையெயிற்றாலும், மணியிழந்து இரங்க லாலும், பல்தலைப் பரப்பினாலும் அநந்தனே (ஒத்தான்) என முடிக்க.

கூரிய கோரைப் பற்களையுடைமையாலும் கிடைத்தற்கரிய மணியினை இழந்தமையாலும், பையுயிர்த்து அயரும் பேழ்வாயுடன் கூடிய பல் தலைப் பரப்பினை யுடைமையாலும் இராவணன் ஆதிசேடனை ஒத் தான் என்பதாம். இஃது ஏதுவுவமை என்னும் அணியின்பாற்படும். 'வையெயிறு' என்பது, அநந்தனுக்குக் கொள்ளுங்கால் கூரிய பல் என்றும், இராவணனுக்குக் கொள்ளுங்கால் கூரிய கோரைப் பல் என்றும் கூறப்படும். நேராமணி - ஒப்பில்லாதமணி. 'நேராமணி யிழந்திரங்கல்' என்பது ஆதிசேடனுக்குக் கூறுங்கால், தன்கண் அறிதுயிலமர்ந்த திருமால் தன்னை விட்டு நீங்கி அயோத்தியில் இராமனாக அவதரித்த நிலையில் கருமாணிக்கமாகிய அம் முதல் வனைப் பிரிந்து வருந்துதலாகவும், இராவணனுக்குக் கூறுங்கால் மகுடத்திற் பதிக்கப்பெற்ற மணிகளை இழந்து வருந்துதலாகவும் கொள்க. 'பையுயிர்த்து' என்பதனை அநந்தனுக்கு ஆக்குங்கால் பையுடன் உயிர்த்து எனவும், இராவணனுக்கு ஆக்குங்கால் பைய உயிர்த்து எனவும் பிரித்துப் பொருளுரைக்க. பேழ்வாய் - திறந்த வாய். வாய்மையினையே தனக்குரிய வடிவமாகக்கொண்டு விளங்கு வோன் இறைவன் ஆதலின் பாற்கடலில் அறிதுயிலமர்ந்த பரம னாகிய ஐயனை 'மெய்யன்' எனக் குறித்தார். தசமுகனாகிய இரா வணன், தன் முடிமணிகளையிழந்து, வெள்ளிய கோரைப் பற்கள் வெளிப்படப் பெரிய வாய்களைத் திறந்து பெருமூச் செறிந்து வெள்ளிய மலரணையிற் கிடக்கும் தோற்றம், திருமாலாகிய நன்மணி யினை யிழந்து கூர்மையான வெள்ளிய பற்களுடன் கூடிய பல வாய் களையும் திறந்து மூச்செறிந்து வெள்ளிய பாற்கடலிற் புரண்டு கிடக்கும் பல்தலைப் பாம்பாகிய ஆதிசேடன் தோற்றத்தை யொத்து அமைந்தது என்றவாறு.

(2)

## சார்த்தூலன் என்னும் ஒற்றனது வரவினை வாயில் காவலன் இராவணனுக்குத் தெரிவித்தல்

**7075.** தாயினும் பழகி னார்க்குந்
 தன்னிலை தெரிக்க லாகா
மாயவல் லுருவத் தான்முன்
 வருதலும் வாயில் காப்பான்
சேயவர் சேனை நண்ணிச்
 செய்திறந் தெரித்தி நீயென்
றேயவ னெய்தி னானென்
 றரசனை யிறைஞ்சிச் சொன்னான்.

தாயினும் பழகினர்க்கும் தன் நிலை தெரிக்கல் ஆகா
மாய வல் உருவத்தான் முன் வருதலும், வாயில் காப்பான்,
'"சேயவர் சேனை நண்ணி, செய் திறம் தெரித்தி நீ" என்று
ஏயவன் எய்தினன்' என்று அரசனை இறைஞ்சிச் சொன்னான்.

பொ :—பெற்ற தாயைக்காட்டிலும் (பேரன்புடையராய்த் தன் கண் நெருங்கிப்) பழகியவர்களாலும் தனது நிலை (இத்தன்மையதென உணர்ந்து) தெரிவித்தற்கு இயலாத வஞ்சனையும் வன்மையும் வாய்ந்த உருவமுடையனாகிய (சார்த்தூலன் என்னும்) ஒற்றன் (இராவணனது அரண்மனையின்) முன்னே வருதலும் (அது கண்ட) வாயில்காப்போன் (விரைந்து சென்று இராவணனாகிய) வேந்தனை வணங்கி, 'நீ சேய்மைக்கண்ணே உள்ளாராகிய பகைவரது சேனையை அடைந்து (அன்னோர்) செய்யும் செயல்களை (அறிந்து வந்து) தெரிவிப்பாயாக என்று (நின்னால்) ஏவப்பட்டவனாகிய சார்த்தூலன் வந்துள்ளான்' என்று கூறினன்.

கு :—தன்பால் தாய்போன்று அன்புடையராய் நெருங்கிப் பழகும் நண்பர்களாலும் தன் தன்மை இத்தகையது என்று உய்த்துணர்ந்து தெரிவிக்க ஒண்ணாத வஞ்சனையும், பகைப்புலத்தார் ஐயுற்று அறியலுறின் சினந்து நோக்கிய அவர் கண்ணிற்கு அஞ்சாது எதிர் நின்று நால்வகை உபாயமுஞ் செய்தாலும் தன் மனத்திற் கொண்டவற்றை வெளிப்படுத்தாத வன்மையும் ஒருங்குடைய ஒற்றன் என்பார், 'தாயினும் பழகினர்க்குந் தன்னிலை தெரிக்கலாகா, மாய வல்லுருவத்தான்' என்றார். பழகினர்க்கும் - பழகியவராலும்; உருபு மயக்கம். மாயம் - வஞ்சனை. 'தாயினும் பழகினர் தமக்கு மாயந்தேர்வொணார்' எனவும், 'தாயையாயினுஞ் சலித்திடு வஞ்சனை தவிரா மாயையான்' (இலங்கை கேள்விப் - 37) எனவும் வருந்தொடர்கள் இங்கு ஒப்பு நோக்கத்தக்கனவாகும். 'சேயவர் சேனை நண்ணிச் செய்திறம் தெரித்தி நீ' என்பது, இராவணன் சார்த்தூலனை நோக்கி முன்னர்க் கூறிய மொழியை வாயில்காப்போன் கொண்டு கூறியது. சேயவர்- தூரத்திலுள்ளார்; என்றது பகைவரை. ஏயவன் - ஏவப்பட்டவன். அரசன் என்றது, அரக்கர் வேந்தனாகிய இராவணனை. (3)

## இராவணனது கட்டளையால் உள்ளே சென்ற சார்த்தூலன் பகைவர் திறத்துத் தானறிந்தவற்றை அவனுக்கு எடுத்துரைத்தல்

**7076.** அழையென வெய்திப் பாதம்
வணங்கிய வறிஞன் றன்னைப்
பிழையற வறிந்த வெல்லா
முரைத்தியென் றரக்கன் பேச
முழையுறு சீய மன்னான்
முகத்தினு லகத்தை நோக்கிக்
குழையுறு மெய்யன் பைய
வரன்முறை கூற லுற்றான்.

'அழை' என, எய்தி, பாதம் வணங்கிய அறிஞன் தன்னை, 'பிழை அற அறிந்த எல்லாம் உரைத்தி' என்று அரக்கன் பேச, முழை உறு சீயம் அன்னான் முகத்தினால் அகத்தை நோக்கி, குழையுறு மெய்யன், பைய, வரன்முறை கூறலுற்றான்.

பொ :—'உள்ளே அழைப்பாயாக' என்று (தான் வாயில் காப்போனுக்குச்) சொல்ல (அவன் அழைக்க) உள்ளே வந்து (தன்னுடைய) அடிகளை வணங்கிய அறிவுடையோனாகிய ஒற்றனை (நோக்கி), 'நீ குற்றம் அற அறிந்தன எல்லாவற்றையும் சொல்வாயாக' என்று இராவணன் சொல்ல, (அதுகேட்ட சார்த்தூலன்) மலைமுழையில் வாழும் சிங்க ஏற்றினை ஒத்தவனாகிய இராவணனுடைய முகக் குறிப்பினால் (அவனது) உள்ளக் குறிப்பினை உய்த்துணர்ந்து, ஒடுங்கிய உடம்பினையுடையவனாய்(த் தான் உணர்ந்தவற்றை) நிகழ்ந்த முறையே மெல்லச் சொல்லத் தொடங்கினான்.

கு :—'அழை' என்பது, இராவணன் வாயில்காப்போனை நோக்கிக் கூறிய சொல். 'எய்தி வணங்கிய அறிஞன்' என்றது, வாயில் காப்போன் அழைக்க அரண்மனையினுள்ளே புகுந்து இராவணனை வணங்கிய நுண்ணறிவுடைய ஒற்றனாகிய சார்த்தூலனை. அரக்கன் - இராவணன். 'பிழையற அறிந்தவெல்லாம் உரைத்தி' என்றது, இராவணன் ஒற்றனைநோக்கிக் கூறிய சொல். முழை - மலைக்குகை. சீயம் – சிங்கம். சீயம் அன்னான் என்றது, இராவணனை. தன்னைச் சார்ந்துள்ள பொருளது நிற முதலியவற்றைத் தானே புலப்படுத்திக் காட்டும் இயல்பினதாகிய பளிங்கினைப்போன்று, ஒருவரது உள்ளத்தில் மிக்கதனை அவரது முகமே புலப்படுத்திக் காட்டும் தன்மையதாதலின், சார்த்தூலன் என்னும் ஒற்றன், இராவணனது முகக்

குறிப்பினைக் கொண்டே அவனது உள்ளத்தியல்பினைத் தெள்ளிதின் உணர்ந்து கொண்டான் என்பார், 'முழையுறு சீயமன்னுன் முகத்தினுல் அகத்தை நோக்கி' என்ருர். "அடுத்தது காட்டும் பளிங்கு போல் நெஞ்சம், கடுத்தது காட்டும் முகம்" (706) என்பது திருக்குறள். குழையுறும் மெய் - பணிவினைப் புலப்படுத்தும் நிலையில் ஒடுங்கிய உடம்பு. 'குழையுறு மெய்யன் பைய வரன்முறை கூற லுற்ருன்' என்றது, முற்செய்யுளிற் குறித்த 'மாயவல்லுருவத்தான்' ஆகிய ஒற்றனை. பைய - மெல்ல. (4)

**7077.** வீரிய வீர னேவப்
பதினெழு வெள்ளத் தோடும்
மாருதி மேலை வாயி
லுழிஞைமேல் வருவ தானுன்
ஆரிய னமைந்த வெள்ள
மத்தனை யோடும் நெற்றிச்
சூரியன் மைந்தன் றன்னைப்
பிரியல னிற்கச் சொன்னுன்.

'வீரிய! வீரன் ஏவ, பதினெழு வெள்ளத் தோடும்,
மாருதி, மேலை வாயில் உழிஞைமேல் வருவதானுன்;
ஆரியன், அமைந்த வெள்ளம் அத்தனை யோடும், நெற்றிச்
சூரியன் மைந்தன் தன்னைப் பிரியலன் நிற்கச் சொன்னுன்.

பொ:—தறுகண்மை மிக்க அரசே! வீரத்திற் சிறந்தவனுகிய இராமன் பணிக்க வாயு புத்திரனுகிய அநுமன் பதினெழு வெள்ளம் சேனையோடும் (இலங்கையின்) மேற்குப்புற வாயிலின் மதிலை வளைக்கும் செயலை மேற்கொண்டு வருவானுயினன். மேலோனுகிய இராமன், (வானத்து) உச்சியில் விளங்கும் கதிரவனுக்கு மைந்தனுகிய சுக்கிரீவனை (நோக்கி) மேற்கூறியவாறு அமைந்த பதினெழு வெள்ளஞ் சேனையோடும் (தன்னைப்) பிரியாது உடன் நிற்குமாறு கூறினுன்.

கு:—வீரியம் - தறுகண்மை. வீரியன் என்றது, இராவணனை. வீரன் என்றது இராமனை. மாருதி - அநுமன். உழிஞை - பகைவரது மதிலைச் சூழ்ந்து வளைத்துக் கொள்ளுதலாகிய போர்ச்செயல். இச் செயலை மேற்கொண்ட வீரர்கள் அடையாளமாகச் சூடும் பூ உழிஞையாதலின், இவ்வொழுகலாறு உழிஞை என்ற பெயரால் சுட்டப்படுவதாயிற்று. ஆரியன் - மேலோன்; இராமன். 'அமைந்த

வெள்ளம் அத்தனே' என்றது, மேற்குறித்த பதினெழுவெள்ளம் என்னுந் தொகையினை. வானத்து உச்சியில் விளங்குதல் பற்றி 'நெற்றிச் சூரியன்' என்ருர். நெற்றி - உச்சி. 'உச்சிக்கிழான்' (சிலப் - கனுத்-11) என்ருர் இளங்கோவடிகளும். தூர்த்தனுன இராவணனை நெடுந்தொலைவிற் கண்ட அளவிலேயே சினத்தாற் பொங்கி யெழுந்து அவன்மேற் பாய்ந்து பொருது அவனுடைய முடியிலுள்ள மணிகளைப் பறித்து வந்தவன் சுக்கிரீவனுதலின், இராவணனுல் அவனுக்கு எத்தகைய தீங்கும் நேராதவாறு காக்குங் கருத்துடையனுய் அவனைத் தன்னுடன் பிரியாது நிற்கும்படி இராமன் கட்டளையிட்டுள்ளான் என்பது புலப்பட 'நெற்றிச் சூரியன் மைந்தன் தன்னைப் பிரியலன் நிற்கச் சொன்னுன்' என்ருர். (5)

**7078.** அன்றியும் பதினேழ் வெள்ளத்
தரியொடு மரசன் மைந்தன்
றென்றிசை வாயிற் செய்யுஞ்
செருவெலாஞ் செய்வ தானுன்
ஒன்றுபத் தேழு வெள்ளங்
கவியொடுந் துணைவ ரோடும்
நின்றன னீல னென்பான்
குணதிசை வாயி னெற்றி.

'அன்றியும், பதினேழ் வெள்ளத்து
அரியொடும் அரசன் மைந்தன்,
தென் திசை வாயில் செய்யும்
செரு எலாம் செய்வதானுன்;
ஒன்று பத்து ஏழு வெள்ளம்
கவியொடும் துணைவரோடும்
நின்றனன், நீலன் என்பான்,
குணதிசை வாயில் நெற்றி.

பொ:—அன்றியும் அரச குமாரனுகிய அங்கதன், பதினேழு வெள்ளம் குரங்குச் சேனையுடனே (இலங்கையின்) தெற்கு வாயிலிலே செய்யத்தகும் போர்ச் செயல்களையெல்லாம் (தான் மேற்கொண்டு) செய்வதாக வந்துள்ளான். நீலன் என்பவன், பதினேழு வெள்ளம் குரங்குகளோடும் துணைவரோடும் கிழக்குத்திசை வாயிலின் முன்னணியிலே நின்றுள்ளான்.

கு :—அரி - குரங்கு. அரசன் மைந்தன் என்றது, கிட்கிந்தை மன்னனுகிய வாலியின் மகன் அங்கதனை. ஒன்று பத்து ஏழு என்பதனைப் பத்து ஒன்று ஏழு என மாற்றி, பத்துடன் ஒன்றிய ஏழு - பதினேழு எனப் பொருள் கொள்க. கவி - குரங்கு. நீலன், ஒன்று பத்து ஏழு வெள்ளம் கவியொடும் துணைவரோடும் குணதிசை வாயில் நெற்றி நின்றனன் என இயையும். குணதிசை வாயில் - கீழ்த்திசை வாயில். நெற்றி - முன்னணி. (6)

**7079.** இம்பரி னியைந்த காயுங்
கனியுங்கொண் டிரண்டு வெள்ளம்
வெம்புவெஞ் சேனைக் கெல்லா
முணவுதந் துழல விட்டான்
உம்பியை வாயி றோறு
நிலைதெரிந் துணரச் சொன்னுன்
தம்பியுந் தானு நிற்ப
தாயினுன் சமைவி தென்ருன்.

'இம்பரின் இயைந்த காயும்
கனியும் கொண்டு, இரண்டு வெள்ளம்
வெம்பு வெஞ் சேனைக்கு எல்லாம்
உணவுதந்து உழலவிட்டான்;
உம்பியை, வாயில் தோறும்
நிலை தெரிந்து உணரச் சொன்னுன்;
தம்பியும் தானும் நிற்பதாயினுன்;
சமைவு இது' என்ருன்.

பொ :—(அவ் இராமன்) இவ்வுலகிற் பொருந்திய (நல்ல) காய்களையும் பழங்களையும் கொண்டு வந்து வெம்மை மிக்க சேனைகட்கெல்லாம் உணவாகத் தந்து திரியும்படி இரண்டு வெள்ளம் சேனைகளை(ப் பல திசைகளிலும்) விடுத்துள்ளான்; உன்னுடைய தம்பியாகிய வீடணனை (இலங்கை நகர) வாயில்கள் தோறும் (அவ்வப்போது உளவாம்) போரின் நிலையை (நேரிற்கண்டு) ஆராய்ந்துணருமாறு கூறியுள்ளான்; தம்பியுந் தானுமாக (வடதிசை வாயிலில்) நின்றுள்ளான். (பகைவர் பக்கத்தே நிகழ்ந்துள்ள) ஏற்பாடு இதுவாகும் என்று கூறினுன் (சார்த்தூலன்).

கு :—வானர சேனைக்குக் காயும் கனியுமே உணவாகும் ஆதலால் அவற்றை இந்நிலவுலகெங்கும் தேடிக் கொணரும் பணி

வெள்ளம் அத்தனை' என்றது, மேற்குறித்த பதினெழுவெள்ளம் என்னுந் தொகையினை. வானத்து உச்சியில் விளங்குதல் பற்றி 'நெற்றிச் சூரியன்' என்றார். நெற்றி - உச்சி. 'உச்சிக்கிழான்' (சிலப் - கனாத்-11) என்றார் இளங்கோவடிகளும். தூர்த்தனான இராவணனை நெடுந்தொலைவிற் கண்ட அளவிலேயே சினத்தாற் பொங்கி யெழுந்து அவன்மேற் பாய்ந்து பொருது அவனுடைய முடியிலுள்ள மணிகளைப் பறித்து வந்தவன் சுக்கிரீவனாதலின், இராவணனால் அவனுக்கு எத்தகைய தீங்கும் நேராதவாறு காக்குங் கருத்துடையனாய் அவனைத் தன்னுடன் பிரியாது நிற்கும்படி இராமன் கட்டளையிட்டுள்ளான் என்பது புலப்பட 'நெற்றிச் சூரியன் மைந்தன் தன்னைப் பிரியலன் நிற்கச் சொன்னான்' என்றார். (5)

**7078.** அன்றியும் பதினேழ் வெள்ளத்
தரியொடு மரசன் மைந்தன்
றென்றிசை வாயிற் செய்யுஞ்
செருவெலாஞ் செய்வ தானான்
ஒன்றுபத் தேழு வெள்ளங்
கவியொடுந் துணைவ ரோடும்
நின்றன னீல னென்பான்
குணதிசை வாயி னெற்றி.

'அன்றியும், பதினேழ் வெள்ளத்து
அரியொடும் அரசன் மைந்தன்,
தென் திசை வாயில் செய்யும்
செரு எலாம் செய்வதானான்;
ஒன்று பத்து ஏழு வெள்ளம்
கவியொடும் துணைவரோடும்
நின்றனன், நீலன் என்பான்,
குணதிசை வாயில் நெற்றி.

பொ:—அன்றியும் அரச குமாரனாகிய அங்கதன், பதினேழு வெள்ளம் குரங்குச் சேனையுடனே (இலங்கையின்) தெற்கு வாயிலிலே செய்யத்தகும் போர்ச் செயல்களையெல்லாம் (தான் மேற்கொண்டு) செய்வதாக வந்துள்ளான். நீலன் என்பவன், பதினேழு வெள்ளம் குரங்குகளோடும் துணைவரோடும் கிழக்குத்திசை வாயிலின் முன்னணியிலே நின்றுள்ளான்.

கு :—அரி - குரங்கு. அரசன் மைந்தன் என்றது, கிட்கிந்தை மன்னனுகிய வாலியின் மகன் அங்கதனை. ஒன்று பத்து ஏழு என்பதனைப் பத்து ஒன்று ஏழு என மாற்றி, பத்துடன் ஒன்றிய ஏழு - பதினேழு எனப் பொருள் கொள்க. கவி - குரங்கு. நீலன், ஒன்று பத்து ஏழு வெள்ளம் கவியொடும் துணைவரோடும் குணதிசை வாயில் நெற்றி நின்றனன் என இயையும். குணதிசை வாயில் - கீழ்த்திசை வாயில். நெற்றி - முன்னணி. (6)

**7079.** இம்பரி னியைந்த காயுங்
கனியுங்கொண் டிரண்டு வெள்ளம்
வெம்புவெஞ் சேனைக் கெல்லா
முணவுதந் துழல விட்டான்
உம்பியை வாயி ரேறு
நிலைதெரிந் துணரச் சொன்னுன்
தம்பியுந் தானு நிற்ப
தாயினுன் சமைவி தென்ருன்.

‘இம்பரின் இயைந்த காயும்
கனியும் கொண்டு, இரண்டு வெள்ளம்
வெம்பு வெஞ் சேனைக்கு எல்லாம்
உணவுதந்து உழலவிட்டான்;
உம்பியை, வாயில் தோறும்
நிலை தெரிந்து உணரச் சொன்னுன்;
தம்பியும் தானும் நிற்பதாயினுன்;
சமைவு இது’ என்ருன்.

பொ :—(அவ் இராமன்) இவ்வுலகிற் பொருந்திய (நல்ல) காய்களையும் பழங்களையும் கொண்டு வந்து வெம்மை மிக்க சேனைகட்கெல்லாம் உணவாகத் தந்து திரியும்படி இரண்டு வெள்ளம் சேனைகளை(ப் பல திசைகளிலும்) விடுத்துள்ளான்; உன்னுடைய தம்பியாகிய வீடணனை (இலங்கை நகர) வாயில்கள் தோறும் (அவ்வப்போது உளவாம்) போரின் நிலையை (நேரிற்கண்டு) ஆராய்ந்துணருமாறு கூறியுள்ளான்; தம்பியுந் தானுமாக (வடதிசை வாயிலில்) நின்றுள்ளான். (பகைவர் பக்கத்தே நிகழ்ந்துள்ள) ஏற்பாடு இதுவாகும் என்று கூறினுன் (சார்த்தூலன்).

கு :—வானர சேனைக்குக் காயும் கனியுமே உணவாகும் ஆதலால் அவற்றை இந்நிலவுலகெங்கும் தேடிக் கொணரும் பணி

இரண்டு வெள்ளம் வானர சேனைக்கு விதிக்கப்பட்டதென்பது முதலிரண்டடிகளிற் கூறப்பட்டது. இம்பர் - இந்நிலவுலகம். உம்பி - உன் தம்பி; என்றது, வீடணனை. சமைவு-கருதி அமைக்கப்பட்ட திட்டம்; ஏற்பாடு. (7)

### இராவணன் 'நாளையே பகையினை ஒழிப்பேன்' என வெகுண்டுரைத்தல்

**7080.** சார்த்தூல னிதனைச் சொல்லத்
தழல்சொரி தறுக ணானும்
பார்த்தூழி வடவை பொங்கப்
படுவது படுமா பார்த்தி
போர்த்தூளி துடைப்பெ னாளை
யவருடற் பொறையி னின்றும்
தேர்த்தூறு குருதி தன்னா
லென்றன னெயிறு தின்னா.

சார்த்தூலன் இதனைச் சொல்ல,
தழல் சொரி தறுகணானும்
'பார்த்து ஊழி வடவை பொங்க,
படுவது படுமா பார்த்தி;
போர்த்தூளி துடைப்பென், நாளை
அவர் உடற்பொறையின் நின்றும்
தேர்த்து ஊறு குருதிதன்னால்'
என்றனன், எயிறு தின்னா.

பொ:—சார்த்தூலன் என்னும் ஒற்றன் இம்மொழியினைக் கூற(க் கேட்டு) நெருப்புமிழும் கண்களையுடைய தறுகண்மையாளனாகிய இராவணனும், பற்களை (நறநறவென்று) கடித்து, 'நாளையதினம் போரினால் உளவாம் புழுதியை(ப் பகைவர்களாகிய) அவருடைய உடம்பின் குவியலினின்றும் தேர்ச் சுவட்டின் கண்ணதாய் ஊறிப் பெருகும் இரத்த வெள்ளத்தினால் (கழுவிப்) போக்குவேன். ஊழிக் காலத்திலே வடவாமுகாக்கினி கிளர்ந்து எழ (அதனால்) உலகம் அழிந்துபடுமாறு போன்று அன்னோர் அழிந்துபடுமாற்றினை (நீ) நேரிற் காண்பாயாக' என்று கூறினான்.

கு:—தழல் சொரி தறுகணான் என்றது, இராவணனை. தறுகணானும் எயிறுதின்னா, பார்த்து, 'நாளை போர்த்தூளி அவர் உடற்

பொறையினின்றும் தேர்த்து ஊறு குருதி தன்னால் துடைப்பென், ஊழி வடவை பொங்கப்படுவது படுமா பார்த்தி' என்றான் என இயையும். ஊழி வடவை - (உலகம் அழியுமாறு) ஊழிக்காலத்திற் கடலினின்றும் கிளர்ந்து தோன்றும் பெருந் தீ. உடற்பொறை - உடம்பின் குவியல். தேர்த்து ஊறு - தேரின் கண்ணதாய் ஊறிப் பெருகும். குருதி - இரத்தம். (8)

## இராவணன் மலரணையை விட்டெழுந்து மந்திராலோசனை மண்டபத்தில் அமர்தல்

**7081.** மாவணை நீலக் குன்றத்
திளவெயில் வளர்ந்த தென்னத்
தூவணை குருதிச் செக்கர்ச்
சுவடுறப் பொலிந்த தோளான்
ஏவணை வரிவிற் காமன்
கணைபட வெரியா நின்ற
பூவணை யாற வேறோர்
புனைமணி யிருக்கை புக்கான்.

மா அணை நீலக் குன்றத்து இளவெயில் வளர்ந்தது என்ன,
தூ அணை குருதிச் செக்கர்ச் சுவடு உறப் பொலிந்த தோளான்,
ஏ அணை வரிவில் காமன் கணைபட எரியா நின்ற
பூ அணை ஆற, வேறு ஓர் புனை மணி இருக்கை புக்கான்.

பொ :—பெருமை பொருந்திய நீலமலையிலே (கதிரவனது) இளங்கதிர் படிந்து பரவினாற் போன்று தசையொடு பொருந்திய இரத்தக் கறையாகிய சிவந்த சுவடு பொருந்த விளங்கும் புயங்களையுடையனாகிய இராவணன், அம்பு எய்தற்றொழிலமைந்த வரிந்து கட்டப்பெற்ற வில்லையுடைய மன்மதன் எய்யும் அம்புகள் (தன்மேற்)படுவதனால் (தனது உடம்பின் வெம்மை தாக்கிக்) கொதிப்புறுவதாகிய மலர்ப்படுக்கை (அவ்வெப்பம் தணிந்து) ஆறும் வண்ணம் மணிகளால் அணிசெய்யப் பெற்ற வேறோர் இருக்கையினை அடைந்தான்.

கு :—மா - பெருமை. நீலக்குன்றம் இராவணனது கரியமேனிக்கும், அக்குன்றத்திற் படிந்த இளவெயில் அவனுடைய தோள்களிற் படிந்துள்ள இரத்தக் கறைக்கும் உவமை. தூ - தசை. ஏ அணை வில் - அம்பு எய்தற்றொழில் பொருந்திய வில். வரிவில் - நாண் வரிந்து கட்டப்பெற்ற வில். கணை - அம்பு; என்றது மலராகிய அம்பினை. தான் அமர்ந்திருந்த மலரணை, காமன் அம்புகள் பட்டுத்

தனது உடல் வெம்மையால் கொதிப்புற்று அழலும் நிலையில் அவ் வெம்மை தணியுமாறு அதனை விட்டு எழுந்து மணிகளாற் புனையப் பட்ட வேறோர் இருக்கையினை அடைந்தான் என்பார், 'காமன் கணைபட எரியா நின்ற, பூவணை ஆற வேறோர் புனைமணியிருக்கை புக்கான்' என்றார். (9)

## இராவணன் அமைச்சர்களை அழைத்தல்

**7082.** செய்வன முறையி னெண்ணித்
திறத்திற முணர்விற் றேர
மையறு மரபின் வந்த
வமைச்சரை வருக வென்றான்
பொய்யெனப் பளிங்கி னாய
விருக்கையின் புறத்தைச் சுற்றி
ஐயிரண் டாய கோடி
பேய்க்கணங் காப்ப தாக்கி.

செய்வன முறையின் எண்ணி,
திறத்திறம் உணர்வின் தேர,
மை அறு மரபின் வந்த
அமைச்சரை, 'வருக' என்றான்;
பொய் எனப் பளிங்கின் ஆய
இருக்கையின் புறத்தைச் சுற்றி,
ஐ இரண்டு ஆய கோடி
பேய்க்கணம் காப்பது ஆக்கி.

பொ :—(அங்ஙனம் புனைமணியிருக்கைபுக்க இராவணன்) வெறு வெளியெனக் (கண்டோர்) கூறுமாறு பளிங்குக் கற்களால் இயன்ற (ஆலோசனைச் சபையாகிய) அவ்விடத்தைச் சூழ்ந்து பத்துக்கோடி அளவினவாகிய பேய்க் கூட்டங்கள் காத்து நிற்குமாறு பணித்து (மேற்) செய்யவேண்டுவனவற்றை முறைப்பட நினைந்து அச்செயல் வகையின் கூறுபாடுகளை நிரலே ஆராய்ந்து துணிதற் பொருட்டுக் குற்றமற்ற (அமைச்சர்) மரபிலே தோன்றிய மந்திரிகளை 'வருக' என அழைத்தான்.

கு :—ஆக்கி என்னும் வினையெச்சம் இப்பாடலின் இரண்டாமடி யிலுள்ள 'என்றான்' என்னும் வினைகொண்டு முடிந்தது. திறத்திறம்- (செயல்) வகையின் கூறுபாடு. மை - குற்றம். வெள்ளிய பளிங்குக்

கற்களால் இயன்ற அச்சபை காண்போர்க்கு உண்மையான கட்டிட வுருவிலன்றி வெற்றிடமே போன்று உருவின்றிப் பொய்யாய்த் தோன்றும் இயல்பினதாதல் பற்றி, 'பொய்யெனப் பளிங்கிலுய இருக்கை' என்றார். இனி, அமைச்சர்களுடன் நிகழ்த்தக் கருதிய ஆராய்ச்சி பகைப்புலத்தார்க்குப் புலனாகாதவாறு அவ்விடத்தில் அயலார் நுழையாதவண்ணம் பத்துக்கோடிப் பேய்க்கணங்களைக் காவலாக நிறுத்தினான் என்க. (10)

### அமைச்சர்களை நோக்கி 'இனிச் செய்யத்தக்கது யாது' என வினவுதல்

**7083.** அளந்தறி வரிய ராய
வமைச்சரை யடங்க நோக்கி
வளைந்தது குரங்கின் சேனை
வாயில்க டோறும் வந்து
விளைந்தது பெரும்போ ரென்று
விட்டது விடாது நம்மை
உளைந்தன ரென்ன வெண்ணி
யென்செயற் குரிய வென்றான்.

அளந்து அறிவரியர் ஆய
அமைச்சரை அடங்க நோக்கி,
'வளைந்தது குரங்கின் சேனை,
வாயில்கள் தோறும் வந்து;
விளைந்தது பெரும்போர் என்று
விட்டது; விடாது, நம்மை
உளைந்தனர்; என்ன எண்ணி?
என் செயற்கு உரிய?' என்றான்.

பொ :—(இத்தன்மையர் என யாவராலும்) அறுதியிட்டு அறிய ஒண்ணாத (மதிநுட்பமுடைய)வராகிய அமைச்சர் அனைவரையும் ஒருசேரப் பார்த்து, 'குரங்குச் சேனை (நம் இலங்கை நகர) வாயில்கள் தோறும் வந்து வளைந்து கொண்டது; பெரிய போரானது முற்றி விளைந்தது என்னும்படி (ஆகி) விட்டது. (பகைவருடைய சேனை வீரராகிய வானரர்கள்) நம்மை விடாது தொடர்ந்து (மனம்) உளையச் செய்தனர். (நிகழ்ந்தவற்றை) நினைந்து யாது பயன்? (இந்நிலையில் நம்மாற்) செய்தற்குரியன யாவை? என வினவினான் (இராவணன்).

கு :—அடங்க - முழுவதும். வளைத்தல் - சூழ்ந்து கொள்ளுதல். உளைந்தனர் - உளையுமாறு செய்தனர் ; பிளந்தனர் என்பது போன்று தன்வினை பிறவினை இரண்டற்கும் பொதுவாகிய சொல், ஈண்டுப் பிறவினைப் பொருளைத் தந்தது. 'என்ன எண்ணி என் செயற்குரிய' என்பதனை 'எண்ணி என்ன? செயற்குரிய என்' என மாற்றிப் பொருளுரைக்க. (11)

## நிகும்பன் கூறுதல்

**7084.** எழுபது வெள்ளத் துற்ற
குரக்கின் மெயிலை முற்றுந்
தழுவின வென்று செய்யத்
தக்கது சமைதி போலாம்
அழுவநீர் வேலை யன்ன
தாயிர வெள்ள மன்றே
உழிஞையைத் துடைக்க நொச்சி
யுச்சியிற் கொண்ட துன்னூர்.

'எழுபது வெள்ளத்து உற்ற
குரக்கினம் எயிலை முற்றும்
தழுவின என்று செய்யத்
தக்கது சமைதி போலாம்;
அழுவ நீர் வேலை அன்னது
ஆயிர வெள்ளம் அன்றே?
உழிஞையைத் துடைக்க, நொச்சி
உச்சியில் கொண்டது உன் ஊர்.'

பொ :—எழுபது வெள்ளம் என்னும் தொகையினவாய்ப் பொருந்திய குரங்குக் கூட்டங்கள் (நம் இலங்கை நகரத்து) மதிலை முழுவதும் வளைத்துக் கொண்டன என்று (கருதி அழித்துப் போக்குதற்குச்) செய்யத்தக்க செயலிற் பொருந்தித் தக்க ஏற்பாட்டினைச் செய்தற்கு முற்பட்டாய் போலும்? மதில் வளைத்தலாகிய (பகைவரது) போர்ச் செயலை அறவே அழித்துப் போக்குதற்கு நொச்சி மாலையைத் தலைமேற் சூடியதாகிய உன் ஊரிலுள்ள பெருஞ்சேனை, அழுந்திய பரப்பினதாகிய கடலை யொத்ததாய் ஆயிரவெள்ளம் என்னும் தொகையினது அல்லவா?

கு :— இது முதல் மூன்று செய்யுட்கள், இராவணனை நோக்கி நிகும்பனும் அவனையடுத்து மாலியவானும் கூறும் கூற்றுக அமைந்தன. பகைவர் செய்யும் உழிஞைப் போரை விலக்குதற்கென நொச்சி என்னும் அடையாளப் பூவினை உச்சியிற் சூடிய உனது ஊரிலுள்ள பெருஞ்சேனை, ஆழ்ந்து பரவிய பெருங் கடலை யொத்ததாய் ஆயிர வெள்ளம் தொகையினதாயிருக்கவும், அதன் பெருமையினையும் வன்மையினையும் நினையாது, எழுபது வெள்ளம் குரங்குகள் நம் இலங்கை மூதூரை வளைந்து கொண்டனவென்று அற்பமாகிய அக்குரங்குச் சேனையைப் பொருளாக மதித்து அதனை வென்றொழித்தற்கு வேண்டிய செயல்முறையினை வகுக்க முற்பட்ட நினது செயல் நின் பெருமைக்குச் சிறிதும் ஏற்றதன்று என நிகும்பன் என்பான் இராவணனை நோக்கிக் கூறினன். நொச்சி என்பது, புறத்தோராகிய பகைவர் தம் நாட்டினைப் பற்றிக் கொள்ளாதவாறு, அகத்தோர் தம்மதில் அரண்களைக் காத்துக் கொள்ளும் நிலையிற் செய்யும் போர். இப்போரில் ஈடுபட்ட வீரர்கள் இதற்கு அடையாளமாக நொச்சிப் பூவைச் சூடுதல் மரபு. உழிஞை என்பது, பகைவரது மதிலரண்களை வளைத்து அவர் நாட்டின் புறத்தே நின்று பொரும் போர். எயில் வளைத்தலாகிய இப்போரில் ஈடுபட்ட வீரர்கள் தாம் மேற்கொண்ட தொழிலுக்கு அடையாளமாக உழிஞைப் பூவைச் சூடுதல் மரபு. 'எயில் காத்தல் நொச்சி, அதுவளைத்தலாகும் உழிஞை' என்பது பன்னிரு படலம். அழுவநீர் வேலை-ஆழமான நீர்ப்பரப்பையுடைய கடல். வெள்ளம் என்பது ஐம்பத்தேழு தானங்களையுடைய பேரெண். ஆயிர வெள்ளம் என்பது அறுபது தானங்களையுடைய பேரெண். ஊர் என்றது, இலங்கையினை; அஃது ஆகுபெயராய் அங்கு வாழும் அரக்கர் சேனையினை யுணர்த்தியது. 'உழிஞையைத் துடைக்க நொச்சி உச்சியிற்கொண்டது உன் ஊர், அழுவநீர்வேலை அன்னது, ஆயிர வெள்ளம் அன்றே' என இயையும். (12)

**7085.** எழுமழுத் தண்டு வேல்வா
ளிலைநெடுஞ் சூல மென்றிம்
முழுமுதற் படைக ளேந்தி
யிராக்கதர் முனைந்த போது
தொழுதுதம் படைகள் முன்னிட்
டோடுவார் சுரர்க ளென்றால்
விழுமிது குரங்கு வந்து
வெறுங்கையாற் கொள்ளும் வென்றி.

'எழு, மழு, தண்டு, வேல், வாள்,
இலை நெடுஞ் சூலம், என்று இம்
முழுமுதற் படைகள் ஏந்தி,
இராக்கதர் முனைந்த போது,
தொழுது தம் படைகள் முன் இட்டு,
ஓடுவார் சுரர்கள் என்றால்,
விழுமிது, குரங்கு வந்து
வெறுங்கையால் கொள்ளும் வென்றி.

பொ :—எழுவும் மழுவும் தண்டமும் வேலும் வாளும் இலைத் தொழிலமைந்த நீண்ட சூலமும் என்னும் இத்தகைய குறை வில்லாத முதன்மை பெற்ற படைக்கலங்களைக் கையிற்கொண்டு (நம் படை வீரராகிய) அரக்கர்கள் (போரில்) முற்பட்டுச் சென்ற போது (தெய்வ ஆற்றல் மிக்க) தேவர்களே தம்முடைய படைக் கலங்களையெல்லாம் அவர் முன்னே தரையில் எறிந்து விட்டு(க் கை கூப்பி) வணங்கி(ப் புறமுதுகிட்டு) ஓடுவார்கள் என்றால், குரங்குகள் நம்மை எதிர்த்து வந்து (படைக்கலமில்லாத) வெறுங் கையினால் வெற்றி கொள்ளும் என்பது மிகவும் சிறந்ததாயிருக்கிறது ?

கு :—' இராக்கதர், முழுமுதற் படைகள் ஏந்தி முனைந்தபோது, சுரர்கள் தம் படைகள் முன் இட்டுத் தொழுது ஓடுவார் என்றால், குரங்கு வெறுங்கையால் வென்றி கொள்ளும் (என்பது) விழுமிது ' என இயைத்துரைக்க. முனைதல் - முந்திச் சென்று பொருதல். விழுமிது என்றது, இகழத்தக்கது என்னும் குறிப்புப்பட வந்தது.

(13)

மாலி கூறுதல்

7086. ஈதிவ ணிகழ்ச்சி யென்னா
வெரிவிழித் திடியி னக்குப்
பூதலத் தடித்த கைய
னிகும்பனென் றொருவன் பொங்க
வேதனைக் காம மந்தோ
வேரொடுங் கெடுத்த தென்றா
மாதுலத் தலைவன் பின்னு
மன்பினோர் மாற்றஞ் சொன்னான்

‘ஈது இவண் நிகழ்ச்சி’ என்று,
எரிவிழித்து, இடியின் நக்கு,
பூதலத்து அடித்த கையன்,
நிகும்பன் என்று ஒருவன் பொங்க,
‘வேதனைக் காமம் அந்தோ
வேரொடும் கெடுத்தது’ என்று,
மாதுலத் தலைவன் பின்னும்
அன்பின் ஓர் மாற்றம் சொன்னான்.

பொ :—(இலங்கையாகிய) இவ்விடத்திலே நிகழும் செயல் இத்தன்மையதாயுள்ளது’ என்று சொல்லி(க் கண்களில்) தீப்பொறி பறக்க நோக்கி, இடி (யிடிப்பது) போன்று (பேரொலிபடச்) சிரித்துத் தரையிலே ஓங்கி அறைந்த கையனாய் நிகும்பன் என்ற ஒருவன் சினம் மிகுந்து நிற்க, மாதுலத் தலைவனாகிய மாலி என்பான், ‘துன்பத்தையுண்டாக்கும் காமவுணர்வு அந்தோ (நம் குலத்தை) வேருடன் கெடுத்து :விட்டது’ என்று இரங்கிக்கூறி அன்பு மிகுதியால் பின்னும் ஒரு வார்த்தை கூறுவானாயினான்.

கு :—‘இவண் நிகழ்ச்சி ஈது’ என்றது, வீரம் செறிந்த அரக்கர் வாழும் படைவலிமிக்க இலங்கையாகிய இவ்விடத்திலே வெறுங் கையனவாகிய குரங்குகள் மதிலை வளைத்துக்கொள்ள அவற்றை வென்று போக்குதற்குரிய உபாயம் யாதென அமைச்சர் பலரொடும் ஆராய்தலாகிய இந்நிகழ்ச்சி நிகழ்வது அரக்கரது ஆற்றற்கு இழிவு தருவதாகும் என்னும் குறிப்பினது. பொங்குதல் - சினத்தாற் கிளர்ந்தெழுதல். வேதனை – துன்பம். மாதுலத் தலைவன் - (இராவணனுடைய) மாமன்மார்களுள் தலைவனாகிய மாலி. (14)

7087. புக்கெரி மடுத்திவ் வூரைப்
பொடிசெய்து போயி னாற்குச்
சக்கர முண்டோ கையிற்
றசமுகன் றலைக ளான
இக்கிரி பத்தின் மௌலி
யினமணி யிடந்து கொண்ட
சுக்கிரி வற்கு முண்டோ
சூலமும் வாளும் வேலும்.

'புக்கு எரிமடுத்து, இவ் ஊரைப்
பொடி செய்து போயினுற்குச்
சக்கரம் உண்டோ, கையில்?
தசமுகன் தலைகள் ஆன
இக் கிரி பத்தின் மௌலி
இனமணி இடந்து கொண்ட
சுக்கிரிவற்கும் உண்டோ,
சூலமும் வாளும் வேலும்?

பொ :—(இங்கே) புகுந்து (இலங்கையாகிய) இந்நகரத்தைத் தீக் கொளுவி(ச் சாம்பல்) துகளாக்கி மீண்டு சென்றவனுகிய அநுமானுக்குக் கையின் கண்ணே சக்கரப்படை யிருந்ததோ? தசமுகனுகிய வேந்தனுடைய தலைகளாகிய இந்த மலைகள் பத்திலும் (கவிக்கப் பெற்றமைந்த) முடியிற் பதிக்கப்பெற்ற மணிகள் பலவற்றையும் சேரப் பறித்துச் சென்ற சுக்கிரீவன் என்பானுக்கும் சூலம், வாள், வேல் ஆகிய படைக்கலங்கள் (கையில்) உள்ளனவோ?

கு :—'குரங்கு வெறுங்கையாற் கொள்ளும் வென்றி விழுமிது' என மாற்ருர் வலியை நிகும்பன் இகழ்ந்துரைக்கக் கேட்ட மாலியவான், :இராமன் பக்கத்தாரது வன்மையை இராவணன் முதலிய தன் பக்கத்தார் உணருமாறு கூறும் அறிவுரையாக அமைந்தது இச் செய்யுள். 'முன் இலங்கையிற் புகுந்து இந்நகரத்தைத் தீயினுற் சுட்டெரித்துச் சென்ற அநுமானுக்கும், இப்போது இவ் இராவணன் முடிமணிகளை வலிதிற் பறித்துச் சென்ற சுக்கிரீவனுக்கும் கையில் யாதொரு படைக்கலமும் இல்லையென்பதனை நாம் அறிந்த பின்னரும், கையிற் படைக்கலமில்லாத குரங்குகள் எனத் தாழ்வாக நினைத்து வானர சேனையை வலியற்றனவாகக் கருதுதல் தக்கதன்று' என முதியோனுகிய மாலியவான் இராவணன் முதலியோர்க்கு அறிவுறுத்தினுன் என்பதாம். (15)

7088. தொடைக்கலந் திராமன் வாளி
தோன்றுதன் முன்னந் தோன்ரு
இடைக்கல மருதல் செய்யு
முலையினு டன்னை யீந்து

படைக்கல முடைய நாமப்
படையிலாப் படையை யீண்ட
அடைக்கலம் புகுவ தல்லா
லினிப்புகு மரணு முண்டோ.

'தொடைக் கலந்து இராமன் வாளி
தோன்றுதல் முன்னம், தோன்ரு
இடைக்கு அலமருதல் செய்யும்
முலேயினுள் தன்னே ஈந்து,
படைக்கலம் உடைய நாம்,
அப் படை இலாப் படையை, ஈண்ட
அடைக்கலம் புகுவது அல்லால்,
இனிப் புகும் அரணும் உண்டோ ?

பொ :—இராமனுடைய அம்புகள் வில் நாணின்கண்ணே (ஊன்றிப்) பொருந்தி (நம்மை நோக்கி) வெளிப்படுதற்கு முன்னமே (கட்புலனுகித்) தோன்ருத (நுண்ணிய) இடைக்கு வருத்தத்தைச் செய்யும் தனங்களேயுடையாளாகிய சீதையை(த் திரும்ப)த் தந்து, ஆயுதங்களேயுடைய (அரக்கராகிய) நாம் ஆயுதங்கள் இல்லாத பகைவர் சேனேயை விரைவில் அடைக்கலமாக அடைவதன்றி, இனி (நாம் தீங்கின்றிச்) சென்று சேர்வதற்குரிய பிறிதோர் அரணும் உளதோ ?

கு :—தொடை – வில்லில் அமைந்த நாண், 'தொடுத்தாங்க வம்பு தொடை வாங்கி விடாத முன்னம்' (சீவக – 2320) என்பது சிந்தாமணி. வாளி – அம்பு. தோன்றுதல் - எய்யப்பட்டு வெளிப் படுதல். நம் கைகளில் மாற்ருருயிரைப் போக்குதற்குரிய ஆற்றல் வாய்ந்த ஆயுதங்கள் பல இருப்பினும் ஆயுதமில்லாத அவ்வானர சேனே நம்மேல் வரும்பொழுது நம் கையிலுள்ள ஆயுதங்கள் நம்மை அழியவிடாது காக்குந்தகையன அல்ல ஆதலால், அப்பகைவர் சேனேயை விரைந்து அடைக்கலம் புகுவதே நாம் உய்தற்குரிய உபாயமாகும் என்பான், 'படைக்கலம் உடைய நாம் அப்படையிலாப் படையை ஈண்ட அடைக்கலம் புகுவதல்லால் இனிப் புகும் அரணும் உண்டோ' என்ருன். ஈண்டுதல் - விரைதல். ஓகாரம், எதிர்மறை. (16)

## இராவணன் மாலியைக் கடிந்துரைக்க, அவன் ஒன்றும் பேசாது அடங்குதல்

**7089.** என்புழி மாலி தன்னை
யெரியெழ நோக்கி யென்பால்
வன்பழி தருதி போலாம்
வரன்முறை யறியா வார்த்தை
அன்பழி சிந்தை தன்னா
லடாதன வறைய லென்றான்
பின்பழி யெய்த நின்றா
னவன்பின்னைப் பேச்சு விட்டான்.

என்புழி மாலிதன்னை எரிஎழ
நோக்கி, 'என்பால்
வன்பழி தருதி போலாம்;
வரன்முறை அறியா வார்த்தை,
அன்பு அழி சிந்தை தன்னால்
அடாதன அறையல்' என்றான்,
பின்பழி எய்த நின்றான்;
அவன் பின்னைப் பேச்சு விட்டான்.

பொ :—என்று (மாலியவான்) கூறியபொழுது, பின்னே (பெரும்) பழியை அடையும் நிலையில் (தீயொழுக்கத்தில்) நின்றவனாகிய இராவணன், மாலியவானைத் தீப்பொறி பறக்க உருத்து நோக்கி ('என் வீரச் செயல் முதலாகத்) தொன்று தொட்டு வரும் எனது வெற்றிப் புகழினை உணராமையால் நீ கூறிய இவ்வார்த்தையினால் எனக்கு (நீக்குதற்கரிய) வன்மையுடைய பெரும்பழியை (நீயே தேடி)த் தருவாய் போலும். என்பால் அன்பு சிதைந்த நின்மனத்தால் (இவ்வாறு என் தகுதிக்கு) அடுக்காத பழிச் சொற்களைச் சொல்லாதொழிக' எனக் கடிந்துரைத்தான், (அது கேட்ட மாலியவானாகிய) அவனும் (தான் அதுபற்றிப்) பேசுவதை நிறுத்திவிட்டான்.

கு :—பின் பெரும் பழியினை எய்தாதவாறு மாலியவான் கூறிய நல்லுரையினைத் தனக்குப் பழி விளைக்கும் சொற்களாக இராவணன் பிறழவுணர்ந்தமையால், அவன் இனி எல்லாப் பழிகளிலும் மிக்க பெரும் பழியினை அடைதற்குரியவனாகி விட்டான் என்பார், 'பின்பழி எய்த நின்றான்' எனக் குறித்தார் ஆசிரியர். அவன் என்றது, மாலியவானை. (17)

## இராவணன், தன் சேனைகளை அணிவகுத்து நாற்றிசை வாயில்களையும் காத்து நிற்கப் பணித்தல்

**7090.** காட்டிய கால கேயர்
கொழுநிணக் கற்றை காலத்
தீட்டிய படைக்கை வீரச்
சேனையின் றலைவ தெள்ளி
யீட்டிய வரக்கர் தானை
யிருநூறு வெள்ளங் கொண்டு
கீட்டிசை வாயி னிற்றி
நின்பெருங் கிளையி னோடும்.

'காட்டிய கால கேயர்
கொழு நிணக் கற்றை காலத்
தீட்டிய படைக்கை வீரச்
சேனையின் தலைவ! தெள்ளி
ஈட்டிய அரக்கர் தானை
இருநூறு வெள்ளம் கொண்டு,
கீழ்த்திசை வாயில் நிற்றி,
நின்பெரும் கிளையினோடும்.'

பொ :—(தங்களது பேராற்றலைப் போர்க்களத்திற்) புலப் படுத்திக் காட்டிய காலகேயர் என்னும் பகைவர்களின் உடலில் கொழுவிய நிணத்தொகுதி வெளிப்பட்டுச் சொரியுமாறு (நன்கு) தீட்டிக் கூர்மை செய்யப்பட்டு வெற்றி விளைத்த ஆயுதங்களைக் கையிற் கொண்ட வீரம் மிக்க சேனையின் தலைவனே! (நீ) நின் பெரிய சுற்றத்தினருடன் தெரிந்தெடுக்கப் பெற்ற இருநூறு வெள் ளம் அரக்கர் சேனைகளையும் உடன்கொண்டு (இலங்கை நகரின்) கீழ்த்திசை வாயிலில் நிற்பாயாக.

கு :—இதுமுதல் ஐந்துசெய்யுட்கள் இராவணன் தன் படைகளை இலங்கை நகரின் நான்கு திசைகளிலும் அணிவகுத்து நிறுத்து மாறு கூறுவன. காலகேயர் என்பார் இராவணனுக்குப் பகைவ ராய் அவனுடைய படை வீரர்களால் வென்றழிக்கப்பட்டோர். கற்றை – தொகுதி. காலுதல் - சொரிதல்; வெளிப்படுதல். தெள் ளுதல் - குற்றம் நீக்கி நல்லனவாகத் தெரிந்தெடுத்தல். கிழக்கு + திசை = கீழ்த்திசை என வரற்பாலது, கீழ் என்னும் நிலை மொழியீற்றின் ழகரம், 'ஐம்மூன்றதாமுடன் வன்மை பின்வந்திடில் ஆறெடைந்தாம்' (வீரசோழிய - சந்திப் – 18) என்ற விதிப்படி

வல்லினம் வர டகரமாகவும், திசை என்னும் வருமொழி முதலிலுள்ள தகரம் 'னலமுன்றனவும் ணளமுன்டணவும் ஆகுந்தநக்கள்' (நன்னூல் - மெய்யீற் - 34) என்ற விதிப்படி டகரமாகவும் திரிந்து 'கீட்டிசை' என்ருகியது. (18)

7091. காலன்றன் களிப்புத் தீர்த்த
மகோதரக் காளையே போய்
மாலொன்று மனத்து வீர
மாபெரும் பக்க னேடும்
கூலங்கொள் குரங்கை யெல்லாங்
கொல்லுதி வெள்ள மான
நாலைம்ப தோடுஞ் சென்று
நமன்றிசை வாயி னண்ணி.

'காலன் தன் களிப்புத் தீர்த்த
மகோதரக் காளையே! போய்,
மால் ஒன்றும் மனத்து
வீர மாபெரும் பக்கனேடுங்
கூலம் கொள் குரங்கை எல்லாம்
கொல்லுதி—வெள்ளம் ஆன
நால்—ஐம்பதோடும் சென்று
நமன்திசை வாயில் நண்ணி.

பொ :—(உயிர்கொள்ளவல்ல) கூற்றுவனது செருக்கினை யொழித்த மகோதரன் என்னும் பெயருடைய காளைபோல்வானே! (பகைவரை) மயக்குறுத்தலில் வல்ல மனத்துடன் பொருந்திய வீரத்தினையுடைய மகாபாரிசுவனெடும் இருநூறு வெள்ளம் சேனையுடன் புறப்பட்டுச் சென்று இயமனது திக்காகிய தென்திசை வாயிலை அடைந்து (வலிய) வாலினைக் கொண்ட குரங்குகளையெல்லாம் கொன்று தீர்ப்பாயாக.

கு :—மகோதரனுகிய நீ கூற்றுவன் வெகுண்டு மேல்வரினும் எதிர் சென்று அவனது செருக்கினைப் போக்கவல்ல பேராற்றலுடையாய் என்பான், 'காலன்றன் களிப்புத் தீர்த்த மகோதரக்காளையே' என அழைத்தான். களிப்பு - செருக்கு. மால் – எதிர்ந்தாரை மயக்குறுத்தித் தோல்வியுறச் செய்யும் வன்மை. மகாபாரிசுவன் என்னும் வடமொழிப் பெயரை 'மாபெரும் பக்கன்' என மொழி பெயர்த்தமைத்தார் ஆசிரியர். "மகோதரக் காளையே ! மாபெரும் பக்க

னேடும் வெள்ளமான நாலேம்பதோடும் சென்று நமன்திசை வாயில் நண்ணி, குரங்கை யெல்லாம் கொல்லுதி' என இயைக்க. நமன் திசை – தென்திசை. கூலம் - வால். (19)

**7092.** ஏற்றமென் சொல்லி வல்வி
லிந்திரன் பகைஞ வந்நாட்
காற்றினுக் கரசன் மைந்தன்
கடுமைநீ கண்ட தன்றே
நூற்றிரண் டாய வெள்ள
நுன்பெரும் படைஞர் சுற்ற
மேற்றிசை வாயிற் சேர்தி
விடிவதன் முன்னம் வீர.

'ஏற்றம் என், சொல்லி? வல்வில்
இந்திரன் பகைஞ!—அந்நாள்
காற்றினுக்கு அரசன் மைந்தன்
கடுமை நீ கண்டது அன்றே?
நூற்று—இரண்டு ஆய வெள்ள
நுன்பெரும் படைஞர் சுற்ற,
மேல் திசை வாயில் சேர்தி
விடிவதன் முன்னம்—வீர!

பொ:—(நமது) பெருமையினை வாயாற் பேசி யாது பயன்? வலிய விற்படையினையுடைய இந்திரனுக்குப் பகைவனுகிய இந்திரசித்தே! (இங்குத் தூதனுக வந்த) அந்நாளில் வாயுவின் மகனுகிய அநுமனது (போர்) வேகம் நீ (நேரே) கண்டு அறிந்ததல்லவா? வீரனே! பொழுது விடிவதன் முன்னம் இருநூறு வெள்ளம் (அளவினராகிய) உன்னுடைய பெரிய படை வீரர்கள் (உன்னைச்) சூழ்ந்து நிற்க மேற்குத் திசை வாயிலிற் (சென்று) சேர்வாயாக.

கு:—ஏற்றம் சொல்லி என்? என இயையும். இந்திரன் பகைஞன் – இந்திரசித்து. காற்றினுக்கு அரசன் – வாயு; மைந்தன் – அநுமன். கடுமை - வேகம். நூற்றிரண்டாய வெள்ளம் என்பதனை, இரண்டு நூருய வெள்ளம் என மொழி மாற்றி யுரைக்க; நூற்றிரண்டு - நூருகிய இரண்டு, எனப் பண்புத் தொகையாகக் கொண்டு இருநூறு எனப் பொருளுரைத்தலும் அமையும். (20)

7093. இந்நெடுங் கால மெல்லா
மிமையவர்க் கிறுதி கண்டாய்
புன்னெடுங் குரங்கிற் சேறல்
புல்லிது புகழு மன்ருல்
அந்நெடு மூலத் தானே
யதனெடு மமைச்ச ரோடுந்
தொன்னெடு நகரி காக்க
விருபாக்க வென்னச் சொன்ஞன்.

'இந் நெடுங் காலம் எல்லாம்
இமையவர்க்கு இறுதி கண்டாய்;
புன் நெடுங் குரங்கின் சேறல்
புல்லிது; புகழும் அன்ருல்;
அந் நெடு மூலத்தானே
அதனெடும் அமைச்ச ரோடும்
தொல் நெடு, நகரி காக்க—
விருபாக்க!' என்னச் சொன்ஞன்.

பொ :—விருபாட்சனே! (எனது ஆட்சிக் காலமாகிய) இந்த நீண்ட காலம் முழுவதும் (பகைவராகிய) தேவர்கட்குச் சாதலை யொத்த துன்பத்தைச் செய்தாய். (அத்தகைய பெருவீரனுகிய நீ) அற்பத் தன்மை மிக்க குரங்குக் கூட்டத்தின்மேற் (போருக்குச்) செல்லுதல் மிகவும் சிறுமையுடையது; புகழும் ஆகாது. (ஆகவே) அந்த(ப் பழைய) நெடிய மூலபலச் சேனையோடும் அமைச்சர்களோடும் (இருந்து) பழமை வாய்ந்த நெடிய (இலங்கை) நகரத்தை(ப் பகைவர் உட்புகாதவாறு) காவல்புரிவாயாக.

கு :—விருபாட்சன் என்பான், இராவணனுடைய படைத் தலைவர்களுள் ஒருவன். (21)

7094. கடகரி புரவி யாடேர்
கமலத்தோ னுலகுக் கிப்பாற்
புடையுள புகுந்து கொண்டு
போர்பெருப் பொங்கு கின்ற

இடையிடை மிடைந்த சேனை
யிருநூறு வெள்ளங் கொண்டு
வடதிசை வாயில் காப்பேன்
யானென வகுத்து வீட்டான்.

"கடகரி, புரவி, ஆள், தேர் கமலத்தோன் உலகுக்கு இப்பால்
புடை உள புகுந்து கொண்டு போர் பெருப் பொங்குகின்ற
இடை இடை மிடைந்த சேனை இருநூறு வெள்ளம் கொண்டு,
வடதிசை வாயில் காப்பேன் யான்' என வகுத்து விட்டான்.

பொ :—தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமதேவனுடைய உலகத்துக்கு இப்புறம் உள்ள இடங்களிற் போர் செய்து வெற்றி கொண்டு (இனிமேலும்) போரைப் பெருதனவாய்ச் சினங் கிளர்ந்து திரிவனவாகிய மதம் பொருந்திய யானை, குதிரை, காலாள், தேர் என்று இடங்கள் தோறும் நெருங்கியுள்ள இருநூறு வெள்ளம் சேனைகளை உடன்கொண்டு (இலங்கையின்) வடக்கு வாயிலை யான் காப்பேன் என்று இவ்வாறு (இராவணன் தன் சேனைகளை) அணி வகுத்து ஏவினன்.

கு :—கமலத்தோன் உலகு - பிரமலோகம். கமலத்தோன் உலகுக்கு இப்பால் உள புடை பொருது கொண்டு போர் பெருப் பொங்குகின்ற கடகரி, புரவி, ஆள், தேர் இடையிடை மிடைந்த சேனை என இயைத்துரைக்க. கடகரி – மதம் பொருந்திய யானை. புரவி - குதிரை. ஆள் – காலாள்; வீரர். புடை – இடம். (22)

## கங்குல் நீங்கிப் பொழுது புலர்தல்

7095. கலங்கிய கங்கு லாகி
நீங்கிய கற்பங் காணும்
நலங்கிளர் தேவர்க் கேயோ
நான்மறை முனிவர்க் கேயோ
பொலங்கெழு சீதைக் கேயோ
பொருவலி யிராமற் கேயோ
இலங்கையர் வேந்தற் கேயோ
வெல்லார்க்குஞ் செய்த தின்பம்.

கலங்கிய கங்குல் ஆகி நீங்கிய கற்பம், காணும்
நலம் கிளர் தேவர்க்கேயோ, நான்மறை முனிவர்க்கேயோ,

பொலம் கெழு சீதைக்கேயோ, பொருவலி இராமற்கேயோ,
இலங்கையர் வேந்தற்கேயோ, எல்லார்க்கும் செய்தது இன்பம்.

பொ :—(மனம்) கலங்குதற்குக் காரணமான இராப்பொழுது (என அழைக்கப்படுவது) ஆகி (நீண்டு) கழிந்த ஊழிக்காலமானது, (தீயோர்களாகிய அரக்கர்கள் போரில் இறத்தலைக்) காணும் நலத்தால் மேம்பட்டு விளங்கும் தேவர்கட்கு மாத்திரந்தானா, நான்கு வேதங்களில் வல்ல முனிவர்கட்கு மாத்திரந்தானா, பொன்னின் ஒளி மேம்பட்டு விளங்கும் (அழகிய மேனியினையுடைய) சீதைக்கு மாத்திரந்தானா, (பகைவரைப்) பொருதழிக்கும் வன்மை வாய்ந்த இராமனுக்கு மாத்திரந்தானா, இலங்கை மன்னவனாகிய இராவணனுக்கு மாத்திரந்தானா, இவர்கள் எல்லார்க்குமே இன்பத்தை விளைவிப்பதாயிற்று.

கு :—கங்குல் ஆகி நீங்கிய கற்பம், தேவர், முனிவர், சீதை, இராமன், இலங்கையர் வேந்தன் (ஆகிய இவர்கள்) எல்லார்க்கும் இன்பம் செய்தது என்க. நீங்கியது கங்குல் அன்று ; ஊழிக்காலமே இவ்வாறு உலகத்தாரால் கங்குல் என்று அழைக்கப்படுவதாகிக் கழிந்தது என்பார், 'கலங்கிய கங்குல் ஆகி நீங்கிய கற்பம்' என்றூர். கற்பம் - ஊழி. இராவணன் முதலிய அரக்கர்கள் செய்யும் இன்னல்களுக்கு ஆற்றுதவர்களாய், 'இராமன் போர்மேற்கொண்டு இராவணனைப் பொருது அழிக்கும்நாள் எப்பொழுது வரும்' என்று நெடுங் காலம் எதிர்பார்த்திருக்கும் தேவர் முனிவர் முதலியோர்க்கும், இராவணனது அழிவை எதிர்நோக்கிப் பிரிவுத்துயரால் ஒரு கணமே ஓரூழியாகத் தோன்ற வருத்தமுறும் சீதை, இராமன் ஆகிய காதலர் இருவர்க்கும், சீதையை அடையமுயன்று பொருந்தாக் காமத்தால் அயர்ச்சியுறும் தூர்த்தனாகிய இராவணனுக்கும் அவ் இரவுப்பொழுதின் நீக்கம், அவர்தம் துன்பத்தினைத் தணித்து அவரெல்லார்க்கும் ஒருசேர இன்பத்தை விளைத்தது என்பதாம். கற்பம் நீங்கி இன்பஞ் செய்தது எனற்பாலது, நீங்கிய கற்பம் இன்பஞ் செய்தது எனக் கூறப்பட்டது. கற்பம், தான் நீங்குதலால் எல்லார்க்கும் இன்பத்தினை விளைவித்தது என்றவாறு. (23)

## கதிரவன் தோற்றம்

**7096.** அளித்தக வில்லா வாற்ற
லமைந்தவன் கொடுமை யஞ்சி
வெளிப்பட லரிதென் றுன்னி
வேதனை யுழக்கும் வேலை

களித்தவர் களிப்பு நீக்கிக்
காப்பவர் தம்மைக் கண்ணுற்
றொளித்தவர் வெளிப்பட் டென்னக்
கதிரவ னுதயஞ் செய்தான்.

அளித்தகவு இல்லா, ஆற்றல் அமைந்தவன் கொடுமை அஞ்சி,
வெளிப்படல் அரிது என்று உன்னி, வேதனை உழக்கும் வேலை,
களித்தவர் களிப்பு நீக்கி, காப்பவர் தம்மைக் கண்ணுற்று
ஒளித்தவர் வெளிப்பட்டென்ன,—கதிரவன் உதயம் செய்தான்.

பொ :—கருணையாகிய நற்குணம் இல்லாத (வெறும்) ஆற்றல் (மட்டும்) அமையப்பெற்ற கொடியோனாகிய இராவணனது கொடுமைக்குப் பயந்து (இனி, அவன் காண) வெளியே புறப்படுதல் இயலாது என்று நினைத்து அல்லற்பட்டு வருந்தும் நிலையில், செருக்குற்ற கொடுங்கோலரசராகிய பகைவரது செருக்கினைப் போக்கி (த்தம்மை)ப் பாதுகாக்கவல்ல பெருவேந்தரைக் கண்டு (முன்) ஒளிந்திருந்தோர் (அச்சமின்றி) வெளியே புறப்பட்டாற்போன்று சூரியன் (உதயமலையிலே) தோன்றுவானாயினான்.

கு :—அளித்தகவு - அளியாகிய பண்பு. அளி - அருள்; கருணை. எளியோர்பாற் சிறிதும் இரக்கமென்பதின்றி யார்கண்ணும் தன் வன்மையைப் புலப்படுத்தி வருத்துதலாகிய ஆற்றலொன்றுமே அமையப்பெற்ற கொடியோன் இராவணன் என்பார், 'அளித்தகவு இல்லா, ஆற்றல் அமைந்தவன்' என்றார். இல்லா என்னும் ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம், ஆற்றலமைந்தவன் என்னும் பெயர்கொண்டு முடிந்தது. அவனது கொடுமையாவது, வானத்தில் இயங்கிக் கதிர் பரப்பும் கதிரவனை அவன் தன் கடமையைச் செய்யவொட்டாது இலங்கை நகரத்து எல்லையுள் நுழையாவண்ணம் தடுத்தமை. 'பகலவன்மீது இயங்காமைக் காத்த பதியோன்' (3-10-11) என்பது தேவாரம். களித்தவர் - செருக்குற்றுத் தீமை புரியும் கொடுங்கோல் மன்னர். களிப்பு நீக்கிக் காப்பவர் - (கொடுங்கோலரது) செருக்கினை அடக்கி (த் தளர்ச்சியுற்ற குடிகளை)க் காக்க வல்ல நல்லற வேந்தர். ஒளித்தவர் - கொடுங்கோன்மையாளர்க்கு அஞ்சி ஓடி ஒளிந்த எளியோர். களித்தவர் இராவணனுக்கும், காப்பவர் இராமனுக்கும், ஒளித்தவர் கதிரவனுக்கும் உவமையாகக் கொள்க. செருக்குற்றுத் தீமை புரியும் கொடுங்கோலரசனது கொடுமைக்கு அஞ்சி ஒளித்திருந்தவர், அக்கொடியோனை ஒறுத்துத் தம்மைப் பாதுகாக்கவல்ல வேந்தனொருவனைக் கண்டு அச்சம் நீங்கி வெளிப்பட்டாற்போன்று, இராவணனுக்கு அஞ்சி யொடுங்கியிருந்த சூரியன், இராவணனை ஒறுத்தடக்கித் தன்னைப் பாதுகாத்தற்குரிய

இராமனைக் கண்டு அச்சம் நீங்கி வெளிப்பட்டான் என்று சொல்லும் படி உதயஞ் செய்தான் எனத் தற்குறிப்பேற்ற அணியமைய ஆசிரியர் புனைந்துரைத்தமை காண்க. "அவ் அரக்கனுக்கு ஒளிப்பான்போல வன்றனிக்குன்றுக்கப்பால் இரவியும் மறையப் போனான்" (7070) என முன்னர்த்தற்குறிப்பேற்ற உவமையணி பொருந்தக் கூறிய ஆசிரியர், இராவணனுக்கு அஞ்சி ஒளிந்த கதிரவன் தன் பகைவனை அழிக்கத்தக்க துணைபெற்று அச்சம் நீங்கி, உதயஞ் செய்தான் எனக் கூறிய அணியியைபு உணர்ந்து மகிழத் தகுவதாகும். (24)

## வானர சேனைகள் இலங்கையின் வாயில்களை வளைத்துக் கொள்ளுதல்

7097. உளைப்புறு மோத வேலை
யோங்கலை யொடுங்கத் தூர்ப்ப
அளப்பருந் தூளிச் சுண்ண
மாசைக ளலைப்பப் பூசல்
இளைப்பருந் தலைவர் முன்ன
மேவலி னெயிலை முற்றும்
வளைத்தனர் விடியத் தத்தம்
வாயில்க டோறும் வந்து.

**உளைப்புறும் ஓத வேலை ஓங்கு அலை ஒடுங்கத் தூர்ப்ப, அளப்ப அருந் தூளிச் சுண்ணம், ஆசைகள் அலைப்ப, பூசல் இளைப்ப அருந் தலைவர், முன்னம் ஏவலின், எயிலை முற்றும் வளைத்தனர்; விடிய, தத்தம் வாயில்கள் தோறும் வந்து.**

பொ :—போர்த்தொழிலில் இளைத்தல் இல்லாத (வானர சேனைத்) தலைவர்கள், பொழுது விடிந்ததும், (தாம் புறப்பட்டுச் செல்லுதலால் எழுந்த) புழுதியாகிய துகள்கள், ஒலிக்கும் இயல்புடைய நீர்ப்பெருக்கையுடைய கடலின் கண்ணே உயர்ந்து தோன்றிய அலைகள் ஒடுங்கி அடங்குமாறு (கடலைத்) தூர்த்து மேடாக்கவும் திசைகள் எங்கும் சென்று பரவிப் படியவும் முன் (இராமன்) ஏவிய வண்ணம் தங்கள் தங்களுக்கு வகுக்கப்பட்ட (இலங்கை நகர) வாயில்கள் தோறும் வந்து மதில் முழுவதனையும் வளைத்துக் கொண்டார்கள்.

கு :—பூசல் இளைப்ப அருந் தலைவர், விடிய, அளப்ப அருந்தூளிச் சுண்ணம், உளைப்புறும் ஓத வேலை ஓங்கு அலை ஒடுங்கத் தூர்ப்ப, ஆசைகள் அலைப்ப, முன்னம் ஏவலின் வாயில்கள் தோறும் வந்து

வளைத்தனர் என இயையும். உளைத்தல் - ஒலித்தல். ஓதம் = வெள்ளம். வேலை - கடல். (25)

## வானர சேனைகள் ஆரவாரிப்ப, சுக்கிரீவனும் இலக்குவனும் முன்செல்ல இராமன் எழுந்து செல்லுதல்

**7098.** தந்திர மிலங்கை மூதூர்
மதிலினைத் தழுவித் தாவி
அந்தரக் குலமீன் சிந்த
வண்டமுங் கிழிய வார்ப்பச்
செந்தனிச் சுடரோன் சேயுந்
தம்பியு முன்பு செல்ல
இந்திரன் ஞெழுது வாழ்த்த
விராமனு மெழுந்து சென்ருன்.

தந்திரம் இலங்கை மூதூர் மதிலினைத் தழுவித் தாவி,
அந்தரக் குலமீன் சிந்த, அண்டமும் கிழிய ஆர்ப்ப,
செந்தனிச் சுடரோன்சேயும் தம்பியும் முன்பு செல்ல,
இந்திரன் தொழுது வாழ்த்த; இராமனும் எழுந்து சென்ருன்.

பொ :—(மேற்கூறியவாறு இலங்கையின் மதிலை வளைத்துக் கொண்ட வானர) சேனையானது, இலங்கையாகிய பழமை வாய்ந்த நகரத்தின் மதிலைச் சூழ்ந்துகொண்டு வானத்திற் கூட்டமாகவுள்ள நட்சத்திரங்கள் சிதறி விழுமாறும் அண்டத்தின் மேற்பரப்பு கிழிந்து சிதையுமாறும் உயரத் தாவிக் குதித்து ஆரவாரித்து முழங்கச் செம்மை நிறம் வாய்ந்த ஒப்பற்ற கதிரவன் மைந்தனுகிய சுக்கிரீவனும் தன் தம்பி இலக்குவனும் (தனக்கு) முன்னே செல்லவும், வானேர் வேந்தனுகிய இந்திரன் தன்னை வணங்கி (நின்று) வாழ்த்தவும் இராமனும் (பாசறையைவிட்டு) எழுந்து (போருக்குப்) புறப்பட்டுச் சென்ருன்.

கு :—தந்திரம் - சேனை ; என்றது இங்கு வானர சேனையை. தந்திரம், இலங்கை மூதூர் மதிலினைத் தழுவி, அந்தரக்குல மீன் சிந்த, அண்டமும் கிழியத் தாவி ஆர்ப்ப, சுடரோன் சேயும் தம்பியும் முன்புசெல்ல, இந்திரன் தொழுது வாழ்த்த இராமனும் எழுந்து சென்ருன் என இயையும். அந்தரம் - வானம். குலமீன் - கூட்டமாக வுள்ள விண்மீன்கள். (26)

வானர சேனைகளால் வளைக்கப்பட்ட இலங்கையின் தோற்றம்

**7099.** நூற்கடற் புலவ ராலு
நுனிப்பரும் வலத்த தாய
வேற்கடற் றானை யான
விரிகடல் விழுங்கிற் றேனும்
கார்க்கடல் புறத்த தாகக்
கவிக்கடல் வளைந்த காட்சி
பாற்கட லழுவத் துள்ள
தொத்ததப் பதகன் மூதூர்.

நூற் கடல் புலவராலும் நுனிப்ப அரும் வலத்தது ஆய வேற்கடல் - தானை ஆன விரிகடல் விழுங்கிற்றேனும், கார்க்கடல் புறத்தது ஆக, கவிக்கடல் வளைந்த காட்சி, பாற்கடல் அழுவத்து உள்ளது ஒத்தது, அப்பதகன் மூதூர்.

பொ :—அந்தக் கொடுவினையாளனாகிய இராவணனுக்குரிய தொன்மை வாய்ந்த ஊராகிய இலங்கை நகரமானது. நூற்பரப்பாகிய கடலினை அளவிட்டறிந்த மதி வல்லோரான பேரறிஞர்களாலும் நுணுகி ஆராய்ந்துணர்தற்கு அரிய வன்மை படைத்ததாகிய வேற்படைத் தொகுதியைத் தன்னகத்தே கொண்ட (அரக்கர்) சேனையான விரிந்தகடலால் முன்னமே விழுங்கப் பெற்றிருந்ததாயினும், கருமை நிறம் வாய்ந்த (உவர் நீர்க்) கடல் தனக்குப் புறத்ததாகக் குரங்குச் சேனையாகிய கடலாற் சூழ்ந்து வளைக்கப்பட்டுள்ள தோற்றத்தால், பாற்கடற் பரப்பின் நடுவிலே அமைந்துள்ளது போன்று காணப்பட்டது.

கு :—அப்பதகன் மூதூர், தானையான விரிகடல் விழுங்கிற்றேனும், கார்க்கடல் புறத்தது ஆகக் கவிக்கடல் வளைந்த காட்சி, பாற்கடல் அழுவத்து உள்ளது ஒத்தது என முடிக்க. பதகன் — பாதகன்; கொடுந்தொழிலாளன்; என்றது, ஈண்டு இராவணனை. மூதூர் என்றது, அவனுக்குத் தொன்று தொட்டு உரிமையுடையதாகிய இலங்கையினை. கவி - குரங்கு. நுனித்தல் - நுண்ணிதின் உணர்தல். காட்சி - தோற்றம். காட்சியால் ஒத்தது என ஏதுப்பொருட்டாகிய மூன்றுருபு விரித்துரைக்க. இயல்பாகத் தன்னைச் சூழவுள்ள கருங்கடல் தனக்குப் புறத்தே யொதுங்க, வெண்ணிறத்தினராகிய வானர வீரர்களால் வளைத்துக் கொள்ளப் பெற்ற இலங்கை நகரமானது, பாற்கடலின் நடுவே அமைந்த பரப்பினையொத்துத் தோன்றியது என்பதாம். (27)

7100. அலகிலா வரக்கன் சேனை
யகப்பட வரியின் றானை
வலைகொலா மென்னச் சுற்றி
வளைத்தமா நகர மன்னோ
கலைகுலாம் பரவை யேழுங்
கால்கிளர்ந் தெழுந்த காலத்
துலகெலா மொருங்கு கூடி
யொதுங்கின வேயு மொக்கும்.

அலகு இலா அரக்கன் சேனை அகப்பட, அரியின் தானை, வலைகொலாம் என்ன, சுற்றி வளைத்த மாநகரம் மன்ஓ கலைகுலாம் பரவை ஏழும் கால்கிளர்ந்து எழுந்த காலத்து உலகு எலாம் ஒருங்கு கூடி, ஒதுங்கினவேயும் ஒக்கும்.

பொ :—(எண்ணி அளவிடுதற்கு அரிய) அளவில்லாத அரக்கனாகிய இராவணனுடைய சேனைகள் யாவும் தனக்குள்ளே அகப்பட்டு அடங்குமாறு விரிக்கப்பட்ட வலைதானோ இது என்று சொல்லும்படி (வானர சேனையினால்) சுற்றி வளைத்துக் கொள்ளப்பட்ட இலங்கை நகரமானது, சுறாமீன்கள் உலவும் கடல்கள் ஏழும் (சண்டமாருதம் என்னும்) பெருங்காற்றால் பொங்கி மேலெழுந்த ஊழிக் காலத்தில் உலகங்கள் யாவும் ஒன்றாகிச் சேர்ந்து (அவ் வெள்ளத்துக்குள்) ஒடுங்கியிருந்தனவற்றையும் ஒக்கும்.

கு :—அலகு - அளவு. அகப்படுதல் - உள்ளடங்குதல். அரி - குரங்கு. நகரம் என்பது எழுவாய். ஒக்கும் என்பது பயனிலை. மன்னும் ஓவும் அசைநிலை. கலை - மீன். கால் - காற்று; சண்டமாருதம். ஒதுங்குதல் - ஒடுங்குதல். எழுபது வெள்ளம் வானர சேனைகளும் ஏழு கடல்களை யொத்துச் சூழ்ந்திருக்க, அவற்றால் வளைக்கப்பட்டு அரக்கர் சேனையுடன் அதனகத்தே யடங்கிய இலங்கை நகரம், ஏழு கடல்களும் சண்டமாருதத்தாற் பொங்கி மீதெழுந்த ஊழியிறுதியில் உலகங்கள் யாவும் ஒருங்கு கூடி அக் கடலின் நடுவில் ஒடுங்கியிருந்த தோற்றத்தையும் ஒக்கும் என்றவாறு. (28)

# 13. அங்கதன் தூதுப் படலம்

இராமனது கட்டளையினை மேற்கொண்டு அங்கதன் இராவணன் பால் தூதாகச் சென்று மீண்ட செய்தியினைத் தெரிவிக்கும் படல மாதலின் அங்கதன் தூதுப் படலம் என்னும் பெயர்த்தாயிற்று. இப்படலம் 66-என்னும் எண்ணுள்ள சுவடியில் அங்கதப் பெருமாள் தூதுப் படலம் எனக் குறிக்கப்பெற்றுளது.

வானர சேனைகளுடன் இலங்கையை முற்றிய இராமபிரான் வடதிசை வாயிலில் நின்று இராவணனது வரவினை எதிர்பார்த் திருந்து, அவன் வாராமையால் 'தூதன் ஒருவனை இராவணனிடம் அனுப்பி, 'நீ இப்பொழுதாவது சீதையைச் சிறையினின்றும் விடு கின்றாயா?' என நமது கருத்தினைத் தெரிவித்தோமானால் அவன் அதற்குடன்படானாயின் அவனைப் போரிற் கொன்றொழித்தல் நமது கடமை என என் மனம் கருதுகின்றது. அதுவே அறமும் நீதியு மாகும்' என வீடணனை நோக்கிக் கூறினான். அதனைக் கேட்ட வீடணன் 'அச்செயல் அழகுடையதேயாகும்' எனத் தன் இசை வினைப் புலப்படுத்தினான். சுக்கிரீவன் 'அரசர் கடமை அதுவே' என்றான். அருகே நின்ற இலக்குவன், 'இன்னல் பல இழைத்த கொடியோனாகிய இராவணன்பால் இவ்வாறு இரக்கங்காட்டுவது மிகவும் தவறு. இலங்கையின் அரசுரிமையை வீடணனுக் குரிய தாகக் கொடுத்த சொல் தவறாதபடி இராவணன் முதலியோரைப் போரிற் கொன்றொழித்தலே இனிச் செய்யத்தக்கதாகும்' எனத் தன் வெகுளி தோன்றக் கூறினான். இராமன், இலக்குவன் கூறியவற் றைக் கேட்டுப் புன்முறுவல் செய்து 'நீ கூறிய அவற்றை நான் மறந்துவிடவில்லை. நீ கூறியபடிதான் முடியப்போகிறது. ஆயினும் பொறுமையினை மேற்கொண்டு அரசியல் அறநெறியைக் கடைப்பிடித் தொழுகுதலே வெற்றி பெறுதற்குரிய சிறந்த வழியாகும்' என அவனுள்ளத்திற்கிசையக் கூறினான். 'அநுமனை மீளவும் தூதாக அனுப்புவோமாயின், 'அவனைத் தவிரத் தூதாகச் சென்று மீளும் ஆற்றலுடையார் பிறர் இலர்' எனப் பகைவர் நம்மைக் கருதுதற்கு இடந்தந்ததாய் முடியும். எனவே ஒன்னார், வீரமே விளைப்பினும் தீதின்றி மீளவல்ல அங்கதனைத் தூதாக அனுப்புதலே தக்கது' எனக் கருதிய இராமன், அங்கதனை அழைத்து, "நம்பி, நீ பகைவன் பாற் சென்று, 'சீதையை விட்டுவிட்டு உனது உயிரைப் பெறுதல் நன்றோ? இல்லையாயின் உன் பத்துத் தலைகளும் அறுபட்டுருளும்படி போர்க்களம் புகுதல் நன்றோ? இரண்டினுள் ஒன்றைத் துணிந்து

கூறுக' எனச் சொல்லி, அவனது கருத்தினை அறிந்துவருக" எனக் கூறி அனுப்பினன். 'அநுமன் அல்லனுயின் நீயுள்ளாய்' என இராமனுற் குறிப்பிடப்பெறும் சிறப்புப்பெற்ற அங்கதனுகிய தூதன், கதிரவனுலும் கடக்கவொண்ணுத காவலையுடைய இலங்கை நகரத்தின் மதிலைத்தாண்டி, தன்னைக் கண்ட அரக்கர்கள் பலரும் 'இவன் அநுமனே' என்றெண்ணி அஞ்சியோட இலங்கை நகரத்தினுள்ளே புகுந்து படைவீரர்களை அணிவகுத்துப் போர்க்களத்திற்கு அனுப்புவதில் ஈடுபட்டிருந்த இலங்கை வேந்தனுகிய இராவணனைக் கண்டான்; அவனது வீரப்பொலிவினைக் கண்டு பெரிதும் வியந்து நின்ருன்; 'யாவராலும் எதிர்த்து நிற்கவொண்ணுத இவனது மகுட மணிகளைப் பறித்துக் கொணர்ந்த என் சிறிய தந்தையாகிய சுக்கிரீவன் வீரர் யாவரினும் வன்மையுடையவனே' என மகிழ்ந்தான். இராவணன் தன்னருகில் வந்துநின்ற அங்கதனை நோக்கி, 'இங்குள்ள அரக்கர்கள் உன்னைக் கொன்று தின்பதற்கு முன்னே நீ யார் என்பதனை எனக்கு விளங்கச் சொல்லுக' என வெகுண்டுரைத்தான். அது கேட்டு வாலி மைந்தனுகிய அங்கதன் வெளிப்பட நகைத்து, 'சீதைநாயகனும் வேதநாயகனும் மேல்நின்ற விதிக்கு நாயகனும் ஆகிய இராமபிரான் விடுத்த தூதன் யான். அவன் பணித்த சொற்களை உன்பாற் சொல்ல வந்தேன்' எனக் கூறினன்.

'உன்னைத் தூதனுக அனுப்பிய நரனே உலகநாதன்' எனக் கூறி நகைத்த இராவணன், அங்கதனை நோக்கி 'தூதாக வந்த நீ யாவன்' என வினவினன். 'இந்திரனுக்குப் புதல்வனும் முன்னெரு காலத்தில் இராவணன் என்னும் பெயருடையவனைத் தன் வாலினுற் பிணித்துக்கொண்டு மலைகள்தோறும் தாவிச் சென்றவனும் தேவர்கள் அமுதுண்ண மந்தர மலையாகிய மத்தினுற் பாற்கடலைக் கடைந்தவனும் ஆகிய வாலியின் மைந்தன் யான்' என விடை பகர்ந்தான் அங்கதன். அதுகேட்ட இராவணன் அங்கதனைநோக்கி, 'உன் தந்தையாகிய வாலி எனக்கு உற்ற நண்பனல்லவா? அவனுடைய புதல்வனுகிய நீ மானிடனுக்குத் தூதனுய் ஏவல் செய்தல் பழியாகும். அன்புடைய மைந்தனே! வானர குலத்தார்க்கு மன்னனுகும் சிறப்பினை நானே உனக்கு அளிக்கின்றேன். நல்லவேளையாக இங்கு வந்தாய். தந்தையைக் கொன்ருேன் பின்னே தலைநிமிர்ந்து கை வீசிப் பேதையாய் அடித்தொண்டு செய்து திரிந்தாய் என்ற குற்றத்தை என்னைச் சார்ந்தமையால் விட்டொழித்தாயாயினை. சீதையை எனக்குரியளாகப் பெற்றேன். உன்னை என் மகனுகவும் அடையப்பெற்றேன்: என்னுற் பெறுதற்கரியது யாது? அந்த மானிடர்களாகிய இராம இலக்குவர்கள் இன்ருே நாளையோ இறந்தொழிதல் உறுதி. உனக்குரிய கிட்கிந்தை யரசபதவியை உனக்கே யளித்துத் தேவர் முதலிய யாவரும் போற்ற நீ அரசு வீற்றிருக்கும்

படி நானே உனக்கு முடிசூட்டுகின்றேன்', எனத் தனது மகிழ்ச்சி தோன்ற மருட்டிக் கூறினன். அம்மொழியினைக் கேட்ட அங்கதன், கைகொட்டி நகைத்து இராவணனைப் பார்த்து, 'இலங்கையாகிய இவ்விடத்திலுள்ளாரனைவர்க்கும் இனி விளையவிருப்பது மரணமே என்பதனை முன்னுணர்ந்து உன் தம்பியாகிய வீடணன் உங்களை விட்டு நீங்கி எங்களிடத்தில் வந்து சேர்ந்துள்ளான். நீ வாயில் வந்தவாறு பேசி என்னை உன் வசப்படுத்த எண்ணுகின்ருய். நீ கொடுக்கும் அரச பதவியினைத் தூதனுகிய நான் பெற்றுக் கொள்வ தென்பது இழிந்த நாய் தரும் அரசாட்சியைச் சிங்கம் ஏற்றுக்கொள் வதனை யொக்கும்' எனக் கூறி இகழ்ந்து சிரித்தான். சினமுற்ற இராவணன் 'குரங்காகிய உன்னைக் கொல்லுதற்குப் படைக்கலங் களைத் தொட நான் விரும்பவில்லை. குறைந்த வாழ்நாளினனுகிய நீ வந்த காரியத்தை விரைவிற் சொல்' என்ருன். அங்கதனும் இராவணன்பால் கூறுமாறு இராமன் கூறியவற்றையெல்லாம் விரித்துக்கூறி, 'உனக்கு உறுதி பயக்கும் செயலை நோக்குவாயாயின் சீதையைச் சிறையினின்றும் விட்டு இராமபிரானைத் தொழுது வாழ் வாயாக. இல்லையேல் என்னைத் தொடர்ந்து போர்க்குப் புறப்படுக. இவ்விரண்டினுள் ஒன்றை மேற்கொள்ளாது நீ இலங்கையுள் ஒளிந் திருத்தல் உனக்குப் பழியாகும்' எனக் கூறினன். அது கேட்டு வெகுண்ட இராவணன், அங்கதனைப் பற்றிப் பிணிக்கும்படி அரக்கர் நால்வரை ஏவினன். அங்கதன், தன்னைப் பிணிக்க வந்த அரக்கர் களை ஒருசேரப் பற்றி வானின் மீதெழுந்து அவர்களைக் கோபுர வாயிலில் வீசியெறிந்து, 'இலங்கை நகரத்தீர், இராமனது சுடுசரம் விழுவதற்கு முன்னரே அனைவரும் புறத்தே சென்று தப்பிப் பிழை யுங்கள்' என்று சொல்லிவிட்டு இராமபிரானை யணுகி வணங்கி நின்ருன். அப்பொழுது இராமபிரான், 'இராவணனது உள்ளக் கருத்து யாது' என வினவ, 'முழுவதும் சொல்லி யாது பயன்? மூர்க்கனுகிய இராவணன் முடியணியப்பெற்ற தன் தலைகள் அறு பட்ட போதன்றித் தன் மனத்துக் கொண்ட பொருந்தாக் காமமாகிய ஆசையை விட்டொழிப்பான் அல்லன்' என முடித்துக் கூறினன் அங்கதன் என்பது இப்படலத்தின் பொருட் சுருக்கமாகும்.

பெருங் காப்பியங்களின் சிறப்புடைய அங்கங்களாக அமைவன வற்றுள் தூது என்பதும் ஒன்று. தூதர் என்போர் தம் அரசன் கூறியவற்றை வேற்று வேந்தரிடைச் சென்று கூறி இகல் நீக்கிக் கூட்டுதலும் பிரித்தலும் செய்ய வல்லவர்கள். சுற்றத்தாரிடத்தும் தன் வேந்தன்பாலும் மாருத பேரன்புடைமை, நற்குடிப்பிறப்பு, பகையரசரும் விரும்பும் பண்புடைமை, நுண்ணறிவு, அழகிய தோற்றம், ஆராய்ந்த சொல்வன்மை ஆகிய இவை தூதர்க்கு இன்றியமையாத பண்புகளாகும். கூறியது கூறுவான், தான்

வகுத்துக் கூறுவான் எனத் தூதர் இருதிறத்தர். தன் அரசன் வார்த்தையை அவன் சொல்லியவாறே வேற்றரசர்க்குச் சென்று கூறுவான், பொருளிலும் காமத்திலும் பற்றின்றித் தூயனுதலும், தன்னுயிர்க்கு இறுதி நேர்வதாயினும் தன்னரசன் கூறியவற்றைப் பகை வேந்தரிடம் அஞ்சாது எடுத்துரைக்கும் துணிவுடையனுதலும் வேண்டும் என்பர் திருவள்ளுவர். திருக்குறள் கூறும் தூதரியல் புக்குச் சிறந்த இலக்கியமாக அங்கதன் விளங்குந் திறத்தை இப் படலத்தில் கம்பர் இனிது புலப்படுத்தியுள்ளார்.

# 13. அங்கதன் தூதுப் படலம்

## வடதிசை வாயிலில் நின்று இராவணனை எதிர்நோக்கி யிருந்து அவனைக் காணாத இராமன், தான் கருதியதனை வீடணனுக்கு எடுத்துரைத்தல்

**7101.** வள்ளலும் விரைவி னெய்தி
வடதிசை வாயின் முற்றி
வெள்ளமோ ரேழு பத்துக்
கணித்தவெஞ் சேனை யோடும்
கள்ளனை வரவு நோக்கி
நின்றனன் காண்கி லாதான்
ஒள்ளிய துணர்ந்தே னென்னா
வீடணற் குரைப்ப தானான்.

வள்ளலும் விரைவின் எய்தி,
வடதிசை வாயில் முற்றி,
வெள்ளம் ஓர் ஏழு பத்துக்
கணித்த வெஞ் சேனையோடும்,
கள்ளனை வரவு நோக்கி
நின்றனன், காண்கிலாதான்,
'ஒள்ளியது உணர்ந்தேன்' என்னா,
வீடணற்கு உரைப்பதானான்.

பொ :—வண்மையிற் சிறந்தவனான இராமனும் ஓர் எழுபது வெள்ளம் என்று கணக்கிடப்பெற்ற வெம்மை மிக்க (வானர) சேனையுடனே விரைந்து சென்று (இலங்கையை) வளைத்துக்கொண்டு (வஞ்சனையாற் சீதையைக் கவர்ந்து சென்ற) திருடனாகிய இராவணனது வருகையை எதிர்பார்த்து வடதிசை வாயிலில் நின்றான்; (தான் எதிர்பார்த்தவண்ணம் இராவணன் வரக்) காணாதவனாய், 'ஒட்பமுடையதொரு செயலை உய்த்துணர்ந்தேன்' என்று (தன் அருகிலுள்ள) வீடணனுக்கு(ப் பின்வருமாறு) கூறுவானாயினான்.

கு :—வள்ளல் என்றது இராமனை; தன்கண் தீமை புரிந்த பகைவனிடத்தும் மாறாத பேரருளுடையனாய் அவனே தன் தவறுணர்ந்து திருந்தி உய்தற்கு வாய்ப்பளிக்க எண்ணினான் என்பார், வள்ளல் என்றார். எழுபது வெள்ளம் வானர சேனைகளும் விரைந்து சென்று

இலங்கையை முற்றுகையிட்டு வளைத்துக்கொள்ளுமாறு பணித்த இராமன், இலங்கையின் வடதிசை வாயிலில் பதினேழு வெள்ளம் சேனைகளுடன் வந்து தன் பகைவனாகிய இராவணனை எதிர்பார்த்து நின்றவன், அவன் வாராமையால், அந்நிலையில் தான் மேற்கொள்ளுதற்குரிய ஒட்பமுடைய செயலாக ஒன்றைத் தன் உள்ளத்தில் நினைந்து அந்நினைவினைத் தன் அருகில் நின்ற வீடணனுக்குப் பின் வருமாறு எடுத்துரைப்பானாயினன் என்பதாம். ஒள்ளியது - அறிவுடைமையினைப் புலப்படுத்துவதாய செயல். அஃதாவது, அறிவறைபோகிய தீயோனாகிய இராவணன்பால் மீண்டும் தூதனுப்பி அறிவுரை கூறியக்கால் அவன் அதனை யேற்றுச் சீதையைத் தந்து வணங்கினானாயின் அவனொடு போர் செய்தலைத் தவிர்ந்து மீளுதலாகிய அறச்செயல். ஒண்மை - அறிவுடைமை. (1)

**7102.** தூதுவ னொருவன் றன்னை
யிவ்வழி விரைவிற் றூண்டி
மாதினை விடுதி யோவென்
றுணர்த்தவே மறுக்கு மாகின்
காதுதல் கடனென் றுள்ளங்
கருதிய தறனு மஃதே
நீதியு மஃதே யென்றான்
கருணையி னிலைய மன்னான்.

'தூதுவன் ஒருவன் தன்னை
இவ்வழி விரைவில் தூண்டி,
"மாதினை விடுதியோ?" என்று
உணர்த்தவே, மறுக்கும் ஆகின்,
காதுதல் கடன் என்று உள்ளம்
கருதியது, அறனும் அஃதே;
நீதியும் அஃதே' என்றான்—
கருணையின் நிலையம் அன்னான்.

பொ:—தூதன் ஒருவனை இங்கிருந்து விரைவில் (இராவணன் பால்) அனுப்பி, 'நீ இப்போதாவது சீதையாகிய பெண்ணைச் சிறையினின்றும் விடுவிக்கின்றாயா? (விட்டாயாயின் உய்தி பெறலாம்) என்று (நமது கருத்தினைத்) தெரிவிக்கவே, (அவன் அதற்கு) உடன்

படாது மறுத்தானால், (பின்னர் அவனைக்) கொன்றொழித்தல் கடமையாகும் என்று என் மனம் எண்ணியது. அறத்தின் இயல்பும் அதுவே. அரசியல் நீதிமுறையும் அதுவேயாகும் என்று கூறினான், அருளென்னும் பண்புக்கு நிலைக்களமாக விளங்கும் இராமன்.

கு:—தன் தேவியை வஞ்சனையாற் கவர்ந்து சென்று பேரிடர் விளைத்த மாபாவியாகிய இராவணனிடத்தும் வெறுப்பின்றி அவனை எவ்வகையால் தூய்மையுறச் செய்து திருத்தி வாழ்விக்கச் செய்ய இயலுமோ அவ்வகையாலெல்லாம் முயன்று பார்த்தல் அறமெனக் கொண்ட அருளாளனாதல்பற்றி, இராமனைக் 'கருணையின் நிலையம் அன்னான்' எனக் குறித்தார் ஆசிரியர். அறியாமையாற் பெருந் தீமை புரிந்தோரையும் அருளாற் பொறுத்தல் என்பது பெரியோர்க் குரிய அறமாம் என்பான், 'அறனும் அஃதே' என்றும், பகைவரை அடர்க்கப்புகும் வேந்தர்கள், அன்னோர், கொடுத்தல், இன்சொற் சொல்லல், வேறுபடுத்தல் ஆகிய முதல் மூன்றுபாயங்களின் வழி வாராத வழியே ஒறுத்தலை மேற்கொள்ள வேண்டும் என்பது அரசியல் நீதியாதலின், இராவணன்பால் தூதனுப்பித் திருத்த முற் படுதலாகிய இச்செயல் அரசியல் நெறிமுறைக்கு ஒத்ததே என்பான், 'நீதியும் அஃதே' என்றும் கூறினான் இராமன். காதுதல் - கொல் லுதல். (2)

இதன்கண் அரசர்க்குரிய கடன், அறம், நீதி ஆகிய மூன்றும் குறிக்கப்பட்டன. காதுதல் கடன், (Duty) உணர்த்துதல் அறம், (Virtue) தூதனுப்புதல் நீதி, (Justice) இம்மூன்றுக்கும் நிலைக்கள மாவது கருணை என்க.

## இராமனது உரை கேட்ட வீடணனும் சுக்கிரீவனும் இலக்குவனும் தத்தம் கருத்தினைத் தெரிவித்தல்

7103. அரக்கர்கோ னதனைக் கேட்டா
னழகிற்றே யாகு மென்றான்
குரக்கினத் திறைவ னின்றான்
கொற்றவற் குற்ற தென்றான்
இரக்கம திழுக்க மென்றா
னிளையவ னினிநா மம்பு
துரக்குவ தல்லால் வேறோர்
சொல்லுண்டோ வென்னச் சொன்னான்.

அரக்கர்கோன் அதனைக் கேட்டான்,
'அழகிற்றே யாகும்' என்றான்;
குரக்கினத்து இறைவன் நின்றான்,
'கொற்றவற்கு உற்றது' என்றான்;
'இரக்கமது இழுக்கம்' என்றான்,
இளையவன்; 'இனி, நாம் அம்பு
துரக்குவது அல்லால், வேறு ஓர்
சொல் உண்டோ?' என்னச் சொன்னான்.

பொ :—அரக்கர்கட்கெல்லாம் வேந்தனும் (தகுதியைப் பெற்ற) வீடணன், (இராமன் கூறிய) அம்மொழியினைக் கேட்டான்; (தூதனுப்புதலாகிய இது) அழகிய நற்செயலே என்று (தன் இசைவினைத்) தெரிவித்தான். (அங்கு) நின்ற வானரகுல மன்னனாகிய சுக்கிரீவன், (இச்செயல்) வெற்றித் திறம் வாய்ந்த வேந்தராயினார்க்கு ஏற்புடையது என்று கூறினான். இளையோனாகிய இலக்குவன், (கொடியோனாகிய இராவணன்பால்) கருணை காட்டுவதென்பது (நமக்கு) இழிவு விளைப்பதாகும் என்று கூறினான்; நாம் இனிமேல் (பகைவன்மேல்) அம்பினைச் செலுத்திப் போர் விளைப்பதன்றி (அதனை விடுத்து அவனொடு சமாதானம் செய்து கொள்ளும் முறையில் தூதனுப்பி)ச் சொல்லுதற்குரியதாக ஏதேனும் உளதோ? (இல்லை) எனச் சொன்னான்.

கு :—இங்கு 'அரக்கர்கோன்' என்றது, வீடணனை. தமையனாகிய இராவணனை வெறுத்து வீடணன் இராமனைச் சரண்புக்க போது இராமன் அவனுக்கு இலங்கையின் ஆட்சியுரிமையினை வழங்கி அவனை அரக்கர் வேந்தனாக முடிபுனையச் செய்த சிறப்பு நோக்கி வீடணனை 'அரக்கர்கோன்' எனக் குறித்தார் ஆசிரியர். இராமனால் இலங்கையின் அரசுரிமையைப் பெற்ற வீடணனும் தனக்கு அரசுரிமை வேண்டும் என்னும் விருப்பின்றித் தன் தமையனாகிய இராவணன் போரில் மாளாது இராமனால் உய்தி பெறுதலையே நினைந்து, இராவணன்பால் தூதனுப்புதல் வேண்டும் என்னும் இராமனது கருத்திற்கு இசைந்தான் என்பார், 'அரக்கர்கோன் அதனைக் கேட்டான் அழகிற்றேயாகும் என்றான்' என்றார். குரக்கினத்தலைவன் - வானரகுல மன்னன்; சுக்கிரீவன். கொற்றவர்க்கு உற்றது - வேந்தராயினார்க்கு ஏற்புடைய செயல். இளையவன் - தம்பி; என்றது இலக்குவனை. 'இளையவன், இரக்கமது இழுக்கம் என்றான்; இனி நாம் அம்பு துரக்குவது அல்லால் வேறு ஓர் சொல் உண்டோ என்னச் சொன்னான்' என இயையும். இரக்கமது என்புழி அது பகுதிப் பொருள் விகுதி. இழுக்கம் - இழிவு. (3)

## இராவணன்பால் தூதனுப்பிச் சமாதானம் செய்து கொள்ளுதல் கூடாது என இலக்குவன் எடுத்துரைத்தல்

7104. தேசியைச் சிறையில் வைத்தான்
 றேவரை யிடுக்கண் செய்தான்
பூசுரர்க் கலக்க ணீந்தான்
 மன்னுயிர் புடைத்துத் தின்றான்
ஆசையி னளவு மெல்லா
 வுலகமுந் தானே யாள்வான்
வாசவன் றிருவுங் கொண்டான்
 வழியலா வழிமேற் செல்வான்.

'தேசியைச் சிறையில் வைத்தான்;
 தேவரை இடுக்கண் செய்தான்;
பூசுரர்க்கு அலக்கண் ஈந்தான்;
 மன்னுயிர் புடைத்துத் தின்றான்;
ஆசையின் அளவும், எல்லா
 உலகமும் தானே ஆள்வான்,
வாசவன் திருவும் கொண்டான்;
 வழி அலா வழிமேல் செல்வான்.

பொ:—(இராவணனாகிய கொடியோன்) ஒளிவடிவினளாகிய சீதாபிராட்டியை (வஞ்சனையாற் கவர்ந்து சென்று) சிறையில் வருந்துமாறு வைத்தனன்; தேவர்களைத் துன்புறுத்தினன்; அந்தணர்க்கு மனக்கலக்கத்தை யுண்டுபண்ணினன். நிலைபெற்ற உயிர்களைக் கொன்று (அவற்றின் உடம்புகளைத்) தின்று தீர்த்தான். (தன் பேராசையின் எல்லை வரையிலும்) திசைகளின் எல்லையளவும் எல்லாவுலகங்களையும் தான் ஒருவனே ஆளக் கருதியவனாய் இந்திரனுடைய செல்வத்தையெல்லாம் கவர்ந்து கொண்டான்; (நல்) வழியல்லாத (தீய) வழியிலே நடப்பவனாயினன்.

கு:—இது முதல் நான்கு செய்யுட்கள், இராவணன் செய்த முறைகேடான செயல்களை யெல்லாம் எடுத்துக் காட்டி, அத்தகைய தீயோன்பால் தூதனுப்பிச் சமாதானம் செய்து கொள்ளுதல் கூடாது என இலக்குவன் இராமனுக்கு எடுத்துக் கூறும் முறையில் அமைந்தன. தேசி - (கற்பின் திறமாகிய) ஒளியினைத் தனக்குரிய வடிவமாகப் பெற்றவள்; என்றது சீதையை. தேசு - ஒளி, புகழ். இடுக்கண் - துன்பம். அலக்கண் - மனக்கலக்கமாகிய துக்கம். பூசுரர் - நிலத் தேவர்; அந்தணர். ஆசை – திசை; விருப்பம் எனினும்

அமையும். வாசவன் - இந்திரன். வழியலாவழி - நெறியல்லா நெறி. (4)

**7105.** வாழியாய் நின்னை யன்று
வரம்பறு துயரின் வைகச்
சூழ்விலா மாயஞ் செய்துன்
றேவியைப் பிரிவு சூழ்ந்தான்
ஏழைபா லிரக்க நோக்கி
யொருதனி யிகன்மேற் சென்ற
ஊழிகாண் கிற்கும் வாணு
ளுந்தையை யுயிர்பண் டுண்டான்.

'வாழியாய்! நின்னை அன்று
வரம்பு அறு துயரின் வைக,
சூழ்வு இலா மாயம் செய்து, உன்
தேவியைப் பிரிவு சூழ்ந்தான்;
ஏழைபால் இரக்கம் நோக்கி,
ஒரு தனி இகன்மேல் சென்ற,
ஊழி காண்கிற்கும் வாழ்நாள்
உந்தையை உயிர் பண்டு உண்டான்.

பொ :—(உலகவுயிர்களை யெல்லாம்) வாழச் செய்பவனே! (மன்னுயிர்க்கெல்லாம் நல்லனுகிய) உன்னை (இங்ஙனம்) எல்லையற்ற பெருந்துன்பத்திலே அழுந்தும்படி, அன்றைய தினம் (மனத்தால்) நினைத்தற்கும் ஒவ்வாத தீய வஞ்சனைகளைச் செய்து, உன்னுடைய ஆருயிர்த்தேவியாகிய பிராட்டியை (நின்னைவிட்டு)ப் பிரித்தலாகிய தீவினையைச் செய்தான்; சீதையாகிய அவளது இரங்கத்தக்க இடர் நிலையினைக் கண்டு ஒருவனுகவே (அவனெடு) போர் மேற்சென்ற யுகங்கள் பலவற்றையும் (நெடிதிருந்து) காணவல்ல (நிறைந்த) வாழ்நாளையுடைய உன் தந்தையாகிய சடாயுவின் உயிரை முன்னரே கவர்ந்து கொண்டான்.

கு :—மன்னுயிர்களை யெல்லாம் தன்னருளால் துன்பமகற்றி வாழச் செய்தல் வேண்டித் தோன்றியருளிய தனி முதல்வன் நீயே என்பான் 'வாழியாய்' என அழைத்தான். உன்னை - மன்னுயிர்க்கெலாம் நல்லனுகிய உன்னை. அன்று என்றது, மூக்கறுபட்ட சூர்ப்பணகையின் சொற்கேட்டுச் சீதையைக் காமுற்ற தூர்த்தனுகிய இராவணன், தனக்குமுன் மாரீசனை மாயமானுகச் செல்லப்

பணித்துச் சீதை தங்கிய இலக்குடிலினின்றும் இராம இலக்குவரை விட்டு நீங்குமாறு செய்து தான் தவவேடத்தினனாய்ச் சீதையின் இருப்பிடத்தை யணுகி வஞ்சித்துக் கவர்ந்து சென்ற துன்ப நிகழ்ச் சிக்குரிய அத்தீய நாளினை. வரம்பு அறுதுயர் - எல்லையற்ற பெருந் துன்பம். சூழ்வு இலா மாயம் - கொடுமையே செய்து பழகியவர்களும் தம் மனத்தால் எண்ணுதற்கு இல்லாத கொடிய சூழ்ச்சி. பிரிவு சூழ்தல் - பிரித்தல். ஏழை என்றது அரக்கரது சூழ்ச்சியால் மேல் விளையவிருக்கும் தீமையினை யுணராது இலக்குவனைக் கடிந்து அனுப்பிவிட்டு இராவணனது சூழ்ச்சிக்கு ஆளாகிய சீதையை. இரக்கம் - கண்டோர் இரங்கி வருந்துதற்குரிய பேரிடர் நிலை. சடாயு என்ற பெயர், பல மயிர்த் தொகுதியைச் சேர்த்துத் திரித்து நீட்டினாற் போன்ற நெடிய வாழ்நாளையுடையவன் எனக் காரணப் பொருளில் வழங்குவதாதலின், அப்பெயர்க் காரணந் தோன்ற 'ஊழி காண்கிற்கும் வாழ்நாள் உந்தை' என்றான். உந்தை - உன் தந்தை; என்றது, இராமனுக்குத் தந்தையென உபசரித்துரைக்கப் படும் தகவுடைய சடாயுவை. சடாயு என்னும் கழுகரசன் இராமனால் தந்தையெனப் போற்றத்தகும் பெருமை வாய்ந்தவன் என்பதும், அப்பெரியோன் சீதையை மீட்டல் கருதி இராவணனை எதிர்த்துப் போர் உடற்றி இறந்த நிலையில் இராமன் அவனுக்கு மைந்தர் செய்தற்குரிய ஈமக்கடன்களைச் செவ்வனே செய்து நிறைவேற்றினான் என்பதும் ஆரணிய காண்டத்திற் பேசப்பட்டிருத்தல் காண்க. (5)

**7106.** அன்னவன் றனக்கு மாதை
விடிலுயி ரருளு வாயேல்
என்னுடை நாம நிற்கு
மளவெலா மிலங்கை மூதூர்
மன்னவ னீயே யென்று
வந்தடைந் தவற்கு வாயாற்
சொன்னசொ லென்னா முன்னஞ்
சூளுற வென்னந் தோன்றால்.

'அன்னவன் தனக்கு, மாதை
விடில், உயிர் அருளுவாயேல்,
"என்னுடை நாமம் நிற்கும்
அளவு எலாம் இலங்கை மூதூர்

மன்னவன் நீயே" என்று,
வந்து அடைந்தவற்கு வாயால்
சொன்ன சொல் என் ஆம்? முன்னம்
சூளுறவு என் ஆம்? தோன்றல்!

பொ :—புகழ்மிக்க தலைவனே! அத்தகைய கொடியோனாகிய இராவணனுக்கு (அவன்) சீதையைத் திரும்ப விட்டிடின் (அவன்பால் அருள்கூர்ந்து) உயிரை நல்குவாயானால், நின்னைச் சரணாக வந்தடைந்த வீடணனுக்கு, 'என்னுடைய பெயர் (இவ்வுலகில்) நிலைபெறும் காலம் முழுவதும் இலங்கையென்னும் பழமை வாய்ந்த பேரூர்க்கு வேந்தன் நீயே யாவாய்' என்று (உன்) வாயினாலே கூறிய உறுதிமொழி யாதாய் முடியும்? முன்னர் (தண்டக வனத்து முனிவர்க்குக் கூறிய) வஞ்சினம்தான் யாதாய் முடியும்?

கு :—அன்னவன் என்றது, மேற் செய்யுளிற் குறித்தவாறு இராமனுடைய தேவியை வஞ்சனையாற் கவர்ந்தும் அவனுடைய தந்தையெனத் தக்க சடாயுவின் உயிரைப் போக்கியும், தேவர்களையும் முனிவர்களையும் பலவாறு துன்புறுத்தியும் மன்னுயிர்களைக் கொன்று அவற்றின் ஊனைத் தின்றும் இவ்வாறு தீவினைகள் பலவற்றையும் அஞ்சாது செய்த கொடியோனாகிய இராவணன் என்னும் பொருள் தோன்ற நின்றது. வந்தடைந்தவன் - இராமன்பால் அடைக்கலமாக வந்து சேர்ந்த வீடணன். அவனுக்குச் சொன்ன சொல்லாவது, "ஏழினோ டேழாய் நின்ற உலகும் என்பெயரும் எந்நாள், வாழுநாள் அன்று காறும் வாளெயிற்றரக்கர் வைகும், தாழ் கடல் இலங்கைச் செல்வம் நின்னதே தந்தேன்" (கம்ப. யுத்த. வீடணன் அடைக்கலப் படலம்-142) என இராமன் கூறிய உறுதிமொழி. 'முன்னம் சூளுறவு' என்றது, 'ஆரறத்தினோடன்றி நின்றாரவர், வேரறுப்பன் வெருவன் மின் நீர்' (ஆரணிய-அகத்தியப்-22) எனத் தண்டகாரணியத்தில் வாழும் முனிவர்களை நோக்கி இராமன் கூறிய வஞ்சின மொழியை. சூளுறவு - வஞ்சினம்; சபதம். நின்வாய்மொழி என்றும் பொய்த்தலில்லாத நிலையில் அமைந்தது என்பான், 'வாயாற் சொன்ன சொல்' என்றான். (6)

**7107.** அறந்தரு தவத்தை யாயு
மருளினை லவற்றை முற்றும்
மறந்தனை யெனினு மற்றிவ்
விலங்கையின் வளமை நோக்கி

இறந்திது போத றீதென்
நிரங்கினை யெனினு மெண்ணிற்
சிறந்தது போரே யென்றான்
சேவகன் முறுவல் செய்தான்.

'அறம் தரு தவத்தை ஆயும்
அருளினால், அவற்றை முற்றும்
மறந்தனை எனினும், மற்று இவ்
இலங்கையின் வளமை நோக்கி,
"இறந்து இது போதல் தீது" என்று
இரங்கினை எனினும், எண்ணின்,
சிறந்தது போரே' என்றான் ;
சேவகன் முறுவல் செய்தான்.

பொ :—அறத்தினை விளைக்கும் தவநெறியை ஆராய்ந்து மேற்கொள்ளும் அருளுடைமை காரணமாக (முற்குறித்த) அந்நிகழ்ச்சிகளை மறந்து விட்டாய் என்றாலும், இந்த இலங்கை நகரத்தின் வளங்களைப் பார்த்து (அழகு வாய்ந்த) இந்நகரம் வீணே அழிந்து சிதைதல் தீயது என்று எண்ணி (நின் மனத்தில்) வருந்தினை என்றாலும் (முடிவாக) ஆராய்ந்து பார்க்குங்கால் (நின்னால் இப்பொழுது இன்றியமையாது மேற்கொள்ளுதற்குச்) சிறந்துரிய செயல் (இராவணனுடன்) போர் செய்தலாகிய இதுவொன்றே என்று (இலக்குவன், தன் கருத்தினை இராமனுக்கு எடுத்துக்) கூறினான். (அதுகேட்ட) பெருவீரனாகிய இராமனும் புன்சிரிப்புச் செய்தான்.

கு :—அறந்தரு தவம் என்றது, அறத்தை நெகிழாது கடைப்பிடித்தற்கேற்ற ஆற்றலை விளைக்கும் தவம் என்றவாறு. எல்லா அறங்களுக்கும் மூலமாக விளங்குவது அருள் ஆதலின் அத்தகைய அருளைப் பேணவேண்டும் என்னும் நோக்குடன் நீ கொடியோனாகிய இராவணன் செய்த பெருங் குற்றங்களையும் அவனையொத்த கொடியோர்களை அறவே யொழிப்பதாக முனிவர் முதலியோர்க்கு நீ கூறிய உறுதிமொழியையும் மறந்து இப்பொழுது அவனைத் திருத்தி உய்விக்கும் கருத்துடன் தூதனுப்பிச் சமாதானம் செய்துகொள்ள எண்ணுகின்றாய் என்பான், 'அறந்தரு தவத்தை ஆயும் அருளினால் அவற்றை முற்றும் மறந்தனை' என்றான். அவற்றை என்றது தேசியைச் சிறையில் வைத்தது முதலிய முன்னிகழ்ச்சிகளை. எல்லா அறங்களுக்கும் அருளே துணையாவதென்பது, 'நல்லாற்றானாடி யருளாள்க பல்லாற்றால், தேரினும் அஃதே துணை' (242) எனவரும் திருக்குறளானும், 'தயாமூல தன்மம் என்னும் தத்துவத்தின் வழி

நின்று சார்ந்தோர்க்கெல்லாம் நலங்கொடுக்கும் நம்பி' (6-20-6) எனவரும் அப்பர் அருள்மொழியாலும் இனிதுணரப்படும். வளமிக்க இலங்கையின் எழிலைக் கண்டு இந்நகரம் போரால் சிதைந்தழிதல் கூடாதென்று இரங்கிப் பகைவனொடு சமாதானம் செய்துகொள்ள எண்ணுகின்றாய் போலும் என்பான், 'மற்று இவ்விலங்கையின் வளமை நோக்கி இறந்திது போதல் தீது என்று இரங்கினை' என்றான். எவ்வகையால் ஆராய்ந்து பார்த்தாலும் இப்பொழுது நின்னால் விரைந்து செய்தற்குரிய சிறந்த செயல் இராவணனைப் போரிற் கொன்றொழித்தல் ஒன்றே என்பான், 'எண்ணிற் சிறந்தது போரே' என்றான் இலக்குவன். சேவகன் - வீரன்; இராமன். இராமன் தன் மனத்தில் முடிவாக எண்ணித் துணிந்த கருமமும் இலக்குவன் கூறிய வண்ணம் இராவணனைப் போரிற் பொருதழித்தலே ஆதலின் பெருவீரனாகிய இராமனும் இலக்குவன் கூறியதனைத் தன் புன்முறுவலால் ஒருவாறு புலப்படுத்தினான் என்பார், 'சேவகன் முறுவல் செய்தான்' என்றார் ஆசிரியர். (7)

### நீ கூறுவதே முடிவு ஆயினும் தூதனை அனுப்பி நமது கருத்தினைத் தெரிவித்தல் நீதியாகும் என இராமன் இலக்குவனுக்குக் கூறுதல்

**7108.** அயர்த்திலன் முடிவு மஃதே
யாயினு மறிஞ ராய்ந்த
நயத்துறை நூலி னீதி
நாந்துறந் தமைத னன்றோ
புயத்துறை வலிய ரேனும்
பொறையொடும் பொருந்தி வாழ்தல்
சயத்துறை யறனு மஃதே
யென்றிவை சமையச் சொன்னான்.

'அயர்த்திலன்; முடிவும் அஃதே;
ஆயினும் அறிஞர் ஆய்ந்த
நயத்துறை நூலின் நீதி
நாம் துறந்து அமைதல் நன்றோ?
புயத்துறை வலியரேனும்,
பொறையொடும் பொருந்தி வாழ்தல்
சயத்துறை; அறனும் அஃதே'
என்று இவை சமையச் சொன்னான்.

பொ :—(இலக்குவ! நீ கூறிய அவற்றையெல்லாம் யான்) மறந்தேனல்லேன். இறுதியாக நிகழப்போவதும் (நீ கூறிய) அப் போரேயாகும். ஆனாலும் (அரசியல் அறநெறிகளில்வல்ல) அறிஞர்கள் ஆராய்ந்து இயற்றிய நீதி நூல்களின் நெறி முறைகளை(அரச குலத்தினராகிய) நாமே விட்டு விலகுவது முறையாகுமா ? தோளாற்றலாற் செய்யும் போர்த் துறையில் வன்மை படைத்தவராயினும் (போற்றாரைப் பொறுத்தலாகிய) பொறுமைக் குணத்தினை மேற்கொண்டு வாழ்தல் என்பது, வெற்றிபெறுதற்குரிய (சிறந்த) வழியாகும் ; அறத்தின் இயல்பும் அதுவேயாகும் என்று இம்மொழிகளை (இலக்குவனது மனத்திற்) பதியுமாறு எடுத்துரைத்தான் (இராமன்).

கு :—அயர்த்தல் - மறத்தல். முடிவு – இறுதியாகச் செய்யத் தக்க உபாயம். அறிஞர் - தேவர்க்கும் அசுரர்க்கும் ஏற்ப அரசியல் நெறி முறைகளை ஆராய்ந்து நூல் செய்த வியாழன், வெள்ளி முதலியோர். நயத்துறை நூல் - அரசியல் நீதி நெறிகளை அறிவுறுத்தும் நூல்கள். நீதி - அந்நூல்களிற் சொல்லப்பட்ட நெறி முறைகள். ' நாம் ' என்றது, அந்நீதி நூல் விதிகளை நன்கு ஆராய்ந்து இடமும் காலமும் அறிந்து மேற்கொள்ளுதற்கேற்ற உணர்வும் ஒழுக்கமும் கைவரப் பெற்ற அரச பரம்பரையில் தோன்றிய நாம் என்னும் குறிப்புப்பட நின்றது. நன்றோ என்புழி ஓகாரம், வினா அளவாய் நில்லாது ' நன்றன்று ' என எதிர்மறைப் பொருளை உணர்த்தியது. புயத்துறை என்றது, தோள்வலியால் மேற்கொள்ளற்பாலதாய போர்த் துறையினை. பொறை - காரணம்பற்றியாவது அறியாமையினாலாவது ஒருவன் தனக்கு மிகை செய்தவழித் தானும் அதனை அவன்கட் செய்யாது அவன் செய்த தீமையினைப் பொறுத்துத்தாங்க வல்ல வன்மை. சயத்துறை – வெற்றிபெறுதற்குரிய வழி. சமைய – பொருந்த. (8)

### அங்கதனைத் தூதனுப்புதல் நலம் என இராமன் வீடணன் முதலியோரிடத்துத் தெரிவித்தல்

**7109.** மாருதி யின்னுஞ் செல்லின்
மற்றிவ னன்றி வந்து
சாருநர் வலியோ ரில்லை
யென்பது சாரு மன்றே
யாரினி யேகத் தக்கா
ரங்கத னமையு மொன்னார்
வீரமே விளைப்ப ரேனுந்
தீதின்றி மீள வல்லான்.

'மாருதி இன்னும் செல்லின்,
மற்று இவன் அன்றி வந்து
சாருநர் வலியோர் இல்லை
என்பது சாரும் அன்றே?
ஆர், இனி ஏகத்தக்கார்?
அங்கதன் அமையும்; ஒன்னர்
வீரமே விளைப்பரேனும்,
தீது இன்றி, மீள வல்லான்.

பொ :—மருத்தின் புதல்வனாகிய அநுமன் மீண்டும் (இராவணனிடத்துத் தூதாகச்) செல்வானாயின், 'இவ் அநுமனைத் தவிர (இங்கு) வந்து மீளும் ஆற்றலுடையார் (மாற்றார் சேனையிற்) பிறர் இல்லை' என்று பகைவரால் இழிவாகக் கருதப்படும் நிலை (நம் திறத்துச்) சாரும் அல்லவா? (அவ்வநுமனையன்றித் தூதாகச்) சென்று வருதற்குரியார் வேறு யாருளர்? (அதற்கு) அங்கதன் பொருத்தமுடையனாவான். பகைவர்களாய அரக்கர்கள் (அவன்பால் தம்முடைய) வீரச் செயல்களைச் செய்தாராயினும் (அதனால்) யாதோர் இடையூறுமின்றித் திரும்புதற்குரிய வன்மை படைத்தவன் அவன் (என்று இராமன் கூறினான்.)

கு :—மாருதி - மருத்தின் புதல்வன்; அநுமன். மருத்து - காற்று. சீதையின் இருப்பிடத்தைத் தேடியறிதற் பொருட்டு நம்மால் முன்னர் அனுப்பப் பெற்ற அநுமனை இப்பொழுதும் தூதாக அனுப்புவோமானால், 'இவனையன்றி ஆற்றல் மிக்க வீரர் பிறர் இராமன் பக்கல் இல்லை' என்று நம் பகைவராகிய அரக்கர்கள் நம் சேனையின் வன்மையைக் குறைவாக எண்ணும் இழிநிலையுளதாகும். ஆகவே இப்பொழுது அங்கதனைத் தூதாக அனுப்புதலே ஏற்புடையதாகும். பகைவராகிய அரக்கர்கள் அவன்பால் தம் வீரம் புலப்படுதற்குரிய பெரும் போர்களைச் செய்தாராயினும் அப்போரில் எத்தகைய இடையூறும் இன்றி வெற்றியுடன் மீளவல்ல ஆற்றல் வாய்ந்தவன் அங்கதன் என்று கூறி, இராமன் அங்கதனைத் தூதாக அனுப்பக் கருதிய தனது விருப்பத்தினை வீடணன் முதலியோர்க்குத் தெரிவித்தான் என்பதாம். (9)

### யாவரும் நன்று என இசைய, இராமன் அங்கதனை நோக்கி, தூது சென்று வருக எனக்கூற, அவன் பெருமகிழ்ச்சியுறுதல்

7110. நன்றென வவனைக் கூவி
நம்பிநீ நண்ண லார்பாற்
சென்றிரண் டுரையி னொன்றைச்
செப்பினை தருதி யென்றான்
அன்றவ னருளப் பெற்ற
வாண்டகை யலங்கற் பொற்றோள்
குன்றினு முயர்ந்த தென்றான்
மன நிலை கூறலாமே.

'நன்று' என, அவனைக் கூவி,
'நம்பி! நீ நண்ணலார்பால்
சென்று, இரண்டு உரையின் ஒன்றைச்
செப்பினை தருதி' என்றான்;
அன்று அவன் அருளப்பெற்ற
ஆண்தகை அலங்கல் பொன்தோள்
குன்றினும் உயர்ந்தது என்றால்,
மன நிலை கூறலாமே?

பொ :—(இராமனது சொற்கேட்டு அங்குள்ள வீடணன் முதலி யோர்) 'நல்லது' என்று இசைந்துரைக்க (இராமன்) அவ் அங்கதனை அழைத்து, 'விரும்பத்தக்க பெருங்குணங்களையுடைய வனே, நீ பகைவரிடத்துச் சென்று (யான் கூறும் இரண்டினையும்) சொல்லி, அவ்விரண்டினுள் (அவன் இசைந்ததாகிய) ஒன்றை (இங்கு வந்து) அறிவிப்பாயாக' என்று கூறினான். அப்போது அவ் இராமனால் ஏவியருளப் பெற்ற வீரர்களுட் சிறந்தோனாகிய அங்கத னுடைய வெற்றி மாலையணிந்த தோள்கள் (வானுறவுயர்ந்த) மலையைவிட ஓங்கி உயர்ந்தன என்றால் (அவை அவ்வாறு பூரித்து ஓங்குதற்குக் காரணமாயமைந்த அவனது) மனத்தின் மகிழ்ச்சி நிலை யினை இவ்வளவிற்றென எடுத்துரைத்தல் இயலுமோ?

கு :—'நன்று' எனக் கூறியவர்கள் வீடணன் முதலியோர். அவனை - அவ் அங்கதனை. கூவுதல் - அழைத்தல். நண்ணலார் - பகைவர். 'நம்பி நீ நண்ணலார்பாற் சென்று செப்பி இரண்டுரை யின் ஒன்றைத் தருதி' என இயையும். இரண்டுரை என்பன

இன்னவென்பது வருஞ் செய்யுளிற் கூறப்படும். தருதல் – அறிந்து வந்து கூறுதல். அவன் என்றது இராமனை. ஆண்டகை என்றது வீரருட் சிறந்தோனாகிய அங்கதனை. (10)

## 'இராவணனிடம் யான் கூறவேண்டுவது யாது' என வினவிய அங்கதனுக்கு இராமன் அவற்றைத் தொகுத்துரைத்தல்

**7111.** என்னவற் குரைப்ப தென்ன
வேந்திழை யாளை விட்டுத்
தன்னுயிர் பெறுத னன்றோ
வன்றெனிற் றலைகள் பத்தும்
சின்னபின் னங்கள் செய்யச்
செருக்களஞ் சேர்த னன்றோ
சொன்னவை யிரண்டி னொன்றே
துணிகெனச் சொல்லி டென்றான்.

'என் அவற்கு உரைப்பது?' என்ன,
"ஏந்திழையாளை விட்டுத்
தன் உயிர் பெறுதல் நன்றோ?
அன்று எனின், தலைகள் பத்தும்
சின்ன பின்னங்கள் செய்ய,
செருக்களம் சேர்தல் நன்றோ?
சொன்னவை இரண்டின் ஒன்றே
துணிக" எனச் சொல்லிடு' என்றான்,

பொ :—(அங்கதன் இராமனை நோக்கி) 'இராவணனாகிய அவனுக்கு (நான்) சொல்லத் தக்கது யாது?' என்று வினவ, "பொருந்திய அணிகலன்களையுடையாளாகிய சீதையை விட்டு விட்டு உன்னுடைய உயிரைப் பெற்றுப் பிழைத்தல் நல்லதா? அவ்வாறு (செய்தற்கு விருப்பம்) இல்லை யென்றால், (உன்) பத்துத் தலைகளையும் (அம்புகளால்) துண்டந் துண்டமாக அறுத்துச் சிதைக்க(நீ, எம்மைப்) போர்க்களத்தில் எதிர்ப்படுதல் நல்லதா? மேற்சொல்லிய இவ்விரு வழிகளில் (நீ மேற்கொள்ளக் கருதிய) ஒன்றையே துணிந்து கூறுக' என்று (இராவணனிடம்) சொல்வாயாக" என்று கூறினான் (இராமன்).

கு :—இராவணனிடத்து யான் கூறுதற்குரிய செய்தி யாது? என வினவிய அங்கதனை நோக்கி, நீ இராவணனை அடைந்து "நீ உயிர் பெற்று உய்திபெற எண்ணினையாயின் சீதையை விட்டு விடுக. உன் பத்துத் தலைகளும் அறுபட்டு அழிய விரும்பினையாயின் போர்க்களத் திற்குப் புறப்படுக. மேற்குறித்த இவ் இரு வழிகளில் ஒன்றையே துணிந்துரைப்பாயாக" எனக் கூறி அவன் கருத்தறிந்து வருமாறு பணித்தான் என்பதாம். 'தன்' என்னும் படர்க்கைச் சொல் ஈண்டு முன்னிலைக்கண் வந்தது. (11)

**7112.** அறத்துறை யன்று வீரர்க்
கழகுமன் றாண்மை யன்று
மறத்துறை யன்று சேம
மறைந்துறைந் தொதுங்கி வாழ்தல்
நிறத்துற வாளி கோத்து
நேர்வந்து நிற்கு மாகிற்
புறத்துற வெதிரே வந்து
போர்தரப் புகறி யென்றான்.

'அறத் துறை அன்று, வீரர்க்கு
அழகும் அன்று, ஆண்மை அன்று,
மறத் துறை அன்று, சேமம்
மறைந்து உறைந்து ஒதுங்கி வாழ்தல்;
நிறத்து உற வாளி கோத்து
நேர் வந்து நிற்கும் ஆகின்
புறத்து உற எதிரே வந்து
போர்தரப் புகல்தி' என்றான்.

பொ :—("இராவணனாகிய அவன் மேற்குறித்த இரண்டினுள் ஒன்றைச் செய்யாமல் தன் ஊர்க்குள்ளே) பாதுகாவலான இடத்தில் ஒளிந்து ஒடுங்கி வாழ்வதென்பது, அறத்தின் வழிப்பட்ட செயலும் ஆகாது; தறுகண்மையாளராகிய வீரர்க்கு அழகினைத்தரும் செயலும் ஆகாது; வீரமும் ஆகாது (போர்வீரர் மேற்கொள்ளுதற்குரிய) போர்த்துறைகளுள் ஒன்றும் ஆகாது. (ஆகவே) மார்பிற் பொருந்த (வில்லின்கண்ணே) அம்பினைத் தொடுத்து (எனக்கு) எதிரே வந்து (பொருது) நிற்க வல்லனாயின் (இலங்கை நகரத்தின்) புறத்தே எதிர்உற வெளிப்பட்டு வந்து (என்னொடு) போர் செய்யும்படி (அவனுக்கு) எடுத்துரைப்பாயாக" என்று (மீண்டும், அங்கதனை நோக்கிக்) கூறினான் (இராமன்).

கு:—பிறனொருவனுக்கு உரிமை பூண்டொழுகும் ஒருத்தியின் பெண்மையை விரும்பி அவளை வஞ்சித்துக் கவர்ந்து சிறை செய்த தோடன்றி, அவளுடைய கணவன் முன்னே தான் வெளிப்பட்டு நிற்க அஞ்சித் தன் ஊருக்குள்ளேயே மறைந்து வாழ்வது அறத்தின் இயல்புடன் பொருந்தி வாழவேண்டிய அரசனுக்கு அடாத பாவச் செயலாம் என்பான், 'சேமம் மறைந்துறைந்து ஒதுங்கி வாழ்தல் அறத்துறை அன்று' என்ருன். "அறனியலான் இல்வாழ்வா னென்பான் பிறனியலாள், பெண்மை நயவாதவன்" (திருக்குறள்-147) என்ருர் தெய்வப்புலவரும். தன்னொடு போர் செய்தலை வேண்டித் தன்னூர்ப்புறத்தே வந்து சூழ்ந்த மாற்ருருடன் போர் செய்தற்கு விரையாமல் ஊருக்குள்ளே பதுங்கி வாழ்வது ஆண்மை யுடைய வீரர்க்கு அழகு தரும் செயலும் ஆகாது வீரமுமாகாது என் பான், 'சேமம் மறைந்துறைந்து வாழ்தல் வீரர்க்கு அழகும் அன்று ஆண்மையன்று என்ருன். போர் செய்தற்கு விரைந்து வாராமையே யன்றிப் போர் செய்யும் விருப்பமின்றி மெலியராய்ப் பதுங்கியிருத்தல் என்பது போர் மறவர் மேற்கொள்ளும் போர்த்துறைகளுள் ஒன்றின் பாலும் அடங்காத செயலாம் என்பான், 'ஒதுங்கி வாழ்தல் மறத் துறையன்று' என்ருன். நிறம் - மார்பு. உற - பொருந்த. வாளி - அம்பு. கோத்தல் - வில் நாணில் தொடுத்து எய்தல். புகறி - புகல்தி; சொல்வாயாக. (12)

### அங்கதன் இராவணன்பால் தூதனுக விரைந்து சேறல்

**7113.** பார்மிசை வணங்கிச் சீயம்
விண்மிசைப் படர்வ தேபோல்
வீரன்வெஞ் சிலையிற் கோத்த
வம்பென விசையிற் போனன்
மாருதி யல்ல ஞகி
னீயெனு மாற்றம் பெற்றேன்
யாரினி யென்னே டொப்பா
ரென்பதோ ரின்ப முற்ருன்.

பார்மிசை வணங்கிச் சீயம்
விண்மிசைப் படர்வதே போல்,
வீரன் வெஞ் சிலையிற் கோத்த
அம்பு என, விசையின் போனன்,

"மாருதி அல்லன், ஆகின்,
நீ' எனும் மாற்றம் பெற்றேன்;
யார் இனி என்னோடு ஒப்பார்?'
என்பதோர் இன்பம் உற்றான்.

பொ:—அநுமனையன்றி (மற்றொருவரைத் தூதாக) அனுப்ப வேண்டுமானால் (அதற்கு அங்கதனாகிய) நீ (தகுதியுடையாய்) என்று (இராமபிரானால்) சொல்லப்படும் (புகழ்ச்) சொல்லை (யான்) பெற்றேன். (ஆதலால்) என்னை ஒப்பாவார் (பிறர்) யாருளர் என்று (தன் மனத்தின்கண்ணே) எண்ணி மகிழும் இன்ப நிலையினைப் பெற்றவனாகிய அங்கதன், நிலத்தின்மேல் வீழ்ந்து (இராமனைப்) பணிந்து, சிங்கமானது வானவீதியிற் செல்வதுபோலவும், வீரனாகிய இராமனது வில்லில் தொடுத்துவிடப்பட்ட அம்பினைப்போலவும் விரைந்து சென்றான்.

கு:—'மாருதி அல்லன் ஆகில் நீ' என்பது, இராமன் அங்கதனை நோக்கிக் கூறிய புகழ்ச்சியுரையாகும். அதனைத் தன்னுள்ளத்தில் எண்ணிய அங்கதன், 'யார் இனி என்னோடு ஒப்பார்' என்பது ஓர் இன்பம் உற்றான் என்க. 'இன்பம் உற்றான்' என்னும் வினைமுற்று, வினையாலணையும் பெயராய்ப் 'போனான்' என்னும் வினைகொண்டு முடிந்தது. இனிப் 'போனான்' என்பதனைப் பெயராக்கி, இன்பம் உற்றான் என்பதனை அதன் பயனிலையாக்கலும் ஒன்று. சீயம்-சிங்கம். நிலத்திலன்றி விசும்பிற் செல்லும் இயல்பு சிங்கத்திற்கு இல்லை. விண்மேற்படர்ந்து செல்லவல்லதோர் சிங்கம் உளதாயின் அத்தகைய சிங்கத்தினைப் போன்று அங்கதன் விசும்பின் வழியே சென்றனன் என்பார், 'சீயம் விண்மிசைப் படர்வதேபோல்......போனான்' என்றார். இஃது - இல்பொருள் உவமை. ஆண்மை மிக்க தோற்றத்துடன் அஞ்சாது சேறற்குச் சிங்கத்தினை உவமை கூறினார். தலைவன் குறித்த இலக்குத் தப்பாது சென்று அவன் குறித்த செயலை விரைவில் நிறைவேற்றி மீளவல்ல ஆற்றல்மிக்க தூதனாக விரைந்து சென்றான் என்பார், 'வீரன் வெஞ்சிலையிற் கோத்த அம்பென விசையிற் போனான்' என்றார். வீரன் என்றது இராமனை. இலக்குத் தவறாமைக்கும் செயல்முற்றி விரைந்து மீளுதற்கும் அம்பு உவமையாயிற்று. விசை - விரைவு. (13)

## கடத்தற்கரிய இலங்கை மதிலைக் கடந்த அங்கதன் இராவணனது இருக்கையினை அடைதல்

**7114.** அயில்கடந் தெரிய நோக்கு
மரக்கரைக் கடக்க வாழித்
துயில்கடந் தயோத்தி வந்தான்
சொற்கட வாத தூதன்
வெயில்கடந் திலாத காவன்
மேருவின் மேலு நீண்ட
எயில்கடந் திலங்கை யெய்தி
யரக்கன திருக்கை புக்கான்.

அயில் கடந்து எரிய நோக்கும்
அரக்கரைக் கடக்க, ஆழித்
துயில் கடந்து அயோத்தி வந்தான்
சொல் கடவாத தூதன்,
வெயில் கடந்திலாத காவல்,
மேருவின் மேலும் நீண்ட
எயில் கடந்து, இலங்கை எய்தி,
அரக்கனது இருக்கை புக்கான்.

பொ :—(எதிர்ந்தாரது உயிரைக் கொள்ளும் திறத்தில்) வேற்படையினையும் வென்று தீப்பொறி பரக்க நோக்கும் (கடுங்கண்ணராகிய) இராக்கதர்களை வென்று அழித்தற் பொருட்டு, (த்திருப்பாற்) கடலில் (தான் கொண்டிருக்கும்) அறிதுயிலை நீங்கி அயோத்தி நகரத்திலே (தசரதனுக்குப் புதல்வனாகத்) திருவவதாரம் செய்த (திருமாலாகிய) இராமபிரானது சொல்லினைப் பிறழாது கடைப்பிடிக்க வல்ல தூதனாகிய அங்கதன், கதிரவனாலும் கடக்கவொண்ணாத காவலையுடையதாய் மேருமலையினும் உயர்ந்து நீண்ட மதிலைத் தாண்டி இலங்கை நகரத்தினுள்ளே புகுந்து இராவணனது இருப்பிடத்தை அடைந்தான்.

கு :—இராக்கதர்களுடைய கடுங்கண் நோக்கம் வேற்படையினுங் கொடுமையுடையதாய் எதிர்ந்தாருயிரைச் சுட்டு நீறுக்கும் வெம்மையுடையன என்பார், 'அயில் கடந்து எரிய நோக்கும் அரக்கர்' என்றார். அயில் - வேல். கடத்தல் - வென்று மேம்படுதல். ஆழி - கடல்; என்றது திருப்பாற்கடலை. திருப்பாற் கடலில் அறிதுயிலமர்ந்த காத்தற் கடவுளாகிய திருமாலே தீயோராகிய அரக்கரையழித்து நல்லோரைப் பாதுகாத்தற் பொருட்டு இராமனாகத் திருவவ-

தாரஞ் செய்தான் என்பார், ‘அரக்கரைக் கடக்க, ஆழித்துயில் கடந்து அயோத்தி வந்தான்’ என்ருர். பகைவரால் தனக்கு வரும் துன்பத்திற்கு அஞ்சித் தன் வேந்தனுக்குத் தாழ்வுதரும் வார்த்தையை வாய் சோர்ந்தும் சொல்லாதவனுய், வேந்தன் சொல்லி விட்ட வார்த்தையை அவன் சொல்லியவண்ணமே மாற்றரசன்பால் எடுத்துரைக்கவல்ல தூய்மையும் துணைமையும் துணிவுடைமையும் எனத் தூதர்க்குச் சொல்லிய நல்லியல்புகள் யாவும் ஒருங்கு வாய்க்கப் பெற்ற இராமதூதன் அங்கதன் என்பது புலப்படுத்துவார், ‘அயோத்தி வந்தான் சொற்கடவாத தூதன்’ என்ருர். “தூய்மை துணைமை துணிவுடைமை யிம்மூன்றின், வாய்மை வழியுரைப்பான் பண்பு” (688), “விடுமாற்றம் வேந்தற் குரைப்பான் வடுமாற்றம் வாய்சோரா வன்கணவன்” (689.), “இறுதி பயப்பினும் எஞ்சா திறைவற், குறுதி பயப்பதாந் தூது” (690.) எனவரும் திருக்குறட் பாக்கள் இங்கு நினைக்கத்தக்கனவாகும். வேற்று வேந்தரிடைச் செல்லத்தக்க தூதர்கள், தான் வகுத்துக் கூறுவான், கூறியது கூறுவான் என இருவகைப்படுவர் என்பதும், அவ்விரு திறத்தாருள் கூறியது கூறுவானுகச் சென்றவன் அங்கதன் என்பது புலப்பட, ‘அயோத்தி வந்தான் சொற்கடவாத தூதன்’ என்ருர் எனினும் அமையும். (14)

## இராவணனைக் காணுதல்

**7115.** அழுகின்ற கண்ண ராகி
யநுமன்கொ லென்ன வஞ்சித்
தொழுகின்ற சுற்றஞ் சுற்றச்
சொல்லிய துறைக டோறும்
மொழிகின்ற வீரர் வார்த்தை
முகந்தொறுஞ் செவியின் மூழ்க
எழுகின்ற சேனை நோக்கி
யியைந்திருந் தானைக் கண்டான்.

அழுகின்ற கண்ணர் ஆகி,
‘அநுமன்கொல்?’ என்ன அஞ்சித்
தொழுகின்ற சுற்றம் சுற்ற,
சொல்லிய துறைகள் தோறும்

மொழிகின்ற வீரர் வார்த்தை
முகம்தொறும் செவியின் மூழ்க,
எழுகின்ற சேனை நோக்கி,
இயைந்து இருந்தானைக் கண்டான்.

பொ :—(அங்கதனாகிய தன்னைக் கண்ட நிலையில், 'இவன் முன்னர் நம் இலங்கையிற் புகுந்து வீரர் பலரையும் கொன்று ஊரினைத் தீக்கொளுவிச் சென்ற) அநுமன்தானோ? என்று மனம் நடுங்கி (இவனால் நமக்கு எத்தகைய தீங்கு விளையுமோ என்று தம்பால் தோன்றிய) அழுகையினை (த் தம் கண்ணீரால்) புலப் படுத்தும் கண்களையுடையராய் அஞ்சி (த் தன்னை) வணங்கிய சுற்றத் தாராகிய அரக்கர்கள் சூழ்ந்து நிற்ப, (நூல்களில்) விரித்துரைக்கப் பட்ட போர்த்துறைகளில் வல்ல வீரர்கள் அவ்வத்துறைகள் தோறும் ஆய்ந்து கூறும் மொழிகள் (தன்னுடைய) பத்து முகங்களிலும் அமைந்த செவிகளிலே சென்று பதியவும் (புறத்தே முற்றியுள்ள பகைவர்களை எதிர்த்துப்) புறப்படும் தன் சேனைகளை (ஒப்பு) நோக்கிய வண்ணம் (போர்த்தொழிலிற் கருத்துடையனாய்ப்) பொருந்தியிருந்த இராவணனைக் கண்டான் (அங்கதன்).

கு :—தூதனாகச் செல்லும் அங்கதன், இலங்கையின் மதிலைத் தாண்டி, இராவணன் அரசு வீற்றிருக்கும் இடத்தை அணுகியபோது அவனைக் கண்ட இராவணனுடைய சுற்றத்தாராகிய அரக்கர்கள், 'முன்னே இவ்விலங்கை நகரத்தினைத் தீக்கொளுவிச்சென்ற அநுமன் என்பவன் இவன்தானோ' என்று அஞ்சி நடுங்கிக் கண்ணீர் சிந்த அழுதுகொண்டு ஓடித் தம் வேந்தனாகிய இராவணனைத் தஞ்சம் அடைந்து அவனைத் தொழுது சுற்றி நின்றனர் என்பார், "அநுமன் கொல், என்ன அஞ்சி, அழுகின்ற சுற்றம் சுற்ற" என்றார். சுற்ற, மூழ்க, நோக்கி, இயைந்திருந்தான் என இயையும். இயைந்திருந் தான் என்றது, இராவணனை. கண்டான், அங்கதன். (15)

## இராவணனது ஆற்றலைக் கண்டு வியந்து நிற்றல்

**7116.** கல்லுண்டு மரமுண் டேழைக்
கடலொன்றுங் கடந்தே மென்னுஞ்
சொல்லுண்டே யிவனை வெல்லத்
தோற்றுமோர் கூற்று முண்டே

எல்லுண்ட படைகைக் கொண்டா
னெதிருண்டே யிராமன் கையில்
வில்லுண்டே யுண்டென் றெண்ணி
யாற்றவும் வியந்து நின்றான்.

'கல் உண்டு; மரம் உண்டு; ஏழைக்
கடல் ஒன்றும் கடந்தேம் என்னும்
சொல் உண்டே; இவனை வெல்லத்
தோற்றும் ஓர் கூற்றும் உண்டே?
எல் உண்ட படை கைக்கொண்டான்
எதிர் உண்டே? இராமன் கையில்
வில் உண்டே உண்டு' என்று எண்ணி,
ஆற்றவும் வியந்து நின்றான்.

பொ:—(மாற்றாரைப் பொருதழித்தற்குக் கருவியாக வானர ராகிய எம்மவர்க்கு மலையிற் கற்கள் உண்டு; மரங்களும் உண்டு; (இவற்றைத் துணையாகக் கொண்டு அணைகட்டி) வலிய கடல் ஒன்றையும் கடந்துவிட்டோம் என்று சொல்லிக் கொள்ளுதற்குரிய (புகழ்ச்) சொல்லும் (எமக்குரியதாய்) உளது. (ஆயினும்) இவ் இராவணனை வெற்றி கொள்ளுதற்கென்று வெளிப்படத் தோன்றி நிற்கும் இயமனும் உளனோ? ஒளிமிக்க படைக் கலங்களைக் கையிற் கொண்டவனாகிய இவனுக்கு நேரே எதிர்த்து நின்று பொரும் படையும் உளதோ? (நமக்கு வெற்றியளிக்கும் திறத்தில்) இராமன் கையில் விற்படை உள்ளது; (ஆதலால், நம் திறத்து வெற்றியும் நிச்சயமாக) உளதாயிற்று' என்று (தனக்குள் எண்ணி) இராவணனது பேராற்றலை மிகவும் வியந்து நின்றான் (அங்கதன்).

கு:—கற்களும் மரங்களும் வானர வீரர்களாகிய தம்மவர்க்குரிய படைக்கலங்களாக நிரம்ப உள்ளன என்பான், 'கல்லுண்டு மரமுண்டு' என்றான். எங்களாற் கடக்கப்பட்ட இக்கருங்கடல் இலங்கையின் பெருவன்மையினை நோக்குங்கால் அந்நகரத்திற் கமைந்த அரண் என்று சொல்ல வொண்ணாத சிறுமையுடையது என்பான், 'ஏழைக்கடல்' என்றான். கூற்றுவனும் இவனுக்கு எதிரில் வெளிப்பட்டு நின்று பொருதற்கு அஞ்சுமாறு அமைந்தது, இவ் இராவணனது பேராற்றல் என்பான், 'இவனை வெல்லத் தோற்றும் ஓர் கூற்றும் உண்டே' என்றான். 'உண்டே' என்புழி வினாப் பொருட்டாய ஏகாரம் ஈண்டு இல்லை என எதிர்மறைப் பொருள் தந்து நின்றது. இவன் ஒளிமிக்க படைக்கலங்களைக் கையிற்கொண்டு பொருதற்கு முற்படுமாயின் இவனை எதிர்த்து நிற்றல் என்பது

இவ்வுலகில் யாவராலும் இயலாத செயலாம் என்பான், 'எல்லுண்ட படை கைக் கொண்டான் எதிர் உண்டே' என்றான். எல் - ஒளி. ஆற்றல்மிக்க விற்படை இராமன் கையில் இருத்தலால் அஃ தொன்றே இவனை வென்றழித்தற்குரிய வன்மையுடையதாதலின் அதன் சார்புபற்றி இவனை வென்றுவிடலாம் என்ற துணிபு என் மனத்து உளதாயிற்று என்று எண்ணியவனாய், இராமனையன்றிப் பிறர் எவராலும் வெல்ல ஒண்ணாத இராவணனது பேராற்றலை அங்கதன் அவனைக் கண்ட நிலையில் மிகவும் வியந்து பாராட்டினான் என்பார், 'இராமன் கையில் வில் உண்டே, உண்டு' என்று எண்ணி 'ஆற்றவும் வியந்து நின்றான்' என்றார். (16)

## 'இவனை வெல்லுதல் இராமனாலன்றி வேறொருவராலும் இயலாது' எனல்

**7117.** இன்றிவன் றன்னை யெய்த
நோக்கினேற் கெதிர்ந்த போரில்
வென்றவென் றாதை மார்பில்
வில்லின்மேற் கணையொன் றேவிக்
கொன்றவன் றானே வந்தா
னென்றுடன் குறிப்பி னல்லால்
ஒன்றிவன் றன்னைச் செய்ய
வல்லரோ வுயிர்க்கு நல்லார்.

'இன்று இவன் தன்னை எய்த
நோக்கினேற்கு, எதிர்ந்த போரில்
வென்ற என் தாதை மார்பில்
வில்லின்மேல் கணை ஒன்று ஏவிக்
கொன்றவன் தானே வந்தான்
என்று உடன் குறிப்பின் அல்லால்
ஒன்று இவன் தன்னைச்
செய்யவல்லரோ, உயிர்க்கு நல்லார்?

பொ :—இப்போது இவ் இராவணனைக் கூர்ந்து நோக்கிய எனக்கு, (திக்கு விசயம் செய்யும் நிலையில் இவன்) எதிர்ப்பட்டு நிகழ்த்திய போரில் (இவனை) வெற்றிகொண்ட என் தந்தையாகிய வாலியின் மார்பில் ஒரே அம்பினைச் செலுத்திக் கொன்ற (ஆற்றல் மிக்கோனாகிய) இராமன் தானே (இப்பொழுது இவனது உயிரைக் கவர்தற்கு) வந்துள்ளான் என்று (இச் செய்தியையும்) உடன்

வைத்து எண்ணி அமைதியடைவதொன்றைத் தவிரத் தம்முயிர்க்கு நன்மையை நாடுவோர் (யாவராயினும்) இவ்விராவணனை நெருங்கி ஒரு சிறு துன்பமும் விளைக்கவல்லரோ ?

கு :—எய்த நோக்குதல் - கூர்ந்து பார்த்தல். உயிர்க்கு நல்லார் இவன் தன்னை ஒன்று செய்யவல்லரோ என இயைத்துரைக்க. திக்கு விசயம் செய்யப் புறப்பட்டுத் திசை காவலர் பலரையும் வெற்றி கொண்ட இராவணன், வாலியை வெற்றி கொள்ளக் கருதிக் கிட்கிந்தையை அடைந்து அங்கு அவனைக் காணாது தென்கடற்கரையிற் சிவபூசை செய்து கொண்டிருந்த வாலியை அணுகிப் பற்றினனாக, அதனை யுணர்ந்த பெருவீரனாகிய வாலி இராவணனைத் தன் வாலில் இறுகப் பிணித்துவிட்டுச் சிவபூசையை இனிது நிறைவேற்றிப் பின்னர் மேல்கடல் முதலாக ஏனைக் கடல்களிலும் நீராடிச் சிவ வழிபாட்டினைச் செய்து முடித்துத் தன் நகரத்தை யடைந்து தாரையின் வேண்டுகோளால் இராவணனைக் கட்டவிழ்த்துவிட, வாலியின் பேராற்றலை யுணர்ந்த இராவணன் தன் பிழைகளைப் பொறுத்தருளுமாறு அவனை வேண்டி அவனது நட்பினைப் பெற்றுத் தன்னகரத்திற்கு மீண்டான் என்ற செய்தி, உத்தர காண்டம், வாலி வாலாற் கட்டுண்ட படலத்தில் விரித்துரைக்கப்படும். இங்ஙனம் இராவணனை வாலாற் பிணித்த வன்மைமிக்க வாலியை இராமன் ஒரே அம்பினாற் கொன்று வீழ்த்திய செய்தி வாலி வதைப் படலத்திற் பேசப்பட்டது. இராவணனாகிய இவனை நேரிற் கண்ட எனக்கு என் தந்தையை ஒரே அம்பினால் உயிர்கவர்ந்த பெரு வீரனாகிய இராமனே இப்பொழுது இவனையும் வென்றழித்தற்கு வந்துள்ளான் என்பதனை உடன் வைத்து எண்ணி உள்ளத்தில் உறுதி கொள்வதொன்றைத் தவிர, எம்போன்றாருள் தம் உயிர்க்கு நன்மை நாடுவார் யாவராயினும் இவனை எதிர்த்து நிற்கத் துணியமாட்டார்கள் என்பது இனிது புலனாயிற்று என்பான், 'உயிர்க்கு நல்லார் இவன் தன்னை ஒன்று செய்ய வல்லரோ?' என அங்கதன் இராவணனது வெலற்கரிய பேராற்றலை வியந்து பாராட்டினன் என்பதாம். (17)

## இராவணனது மகுடமணியைப் பறித்த தன் சிறிய தந்தையாகிய சுக்கிரீவனது ஆற்றலை வியத்தல்

**7118.** அணிபறித் தழகு செய்யு
மணங்கின்மேல் வைத்த வாசைப்
பிணிபறித் திவனை யாவர்
முடிப்பவர் படிக்கட் பேழ்வாய்ப்

பணிபறித் தெழுந்த மானக்
கலுழனி னிவனைப் பற்றி
மணிபறித் தெழுந்த வெந்தை
யாரினும் வலிய னன்றே.

'அணி பறித்து அழகு செய்யும்
அணங்கின்மேல் வைத்த ஆசைப்
பிணி பறித்து, இவனை யாவர்
முடிப்பவர் படிக்கண்? பேழ்வாய்ப்
பணி பறித்து எழுந்த மானக்
கலுழனின், இவனைப் பற்றி
மணி பறித்து எழுந்த எந்தை
யாரினும் வலியன்' அன்றே.

பொ :—(தன் மேனியிலுள்ள) அணிகலன்களைக் களைந்தெறிந்து (அம் மேனிக்கு இயல்பாயமைந்த) அழகினை (மீண்டும்) உண்டாக்கிய தெய்வத்தன்மையுடையளாகிய சீதையின்மேல் வைத்த ஆசையாகிய நோயினை அகற்றி இவ்விராவணனைத் தொலைக்கவல்லார் இவ் வுலகில் (இராமபிரானையன்றி) வேறு யாருளர்? பிளவுபட்ட வாயினையுடைய பாம்பினைக் கவர்ந்து பற்றி (விசும்பின்மேற்) பறந் தெழுந்த பெருமையினையுடைய கருடனைப்போன்று இவ்விராவ ணனைப் பிணித்து எடுத்து (இவனது முடியிற் பதிக்கப்பெற்றிருந்த) மணிகளைப் பறித்துக் கொணர்ந்த என் (சிறிய) தந்தையாகிய சுக்கிரீவன் (ஆற்றல் மிக்க வீரர்) எல்லாருள்ளும் மிகவும் பெரு வன்மை படைத்தவன் அல்லவா?

கு :—சீதையின் மேனியில் அணியப்பெற்றிருந்த அணிகலன்கள் அவளது திருமேனியழகினால் தாம் மேலும் அழகு பெற்றன என்ப தோடு அவை சீதையின் திருமேனியழகினை மறைத்தலையும் செய்தன என்றும், அவள் இராவணனாற் கவரப்பட்டு அவன் தேர் மேல் வான் வழியாகச் சென்றபோது அடையாளந் தெரிதல் வேண்டித் தன் மேனியிலுள்ள நகைகளைக் களைந்து வீசிய நிலையில் அவளது திருமேனியழகு மேலும் சிறந்து விளங்கியதென்றும் விளக் குவார், 'அணிபறித்தழகு செய்யும் அணங்கு' என்றார். அணங்கு - தெய்வப்பெண். தெய்வக் கற்பினளாகிய சீதையின்பால் இராவண னாகிய இவன் கொண்டுள்ள ஆசை நோய் இவனது உயிருடன் தொலைவதல்லது உயிரிருக்க இடையில் நீங்குவதொன்றன்று என் பான், 'அணங்கின்மேல் வைத்த ஆசைப்பிணி பறித்து இவனை முடிப்பவர் படிக்கண் யாவர்?' என்றான். பறித்தல் - அகழ்ந்து

களைந்தெறிதல். படி - பூமி. பணி - பாம்பு. மானம் - பெருமை. அங்கதன் தன் சிறிய தந்தையாகிய சுக்கிரீவனைத் தன் தந்தையினை ஒப்பவே மதித்து ஒழுகினுன் ஆதலால், சுக்கிரீவனது பெரு வீரத்தினை நினைந்து 'மணிபறித்து எழுந்த எந்தை,யாரினும் வலியன்' என வியந்து பாராட்டினன் என்க. (18)

## அங்கதன் இராவணனருகிற் சென்று நிற்றல்

7119. நெடுந்தகை விடுத்த தூத
னிவையிவை நிரம்ப வெண்ணிக்
கடுங்கனல் விடமுங் கூற்றுங்
கலந்துகால் கரமுங் காட்டி
விடுஞ்சுடர் மகுட மின்ன
விரிகட லிருந்த தன்ன
கொடுந்தொழின் மடங்க லன்னு
னெதிர்சென்று குறுகி நின்ருன்.

நெடுந்தகை விடுத்த தூதன்
இவை இவை நிரம்ப எண்ணி,
கடுங் கனல் விடமும் கூற்றும்
கலந்து கால் கரமும் காட்டி,
விடும் சுடர் மகுடம் மின்ன,
விரிகடல் இருந்தது அன்ன
கொடுந் தொழில் மடங்கல் அன்னுன்
எதிர் சென்று குறுகி நின்ருன்.

பொ :—பெருந்தகைமை யுடையோனுகிய இராமன் அனுப்பிய தூதனுகிய அங்கதன், இவைபோலும் பலவற்றை(த் தன்மனத்தே) மிகுதியாகச் சிந்தித்து, விரிந்து பரவிய (கருங்) கடலானது மிக்க தீயையும் ஆலகால நஞ்சினையும் (ஆருயிர் பருகும்) கூற்றுவனையும் தன்னுள்ளே பொருந்தப்பெற்றுக் கால், கை முதலிய அங்கங்களைத் தோற்றுவித்துக்கொண்டு ஒளி வீசும் மணிமுடி சுடர்விட்டு விளங்க (ஓரிடத்தே) அமர்ந்திருந்தாற்போலும் கொடுமை வாய்ந்த கொலைத் தொழிலையுடைய சிங்கம் போல்வானுகிய இராவணனுக்கு எதிரே சென்று அணுகிநின்ருன்.

கு :—நெடுந்தகை என்றது இராமனை. தூதன் என்றது அங்கதனை. விரிகடல், கடுங்கனலும், விடமும், கூற்றும் கலந்து, காலும்

கரமும் காட்டி, இருந்தது அன்ன, மடங்கலன்னான் என இயையும். கொடுந்தொழில் மடங்கல் அன்னான் என்றது, 'அடியளந்தான் தாஅயது' என்றாற்போன்று வாளா பெயராய் நின்றது. அளத்தற்கரிய பெருமையாலும் நிறத்தாலும் கடல் இராவணனுக்கு உவமையாயிற்று. (19)

## இராவணன் அங்கதனை நோக்கி 'நீ யார்' என வினவுதல்

7120. நின்றவன் றன்னை யன்னா
னெருப்பெழ நிமிரப் பார்த்திங்
கின்றிவண் வந்த நீயா
ரெய்திய கரும மென்னை
கொன்றிவர் தின்னா முன்னங்
கூறுதி தெரிய வென்றான்
வன்றிறல் வாலி சேயும்
வாளெயி றிலங்க நக்கான்.

நின்றவன் தன்னை, அன்னான்
நெருப்பு எழ நிமிரப் பார்த்து, 'இங்கு
இன்று, இவண் வந்த நீ யார்?
எய்திய கருமம் என்னை?
கொன்று இவர் தின்னா முன்னம்
கூறுதி தெரிய' என்றான்;
வன்திறல் வாலி சேயும்
வாள் எயிறு இலங்க நக்கான்.

பொ:—(அங்ஙனம் தன்முன்) அணுகி நின்றவனாகிய அங்கதனை அவ் இராவணன் (தன் கண்களில்) தீப்பொறிபறக்க நிமிர்ந்து பார்த்து, 'இன்று இங்கு வந்த நீ யாவன்? வருவதற்குரிய காரணம் யாது? (என்னுடைய ஏவலராகிய) இவர்கள் நின்னைக் கொன்று தின்று தீர்ப்பதற்கு முன்னரே (நீ வந்த காரியத்தை எனக்கு விளங்கச் சொல்வாயாக' எனக் கூறினான். (அது கேட்டு) மிக்க வன்மைபடைத்த வாலியின் மைந்தனாகிய அங்கதனும் ஒளி பொருந்திய பற்கள் வெளிப்பட்டொளிரும்படி (பெருகச்) சிரித்தனன்.

கு:—இராவணன் சொல்லிய வண்ணம் அவனுடைய ஏவலர்களால் கொன்று தின்னத்தக்க அத்துணை எளிமையுடையவன்

அங்கதன் அல்லன் என்பார், 'வன்திறல் வாலிசேய்' என்றார். இராவணனை வாலிற் பிணித்த ஆற்றல்மிக்க வாலியின் வன்மையும் திறனும் அவன் மைந்தனாகிய அங்கதனைவிட்டு அகலுமோ என்பது குறிப்பு. தூதனாக வந்த தனது வன்மையும் இயல்பும் அறிவதன் முன்னரே ஏவலராற் கொன்று தின்னத்தக்க எளியோனாகத் தன்னைக் குறைத்து எண்ணிய இராவணனது பேதைமையினை நினைந்து அங்கதன் பெருகச் சிரித்தனன் என்க. (20)

## அங்கதன் தன்னை இராமதூதன் என அறிவித்தல்

**7121.** பூதநா யகனீர் சூழ்ந்த
புவிக்குநா யகனப் பூமேற்
சீதைநா யகன்வே றுள்ள
தெய்வநா யகனீ செப்பும்
வேதநா யகன்மே னின்ற
விதிக்குநா யகன்றான் விட்ட
தூதன்யான் பணித்த மாற்றஞ்
சொல்லிய வந்தே னென்றான்.

'பூத நாயகன், நீர் சூழ்ந்த
புவிக்கு நாயகன், அப் பூமேல்
சீதை நாயகன், வேறு உள்ள
தெய்வ நாயகன், நீ செப்பும்
வேத நாயகன், மேல் நின்ற
விதிக்கு நாயகன். தான் விட்ட
தூதன் யான்; பணித்த மாற்றம்
சொல்லிய வந்தேன்' என்றான்.

பொ :—'ஐம்பெரும் பூதங்களுக்குத் தலைவனும், கடலாற் சூழப் பெற்ற நிலமடந்தையின் தலைவனும் அந்தத் தாமரை மலர்மேல் வீற்றிருக்கும் (திருமகளையொத்த) சீதையின் கணவனும், பல்வேறுருவினராயுள்ள தெய்வங்களுக்கெல்லாந் தலைவனும் நீ ஓதுகின்ற மறைகளின் பொருளாய் விளங்கும் தனி முதல்வனும் (உலக நிகழ்ச்சிகட்கெல்லாம்) மேற்பட்டு (அவற்றை நியமித்து) நிற்கும் ஊழ்வினையாகிய விதிக்குத் தலைவனும் ஆகிய (திருமாலின் அமிசமாகிய) இராமபிரான் அனுப்பிய தூதன் யான். (அம் முதல்வன்) கட்டளையிட்டருளிய வார்த்தையினை (உனக்கு)ச் சொல்லுதற்கு

வந்தேன்' என (அங்கதன், தான் வந்த காரியத்தை இராவண னுக்குக்) கூறினான்.

கு :—ஐம்பெரும் பூதங்கள்தோறும் கலந்து நின்று அவற்றை உருவாக்கிச் செயற்படுத்தியும், கடலினை ஆடையாகக்கொண்ட நில மடந்தைக்கும் தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகளாகிய சீதைக்கும் கணவனாகியும், தெய்வங்களுக்கெல்லாம் முதல்வனாகியும், வேதங்களாற் போற்றப்பெறும் முழுமுதற் பொருளாகியும், உயிர்த் தொகுதிகளின் வாழ்வுக்கெல்லாம் மேலாய் நின்று அவற்றை இன்பத்துன்பங்களிற் சென்றுழலுமாறு நியமிக்கவல்ல விதியினைப் பணி கொள்ளும் விமலனாகியும் விளங்கும் திருமாலே இப்பொழுது இராமனாக அவதரித்துள்ளான் என இராமபிரானது பெருமையினை முதற்கண் எடுத்துரைத்து, தன்னேரில்லாத் தலைவனாகிய அப்பெரி யோனால் அனுப்பப்பெற்ற தூதன் யான் எனவும், அவன் உனக்குச் சொல்லுமாறு பணித்த வாசகத்தை அவ்வாறே உன்னிடம் சொல்லுதற்கு வந்தேன் எனவும் அங்கதன் தான் இன்னான் என்ப தனையும் தனது வருகையின் நோக்கம் இது என்பதனையும் இராவண னுக்கு விளங்க எடுத்துரைத்தான் என்க. (21)

## இராவணன் இராமனைக் குறித்து இகழ்ந்துரைத்தல்

**7122.** அரன்கொலா மரிகொ லாமற்
றயன்கொலா மென்பா ரன்றிக்
குரங்கெலாங் கூட்டி வேலைக்
குட்டத்தைச் சேது கட்டி
இரங்குவா னாகி னின்ன
மறிதியென் றுன்னை யேவும்
நரன்கொலா முலக நாத
னென்றுகொண் டரக்க னக்கான்.

'அரன் கொலாம்? அரிகொலாம்? மற்று
அயன்கொலாம்? என்பார் அன்றி,
குரங்கு எலாம் கூட்டி, வேலைக்
குட்டத்தைச் சேது கட்டி,
இரங்குவான் ஆகின், 'இன்னம்
அறிதி' என்று உன்னை ஏவும்
நரன் கொலாம் உலகநாதன் ?'
என்று கொண்டு அரக்கன் நக்கான்.

பொ :—சிவனே திருமாலோ மற்றை நான்முகனே என (மக்களால் வியந்து போற்ற)ப்படும் மூவர்களையன்றிக் குரங்குகளையெல்லாம் (தனக்குரிய சேனையாக) ஒரு சேரத் திரட்டிக் குளம் போன்ற கடலை அணைகட்டி (இவ்வாறு) வருந்தி முயல்வானாயின், இனியும் (எனது மனக்கருத்தினை) அறிந்துவா என்று உன்னை(த் தூதனாக) அனுப்பிய மனிதனாகிய அவனே உலகங்கட்கெல்லாந் தலைவனாகிய இறைவனாவான்? என்று சொல்லி அரக்கனாகிய இராவணன் (இகழ்ந்து) சிரித்தான்.

கு :—உன்னைத் தூதாக என்பால் அனுப்பிய இராமன், குறைந்த வாழ்நாட்களையுடைய மனிதன் ஆதலானும், அவனுக்குத் துணையாய் வந்தோர் அரன் அரி அயன் முதலிய தேவர்களாதலன்றி இழிந்த குரங்குகளாதலானும் அவனால் அக் குரங்குகளின் துணைகொண்டு அணைகட்டிக் கடந்தேறிய கடல் சிறிய குளம்போல்வதாதலானும் அங்ஙனம் கடல் கடந்து சேனையுடன் இங்கு வந்து தங்கிய நிலையிலும் என்னை எதிர்த்துப் பொரும் மனவலியின்றி வருந்தி நின்னை என்பால் தூதனுப்பிச் சமாதானம் செய்துகொள்ள முயல்கின்றான் ஆதலானும் மனிதனாகிய அவன் நீ சொல்லிய வண்ணம் மேல்நின்ற விதிக்கு நாயகனாகிய முழு முதல்வன் ஆகமாட்டான் என்பான், 'குரங்கெலாம் கூட்டி வேலைக்குட்டத்தைச் சேதுக்கட்டி இரங்குவான் ஆகின், இன்னம் அறிதி என்று உன்னை ஏவும் நரன் கொலாம் உலகநாதன்' என் இராவணன் அங்கதன் வார்த்தையை இகழ்ந்து நகைத்தனன் என்க. நரன்கொல் உலகநாதன் என இயையும். ஆம் - அசை. அன்றிக் கூட்டி என இயைக்க, இனி, என்பார் அன்றி நரன்கொலாம் உலகநாதன் என இயைத்துரைப்பினும் அமையும். நரன் என்னும் வடசொல்லுக்கு நசித்து அழியும் இயல்பினன் எனப் பொருளுரைப்பர். உலகநாதன் - எல்லா உலகங்கட்கும் இறைவனாகிய கடவுள். (22)

அங்கதனை நோக்கி 'மனிதனுக்குத் தூதனாகிய நீ யாவன்' என இராவணன் வினவுதல்

**7123.** கங்கையும் பிறையுஞ் சூடுங்
கண்ணுதல் கரத்து நேமி
சங்கமுந் தரித்த மான்மற்
றிந்நகர் தன்னைச் சாரார்
அங்கவர் தம்மை யன்றி
மனிசனுக் காக வஞ்சா
திங்குவந் திதனைச் சொன்ன
தூதனீ யாவ னென்றான்.

'கங்கையும் பிறையும் சூடும்
கண்ணுதல், கரத்து நேமி
சங்கமும் தரித்த மால், மற்று
இந்நகர் தன்னைச் சாரார்;
அங்கு அவர் தம்மையன்றி,
மனிசனுக்கு ஆக, அஞ்சாது,
இங்கு வந்து இதனைச் சொன்ன
தூதன் நீ யாவன்?' என்றான்.

பொ :—கங்கையாற்றையும் பிறைச்சந்திரனையும் (தன் சடை மீது) அணிந்த நெற்றிக் கண்ணனாகிய சிவனும் சக்கரப்படையினையும் சங்கினையும் கையிற்கொண்ட திருமாலும்கூட இந்த இலங்கை நகரத்தினை (அஞ்சாது) அடைதற்கு எண்ணமாட்டார்கள். (கடவுளராகிய) அவர்களையன்றி மனிதனுக்காகவேண்டி அச்சமின்றி இங்கு வந்து இம் மொழியினைக் கூறிய தூதனாகிய நீ யாவன் என (அங்கதனை நோக்கி) வினவினான் (இராவணன்).

கு :—கண்ணுதல் - நுதலிற் கண்ணுடையான்; சிவன். நேமியும் சங்கமும் கரத்துத் தரித்தமால் என இயையும். நேமி-சக்கரப்படை. (23)

## அங்கதன், தன்னை இன்னான் எனத் தெரிவித்தல்

7124. இந்திரன் செம்மல் பண்டோ
ரிராவண னென்பான் றன்னைச்
சுந்தரத் தோள்க ளோடும்
வாலிடைத் தூங்கச் சுற்றிச்
சிந்துரக் கிரிக டாவித்
திரிந்தனன் தேவ ருண்ண
மந்தரக் கிரியால் வேலை
கலக்கினான் மைந்த னென்றான்.

'இந்திரன் செம்மல், பண்டு, ஓர்
இராவணன் என்பான் தன்னைச்
சுந்தரத் தோள்களோடும்
வாலிடைத் தூங்கச் சுற்றி,

சிந்துரக் கிரிகள் தாவித்
திரிந்தனன், தேவர் உண்ண
மந்தரக் கிரியால் வேலை
கலக்கினன், மைந்தன்' என்றான்.

பொ:—(வானோர் தலைவனாகிய) இந்திரனுக்குப் புதல்வனும் முன்னாளில் இராவணன் என்ற பெயருடையான் ஒருவனை (அவனுடைய) அழகிய தோள்களோடும் (தன்) வாலிலே தொங்குமாறு இறுகப் பிணித்துக் கொண்டு மலைகள் தோறும் தாவிப் பாய்ந்து திரிந்தவனும் தேவர்கள் (அமிழ்தம்) உண்ணும் பொருட்டு மந்தரமலையாகிய மத்தினால் (பாற்) கடலைக் கடைந்தவனும் ஆகிய வாலியின் மகன் (யான்) என்று (அங்கதன் இராவணனை நோக்கித் தான் இன்னான் என்பதனை விளங்கக்) கூறினான்.

கு:—ஆடவரிற் சிறந்தோன் என்ற பொருளில் வழங்கும் செம்மல் என்ற சொல், இங்கு மகன் என்ற பொருளில் ஆளப் பெற்றது. 'மனிசனுக்காக அஞ்சாது இங்கு வந்து இதனைச் சொன்ன தூதன் நீ யாவன்' என்று தன்னை அவமதித்து வினவிய இராவணனை நோக்கி, 'முன்னாளில் இராவணன் என்பானொருவனை வாலிற் பிணித்தடக்கிய பெருவீரனாகிய வாலியின் மைந்தன் யான்' எனத் தன் தந்தையினால் அடக்கப்பட்டு ஆற்றல் குன்றிய அரக்கனாகிய இராவணனது சிறுமை தோன்றத்தான் இன்னான் என்பதைப் புலப்படுத்தினன் அங்கதன் என்பதாம். வாலி, பாற்கடலைக் கடைந்து தேவர்க்கு அமுதளித்த செய்தி, வாலிவதைப் படலத்திற் கூறப் பட்டது. (24)

## சூழ்ச்சியில்வல்ல இராவணன் அங்கதனை அன்புரைகளால் வேறுபடுத்தித் தன்னுடன் சேர்த்துக்கொள்ள முயலுதல்

7125. உந்தையென் றுணைவ னன்றே
யோங்கறஞ் சான்று முண்டால்
நிந்தனை யிதன்மே லுண்டே
நீயவன் றூத னாதல்
தந்தனெ னினக்கி யானே
வானரத் தலைமை தாழா
வந்தனை நன்று செய்தா
யென்னுடை மைந்த வென்றான்.

'உந்தை என் துணைவன் அன்றே?
ஓங்கு அறம் சான்றும் உண்டால்;
நிந்தனை இதன்மேல் உண்டே,
நீ அவன் தூதன் ஆதல்?
தந்தனென் நினக்கு யானே
வானரத் தலைமை; தாழா
வந்தனை; நன்று செய்தாய்,
என்னுடை மைந்த!' என்றான்.

பொ:—(அது கேட்ட இராவணன் அங்கதனை நோக்கி) உன் தந்தையாகிய வாலி எனக்கு உற்ற நண்பன் அல்லவா? (அவனும் யானும் மெய்ம்மையாக நட்புக் கொண்டோம் என்பதற்கு) உயர்ந்த அறத் தெய்வம் ஆகிய சாட்சியும் உள்ளது. (பேராற்றலுடைய வாலியின் மைந்தனாகிய) நீ (மனிதருள் ஒருவனான) அவ்விராமனுக்குத் தூதனாகப் பணிபுரிதலாகிய இதனைவிடப் பழியுடைய செயல் வேறேதேனும் உண்டோ? என்னுடைய (அன்புக்குரிய) மைந்தனே! வானர குலத்தார்க்கு அரசனாகும் தலைமைச் சிறப்பினை உனக்கு நானே அளிக்கின்றேன். காலந் தாழ்க்காது (என்னை) வந்தடைந்தாய், (இதனால்) நல்லதொரு செயலைச் செய்தவன் ஆயினாய்' என்று கூறினான்.

கு:—முன்னரே வாலியொடு நட்புப் பூண்டுள்ள இராவணன், இராமனிடமிருந்து தன்பால் தூதனாக வந்த அங்கதனைக் கொடுத்தல், இன்சொற் சொல்லுதல், வேறுபடுத்தல் என்னும் உபாயங்களால் பகைவரினின்றும் பிரித்துத் தன்னொடு கூட்டிக்கொள்ளும் நிலையிற் கூறுவனவாக அமைந்தன இது முதல் மூன்று செய்யுட்கள். ஓங்கு அறம் என்றது, உலகில் நிகழும் நிகழ்ச்சிகள் எல்லாவற்றுக்கும் சாட்சியாக விளங்கும் அறத் தெய்வத்தை. சான்று - சாட்சி. நிந்தனை - பழி. நீ அவன் தூதனாதல் இதன்மேல் நிந்தனை உண்டே? நினக்கு வானரத் தலைமை யானே தந்தனன். என்னுடை மைந்த! தாழா வந்தனை, நன்று செய்தாய் என்றான் என இயையும், தாழா - தாழாது; காலந் தாழ்க்காமல். என் நண்பன் வாலியினுடைய புதல்வனாகிய நீ என்னுடைய புதல்வனெனவே எண்ணிப் பாராட்டத் தகும் அன்புரிமையுடையாய் என்பான், 'என்னுடை மைந்த' என அழைத்தான். (25)

7126. தாதையைக் கொன்ருன் பின்னே
தலைசுமந் திருகை நாற்றிப்
பேதைய னென்ன வாழ்ந்தா
யென்பதோர் பிழையுந் தீர்ந்தாய்
சீதையைப் பெற்றே னுன்னைச்
சிறுவனு மாகப் பெற்றேன்
ஏதெனக் கரிய தென்ரு
னிறுதியி னெல்லை கண்டான்.

'"தாதையைக் கொன்ருன் பின்னே
தலை சுமந்து, இருகை நாற்றி,
பேதையன் என்ன வாழ்ந்தாய்"
என்பது ஓர் பிழையும் தீர்ந்தாய்;
சீதையைப் பெற்றேன்; உன்னைச்
சிறுவனுமாகப் பெற்றேன்;
ஏது எனக்கு அரியது?' என்ருன்—
இறுதியின் எல்லை கண்டான்.

பொ:—(தன்னுடைய) தந்தையைக் கொன்றவனுகிய பகைவனுக்குப் பின்னே (தானும் மானமுடைய வீரன் என்னத்) தலையினைச் சுமந்து (பகைவரைப் பொருதழித்தற்குக் கருவியாகிய) இரண்டு கைகளையும் தொங்க விட்டுக் கொண்டு, 'அறிவற்ற பேதை இவன்' என உலகத்தார் (இகழ்ந்து) சொல்லும்படி வாழ்ந்தாய் என்ற குற்றமும் (இப்பொழுது என்னை அடைந்தமையால்) நீங்கியவன் ஆயினுய். யானும் சீதையை (எனக்குரியளாகப்) பெற்றேன். (அங்கதனுகிய) உன்னை (என்) புதல்வனுகவும் பெற்றேன். எனக்குக் கிடைத்தற்கரியது வேறு யாது உளது? எனக் கூறினன் மரணமாகிய எல்லையினைக் கண்டவனுகிய இராவணன்.

கு:—தாதையைக் கொன்ருன் என்றது, அங்கதனுக்குத் தந்தையாகிய வாலியைக் கொன்ற இராமனை. தந்தையைக் கொன்றவனைக் கொன்றொழிக்குங் கடமையுடைய நீ அஃதியலாத நிலையிற் போரில் நினது வீரத்தினைப் புலப்படுத்தி இறந்து புகழ்பெறுதற்குரிய நின் தலையினை அப்புகழுக்கு உரியதாக்காது, பழியாகிய சுமையுண்டாக வீணே சுமந்து திரிந்தனை என்பான், 'தலை சுமந்து' என்றும், போரில் மாற்ருர் மேற் படைக்கலங்களை ஏவி வீரம் விளைத்தற்குக் கருவியாகிய நின் கைகளைப் பகைவரை எதிர்க்கும் போர்த் தொழிலிற் பயன்படுத்தாது நினக்கு மாசுண்டாக வறிதே தொங்க

விட்டனை என்பான் இருகை நாற்றி' என்றும், கூறினன். 'ஒட்டார் பின் சென்றொருவன் வாழ்தலின் அந்நிலையே கெட்டான் எனப் படுதல் நன்று' (967) 'மருந்தோமற் றூனோம்பும் வாழ்க்கை பெருந் தகைமை பீடழிய வந்த இடத்து' (968) எனவரும் திருக்குறள்கள் இங்கு நினைக்கத் தக்கனவாகும். இங்ஙனம் நினக்குக் கேடு தருவன வற்றை மேற்கொள்ளுதலும் ஆக்கந்தருவனவற்றை விட்டொழித் தலும் ஆகிய இத்தகைய அறியாமையுடைமையால் 'அங்கதனாகிய இவன் பேதையன்' என உலகத்தார் கூறுமாறு வாழ்தலாகிய பெருங் குற்றம் உன்னைச் சார்ந்துளது என்பான். "பேதையன் என்ன வாழ்ந்தாய்" என்றும், நின்னைச் சார்ந்துள்ள இப்பெரும்பழி தானும் நீ இப்போது என் வழி நின்று வானரர் அரசினை ஏற்றுக் கொண்டனையாயின் நின்னைவிட்டு உடனே நீங்கிவிடும் என்பான், 'பேதையன் என்ன வாழ்ந்தாய் என்பதோர் பிழையுந் தீர்ந்தாய்' என்றும் அங்கதனை நோக்கிக் கூறிய இராவணன், 'சீதையைப் பெற் றேன் உன்னைச் சிறுவனுமாகப் பெற்றேன், எனக்கு அரியது ஏது' என அங்கதன் வரவால் தான் பெற எண்ணிய பேற்றினையும் உடன் கூறினன் என்க. இறுதி - மரணம். அதற்கு எல்லை காணுதலாவது அதன் நிறைவினை அடைதல். 'இறுதி நூற்கெல்லை கண்டான்' என்ற பாடத்திற்கு இறுதி நூல் - முடிந்த நூல்களாகிய வேதங்கள் எனக்கொண்டு, வேதங்களை ஓதி அவற்றின் முடிபொருளாகிய நிலைத்த பொருளினை ஆராய்ந்துணர்ந்த இராவணன், தான் அறங் கெட நின்று சீதை மேற் கொண்ட ஆசை மயக்கத்தால் தனக்கு விரைவில் நேரவிருக்கும் மரணத்தினை எண்ணிப் பாராது அறி வழிந்து இங்ஙனம் பேசினன் எனப் பொருளுரைப்பினும் அமையும். 'ஒரு பொழுதும் வாழ்வதறியார் கருதுப, கோடியும் அல்ல பல' (337) என வரும் திருக்குறள் ஈண்டு நினைக்கத்தக்கதாகும். 'அங்கத னாகிய நீ இராமனாகிய மனிதனுக்குத் தூதனாய் ஏவல் புரியும் இவ்விழி நிலையை விட்டு விட்டு என் சொல் வழி நின்று உன்னுடைய வானரர் குலத்துக்குரிய அரச பதவியினை நீயே ஏற்றுக்கொண்டனையாயின், "தன் தந்தையைக் கொன்ற பகைவனாகிய இராமனுக்குப் பின்னே மானமும் வீரமும் இன்றித் தலைநிமிர்ந்து கைகளை வறிதே தொங்க விட்டுப் பேதைமையுடையோனாய் வாழ்கின்றான்' என்று உலகத்தார் உன்னைக் குறித்து இகழ்ந்துரைத்தற்கு ஏதுவாகிய பழியினை நீங்கி யவன் ஆவாய்; உனக்கு வானரத் தலைமை தந்த யானும் நான் விரும்பிய சீதையை எனக்குரியளாகப் பெற்று என் நண்பனுடைய புதல்வனான உன்னை என் புதல்வனாகவும் பெற்று மகிழ்வேன்' என்று, மரண நிலையின் எல்லையினை அணுகி நின்ற இராவணன் அங்கதனை நோக்கிக் கூறினன் என்பதாம். (26)

**7127.** அந்நர ரின்று நாளை
யழிவதற் கைய மில்லை
உன்னர சுனக்குத் தந்தே
னூதி யூழி காலம்
பொன்னரி சுமந்த பீடத்
திமையவர் போற்றி செய்ய
மன்னவ னாக யானே
சூட்டுவென் மகுட மென்றான்.

'அந்நரர் இன்று, நாளை,
அழிவதற்கு ஐயம் இல்லை ;
உன் அரசு உனக்குத் தந்தேன் ;
ஆளுதி, ஊழி காலம் ;
பொன் அரி சுமந்த பீடத்து,
இமையவர் போற்றி செய்ய,
மன்னவன் ஆக, யானே
சூட்டுவென் மகுடம்' என்றான்.

பொ :—அந்த மானிடர்கள் இன்றோ நாளையோ அழிந்தொழிவர் என்பதற்குச் (சிறிதும்) சந்தேகமில்லை. (பிறப்புரிமையால்) உனக்குரிய (கிட்கிந்தையின்) அரச பதவியை உனக்கே கொடுத்துவிட்டேன். (நீ அதனை ஏற்றுக்கொண்டு) பல்லூழி காலம் ஆட்சி புரிவாயாக. பொன்னால் ஆகிய சிங்கம் சுமந்த அரசு கட்டிலிலே தேவர்கள் போற்ற நீயே அரசனாக (வீற்றிருக்குமாறு) நானே உனக்கு முடி சூட்டுகின்றேன் என (உறுதி) கூறினான் (இராவணன்).

கு :—அந்நரர் - அந்த மனிதர்கள் ; என்றது, இராம இலக்குவர்களை. இந்திரன் முதலிய திசைகாவலர்களை வெற்றிகொண்ட பெரு வீரனாகிய இராவணன் தன் வலிமையையே பெரிதாக மதித்து இராம இலக்குவர்களது வன்மையினைத்தான் குறைவாக எண்ணினமையாலும், பகைவரொடு கூடிய அங்கதனை அவர்தம் வலியின்மை கூறி அவர்களை விட்டுப் பிரித்து அவனைத் தன்னொடு கூட்டிக் கொள்ள விரும்பிய தனது சூழ்ச்சியாலும் 'அந்நரர் இன்று நாளை அழிவதற்கு ஐயமில்லை' என்றான். வாலி சுக்கிரீவன் என்னும் துணைவர் இருவருள் மூத்தவனாகிய வாலியொருவனே வானரர்க்கு அரசன் ஆதலால் அவன் மேற்கொண்ட கிட்கிந்தையின் அரச பதவி, அவனைச் சூழ்ச்சி செய்து கொன்ற சுக்கிரீவனுக்குச் சிறிதும் உரிமையுடையதாகாமல், வாலியின் ஒரே புதல்வனாகிய உனக்கே யுரியதாம் ஆதலின், அறவொழுங்குப்படி அவ்வரச பதவியினை நான்

உனக்கே உரிமை செய்து தந்தேன் என்பான். 'உன்னரசு உனக்குத் தந்தேன்' என்றும், என்னுல் உனக்குத் தரப்பெறும் இவ் அரச பதவி பல்லூழி காலம் செல்லினும் உன்னை விட்டு நீங்காத நிலை யுடையதாம் என்பான், 'ஆளுதி ஊழிகாலம்' என்றும், இதனை உனக்கு வெறும் சொல்லளவில் தந்தேனல்லேன்; தேவரெல்லாம் போற்ற நின்னைக் கிட்கிந்தையின் அரியணையில் ஏற்றி நானே முடி சூட்டி அரசன் ஆக்குகின்றேன் என்பான், 'பொன் அரி சுமந்த பீடத்து, இமையவர் போற்றி செய்ய, மன்னவன் ஆக யானே சூட்டு வென் மகுடம்' என்றும் கூறினுன் இராவணன். அரி சுமந்த பொற் பீடம் என இயைத்துரைப்பினும் அமையும். அரி - சிங்கம். (27)

## அங்கதன் நகைத்து இராவணன் மொழிகளை மறுத்து இகழ்தல்

**7128.** அங்கத னதனைக் கேளா
வங்கையோ டங்கை தாக்கித்
துங்கவன் ரேளு மார்பு
மிலங்கையுந் துளங்க நக்கான்
இங்குநின் ருர்கட் கெல்லா
மிறுதியே யென்ப துன்னி
நுங்கள்பா னின்று மெம்பாற்
போந்தன னும்பி யென்ருன்.

அங்கதன், அதனைக் கேளா,
அங்கையோடு அங்கை தாக்கி,
துங்க வன்தோளும் மார்பும்
இலங்கையும் துளங்க, நக்கான்;
'"இங்கு நின்ருர்கட்கு எல்லாம்
இறுதியே" என்பது உன்னி,
நுங்கள்பால் நின்றும் எம்பால்
போந்தனன், நும்பி' என்ருன்.

பொ:—அங்கதன் (இராவணன் கூறிய) அம்மொழியினைக் கேட்டு அகங்கையுடன் அகங்கையினைச் சேரப்புடைத்து(க் கை கொட்டி ஆர்த்து) உயர்ச்சியும் வன்மையும் உடைய (தன்) தோள் களும் மார்பும் இலங்கை நகரமும் குலுங்கும்படி சிரித்தவனுகி (இலங் கையாகிய) இவ்விடத்தில் நிலைத்து வாழ்வோர்க்கெல்லாம் (இனி விளையவிருப்பது) மரணமே என்ற உண்மையை (முன்னமே உய்த்து

ணர்ந்து) உன் தம்பியாகிய வீடணன் உங்களிடத்தினின்றும் நீங்கி எம்மிடத்தில் வந்து சேர்ந்துள்ளான்' என்று கூறினன்.

கு :—தனக்கும் தன்னினத்தார்க்கும் அண்மையில் நேரவிருக்கும் மரணத்தையுணராது, 'அந்த மனிதராகிய இராம இலக்குவர்கள் இன்று நாளை அழிவர்' என முடிவுகட்டி, அவர் பக்கலினின்றும் தன்னைப் பிரிக்கமுயன்ற இராவணனது பிதற்றுரையைக் கேட்ட அங்கதன், தன் தோள்களும் மார்பும் அசையும்படியும் தான் வந்து தங்கிய இலங்கை நகரம் முழுவதும் நடுங்கும்படியும் கைகளைக் கொட்டி யார்த்துப் பேரொலிபடச் சிரித்தனன் என்பார், 'அங்கை யோடு அங்கைதாக்கித் துங்க வன்தோளும் மார்பும் இலங்கையும் துளங்க நக்கான்' என்றார். துங்கம் – உயர்ச்சி. துளங்குதல் – அசைதல், நடுக்கமுறுதல். நீ சொல்லியவாறு இன்று நாளை அழிவு என்பது இராம இலக்குவராகிய நரர்க்கு விளைவதன்று இலங்கை யாகிய இவ்விடத்தில் வாழும் உன் இனத்தவராகிய அரக்கர்களுக்கே என்ற மெய்ம்மையினை மூத்தோனாகிய நீ முன்னரே அறிந்து கொள்ளத் தவறினையானாலும் உன் தம்பியாகிய வீடணன் எதிரதாக் காக்கும் தன் அறிவினால் முன்னரே உய்த்துணர்ந்து இவ்விலங் கையை விட்டு நீங்கி எங்களைச் சார்ந்த பின்னரும் நீ உணர்ந்து கொள்ளாதிருப்பது பெரும்பிழை என அறிவுறுத்துவான், 'இங்கு நின்றார்கட்கு எல்லாம் இறுதியே என்பது உன்னி நும்பி நுங்கள் பால் நின்றும் எம்பாற் போந்தனன்' என இராவணனை நோக்கிக் கூறினன் அங்கதன். அகம்+கை = அங்கை என்றாயிற்று. நும்பி – நுன்தம்பி; என்றது வீடணனை. (28)

7129. வாய்தரத் தக்க சொல்லி
யென்னையுன் வசஞ்செய் வாயேல்
ஆய்தரத் தக்க தன்றோ
தூதுவந் தரச தாள்கை
நீதரக் கொள்வேன் யானே
யிதற்கினி நிகர்வே றெண்ணின்
நாய்தரக் கொள்ளுஞ் சீயம்
நல்லர சென்று நக்கான்.

'வாய் தரத்தக்க சொல்லி,
என்னை உன் வசஞ் செய்வாயேல்,
ஆய்தரத் தக்கது அன்றோ,
தூது வந்து அரசது ஆள்கை?

நீ தரக் கொள்வேன் யானே?
இதற்கு இனி நிகர்வேறு எண்ணின்,
நாய் தரக் கொள்ளும் சீயம்,
நல் அரசு!' என்று நக்கான்.

பொ :—(வஞ்சனையுடையோர்) வாயில் (எளிதிற்) பயிலத்தக்க சொற்களையெல்லாம் சொல்லி (த் தூதனாகவந்த) என்னை (வஞ்சித்து) நின்வசத்தனாக ஆக்கிக்கொள்ளக் கருதுவாயானால், (ஒருவனுக்குத்) தூதன் என வந்து (அக்கடமையை நெகிழவிட்டு மாற்றான் தந்த) அரச பதவியினைப் பெற்று ஆளுதல் என்பது, (அரசியல் அறிஞர்களால்) ஆராய்ந்து விலக்கத்தக்கதல்லவா? (அறமற்ற தூர்த்தனாகிய) நீ (அரசு) கொடுக்க (அதனை)ப் பெற்றுக் கொள்ளும் சிறுமையுடையேன் யானோ? (இழிவுடைய) இச்செயலுக்கு இனி ஓர் உவமையினை எண்ணிச் சொல்ல வேண்டுமானால், (வலியற்ற இழிந்த) நாய் கொடுக்க (ஆற்றல்மிக்க உயர்ந்த) சிங்கம் பெற்றுக் கொள்ளும் நல்ல (விலங்கின்) அரச பதவி (ஒப்பாகும்) என்று சொல்லிச் சிரித்தான் (அங்கதன்).

கு :—இராவணனாகிய நீ கூறிய சொற்கள். ஆற்றல்மிக்க அரசனொருவன், தன்பால் மாற்றான் அனுப்பிய தூதனிடத்துச் சொல்லத் தக்க பொருளுடைய நல்லுரைகளாக அமையாமல், வந்தவனது உள்ளத்துறுதியினையுணரும் மதுகையின்றித் தன் வாயில் வந்தன கூறும் வெற்றுரைகளாகவும், அவற்றின் தன்மையினை ஆழ்ந்துணர வொண்ணாத ஏனை மடவோரை வஞ்சித்துத் தன்வசப்படுத்தவல்லனவாகவும்அமைந்துள்ளனவென்பான்,'வாய்தரத்தக்க சொல்லி என்னை உன்வசஞ் செய்வாயேல்' என்றான். 'என்னை' என்பது, 'அறத்தின் மூர்த்தியாகிய இராமனுக்குத் தொண்டுபட்டு அவையின் வகையறிந்து ஆராய்ந்து சொல்லும் சொல்லின் தொகையறிந்த தூதனும், நின்னைத் தன் வாலிறைப் பிணித்த ஆற்றல்மிக்க வாலியின் மைந்தனும் ஆகிய என்னை' என்னும் குறிப்புணர நின்றது. தன்வேந்தன் கூறிய மொழியினை வேற்றரசனிடம் அவ்வாறே எடுத்துரைத்து அதற்கு மாற்றான் கூறும் மறுமொழியினை அவ்வாறே உணர்ந்து கொண்டு தன்னரசன்பால் மீளும் நோக்குடன் தூது சென்றானொருவன், தன்னுடைய வேந்தனுக்கும் தனக்கும் அன்பினையும் தனக்குரிய கடமையினையும் நெகிழவிட்டு மாற்றான் தனக்குத் தருவதாகச் சொல்லும் அரச பதவி முதலிய உயர்வினைப் பெற்று அவனுக்கு அடிமையாதல் என்பது அரசியல் அறிஞர்களால் மனத்தால் எண்ணுதற்கும் ஒண்ணாத இழிந்த செயலாம் என்பான், 'தூது வந்து அரசது ஆள்கை ஆய்தரத்தக்கது அன்றோ' என்றான். அறத்தின் வழி நில்லாத தூர்த்தனும் என் தந்தையால் ஒறுத்து

அடக்கப்பட்டவனும் ஆகிய நீ தர, உன் கையால் யான் வானரர்க்கு அரசினை ஏற்றுக் கொள்வதென்பது, இழிவுடைய வலியற்ற நாய், விலங்குக்கெல்லாம் அரசாந் தன்மையை ஆற்றல்மிக்க சிங்கத்திற்குக் கொடுக்க அச் சிங்கம் அதனை ஏற்றுக் கொண்டாற்போலும் இழிவுடைய செயலாம் என்பான், 'இதற்கு இனி நிகர் வேறு எண்ணின், நாய்தரச் சீயம் கொள்ளும் நல்லரசு' என்றான். நாய்தரச் சிங்கம் நல்லரசு கொள்ளுதல் என்பது எவ்வாறு நிகழவொண்ணாதோ அவ்வாறே நீ தர யான் அரசு கொள்வது என்பதும் என்றும் நிகழக் கூடாததொன்றும் என்று அங்கதன் இராவணனுக்கு அறிவுறுத்தினன் என்க. சீயம் - சிங்கம். (29)

**'நின்னைக் கொன்றொழிப்பேன்' என அங்கதனை வெகுண்ட இராவணன் 'நீ வந்த காரியம் கூறுக' எனல்**

**7130.** அடுவனே யென்னப் பொங்கி
யோங்கிய வரக்க னந்தோ
தொடுவனே குரங்கைச் சீறிச்
சுடர்ப்படை யென்று தோன்ற
நடுவனே செய்யத் தக்க
நாளுலந் தாற்குத் தூத
படுவதே துணிந்தா யாயின்
வந்தது பகர்தி யென்றான்.

'அடுவனே' என்னப் பொங்கி
ஓங்கிய அரக்கன், 'அந்தோ!
தொடுவனே, குரங்கைச் சீறிச்
சுடர்ப்படை?' என்று தோன்ற,
'நடுவனே செய்யத்தக்க
நாள் உலந்தாற்குத் தூத!
படுவதே துணிந்தாய் ஆயின்,
வந்தது பகர்தி' என்றான்.

பொ:—(என்னை மதியாது இகழும் இவ் அங்கதனைக்) கொன்றொழிப்பேன் என்று சினத்தாற் பொங்கியெழுந்த 'அரக்கனாகிய இராவணன், 'ஐயோ! (இழிந்த) குரங்கினைச் சினந்து (அதனைக் கொல்லுதற்கென) ஒளியுடைய படையினை (என் கையால்) தீண்டுவேனோ' என்றதொரு எண்ணம் (தன் மனத்தில்) தோன்றினமையால், (தனது சினத்தை அடக்கிக் கொண்டவனாகி) நடுவு நிலையாள

ஞகிய கூற்றுவனே உயிர்கொள்ளுமாறு வாழ்நாள் முடியப்பெற்ற வனுகிய இராமனுக்குத் தூதஞக வந்தவனே! (யான் கூறிய உய்தி பெற்று வாழ்தலே விரும்பாது) இறந்தொழிதலேயே துணிந்தனே யாயின் (நீ இங்கு) வந்த காரியத்தைச் சொல்வாயாக என (அங்கதனை நோக்கி)க் கூறினுன்.

கு:—'அந்தோ! குரங்கைச் சீறிச் சுடர்ப்படை தொடுவனே' என்பது இராவணனது உள்ளத்தில் எழுந்த உணர்வாகும். 'அடுவனே' என்புழி ஏகாரம், கொன்றே தீர்ப்பேன் எனத் தேற்றப் பொருளில் வந்தது. 'தொடுவனே' என்புழி ஏகாரம், 'தொடேன்' என எதிர்மறைப் பொருளைத் தந்தது. யார் மாட்டும் விருப்பு வெறுப்பின்றி நடுநிலையில் நின்று வாழ்நாள் முடியும் எல்லை நோக்கி உடம்பினின்றும் உயிரைப் பிரித்தல் கூற்றுவனது இயல்பாதலின், அவனுக்கு 'நடுவன்' என்பது பெயராயிற்று. நாள் உலத்தல் - நாள் முடிதல். நாள் உலந்தான் என்றது, இராமனை. படுதல் - இறத்தல். (30)

## அங்கதன் இராமபிரான் கூறியவற்றை இராவணனுக்கு எடுத்துரைத்தல்

**7131.** கூவியின் றென்னை நீபோய்த்
தன்குல முழுதுங் கொல்லும்
பாவியை யமருக் கஞ்சி
யரண்புக்குப் பதுங்கி னுனைத்
தேவியை விடுக வன்றேற்
செருக்களத் தெதிர்ந்து தன்கண்
ஆவியை விடுக வென்ரு
னருளினம் விடுகி லாதான்.

'கூவி இன்று என்னை, நீ போய்,
"தன்குலம் முழுதும் கொல்லும்
பாவியை, அமருக்கு அஞ்சி
அரண்புக்குப் பதுங்கினுனை,
தேவியை விடுக! அன்றேல்,
செருக்களத்து எதிர்ந்து தன்கண்
ஆவியை விடுக!" என்ருன்,
அருள் இனம் விடுகிலாதான்.

பொ :—(நீ தன்றிறத்திற் பொறுத்தற் கொண்ணுத பெருங் குற்றஞ் செய்திருந்தும்) இன்னமும் (உன்னிடத்துத் தான் வைத் துள்ள) கருணையை நீங்காத அருளாளனுகிய இராமன், இன்றைய தினம் என்னை அழைத்து, "நீ சென்று, தான் பிறந்த (அரக்கர்) குலம் முழுவதனையும் வேருடன் கொல்லும் கொடியோனும் (என்னுடன்) போர் செய்தற்கு அஞ்சித் )தன்னகரத்து) அரணி னுள்ளே புகுந்து பதுங்கிக் கொண்டிருப்பவனும் ஆகிய இராவணனை (அடைந்து) 'சீதா தேவியை விட்டிடுக. அவ்வாறு செய்ய விருப்ப மில்லையானால் போர்க்களத்திலே எதிர்த்து வந்து உனது உயிரை விட்டிடுக' (என்று கூறுவாய் என்று கூறினன்.)

கு :—'வந்தது பகர்தி' என்ற இராவணனை நோக்கிய அங்கதன். தன்பால் இராமன் இராவணனைக் குறித்துச் சொல்லிய சொற்களைத் தொகுத்துக் கூறும் முறையில் அமைந்தது இச்செய்யுள். அருள் இன்னம் விடுகிலாதான் என்றது, பகையுள்ளும் பாடறிந் தொழுகும் பண்புடைய அருளாளனுகிய இராமனை. அருள் இன்னம் விடுகி லாதான், இன்று, என்னைக்கூவி, "நீ :போய், தன்குலம் முழுதும் கொல்லும் பாவியை, அமருக்கு அஞ்சி அரண்புக்குப் பதுங்கினனை (அணுகி), 'தேவியை' விடுக, அன்றேல் ஆவியை விடுக (என்று கூறுவாய்)" என்றான் என இயைத்துப் பொருள் கொள்க. கூவுதல் - அழைத்தல். பாவி - கொடியோன்; என்றது இராவணனை. தேவி- சீதை. இனம் - இன்னம்; இடைக்குறை. (31)

**7132.** பருந்துணப் பாட்டி யாக்கை
படுத்தநாள் படைஞ ரோடும்
மருந்தினு மினிய மாமன்
மடிந்தநாள் வனத்துள் வைகி
இருந்துழி வந்த தங்கை
யிருஞ்செவி முலையு மூக்கும்
அரிந்தநாள் வந்தி லாதா
னினிச்செய்யு மாண்மை யுண்டோ.

' "பருந்து உணப் பாட்டி யாக்கை
படுத்த நாள், படைஞரோடும்
மருந்தினும் இனிய மாமன்
மடிந்தநாள், வனத்துள் வைகி

இருந்துழி வந்த தங்கை
இருஞ்செவி முலையும் மூக்கும்
அரிந்த நாள், வந்திலாதான்
இனிச் செய்யும் ஆண்மை உண்டோ?

பொ :—பாட்டியாகிய தாடகையின் உடம்பினைப் பருந்துகள் உண்ணுமாறு (நான்) கொன்று வீழ்த்திய நாளிலும், (பிணி தீர்க்க வல்ல) மருந்தைக் காட்டினும் (நோய் நீக்கி) இன்பஞ் செய்யும் இயல்புடைய மாமனாகிய சுபாகு என்பான் (என்னாற் கொல்லப் பட்டுத் தன்) படை வீரர்களோடும் இறந்த நாளிலும், (நாங்கள்) காட்டிலே (பஞ்சவடியில்) தங்கியிருந்தபொழுது (காமுற்று) வந்த தங்கையாகிய சூர்ப்பணகையின் பெரிய செவி, தனம், மூக்கு ஆகிய அவயவங்களை (இலக்குவன்) அரிந்து தண்டித்த அந்தநாளிலும் (தான் எம்பாற்போர் குறித்து வருதல் தன் கடமையாயிருக்க, எமக்கு அஞ்சி) வாராதவனாகிய அவ் இராவணன் இனி (எம்மை எதிர்த்துச்) செய்யும் ஆண்மையும் உண்டோ?

கு :—இதுமுதல் ஐந்து செய்யுட்கள், இராமன் கூறியவற்றை அவன் கூறியவாறே இராவணன் முன்னிலையில் அங்கதன் கொண்டு கூறும் நிலையில் அமைந்தன. இராம இலக்குவர் இருவரும் விசுவா மித்திர முனிவர் செய்யும் வேள்வியைக் காத்து நின்றபொழுது, அவ் வேள்விக்கு இடையூறு செய்ய வந்த அரக்கியாகிய தாடகையையும் அவளுடைய புதல்வர்களுள் ஒருவனாகிய சுபாகு என்பவனையும் உடன்வந்த படை வீரர்களையும் இராமன் கொன்றொழித்த செய்தி பாலகாண்டம் வேள்விப் படலத்திற் கூறப்பட்டது. தாடகை என் பவள் இராவணனுக்குத் தாய்வழிப் பாட்டியும் அவள் மகன் சுபாகு தாய்மாமனும் ஆவர். தன் பாட்டியையும் அன்புடைய மாம னையும் யான் கொன்றொழித்தபொழுதும் தன் தங்கையை என் தம்பி இலக்குவன் உறுப்பறையாக்கி அவமதித்தபொழுதும் எம்பாற் சினங் கொண்டு போர்க்கு வாராத இராவணன் இவ்வளவு நாட்கள் கழித்த பின்னரும் எம்மை எதிர்த்து வந்து தன் வீரத்தினைப் புலப் படுத்துதல் உண்டோ' என இராமன் இராவணனது வீரமற்ற தன்மையினை எடுத்துரைத்து இகழ்ந்தனன் என்பதாம். சுற்றத் தார்பால் அன்புடையராய் ஒழுகும் உறவினர் பலருள்ளும் அரு மருந்தினையொத்துப் பிணி நீக்கி நலஞ்செய்யும் பேரன்பு தாய் மாம னுக்கு மருகன்பால் இயல்பாக அமைந்தது என்பார், 'மருந்தினும் இனியமாமன்' என அடை கொடுத்துச் சிறப்பித்தார் ஆசிரியர். "அன்புடைய மாமனும் மாமியும்" (6-95-1.) என ஆளுடைய அரசரும்

'கண்போன்ற மாமன்' (சீவக - பதிகம். 21) எனத் திருத்தக்க தேவரும் மாமனைச் சிறப்பித்துரைக்குந் தொடர்கள் இங்கு ஒப்பு நோக்கத்தக்கன. (32)

**7133.** கிளையொடும் படைஞ ரோடுங்
கேடிலா வுயிர்கட் கெல்லாங்
களையன தம்பி மாரை
வேரொடுங் களையக் கண்டும்
இளையவன் பிரிய மாய
மியற்றியா யிழையை வெளவும்
வளையெயிற் றரக்கன் வெம்போர்க்
கினியெதிர் வருவ துண்டோ.

'"கிளையொடும் படைஞரோடும்.
கேடு இலா உயிர்கட்கு எல்லாம்
களை அன தம்பிமாரை
வேரொடும் களையக் கண்டும்,
இளையவன் பிரிய மாயம்
இயற்றி, ஆயிழையை வெளவும்
வளை எயிற்று அரக்கன், வெம்போர்க்கு,
இனி எதிர் வருவது உண்டோ?

பொ:—அழிவில்லாத மன்னுயிர்களாகிய பயிர்களுக்கெல்லாம் களைகளைப்போன்று இடர் விளைக்கும் இயல்புடைய (கரன் முதலிய) தம்பிமார்களைச் சுற்றத்தோடும் படை வீரர்களோடும் வேருடன் களைந்து நீக்கிய (என்) செயலை அறிந்து வைத்தும் (என்) தம்பியாகிய இலக்குவன் (சீதையைக் காக்கும் தன் காவலை நீங்கி அவ்விடத்தை விட்டுப்) பிரியும்படி வஞ்சனையைச் செய்து ஆராய்ந்து இயற்றிய அணிகலன்களை யுடையாளாகிய சீதையைக் (களவிற்) கவர்ந்து சென்ற வளைந்த (கோரப்) பற்களையுடைய அரக்கனாகிய இராவணன் (என்னுடன்) வெம்மையையுடைய போர் செய்தற்பொருட்டு இனி எதிர்த்து வருதல் உண்டோ?

கு:—கேடிலா உயிர்கட்கெல்லாம் களை அன்ன தம்பிமாரைக் கிளையொடும் படைஞரோடும் வேரொடும் களையக் கண்டும் மாயம் இயற்றி ஆயிழையை வெளவும் அரக்கன் இனி வெம்போர்க்கு எதிர் வருதல் உண்டோ என இயைத்துரைக்க. கிளை - சுற்றம். படைஞர் - வேல் முதலிய படைக்கலங்களைக் கையிற்கொண்ட வீரர்கள்

உயிர்கள் நிற்றற்கு நிலைக்களமாகிய யாக்கைக்கேயன்றி அவற்றின் கண் நிலைபெற்ற உயிர்கட்கு என்றும் அழிவில்லை என்பார், 'கேடிலா உயிர்கள்' என்றார். களை – நெல் முதலிய பயன்தரும் பயிர்களின் வளர்ச்சிக்குத் தடையாய் அவற்றினிடையே தோன்றி அடரும் புற் பூடுகள். களை அன்ன தம்பிமார் என்றது, இராவணனுக்குத் தம்பி முறையுடைய கரன் தூடணன் முதலியோரை. இராவணனுடைய தந்தை விசிரவ முனிவர். அவன் தாய் கேகசி. அவளுடைய தங் கையின் வயிற்றில் விசிரவ முனிவர்க்கு மகனாகத் தோன்றியவன் கரன். விசிரவ முனிவராகிய அவர்க்குக் கலை என்பவள் வயிற்றிற் பிறந்தவர்கள் தூடணன், திரிசிரசு என்போர். ஆகவே கரன், தூடணன், திரிசிரசு என்போர் இராவணனுக்குத் தம்பி முறையின ராயினர். இவர்களை இராமபிரான் கொன்றொழித்த செய்தி முன்னர் (கரன்வதைப் படலத்திற்) கூறப்பட்டது. இவ்வாறு தன் தம்பியர் முதலிய சுற்றத்தார்களைக் கொன்றொழித்த தோடன்றித் தன் தங் கையின் மூக்கு முதலிய அவயவங்களைச் சிதைத்து அவமானப் படுத்திய செய்தியைத் தான் அறிந்து வைத்தும் எம்மொடு நேர் நின்று போர் செய்தற்கு அஞ்சி வஞ்சனையால் என் தம்பியைப் பிரியச் செய்து சீதையைத் திருடிச் சென்ற கள்வனாகிய அவ் இராவணன் இனி எம்மொடு போர் புரிதற்கு வருவான் என்று நினைத்தற்கு இட மில்லை என்றான் இராமன். காணுதல் - அறிதல். (33)

**7134.** ஏந்திழை தன்னைக் கண்ணுற்
றெதிர்ந்தவர் தம்மை யெற்றிச்
சாந்தெனப் புதல்வன் றன்னைத்
தரையிடைத் தேய்த்துத் தன்னூர்
காந்தெரி மடுத்துத் தானுங்
காணவே கடலைத் தாவிப்
போந்தபின் வந்தி லாதா
னினிப்பொரும் போரு முண்டோ.

"ஏந்திழை தன்னைக் கண்ணுற்று,
எதிர்ந்தவர் தம்மை எற்றி,
சாந்து எனப் புதல்வன் தன்னைத்
தரையிடைத் தேய்த்து, தன் ஊர்
காந்து எரிமடுத்து, தானும்
காணவே, கடலைத் தாவிப்
போந்த பின், வந்திலாதான் இனிப்
பொரும் போரும் உண்டோ?

பொ :—(எனது ஏவலால் சீதையைத் தேடி இலங்கையை அடைந்த அநுமன்) அங்கே சீதையை(த் தேடி)க் கண்டு தன்னை எதிர்ப்பட்ட அரக்கர்களை(க் காலினால்) தாக்கி யழித்து(த் தன்) மகனாகிய அட்சகுமாரனை (அரைத்த) சாந்தினைப் போன்று பூமியில் தேய்த்து அரைத்துத் தனது பேரூராகிய இலங்கையைக் கொழுந்து விட்டெரியும் நெருப்புக்கு இரையாக்கித் தான் தன் கண்களாற் பார்த்திருக்கும் நிலையிலேயே கடலைத் தாண்டி மீண்ட பின்னும் (அவ் அநுமனைத் தொடர்ந்து எம்மொடு போர் செய்தற்கு) வாராத இராவணன், இனி (மேற்கொண்டு) செய்தற்குரிய போர்த் தொழிலும் உண்டோ ?

கு :—எனது அம்பினால் கரன் முதலியோர் கொல்லப்பட்டழிந்த செயலை இராவணன் நேரிற் கண்டிலனாயினும் அநுமன் இலங்கையிற் செய்த அழிவுகளை நேரிற் கண்டுள்ளானாதலால் அவ்வநுமனைத் தொடர்ந்து எம்முடன் போருக்கு வந்திருத்தல் வேண்டும். அந் நிலையிலும் வாராதவன் இனியும் எதிர்த்து வருவான் என எதிர் பார்த்தற்கு இடமில்லை என்பதாம். ஏந்திழை என்றது சீதையை. அநுமன் கடலைத் தாவிச் சென்று இலங்கையடைந்து சீதையைத் தேடிக்கண்டு தம்மை யெதிர்ப்பட்ட அரக்கர்களையும் இராவணன் புதல்வன் அட்ச குமாரனையும் கொன்று இலங்கையைத் தீக்கிரை யாக்கி மீண்ட செய்தி சுந்தர காண்டத்தில் நன்கு விரித்துரைக்கப் பெற்றதாதலின், அச் செயலைச் செய்தவன் அநுமன் என்பது இங்கு வெளிப்படக் கூறவேண்டாததாயிற்று. 'தன்னூர்' என்புழித் தன் என்றதும் 'தானும்' என்புழித் தான் என்றதும் இராவணனை. எரி மடுத்தல் – தீக்கிரையாக்கல். (34)

**7135.** உடைக்குலத் தொற்றர் தம்பா
லுயிர்கொடுத் துள்ளக் கள்ளந்
துடைத்துழி வருணன் வந்து
தொழுதுழித் தொழாத கொற்றக்
குடைத்தொழி றம்பி கொள்ளக்
கொடுத்துழி வேலை கோலி
அடைத்துழி வந்தி லாதா
னமர்க்கினி வருவ துண்டோ.

' "உடைக் குலத்து ஒற்றர் தம்பால்
உயிர் கொடுத்து உள்ளக் கள்ளம்
துடைத்துழி, வருணன் வந்து
தொழுதுழி, தொழாத கொற்றக்

குடைத் தொழில் தம்பி கொள்ளக்
கொடுத்துழி, வேலை கோலி
அடைத்துழி, வந்திலாதான், அமர்க்கு
இனி வருவது உண்டோ ?

பொ :—(தான் பிறரைத்) தொழவேண்டாத வெற்றி பொருந்திய குடை நிழலில் வைத்துக் குடிமக்களை ஆளுதலாகிய (இலங்கையின்) அரசுரிமைத் தொழிலைத் (தன்) தம்பியாகிய வீடணனுக்கு (யான் உரிமை செய்து) கொடுத்தபொழுதும், (அதனை நிறைவேற்றற் பொருட்டு யாம் வானர சேனையுடன் வந்து கடலைக் கடக்க முயன்ற நிலையில் கடல் தலைவனாகிய) வருணன் (வெளிப்பட்டு) வந்து (எம்மை) வணங்கிய காலத்தும், (அவனது இசைவுபெற்றுக்) கடலை வளைத்து அணையைக் கட்டி முடித்த காலத்தும், தன்னுடைய அரக்கர் குலத்திற்கேற்ற வஞ்சனைத் தொழிலையுடைய (சுகசாரண ராகிய) ஒற்றர்கள்பால் (அருள்கூர்ந்து அவர்களைக் கொல்லாது) உயிர்வழங்கி அவருடைய மனத்திலுள்ள வஞ்சனையை அறவே போக்கிய காலத்தும் (எமது ஆற்றலையுணர்ந்து எம்முடன் எதிர்த்துப் போர்புரிய) வாராத இராவணன் இனி (எம்மிடத்து)ப் போர் மேற்கொண்டு வருவது உளதோ ?

கு :—தொழாத கொற்றக் குடைத்தொழில் தம்பி கொள்ளக் கொடுத்துழி, வருணன் வந்து தொழுதுழி, வேலை கோலி அடைத்துழி, உடைக்குலத்து ஒற்றர் தம்பால் உயிர் கொடுத்து உள்ளக் கள்ளம் துடைத்துழி, வந்திலாதான் அமர்க்கு இனி வருவது உண்டோ? என இயையும். செய்யுளாதலின் முறை பிறழ வைக்கப்பட்டன. தொழாத கொற்றக் குடைத்தொழில் என்றது, வேந்தனாகிய தன்னைப் பிறர் தொழுவதன்றித் தான் பிறரைத் தொழ வேண்டாத நிலையில் வெண்கொற்றக் குடை நிழலிலே வீற்றிருந்து நாட்டினை ஆட்சி புரிதலாகிய அரசுரிமையினை. தீயோனாகிய தமையனை வெறுத்துத் தன்னை அடைக்கலம் புகுந்த வீடணனுக்கு இராமபிரான் இலங்கையின் அரசாட்சியினை உலக மறிய உரிமையாக்கிய செய்தி, வீடணன் அடைக்கலப் படலத்தில் விரித்துரைக்கப்பட்டது. 'தம்பி' என்றது இராவணனுக்குத் தம்பி யாகிய வீடணனை. இராமபிரான் கடலில் வழிவிடுமாறு வருணனை வேண்டி நோன்பிருக்கவும் வருணன் வாராமையால் வெகுண்டு அம்பினைச் செலுத்த, அதுகண்டு அஞ்சி நடுக்கமுற்ற வருணன் விரைந்து வந்து இராமபிரானைத் தொழுது கடலில் அணைகட்டிக் கொள்ளுமாறு இசைவளித்த செய்தி வருணனை வழிவேண்டு படலத் திலும், அவ்வாறே வானர வீரர்கள் கடலில் அணைகட்டிய செய்தி சேதுபந்தனப் படலத்திலும் கூறப்பட்டன. இராமன் எழுபது

வெள்ளம் வானர சேனைகளுடன் கடலைக் கடந்து இலங்கையி னுள்ளே புகுந்து தங்கியபொழுது அச்சேனைகளின் நிலையினை அறிதற்பொருட்டு இராவணனால் அனுப்பப்பட்ட சுகன், சாரணன் என்னும் ஒற்றர் இருவர் குரங்கின் வடிவுகொண்டு அச்சேனையி னுள்ளே புகுந்தாராக, அதனைக் கண்டுகொண்ட வீடணன் ஒற்ற ராகிய அவ்விருவரையும் இழுத்துவந்து இராமன் முன்னே நிறுத்தி மந்திரவலியால் அவர்கள் தம் பழைய அரக்கர் வடிவினைப் பெறுமாறு செய்ய அருளாளனாகிய இராமன், கள்ள வேடங்கொண்ட அவ்விரு வரையும் வானரர்கள் கொல்லாதபடி தடுத்துக் காத்து அவர்களுக்கு உயிர் வழங்கித் தன் சேனைகளையும் காட்டித் தன் வலிமைகளை யெல்லாம் இராவணன் அறியச் சொல்லும்படி கூறி விடுத்தமை ஒற்றுக் கேள்விப் படலத்திற் கூறப்பட்டது. மேற்குறித்த இடங்களி லெல்லாம் இராவணன் இராமன் முதலியோரை எதிர்த்துத்தாக்கும் வாய்ப்புடையவனாக இருந்தும், இராமனுடன் போர்புரிய வாராது காலங்கடத்தியிருந்தது அவனுக்குப் போர்த்தொழிலில் ஊக்கமில்லா மையை விளக்குமாதலால், 'இனி அவன் தானே போர்மேற் கொண்டு வருவதென்பது உறுதியில்லை' என்பது புலப்பட 'அமர்க்கு இனி வருவதுண்டோ' என்றான். (35)

**7136.** மறிப்புண்ட தேவர் காண
　　மணிவரைத் தோளின் வைகும்
நெறிப்புண்ட ரீக மன்ன
　　முகத்தியர் முன்னே நென்னல்
பொறிப்புண்ட ரீகம் போலு
　　மொருவனாற் புனைந்த மோலி
பறிப்புண்டும் வந்தி லாதா
　　னினிப்பொரும் பான்மை யுண்டோ.

"மறிப்புண்ட தேவர் காண,
　　மணி வரைத் தோளின் வைகும்
நெறிப் புண்டரீகம் அன்ன
　　முகத்தியர் முன்னே, நென்னல்,
பொறிப் புண்டரீகம் போலும்
　　ஒருவனால், புனைந்த மோலி
பறிப்புண்டும், வந்திலாதான் இனிப்
　　பொரும் பான்மை உண்டோ ?

பொ :—(தன்னால்) ஆற்றல் மடங்கி அடங்கிய தேவர்கள் பார்த்திருக்க நீலமணிபோலும் நிறம் வாய்ந்த மலைபோன்ற (தன்) தோள்களிற் பொருந்தும் நெறித்தலைக்கொண்டு விரிந்த தாமரை மலர் போலும் முகங்களையுடையராகிய காதல் மகளிர்க்கு எதிரே, உடம்பிற் புள்ளிகளையுடைய புலியினையொத்த ஒப்பற்ற வீரனாகிய சுக்கிரீவனால் நேற்றைய தினம் தான் அணிந்த முடியின் மணிகள் பறிக்கப்பட்டும் (எம்மை எதிர்த்துப் பொருதற்கு) வாராத இராவணன் இனியும் (எதிர்த்துப்) பொருதற்கு முந்தும் தன்மையுண்டோ?

கு :—தன்பால் ஆற்றல் மடங்கி அடங்கிய பகைவர் பார்த்து உள்ளத்துள்ளே நகைக்கத் தன்னாற் காதலிக்கப்பட்ட மகளிர் முன்னிலையிலே வேந்தனொருவன் தன் முடிமணி பறிக்கப்பட்டுத் தாழ்வுறுதல் மிகப் பெரிய அவமானமாகவும், அங்ஙனம் பகைவரால் தாழ்வுற்ற நிலையிலும் பகைவரை யெதிர்த்துப் பொரும் மானமும் வீரமுமின்றித் தன் அரண்மனையில் ஒடுங்கியிருத்தல் இகழத்தக்கது என்பான், 'மறிப்புண்ட தேவர் காண, புண்டரீகம் அன்ன முகத்தியர் முன்னே, மோலி பறிப்புண்டும் வந்திலாதான்' என்றான். மறிப்புண்ணுதல் - ஆற்றல் மடங்கி அடங்குதல். மணி - நீலமணி. வரை - மலை. மணி இராவணனுடைய தோள்களின் நிறத்திற்கும், மலை வடிவின் உயர்ச்சிக்கும் உவமை. நெறிப்புண்ணுதல் - கட்டு விட்டு அலரப்பெறுதல். நென்னல் - நெருநல்; நேற்று. புண்டரீகம் - தாமரை. பொறி - புள்ளி. புண்டரீகம் - புலி. ஒருவன் என்றது ஒப்பற்ற வீரனாகிய சுக்கிரீவனை. மோலி - முடி; என்றது, அதன்கண் பதிக்கப்பெற்ற மணிகளை. (36)

## அங்கதன் இராவணனை நோக்கி 'சீதையைச் சிறைவீடு செய்தல் அல்லது போருக்குப் புறப்படுதல் இரண்டில் ஒன்றைச் செய்க' என முடிவாகக் கூறுதல்

**7137.** என்றிவை யியம்பி வாவென்
றேவின னென்னை யெண்ணி
ஒன்றுனக் குறுவ துன்னித்
துணிந்துரை யுறுதி பார்க்கின்
துன்றிருங் குழலை விட்டுத்
தொழுதுவாழ் சுற்றத் தோடும்
பொன்றுதி யாயி னென்பின்
வாயிலிற் புறப்ப டென்றான்.

"'என்று இவை இயம்பிவா" என்று
ஏவினன் என்னை; எண்ணி
ஒன்று உனக்கு உறுவது உன்னித்
துணிந்து உரை; உறுதி பார்க்கின்,
துன்று இருங் குழலை விட்டுத்
தொழுதுவாழ்; சுற்றத்தோடும்
பொன்றுதி ஆயின், என்பின்,
வாயிலில் புறப்படு' என்ருன்.

பொ:—என்று இம்மொழிகளைச் சொல்லி (அந்த இராவணனது மனக்கருத்தினை அறிந்து) வருவாயாக என்று பணித்து என்னை (உன்னிடம் தூதாக) அனுப்பினுன். (அம் முதல்வன் கூறிய இரண்டினுள்) உன்னுற் செய்யத்தக்கதாகப் பொருந்திய ஒன்றினை எண்ணித் துணிந்து சொல்வாயாக. உனக்கு உறுதிதருஞ் செயலை நோக்குவாயானுல் நெருங்கி வளர்ந்த கரிய கூந்தலை யுடையாளாகிய சீதையை (இராமன்பால் கொண்டு வந்து) விட்டு (அவனை) வணங்கி வாழ்வு பெறுவாயாக. உன் சுற்றத்தாரோடும் அழிந்தொழிய எண்ணினையாயின் (என்னைத் தொடர்ந்து) என் பின்னுக (நின் நகர) வாயிலிற் (போருக்குப்) புறப்படுவாயாக என்று கூறினுன் (அங்கதன்).

கு:—இவை என்றது 32 முதல் 36 முடியவுள்ள செய்யுட்களில் இராமன் கூற்ருக அமைந்த மொழிகளை. அம்மொழிகளை அவ்வாறே இராவணன்பால் அங்கதன் கொண்டு கூறினுன். 'எண்ணி ஒன்று உனக்கு உறுவது உன்னித் துணிந்து உரை; உறுதி பார்க்கின் துன்று இருங்குழலைவிட்டுத் தொழுது வாழ்; சுற்றத்தோடும் பொன்றுதியாயின் என்பின் வாயிலிற் புறப்படு' என வரும் இக்கூற்று, தூதனுய் வந்த அங்கதன் இராவணனை நோக்கித் தான் வகுத்துக் கூறும் அறிவுரையாக அமைந்ததாகும். ஆகவே இராமன் அனுப்பிய தூதனுகச் சென்ற அங்கதன், கூறியது கூறுவான், தான் வகுத்துக் கூறுவான் எனப்படும் இருவகைத் தூதரியல்பும் ஒருங்கமையப் பெற்றவன் என்பது இனிது புலனும். துன்று இருங்குழல்-நெருங்கிய கரிய கூந்தலையுடையாள்; சீதை; அன்மொழித்தொகை. பொன்றுதல் - இறத்தல்.

(37)

'நீ போருக்குப் புறப்படாது உன் ஊரிற் பதுங்கியிருத்தல் பழி' என இராவணனது மனம் வருந்தச் சொல்லுதல்

**7138.** நீரிலே பட்ட சூழ்ந்த
நெருப்பிலே பட்ட நீண்ட
பாரிலே பட்ட வானப்
பரப்பிலே பட்ட வெல்லாம்
போரிலே பட்டு வீழப்
பொருதநீ யொளித்துப் புக்குன்
ஊரிலே பட்டா யென்றுற்
பழியென வுளையச் சொன்னான்.

' நீரிலே பட்ட, சூழ்ந்த
நெருப்பிலே பட்ட, நீண்ட
பாரிலே பட்ட, வானப்
பரப்பிலே பட்ட எல்லாம்,
போரிலே பட்டு வீழப் பொருத நீ,
ஒளித்துப் புக்கு உன்
ஊரிலே பட்டாய் என்றால், பழி'
என உளையச் சொன்னான்.

பொ :—நீர்க்கடவுளால் ஆளப்படும் உலகிலே தோன்றினவும் சூழ்ந்து பற்றவல்ல அங்கியங் கடவுளால் ஆளப்படும் உலகிலே தோன்றினவும் நீண்டு பரவிய இப்பூமியிலே தோன்றினவும் வானப் பரப்பிலுள்ள உலகிலே தோன்றினவும் ஆகிய உயிர்த் தொகுதிகள் யாவும் போர்க்களத்திலே அகப்பட்டு இறந்தொழியுமாறு (எல்லாத் திசைகளிலும் சென்று வருணன் முதலிய திசை காவலர்களோடு) பொருது வெற்றி கொண்ட (பெரு வீரனாகிய) நீ (மாற்றார் படை உன்னுடைய இலங்கை நகரத்தை வளைத்துக் கொண்டு நின்னைப் போருக்கு அழைக்கும் இந்நிலையில்) உன்னுடைய ஊரினுள்ளே புகுந்து ஒளித்துக்கொண்டிருக்கின்றாய் என்றால் (இதனால் உனக்குப்) பழியேயாம் என்று (இராவணனது உள்ளம்) வருந்தும்படி கடிந்துரைத்தான் (அங்கதன்).

கு :—நீர், நெருப்பு என்பன முறையே அவற்றின் தெய்வங்களாற் காக்கப்படும் திசையிடங்களைச் சுட்டி நின்றன. திசை காவ

லர்களைப் பொருது வென்ற பெரு வீரனாகிய நீ உன் நகரத்தை மாற்றார் சேனை வளைந்து முற்றிப் போருக்கு அழைக்கும் இந்நிலையில் இங்ஙனம் நீ நின்னகருட்புக்கு ஒடுங்கியிருத்தல் நினக்குப் பழி விளைப்பதாகும் என்று அங்கதன் இராவணனுக்கு அறிவுறுத்தினான் என்றவாறு, 'படுதல்' என்ற சொல் இச்செய்யுளின் முதலிரண்டடிகளிலும் தோன்றுதல் என்ற பொருளிலும், மூன்றாமடியில் இறத்தல் என்ற பொருளிலும் நான்காமடியிற் பொருந்தியுறைதல் என்ற பொருளிலும் ஆளப்பட்டது. உளைய - மனம் வருந்த. (38)

## சினங்கொண்ட இராவணன் அங்கதனைப் பற்றுமாறு அரக்கர் நால்வரை ஏவுதல்

7139. சொற்ற வார்த்தையைக் கேட்டலுந் தொல்லுயிர்
★ முற்று முண்பது போலு முனிவினான்
பற்று மின்கடி தின்னெடும் பார்மிசை
எற்று மின்னென நால்வரை யேவினான்.

சொற்ற வார்த்தையைக் கேட்டலும், தொல் உயிர்
முற்றும் உண்பது போலும் முனிவினான்,
'பற்றுமின், கடிதின்; நெடும் பார்மிசை
எற்றுமின்' என, நால்வரை ஏவினான்.

பொ:—(இங்ஙனம் அங்கதன்) கூறிய மொழிகளைக் கேட்ட அளவில் தொன்று தொட்டு இவ்வுலகில் வாழும் உயிர்கள் எல்லாவற்றையும் ஒரு சேர விழுங்கி விடுவது போலும் பெருஞ்சினமுடையனாகிய இராவணன், (தூதனாகிய இவனை) விரைந்து பற்றிக் கொண்மின். நீண்ட பூமியின் மேல் (இவனை) மோதித்தாக்குமின்" என்று சொல்லி (அரக்கர்) நால்வரை அனுப்பினான்.

கு:—அங்கதன் கூறிய வார்த்தையினைக் கேட்டவுடனே 'இவனது சினம் உலகவுயிர் முழுவதையும் உண்டொழித்து விடுமோ' எனக் கண்டோர் கருதுமாறு இராவணன் கடுங்கோபமுடையவனானான் என்பார், 'சொற்ற வார்த்தையைக் கேட்டலும் தொல்லுயிர் முற்றும் உண்பது போலும் முனிவினான்' என்றார். பற்றுதல் - பிடித்தல். எற்றுதல் - மோதித் தாக்குதல். (39)

அங்கதன், தன்னைப் பற்றிய அரக்கர் நால்வரையும் அவர்கள் தலை சிதறும்படி கோபுர வாயிலில் வீசி எறிந்துவிட்டு இலங்கை நகரத்தாரைப் புறத்தே ஓடி யுய்யுமாறு சொல்லி மீளுதல்

**7140.** ஏவி னார்பிடித் தாரை யெடுத்தெழத்
தாவி னனவர் தந்தலை போயறக்
கூவி னனவன் கோபுர வாயிலிற்
றூவி னன்றுகைத் தானிவை சொல்லினன்.

ஏவினர் பிடித்தாரை எடுத்து எழத்
தாவினன், அவர் தம் தலை போய் அறக்
கூவினன், அவன், கோபுர வாயிலில்
தூவினன், துகைத்தான், இவை சொல்லினன்.

பொ :—(இவ்வாறு இராவணனால்) ஏவப்பட்டவர்களாய்(த் தன்னை அணுகிப்) பிடித்த (அரக்கர்) நால்வரையும் (ஒரு சேரத்) தூக்கிக்கொண்டு (வானின் மீது) உயரப் பாய்ந்தான்; அவர்களுடைய தலைகள் அற்றுக் கீழே விழுமாறு அவ்விராவணனது (நகரத்தின்) கோபுர வாயிலிலே சிதறி எறிந்தவனாய்(க் காலால்) மிதித்து(ப் போருக்கு) அறைகூவியழைத்தவனாய்(ப் பின்வரும்) இவ்வார்த்தைகளைச் சொன்னான் (அங்கதன்).

கு :—ஏவினர் – (அங்கதனைப் பற்றுமாறு இராவணனால்) ஏவப்பட்டோராகிய அரக்கர்கள்; செயப்படு பொருளை வினை முதல் போலக் கூறினர். எழத்தாவுதல் - வானின் மீது தாவி எழுதல். அவர் தம் தலை போய் அறக் கோபுர வாயிலில் தூவினன், துகைத்தான், கூவினன், இவை சொல்லினன் என இயையும். தூவுதல் - மேலிருந்து கீழே விழும்படி சிதறுதல். துகைத்தல் - காலால் மிதித்து உழக்குதல். கூவுதல் - அறைகூவிப் போருக்கு அழைத்தல். (40)

**7141.** ஏமஞ் சார வெளியவர் யாவிரும்
தூமங் கால்வன வீரன் சுடுசரம்
வேமின் போல்வன வீழ்வதன் முன்னமே
போமின் போமின் புறத்தென்று போயினன்.

'ஏமம் சார, எளியவர் யாவிரும்,
தூமம் கால்வன, வீரன் சுடுசரம்,

வேம் மின் போல்வன, வீழ்வதன் முன்னமே,
போமின் போமின், புறத்து' என்று போயினன்.

பொ :—(அங்கதன் இலங்கை நகரத்தாரை நோக்கி,) 'இராமனுடைய சுடுந்தன்மையனவாகிய அம்புகள் புகையைக் கக்குவனவாகி, எரிகின்ற மின்னலையொத்தனவாய் (இந்நகரத்தில் வந்து) வீழ்வதற்கு முன்னரே (நும்மைக் காப்பாற்றிக் கொள்ளும் வன்மையில்லாத) எளிமை நிலையினராய நீவிர் எல்லீரும் (நுமக்குப்) பாதுகாப்பான இடத்தை நாடிப் புறத்தே விரைந்து செல்லுங்கள்' என்று சொல்லி (அவ்விடத்தை விட்டு நீங்கி, இராமனிருக்கும் இடத்தினை)ச் சென்றடைந்தான்.

கு :—வீரன் சுடுசரம் தூமம் கால்வன, வேம் மின்போல்வன வீழ்வதன் முன்னமே. எளியவர் யாவிரும், ஏமம் சாரப் புறத்துப் போமின் போமின் என்று போயினன் என இயையும். ஏமம் - பாதுகாப்பு ; ஈண்டு பாதுகாவலையுடைய இடத்தைக் குறித்தது. எளியவர் – போரில் எதிர்த்து நிற்றலாற்றாத வலியற்றோர். தூமம் - புகை. போமின் போமின் என்பது விரைவுபற்றிய அடுக்கு. இவ்வாறு அங்கதன் பகைவர் நாட்டில் வாழும் எளியோரை நோக்கி, 'போர்வலிக்கு ஆற்றாது எளியராயுள்ளீர் அனைவீரும் நுமக்குப் பாதுகாவலானதோரிடத்தை நாடியடையுங்கள்' என அறிவுறுத்தியது,

'ஆவும் ஆனியற் பார்ப்பனமாக்களும்
பெண்டிரும் பிணியுடையீரும் பேணித்
தென்புல வாழ்நர்க் கருங்கட னிறுக்கும்
பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரும்
எம் அம்புகடி விடுதும் நும்மரண் சேர்மின் என
அறத்தாறு நுவலும்பூட்கை மறத்தின்'

(புறநானூறு - 9) இயல்பினைப் புலப்படுத்துவதாகும். (41)

### அங்கதன் வான்வழியே வந்து இராமனையடைந்து அவன் திருவடிகளை வணங்குதல்

7142. அந்த ரத்திடை யார்த்தெழுந் தானவர்
சிந்த ரத்தந் துதைந்தெழுஞ் செச்சையான்
இந்து விண்ணின் றிழிந்துள தாமென
வந்து வீர னடியின் வணங்கினன்.

அந்தரத்திடை ஆர்த்து எழுந்தான் அவர்
சிந்து, அரத்தம் துதைந்து எழும் செச்சையான்,
இந்து விண் நின்று இழிந்துளதாம் என,
வந்து, வீரன் அடியின் வணங்கினன்.

பொ :—விசும்பின் மீது ஆரவாரித்து எழுந்தவனாகிய அங்கதன் அவ் அரக்கர்களுடைய உடம்பினின்றும் சிந்துகின்ற குருதி நீர் செறிந்து படிந்தமையால் செஞ்சந்தனக் குழம்பினையுடையனாய் வானத்தினின்றும் சந்திரன் நிலத்தின் மிசை இறங்கியது என்னும் படி விசும்பினின்றும் இறங்கி வந்து வீரனாகிய இராமன் திருவடிகளில் (வீழ்ந்து) வணங்கினன்.

கு :—அவர் என்றது, இராவணனது ஏவலால் அங்கதனைப் பற்றிய அவ்வரக்கர்களை. அரத்தம் - செந்நீர். செச்சையான் என்றது, அரக்கர்களைப் புடைத்து அவருடைய உடம்பினின்று சிந்தும் குருதிநீர் தன் மேற் படியச் செஞ்சந்தனக் குழம்பு பூசியவனை யொத்துத் தோன்றும் அங்கதனை. ஆர்த்தெழுந்தான், செச்சையான், வணங்கினன் என முடிக்க. இந்து - சந்திரன். வானத்தினின்றும் நிலத்தில் இறங்கி வந்த வெண்ணிற மேனியனாகிய அங்கதனுக்கு விசும்பிலிருந்து பூமியில் இறங்கிய வெண்மதியை உவமை கூறினர் ஆசிரியர். (42)

## இராவணன் கருத்து இன்னது என இராமனுக்குத் தெரிவித்தல்

**7143.** உற்ற போதவ னுள்ளக் கருத்தெலாம்
கொற்ற வீர னுணர்த்தென்று கூறலும்
முற்ற வோதியென் மூர்க்கன் முடித்தலை
அற்ற போதன்றி யாசை யருனென்றான்.

உற்றபோது, 'அவன் உள்ளக் கருத்து எலாம்',
கொற்ற வீரன் 'உணர்த்து' என்று கூறலும்,
'முற்ற ஓதி என்? மூர்க்கன், முடித்தலை
அற்றபோது அன்றி, ஆசை அருன்' என்றான்.

பொ :—(அங்கதன்) வந்து சேர்ந்த பொழுது, வெற்றித்திறம் வாய்ந்த வீரனாகிய இராமன் (அங்கதனை நொக்கி,) 'அந்த இராவணனது மனத்திலுள்ள எண்ணங்களை யெல்லாம் தெரிவிப்பாயாக' என்று கூற, (கேட்ட அங்கதன்) 'அவற்றை முழுவதும் சொல்லி

யாது பயன் ? (கொண்டது விடாத) மூர்க்கனாகிய இராவணன் முடி யணியப்பெற்ற (தன்) தலைகள் (போரில்) அறுபட்டபோதன்றி(த் தன் மனத்திலுள்ள பொருந்தாக் காமமாகிய) ஆசையினை விட்டொழிப்பான் அல்லன்' என (அவன் மனக் கருத்தினை) எடுத்துரைத்தான்.

கு :—'மூர்க்கனும் முதலையும் கொண்டது விடா' என்றவாறு பிடிவாதமுடைய கொடியோனாகிய இராவணன், முறையற்ற நிலையிற் சீதையின் மேற் கொண்டுள்ள ஆசையினைப் போர்க்களத்தில் தன் தலைகள் அறுபட்டுத் தான் சாகும் வரையிலும் விடமாட்டான் என்பான், 'மூர்க்கன் முடித்தலை அற்றபோது அன்றி ஆசை அறான்' என அவனது துணிபினை எடுத்துரைத்தான் அங்கதன். (43)

## அங்கதன் தூதுப் படலம் முற்றிற்று

# 14. முதற் போர்ப் படலம்

இராமனும் இராவணனும், வானரப் படையும் அரக்கர் படையும் முதல் நாளில் எதிர்த்துப் போர் செய்ததைப் பற்றிக் கூறும் பகுதியாகலின், இப்படலம் முதற் போர்ப் படலம் என்று பெயர் பெறுகின்றது. சிற்சில சுவடிகளில் இப்படலப் பெயர், முதற் போர்புரி படலம் எனவும், இராவணன் முதல் நாளில் மகுடபங்கப் படலம் எனவும், இராவணன் முதல் நாளையில் தோற்ற படலம் எனவும். முதனாள யுத்தம் எனவும் வேறுபட்டும் காணப்படுகின்றது. முதல் என்றது, தொடக்கத்தையும் தொடக்க நாளையும் உணர்த்துகின்றது

இராமன் சொல்லியனுப்பிய தூது நிகழ்ச்சியைக் கேட்டு வெகுண்டு, இராவணன் அனுப்பிய அரக்கர்களோடு வானில் எழுந்து சென்று, அவர் தம் தலைகளைத் தகர்த்துக் கோபுர வாயிலில் வீழ்த்தி மிதித்து வந்த அங்கதன் கூறிய செய்தியால், இனிப் போர் நிகழ வேண்டியதே என்பது முடிவு செய்யப்படுகின்றது. இராமன் ஏவலால் வானர வீரர்கள் இலங்கையின் அகழியைத் தூர்த்து மதிலை வளைத்துக் கொள்கின்றனர். நான்கு வாயிலின் வழியாகவும் அரக்கர் சேனை புறப்படுகின்றது. இருதிறத்துச் சேனையும் கடுமையாகப் போர் செய்கின்றது. வடக்கு வாயிலில் வச்சிரமுட்டி என்னும் அரக்கர்படைத் தலைவன் கடும்போர் புரிகின்றான். அவனோடு சுக்கிரீவன் நெடிது போழ்து போர் செய்து அவனைக் கொல்கின்றான். அதைக் கண்ட அரக்கர் படை நடுநடுங்கி இலங்கை நகர் நோக்கி ஓடுகின்றது. கிழக்கு வாயிலில் அரக்கர் சேனை ஊழி யிறுதியில் கடல் பெருக்கெடுப்பதுபோல் பெருக்கெடுத்து வருகின்றது. வானரப் படையோடு கடும்போர் புரிகின்றது. நீலன் செய்த வீரப் போரால் அரக்கர் சேனை பின்னிடுகின்றது. கும்பானு என்ற அரக்கர்படைத் தலைவன் வந்து எதிர்த்துப் போர் செய்ய வானரப் படை நிலை குலைகின்றது. அது கண்ட கரடித் தலைவனாகிய இடும்பன் அந்தக் கும்பானுவை எதிர்த்து மோத அவன் மூளை சிதறி உயிர் இழக்கின்றான். கும்பானு இறந்ததை அறிந்து பிரகத்தன் வானரப் படைகளைத் தாக்குகின்றான். வானரர்கள் நடுங்கி ஓடுகின்றனர். நீலன் அப் பிரகத்தனை எதிர்த்துப் போர் செய்து இறுதியில் தன் வாலினால் அவனைச் சுற்றி வீழ்த்திக் கொல்கின்றான்.

தெற்கு வாயிலில் அங்கதனுக்கு முன் நிற்கவும் மாட்டாமல் அரக்கர்படை ஓடுகின்றது. சுபாரிசன் என்ற அரக்கர்படைத் தலைவன் கடும்போர் செய்து அங்கதனால் இறந்து படுகின்றான்.

மேற்கு வாயிலில் துன்முகன் என்ற அரக்கன் அனுமன் என்னும் எமனால் மாள்கின்றான்.

இவ்வாறு நான்கு திசைகளிலும் அரக்கர் படைக்குத் தோல்வி ஏற்பட்டமை கண்டு அவ்வவ் விடங்களில் இருந்த ஒற்றர்கள் இராவணனுக்குத் தெரிவிக்கின்றார்கள். அது கேட்ட இராவணன் துன்பமும் சினமும் பொங்கப் போர்க்கோலம் பூண்டு போர்க்களத்திற்குப் புறப்படுகின்றான். அவன் புறப்படுவதை ஒற்றரால் அறிந்து இராமனும் போர்க்கு ஆயத்தமாகின்றான். சுக்கிரீவன் இராவணனோடு போர் செய்து மெலிவடைகின்றான். பின்பு அநுமன் வந்து அவனோடு குத்துச் சண்டை செய்து மெலிவுறுகின்றான். பின் இலக்குவன் இராவணனை எதிர்த்துக் கடுமையாகப் போர் செய்கின்றான். இராவணன் இலக்குவனது போர்த்திறனை வியந்து பாராட்டிப் பிரமன் தனக்குத்தந்த வேலால் அவனை எறிகின்றான். வேல் மார்பில்பாய இலக்குவன் சோர்ந்து வீழ்ந்து உணர்விழக்கின்றான். உணர்விழந்த இலக்குவனைத் தூக்கிக் கொண்டுபோக இராவணன் முயன்றும் தூக்க முடியாமல் இளைக்கின்றான். அது கண்ட அனுமான் விரைந்து பாய்ந்து இலக்குவனை எளிமையாக எடுத்துச் சென்று இராமன்பால் சேர்க்கின்றான். பின்பு அனுமானது வேண்டுகோளின்படி அவன் தோளில் இராமன் ஏறிக்கொண்டு இராவணனோடு கடும்போர் புரிகின்றான். கடைசியாக அவ்விராவணனது தேர் முதலியவற்றை அழித்து, அவன் வில் முதலிய ஆயுதங்களை ஒழித்து, அவன் தலையிலணிந்திருந்த மணிமுடியைத் தரையில் விழுத்துகின்றான். இராவணன் வலிமையற்றவனாக—ஆயுதம் அற்றவனாக—நிற்கின்றான். அவனுக்குச் சில நல்லுரைகளைக் கூறி 'இன்று போய்ப் போர்க்கு நாளை வா' என்று இராமன் அருளோடு அனுப்புகின்றான் என்பது இப்படலத்தின் பொருட் சுருக்கம்.

## கம்பர் வான்மீகத்தோடு வேறுபடும் இடங்கள்

1. வான்மீகத்தில்; முதல் நாள் இரவுப் போரிலேயே இந்திரசித்து போர் செய்ய வருகின்றான். அங்கதனால் குதிரைகளையும் தேர்ப்பாகனையும் இழந்த நிலையில் இந்திரசித்து தேரைவிட்டு விண்ணில் சென்று மறைகின்றான். அங்கு மறைந்து நின்றே கொடிய அம்புகளை இராம இலக்குவர்மேல் விடுகின்றான். அவன் விடுத்த பாம்பு உருவாகிய அம்புகளால் இராம இலக்குவர் கட்டுண்டு உணர்விழந்து தரையில் விழுகின்றார்கள். அவர்கள் நிலையை யறிந்து சுக்கிரீவன் முதலிய வானர வீரர்கள் வந்து அவர்களைச் சூழ்ந்துகொண்டு அவர்களை இறந்தவராகவே எண்ணித் துயர்மிக உறுகின்றனர். வீடணன் அங்கு வந்து பார்த்து அவர்

பெருந்துயர்க்குக் காரணம் இராமன் உணர்விழந்து கிடக்கும் நிலையே என்பதை அறிந்து, இராம இலக்குவர் இறக்கவில்லை; உணர்விழந் திருக்கின்றனர் எனக் கூறி அவர் துயரைத் தணிக்கின்றான்.

இந்த நிலையை விண்ணிலிருந்து அறிந்த இந்திரசித்து இராம இலக்குவர் இறந்துவிட்டனர் என்றே துணிந்து மகிழ்ந்து தன் தந்தை இராவணனிடம் சென்று தன் வெற்றியைக் கூறி மகிழ்விக் கின்றான். இந்திரசித்தின் வெற்றி கேட்டு மகிழ்ந்த இராவணன், 'இராமனது மரணத்திற்குப் பின் சீதையை யான் அடைதல் எளிது' என்று கருதிப் புட்பகவிமானத்தில் சீதையை அனுப்பிப் போர்க் களத்தில் இராம இலக்குவர் இறந்துகிடப்பதைக் காணச் செய்கின்றான்.

போர்க்களத்தில் இராமன் உணர்வு இழந்து கிடப்பதைக் கண்ட சீதை தன் அன்புடைக் கொழுநன் இறந்து கிடப்பதாகவே எண்ணித் துடிதுடிக்கின்றாள்; உயிர் மாழ்குகின்றாள். பற்பல சொல்லி ஏங்கு கின்றாள். அப்போது திரிசடை அச்சீதையின் துயரைத் தணித்து இராம இலக்குவர் இறக்கவில்லை என்பதைப் பல காரணங் காட்டித் தெளிவுபடுத்துகின்றாள். அவ்வாறு ஆகுக எனச் சிறிது அமைதியுறு கின்றாள். மீண்டும் அசோகவனத்திவ் சேர்க்கப்படுகின்றாள். உயிரனைய இராமனை நினைந்து நினைந்து புலம்பிக் கொண்டிருக் கின்றாள்.

இந்திரசித்தின் பாம்புக் கணைகளால் கட்டுண்டு மயங்கிய இராமனுக்குச் சிறிது உணர்வு வருகின்றது. தம்பி இலக்குவன் உணர்விழந்து கிடப்பதைக் கண்டு இறந்தவனாகவே துணிந்து துன்பத்தால் பலப்பல சொல்லி வருந்தி 'யான் இறப்பதே நல்லது' என்று கூறிச் சுக்கிரீவன் முதலிய யாவரையும் அவரவர் இடங்கட்குத் திரும்பிப் போகுமாறு சொல்லுகின்றான். தம்பியை இழந்த துன்ப மிகுதியால் மீண்டும் உணர்விழந்து வீழ்கின்றான். வீடணன் இராமன் நிலையைக் கண்டு கண்ணீர்விட்டுக் கலங்குகின்றான். இந்திர சித்தின் மாயப் போரால் இராவணன் எண்ணமே ஈடேறிற்று; தன் எண்ணம் நிறைவேறாது போயது எனப் புலம்புகின்றான். சுக்கிரீவன் அவன் துயரைக் கண்டு இராவணன் எண்ணம் நிறை வேறாது. உணர்விழந்த இவர்கள் விரைவில் உணர்வு பெற்று எழுந்து இராவணனைக் கொல்லுவார்கள் என்று கூறி வீடணனை ஆற்றுவிக்கின்றான்,

அப்போது சுசேடணன் எழுந்து, பாற்கடலில் சந்திரன் என்ற மலையும் துரோணம் என்ற மலையும் உள்ளன. அம்மலைகளில் தேவர் களால் உண்டாக்கப்பட்ட சிறந்த மூலிகைகள் உள்ளன. அனுமன்

அங்குச் சென்று அம்மூலிகைகளைக் கொணர்ந்தால் இராம இலக்குவர் பழைய வலிமையும் உணர்வும் பெறுவார்கள் என்று சொல்கின்றான். அப்போது கருடன் அங்கு வருகின்றான். நாகக் கணைகளால் கட்டுண்டு உணர்விழந்த இராம இலக்குவர் கட்டவிழப்பெற்று முன்னைய உணர்வு பெறுகின்றார்கள். வந்த கருடன் தன் கைகளால் அவர்கள் உடம்பைத் தடவிக் கொடுத்த அளவிலே இந்திரசித்தின் அம்புகளாலாய புண்கள் ஆறிவிடுகின்றன. முன்னை நிலையினும் வலிமையும் ஊக்கமும் உண்டாகின்றன. புத்துணர்வு பெற்ற இராமன் கருடன் செய்த உதவியைப் பாராட்டி 'நீ யார்?' என்று வினவுகின்றான். போர் முடிந்தபின் நம் தோழமையைத் தெரிந்து கொள்ளலாம். விழிப்புடன் போர் செய்க எனச் சொல்லி விடை பெற்றுக் கொள்கின்றான்.

கம்பர், முதல் நாள் போரில் இந்திரசித்து வந்து கலந்து கொண்டதாகக் கூறவில்லை. கும்பகருணனும் அதிகாயனும் போர் செய்து இறந்த பின்னர் இந்த இந்திரசித்தின் போர் நிகழ்ந்ததாகக் கூறுகின்றார். நாகபாசப் படலம் எனத் தனியே ஒரு படலம் அமைத்துள்ளார். அங்கும் இராமன் இந்திரசித்தின் நாகபாசத்தால் கட்டுண்டதாகக் கூறவில்லை; இலக்குவன் மட்டுமே கட்டுண்டு உணர்விழந்ததாகக் கூறியுள்ளார். இராமன் இந்திரசித்தின் நாக பாசத்தால் கட்டுண்டதாகக் கம்பர் கூறாமையால், போர்க்களம் காணச் சீதையைப் புட்பக விமானத்தில் இராவணன் அனுப்பியதும், இராம இலக்குவர் இறந்து கிடப்பதாக நினைந்து புலம்புவதும் கூற வேண்டாதனவாயின. இந்திரசித்தின் பிரமாத்திரத்தால் கட்டுண்ட போதே சீதையைப் போர்க்களம் காணச் செய்தலும் இராம இலக்குவர் நிலையைக் கண்டு புலம்புதலும் நிகழ்ந்ததாக மாற்றி அமைத்துள்ளார். அணிவகுப்புக்கு முன்னர் இராமனது தலையையும் கோதண்டத்தையும் மாயையால் உண்டாக்கி இராவணன் சீதைக்குக் காட்டி இராமன் இறந்ததாக நம்புமாறு செய்ததாக வான்மீகி கூறியிருக்கவும், கம்பர் அந்நிகழ்ச்சியைக் கூறாது விடுத்துள்ளார். வான்மீகி கூறாத மாயாசனகப் படலத்தைப் புதுவதாகப் புகுத்தியுள்ளார்.

போர் தொடங்கிய முதல் நாளிலேயே இராம இலக்குவர்க்குப் பேரிடர் நேர்ந்ததாகக் கூறல் முறையன்று என்று இங்ஙனம் மாற்றினர் போலும். மேலும் இராவணன் தன்னுடைய அன்பிற்குரிய புதல்வன் இந்திரசித்தினை முதல் நாளிலேயே போர் செய்யுமாறு அனுப்பினான் என்று கூறுவதினும் தம்பி கும்பகருணனும் மற்றொரு மகன் அதிகாயனும் மாண்ட பின்னர் அவனைப் போர்க்கு அனுப்பினான் என்று கூறுவதே பொருத்தமாக உள்ளது எனவும் கருதியிருக்கலாம்.

இந்திரசித்தின் படைகளுள் சிறந்ததாகிய பிரமாத்திரத்தால் கட்டுண்டபோது இராம இலக்குவர் இறந்ததாக எண்ணிச் சீதையைப் போர்க்களஞ் சென்று காணச் செய்ததாகக் கம்பர் மாற்றி அமைத்தது, பிரமாத்திரத்திற்குப் பெருமை தரவேண்டிப் போலும். நாகாத்திரம் அத்துணைச் சிறப்புடையதன்று என்பதும் நினையலாம்.

2. தான் எய்த வேலால் தாக்குண்டு கிடக்கும் இலக்குவனை இராவணன் தூக்கிச் செல்ல முயன்றபோது, இளைப்பாறியிருந்த அனுமன் அவ்விராவணனது மார்பில் வயிரம்போன்ற தன் கை முட்டியால் குத்திக் கீழ்வீழச் செய்துவிட்டு இலக்குவனைத் தூக்கிக் கொண்டு இராமனிடம் சேர்த்ததாக வான்மீகி கூறியுள்ளார்.

கம்பர் அதை மாற்றி அமைத்துள்ளார். இராவணன் இலக்குவனைத் தூக்க முயன்றபோது அனுமன் விரைந்து பாய்ந்து அவ்விராவணன் கைக்குள் சிக்கியிருந்த இலக்குவனை எடுத்துக்கொண்டு இராமனை அடைந்தான் என்கின்றார். முன்னமே இராவணனுக்கும் அனுமனுக்கும் குத்துச் சண்டை நடந்து விட்டமையால் மீண்டும் அனுமன் இராவணனைக் குத்தினான் என்றால் மிகையென்று கம்பர் கருதி அதை விடுத்தார் போலும்.

## படலப் பொருட் சிறப்பு

### 1. உவமை

இந்த முதற்போர்ப் படலத்தில் வானர சேனையும் அரக்கர் சேனையும் பொரும் முறையும், ஒன்றை ஒன்று அழிக்கும் முறையும் வெல்லு முறையும் வீரர் பேசும் முறையுமே பெரும்பாலும் கூறப்படுகின்றதாயினும் அறிஞர் தம் உள்ளத்தில் வைத்துப் போற்றத்தக்க சுவைநலம் கெழுமிய விழுமிய பகுதிகளும் இல்லாமலில்லை.

இராவணன் போர்க்களத்திற்கு வந்துளான் என்பதைக் கேள்விப்பட்ட இராமன் போர்க்கோலம் கொள்ளும் இயல்பைக் கூறவந்த கம்பர், அவன் தோளில் கட்டித் தொங்கவிட்ட அம்புப் புட்டிலுக்கு அரியதோர் உவமை கூறியுள்ளார். பெரும்புலவர் நாவிலிருந்து எவ்வளவோ சொற்கள் வெளிவருகின்றன; அந்த நாவிலிருந்து இனிச் சொற்கள் தோன்றா என்பதின்றி மீண்டும் மீண்டும் பல அரிய சொற்கள் வந்து கொண்டே இருக்கின்றன. அதுபோல இராமனது அம்புப் புட்டிலில் அவன் எடுக்க எடுக்கக் குறைபடாமல் அம்புகள் வந்துகொண்டே இருக்குமாம். பெரும்புலவர் நாவினைப் போன்றது தூணி; அந்த நாவில் மேலும் மேலும் வந்துகொண்டே இருக்கும் சொற்களைப் போன்றவை அத் தூணியிலுள்ள அம்புகள். இந்த இயல்பு கருதி அதற்கு அம்பறாத் தூணி என்றே பெயர்

கூறுவர். அம்புகள் வடிவுடையன ; சொற்கள் வடிவுடையன அல்ல. எனினும், தொலையாது மேலும் மேலும் வந்துகொண்டே இருக்கும் தன்மையில் புலவர் சொல்லும் இராமன் அம்பும் ஒப்புமையுடையன. இது தொழில் பற்றிவந்த உவமம். எனவே உவமிக்கின்றார்.

பல்லிய லுலகுறு பாடை பாடமைந்து
எல்லையில் நூற்கடல் ஏற நோக்கிய
நல்லியல் நவையறு கவிஞர் நாவரு
சொல்லெனத் தொலைவிலாத் தூணி தூக்கினன்.

என்றது காண்க. சொல்லென அம்புகள் தொலைவிலாத் தூணி என ஒரு சொல் வருவித்து உரைக்க வேண்டும். 'சொல்லொக்கும் கடிய வேகச் சுடுசரம்' எனப் பாலகாண்டத்துத் தாடகை வதைப் படலத்தில் கூறியுள்ளதும் இங்கு நினையலாம்.

தனக்கு உவமையின்றி உயர்ந்து விளங்கிய பெருங் கவிஞராகிய கம்பர் பெருமான் தாம் இயற்றிய ஒப்புயர்வற்ற இராமாயணத்தில் பற்பல இடங்களில் கவிஞரோடு தொடர்புடைய உவமைகளை எடுத்துக் காட்டி விளக்கியிருக்கின்றார். அவ்வாறு உவமை கூறுவதில் அவர் தனி ஆர்வமுடையவர் என்பதை இக்காப்பிய முழுமையும் படித்துச் சுவைத்த பெருமக்கள் அறிவர். இச் செய்யுளில் குற்றமற்ற நல்ல கவிஞர் எப்படி இருக்க வேண்டும் என்பதையே வரையறை செய்து காட்டிவிட்டார்.

இவ்வுலகத்தில் வழங்கி வருகின்ற பல இயல்பு வாய்ந்த பல மொழிகளின் இலக்கியப் பெருமைகளை யெல்லாம் கேட்டு அறிந்து, அமைந்திருக்க வேண்டுமாம். தன் மொழியிலுள்ள எல்லை இல்லாத நூல்களாகிய கடல் முழுவதையும் நன்குணர்ந்திருக்க வேண்டுமாம். இவ்வாறு பிறமொழி அறிவும் தன் மொழிக் கல்வியும் அமைந்தால் மட்டும் போதாதாம். பெருமக்களுக்குரிய நல்ல இயல்புகள் யாவும் இருக்க வேண்டுமாம். இத்தகையோனையே கம்பர் கவிஞனாக மதிக்கின்றார். இத்தகு கவிஞர் நாவில் வருகின்ற சொற்களையே இராமன் தூணியிலுள்ள அம்புகட்கு உவமையாகக் கூறியுள்ளார்,

இந்த உவமையை மறவாது பின்னும் இப்படலத்திலேயே பிறிதோரிடத்தில் கூறிச் சிறப்பிக்கின்றார். மேற்கூறிய அம்பறாத் தூணியிலிருந்த இராமன் அம்பு இராவணனுடைய மணிமுடியைத் தள்ளிவிடுகின்றது. மூவுலகையும் ஆளுதற்கு அறிகுறியாக அணிந்த பெருமை மிக்க அம்மணிமுடி, இராமன் விட்ட சிறிய அம்பு பட்ட உடனே கீழே விழுகின்றது. முடி இழந்த இராவணன் பொலிவு இழந்து நிற்கின்றான். அவன் நிலையை—

மாற்ற ருந்தட மணிமுடி யிழந்தவா ளரக்கன்
ஏற்ற மெவ்வுல கத்தினு முயர்ந்துள தெனினும்
ஆற்றல் நன்னெடுங் கவிஞனே ரங்கத முரைப்பப்
போற்ற ரும்புகழ் இழந்தபே ரொருவனும் போன்றான்

என உவமை கூறி விளக்கியுள்ளார். தன் ஆற்றலால் உலகம் புகழ வாழ்கின்ற பெரியோன் ஒருவன் ஒரு கவிஞனுடைய சினத்திற்கு ஆளாகி, அவனால் வசைபாடப் பெறுவானாயின், இதுகாறும் பரப்பி வந்த தன் பெரும் புகழ் அனைத்தையும் இழந்து போவான். அவனைப் போலவே இராவணன் தன் ஆற்றலால் மூவுலகத்தோரையும் வென்று சூட்டிக்கொண்ட மணிமுடியை இராமனுடைய சிறிய அம்பினால் இழக்கலானான் என்பது அந்த உவமையின் விளக்க மாகும். இங்கும் இராமன் அம்புக்கு ஆற்றல் மிக்க நற்கவிஞனது அங்கதச் சொல்லையே உவமை கூறியிருத்தல் காணலாம். பேராளன் புகழ் போன்றது இராவணனது மணிமுடி ; நற்கவிஞனுடைய வசை யால் பெரியோன் புகழை இழந்ததுபோல இராமனுடைய அம்பால் இராவணன் முடியை இழந்தான் என்றவாறு.

## 2. இராவணன், அனுமன் உரையாடல்

இராவணனோடு போர் செய்ய விரும்பிய அனுமன், அவ்விராவ ணனைக் குத்துச் சண்டைக்கு அழைக்கும் வீரமொழிகளும், அவ்வாறு அழைத்த அனுமனுக்கு இராவணன் சொல்லும் மறுமாற்றமும் படித் துப் படித்து இன்புறற்குரியனவாய், வீரர்களின் சான்றாண்மையை நன்கு விளக்குவனவாயுள்ளன. போர் செய்தற்குச் செல்லும் வீரர்கள் தம் வலிமையையே பெரிதெனக் நினைதல் வேண்டும். பகைவன்வலி பெரிது என்ற எண்ணம் வீரனுக்கு வந்துவிடுமாயின் போர் செய்ய இயலாது ; கோழையாய் விடுவான்.

மூவுலகாளும் இராவணனுடைய ஆற்றலை நோக்கின், சுக்கிரீவ னுடைய அமைச்சர்களில் ஒருவனாய் இராமனுக்குத் தொண்டு பூண்டு ஒழுகும் அனுமனது ஆற்றல் மிகமிகச் சிறியதாகும். ஆனால் அனும னுக்கு அத்தகைய சிறுமையான எண்ணம் எழவேயில்லை. பரம் பொருளாகிய இராமன் அருள் தனக்குத் துணைசெய்யும் என்ற நம் பிக்கை அவனுக்கு உண்டு ; எனவே தன்னுடைய ஆற்றலுக்கு இரா வணன் தோற்றுவிடுவான் என்றே எண்ணுகின்றான்.

பரக்கப்பல வுரைத்தென்படர் கயிலைப்பெரு வரைக்கும்
அரக்குற்றெரி பொறிக்கட்டிசைக் கரிக்குஞ்சிறி தனுங்கா
உரக்குப்பையி னுயர்தோள்பல வுடையாயுர னுடையாய்
குரக்குத்தனிக் கரத்திற்புடை புடைப்பாற்றுதி கொல்லாம்.

என அனுமன் இராவணனை விளித்துக் கூறியுள்ளது காண்க. கயிலை மலையை யெடுத்த போதும், திசையானைகளோடு பொருத போதும் வருந்தாத இராவணனுடைய தோள்கள், தன் கையால் குத்தும் குத்தினைத் தாங்கும் ஆற்றல் உடையன அல்ல என்பதே அனுமன் கருத்தாதலை இச்செய்யுள் விளக்குதல் காணலாம். அனுமன் கருதியதற்கேற்பவே இராவணன் குத்துப் பட்டபோது வருந்திக் கூறிய,

வலியென்பது முளதேயது நின்பாலது மறவோய்
அலியென்பவர் புறநின்றவர் உலகேழையும் அடர்ந்தாய் ;
'சலி' என்று எதிர் மலரோன் உரை தந்தால் இறைசலியேன்;
மெலிவு என்பதும் உணர்ந்தேன் எனை வென்றாய் இனி விறலோய் !

என்ற செய்யுட் கருத்து அமைந்திருத்தல் காணலாம். 'வலி என்பதும் உளதே அது நின்பாலது' எனவும் 'மெலிவு என்பதும் உணர்ந்தேன்' எனவும், 'எனை வென்றாயினி விறலோய்' எனவும் இராவணன் அனுமனது ஆற்றலை உள்ளவாறு கூறிப் பாராட்டுகின்ற சொற்கள், இராவணனது பெருமிதத்தையும் வீரர் திறனை மதிக்கும் மாண்பையும் புலப்படுத்தல் காணலாம். இங்ஙனமே இவ்விரு வீரர்களின் பிற உரையாடல்களும் கருத்துச் செறிவுடையவாய்ப் படிக்கப் படிக்கச் சுவை நலம் சுரப்பனவாய்த் திகழ்கின்றன.

## 3. இராமன் பெருந்தன்மை

மூவுலகாளும் முதன்மை பெற்ற இராவணன் நால்வகைச் சேனைகள் சூழத் தெய்வப் படைக்கலங்கள் ஏந்தி இதுகாறும் வென்றியே கொண்ட தன் பெருமை நினைந்த செருக்கோடு இராமன் முன் நின்று போர் செய்கின்றான். அவன் படைவலியும், துணைவலியும், தவவலியும் இராமன்முன் இல்லையாகின்றன. இராமன் விட்ட கணையால் நால்வகைப் படைகளும் அழிகின்றன. தான் ஏறிவந்த தேரும், குதிரைகளும், வீணைக்கொடியும், வெண்குடையும் அற்று வீழ்கின்றன. மாண்புமிக்க மணிமுடியும் வீழ்கின்றது. விண்ணவரையும் மண்ணவரையும் வருத்திய வலிமை மிக்க இராவணன் தனியனாய் வலியேதுமின்றி இராமன்முன் நாணி நிற்கின்றான். அவ்விராவணன் செய்த பழிபடு செயல் ஒன்றையே கருதியிருப்பின் இராமன் தன் சிறிய அம்பினால் அவனைக் கொன்று வீழ்த்தியிருக்கலாம். ஆனால் இராமன் அது செய்திலன். தன் வலியின் பெருமையையும் பொரும் நெறியினையும் நினைக்கின்றான். வலியிழந்த இந் நிலையிலேனும் இராவணன் திருந்துவானோ என்று எண்ணுகின்றான்.

இராவணன் செய்த தவறுகட்கெல்லாம், காரணம் அவன் பெற்றிருந்த பெருவலியும் துணையாய் நின்ற படைவலியுமே யாம். இந்த வலிமையைக் கொண்டே இதுகாறும் அறத்திற்கு மாறாக நடந்தும்

வெற்றிபெற்று வந்துளான். அவன் பெற்ற வெற்றிகள் அவன் தவறுகளை மேலும் மேலும் வளரச் செய்தன. எத்தகைய தவறுகளைச் செய்தாலும் தன் வலிமை தன்னைக் காப்பாற்றும் என்ற நம்பிக்கையுடையனாகவே இராவணன் இதுகாறும் இருந்தான். இராமனுக்கு முன் அந்த நம்பிக்கை நிற்கவில்லை. அடியோடு மாறுபட்ட நிலையே உண்டாயது. மறத்தினால்தான் வெற்றி யென்பது போய் அறத்தினால் தான் வெற்றி உண்டாகும் என்ற நிலை தெளிவாயிற்று. ஆயிரம் வெள்ளம் அரக்கர் படையும் தவத்தினால் பெற்ற தெய்வப் படைக்கலங்களும் நினைப்பினுக்கும் முன் செல்லும் தேர் முதலிய ஊர்திகளும் இருந்தும் இராவணன் வெற்றிபெறவில்லை. வில்லையன்றி ஆயுதம் இல்லாதவனும் தம்பியல்லது துணையிலாதவனும், கற் கொண்டும் பற்கொண்டும் மரங்கொண்டும் நகங்கொண்டும் போர் செய்யும் எளிய குரங்குப்படை யல்லது வேறு சேனை யில்லாதவனும் ஆகிய இராமன் வெல்கின்றான். காரணம் என்னை? இராமன் செய்யும் போர் அறத்தை நம்பிச் செய்யும் போர். இராவணன் போர் மறத்தை நம்பிச் செய்யும் போர். மறம் தோற்கின்றது; அறம் வெல் கின்றது.

இந்த உண்மையை இராவணன் உணர்ந்தால் தேவியை விடுத்துத் தன் ஆவியை விடாது வாழ்வானே என்ற எண்ணம் இராமன் அருள் உள்ளத்தில் அரும்புகின்றது. சொல்கின்றான்.

> அறத்தி னாலன்றி யமரர்க்கு மருஞ்சமம் கடத்தல்
> மறத்தி னாலரிது என்பது மனத்திடை வலித்தி!
> பறத்தி நின்னெடும் பதிபுகக் கிளையொடும் பாவி
> இறத்தி; யான் அது நினைக்கிலன் தனிமைகண்டு இரங்கி.

இராமனுடைய இவ் வீர உரையில் எவ்வளவோ உண்மைகள் அடங்கிக்கிடக்கின்றன. இராவணனைக் காணும்போது பிறன்கடை நின்று அவன் செய்த பாவச் செயலே மேற்பட்டுத் தோன்றுதலின் அவனைப் 'பாவி!' என விளிக்கலானான். அறம் வெல்லுதலும் பாவம் தோற்றலும் உயர்ந்தோர் தாழ்ந்தோர் என்ற வேறுபாடின்றி எல்லார் மாட்டும் நிகழும் உண்மை நிகழ்ச்சி என்பதை வற்புறுத்த, அறத்தினாலன்றி மறத்தினால் அருஞ்சமம் கடத்தல் அமரர்க்கும் அரிது என்கின்றான். இராவணனைக் கொல்லவேண்டும் என்று நினைத்திருந்தால் அவன் உறவினரையெல்லாம் கொன்று குவித்த தனக்கு அரிதன்று என்பது புலப்படுத்த, 'கிளையொடும் பாவி இறத்தி; யான் அது நினைக்கிலன் தனிமை கண்டு இரங்கி' என்றும், இனி நின்னகரத்திற்கு உய்ந்து போய்விடு என்பான், 'பறத்தி' நின் னெடும் பதிபுக' என்றும் பதியின் நெடுமையும் பயன்படவில்லையே

என்ற இகழ்ச்சிக் குறிப்புத்தோன்ற 'நெடும்பதி புக' என்றும் கூறுகின்றான்.

போர் செய்ய வந்த இராவணனைப் போகச் சொன்னது ஏன்? என்பதை "ஆளையா வுனக்கமைந்தன மாருத மறைந்த பூளையாயின கண்டனை இன்று போய்ப் போர்க்கு நாளைவா" என்ற பகுதி தெளிவாக்குகின்றது. இராவணன் போர் செய்யக் கொணர்ந்த சேனைகளும் படைக்கலங்களும் பெருங்காற்றால் மொத்துண்ட பூளைப்பூப் போல அழிந்துவிட்டன; ஆதலால் இன்று நீ இலங்கை நகர்க்குச் சென்று, போர் செய்தற்குரிய படைக்கலங்களோடும் சேனையோடும் நாளைக்கு வா என்று அருள் உள்ளத்தால் கூறுகின்றான் இராமன். பகைவன் தாழ்வினையும் தன் தாழ்வாக எண்ணிக் கூறிய இராமன் அருள் உள்ளத்தை நினைந்தே இராமனைக் கம்பர் 'கோசல நாடுடை வள்ளல்' என்றும் இராவணனது பேராற்றலை எளிதில் வெல்லத் தக்க ஆற்றல் இராமனுக்கு உண்டு என்பதைக் குறிப்பால் புலப்படுத்த 'நாகிளங்கமுகின் வாளை தாவுறு கோசல நாடுடை வள்ளல்' என்றும் சிறப்பிக்கின்றார்.

படையில்லாதவனோடும் தோற்றவனோடும் போர் செய்வது வீரர் மரபு அன்று. "அழிகுநர் புறக்கொடை அயில்வாளோச்சா கழிதறுகண்மை" என்று புகழ்ந்து தழிஞ்சி என்று இதற்குப் பெயர் கொடுப்பர் ஐயனாரிதனார். நாளை படையுடன் வந்தாலும் அவனை வெல்வது அரிதன்று என்ற அஞ்சாமை மிகுதியுடையார் மாட்டே நிகழ்வதாகலின் இது கழிதறுகண்மை எனப் புகழப்படுகின்றது. பகைவன் அழிவையும் தன்னழிவாகத் தழுவிக்கொண்டு அன்பு செய்வது ஆகலின் இது தழிஞ்சி எனப்பட்டது. இதனால் இராமனது பெருந்தன்மை நன்கு புலனாதல் காணலாம்.

# 14. முதற் போர்ப் படலம்

## பாசறையில் பறையறைவித்தல்

**7144.** பூச லேபிறி தில்லையெ னப்புறத்
தாசை தோறு முரச மறைந்தெனப்
பாச றைப்பறை யின்னிடம் பற்றிய
வாச ரேறு முறையின் வகுத்திரால்.

"பூசலே; பிறிது இல்லை" எனப் புறத்து
ஆசை தோறும் முரசம் அறைந்தெனப்
பாசறைப் பறையின் இடம் பற்றிய
வாசல் தோறும் முறையின் வகுத்திரால்.

பொ :—('இனி நடக்க இருப்பது) போரே தவிர வேறு (சமாதானம் என்பது) இல்லை' என்று, வெளியுலகில் திக்குகள்தோறும் முரசம் அறைந்து கூறுவதுபோலப் பாசறையில் இடம் பெற்றுள்ள வாயில்கள்தோறும் முறையாகப் பறையின்மூலம் சொல்லுங்கள்.

கு :—தூது சென்று வந்த அங்கதன் கூறிய முடிபை யறிந்தவுடன் இராமன் இவ்வாறு கட்டளையிடலானுன். 'மூர்க்கன் முடித்தலை அற்றபோதன்றி ஆசையருன்' என்று அங்கதன் கூறியது இராவணன் சமாதானத்தை விரும்பவில்லை என்பதை அறிவித்தல் காணலாம். பூசல் - போர். ஏகாரம், தேற்றப் பொருளது. பிறிது என்பது சமாதானத்தை. பாசறையில் உள்ள வாசல்தோறும் பறையறைவதே புறவுலகத்தில் உள்ள திசைகள்தோறும் பறையறைந்தது போலும் என்ற கருத்தால் 'ஆசைதோறும் முரசமறைந்தென...... வாசல்தோறும் முறையின் வகுத்திரால்' என்ருன். பாசறையில் மறைந்து தங்கியுள்ள ஒற்றர்களால், அங்குச் சொல்லப்படும் செய்தி திக்குகள்தோறும் பரவும் என்பது கருத்து. "நாவலந் தண்பொழில் நண்ணுரொற்று நம், காவல் வஞ்சிக் கடைமுகம் பிரியா, வம்பணி யானை வேந்த ரொற்றே, தஞ்செவிப் படுக்குந்தகைமைய வன்ரே, அறைபறை யென்றே யழும்பில்வேள் உரைப்ப" (சிலப் - 25 : 173–178) என்றது இங்கு ஒப்புநோக்கத்தகும். வடதிசை மன்னர்க்கு ஓலை வரைய வேண்டுவதில்லை; வஞ்சி நகரில் பறையறைதலே சாலும் என்பது இவ்வடிகளின் கருத்தாதல் தெளிக. பாசறையிடம் பற்றிய வாசல்தோறும் முறையின் பறையின் வகுத்திரால் என இயையும். வகுத்தல், இங்கு வகைப்படுத்திச் சொல்லுதலை யுணர்த்

திற்று. வகுத்திரால் - என்றான். என மூன்றுஞ் செய்யுளில் இயைந்து முடியும். ஆசை – திசை. பூசலே பிறிதில்லை என்பதைப் படைக்குப் பறையறைவிப்பதன் கருத்துப் போர்க்கு ஆயத்தமாகுங்கள் என்பதைப் புலப்படுத்துவதேயாகும். (1)

**7145.** மற்று நின்ற மலையு மரங்களும்
பற்றி வீசிப் பரவையின் மும்முறை
கற்ற கைகளி னாற்கடி மாநகர்
சுற்றி நின்ற வகழியைத் தூர்த்திரால்,

மற்றும் நின்ற மலையும் மரங்களும்
பற்றி வீசிப் பரவையின் மும்முறை
கற்ற கைகளினால், கடி மாநகர்
சுற்றி நின்ற அகழியைத் தூர்த்திரால்.

பொ:—"மேலும், தரையில் நின்ற மலைகளையும் மரங்களையும் பற்றி வீசியெறிந்து கடலில் (அணைகட்டியபோர்து) முன் முறையாகக் கற்றுப் பழகிய நும் கைகளினால், காவலையுடைய இலங்கை மாநகரைச் சுற்றியிருக்கின்ற அகழியைத் தூருங்கள்.

கு:—இதுவும் சேனைக்கு இராமன் இட்ட கட்டளையேயாகும். கடலில் அணைகட்டுங்கால் மலைகளையும் மரங்களையும் வீசிப் பெருங் கடலைத் தூர்த்து முன்னமே பழகிய நும் கைகளுக்கு இச்சிறிய அகழியைத் தூர்த்தல் அரிதன்று என்பான் 'பரவையின் மும்முறை கற்ற கைகளினால்......அகழியைத் தூர்த்திரால்' என்றான். முன்முறை என்பது மும்முறை என மருவியதாகக் கொள்க. மலையும் மரங்களும் வீசிக் கடலைத் தூர்த்து அணை கட்டியது போலவே, இலங்கை அகழியையும் அம் மலைகளாலும் மரங்களாலும் தூருங்கள் என்பது அவ்வுவமையால் புலப்படுத்தியவாறு. கற்ற கைகளினால், பரவையின் மும்முறை மலையும் மரங்களும் பற்றி வீசி அகழியைத் தூர்த்திரால் என இயைத்து, 'முன்னமே பழகிய நும் கைகளினால் கடலில் வீசியவற்றிற்கு மும்மடங்காக மலையும் மரங்களும் வீசி அகழியைத் தூருங்கள்' எனப் பொருள் கூறலும் ஆம். அகழி கடலினும் பெரியது என்பதைக் காட்டியவாறு. (2)

**7146.** இடுமின் பன்மர மெங்கு மியக்கறத்
தடுமின் போர்க்கு வருகெனச் சாற்றுமின்

கடுமி னிப்பொழு தேகதிர் மீச்செலாக்
கொடும திற்குடு மித்தலைக் கொள்கென்றான்.

இடுமின் பல்மரம்; எங்கும் இயக்கு அறத்
தடுமின்; "போர்க்கு வருக!" எனச் சாற்றுமின்;
கடுமின், இப்பொழுதே கதிர்மீச் செலாக்
கொடுமதில் குடுமித்தலைக் கொள்கென்றான்.

பொ:—இலங்கைத் தெருக்களில் எல்லாம் பல மரங்களைப் பறித்து இடுங்கள்; 'அரக்கர்களின் போக்குவரவு இல்லையாம்படி தடுங்கள்; அவ்வரக்கர்களைப் 'போர் செய்தற்கு வாருங்கள்' என்று சொல்லி விளியுங்கள்; அவர்களைக் களைந்தெறியுங்கள். சூரியன் மேலே செல்லாத வளைந்த மதிலின் குடுமியாகிய உச்சியிடத்தைக் கைக்கொள்ளுங்கள்' என்று இராமன் கட்டளையிட்டான்.

கு:—இராமன் என்ற தோன்றா எழுவாய் வருவித்து உரைக்கப் படும். எங்கும் பன்மரம் இட்டு இயக்கறத் தடுங்கள் என்றவாறு. எங்கும் இடுமின்; எங்கும் இயக்கறத்தடுமின், என இருவழியும் இயைந்து இடைநிலை விளக்காய் எங்கும் என்பது நின்றது. சாற்றுதல் - அறைகூவியழைத்தல். கடுமின் - களைமின். சூரியன் இலங்கை மாநகரின் மேற்செல்லாது ஒதுங்கிச் செல்லுதல் அந்நகரின் தனிச் சிறப்பு. இது இக்காவியத்தில் பலவிடங்களில் கூறப் பட்டுளது. மதிலின் குடுமியைப் போர்வீரர் கைக்கொள்ளுதலை "இகன் மதிற் குடுமி கொண்ட மண்ணு மங்கலமும்" (தொல். பொருள். புறத். 68) என்பர் தொல்காப்பியர். கொடுமதில்-வளைந்த மதில். மதிற்குடுமி - மதிலின் உச்சி. தலை - இடம். மதிற் குடுமியைக் கைக்கொள்ளுதலாவது அம்மதிலின் உச்சியில் ஏறி அமர்ந்து தமக்குரியது என்பதை நிலைபெறச் செய்தல். (3)

இச் செய்யுட்குப்பின் 52-ஆம் எண்ணுள்ள அச்சுப் புத்தகத்தில் பின்வரும் மிகைப்பாடல் காணப்படுகின்றது.

7146 (a) ஆதி நாயகன் ஆங்கது கூறுமுன்,
பாத மீது பணிந்தருள் பற்றியே,
காது வெம்படைக் காவலர் ஆதியோர்
மோது போரை முயலுதல் மேயினர்.

### அகழியை வானரங்கள் தூர்த்தல்

7147. தடங்கொள் குன்று மரங்களுந் தாங்கியே
மடங்க லன்னவவ் வானர மாப்படை

இடங்கர் மாவிரி யப்புன லேறிடத்
தொடங்கி வேலை யகழியைத் தூர்த்ததால்.

தடங்கொள் குன்றும் மரங்களும் தாங்கியே,
மடங்கல் அன்ன அவ் வானர மாப்படை,
இடங்கர்மா இரியப் புனல் ஏறிடத்,
தொடங்கி வேலை அகழியைத் தூர்த்ததால்.

பொ :—சிங்கத்தையொத்த அந்தப் பெரிய வானர சேனை, பெருமையுடைய குன்றுகளையும் மரங்களையும் கையில் தாங்கி, முதலைப்போத்துகள் ஓடவும், நீர் கரையைக் கடந்து ஏறவும் (அக் குன்றுகளையும் மரங்களையும்) வீசத் தொடங்கிக் கடல் போன்ற அகழியைத் தூர்த்தது.

கு :—அகழியில் வாழ்ந்திருந்த முதலைகள் குன்றுகளும் மரங் களும் தம்மேல் வீழ்ந்தவுடன் இரிந்தோடலாயின. குன்றுகளும் மரங்களும் அகழியில் வீழ்தலால் அவ்வகழியில் உள்ள நீர் மேலே றியது. மடங்கல் - சிங்கம். இடங்கர்மா - முதலை. அது விலங்கின் தன்மையுடையதாகலின் இடங்கர்மா என வழங்கப்படுவதுண்டு. "ஒன்றையொன்று முன்ருெடர்ந்து சீறிடங்கர்மா" (பால. நகரப்-18) என முன்னும் வந்துளது நினைக. வேலை போன்ற அகழி என உவமைத்தொகை யாக்குக. படை தூர்த்தது என்று இயையும். வீசத் தொடங்கி என ஒரு சொல் வருவிக்க. (4)

7148. ஏய வெள்ள மெழுபது மெண்கட
லாய வெள்ளத் தகழியைத் தூர்த்தலும்
தூய வெள்ளந் துணைசெய்வ தாமென
வாயி லூடுபுக் கூரை வளைந்ததே.

ஏய வெள்ளம் எழுபதும், எண்கடல்
ஆய வெள்ளத்து அகழியைத் தூர்த்தலும்,
தூய வெள்ளம் துணைசெய்வது ஆம் என
வாயிலூடு புக்கு, ஊரை வளைந்ததே.

பொ :—பொருந்திய எழுபதுவெள்ள வானரப்படையும் எட் டாவது கடல்போன்றதாய நீரையுடைய அகழியைத் தூர்த்த அளவில், அவ்வகழியிலிருந்த தூயநீர் இராமனுக்குத் துணை செய்வதுபோல மதில் வாயிலுள் புகுந்து ஊரை வளைத்துக் கொண்டது.

கு :—வெள்ளம் எழுபது என்பது ஆகுபெயரால் அவ்வளவை யுடைய வானரப்படையை உணர்த்தியது. எட்டாவது கடல் போன்ற தாய அகழி என்க. வெள்ளம் - நீர். மலைகளையும் மரங்களையுங் கொண்டு அகழியைத் தூர்த்தவுடன் மேலேறிய அகழிநீர், வெள்ள மாய் இலங்கையில் புகுந்தது, இலங்கையை அழிக்க விரும்பும் இராம னுக்குத் துணை செய்வது போன்றிருந்தது எனத் தற்குறிப்பேற்ற மாகக் கூறினர். கடலாய வெள்ளம் என்புழி ஆக்கச் சொல் உவமை குறித்து நின்றது. வெள்ளம்-நீர்; திசைச்சொல். அகழியிலிருந்து மேலேறிய வெள்ளம் ஊருள் புகுந்ததால் அவ்வூர் அழிவுறலின் இராமனுக்குத் துணை செய்ததாயிற்று என்க. இராமனுக்குத் துணை செய்வதற்கேற்ற தகுதியுடையது என்பார், 'தூயவெள்ளம்' என்றார். கடல்நீர் போன்று உப்புத்தன்மை அகழிநீர்க்கு இன்மை யின் அதனைத் தூயநீர் என்றார் எனலும் ஆம். (5)

**7149.** **விளையும் வென்றி யிராவணன் மெய்ப்புகழ்**
**முளையி னோடுங் களைந்து முடிப்பபோல்**
**தளைய விழ்ந்த கொழுந்தடந் தாமரை**
**வளையம் வன்கையில் வாங்கின வானரம்.**

**விளையும் வென்றி இராவணன் மெய்ப்புகழ்**
**முளையினோடும் களைந்து முடிப்ப போல்,**
**தளை அவிழ்ந்த கொழுந் தடந் தாமரை**
**வளையம், வன்கையில், வாங்கின-வானரம்.**

பொ :—இராவணனது வெற்றியால் விளையும் உண்மையான புகழை முளையோடு களைந்து அழிப்பனபோல, வானரங்கள், முறுக்கு அவிழ்ந்த செழுமையான பெரிய தாமரை வளையங்களைத் தம் வலிய கைகளால் பிடுங்கின.

கு :—இதனால் குரங்குகளின் இயல்பு விளக்கியவாறு. அகழியைத் தூர்த்த வானரங்கள் அவ்வகழியில் உள்ள தாமரை வளையங்களைப் பறிக்கின்ற தோற்றம், இராவணனுடைய வெற்றியால் விளைந்த புகழை அடியோடு பறிப்பது போன்றிருந்தது என்பது கருத்து. புகழ் வெண்ணிறமுடையது என்பது கவி மரபு. ஆதலின், வெள்ளிய தாமரை வளையங்களை அடியோடு பறித்த தோற்றம் புகழை அடி யோடு பறிப்பது போன்றது எனப் பண்பு உவமையாக்கினர். இது தற்குறிப்பேற்ற உவமையணி. இராவணன் வென்றியால் விளையும் புகழ் என இயையும். இராவணன் இதுகாறும் அடைந்த வெற்றி யெல்லாம் இராமனுக்கு முன் அழிவுறும் என்பதைக் குறிப்பால்

உணர்த்தியவாறு. தாமரை வளையம் என்றது, தாமரைத் தண்டின் வளையத்தை. அது, வளைந்திருத்தலின் வளையம் எனப்பட்டது. "விரித்திடு சுருளினும்மம் விசியொடு வளையமாகும்" என்பது பிங்கலந்தை. தளையவிழ்ந்த வளையம், கொழுந்தட வளையம் என்க. வானரங்கள் தாமரை வளையங்களைத் தின்பதற்காகப் பறிக்கலாயின. (6)

**7150.** ஈளி தார மியம்பிய வண்டுறை
பாளை தாதுகு நீர்நெடும் பண்ணைய
தாள தாமரை யன்னங்க டாவிட
வாளை தாவின வானரந் தாவவே.

ஈளி தாரம் இயம்பிய வண்டு உறை
பாளை தாது உகு நீர் நெடும் பண்ணைய
தாள தாமரை அன்னங்கள் தாவிட,
வாளை தாவின, வானரம் தாவவே.

பொ :—மந்த ஓசையையுடைய இளியையும் எடுத்தலோசையுடைய தாரத்தையும் பாடிய வண்டுகள் தங்கியுள்ள, கமுகு முதலியவற்றின் பாளைகளில் உள்ள மகரந்தங்கள் சிந்துகின்ற நீரையுடைய நெடிய வயலின் கண்ணவாய நாளத்தோடுங்கூடிய தாமரை மலரில் உள்ள அன்னங்கள் தாவியோடும்படி வாளை மீன்கள் தாவின, வானரங்கள் தாவிக்குதித்தலால்.

கு :—இளி என்பது எதுகை நோக்கி ஈளி என விகாரமாயிற்று. இளி - மந்த ஓசையுடையது. தாரம் - எடுத்தலோசை. 'மந்தர மத்திமை தாரமிவை மூன்றில்' (கல்லாடம். 21, 50) என்புழியும் தாரம் அப்பொருட்டாதல் காணலாம். வண்டுறையும் பாளை என்க. வண்டுறை தாமரை என இயைத்தலும் ஆம். பாளையிலுள்ள மலர்களைப் பாளை என்றார் : ஆகுபெயர். தாது - மகரந்தம். தாது உகு பண்ணை என்க. பண்ணை - வயல். வயலின் கண்ணதாகிய தாமரையில் அன்னங்கள் தங்கியிருந்தன. தாள்—நாளம் - தண்டு. தாள என்புழி அகரம் குறிப்புப் பெயரெச்ச விகுதி; கால குருகு என்புழிப் போல. அகழியை யடுத்து வயல்களும் இருத்தலுண்டு ஆகலின் அகழியில் நிகழ்ந்தவை கூற வந்தவர் பண்ணையைப் பற்றியும் கூறினர். வானரங்கள் அகழியில் தாவியது கண்டு அஞ்சி அங்குள்ள வாளை மீன்கள் தாவின எனவும் வாளை மீன்கள் தாவுதலைக் கண்டு அஞ்சி வயலில் உள்ள தாமரையில் தங்கியிருந்த அன்னங்கள் தாவி ஓடின எனவும் கொள்க. வானரம் தாவுதல் வாளை தாவுதற்கும், வாளை தாவுதல் அன்னங்கள் தாவுதற்கும் காரணமாயின. (7)

**7151.** இகழுந் தன்மைய ஞய விராவணன்
புகழு மேன்மையும் போயின வாமென
நிகழுங் கண்ணெடு நீல முகுத்தலால்
அகழி தானு மழுவது போன்றதே.

இகழுந் தன்மையன் ஆய இராவணன்
புகழும் மேன்மையும் போயினவாம் என,
நிகழும் கள் நெடு நீலம் உகுத்தலால்
அகழிதானும் அழுவது போன்றதே.

பொ :—(அகழியிலுள்ள) நெடிய நீலமலர்கள், தன்கண் பொருந்திய தேனைச் சொரிதலால், அகழிதானும், 'எல்லோராலும் இகழப் படுந் தன்மையன் ஆகிய இராவணனது புகழும் மேன்மையும் இனிப் போய்விட்டனவாம்' என்று இரங்கி அழுவதைப் போன்றது.

கு :—நீலமலர்களின் தோற்றம் அகழியின் கண்போன்றன எனவும் அம்மலர்கள் உகுக்கும் கள்நீர் கண்ணீர் போன்றது எனவும் கொள்க. அகழி அழுதற்குக் காரணம் தன் தலைவனாகிய இராவணன் புகழும் மேன்மையும் இனி நிலைபெறாது போயினவேயாம் என்னும் இரக்கத்தாலே ஆகும். அகழி தூர்க்கப்பட்டமையின் இனி இராவணன் தோற்றல் உறுதி என்றறிந்து அழுதது என்க. "கருமிளையுடுத்த வகழி சூழ்போகிக், கருநெடுங் குவளையும் ஆம்பலுங் கமலமும், தையலுங் கணவனுந் தனித்துறுதுயரம் ஐயமின்றி யறிந்தன போலப், பண்ணீர் வண்டு பரிந்தினைந் தேங்கிக், கண்ணீர்கொண்டு காலுற நடுங்க" (சிலப்-13: 1831-88.) எனக் கண்ணகிக்கும் கோவலனுக்கும் வரப்போகும் துன்பத்தையறிந்து அகழியிலுள்ள மலர்களாகிய கண்கள் கண் நீர்கொண்டு அழுது நடுங்கியதாகக் கற்பனை செய்திருப்பது இங்கு ஒப்புநோக்கத்தகும். இராவணன் பிறர்மனை நயந்த பேதை யாதலின் இகழுந்தன்மையனாய இராவணன் என்றார். "எளிதென இல்லிறப்பா னெய்து மெஞ்ஞான்றும் விளியாது நிற்கும் பழி" (குறள்-145) என்றது காண்க. புகழும் மேன்மையும போதற்குக் காரணம் சீதையை நயந்ததே என்பது குறிப்பால் பெற வைத்தவாறு. போயின என்பது துணிவுபற்றிய காலவழுவமைதி, இச்செய்யுள் தன்மைத் தற்குறிப்பேற்றவணி. (8)

**7152.** தண்டி ருந்தபைந் தாமரைத் தாளறப்
பண்டி ரிந்து சிதையப் படர்சிறை
வண்டி ரிந்தன வாய்தொறு முட்டையைக்
கொண்டி ரிந்தன வன்னக் குழாமெலாம்.

தண்டு இருந்த பைந்தாமரைத்தாள் அறப்,
பண் திரிந்து சிதையப், படர்சிறை
வண்டு இரிந்தன ; வாய்தொறும் முட்டையைக்
கொண்டு இரிந்தன, அன்னக் குழாம் எலாம்.

பொ :—தண்டோடு இருந்த பசிய தாமரையின் கிழங்கும் அற்று விட்டமையால், பறந்து செல்லுதற்குரிய சிறகுகளையுடைய வண்டுகள், தாம் பாடிக்கொண்டிருந்த பண் மாறுபட்டுக்கெட ஓடலாயின; (அத் தாமரை மலரில் உறங்கிக் கொண்டிருந்த) அன்னங்களின் கூட்டம் எல்லாம் தத்தம் வாய்தோறும் முட்டையைக் கவ்விக் கொண்டு ஓடலாயின.

கு :—தாமரைத்தாள் என்றது தாமரைக் கிழங்கினை. வண்டுகள் இரிதற்கும் அன்னங்கள் இரிதற்கும் காரணம் அகழியில் இருந்த தாமரைகளை அடியோடு குரங்குகள் பறித்தமையேயாம். இன்பக் காலத்தில் பாடியிருந்த பண்ணினை இடமும் உணவுமற்ற துன்பக் காலத்தில் வண்டு சரியாகப் பாட வியலாமையால் வேறுபடுதல் இயல்பாதல் அறியலாம். துன்பக் காலத்தும் வண்டுகள் பண் பாடுதலையும் அன்னங்கள் தம் முட்டைகளையும் விடாமல் கொண்டு இரிந்தமையையும் இங்குப் புலப்படுத்தியுள்ளமை காணலாம். பண் திரிந்து சிதைய, வாய்தொறும் முட்டையைக் கொண்டிரிந்தன அன்னக்குழாம் என இயைத்தும் கூறலாம். முட்டைக்குப் பண் திரிந்து சிதைதலாவது, அமைவு வேறுபட்டுக் கெடுதல். பண் – அமைவு. தாமரை மலரில் அமைதியாக இருந்த முட்டையை அன்னம் வாயில் கவ்விப் பறந்து செல்லுதலால் அம் முட்டையின் அமைதி வேறுபட்டுக் கெடுதல் இயல்பாதல் தெளிவு. தாளும் அற என்புழி உம்மை விகாரத்தால் தொக்கது. (9)

**7153.** தூறு மாமர மும்மலை யுந்தொடர்
நீறு நீர்மிசைச் சென்று நெருக்கலா
லேறு பேரக ழின்னின் றினப்பல
வாறு சென்றன வார்கலி மேலரோ.

தூறும் மாமரமும் மலையும் தொடர்
நீறும் நீர்மிசைச் சென்று நெருக்கலால்,
ஏறு பேர் அகழின் நின்று இனப்பல
ஆறு சென்றன ஆர்கலிமேல் அரோ.

பொ :—புதர்களும் பெரிய மரங்களும் மலைகளும் இவற்றோடு தொடர்ந்து வருகின்ற புழுதியும் அகழியின்நீர் மேற்சென்று நெருக்குதலால், மேலேறுகின்ற பெரிய அகழியில் நின்று கூட்டமான பல ஆறுகள் கடல்மேற் சென்றன.

கு :—தூறு – புதர். 'தூற்றில் வாழ் முயல்' (பெரியபு. திருக்குறிப். 77) என்றதும் காண்க. மா மரம் - பெரிய மரம். வானரங்கள் தத்தமக்குக் கிடைத்த புதர்களையும் மரங்களையும் மலைகளையும் பிடுங்கி அகழியில் வீசியதால், அகழியின்நீர் மேலேறி வழிந்து பலவகையாகப் பிரிந்து கடலில் சேர்ந்தமை புலப்படுத்தியவாறு. பலவிடத்தும் வழிந்து சென்றநீர், கூட்டமான ஆறுகள் போலக் காணப்பட்டமை தோன்ற 'இனப் பல ஆறு சென்றன' என்றார். ஆறுகள் மலையில் நின்றும் தோன்றிக் கடலிடைக் கலத்தல் ஆகிய இயல்புக்கு மாறாக இப்போது அகழியினின்றும் தோன்றிக் கடலில் சென்று சேர்ந்த புதுமையைப் புலப்படுத்தியவாறு. நீறு - புழுதி. தூறு முதலியவற்றை வீசும்போது தொடர்ந்து செல்லும் புழுதி என்க. இனிப் புழுதியையே குரங்குகள் வாரி வீசியதாகவும் கொள்ளலாம். ஆர்கலி – கடல். மேல் ஐந்தாம் செய்யுளில் ஊரை வளைத்ததாகக் கூறிய அகழிநீர், பல காலாகப் பிரிந்து கடலில் சேர்ந்தமை இங்குக் கூறினார். (10)

**7154.** இழுகு மாக்க லிடுந்தொ றிடுந்தொறுஞ்
சுழிக டோன்றுஞ் சுரித்திடை தோன்றுதே
னொழுகு தாமரை யொத்தன வோங்குநீர்
முழுகி மீதெழு மாதர் முகத்தையே.

இழுகு மாக் கல் இடுந்தொறு இடுந்தொறும்
சுழிகள் தோன்றும் சுரித்து; இடை தோன்றுதேன்
ஒழுகு தாமரை ஒத்தன, ஓங்கு நீர்
முழுகி மீது எழும் மாதர் முகத்தையே.

பொ :—(வானரங்கள்) வீசிய பெரிய கற்கள் வீசப்படும் இடந்தோறும் இடந்தோறும் நீர்ச்சுழிகள் சுழிந்து தோன்றும்; (அச் சுழிகளுக்கு) நடுநடுவே (அழுந்திப்பின்) தோன்றுகின்ற தேன் ஒழுகும் தாமரை மலர்கள், பெருகும் நீரில் முழுகி மேல் எழுகின்ற பெண்டிரின் முகங்களை ஒத்தன.

கு :—இழுகுதல் - வீசுதல். 'தென்றலிழுக மெலிந்து' (ஊர் தேடு. 174) என்புழியும் இச்சொல் இப்பொருளில் வழங்கியிருத்தல்

நினைக. இடுமிடந்தொறும் என்பது இடுந்தொறும் எனத் தொகுத்துக் கூறப்பட்டது. பெரிய கற்கள் வீசப்பட்ட இடங்களில் நீர்ச் சுழிகள் தோன்றுவது இயற்கை. அவ்வாறு தோன்றிய சுழிகட்கு நடுவில் தாமரை மலர்கள் முன் அழுந்திப் பின் மேலெழும் தோற்றம் நீரில் மூழ்கி எழுகின்ற பெண்டிரின் முகங்களைப் போன்று தோன்றின என்றவாறு. சுரித்தல் - சுழித்தல். தோன்று தாமரை நீர் மூழ்கி மீதெழு மாதர் முகத்தை ஒத்தன என இயையும். ஓங்கு நீர் என்றது பெருகிவருகின்ற ஆற்று நீரை. முழுகி மீதெழுமாதர்முகம் என்ற உவமைக்கேற்பச் சுழிகளுக்கு நடுவே அழுந்திப் பின் மேல் எழுந்து தோன்றும் தாமரைமலர் என வருவித் துரைக்க. "பாசடை நிவந்த கணைக்கால் நெய்தல், இனமீ னிருங்கழி யோதமல்கு தொறும், கயமூழ்கு மகளிர் கண்ணின் மானும்" (குறுந். 9) என்பது இங்கு ஒப்புநோக்கத் தகும். தேனெழுகு தாமரை என்பதற்கேற்ப நீரொழுகு முகம் என வருவித்தலும் ஆம். (11)

### கவிக் கூற்று

**7155.** தன்மைக் குத்தலை யாய தசமுகன்
தொன்மைப் பேரகழ் வானரந் தூர்த்ததா
லின்மைக் கும்மொன் றுடைமைக்கும் யாவர்க்கும்
வன்மைக் கும்மொர் வரம்புமுண் டாங்கொலோ.

தன்மைக்குத் தலையாய தசமுகன்
தொன்மைப் பேர் அகழ் வானரம் தூர்த்ததால்;
இன்மைக்கும், ஒன்று உடைமைக்கும், யாவர்க்கும்
வன்மைக்கும், ஒர் வரம்பும் உண்டாம் கொலோ ?

பொ :—வீரத் தன்மைக்குத் தலையானவனாகிய இராவணனது பழைய பெரிய அகழியைச் சிறிய குரங்குகள் தூர்த்துவிட்டன; வறுமைக்கும் செல்வத்திற்கும் யாவர்க்கு மேலான வலிமைக்கும் ஓரிடத்தில்தான் தங்கவேண்டும் என்ற வரம்பும் உண்டோ? (இல்லையன்றே ?)

கு :—'உடைமையும் வறுமையும் ஒரு வழி நில்லா' (வெற்றி வேற்கை, 22) என்பது போலவே யாவர்க்கும் மேலான வறுமையும் ஒரு வழி நிற்கவேண்டும் என்ற வரம்பு இல்லையாதலின், இராவணனிடம் முன் இருந்த வலிமை நீங்கியது; வானரங்கட்கு அவனது அகழியைத் தூர்க்கும் வலிமை ஓங்கியது என்றவாறு. முன்னிரண் டடியிற் கூறிய சிறப்புப் பொருளைப் பின்னிரண்டு அடிகளில் கூறிய

பொதுப் பொருள் நிறுவி நிற்றலின், இது வேற்றுப் பொருள் வைப் பணி. தன்மை என்றது வீரத்தன்மையை. அகழி வானரங்களால் தூர்க்கப்படும் சிறுமை யுடையதன்று என்பது தோன்றத் தசமுகன் தொன்மைப் பேரகழ் எனச் சிறப்பிக்கப் பெற்றது. 'வன்மைக்கு ஓர் வரம்பு முண்டாங் கொல்' என்பதே இங்குக் கூறத்தக்க பொரு ளாயினும், ஒரு வழி நில்லாமையில் ஒப்புமையுடைமை பற்றி இன் மையும் உடைமையும் உடன் கூறப்பட்டன. இவ்வாறு கூறுவது ஒப்புமைக் கூட்டம் என்னும் அணியாகும். யாவர்க்கும் வன்மை என்புழி நான்கனுருபு எல்லைப் பொருளது. வரம்பு என்றது, ஒரு வழிதான் நிற்கவேண்டும் என்ற வரையறையை. காலந்தோறும் இவை மாறும் இயல்பின என்றவாறு. "தேனுடைய நறுந் தெரியற் றேவரையுந் தெறும் ஆற்றல், தானுடைய இராவணற்குந் தம்பியர்க் கும் தவிர்ந்ததோ ? ஊனுடைய உடம்பினராய் எங்குலத்தோர்க்கு உணவாய, மானுடவர் மருங்கேபுக்கு ஒடுங்கினதோ வலி அம்மா" (ஆரணிய - சூர்ப்பணகை:-106) எனச் சூர்ப்பணகையே இக்கருத்தை ஐய வாய்பாட்டால் முன்னரே கூறியிருத்தல் காணலாம். கொல், அசைநிலை. வினு ஓகாரம் எதிர்மறைப் பொருளது. (12)

## வானரங்கள் மதிற்குடுமி கொள்ளுதல்

**7156.** தூர்த்த வானரம் சுள்ளி பறித்திடைச்
சீர்த்த பேரணை தன்னையுஞ் சிந்தின
வார்த்த தன்ன மதிலின் வரம்பு கொண்
டார்த்த வார்கலி காரொடு மஞ்சவே.

தூர்த்த வானரம், சுள்ளி பறித்து இடைச்
சீர்த்த பேர் அணை தன்னையும் சிந்தின;
வார்த்தது அன்ன மதிலின் வரம்பு கொண்டு
ஆர்த்த, ஆர்கலி காரொடும் அஞ்சவே.

பொ :—அகழியைத் தூர்த்த வானரங்கள் மராமரத்தைப் பிடுங் கிக்கொண்டு அகழிக்கு இடையே (அரக்கர் போக்கு வரவு செய்ய அமைத்திருந்த) சிறப்புடைய பெரிய அணையையும் உடைத்துச் சிந்தினவாய், உருக்கி வார்த்தாற்போன்ற மதிலின் உச்சியைக் கைக் கொண்டு கடலும் மேகமும் அஞ்சுமாறு ஆரவாரித்தன.

கு :—சுள்ளி - மராமரம். குறிஞ்சிப் பாட்டு-66 ஆவது அடி உரை யிலும் இப் பொருள் கூறப்பட்டிருத்தல் காணலாம். தூர்த்த வானரம் என்றது அநுவாதம். பேரணை தன்னையும் என்புழி உம்மை

இறந்தது தழுவியது. தூர்த்தலேயன்றி அணையையும் சிந்தின என்க. பறித்துச் சிந்தின வாய்—ஆர்த்த என முற்றெச்ச மாக்கி முடிக்க. வார்த்ததன்ன மதில் என்றது, தற்குறிப்பேற்ற அணி, இதனால் அம் மதிலின் உறுதியைப் புலப்படுத்தியவாறு. "செம்பிட்டுச் செய்த விஞ்சித் திருநகர்" (கும்பகர்ணன் வதைப். 160) எனச் சிறப்பித்தல் காணலாம். மதிலின் வரம்பு என்றது மதிலின் உச்சியை. இராமன் முன் 'இப்பொழுதே கதிர் மீச் செலாக் கொடி மதிற்குடுமித்தலைக் கொள்க' (3) என்று ஏவியதை வானரங்கள் செய்து முடித்தன என்றவாறு. கடலும் மேகமும் ஆர்ப்பதில் சிறப்புடையன ஆயினும், வானர சேனையின் மகிழ்ச்சி ஆரவாரத்திற்கு ஒப்பாகாமையின் அஞ்சுவன ஆயின. (13)

### மதில்மீது ஏறிய வானரங்களின் தோற்றம்

**7157.** வட்ட மேரு விதுவென வான்முக
டெட்ட நீண்ட மதின்மிசை யேறிவிண்
தொட்ட வானரந் தோன்றின மீத்தொக
விட்ட வெண்கொடி வீங்கின வென்னவே.

வட்ட மேரு இது என, வான் முகடு
எட்ட நீண்ட மதில்மிசை ஏறி, விண்
தொட்ட வானரம், தோன்றின-மீத்தொக
விட்ட வெண்கொடி வீங்கின என்னவே.

பொ :—வட்டமான மேருமலை இது என்று காண்போர் கருதுமாறு வானின் உச்சியை எட்டுமாறு உயர்ந்துள்ள மதில்மேல் ஏறி விண்ணுலகைத் தொட்டாற்போல் நின்ற வானரங்கள்,—மதிலின் மேல் சேரப் பறக்கவிட்ட வெண்மையான கொடிகள் பெரியவாக வளர்ந்தன என்னுமாறு தோன்றின.

கு :—வானரங்கள் வெண்ணிறத்தனவாய் பெரிய வடிவுள்ளன ஆதலின், வெண்கொடி போன்று தோன்றின என்னுது 'வெண் கொடி வீங்கின என்னத் தோன்றின' என்றார். வீங்குதல், பெரிதாதல். வடமேருவினொடு இதற்கு வேற்றுமை தோன்ற 'வட்ட மேரு இது என, என்றார். மதில் இலங்கையைச் சுற்றி வட்டமாக அமைந்துள்ள அமைப்பை விளக்கியவாறு. நீளுதல் இங்கு உயர்தலை உணர்த்தியது என்பது, 'வான்முகடு எட்ட நீண்ட' என்ற அடையால் புலப்படும். விண் என்றது விண்ணுலகை. வீங்கின என்னத் தோன்றின என இயையும். (14)

## வானரங்கள் ஏறியதால் மதில் தரைபுகுதல்

**7158.** இறுக்க வேண்டுவ தில்லையெண் டீர்மணி
வெறுக்கை யோங்கிய மேரு விழுக்கலால்
நிறுக்க நேர்வரு வீரர் நெருக்கலால்
பொறுக்க லாது மதிறரை புக்கதால்.

இறுக்க வேண்டுவது இல்லை; எண் தீர் மணி
வெறுக்கை ஓங்கிய மேரு விழுக் கலால்
நிறுக்க, நேர்வரு வீரர் நெருக்கலால்,
பொறுக்கலாது, மதில் தரை புக்கதால்.

பொ :—மதிக்க இயலாத பெருமையுடைய மணிகளாகிய செல்வத்தையுடைய உயர்ந்த மேருமலையாகிய சிறந்த எடைக்கல்லால் நிறுக்க, அம் மேருவுக்கு ஒப்பாகும் பாரமுடைய வானரவீரர் ஏறி நெருக்குதலால், அவர் பாரம் பொறுக்க முடியாமல் இலங்கை மதில் தரையில் அழுந்தியது ஆதலின், அம்மதிலை உடைத்தெறிய வேண்டிய வேலை வானரர்க்கு இல்லையாயிற்று.

கு :—வானர வீரர் ஒவ்வொருவரும் மேருமலையை ஒத்த பாரமுடையவர் என்பது புலப்படுத்தியவாறு. "ஒடிக்குமேல் வடமேருவை வேரொடு மொடிக்கும்'' (கிட்கிந்-தானைகாண். 25) என முன் புகழ்ந்திருத்தலும் நினைக. மேருவிழுக்கல் என்பது உருவகம். தராசின் ஒரு தட்டில் மேருவாகிய எடைக்கல்லையும் மற்றொரு தட்டில் ஒரு வானரத்தையும் வைத்து நிறுத்தால் அம்மேருவுக்கு நேரொக்கும் வானரம் என்றவாறு. வானரர் பாரம் தாங்க முடியாது மதில் தரையில் புகுந்தமையால், மதிலை இடிக்கவேண்டிய கடமை வானரங்கட்கு இல்லையாயிற்று. இறுத்தல் - உடைத்தல். 'இரவிகளில் ஒருவன் பல் இறுத்துக்கொண்டார்.' (தேவாரம். 1233, 9) என்புழியும் இச்சொல் இப்பொருளில் வழங்கியுள்ளமை காணலாம். எண் - மதிப்பு. விலை மதிக்கமுடியாத மணி என்பார். எண்தீர் மணி என்றார். மணியாகிய வெறுக்கை என்க. வெறுக்கை - செல்வம், (15)

இப் பாடலுக்குப்பின் 23, 26, 70 என்ற எண்ணுள்ள சுவடிகளில் பின்வரும் மிகைப் பாடல் காணப்படுகின்றது.

7158 (a). அந்த வேலை அரக்க ரழன்றுகண்,
சிந்து தீயிற் றிசையெரி சேர்த்தவன்
முந்து ரைத்த முறைமையின் முந்துற,
வந்தெ திர்த்தனர் வாயில்க டோறுமே.

52 என்ற எண்ணுள்ள அச்சுப் புத்தகத்தில் பின் வரும் மிகைப் பாடல் உள்ளது.

7158 (b) அன்ன போதங் கரக்கர் பிரான்படை,
உன்னு மாயிர வெள்ள முடன்றெழா,
கன்னி மாமதி லின்புறம் காத்துடன்
முன்னி வெஞ்சமர் மூண்டெழுந் துற்றதே.

## அரக்கர் போருக்கு எழுதல்

**7159.** அறைந்த மாமுர சானைப் பதாகையால்
மறைந்த வானெடு வானக மாதிரம்
குறைந்த தூளி குழுமிவிண் ணூடுபுக்
குறைந்த தாங்கவர் போர்க்கெழு மோதையே.

அறைந்த மா முரசு; ஆனைப் பதாகையால்
மறைந்தவால், நெடு வானகம்; மாதிரம்
குறைந்த, தூளி குழுமி; விண்ணூடு புக்கு
உறைந்தது, ஆங்கு அவர் போர்க்கு எழும் ஓதையே.

பொ:—பெரிய போர்முரசுகள் அடிக்கப்பெற்றன; (அம் முரசொலி கேட்டு நால்வகைப் படைகளும் எழுந்தபோது) யானைகளின் மேல் கட்டியிருந்த கொடிகளால் நெடிய வானத்தினிடம் மறைந்தது; (தேரும் குதிரையும் காலாளும் ஆகிய ஏனைப் படைகள் புறப்பட்ட போது) எழுந்த புழுதி நெருங்கினமையால் திசைகள் குறுகித் தோன்றின; அவ்வரக்கர் போர்க்கு எழும்போது உண்டான ஓசை விண்ணிடைச் சென்று அங்குத் தங்கின.

கு:—போர் முரசு அறைந்ததற்கும் சேனைகள் புறப்பட்டதற்கும் கால இடையீடு இன்மை புலப்படுத்தியவாறு. மாமுரசு அறைந்த என்னுது, அறைந்த மாமுரசு என்றமையால் விரைவு புலப்படுத்திய வாறு. வானகம் பதாகையால் மறைந்த என்க. யானைகள்மேல் கொடி கட்டும் மரபு புலப்படுத்த ஆனைப் பதாகை என்றார். "வென்றெழு கொடியொடு வேழஞ் சென்று புகக் குன்று குயின்றன்ன வோங்கு நிலைவாயில்" (நெடுநல்வாடை. 27, 28) என்றது காண்க. தூளி - புழுதி. தூளி குழுமி மாதிரம் குறைந்த என்க. குழுமி என்னும் செய்து என் எச்சம் காரணப் பொருளது; 'மழை பெய்து நெல் விளைந்தது' என்புழிப் போல. ஓதை விண்ணூடு புக்கு உறைந்தது என்க. யானைகளின் உயர்ச்சியும் படைகளின் நெருக்கமும் ஆரவாரமும் இதனால் புலப்படுத்தியவாறு. (16)

## அரக்கர் சேனையில் எழுந்த ஒலிகள்

**7160.** கோட லம்பின கோதை யலம்பின
ஆட லம்பரித் தாரு மலம்பின
மாட லம்பின மாமணித் தேர்மணி
பாட லம்பின பாய்மத யானையே.

**கோடு அலம்பின ; கோதை அலம்பின ;**
**ஆடல் அம்பரித் தாரும் அலம்பின ;**
**மாடு அலம்பின மாமணித்தேர் மணி ;**
**பாடு அலம்பின, பாய்மத யானையே.**

பொ :—ஊது கொம்புகள் ஒலித்தன; (காலாட் படையினர் மார்பி லணிந்த) முத்தாரங்கள் ஒலித்தன; தாள அறுதிக்கேற்ப ஆடும் இயல்பினையுடைய அழகிய குதிரைகளின் கழுத்தில் அணிந்த கிண் கிணி மாலையும் ஒலித்தன; சிறந்த மணிகள் பதித்துச் செய்யப்பட்ட தேரில் கட்டிய மணிகள் சேனையின் பக்கங்களிலெல்லாம் ஒலித்தன, பெருகுகின்ற மதத்தினையுடைய யானைகள் (போர் கிடைத்தது என்ற) பெருமிதத்தோடு பிளிறின.

கு :—நால்வகைப் படைகளிலும் ஒலி யெழுந்தமை நான்கு அடி களால் கூறப்பட்டது. கோடு, சங்கும் ஆம். கோதை - முத்துமாலை. காலாட் படையினர் விரைந்து நடக்குங்கால் அவர் மார்பிலணிந்த முத்தாரங்கள் ஒலித்தன என்க. தார் – கிண்கிணிமாலை. மாடு – பக்கம். மணி இரண்டில் முன்னையது ஒளி மணி; பின்னையது ஒலி மணி. போர் முரசு கேட்டவுடன் மதத்தால் கதஞ் சிறந்து களிறுகள் பெருமிதத்தோடு பிளிறின என்க. பாடு - பெருமிதம். பாய்தல்- ஒழுகுதல்; பெருகுதல். (17)

## அரக்கர் சேனையும் வானர சேனையும் தாக்குதல்

**7161.** அரக்கர் தொல்குலம் வேரற வல்லவர்
வருக்கம் யாவையும் வாழ்வுற வந்ததோர்
கருக்கொள் காலம் விதிகொடு காட்டிடத்
தருக்கி யுற்றெதிர் தாக்கின தானையே.

**அரக்கர் தொல்குலம் வேர் அற, அல்லவர்**
**வருக்கம் யாவையும் வாழ்வு உற, வந்தது ஓர்**
**கருக்கொள் காலம் விதிகொடு காட்டிட,**
**தருக்கி உற்று, எதிர் தாக்கின—தானையே.**

பொ :—அரக்கரது பழமையான குலம் வேரோடு அழியவும், அவ ரல்லாத தேவரும் மக்களும் ஆகியோரின் இனம் யாவையும் வாழ்வு பொருந்தவும், வந்ததாகிய ஒரு நற் சகுனத்தை யுள்ளீடாகக் கொண்ட காலத்தை விதி தோற்றுவித்தலால், இருதிறத்துச் சேனையும் செருக்குக்கொண்டு நெருங்கி எதிர் எதிரே தாக்கின.

கு :—அரக்கரும் வானரரும் எதிர்நின்று தாக்கும் இப்போரே அரக்கர் அழியவும் அல்லாதோர் வாழவும் செய்கின்றதாகலின் காலம் விதிகொடு காட்டிடத் தாக்கின என்றார். அல்லவர் என்றது, அரக்க ரல்லாதவராகிய தேவரையும் மக்களையும். வந்ததோர் காலம், கருக் கொள் காலம் என்க. நன்னிமித்தத்தை யுள்ளீடாகக் கொண்ட காலம் என வருவிக்க. தருக்குதலாவது தத்தம் வலியே பெரிதென இருதிறத்தவரும் செருக்குதல். தானை என்றது இருதிறத்துச் சேனை யையும். (18)

**7162.** பற்கொ டுந்நெடும் பாதவம் பற்றியும்
கற்கொ டுஞ்சென்ற தக்கவி யின்கடல்
விற்கொ டுந்நெடு வேல்கொடும் வேறுள
எற்கொ டும்படை யுங்கொண்ட திக்கடல்.

பல் கொடும், நெடும் பாதவம் பற்றியும்,
கல் கொடும், சென்றது—அக்கவியின் கடல்;
வில் கொடும், நெடு வேல் கொடும், வேறு உள
எல் கொடும் படையும் கொண்டது—இக்கடல்.

பொ :—அந்த வானரப் படையாகிய கடல் பற்களைக்கொண்டும், நீண்ட மரங்களைப் பற்றிக்கொண்டும் கற்களைக்கொண்டும் சென்றது; இந்த அரக்கர் படையாகிய கடல், வில்லைக்கொண்டும் நீண்ட வேலினைக்கொண்டும், இவற்றிற்கு வேருகவுள்ள ஒளியுடைய கொடிய படைக்கலங்களையும் கொண்டு போர் செய்தது.

கு :—அரக்கர் படைக்குள்ள போர்க்கருவிகள் வானரப்படைக்கு இல்லாமையின், அவை தம் பற்களையும் மரங்களையும் கற்களையுமே போர் செய்யும் படையாகக் கொள்ள நேர்ந்தது. கவியின் கடல் உருவகம். கவி - குரங்கு. எல் - ஒளி. மேல் அரக்கர் படையினைப் பற்றியே கூறிவந்தமையால் 'இக்கடல்' என அரக்கர் படையாகிய கடலை அண்மைச் சுட்டால் சுட்டினர். இவ்வரக்கர் படையாகிய கடல் என உருவகத்தை விரிக்க. (19)

**7163.** அம்பு கற்களை யள்ளின வம்பெலாம்
கொம்பு டைப்பணை கூறுற நூறின
வம்பு டைத்தட மாமர மாண்டன
செம்பு கர்ச்சுடர் வேற்கணஞ் செல்லவே

அம்பு கற்களை அள்ளின; அம்பு எலாம்
கொம்புடைப்பணை கூறு உற நூறின;
வம்புடைத் தட மாமரம் மாண்டன
செம்புகர்ச் சுடர் வேற்கணம் செல்லவே.

பொ :—(அரக்கர் விட்ட) அம்புகள் வானரர் வீசிய குன்றுகளைப் பற்றி அழித்தன; வானரர் வீசிய கிளைகளையுடைய மரங்கள், அரக்கர் விட்ட அம்புகள் எல்லாவற்றையும் துண்டாகுமாறு அழித்தன; அரக்கர் விட்ட சிவந்த புள்ளிகளையுடைய ஒளிவீசும் வேல்கள் சென்று பாய்தலால் வாசனையுடைய பெரிய சிறந்த மரங்கள் அழிவுற்றன.

கு :—மேல், இருவகைப் படையும் ஏந்திய போர்க் கருவிகளைப் பற்றிக் கூறிவிட்டமையால் இங்குக் கருவிகளை மட்டுமே கூறிக் கருத்தாவை யுய்த்துணர வைத்தார். அம்பு அரக்கர் விட்டன என்பதும், கல் வானரங்கள் வீசின என்பதும் எளிதில் புலனாதல் காண்க. பணை - பருமை; இங்கு ஆகுபெயரால் மரத்தை யுணர்த்தியது. அள்ளுதல் – கைப்பற்றுதல்; இங்குப்பற்றி அழித்தலை உணர்த்தின. வேற்கணஞ் செல்ல மாமரம் மாண்டன என்றது, கந்தபுராணத்தில் முருகன் வேல் ஊடுருவ மாமரமாய் நின்ற சூரபன்மா மாண்ட நிகழ்ச்சியை நினைப்பிப்பதுபோல் தொனியாகத் தோன்றுதல் காணலாம். மாமரம் என்றது, இங்கு ஒரு மரவகையைக் குறிக்காமல் பெருமையுடைய மரம் என்னும் பொருளது. பகைவர் தம் உடலில் புகுந்து குருதி தோய்ந்துள்ளமையால் சிவந்த புள்ளிகள் வேலில் இருந்தன என்க. புகர்—புள்ளி. கணம் - கூட்டம். பலரால் விடப்பட்டமை தோன்ற 'வேற்கணம்' என்றார். செல்லுதல், இங்கு ஊடுருவிச் செல்லுதலை யுணர்த்தியது. (20)

**7164.** மாக்கை வானர வீரர் மலைந்தகல்
தாக்கி வஞ்சர் தலைக டகர்த்தலால்
நாக்கி னூடுஞ் செவியினு நாகம்வாழ்
மூக்கி னூடுஞ் சொரிந்தன மூளையே.

மாக் கை வானர வீரர் மலைந்த கல்
தாக்கி, வஞ்சர் தலைகள் தகர்த்தலால்
நாக்கினூடும், செவியினும் நாகம் வாழ்
மூக்கினூடும் சொரிந்தன மூளையே.

பொ:—பெரிய கைகளையுடைய வானர வீரர்கள் வீசிய கற்கள், வஞ்சகர்களாகிய அரக்கரின் தலைகளைத் தாக்கி உடைத்தலால், அவ் வரக்கரின் வாய்வழியாகவும் செவிவழியாகவும் பாம்பு வாழ்தற்குரிய மூக்கின் வழியாகவும் அவர் மூளைகள் வெளிவந்தன.

கு:—மலைகளைத் தாங்குதற்குத் தகுதியுடைய கை என்பார். 'மாக்கை வானரம்' என்றார். மலைந்த கல் என்றது, போரில் வீசிய கல் என்னும் பொருளது. நாக்கு என்பது ஆகுபெயரான் வாயை யுணர்த்தியது. தலையில் தொளையுள்ள உறுப்புகள் வாயும் செவியும் மூக்குமே யாகலின் அத்தொளைகள் வழியே மூளை வெளி வந்ததாகக் கூறினர். பாம்பு வாழ்தற்குரிய புற்றுப் போன்ற மூக்கு என்ற கருத்தால் 'நாகம் வாழ் மூக்கு' என்றார். இதனால் அவர் மூக்கின் அளவு உணர்த்தியவாறு. தலைகள் பலவாதலின் சொரிந்தன மூளை எனப் பன்மையாற் கூறினர். கல் தலைகள் தகர்த்தலால், அத்தலைகள் மூளை சொரிந்தன என வருவித்து முடிக்க. (21)

**7165.** அற்க ளோடு நிறத்த வரக்கர்தம்
விற்க ளோடுஞ் சரம்பட வெம்புணீர்
பற்க ளோடுஞ் சொரிதரப் பற்றிய
கற்க ளோடு முருண்ட கவிகளே.

அற்கள் ஓடும் நிறத்த அரக்கர்தம்
விற்கள் ஓடும் சரம்பட, வெம்புணீர்
பற்க ளோடும் சொரிதர, பற்றிய
கற்க ளோடும் உருண்ட கவிகளே.

பொ:—இருளும் தோற்று ஓடுதற்குக் காரணமான மிகக் கரிய நிறத்தையுடைய அரக்கர்களின் விற்களிலிருந்து விரைந்து வருகின்ற அம்புகள் படுதலால், வெவ்விய புண்களிலிருந்து இரத்தம் சொரியவும், பற்கள் வீழவும், தாம் கையில் பற்றியிருந்த கற்களோடும் வானரங்கள் உருண்டன.

கு:—அல் - இரவு; இங்கு இருளை யுணர்த்தியது. இருள் தங்கும் இடங்கள் பலவாதலின் அற்கள் என்று பன்மையாகக் கூறினர்.

அரக்கர் தம் நிறத்திற்கு ஒப்பாகேம் என்று இருள் அஞ்சி ஓடும் என்க. விற்களினின்றும் ஓடும் சரம் என ஐந்தனுருபு விரிக்க. புண்ணீர் பற்களோடும் சொரிதர என்புழி ஒடு வேறு வினை ஒடு; 'தொடியொடு தொல்கவின் வாடியதோள்' என்புழிப்போல. சொரிதல் என்ற வினைக்குப் புண்ணீர் ஏற்புடைமையும் பற்கள் ஏற்புடைய தன்மையும் அறிக. புண்ணீர் சொரியப் பற்கள் வீழக் கற்களோடும் கவிகள் உருண்டன என்றவாறு. அரக்கர் தம் அம்பு பட்டு வீழ்ந்த வானரங்களின் மெலிவு புலப்படப் 'பற்றிய கற்க ளோடும் உருண்ட' என்றார். கற்களும் வானரங்களும் சேர உருண்டன என்றவாறு. கையில் மலையிருந்தும் அம்புகளை முறிக்கும் ஆற்றலின்றி அவ்வம்புகளால் தாக்குண்டு உருண்டன வானரங்கள் என்றவாறு. (22)

**7166.** நின்று மேரு நெடுமதி னெற்றியின்
வென்றி வானர வீரர் விசைத்தகல்
சென்று தீயவ ராருயிர் சிந்தின
குன்றின் வீழு முருமின் குழுவினே.

நின்று மேரு நெடுமதில் நெற்றியின்
வென்றி வானர வீரர் விசைத்தகல்
சென்று, தீயவர் ஆர் உயிர் சிந்தின,
குன்றின் வீழும் உருமின் குழுவினே.

பொ:—மேரு மலை போன்ற உயர்ந்த மதிலின் உச்சியில் நின்று வெற்றியையுடைய வானர வீரர்கள் வீசிய கற்கள், குன்றின்மேல் விழுகின்ற இடிகளின் கூட்டம் போலச் சென்று, அரக்கர்மேல் வீழ்ந்து அவர் தம் அரிய உயிரைப் போக்கின.

கு:—மதில் நெற்றியின் நின்று வீரர் விசைத்த கல் உருமின் குழுவின் சென்று சிந்தின என இயையும். நெற்றி - உச்சி. விசைத்த கல் - விசையாக எறிந்த கல். அரக்கர் உடம்பிற்குக் குன்றும் வானர வீரர் எறிந்த கல்லுக்கு இடியும் உவமை. (23)

**7167.** எதிர்த்த வானரம் யாக்கை யொடிற்றன
மதிற்பு றம்கண்டு மண்ணின் மறைந்தன
கதிர்க்கொ டுங்க ணரக்கர் கரங்களால்
விதிர்த்தெ றிந்த விலங்கிலை வேலினே.

எதிர்த்த வானரம் யாக்கையொடு இற்றன;
மதில் புறங்கண்டு, மண்ணில் மறைந்தன;—
கதிர்க் கொடுங்கண் அரக்கர் கரங்களால்
விதிர்த்து எறிந்த விலங்கு இலை வேலினே.

பொ :—(மதில்மேல் நின்று) எதிர்த்தனவாகிய சில வானரங்கள், ஒளியையுடைய கொடிய கண்களையுடைய அரக்கர் கைகளால் அசைத்து வீசிய விளக்கமுடைய வேலினால் உடம்போடு அற்றனவாய் மதிலின்புறத்தே வீழ்ந்து மண்ணில் மறைந்தன.

கு :—வேலின் இற்றனவாய் மறைந்தன என இயையும் மதிற் புறங் காணுதலாவது மதிலின் புறத்தே வீழ்தல். மதிலகத்தே செல்ல விரும்பிய வானரம் அதைச் செய்ய இயலாமையோடு மதிலின்புறத்தே வீழ்ந்து மறைந்தமை இதனால் புலப்படுத்தியவாறு. வேலை எறியும் போது நிகழும் செயல் புலப்படக் கரங்களால் விதிர்த்தல் கூறினர். விதிர்த்தல் - அசைத்தல். விலங்குதல் - விளக்கமுடையதாதல். (24)

**7168.** கடித்த குத்தின கையிற் கழுத்தறப்
பிடித்த வள்ளுகி ராற்பிள வாக்கின
இடித்த வெற்றின வெண்ணி லரக்கரை
முடித்த வானரம் வெஞ்சின முற்றின.

கடித்த, குத்தின, கையில் கழுத்து அறப்
பிடித்த வள் உகிரால் பிளவு ஆக்கின,
இடித்த, எற்றின, எண் இல் அரக்கரை
முடித்த வானரம் வெஞ்சின முற்றின.

பொ :—வானரங்கள் கொடிய கோபம் முதிரப் பெற்றனவாய், வாயால் கடித்தும் குத்தியும், கைகளால் கழுத்தறுமாறு பிடித்திருக்கியும், கூரியநகங்களால் உடம்பைப் பிளந்தும், இடித்தும், மோதியும் எண்ணில்லாத அரக்கர்களைக் கொன்றன.

கு :—வானரம் வெஞ்சின முற்றினவாய்க் கடித்து, குத்தி, பிடித்து' பிளவாக்கி, இடித்து, எற்றி அரக்கரை முடித்தன என்க. கடித்த முதலிய வினைமுற்றுகள் எச்சப் பொருளவாய் முடித்த என்ற முற்றுவினையோடு முடிந்தன. வள்—கூர்மை (25)

**7169.** எறிந்து மெய்து மெழுமுளைத் தண்டுகொண்
டறைந்தும் வெவ்வயி லாகத் தழுத்தியும்

நிறைந்த வெங்க ணரக்கர் நெருக்கலால்
குறைந்த வானர வீரர் குழுக்களே.

எறிந்தும், எய்தும், எழுமுளைத் தண்டு கொண்டு
அறைந்தும், வெவ் அயில் ஆகத்து அழுத்தியும்
நிறைந்த வெங்கண் அரக்கர் நெருக்கலால்
குறைந்த—வானர வீரர் குழுக்களே.

பொ:—நிறைந்துள்ள கொடிய கண்ணையுடைய அரக்கர்கள் (தோமர முதலியவற்றை) வீசியும், (அம்புகளை) எய்தும், தூணைப் போன்ற தண்டாயுதத்தைக் கொண்டு தாக்கியும், கொடிய வேலினை மார்பில் அழுத்தியும் வருத்துதலால் வானரவீரரின் கூட்டம் குறைவுற்றன.

கு:—எறிந்து, எய்து, என்ற வினைக்கேற்பப் போர்க்கருவிகள் வருவிக்கப்பட்டன. முளை-தண்டாயுதம்:- முளைத்தண்டு என மீமிசையாகவந்தது. நிறைந்த அரக்கர் என்க. நெருக்குதல் வருத்துதலை யுணர்த்திற்று. ஆகம்-மார்பு, அரக்கர் நெருக்கலால் பல வானரங்கள் மாண்டன என்பார் குறைந்த என்ரூர். குழு - கூட்டம். (26)

## போர்க்களக் காட்சி

**7170.** செப்பிற் செம்புன ரூேய்ந்தசெம் பொன்மதில்
துப்பிற் செய்தது போன்றது சூழ்வரை
குப்புற் றீர்பிணக் குன்று சுமந்துகொண்
டுப்பிற் சென்ற றுதிரத் தொழுக்கமே.

செப்பின் செம்புனல் தோய்ந்த செம்பொன்மதில்
துப்பின் செய்தது, போன்றது, சூழ்வரை;
குப்புற்று ஈர் பிணக் குன்று சுமந்து கொண்டு
உப்பில் சென்றது, உதிரத்து ஒழுக்கமே.

பொ:—செம்புருக்குப் போன்று சிவந்த இரத்தம் தோய்ந்த செம்பொன்னுல் செய்யப்பட்ட இலங்கை மதில் பவழத்தால் செய்ததாகிய வளைந்த மலைபோன்றது; இரத்த ஆறு, வீரர் அரிந்த பிண மலையைச் சுமந்து கொண்டு பாரம் தாங்காமல் தலைவளைந்து உப்புக் கடலில் சென்று கலந்தது.

கு:—மதில் இரத்தம் தோயப் பெற்றமையால், பவழத்தாற் செய்த வளைந்த மலைபோன்றது என்பது ஏது உவமை. செய்ததாகிய

வரை என்க. இரத்த வெள்ளம் படு பிணங்களைச் சுமந்து கொண்டு உவர்க்கடலைச் சேர்ந்தது என இரத்தப் பெருக்கின் மிகுதி புலப்படுத்தியவாறு. செப்பு என்றது செப்புருக்கினை; செம்புனற்கு ஒப்பாவதற்கேற்புடையது அதுவேயாதல் அறிக. குப்புறல்—தலைகுனிதல். பிணக்குன்றினைச் சுமத்தலால் தலைவளைந்து சென்றது என்க. உப்பு என்றது ஆகுபெயராய் உவர்க்கடலை உணர்தியது. (27)

**7171.** வந்தி ரைத்த பறவை மயங்கின
அந்த ரத்தி னெருங்கலி னங்கொரு
பந்தர் பெற்றது போன்றது பற்றுத
லிந்தி ரற்கு மரிய விலங்கையே.

வந்து இரைத்த பறவை மயங்கின,
அந்தரத்தில் நெருங்கலின், அங்கு ஒரு
பந்தர் பெற்றது போன்றது—பற்றுதல்
இந்திரற்கும் அரிய இலங்கையே.

பொ :—போர்க்களத்தில் வந்து ஆரவாரித்த பலவகைப் பறவைகள் தம்மில் கலந்தவாய் ஆகாயத்தில் நெருங்குதலினால் இந்திரற்கும் கைப்பற்ற வியலாத இலங்கை மாநகரம் அவ்விடத்தில் ஒரு பந்தலைப் பெற்றதுபோல் காணப்பட்டது,

கு :—போர்க்களத்தில் படுபிணம் தின்ன வந்த பறவைகள் விண்ணில் இடைவெளியில்லாமல் நெருங்கிப் பறத்தலால் பந்தல் வேய்ந்தாற் போல் காணப்பட்டது என்க. பறவைப் பந்தரைப் பெறுதற்கு உரிய சிறப்பு இலங்கை மாநகர்க்கும் உண்டு என்பார், பற்றுதல் இந்திரற்கும் அரிய இலங்கையே என்றார். அத்தகு சிறப்புடைய இலங்கை இப்பொழுது பிணக்காடாய்க் கிடக்கும் நிலையை இந்திரன் முதலிய தேவர்கள் காணாதவாறு பறவைகள் பந்தர் செய்து மறைத்தன என்ற குறிப்பும் கொள்ளலாம். தகுதியுடையோர் இறந்துபட்டபோது அவர் உடம்பின்மேல் வெயில் படாது பறவைகள் பந்தர் செய்து மறைத்தல் உண்டு. வெளியன் வேண்மான் ஆஅயெயினன், அளியியல் வாழ்க்கைப் பாழிப்பறந்தலை இழையணி யானை இயல்தேர் மிஞிலி யொடு, நண்பகலுற்ற செருவிற் புண்கூர்ந்து, ஒள்வாள் மயங்கமர் வீழ்ந்தெனப் புள்ளொருங்கு, அங்கண் விசும்பின் விளங்கு ஞாயிற்று ஒண்கதிர் தெருமைச் சிறகரிற் கோலி, நிழல்செய்து உழறல் காணேன் யானெனப், படுகளங் காண்டல் செல்லான் சினம் சிறந்து, உருவினை நன்னன் அருளான் கரப்ப" (அகநா 208) என்பது இங்கு நினைத்தற்குரியது. (28)

**7172.** தங்கு வெங்கன லொத்துத் தயங்கிய
பொங்கு வெங்குரு திப்புனற் செக்கர்முன்
கங்கு லன்ன கவந்தமுங் கையெடுத்
தங்கு மிங்குநின் ருடிய வாமரோ.

தங்கு வெங்கன லொத்துத் தயங்கிய
பொங்கு வெங்குருதிப் புனற் செக்கர் முன்
கங்குல் அன்ன கவந்தமும் கை எடுத்து
அங்கும் இங்கும் நின்று ஆடியவாம் அரோ.

பொ :—ஓரிடத்தில் தங்கி நின்ற கொடிய நெருப்பைப் போன்று விளங்கிய பொங்குகின்ற வெவ்விய இரத்த நீராகிய செவ்வானத்தின் முன்பு இருள் போன்ற அரக்கர்களின் கவந்தங்களும் கைகளை மேலே உயர்த்திக் கொண்டு அங்கும் இங்குமாக நின்று ஆடின.

கு :—கனல் ஒத்துத் தயங்கிய குருதிப்புனற் செக்கர் என்றது உவம உருவகம்; விடமனைய கட்காவி என்பது போன்றது. குருதிப் புனல்முன் கரிய கவந்தம் ஆடுதல், செக்கர் முன் கங்குல் போன்று தோன்றிற்று என்றவாறு. கங்குலன்ன கவந்தம் என்று உவமை கூறியதால் அரக்கரின் கவந்தம் என்பது பெறப்பட்டது.'' பேரொத்த வாயிரம் பேர் மடிந்தால் பிறக்கும் கவ்ந்தம் நேரொக்கவாடும் என்பர் பிள்ளைப்பெருமாளையங்கார். வெற்றி கொண்ட வீரர்களேயன்றிக் கவந்தமும்ஆடின என உம்மையை இறந்தது தழுவிய எச்சஉம்மை யாக்குக. (29)

**7173.** கொன்னி றக்குரு திக்குடை புட்களின்
தொன்னி றச்சிறை யிற்றுளி தூவலால்
பன்னி றத்த பதாகைப் பரப்பெலாம்
செந்நி றத்தன வாய்நிறந் தீர்ந்தவே.

கொன் நிறக் குருதிக் குடை புட்களின்
தொல் நிறச் சிறையில் துளி தூவலால்,
பல் நிறத்த பதாகைப் பரப்பு எலாம்
செந் நிறத்தனவாய், நிறம் தீர்ந்தவே.

பொ :—கண்டோர்க்கு அச்சத்தை விளைக்கும் செந்நிறத்தினை யுடைய இரத்த வெள்ளத்தில் மூழ்கின பறவைகளின் பழமையான நிறத்தையுடைய சிறகுகளில்படிந்த (இரத்தத்) துளிகள் சிந்துவதால்

பலவாகிய நிறத்தையுடைய கொடிகளின் பரப்பு முழுமையும் சிவந்த நிறத்தன வாய்த் தம் பழைய நிறம் நீங்கின.

கு :—இரத்த வெள்ளத்தில் மூழ்கி விளையாடிய பறவைகள் விண்ணில் பறந்து சிறகுகளை யசைக்கும் போது அச்சிறகுகளில் படிந்த இரத்தத்துளிகள் பல நிறமுடைய கொடிகளில் படுகின்றன. அக்குருதித் துளிகள் படிந்தவுடன் கொடிகளின் பல நிறங்கள் மறைகின்றன; செந்நிறமாகிய ஒரு நிறமேயுடையவாய் அக்கொடிகள் மிளிர்கின்றன என்க. நிலத்துள்ள பொருள்களே யன்றி விண்ணில் பறக்கவிட்ட கொடிகளும் இரத்தத்தின் நிறத்தைப் பெற்றன என்றவாறு. கொள்—அச்சம். கொன் முனை யிரவூர் போல (குறுந்-91) என்புழியும் இச்சொல் இப்பொருளில் பயின்றிருத்தல் காண்க. குடைதல்—மூழ்குதல். பதாகை—பெருங்கொடி. (30)

## வானரம் மதிலைவிட்டு இறங்குதல்

**7174.** பொழிந்த சோரிப் புதுப்புனல் பொங்கிமீ
வழிந்த மாமதில் கைவிட்டு வானர
மொழிந்த மேருவி னும்பர்புக் கிம்பரி
னிழிந்த மாக்கட லென்ன விழிந்ததே.

பொழிந்த சோரிப் புதுப்புனல் பொங்கி மீ
வழிந்த மாமதில் கைவிட்டு, வானரம்,
ஒழிந்த, மேருவின் உம்பர்புக்கு இம்பரின்
இழிந்த மாக்கடல் என்ன, இழிந்ததே.

பொ :—வலி ஒழிந்தனவாய்ச் சிந்திய குருதியாகிய புதுநீர் பொங்கி மேல் வழியப்பெற்றனவாய வானரங்கள், பெரியமதிலைக் கைவிட்டு பிரளய காலத்தில் மேருமலையின் உச்சிவரை ஏறிப்பின் வற்றித் தரையில் இறங்கிய பெரிய கடலைப் போலக் கீழிறங்கின.

கு :—கடல் போன்ற வானரப்படை மதில்மீது ஏறிப் பின் இறங்கியதற்கு உவமையாக வேண்டிப் 'பெரியகடல் மேருவின் உம்பர்புக்கு இம்பரின் இழிந்த என்ன' என உவமை கூறினர். பிரளய காலத்தில் கடல் பொங்கி மேருமலையின் உச்சிவரையில் சென்று பின்வற்றிப் பழைய நிலையடையும் என்பர். வானரம் வலி ஒழிந்தனவாய் மதில் கைவிட்டு இழிந்தன என்க. சோரி—இரத்தம். சோரி பொங்கி மீவழிந்த வானரம் என்க. (31)

## அரக்கர்கள் கோட்டையில் நிரம்புதல்

**7175.** பதண மும்மதி லும்படை நாஞ்சிலும்
கதன வாயிலுங் கட்டுமட் டாலேயும்
முதல யாவையும் புக்குற்று முற்றின
விதன வெங்கணி ராக்கதர் வெள்ளமே.

பதணமும், மதிலும், படை நாஞ்சிலும்,
கதன வாயிலும், கட்டும் அட்டாலேயும்,
முதல யாவையும் புக்குற்று முற்றின
விதன வெங்கண் இராக்கதர் வெள்ளமே.

பொ :—பிறர்க்குத் துன்பத்தைச் செய்யும் கொடிய கண்ணே யுடைய அரக்கர் சேனேகள் மதிலுள் மேடையிலும் மதிலிலும் அம்பு விடுதற்குரிய (ஏவறையையுடைய) முடக்குகளிலும், பகைவர் கலங்குதற்குரிய கோபுர வாயிலீலும் மதில்மேல் கட்டப்பட்ட மண்ட பத்திலும் இவை முதலாய எல்லா இடங்களிலும் புகுந்து நிரம்பின.

கு :—பதணம்—மதிலுள்மேடை. படைநாஞ்சில் என்றது அம் பாகிய படை விடுதற்குரிய ஏவறையையுடைய முடக்குகளே. ஞாயில் என்பது நாஞ்சில் என மருவியது. ஏப்புழை ஞாயில் (பு. வெ. 5—1) என வருதல் காண்க. கதனம் - கலக்கம். பகைவர் கலங்குதற்குரிய அமைப்புகள் இருத்தலின், கதனவாயில் எனச் சிறப்பித்தார். அட்டாலே என்றது மதில்மேல் கட்டிய மண்டபத்தை. முற்றுதல்- நிரம்புதல். விதனத்தைச் செய்யும் வெங்கண் என்க. விதனம் - துன்பம்; அச்சமும் ஆம். (32)

## வானரங்களின் அவலநிலே

**7176.** பாய்ந்த சோரிப் பரவையிற் பற்பல
நீந்தி யேகு நெருக்கிடைச் சிற்சில
சாய்ந்து சாய்ந்து சரம்படத் தள்ளலுற்
றோய்ந்து வீழ்ந்த சிலசில வோடின.

பாய்ந்த சோரிப் பரவையில் பற்பல
நீந்தி ஏகும் நெருக்கிடைச் சிற்சில
சாய்ந்து சாய்ந்து, சரம்படத் தள்ளலுற்று
ஓய்ந்து வீழ்ந்த; சிலசில ஓடின.

பொ :—போர்க்களத்திற் பாய்ந்த இரத்தக் கடலில் பற்பல வானரங்களும் நீந்திச் செல்கின்ற நெருக்கத்திற்கு இடையே (அரக்கர்விட்ட) அம்புபடுதலால் சிற்சில வானரங்கள், தள்ளப் பெற்றுப் பின் சாய்ந்து சாய்ந்து நீந்திச்சென்று பின்வலி சோர்ந்து வீழ்ந்தன; சிலசில வானரங்கள் உயிர்தப்பி யோடின.

கு :—சோரிப் பரவை என்றார், நீர்க்கடலின் வேறுபட்ட, இரத்தக் கடல் என்பது புலப்பட. இரத்தக்கடலில் பற்பல வான ரங்கள் நீந்திச் சென்றமையால் நெருக்கம் உண்டாயது. அந்த நெருக்கத்துக்கு இடையே அரக்கரின் அம்பு பட்டமையால் தள்ளப் பெற்றுப் பின் சிறிது முயன்று சாய்ந்து சாய்ந்து நீந்திச்சென்று பின் இருந்த வலியும் கெட்டு வீழ்ந்தன சிற்சில வானரங்கள் என அவை பட்டவாற்றைப் படிப்படியே விளக்கியவாறு. ஓய்தல் - நுணுகுதல்; கெடுதல். இரத்தக் கடலில் நீந்திச்சென்று உய்யக்கருதிய வானரங் களில் சில உயிர் பிரிந்து வீழ்ந்தமையும் சில உயிர் உய்ந்து ஓடின மையும் புலப்படுத்தியவாறு. சரம்படத்தள்ளலுற்றுச்சாய்ந்து சாய்ந்து ஓய்ந்து வீழ்ந்த என இயையும். பற்பல சிற்சில ஓடின என அஃறிணை யாகக் கூறினமையால் இங்குக்கூறியது வானரப்படையை என்பது உணரலாம். (33)

## அரக்கரின் ஆர்ப்பு 7177–7178

**7177.** தழிய வானர மாக்கடல் சாய்தலும்
பொழியும் வெம்படைப் போர்க்கட லார்த்ததால்
ஒழியுங் காலத் துலகொரு மூன்றுமொத்
தழியு மாக்கட லார்ப்பெடுத் தென்னவே.

தழிய வானர மாக்கடல் சாய்தலும்
பொழியும் வெம்படைப் போர்க்கடல் ஆர்த்ததால்
ஒழியும் காலத்து உலகு ஒரு மூன்றும் ஒத்து
அழியும் மாக்கடல் ஆர்ப்பு எடுத்தென்னவே.

பொ :—மதிலைத்தழுவி ஏறிய வானரமாகிய பெரிய கடல் ஒடுங்கி யிறங்குதலும் வெவ்விய படைக்கலங்களைப் பொழிகின்ற போர்த் தொழிலையுடைய அரக்கராகிய கடல்,-ஒரு மூன்றுலகமும் ஒருசேர ஒழிகின்ற ஊழியிறுதிக் காலத்தில் பெருகுகின்ற பெரியகடல் ஆரவாரித்தாற் போல ஆரவாரித்தது.

கு :—தழுவிய என்பது தழிய என நின்றது. மதிலின் உச்சியைத் தழுவிய வானரம் அதைவிட்டுக் கீழிறங்கியது கண்ட அரக்கர்சேனை

இகழுங்குறிப்பால் ஆரவாரித்த மிகுதி புலப்பட ஊழியிறுதியில் உலகங்களை அழிக்கும் கடலின் ஆரவாரத்தை உவமை கூறினர். சாய்தல், மதில் உச்சியிலிருந்து கீழிறங்கியதை யுணர்த்தியது. வலி ஒடுங்கியதை உணர்த்தியதாகக்கொள்ளலுமாம். வெம்படை பொழியும் போர்க்கடல் என இயையும். வெம்படை பொழியும் என்ற குறிப்பால் அரக்கர்படை என்பது புலப்படுத்தியவாறு. போர்க்கடல்—போர்த் தொழிலையுடைய கடல். ஒத்து ஒழியுங்காலத்து என்க. அழியும்—பெருகும். 'அழியும் புனல் அஞ்சன மாநதியே' (சீவக-1193) என்புழியும் இச்சொல் இப்பொருள் படுதல் காணலாம். மாக்கடல் ஆர்ப்பெடுத்தென்ன போர்க்கடல் ஆர்த்தது என இயையும். ஆல் ஏ அசைநிலை. (34)

**7178.** முரைசு மாமுரு டும்முரல் சங்கமு
முரைசெய் காளமு மாகுளி யோசையும்
விரைசும் பல்லியம் வில்லர வத்தொடும்
திரைசெய் வேலைக்கொ ராகுலஞ் செய்தவே.

முரைசும், மாமுருடும், முரல் சங்கமும்,
உரைசெய் காளமும்; ஆகுளி ஓசையும்,
விரைசும் பல் இயம், வில் அரவத்தொடும்,
திரை செய் வேலைக்கு ஓர் ஆகுலம் செய்தவே.

பொ :—முரசங்களின் ஒலியும், பெரிய மத்தளங்களின் ஒலியும், முரலுகின்ற சங்கின் ஒலியும், சிறப்பித்துச் சொல்லப்படுகின்ற எக்காளம் என்னும் வாத்தியத்தின்ஒலியும் ஆகுளி என்னும் சிறுபறையின் ஒலியும் ஆகக் கலந்து ஒலிக்கும் பல வாத்தியங்களின் ஒலிகளும் வில் நாணொலியோடு சேர்ந்துகொண்டு, அலைவீசுகின்ற கடலுக்கு ஒரு துன்பத்தை உண்டாக்கி விட்டது.

கு :—வாத்தியங்களின் ஒலியும் வில் நாணொலியும் கடலின் ஒலியைக்காட்டிலும் மிக்கொலித்தன என்றவாறு. தன்னொலியினும் பேரொலியில்லை யென்று செருக்கியுள்ள கடல், தன்னொலியினும் மிக்க ஒலி உண்டு என்று அறிந்தபோது துன்புறுவது இயல்பு ஆகலின் 'திரை செய் வேலைக்கு ஓர் ஆகுலம் செய்தது' என்றார். ஆகுலம்—துன்பம். முருடு—மத்தளம். ஓசையும் என்பது முன்னும் பின்னும் இயைந்து இடைநிலைவிளக்காய் நின்றது. முரசின் ஓசையும் முருடின் ஓசையும் எனவும் பல்லியங்களின் ஓசையும் எனவும் இருவழியும் இயைக்க. வில் அரவம் என்றது, வில்லின் நாணினைத் தெறித்தலால் எழும் ஒலியை. விரைசுதல்—கலத்தல். வில்லரவத்தொடும் -சேர்ந்து

என ஒருசொல்வருவிக்க. முரசியம்பின முருடதிர்ந்தன முறையெழுந் தன பணிலம்' (சிலப். 1:46) என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும். (35)

## இராவணனது சேனை வாயில் வழி புறப்படுதல்

**7179.** ஆய காலை யனைத்துல குந்தரும்
நாய கன்முக ஞலி னடந்தென
மேய சேனை விரிகடல் விண்குலாம்
வாயி லூடு புறப்பட்டு வந்ததே.

ஆய காலை. அனைத்து உலகும் தரும்
நாயகன் முகன்நாலின் நடந்தென,
மேய சேனை விரிகடல் விண்குலாம்
வாயி லூடு புறப்பட்டு வந்ததே.

பொ :—அப்பொழுது எல்லாவுலகங்களும் தம்மைப் படைத்த பிரம்மதேவனது நான்கு வாய்களின் வழியாகப் புறப்பட்டு வந்தது போல இலங்கையில் பொருந்திய நால்வகைச் சேனையாகிய விரிந்த கடல் வானளாவிய நான்கு கோபுரவாயில்களின் வழியே புறப்பட்டு வந்தது.

கு:—பிரமனது நான்கு வாய்களும் இலங்கை யரண்மனையின் நான்கு கோபுர வாயில்களுக்கு உவமை. அனைத்துலகமும் இராவண னுடைய சேனைக் கடலுக்கு உவமை. முகம்—வாய். கலைமகள் வாழ்க்கை முகத்த தெனினு, மலரவன் வண்டமிழோர்க் கொவ்வான்', (நீதி நெறி விளக்கம் 7) என்புழியும் முகம் வாய் என்னும் பொருளில் வந்துள்ளமை காண்க. இச்செய்யுளால் இராவணனது சேனையின் மிகுதியையும் புலப்படுத்தியவாறு காண்க. (36)

## யானைப் படை

**7180.** நெடிய காவத மெட்டு நிரம்பிய
படிய வாயிற் பருப்பதம் பாய்ந்தெனக்
கொடியொ டுங்கொடி சுற்றக் கொடுத்தண்
டொடிய வூன்றின மும்மத வோங்கலே.

நெடிய காவதம் எட்டு நிரம்பிய
படிய வாயில் பருப்பதம் பாய்ந்தென,

கொடியொடும் கொடி சுற்றக் கொடுத்த தண்டு
ஒடிய ஊன்றின, மும்மத ஓங்கலே.

பொ:— நெடிதாகிய காவதங்கள் எட்டின் அளவாக நிரம்பிய மும்மதங்களையுடைய யானைகள் - படியோடுங் கூடிய கோபுரவாயிலில் மலைகள் பாய்ந்து சென்றாற் போல, தம் மேல் கட்டிய கொடிச் சீலையோடு பிறிதொன்றின் மேல் கட்டிய கொடி சுற்றிக்கொள்ள அக் கொடிகளைத் தொடுத்துக் கட்டியுள்ள தண்டுகள் ஒடியுமாறு நெருங்கித் தள்ளிக்கொண்டு சென்றன.

கு:— நிரம்பிய மும்மத வோங்கல் என இயையும். எட்டுக் காவதவளவு பரவியுள்ள யானைப்படை என அதன் மிகுதி புலப்படுத்தியவாறு. ஓங்கல் – மலை. மும்மதம் என்ற குறிப்பான் ஓங்கல் என்றது, மலை போன்ற யானையை என்பது பெறப்படும். இதனைப் பிசியுவமை என்பர். யானை மேல் கொடி கட்டுதல் மரபு என்பது முன்னருங் கண்டது. யானைப்படையின் நெருக்கத்தால் அவற்றின் மேல் கட்டிய கொடிகள் ஒன்றோடு ஒன்று சுற்றிக் கொண்ட நிலையில் ஒன்றையொன்று முந்திக்கொண்டு செல்லும்போது அக்கொடிகளின் கம்புகள் ஒடிந்தன என்க. ஊன்றுதல் - தள்ளிக் கொண்டு செல்லுதல். 'நூக்க லூன்ற றேன்றல் தள்ளல்' என்ற திவாகரமும் காண்க. (37)

## தேர்ப் படை

7181. சூழி யானை மதம்படு தொய்யலி
னூழி நாணெடுங் காலென வோடுவ
பாழி வாழ்வயி ரப்படி பன்முறை
பூழி யாக்கின பொன்னெடுந் தேர்களே.

சூழி யானை மதம்படு தொய்யலின்,
ஊழி நாள் நெடுங் கால் என ஓடுவ,
பாழி வாழ் வயிரப்படி பல்முறை
பூழி ஆக்கின, பொன் நெடுந்தேர்களே.

பொ:— பொன்னாலியன்ற நெடிய தேர்கள் - முக பட்டத்தை யணிந்த யானைகளின் மதநீர் படுதலால் உளதாகிய சேற்றில், ஊழி இறுதிக் காலத்தில் வீசும் நெடிய காற்றுப் போல விரைந்து ஓடுவன வாய் (அச்சேற்றை) வலிமை பொருந்திய வயிரம் போன்ற உறுதியையுடைய பூமியாக்கிப் பின் பல முறை புழுதியுண்டாகுமாறும் செய்தன

கு :— சூழி – முகபட்டம். தொய்யல் - சேறு. தேர்கள் ஓடியதால் சேற்று நிலம் வன்னிலமாய்ப் பின் புழுதியாயின என்க. பாழி - வலிமை. படி - பூமி. வயிரப்படியாக்கிப் பின் பூழியாக்கின என வேண்டுஞ் சொல்வருவித்து முடிக்க. "தாறுமாய் தறுகட்குன்றம் தடமத வருவி தாழ்ப்ப, ஆறுமாய்க் கலினமாவிலாழியா லழிந்தோ ராருய்ச் சேறுமாய்த் தேர்களோடத் துகளுமாய் ஒன்றேடொன்று மாறுமாருகி வாளா கிடக்கிலா மறுகிற் சென்ருர்" (பால-மிதிலைக்-6) என்பது இங்கு ஒப்பு நோக்கத் தகும். (38)

## குதிரைப் படை

**7182.** பிடித்த வானரம் பேரெழிற் ருேள்களா
லிடித்த மாமதி லாடை யிலங்கையாள்
மடுத்த மாக்கடல் வாவுந் திரையெலாம்
குடித்துக் கால்வன போன்ற குதிரையே.

பிடித்த வானரம் பேர் எழில் தோள்களால்
இடித்த மாமதில் ஆடை இலங்கையாள்,
மடுத்த மாக்கடல் வாவும் திரை எலாம்
குடித்துக் கால்வன போன்ற, குதிரையே.

பொ :— (மதிலினுச்சியைப்) பிடித்துக் கொண்ட வானரங்கள் தம் பெரிய எழுச்சியை யுடைய தோள்காளல் இடித்த பெரிய மதிலாகிய ஆடையை யுடைய இலங்கையாகிய நங்கை, குடித்து உட்கொண்ட வாவிச்செல்லும் பெரிய கடல் அலைகள் எல்லாவற்றை யும் மீண்டும் வெளிப்படுத்தியவற்றைப் போன்றன.

கு :— குதிரைப் படை தாவி வரும் தோற்றம் கடல் அலைகள் தாவிவருவன போலத் தோன்றின என்பார், தற்குறிப்பேற்றமாக இலங்கையுள்ளிருந்து கடல்அலைகள் வருவதற்குக் காரணம் கற்பித்த வாறு. வானரங்கள் இடித்த மதிலின் வழியே இலங்கையுள் புகுந்த கடல் அலைகள் வெளிவருவன போலத் தோன்றின என்பதை உருவக வாய்பாட்டால் இடித்த மாமதிலாடை யிலங்கையாள் குடித்து மடுத்த மாக்கடல் வாவுந் திரையெலாம் கால்வன போன்றன என்ருர். இலங்கையாகிய நங்கை குடித்த கடலலைகளை மீண்டும் வெளிப்படுத்தியவற்றைப் போன்றன குதிரைகள் ஓடும் தோற்றம் என்றவாறு. (39)

### காலாட் படை

**7183.** கேளின் ஞாலங் கிளர்த்திய தொன்முறை
நாளு நாளு நடந்தன நள்ளிரா
நீள மெய்தி யொருசிறை நின்றன
மீளு மாலையும் போன்றனர் வீரரே.

**கேள் இல் ஞாலம், கிளர்த்திய தொல்முறை**
**நாளும் நாளும் நடந்தன நள் இரா,**
**நீளம் எய்தி, ஒருசிறை நின்றன,**
**மீளும் மாலேயும் போன்றனர்—வீரரே.**

பொ :— ஒப்பு இல்லாத இவ்வுலகம் (இது காறும்) எழுப்பிய பழமையான முறையினையுடைய நாள் தொறும் நாள் தொறும் கழிந்தனவாகிய நள்ளிரவுகள் (இலங்கையின் பேரொளிக்கு அஞ்சி) ஒன்றன் பின் ஒன்ருக அமைந்து நீளம் பொருந்தி ஒரு பக்கத்தில் நின்றவைகள் (இப்பொழுது) அவ்விலங்கையிலிருந்து மீளும் தன்மையையும் ஒத்தனராய்ப் புறப்பட்டனர் காலாள் வீரர்கள்.

கு :— கரு நிற முடைய அரக்கர் நடந்துவரும் தோற்றம், உலகம் தோன்றிய நாள் தொட்டுக் கழிந்த இரவுகள் யாவும் இலங்கையின் பேரொளிக்கு அஞ்சி ஓரிடத்தில் ஒதுங்கி நின்றவை இப்பொழுது மீண்டு போகும் தன்மைபோல் இருந்தது எனத் தற்குறிப்பேற்றமாகக் கூறியவாறு. கேழ் - ஒப்பு; எதுகை நோக்கிக் கேள் என நின்றது. கிளர்த்துதல் - எழுப்புதல்; தோற்றுவித்தல். இலங்கையில் இருள் இல்லை என்பதை; "வசையற விளங்குஞ் சோதி மணியினு லமைந்தமாடத் தசைவில விலங்கை மூதூர் ஆரிருள் இன்மையாலே, நிசிசரராயிற்றம்மா நெடுநகர் நிருத ரெல்லாம்" (சுந்தர - ஊர்தேடு - 99) என்றதால் அறியலாம். நள்ளிரா-நடுயாமம் ஆகிய இரவு. ஒருசிறை - ஒருபக்கம், மாலை-தன்மை. வீரர் என்றது காலாட்படையினரை. (40)

### புழுதி எழுதல்

**7184.** பத்தி வன்றலைப் பாம்பின் பரங்கெட
முத்தி நாட்டின் முகத்தினை முற்றுறப்
பித்தி பிற்பட வன்றிசை பேர்வுறத்
தொத்தி மீண்டில வானெடுந் தூளியே.

பத்தி வன் தலைப் பாம்பின் பரம் கெட,
முத்தி நாட்டின் முகத்தினை முற்றுற,
பித்தி பிற்பட, வன் திசை பேர்வுற,
தொத்தி மீண்டிலவால் — நெடுந்தூளியே.

பொ:— (நால்வகைப்படையும் இவ்வாறு நடந்ததாலாய) நெடிய தூளிகள் வரிசையான (ஆயிரம்) வலிய தலைகளையுடைய ஆதிசேடன் என்னும் பாம்பின் பாரம் குறையுமாறு (பூமியிலிருந்து புறப்பட்டு) அண்டத்தின் சுவர் பிற்படுமாறும் வலிய திசைகள் பெயருமாறும் (செய்து) வான நாட்டின் இடத்தைச் சூழத் தொத்திக் கொண்டு நிலத்திற்கு மீளாது (அங்கே) நின்றன.

கு:— பத்தி - வரிசை; ஆதி சேடனுக்கு ஆயிரம் தலைகள் இருத்தலின் பத்திவன்தலைப்பாம்பு என்றார். பூமிதாங்கும் வலிமையுடைய தென்பார் 'வன்றலை' என்று சிறப்பித்தார். பூமியில் உள்ள புழுதி, படைகள் நடத்தலால் வானத்தில் சென்றமையால், பூமி பாரம் குறையலாயிற்று. முத்திநாடு அண்டச் சுவர்க்கு அப்பால் இருத்தலின் பித்தி பிற்பட என்றார். முகம்-இடம். முற்றுறல்-சூழ்தல். பித்தி-சுவர். தொத்துதல்-ஒட்டிக்கொள்ளுதல். (41)

## குரக்குச் சேனை குலைதல்

7185. நெருக்கி வந்து நிருதர் நெருங்கலால்
குரக்கி னப்பெருந் தானை குலைந்துபோ
யருக்கன் மாமக னாரம ராசையால்
செருக்கி நின்றவ னின்றுழிச் சென்றதால்.

நெருக்கி வந்து நிருதர் நெருங்கலால்,
குரக்கினப் பெருந்தானை குலைந்து போய்,
அருக்கன் மாமகன் ஆர்அமர் ஆசையால்
செருக்கி நின்றவன் நின்றுழிச் சென்றதால்.

பொ:— (தம்மை) நெருக்கிக் கொண்டுவந்து அரக்கர் நெருங்குவதால் குரங்கினமாகிய பெரிய சேனை நிலைகுலைந்து சென்று அரிய அமர் செய்ய வேண்டும் என்னும் ஆசையினால் செருக்கி நிற்கின்ற சூரியன் புதல்வனாகிய சுக்கிரீவன் நின்ற இடத்திற்குச் சென்றது.

கு:— நிருதரின் நெருக்கத்தைத் தாங்கமுடியாமையால் குரக்கினம் நிலை குலையலாயிற்று. அமர்புரியும் வாய்ப்புச் சுக்கிரீவனுக்குக் கிடைத்து நாள்பல வாயினமையின் ஆரமர் ஆசையால் செருக்கி

நின்றான் என்க. குலேதல்-நிலைகுலேதல். அருக்கன்-சூரியன். அரக்கர்க்கு அஞ்சிய குரங்குகள் தம் அரசனாகிய சுக்கிரீவனை அடைந்தன-என்றவாறு. (42)

## சுக்கிரீவன் சினந்து போர்புரிதல் 7186–7188

**7186.** சாய்ந்த தானைத் தளர்வுஞ் சலத்தெதிர்
பாய்ந்த தானைப் பெருமையும் பார்த்துறக்
காய்ந்த நெஞ்சன் கனல்சொரி கண்ணினன்
ஏய்ந்த தாங்கோர் மராமர மேந்தினான்.

சாய்ந்த தானைத் தளர்வும், சலத்து எதிர்
பாய்ந்த தானைப் பெருமையும் பார்த்து உறக்
காய்ந்த நெஞ்சன், கனல் சொரி கண்ணினன்,
ஏய்ந்தது அங்கு ஓர் மராமரம் ஏந்தினான்.

பொ :—வலி குறைந்து வந்தடைந்த குரக்குச் சேனையின் தளர்ச்சியையும் கோபத்தோடு எதிர்த்து வந்துள்ள அரக்கர் சேனையின் பெருமிதத்தையும் பார்த்து(ச் சுக்கிரீவன்) மிகவும் கோபித்த நெஞ்சினனாய், நெருப்பைக் கக்குகின்ற கண்களையுடையவனாய் அங்குக் கிடந்த வெண்கடப்ப மரம் ஒன்றைக் கையில் ஏந்திக் கொண்டான்.

கு :—சாய்தல் - உள்ளதன் நுணுக்கம்; வலி குறைதல் என்க. சலம்–கோபம். 'கூற்றுவனை யிப்பொழுதே கொணர்கின்றேனென்று சலங் கொண்டு போனான்' (சூர்ப்பணகைப் - 143) என்றார் முன்னும். தன் சேனையின் தளர்ச்சியையும் பகைவர் சேனையின் வளர்ச்சியையும் கண்ட சுக்கிரீவனுக்குச் சினம் பொங்கியதால் ஆங்கிருந்த மராமரத்தை ஏந்திக்கொண்டு போர்க்குப் புறப்பட்டான் என்க. மராமரம் - வெண்கடப்ப மரம். உற – மிகுதியாக. நெஞ்சில் சினம் பொங்கியதால் கண் கனல் சொரிந்தது என்றவாறு. (43)

**7187.** வார ணத்தெதிர் வாசியி னேர்வயத்
தேர்மு கத்தினிற் சேவகர் மேற்செறுத்
தோரோ ருத்தர்க் கொருவரி னுற்றுயர்
தோர ணத்தொரு வன்னெனத் தோன்றினான்.

வாரணத்து எதிர் வாசியின் நேர் வயத்
தேர் முகத்தினில், சேவகர் மேல் செறுத்து,
ஓர் ஒருத்தர்க்கு ஒருவரின் உற்று உயர்
தோரணத்து ஒருவன் எனத் தோன்றினன்.

பொ :—யானைப்படையின் எதிரிலும், குதிரைப்படையின் எதிரிலும், வலிய தேர்ப்படையின் எதிரிலும், காலாள்வீரரின் எதிரிலும் கோபித்து ஒவ்வொருவர்க்கு முன்னும் (சாரிகை திரிவதால்) ஒருவராகப் பொருந்தி, உயர்ந்த தோரண கம்பத்திலிருந்து போர் செய்த ஒப்பற்ற அனுமன் என(ப் பிறர் அஞ்சுமாறு) தோன்றினன்.

கு :—சுக்கிரீவன் மராமரத்தை ஏந்திக்கொண்டு அரக்கரின் நால் வகைப்படை முன்னும் சாரிகை திரிந்துகொண்டு தோன்றினன் என்க. அனுமன் தோரண கம்பத்திலிருந்து அரக்கரை அழித்தமை சுந்தர காண்டத்தில் கண்டது. விரைந்து சாரிகை திரிவதால் ஒவ் ஒருத்தர்க்கு முன்னும் ஒருவராகத் தோன்றினன் என்க. அச்சம் அறியாத அரக்கர் உள்ளத்தில் முதன் முதல் அச்சத்தையூட்டியவன் அனுமனே ஆதலின், இப்போது அரக்கர் அஞ்சத்தோன்றிய சுக்கிரீவனுக்கு அவ்வனுமனையே உவமை கூறினர். (44)

7188. களிறு மாவு நிருதருங் காலற
வொளிறு மாமணித் தேரு முருட்டிவெங்
குளிறு சோரி யொழுகக் கொதித்திடை
வெளிறி லாமர மேகொண்டு வீசினன்.

களிறும், மாவும், நிருதரும், கால் அற,
ஒளிறும் மாமணித் தேரும் உருட்டி, வெங்
குளிறு சோரி ஒழுக, கொதித்து, இடை
வெளிறு இலா மரமே கொண்டு வீசினன்.

பொ :—யானையும், குதிரையும், அரக்கரும் காலறும்படியும், ஒளி வீசுகின்ற மணிகள் பதித்த தேர்களையும் உருட்டிக்கொண்டு வெப்பமுடையதாய் ஒலித்துக்கொண்டு வெளிவருகின்ற இரத்த ஆறு ஒழுகும்படியும், (சுக்கிரீவன்) கோபித்து, நடுவே வெளிறு இல்லாத (வயிரமுடைய) மரங்களையே கொண்டு தாக்கினன்.

கு :—இராவணனது நால்வகைப் படைகளும் சிதையச் சுக்கிரீவன் மரத்தைக்கொண்டே தாக்கினன் என்றவாறு. நிருதர் என்றது காலாட்படையினராகிய அரக்கரை. இரத்த ஆற்றின்

வலிமை புலப்படத் 'தேருமுருட்டி' ஒழுக என்றார். அற, ஒழுக, வீசினான் என இயையும். உடம்பிலிருந்து இரத்தம் வெளிவருங்கால் வெப்பமுடையதாலும் பீறிடும் ஒலியோடு வருதலும் ஆகிய இயல் புணர்த்த 'வெங்குளிறு சோரி' என்றார். வெளிறிலாமரம் என்றது, வயிரமுள்ள மரத்தை. பிற போர்க் கருவிகளைப் பிரிக்க, மரமே எனப் பிரிநிலை ஏகாரம் கொடுத்துக் கூறினார். பெரிய போர்க் கருவிகளைக் கொண்டும் செய்ய வியலாத அழிவைச் சுக்கிரீவன் எளிய மரத்தைக் கொண்டே செய்தான் என்பது புலப்படுத்தியவாறு. இது பொருட் குறை விசேடம் என்னும் அணியாகும். (45)

**7189.** அன்ன காலை அரிக்குல வீரரும்
மன்னன் முன்புக வன்க ணரக்கரும்
முன்னு ழந்த முழங்கு பெருஞ்செருத்
தன்னில் வந்து தலைமயக் குற்றனர்.

அன்ன காலை, அரிக்குல வீரரும்
மன்னன் முன்புக, வன்கண் அரக்கரும்
முன் உழந்த முழங்கு பெருஞ் செருத்
தன்னில் வந்து, தலைமயக் குற்றனர்.

பொ:—அத்தகைய பொழுதில் குரக்கின வீரர்களும் தம் மன்னவனாகிய சுக்கிரீவன் முன்பு சென்று சேரவே, தறுகண்மை வாய்ந்த அரக்க வீரரும் முன்பு வருந்திச் செய்த முழக்கத்தையுடைய பெரிய போரில் வந்து கலந்து கொண்டனர்.

கு:—சுக்கிரீவன் அரக்கர்களோடு செருக்கிப் போர் செய்யும் போது, ஒருபுறத்தில் அரக்கர்பால் தோற்றுவந்த வானரர்கள் அச் சுக்கிரீவன்முன் சென்றடைகின்றனர்; அவ் வானர்களைத் தோல்வி யுறச் செய்த அரக்கரும், அவ் வானரர்களைப் பின் தொடர்கின்றவ ராய் அங்கு வந்து கலந்து கொள்கின்றனர் என்றவாறு. தலை மயக் குறுதல் - கலத்தல். அரிக்குலம் - குரங்குக் குலம். (46)

**7190.** கற்று ரந்த களம்பட வஞ்சக
ரிற்று லந்து முடிந்தவ ரெண்ணிலர்
விற்று ரந்தன் வெங்கணை யாலுட
லற்று லந்த குரங்கு மனந்தமே.

கல் துரந்த களம் பட, வஞ்சகர்
இற்று உலந்து முடிந்தவர் எண் இலர்;
வில் துரந்தன வெங்கணையால் உடல்
அற்று உலந்த குரங்கும் அனந்தமே.

பொ :—(வானரர்) வீசிய கற்கள் போர்க்களத்தில் படுதலால் உயிர் முடிவுற்று உடம்பு அழிந்து இறந்தவர்களாகிய வஞ்சக அரக்கர் அளவிலர்; அரக்கர்கள் வில்லில் தொடுத்து எய்த கொடிய அம்புகளால் உடம்புகள் அறுபட்டு அழிந்த குரங்குகளும் அளவிலவாம்.

கு :—துரந்த கல் என்க. துரத்தல் இங்கு வீசுதல் என்னும் பொருளது. கல்லால் மாண்ட அரக்கர்களும், கணையால் மாண்ட வானரரும் எண்ணிலர் என இருதிறத்தும் பலர் மாண்டமை புலப் படுத்தியவாறு. முடிந்தவராகிய வஞ்சகர் எண்ணிலர் என்க. கல்லைக் கொண்டு பொருதோர் வானரர் என்பதும், வில்லைக்கொண்டு பொரு தோர் அரக்கர் என்பதும் உய்த்துணர்வால் பெறப்படும். உலத்தல்- அழிதல்; முடிதல். அனந்தம் - எல்லையற்றது; பல என்றவாறு. (47)

7191. கற்க டந்து நிமிர்ந்து கடுஞ்செரு
மற்க டங்கள் வலிந்து மலைந்திடத்
தற்க டங்கி யுலந்தவர் தம்முயிர்
தெற்க டங்க நிறைந்து செறிந்தவால்.

கற்கள் தந்து, நிமிர்ந்து, கடுஞ்செரு
மற்கடங்கள் வலிந்து மலைந்திட
தற்கு அடங்கி உலந்தவர்தம் உயிர்
தெற்கு அடங்க நிறைந்து செறிந்தவால்.

பொ :—கடுமையான போரில் வானரங்கள் தலைநிமிர்ந்து நின்று கற்களை வீசி, வலிமை காட்டிப் போர் செய்தலால் செருக்கு அடங்கி இறந்தவராகிய அரக்கர்தம் உயிர்கள் தென்திசை முழுதும் நிறைந்து நெருங்கின.

கு :—மற்கடம் – குரங்கு. தருக்கு என்பது எதுகை நோக்கித் தற்கு எனத் திரிந்தது. வலிந்து - வலிமை முழுதும் காட்டி. தென் திசை எமனுக்கு உரிய திசையாகலின், வானரங்கள் எறிந்த கல்லால் இறந்த அரக்கர்களின் உயிர், தென்திசை முழுதும் நிறைந்ததாகக் கூறினர். (48)

**7192.** பாடு கின்றன பேய்க்கணம் பல்விதத்
தாடு கின்ற வறுகுறை யாழ்கடற்
கோடு கின்ற வுதிரம் புகுந்துடல்
நாடு கின்றனர் கற்புடை நங்கைமார்.

பாடுகின்றன, பேய்க்கணம், பல்விதத்து
ஆடுகின்ற, அறுகுறை; ஆழ்கடற்கு
ஓடுகின்ற உதிரம் புகுந்து, உடல்
நாடுகின்றனர், கற்புடை நங்கைமார்.

பொ :—பேய்க் கணங்கள் (மகிழ்ந்து) பல்வகையாகப் பாடுகின்றன; தலையற்ற முண்டங்கள் பலவிதமாக ஆடுகின்றன; மாண்டவர்கள் தம் உடம்பிலிருந்து பெருகிய இரத்த வெள்ளங்கள் ஆழ்ந்த கடலை நோக்கி ஓடுகின்றன; கற்புடைய மகளிர், களத்தில் புகுந்து தம் கொழுநர் தம் உடலங்களைத் தேடுகின்றனர்.

கு :—பல்விதத்துப் பாடுகின்றன என முன்னும் இயைத்து இடைநிலை விளக்கணியாக்குக. பேய்க்கணம் பாடுகின்றன; அறுகுறை ஆடுகின்றன; உதிரம் ஓடுகின்றன; நங்கைமார் நாடுகின்றனர் என இயையும். அறுகுறை - கவந்தங்கள். போர்க்களத்தில் இறந்துபட்டவர் பலராதலின் தம் கணவர் உடலம் இதுவென அடையாளம் கண்டன்றி உறுதி செய்ய இயலாது ஆதலின், கற்புடை நங்கைமார் உடலை நாடுவாராயினர். இனி, நாடுதல் என்பதற்குக் கிட்டுதல் என்று பொருள்கொண்டு தத்தம் கணவர் உடலங்களைக் கிட்டுகின்றனர் என்றும் பொருள் கூறலாம். கற்புடை நங்கைமார் கணவர் உடலைத் தேடுவது எற்றுக்கு எனின்? அக் கணவர் உடம்பை அழித்த ஆயுதத்தைக் கொண்டே தம் முயிரையும் மாய்த்துக் கொள்ளுதற்கு ஆகும். இதனை, ஆஞ்சிக்காஞ்சி என்பர். இனி, கணவர் உடலை ஈமத் தீயிலிட்டு எரிவித்து அவ்வெரியில் தாமும் மூழ்குதற்கும் ஆம். (49)

**7193.** யானை பட்ட வழிபுனல் யாறெலாம்
பானல் பட்ட பலகணை மாரியின்
சோனை பட்டது சொல்லரும் வானரச்
சேனை பட்டது பட்டது செம்புனீர்.

யானை பட்ட அழிபுனல் யாறு எலாம்
பானல் பட்ட; பலகணை மாரியின்

சேனை பட்டது; சொல் அரும் வானரச்
சேனைபட்டது; பட்டது, செம் புண்ணீர்.

பொ :—(வானரங்களால் தாக்குண்ட) யானைகள் புண்பட்டு இறந்ததனால் மிகுதியாகப் பெருகுகின்ற இரத்த நீராலாகிய ஆறுகள் எல்லாம் சென்று கடலில் கலந்தன; (அரக்கர் எய்த) பல அம்பு மாரியினால் விடாமழை தோல்வியுற்றது; அக்கணை மாரியால் சொல்லற்கரிய வலிமையுடைய வானரங்களின் சேனை இறந்து பட்டது; (அதனால்) இரத்தநீர் உண்டாயிற்று.

கு :—அழிபுனல் என்றது, மிகுதியான இரத்த நீரை. பானல் - கடல். "பானலே கடல், குதிரை, வெற்றிலை, பழனம், நெய்தல், கள்ளென்றறு பெயர்" என்பது நிகண்டு. யானை பட்ட அழிபுனல் யாறெலாம் பானல் பட்டது என்றது அரக்கர் படையின் அழிவினை. கணைமாரி என்றது உருவகம். சோனை - விடாமழை. சோனையினும் கணைமாரி பெரிதாக அமைந்தமையின் கணைமாரியால் சோனை தோல்வியுற்றதாகக் கூறினர். படுதல் இங்குத் தோல்வியை யுணர்த்தியது. செம்புணீர் - சிவந்த இரத்த நீர். அம்புபட்ட புண்ணி லிருந்து வெளிப்படுதலின் இரத்தம் புண்ணீர் எனப்பட்டது. (50)

இச் செய்யுளுக்குப் பின் 45ல் பின்வரும் மிகைப்பாடல் காணப் படுகின்றது.

7193 (a) ஆனை பட்ட வடுபரி பட்டன
தானை பட்ட தாரிர தங்கணை
சோனை பட்டது துன்னரும் வானரச்
சேனை பட்டது பட்டது செங்களம்.

7194. காய்ந்த வானர வீரர் கரத்தினல்
தேய்ந்த வாயுள ரானவர் செம்புணீர்
பாய்ந்த தானைப் படுகளம் பாழ்படச்
சாய்ந்த தானிரு தக்கடற் றானையே.

காய்ந்த வானர வீரர் கரத்தினல்
தேய்ந்த ஆயுளர் ஆனவர் செம்புண் நீர்
பாய்ந்தது; ஆனைப் படுகளம் பாழ்படச்
சாய்ந்ததால் நிருதக்கடல் தானையே.

பொ :—கோபித்த வானர வீரர்களின் கைகளால் ஆயுள் முடி வுற்ற (இறந்த) அரக்கரின் இரத்த நீர் எங்கும் பரவியது. யானைகள்

பட்ட போர்க்களம் பாழ்படுமாறு அரக்கரது கடல் போன்ற சேனை முதுகிட்டு ஓடியது.

கு :—தேய்ந்த ஆயுளர் என்பதை ஆயுள் தேய்ந்தவர் எனப் பிரித்துக் கூட்டுக, 'அருங்கேடன்' (திருக்குறள் - 210) என்பது போலக் கொள்க. பாய்தல் - பரவுதல். களம் பாழ்பட நிருதக் கடல் தானை சாய்ந்தது என இயையும். மேலைச் செய்யுளில் யானைகள் பட்ட நிலையை யுணர்த்தினமையால் ஈண்டும் அதை நினைந்து ஆனைப் படுகளம் எனச் சிறப்பித்தார். களம்படச் சாய்ந்தது என்றமையால் அரக்கர் முதுகிட்டமை புலப்படுத்தியவாறு. (51)

## வச்சிரமுட்டி வந்து பொருதல் 52, 53

**7195.** தங்கண் மாப்படை சாய்தலுந் தீயெழ
வெங்கண் வாளரக் கன்விரை தேரினைக்
கங்க சாலம் தொடரக் கடற்செலூஉம்
வங்க மாமென வந்தெதிர் தாக்கினான்.

தங்கள் மாப்படை சாய்தலும் தீ எழ
வெங்கண் வாள் அரக்கன், விரை தேரினை,
கங்கசாலம் தொடரக் கடற் செலூஉம்
வங்கம் ஆம் என வந்து, எதிர் தாக்கினான்.

பொ :—(இவ்வாறு) தம் பக்கத்துப் பெரிய அரக்கர் சேனை தளர்வுற்றுத் தோல்வியுறுதலும், கொடிய அரக்கனாகிய வச்சிரமுட்டி, தன் வெவ்விய கண்களில் தீப்பொறி பிறக்கவும், விரைந்து செல்லும் தன் தேரினைப் பருந்துக் கூட்டம் பின் தொடரவும், கடலில் (நீரைக் கிழித்துக் கொண்டு) செல்லும் கப்பல்போல (வானரப் படையை விலக்கிக் கொண்டு) வந்து எதிரே தாக்கினான்.

கு :—வாளரக்கன் என்றது, வச்சிரமுட்டியை என்பது பின் விளங்கும். அரக்கன் தன் மாப்படை என்னாது, தங்கள் மாப்படை என்றது, அவனைச் சார்ந்தோரையும் உளப்படுத்திக் கூறியதாகும்; இது, ஒருவன் தான் பிறந்த ஊரை எங்களூர் என்று கூறுவது போன்றது. வாளரக்கன் வெங்கண் தீயெழ, கங்கசாலம் தொடர, வந்து தாக்கினான் என இயையும். பெரிய போர் வீரர் செல்லும் போது பருந்துகள் பின் தொடர்தலுண்டு; அவர் செய்யும் போரால் தமக்கு இரை மிகுதியாகக் கிடைக்கும் என்ற நம்பிக்கையே அதற்குக் காரணம். "கூற்றினத் தன்னார் கொடுவில் இடன் ஏந்திப், பாற்றினம் பின்படர முன்படர்ந்து...ஏகினார்" (பு-வெ. 1-5) என்றதும்

காண்க. கங்கசாலம் – பருந்தின் கூட்டம். வானர சேனையாகிய கடலை யூடுருவிச் செல்லும் வச்சிரமுட்டியின் தேர், கடலில் செல்லும் கப்பல் போன்றது என்க. வங்கம் - கப்பல். (52)

**7196.** வந்து தாக்கி வடிக்கணை மாமழை
சிந்தி வானரச் சேனை சிதைத்தலு
மிந்தி ராதிய ருந்திகைத் தேங்கினர்
நொந்து சூரியன் கான்முளை நோக்கினன்.

வந்து தாக்கி, வடிக்கணை மாமழை
சிந்தி, வானரச் சேனை சிதைத்தலும்,
இந்திராதியரும் திகைத்து ஏங்கினர்;
நொந்து, சூரியன் கான்முளை நோக்கினன்.

பொ :—(வச்சிரமுட்டி அவ்வாறு) வந்து மோதி, கூர்மையான அம்பு மாமழை பெய்து வானரப் படையை அழித்த அளவில், இந்திரன் முதலான தேவர்கள் திகைப்பெய்தி வருந்தினர்கள்; சூரியன் மகனாகிய சுக்கிரீவன் (தன் படை சிதைவதை) மனம் நொந்து நோக்கினன்.

கு :—'வந்து தாக்கி' என்பது அனுவாதமாக இங்குக் கூறப் பட்டது. வச்சிரமுட்டி எய்த அம்புகளின் மிகுதி புலப்பட 'வடிக் கணைமாமழை' என்றார். தம் பொருட்டுப் போர்செய்யும் வானரப் படை சிதைந்தமை கண்டமையால் இந்திரன் முதலிய தேவர்கள் திகைப்பும் ஏக்கமும் கொள்ளலாயினர். நொந்து நோக்கினன் என இயையும். தன் சேனை வச்சிரமுட்டியால் சிதைவதைக் கண்டு மனம் பொருது சுக்கிரீவன் நொந்து நோக்குவானாயினன். (53)

## சுக்கிரீவன் வச்சிரமுட்டியைத் தொலைத்தல்

**7197.** நோக்கி வஞ்ச னெறில்வய மாப்பரி
வீக்கு தேரினின் மீதெழப் பாய்ந்துதோள்
தூக்கு தூணியும் வில்லுந் தொலைத்தவன்
யாக்கை யுஞ்சிதைத் திட்டெழுந் தேகினன்.

நோக்கி வஞ்சன் நொறில் வய மாப்பரி
வீக்கு தேரினின் மீது எழப் பாய்ந்து, தோள்

தூக்கு தூணியும் வில்லும் தொலைத்து, அவன்
யாக்கையும் சிதைத்திட்டு எழுந்து ஏகினன்.

பொ :—(சுக்கிரீவன் அவ்வாறு) நோக்கி, வஞ்சகனாகிய வச்சிர முட்டியினது விரைந்து செல்லும் வலிய சிறந்த குதிரைகள் பூட்டிய தேரின்மேல் எழுந்து பாய்ந்து, அவன் தோளில் தொங்கவிட்டிருந்த அம்பறாத் தூணியையும் வில்லையும் தொலைத்துவிட்டு, அவன் உடம்பையும் சிதைத்துவிட்டுப் பின் அங்கு நின்றும் எழுந்து தன்னிடத்திற்குச் சென்றான்.

கு :—நொறில் - விரைவு. வய - வலி. மாப்பரி - சிறந்த இலக்கணம் அமைந்த குதிரை. வீக்குதல் இங்குப் பூட்டுதலை உணர்த்தியது. தூக்குதல் – தொங்கவிடுதல். யாக்கையும் என்புழி உம்மை இறந்தது தழுவிய எச்சப் பொருளது. (54)

### அரக்கர் ஓட்டம் கண்டு வானரர் ஆர்த்தல்

**7198.** மலைகு லைந்தென வச்சிர முட்டிதன்
நிலைகு லைந்து விழுதலி னின்றுளார்
குலைகு லைந்து கொடிநகர் நோக்கினர்
அலைகி ளர்ந்தென வானர மார்த்தவே.

மலை குலைந்தென, வச்சிரமுட்டி தன்
நிலை குலைந்து விழுதலின், நின்றுளார்
குலை குலைந்து கொடி நகர் நோக்கினர்;
அலை கிளர்ந்தென, வானரம் ஆர்த்தவே.

பொ :—மலைநிலை குலைந்தாற்போல வச்சிரமுட்டி என்பவன் தன் நிலைதவறி விழுதலால், அவனைச் சார்ந்து நின்றவர்களாகிய அரக்கர்கள் நடுநடுங்கிக் கொடிகள் உயர்த்தப்பட்ட இலங்கை நகரை நோக்கி ஓடினார்கள்; (அது கண்டு) வானரங்கள் கடல் அலைகள் கொந்தளித்தாற்போல ஆரவாரித்தன.

கு :—மலைகுலைந்தென என்ற உவமையால் வச்சிரமுட்டியின் துளக்கமில் தோற்றமும் அளக்கலாகா ஆற்றலும் புலப்படுத்தியவாறு. குலைதல் - அழிதல். குலைகுலைந்து, அடுக்குத் தொடர்; நடுநடுங்கி என்பது பொருள். போர்க்களத்திற்கு வந்தவர்கள் எதிர்த்து நிற்கலாற்றாமல் புறங்காட்டி ஓடினர் என்பார், 'கொடிநகர் நோக்கினர்' என்றார். கொடிநகர் என்றது, இலங்கையை. வெற்றிக் கொடி கட்டியுள்ள நகர் நோக்கித் தோல்வியுற்றவர்கள் ஓடுகின்றார்

களே என்ற இகழ்ச்சிக் குறிப்பும் இதனால் புலப்பட வைத்தவாறு. வானரங்களின் ஆரவாரம் கடலின் ஆரவாரம் போன்றிருந்தது என அதன் மிகுதியை யுணர்த்தியவாறு. (55)

## கீழை வாயிலில் போர்

**7199.** வீழி வெங்க ணிராக்கதர் வெம்படை
ஊழி யாழி கிளர்ந்தென வோங்கின
கீழை வாயிலிற் கிட்டலு முட்டினர்
சூழும் வானர வீரர் துவன்றியே.

வீழி வெங்கண் இராக்கதர் வெம்படை,
ஊழி ஆழி கிளர்ந்தென ஓங்கின,
கீழை வாயிலில் கிட்டலும், முட்டினர்
சூழும் வானர வீரர் துவன்றியே.

பொ :—வீழிப்பழம் போன்று சிவந்த வெவ்விய கண்ணையுடைய கொடிய அரக்கர்படை ஊழியிறுதிக் காலத்துக் கடல் கிளர்ந்தெழுந் தாற்போன்று கிளர்ந்தனவாய்க் கிழக்கு வாயிலை நெருங்குதலும் அவ்வாயிலைச் சூழ்ந்துள்ள வானர வீரர்கள் நெருங்கித் தாக்கினர்.

கு :—வீழி என்பது ஒருவகைச் செடி; அது முதலாகு பெயராய்ப் பழத்தை யுணர்த்தியது. சினத்தால் சிவந்த அரக்கர் கண்ணுக்கு வீழிக்கனி நிறத்தால் உவமையாயிற்று. ஓங்கினவாய்க் கிட்டலும் என முற்றெச்சமாக்கி முடிக்க. முட்டுதல் – தாக்குதல். மிகுதியாகப் பெருகிவந்த அரக்கர்தம் சேனைக்கடலுக்கு ஊழியிறுதியில் உலகெலாம் பரவியெழும் பிரளய வெள்ளம் உவமை. துவன்றி - நெருங்கி. (56)

## வானரர் அழிவு

**7200.** சூலம் வாளயில் தோமரம் சக்கரம்
வாலம் வாளி மழையின் வழங்கியே
ஆல மன்ன வரக்க ரடர்த்தலும்
காலும் வாலுந் துமிந்த கவிக்குலம்.

சூலம், வாள், அயில், தோமரம், சக்கரம்,
வாலம், வாளி, மழையின் வழங்கியே,

ஆலம் அன்ன அரக்கர் அடர்த்தலும்,
காலும், வாலும் துமிந்த, கவிக்குலம்.

பொ :—(அப்பொழுது) நஞ்சு போன்ற (நிறமும் செயலு முடைய) அரக்கர்கள் சூலம், வாள், வேல், இரும்புலக்கை, சக்கரம், பிண்டிபாலம், அம்பு இவற்றை மழைபோல மிகுதியாக வீசித் தாக்கு தலும், வானரக் கூட்டங்கள் காலும் வாலும் அறுபட்டன.

கு :—நஞ்சு கருநிறமும் கொல்லும் திறமும் உடையதாதல்போல அரக்கரும் கரியமேனியும் கொலைத் தொழிலும் உடையராதல்பற்றி 'ஆலமன்ன அரக்கர்' என உவமை கூறினர்; இது பண்பும் தொழி லும் பற்றி வந்த உவமை. வாலம் – பிண்டிபாலம்; இது தலையில் பீலிகட்டப்பட்டு எறிவதொரு படை. எறிதலும் எய்தலும், குத்து தலும் ஆகிய பல தொழிற்கு உரிய படைகளை யெல்லாம் உடன் கூறினமையின் சிறப்புத் தொழிலால் கூருது வழங்கி என்ற பொதுத் தொழிலால் கூறினர். துமிதல் - அறுபடல். இதனுல் குரங்குகள் பட்ட பாட்டைக் கூறியவாறு, (57)

### அரக்கர் அழிவு

**7201.** வென்றி வானர வீரர் விசைத்தெறி
குன்று மாமர முங்கொடுங் காலனிற்
சென்று வீழ நிருதர்கள் சிந்தினர்
பொன்றி வீழ்ந்த புரவியும் பூட்கையும்.

வென்றி வானர வீரர் விசைத்து எறி
குன்றும் மாமரமும், கொடுங்காலனில்
சென்று வீழ, நிருதர்கள் சிந்தினர்;
பொன்றி வீழ்ந்த, புரவியும் பூட்கையும்.

பொ :—வெற்றியைப் பெறுதற்குரிய சிறந்த வானர வீரர்கள் வேகமாக வீசிய குன்றங்களும் பெரிய மரங்களும் கொடுமை வாய்ந்த எமனைப்போலச் சென்று வீழ்தலால், அரக்கர்கள் அழிந்து சிதறுண் டார்கள்; அவர்களுடைய குதிரைகளும் யானைகளும் இறந்து வீழ்ந்தன.

கு :—அரக்கரை அழிக்கும் ஆற்றலுடைய வானரங்கள் என்பார் 'வென்றி வானர வீரர்' என்ருர். விசைத்து எறி - வேக மாக வீசிய. மாமரம் – பெரிய மரம். உடம்பினின்று உயிரைப் போக்கும் தன்மையில் எமனை ஒத்தலின் 'கொடுங் காலனில் சென்று

வீழ' என்றார். புழை பொருந்திய கையுடைமை பற்றி யானைக்குப் புழைக்கை என்ற பெயருண்டு; அப்பெயர் பூட்கை என மருவிற்று. அரக்கரும் அவர் வந்த ஊர்திகளும் அழிந்தமை இதனால் கூறிய வாறு. (58)

**7202.** தண்டு வாளயில் சக்கரஞ் சாயகம்
கொண்டு சீறி நிருதர் கொதித்தெழப்
புண்டி றந்து குருதி பொழிந்துக
மண்டி யோடினர் வானர வீரரே.

தண்டு, வாள், அயில், சக்கரம், சாயகம்,
கொண்டு சீறி, நிருதர் கொதித்து எழ,
புண்திறந்து குருதி பொழிந்து உக,
மண்டி ஓடினர் வானர வீரரே.

பொ :—அரக்கர்கள், தண்டும், வாளும், வேலும், சக்கரமும் அம்பும் கொண்டு, மனங் கொதித்து கோபித்து வீசிப் போரில் எழுச்சி கொள்ள, வானர வீரர்கள் (அவ்வாயுதங்கள் பட்டமையால் தம் உடம்பில்) புண் திறக்கப் பெற்று அதில் இரத்தம் சொரிய நெருங்கி ஓடினர்.

கு :—சாயகம் - அம்பு. எழுதல், இங்குப் போரில் எழுச்சி கொள்ளுதலை யுணர்த்தியது. வீசி எழ என ஒரு சொல் வருவிக்க. தம்மினத்தவர் வீழ்தல் கண்டு கொதிப்பும் வானரர் வெற்றி கண்டு கோபமும் நிருதர்க்கு உண்டாயின. மண்டி – நெருங்கி. வானரர் ஓடுங்காலும் இனத்தொடு சேர்ந்தே ஓடலாயினர் என்க. (59)

## நீலன் நிகழ்த்திய போர்

**7203.** எரியின் மைந்த னிருநிலங் கீழுற
விரிய நின்ற மராமரம் வேரொடும்
திரிய வாங்கி நிருதர்வெஞ் சேனைபோய்
நெரிய வூழி நெருப்பென வீசினான்.

எரியின் மைந்தன், இருநிலம் கீழுற
விரிய நின்ற மராமரம் வேரொடும்
திரிய வாங்கி நிருதர் வெஞ்சேனை போய்
நெரிய, ஊழி நெருப்பு என வீசினான்

பொ :—(அப்போழுது) நெருப்பின் மகனுன நீலன் பெரிய பூமியில் வேர் கீழுறவும் தலே விண்ணில் விரியவும் நின்ற வெண்கடப்ப மரத்தை வேரோடும் சுழலுமாறு திருகிப் பறித்து அரக்கரது கொடிய சேனே சென்று நெரிந் தழியுமாறு ஊழியிறுதியில் எழும் நெருப்புப் போலக் கொடுமைதோன்ற வீசினுன்.

கு :—மரா மரம்—வெண்கடப்ப மரம். அது நிலத்தில் வேர் ஆழ்ந்துள்ளதாய் விண்ணில் தலேப்பகுதி விரியப் பெற்றதாய் இருந்தது என்க. இதனுல் அம் மரம் எளிதில் பறிக்கத் தக்கதன்று என்பதைப் புலப்படுத்தியவாறு. எரியின் மைந்தனுதற்கேற்ப 'ஊழி நெருப்பென' வீசினுன் என உவமை கூறினுர். நீலன் சினந்து நின்ற தோற்றம் ஊழி நெருப்புப் போன்றிருந்தது என்க. இனி அம் மராமரம் அரக்கர்மேல் ஊழி நெருப்புப் படுமாறு போலப்பட்டுத் துன்புறுத்த வீசினுன் எனலும் ஆம். அந்த மரம் பட்டமையால் அரக்கர் சேனே நெரிந்து அழிந்தன என்றவாறு. (60)

**7204.** தேரும் பாகரும் வாசியுஞ் செம்முகக்
காரும் யாளியுஞ் சீயமுங் காண்டகு
பாரின் வீழப் புடைப்பப் பசும்புணின்
நீரும் வாரி யதனே நிறைத்ததே.

தேரும், பாகரும், வாசியும், செம்முகக்
காரும், யாளியும், சீயமும், காண் தகு
பாரின் வீழப் புடைப்ப, பசும்புணின்
நீரும் வாரி அதனே நிறைத்ததே.

பொ :—(அரக்கர்கள் ஊர்ந்த) தேரும், தேரை ஓட்டும் பாகரும், தேரிற்பூட்டிய குதிரைகளும், செம்புள்ளிகள் நிறைந்த முகத்தையுடைய மேகம்போன்ற யானேகளும் யாளிகளும், சிங்கங்களும் காணத் தக்க அழகினேயுடைய பூமியில் வீழுமாறு அம்மராமரம் தாக்கியதனுல் உண்டான பச்சைப்புண்ணிலிருந்து ஒழுகும் இரத்த நீரும் சென்று கடலே நிறைத்துவிட்டது.

கு :—வாசி—குதிரை, செம்முகக்கார் என்றது யானேயை. கார் போன்று கருநிறமுடைமைபற்றி யானேயை உவமையாகுபெயரான் கார் என்ருர். புகர்முகமுடைமை யானேக்கு இலக்கண மாதலின் செம்முகக்கார் எனச்சிறப்பித்து அக் கருமுகக் காரோடு வேற்றுமை தோற்றுவித்தவாறு. சிவந்த புள்ளிகளேக்கொண்ட முகமுடைய யானே என்றவாறு. சீயம்—சிங்கம். யாளி என்பது யானேபோன்று

துதிக்கையும் சிங்கம் போன்று உடலமைப்பும் உள்ள ஒரு விலங்கு. புடைத்தற்கு எழுவாய் மேலைச் செய்யுளில் கூறிய மராமரமே யாம். விண்ணில் இயங்கும் கருமுகக்கார் பொழிநீரே யன்றிச் செம்முகக் கார் முதலியவற்றின் புண்பொழிந்த செந்நீரும் வாரியை நிறைத்தது என உம்மையை இறந்தது தழுவிய எச்சப் பொருளதாக்குக. வாரி—கடல். (61)

## அரக்கர் தலைவன் கும்பானுவின் போர்

**7205.** அரக்கர் சேனை யடுகளம் பாழ்பட
வெருக்கொண் டோடிட வெம்படை காவலன்
நெருக்க நேர்ந்து கும்பானு நெடுஞ்சரம்
துரக்க வானரச் சேனை துணிந்ததே.

அரக்கர் சேனை அடுகளம் பாழ்பட
வெருக் கொண்டு ஓடிட, வெம்படை காவலன்
நெருக்க நேர்ந்து, கும்பானு நெடுஞ்சரம்
துரக்க, வானரச் சேனை துணிந்தவே.

பொ :—போர்க்களம் பாழ்படுமாறு அரக்கர் சேனை அஞ்சி ஒடா நிற்க, கொடிய அவ்வரக்கர் படையின் தலைவனாகிய கும்பானு என்பவன் (நீலன் வீசிய மராமரத்தினால் உண்டான) நெருக்கத்தைத் தாங்கிக்கொண்டு, நெடிய அம்புகளைச் செலுத்த வானரப்படை அழிவுற்றது.

கு :—அடுகளம்—பகைவரைக் கொல்கின்ற போர்க்களம். சேனை யில்லாமையால் போர்க்களம் பாழ்படுமாறு அரக்கர் சேனை ஓடிடக் கண்ட கும்பானு தான் ஓடாது பகைவரின் நெருக்கத்தைத் தாங்கி நின்று அம்புகளை எய்தான் என்க. காவலனாகிய கும்பானு என்க. கும்பானு நேர்ந்து சரம்துரக்க வானரச் சேனை துணிந்தது என இயையும். துரத்தல்—செலுத்துதல். வெரு—அச்சம். (62)

## இடும்பன் கடும்போர் 7206-7210

**7206.** கண்டு நின்ற கரடியின் காவலன்
எண்டி சாமுக மேங்கு மிடும்பனோர்
சண்ட மாருத மென்னத் தடவரை
கொண்டு சீறி யவனெதிர் குப்புறு.

கண்டு நின்ற கரடியின் காவலன்
எண் திசாமுகம் ஏங்கும் இடும்பன் ஓர்
சண்ட மாருதம் என்னத் தடவரை
கொண்டு சீறி அவன் எதிர் குப்புரு.

பொ :—(அதைக்) கண்டு நின்ற கரடிப்படையின் தலைவனாகிய, எட்டுத்திசையிலுள்ளாரும் அச்சத்தால் ஏங்குதற்குக் காரணமான, இடும்பன் என்பவன் கோபித்து ஒரு பெரிய மலையை ஏந்திக்கொண்டு சண்ட மாருதம்போல விரைந்து அந்தக் கும்பானு என்பவன் எதிரில் குதித்து.

கு :—குளகம். வரும் செய்யுளில் முடியும். காவலனாகிய இடும்பன்—எண்திசாமுகம் ஏங்குதற்குக் காரணனான இடும்பன், எனத் தனித்தனி இயையும். ஏங்குதல்—வருந்துதல்; திசாமுகம், வடசொல்; ஆகுபெயராய் எண்திசையிலும் உள்ளவரையுணர்த்தியது. இடும்பன் வலிமைகண்டு அஞ்சி ஏங்குவர் என்க. இடும்பன் சீறி ஒருதடவரை கொண்டு சண்ட மாருதமென்ன அவனெதிர் குப்புரு என இயையும். குப்புறல்—குதித்தல். (63)

**7207.** தொடுத்த வாளிகள் வீழுமுன் சூழ்ந்தெதி
ரெடுத்த குன்றை யிடும்ப னெறிதலு
மொடித்த வில்லு மிரதமு மொல்லெனப்
படுத்த வாசியும் பாகனும் பாழ்பட.

தொடுத்த வாளிகள் வீழுமுன், சூழ்ந்து எதிர்
எடுத்த குன்றை இடும்பன் எறிதலும்,
ஒடித்த வில்லும் இரதமும் ஒல்லெனப்
படுத்த வாசியும் பாகனும் பாழ்பட

பொ :—(கும்பானு) தொடுத்த அம்புகள் தன்மேல் சூழ்ந்து வீழ்தற்கு முன்னே இடும்பன் தான் முன் எடுத்த மலையை எதிர் வீசுதலும் அம் மலை அவ்வரக்கனின் வில்லையும் தேரையும் ஒடித்தது; (அத் தேரில் பூட்டிய) குதிரைகளையும் பாகனையும் பாழ்படுமாறு விரைவில் அழித்தது.

கு :—ஒடித்த படுத்த என்பன ஒருமைக்குப்பன்மை வந்த மயக்கம். சூழ்ந்து வீழுமுன் என்க. அக்குன்று வில்லும் இரதமும் ஒடித்த; வாசியும் பாகனும் பாழ்பட ஒல்லெனப் படுத்த என வருவித்து முடிக்க. (64)

**7208.** தேர ழிந்து சிலையு மழிந்துகக்
காரி ழிந்த வுருமெனக் காய்ந்தெதிர்
பார்கி ழிந்துகப் பாய்ந்தனன் வானவர்
போர்கி ழிந்து புறந்தரப் போர்செய்தான்.

தேர் அழிந்து சிலையும் அழிந்து உகக்
கார் இழிந்த உரும் எனக் காய்ந்து, எதிர்
பார் கிழிந்து உகப் பாய்ந்தனன் — வானவர்
போர் கிழிந்து புறம்தரப் போர் செய்தான்.

பொ :—(தான் ஏறியிருந்த) தேர் அழிய வில்லும் முரிந்து சிந்தினமையால், தேவர்கள் போரில் வலிமை கெட்டுப் புறமுதுகு காட்டி ஓடும்படி போர்செய்த பெரு வீரனாகிய கும்பானு, கோபித்து, மேகத்திலிருந்து வீழ்ந்த இடியைப் போலப் பூமி கிழிந்து சிதறும்படி (இடும்பனுக்கு) எதிரே பாய்ந்தான்.

கு :—போர் செய்தான் பாய்ந்தனன் என இயையும். தேரழிந்து என்புழிச் செய்தெனெச்சத்தைச் செயவெனெச்சமாகத் திரிக்க. போர்செய்தான் என்பது வினைப்பெயர். காரிழிந்த உருமு விரைவினாலும் பார்கிழியச் செய்தலாலும் கும்பானுவுக்கு ஒப்புமை யுடையதாயிற்று. வானவரை வென்ற கும்பானுவுக்கு வானரரை வெல்ல இயலாமையால் தேரும் வில்லும் இழந்து பாய்வானாயினன் என்றவாறு.
(65)

52 என்ற எண்ணுள்ள அச்சுப் புத்தகத்தில் கீழ்வரும் பாடல் மிகைப் பாடலாகக் காட்டப்பட்டுளது.

**7208 (a)** போர்செய் காலை, இடும்பனும் பொங்கி, அக்
கார்செய் மேனி அரக்கனைக் கைகளால்
மேரு மீதிடி வீழ்ந்தெனத் தாக்கலும்
சோர்வி லாத அரக்கனும் துள்ளினான்.

**7209.** தத்தி மார்பின் வயிரத் தடக்கையால்
குத்தி நின்றகும் பானுவைத் தானெதிர்
மொத்தி நின்று முடித்தலை கீழுறப்
பத்தி வன்றடந் தோளுறப் பற்றுவான்,

தத்தி, மார்பின் வயிரத் தடக்கையால்
குத்தி நின்ற கும்பானுவை, தான் எதிர்

மொத்தி நின்று, முடித்தலை கீழ் உற,
பத்தி வன் தடந்தோள் உறப் பற்றுவான்.

பொ :—அவ்வாறு பாய்ந்து தனது மார்பின்கண் வயிரம் போன்ற பெரிய கையால் குத்தி விட்டு நின்ற கும்பானு என்ற அரக்கனை (இடும்பன்) தானும் எதிரே அவனைக் குத்தி நின்று அவன் முடியணிந்த தலை கீழே பொருந்துமாறு பற்றி அவன் வலிய பெரிய தோள்களை அழுத்தமாகப் பற்றுவானானான்.

கு :—தத்துதல் - பாய்தல். மொத்துதல் – தாக்குதல். பத்தி—பற்றி; எதுகை நோக்கித் திரிந்தது. உறப்பற்றுதல்—அழுத்தமாகப் பற்றுதல். கும்பானுவின் தலையைக் கீழே தாழுமாறு பற்றி—அவன் வலிய பெரிய தோள்களையும் இடும்பன் பற்றினான் என்க.

(66)

**7210.** கடித்த லத்திரு காலுறக் கைகளால்
பிடித்துத் தோளைப் பிறங்கலின் கோடுநேர்
முடித்த லத்தினைக் கவ்வுற மூளைகள்
வெடித்து வீழ்தர வீழத்தின னுமரோ.

கடித்தலத்து இருகால் உறக், கைகளால்
பிடித்துத் தோளைப் பிறங்கலின் கோடு நேர்
முடித்தலத்தினில் கவ்வுற மூளைகள்
வெடித்து வீழ்தர வீழ்த்தினனும் அரோ.

பொ :—கும்பானுவின் உடம்பின் நடுப்பகுதியான மறைவிடத்தில் இரண்டு கால்களும் பொருந்தவைத்து, (மேற் கூறியதுபோல) அவன் தோள்களைக் கைகளால் பிடித்துக்கொண்டு, மலையின் சிகரம் போன்ற அதன் தலையை (இடும்பன்) வாயால் கடித்ததால் அவன் தலை பிளந்து மூளைகள் சொரியச் செய்து அவனைக் கொன்று விட்டான்.

கு :—ஆம், அரோ, அசைநிலை. இடும்பன் கும்பானுவைக் கொன்ற இயல்பை விளக்கியவாறு. தோளைக் கைகளால் பிடித்து என்பது அனுவாதமாக இங்குக் கூறப்பட்டது. இடும்பன் கும்பானு எழுந்திருக்க இயலாதவாறு, இடைப்பகுதியைக் கால்களால் மிதித்துக்கொண்டு கைகளால் தோள்களை அழுத்திக்கொண்டு அவன் தலையை வாயினல் கடித்து மூளையை வெறிப்படுத்திக் கொன்றுவிட்டான் என்க. இடும்பன் தன் கைகளால் கும்பானுவின்

தோள்களேயும் கால்களால் அவன் கடித்தலத்தையும் அழுத்திக் கொண்டமையால், அவன் தலையை வாயால் கவ்விக்கொல்ல நேர்ந்தது. (67)

## பிரகத்தன் போர்

**7211.** தன்ப டைத்தலே வன்படத் தன்னெதிர்
துன்ப டைத்த மனத்தன் சுமாலிசேய்
முன்ப டைத்த முகிலன்ன காட்சியான்
வன்ப டைத்த வரிசிலே வாங்கினுன்.

தன் படைத்தலேவன் படத் தன் எதிர்,
துன்பு அடைத்த மனத்தன், சுமாலி சேய்
முன் படைத்த முகில் அன்ன காட்சியான்,
வன்பு அடைத்த வரிசிலே வாங்கினுன்.

பொ :—தன் சேனேத்தலேவன் தன் கண்முன் கொல்லப் பட்டானுக (அது கண்டு) துன்பம் நிறைந்த மனத்தினனுகிய சுமாலியின் மகன் பிரகத்தன்—முன்னே வந்து நின்ற கருமுகில் போன்ற தோற்றத்தையுடையவனுய் வன்மை நிரம்பிய கட்டமைந்த வில்லே வளேத்தான்.

கு :—மனத்தனுகிய சுமாலிசேய் காட்சியானுய் வரிசிலே வாங் கினுன் என இயையும். சுமாலிசேய் என்றது, பிரகத்தனே. 'இறந்து வீழ்ந்தனனே பிரகத்தன்' எனப்பின் (79) வருவதால் இது புலப்படும். பிரகத்தன் கரியமேனியும் வில்லு முடைமையால் முகிலன்ன காட்சியான் ஆயினன் என்க. முகலின்கண் இந்திர தனுசு தோன்றுவது இயல்பாதல் நினேக. தன் னெதிர்பட என இயையும். தன் கண்முன் படைத்தலேவன் கொல்லப்பட்டமை யால் பிரகத்தனுக்குத் துன்பம் பெரிதாயிற்று. வாங்குதல்— வளேத்தல். (68)

**7212.** வாங்கி வார்சிலே வானர மாப்படை
யேங்க நாணெறிந் திட்டிடை யீடின்றித்
தூங்கு மாரி யெனச்சுடர் வாளிகள்
வீங்கு தோளினன் விட்டன னுமரோ.

வாங்கி வார்சிலை, வானர மாப்படை
ஏங்க நாண் எறிந்திட்டு, இடையீடு இன்றித்
தூங்கு மாரி எனச் சுடர்வாளிகள்,
வீங்கு தோளினன், விட்டனனும் அரோ.

பொ :—அவ்வாறு நீண்ட வில்லை வளைத்துப் பூரிக்கின்ற தோளை யுடையனும் வானரப் பெரும்படை வருந்துமாறு நாணொலி செய்து, இடையீடு இல்லாமல் சொரிகின்ற மழையைப்போல, ஒளிவீசும் அம்புகளைச் சொரிந்தான்.

கு :—மாரியென விட்டனன் என இயையும். போரென்னவே பூரிக்கும் தோளானுக்குப் போர்கிடைத்த மகிழ்ச்சியால் தோள் பூரிக்கச் சொல்ல வேண்டுமோ? பிரகத்தனுடைய வில்லின் நாணொலி கேட்டே வானரமாப்படை ஏங்கலாயிற்று என்றவாறு. 'நாண் எறிந்து இட்டு இடையீடு இன்றி; எனப்பிரித்துச் சிறிதும் இடையீடு இன்றி எனப்பொருள் கூறலும் ஆம். இடையீடு இன்றி விட்டனன் என இயைத்தலும் ஆம். தூங்குதல் சொரிதல். 'வீழ்பனி தூங்கத் துவண்டு' (திருக்கோவை—320) என வருதல் காண்க. வரிசிலை வாங்கினன் என மேற்கூறியதையே' வாங்கி வார்சிலை, என இங்கும் அனுவதித்தவாறு. (69)

## பிரகத்தனும் நீலனும் 7218-7220

**7213.** நூறு மாயிர முங்கணை நொய்தினின்
வேறு வேறு படுதலின் வெம்பியே
யீறில் வானர மாப்படை யெங்கணும்
பாற நீலன் வெகுண்டெதிர் பார்ப்புறு.

நூறும் ஆயிரமும் கணை நொய்தினின்
வேறு வேறு படுதலின், வெம்பியே,
ஈறு இல் வானர மாப்படை எங்கணும்
பாற, நீலன் வெகுண்டு எதிர்பார்ப்புறு.

பொ :—(பிரகத்தன் விட்ட) அம்புகள் நூறும் ஆயிரமுமாக விரைந்து வந்து வேறு வேறாகத் தங்கள்மீது படுதலினால், எண்ணி முடிவுகட்ட முடியாத பெரிய வானரப் படை, மனம் வெதும்பி எல்லாப் பக்கங்களிலும் சிதறி ஓட (அதனை) நீலன் தன் கண்முன் பார்த்து வெகுண்டு.

கு :—வெகுண்டு குன்றம் நின்றதெடுத்து என அடுத்த செய்யுளில் இயைந்து முடியும்; குளகம். வானரமாப்படை வெம்பிப் பாற என இயையும் அளவில்லாத பெரும்படை என்பார். ஈறில் வானர மாப்படை என்ருர். பாறுதல்—ஓடுதல். 'ஆலி வானிற் காலொடு பாறி' (அகநா—9) என்றது காண்க. பார்ப்புரு - பார்த்து; செய்யா வென்னும் வாய்பாட்டு வினையெச்சம். பார்ப்புரு வெகுண்டு என இயையும். தன் சேனை ஓடுதலைக்கண்டு அவ்வாறு ஓடச்செய்த பிரகத்தன்பால் கோபித்து என்க. (70)

**7214.** குன்ற நின்ற தெடுத்தெதிர் கூற்றெனச்
சென்றெ றிந்தவன் சேனை சிதைத்தலும்
வென்றி வில்லன் விடுகணை மாரியா
லொன்று நூறுதி ருற்றதக் குன்றமே.

குன்றம் நின்றது எடுத்து எதிர் கூற்று எனச்
சென்று எறிந்து, அவன் சேனை சிதைத்தலும்,
வென்றி வில்லன் விடுகணை மாரியால்,
ஒன்று நூறு உதிர் உற்றது, அக்குன்றமே.

பொ :—(அங்கு) நின்றதாகிய குன்றினை எடுத்துக் கொண்டு எமனைப்போல எதிர்சென்று வீசி, (தன் சேனையை எய்தவனுகிய) பிரகத்தனது சேனையைச் சிதைவுறச் செய்தலும், வென்றிகொள்ளும் வில்லையுடையனுகிய பிரகத்தன் விட்ட அம்பு மழையால், அக் குன்றம் ஒன்றே நூறு கூறுபட்டு உதிர்ந்தது.

கு :—நின்றதாகிய குன்றம் எனவும் கூற்றென எதிர் சென்று எனவும் மாறுக. தன் சேனையை அம்பினுல் சிதைத்தவனுகிய பிரகத்தன் சேனையைக் குன்றத்தால் சிதைத்தான் நீலன் என்க. நீலன் எறிந்த மலையைப் பிரகத்தன் தன் அம்பினுல் நூறுகூருக உடைத்து எறிந்தான் என்றவாறு. வில்லன் என்றது பிரகத்தனை. கணையின் மிகுதி புலப்பட கணைமாரி என்ருர். உதிருற்றது—துகளாயிற்று. உதிர் – துகள். இதனுல் பிரகத்தனுடைய வில்வீரம் புலப்படுத்தியவாறு. (71)

**7215.** மீட்டு மங்கொர் மராமரம் வேரொடு
மீட்டி வானத் திடியென வெற்றலும்
கோட்டு வில்லும் கொடியும் வயப்பரி
பூட்டு தேரும் பொடித்துக ளாயவே.

மீட்டும் அங்கு ஓர் மராமரம் வேரொடும்
ஈட்டி, வானத்து இடி என எற்றலும்,
கோட்டு வில்லும், கொடியும், வயப்பரி
பூட்டு தேரும், பொடித்துகள் ஆயவே.

பொ :—(நீலன்) மீண்டும் அங்கு நின்ற ஒரு வெண்கடப்ப மரத்தை வேரொடும் பறித்து, மேகத்தினின்றும் இடி வீழ்வதுபோல வீழுமாறு எறிந்த அளவில், (பிரகத்தனுடைய) வளைந்த வில்லும், வலிமைமிக்க குதிரைகள் பூட்டிய தேரும், (தேரில்கட்டிய) கொடியும் சிறுதுகளாய்ச் சிதறின.

கு :—முன் குன்றத்தைப் பறித்து எறிந்ததை நினைந்து 'மீட்டும்' என்றார். ஈட்டுதல் இங்குப் பறித்தல் என்னும் பொருளில் வந்தது. இடி விழுவதுபோல மராமரம் வீழ்ந்து அழிவு செய்யுமாறு எற்றினன் என்க. எற்றுதல்—மோதுதல்; எறிதல். இடியின் ஒலிபோல ஒலியெழுமாறு எற்றலும் எனலும் ஆம். கோட்டுவில், பூட்டு தேர் என்பன வினைத்தொகை; இறந்த காலத்தால் விரிக்கப்பட்டன. கொடி தேரில் கட்டப்படுவதாகலின் தேர்க்குப்பின் கூட்டப்பட்டது; செய்யுளாகலின் மாறிநின்றது. (72)

52-ல் 72-1, 2, 3, 4 ஆகப் பின்வரும் மிகைப்பாடல்கள் காட்டப் பெற்றுள்ளன.

7215 (a) வரு சுமாலி மகன் பிரகத்தனங்கு
இரத மொன்றதின் ஏறினன் பின்னரும்
வரி நெடுஞ் சிலை வேரென்று வாங்கியே
சொரியு மாமழை போல்சரம் தூவினன்.

(b) வாலறுந்து வயிறு துணிந் திரு
காலறுந்து கழுத்தறுந் தங்க மாம்
மேலறுந்து விளிந்தன — வெஞ்சமர்
ஆலும் வானரச் சேனைய னேகமே

(c) நீலன் நெஞ்சிடை யஞ்சு நெடுஞ்சரம்
ஆலமன்ன வரக்க னழுத்தலும்
சால நொந்தனன் நொந்து தருக்கரு
கால வெங்கனல் போல் கனன் றனரோ

(d) கனலும் வெங்கண் அரக்கன் கடுஞ்சிலை
புனையும் தேர்பரி மாகொடு போயற
நினைவ தற்குமுன் நீல னங்கோர் நெடுந்
தனி மராமரந் தான்கொண்டு தாக்கினன்

**7216.** தேரி ழந்து சிலையு மிழந்திடக்
காரி ழிந்த வுருமெனக் காந்துவான்
பாரி ழிந்து பருவலித் தண்டொடு
லூரி ழந்த கதிரென வோடினன்.

தேர் இழந்து, சிலையும் இழந்திட
கார் இழிந்த உரும் எனக் காந்துவான்,
பார் இழிந்து, பருவலித் தண்டொடும்,
ஊர் இழந்த கதிர் என ஓடினன்.

பொ :—(பிரகத்தன்) தான் ஏறியிருந்த தேரை இழந்து வில்லை யும் இழந்து விட்டமையால் மேகத்திலிருந்து இறங்கிய இடியைப் போலக் கோபித்தவனுய்ப் பூமியில் இறங்கிப் பருமையும் வலிமையு முடைய தண்டினேடு, ஊர்தியை இழந்த சூரியனைப்போல நீலனை நோக்கி ஓடினன்.

கு :—இடியேறுபோலப் பகைவர்க்குத் துன்பஞ் செய்பவன் பிரகத்தன் ஆதலின் அவன் தேரிலிருந்து இறங்கினமைக்குக் காரி ழிந்த உருமினை உவமை கூறினர். கதிரவன் தேரில் ஊர்ந்துவரும் இயல்புடையவன் என்பதை: "காய்சினத்த கதிர்ச் செல்வன் தேர் பூண்ட மாஅபோல" (பட்டினப் – 122, 123) என்பதால் அறியலாம். தேரில் நின்று போர் செய்த பிரகத்தன் அத்தேரை இழந்து தரையில் ஓடியதற்கு இல்பொருளுவமையாக ஊரிழந்த கதிரைக் கூறினர். ஊர்வதற்குரிய தேர் இங்கு ஊர் எனப்பட்டது. ஊர் – ஊர்கோள் எனக் கொள்வாருமுண்டு; ஊர்கோளோடு இருப்பது ஒரோவழியன்றிச் சூரியனுக்கு இயல்பாகாமை நினைக. (73)

**7217.** வாய்ம டித்தழல் கண்டொறும் வந்துகப்
போய டுத்தலு நீலன் புகைந்ததெதிர்
தாய டுத்தவன் றன்கையிற் றண்டொடும்
மீயெ டுத்து விசும்புற வீசினன்.

வாய் மடித்து அழல் கண்தொறும் வந்து உக,
போய் அடுத்தலும், நீலன் புகைந்து எதிர்
தாய் அடுத்தவன் தன்கையில் தண்டொடும்
மீ எடுத்து விசும்பு உற வீசினன்.

பொ :—(பிரகத்தன் கோபத்தால்) வாயை மடித்துக்கொண்டு, கண்தொறும் சினவனல் சிந்தப் போய் நீலனை நெருங்கின அளவில்,

அந்நீலன் வெகுண்டு, தன் எதிரில் தாவிவந்து நெருங்கின பிரகத்த னுடைய கையில் இருந்த தண்டோடும் அவனை மேலே தூக்கி விண்ணில் அடைய வீசி எறிந்தான்.

கு :—இரண்டு கண்களிலும் தழல் வந்து உக என்பார், கண் டொறும் தழல் வந்துக என்றார். வாய் மடித்தலும் கண்ணில் கனல் சிந்தலும் சினமுற்றபோது நிகழத்தக்கவை. புகைதல் இங்குச் சினத்தலை உணர்த்தியது. தாய் - தாவி. மீ - மேல். (74)

**7218** அம்ப ரத்தெறிந் தார்ப்ப வரக்கனு
மிம்ப ருற்றெரி யின்றிரு மைந்தன்மேல்
செம்பு னற்பொழி யக்கதை சேர்த்தின
னும்பர் தத்தம துள்ள நடுங்கவே.

அம்பரத்து எறிந்து, ஆர்ப்ப அரக்கனும்,
இம்பர் உற்று, எரியின் திரு மைந்தன்மேல்
செம்புனல் பொழியக் கதை சேர்த்தினன்
உம்பர் தத்தமது உள்ளம் நடுங்கவே.

பொ :—(அவ்வாறு நீலன் பிரகத்தனை) விண்ணில் வீசி ஆரவா ரிக்கப், பிரகத்தனும் தரையை யடைந்து, தேவர்கள் தம் தம் மனம் நடுங்குமாறு, நெருப்பின் திருமகனாகிய நீலன்மேல் இரத்தம் சிந்து மாறு கதை கொண்டு தாக்கினன்.

கு :—அம்பரம் - விண். இம்பர் என்றது நிலத்தை. செம்புனல் - இரத்தம். கதை - தண்டு. தம் சார்பாக நின்று போர் செய்கின்ற நீலன்மேல் கதையால் பிரகத்தன் தாக்கியதால் தேவர்கள் மன நடுங்கலாயினர் என்க. (75)

**7219.** அடித்த லோடு மதற்கிளை யாதவ
னெடுத்த தண்டைப் பறித்தெறி யாவிகல்
முடித்து மென்றொரு கைகொடு மோதினன்
குடித்து மிழ்ந்தெனக் கக்கக் குருதியே.

அடித்தலோடும், அதற்கு இளையாது அவன்,
எடுத்த தண்டைப் பறித்து எறியா, ‘இகல்
முடித்தும்’ என்று, ஒரு கைகொடு மோதினன்,
குடித்து உமிழ்ந்தெனக் கக்கக் குருதியே.

பொ :—(அவ்வாறு பிரகத்தன்) தண்டுகொண்டு அடிக்க, நீலன் அந்த அடிக்கு இளைக்காதவனாய் அப் பிரகத்தன் எடுத்த தண்டினைப் பறித்துத் தொலைவில் எறிந்துவிட்டு '(இப்போதே) போரை முடிப் போம்' என்று கூறிக்கொண்டு, அவன். (இரத்தத்தைக்) குடித்து உடனே உமிழ்ந்தாற்போல, இரத்தத்தைக் கக்குமாறு ஒரு கையினால் அறைந்தான்.

கு :—எறியா மோதினான் என இயையும். அவன் என்றது பிரகத்தனை. இகல் - போர். பிரகத்தனை முடிப்போம் என்ற கருத் தால் 'இகல் முடித்தும்' என்றான். பிரகத்தன் இரத்தம் கக்கிய தோற்றம் இரத்தத்தைக் குடித்து அதை உடனே உமிழ்வதுபோல் இருந்தது எனத் தற்குறிப்பேற்றமாகக் கூறினார். இதனால் அவன் கக்கிய இரத்தத்தின் மிகுதி புலப்படுத்தியவாறு. ஒருகைகொடு, குருதிகக்க மோதினான் என்றமையால் நீலனுடைய ஆற்றல் புலப் படுத்தியவாறு. (76)

**7220.** குருதி வாய்நின் றொழுகவுங் கூசலன்
நிருத னீல னெடுவரை மார்பினில்
கருத லாதமுன் குத்தலுங் கைத்தவர்
பொருத பூசல் புகலவொண் ணாததே.

குருதி வாய்நின்று ஒழுகவும் கூசலன்,
நிருதன் நீலன் நெடுவரை மார்பினில்
கருதலாதமுன் குத்தலும், கைத்து, அவர்
பொருத பூசல் புகல ஒண்ணாததே.

பொ :—பிரகத்தன் தன் வாயிலிருந்து இரத்தம் ஒழுகவும் பின் வாங்காதவனாய், நீலனுடைய நெடிய மலைபோன்ற மார்பில் (அவன் குத்துவான் என்று) நினைக்குமுன் குத்துதலும், அவர் அப்போது கோபித்துச் செய்த போர், சொல்லால் சொல்ல முடியாத சிறப்பினை யுடையதாகும்.

கு :—கூசுதல் – பின்வாங்குதல். நீலன் அறைந்த உடனே பிரகத்தன் அவனைக் குத்தினான் என்பார், 'கருதலாத முன் குத்தி னான்' என்றார். நீலன் நினைப்பினும் பிரகத்தன் செயல் முந்தியது என்றவாறு. கைத்தல் - கோபித்தல். 'மருவலரைக் கைத்து' (தஞ்சைவாணன் கோவை - 423) என்புழியும் இப்பொருளில் இச் சொல் வழங்கப்பட்டிருத்தல் காணலாம். இனி, கைத்து என்ப தற்குக் கையின்கண் என்று பொருள்கொண்டு, கையினால் அவர்

செய்த போர் என வேற்றுமை மயக்கமாக்கி யுரைத்தலும் ஆம். போரின் கடுமை புலப்படப் "புகலவொண்ணுததே" என்றுர். இனி, அவர் பூசல் உவமை புகலவொண்ணுதது எனலும் ஆம். (77)

### பிரகத்தன் இறந்து வீழ்தல்

**7221.** மற்று நீல னரக்கனை மாடுறச்
சுற்றி வால்கொடு தோளினு மார்பினும்
நெற்றி மேலு நெடுங்கரத் தெற்றலு
மிற்று மால்வரை யென்ன விழுந்தனன்.

மற்று, நீலன், அரக்கனை மாடு உறச்
சுற்றி வால்கொடு, தோளினும், மார்பினும்
நெற்றி மேலும் நெடுங்கரத்து எற்றலும்
இற்று, மால் வரை என்ன விழுந்தனன்.

பொ :—பின்பு, நீலன் பிரகத்தனை இரு பக்கங்களிலும் பொருந்த வாலினுல் சுற்றிப் பிடித்துக்கொண்டு, அவன் தோள்களிலும் மார்பிலும் நெற்றியின் மேலும் நீண்ட கையினுல் மாறிமாறித் தாக்குதலும் (அந்தப் பிரகத்தன்) உயிர் இழந்து பெரிய மலைபோலத் தரையில் விழுந்தான்.

கு :—மாடு - பக்கம். பிரகத்தன் தப்பி ஓடாமலும் தன்னை மீண்டும் தாக்காமலும் இருக்க வேண்டி, நீலன் தன் வாலினுல் அவனை சுற்றிப் பிடித்துக் கொண்டான் என்க. 'மால்வரையென்ன விழுந்தனன்' என்றமையால் பெயருக் கேற்றவாறமைந்த பிரகத்தனுடைய பேருடம்பின் பெருமை புலப்படுத்தியவாறு. ஏற்றுதல் - தாக்குதல். (78)

### அமரர் ஆர்ப்பும் அரக்கர் தோற்பும்

**7222.** இறந்து வீழ்ந்தன னேபிர கத்தனென்
றறிந்த வானவ ராவலங் கொட்டினுர்
வெறிந்த செம்மயிர் வெள்ளெயிற் ருடவர்
முறிந்து தந்த முதுநக ரெய்தினுர்.

'இறந்து வீழ்ந்தனனே பிரகத்தன்' என்று
அறிந்த வானவர் ஆவலம் கொட்டினுர்;

வெறிந்த செம்மயிர் வெள் எயிற்று ஆடவர்
முறிந்து, தத்தம் முதுநகர் எய்தினர்.

பொ :—(பிரகத்தன் இறந்ததை) அறிந்த தேவர்கள், 'பிரகத்தன் இறந்து வீழ்ந்து விட்டானே!' என்று வியந்து ஆரவாரித்து வாய் கொட்டினர்கள்; நெருங்கிய செம்பட்டை மயிரினையும் வெள்ளிய பற்களையும் உடைய அரக்க வீரர்கள் மனம் முறிந்து, ஓடித் தமது பழைய நகரை அடைந்தார்கள்.

கு :—நீலனை வென்று விடுவானோ பிரகத்தன்? என்று தேவர்கள் எண்ணுமாறு தன் பேராற்றலைக் காட்டிப் போர் செய்தவனாதலின் அத்தகையோன் இறந்து வீழ்ந்ததை அறிந்த தேவர்கள் வியப்பினால் 'இறந்து வீழ்ந்தனனே பிரகத்தன்' எனக் கூறிக்கொண்டு வாய்கொட்டி ஆரவாரித்தார்கள். முன்பு பிரகத்தன் நீலனைக் கதையால் அடித்தபோது "உம்பர் தத்தமதுள்ள நடுங்கவே" (75) எனத் தேவர்கள் மன நடுங்கினமை கூறியிருத்தல் காண்க. நீலனுக்கு அழிவு நேரிடுமோ என அஞ்சின தேவர்கள், அந்த நீலனால் பிரகத்தன் இறந்ததை அறிந்து வியந்து ஆரவாரித்தல் இயல்பாதல் அறிக. அரக்கரின் அருவருக்கத்தக்க தோற்றத்தைப் புலப்படுத்த "வெறிந்த செம்மயிர் வெள்ளெயிற்றாடவர்" என்றார். வெறிதல் - செறிதல். முறிந்து முதுநகர் எய்திய கோழைகளாகிய அரக்கரை 'ஆடவர்' என்றது இகழ்ச்சிக் குறிப்பு. ஆடவர் - வெற்றியையுடைய வீரர். (79)

52 என்ற எண்ணுள்ள புத்தகத்தில் பின்வரும் மிகைப்பாடல் காட்டப்பட்டுளது.

7222. (a) நிருதர் தானை உடைந்தது நேர்கிலாத்
தரும கோபன் சதமகன் சண்டியோ
டெரி முகன் னிவராதி யிராக்கதர்
செருவின் வெற்றி திகழவந் தெய்தினர்.

### தெற்கு வாயிலில் அங்கதன் போர்

7223. தெற்கு வாயிலிற் சென்ற நிசாசரர்
மற்கு லாவு வயப்புயத் தங்கதன்
நிற்க வேயெதிர் நின்றில ரோடினர்
பொற்கு லாவு சுபாரிசன் பொன்றவே.

தெற்கு வாயிலில் சென்ற நிசாசரர்
மல் குலாவு வயப்புயத்து அங்கதன்
நிற்கவே, எதிர் நின்றிலர் ஓடினர்
பொன் குலாவு சுபாரிசன் பொன்றவே.

பொ :—தெற்கு வாயிலில் சென்ற அரக்கர்கள்,—மற்போர்த் தொழிலால் விளக்கமுற்ற வலிய தோள்களையுடைய அங்கதன் எதிர்த்து நின்றதால் அழகுடன் விளங்கும் சுபாரிசன் இறந்தானாக, (அது கண்டு) எதிர் நிற்க இயலாமல் ஓடினார்கள்.

கு :—இரவில் இயங்குபவர் ஆதலின் அரக்கர் நிசாசரர் எனக் காரணப் பெயர் பெற்றனர். மல் - மற்போர். குலாவுதல் - விளங்குதல். அங்கதன் எதிர்த்தலால் சுபாரிசன் என்பவன் இறந்ததைக் கண்ட தெற்கு வாயிலில் நின்ற அரக்கர்கள் அவன் முன் நிற்கவும் அஞ்சி ஓடினர் என்றவாறு. இதனால் அங்கதன் தோற்றமே அரக்கர்க்கு அச்சத்தை விளைவித்தது என்பது புலனாம். (80)

## மேலைவாயிலில் அனுமன் போர்

**7224.** நூற்றி ரண்டெனும் வெள்ளமு நோன்கழ
லாற்றல் சாறுன் முகனுமங் கார்த்தெழ
மேற்றிண் வாயிலின் மேவினர் வீடினர்
காற்றின் மாமகன் கையெனுங் காலனால்.

நூற்று—இரண்டு எனும் வெள்ளமும், நோன்கழல்
ஆற்றல் சால் துன்முகனும் அங்கு ஆர்த்து எழ,
மேல் திண்வாயிலில் மேவினர் வீடினர் —
காற்றின் மாமகன் கை எனும் காலனால்.

பொ :—மேலைத் திசையில் உள்ள திண்மையான வாயிலில் நூற்று இரண்டு என்ற எண்ணிக்கையுடைய வெள்ளச் சேனையும் வலிய வீரக்கழல் அணிந்த ஆற்றல்மிக்க துன்முகனும் அங்கு மேவினராய் ஆரவாரித்துப் போர்க்கு எழாநிற்க, (அங்கு நின்ற காற்றின் மகனாகிய அனுமான் தன் கை என்கின்ற எமனால் தாக்க, (அவர்களில் பெரும்பான்மையோர்) இறந்தார்கள்.

கு :—நூற்றிரண்டு வெள்ளமும் துன்முகனும் அங்கு மேவினராய் ஆர்த்தெழக் காற்றின் மாமகன் கையெனும் காலனால் தாக்க

வீடினர் என ஒரு சொல் வருவித்து இயைக்க. துன்முகனும் அவன் சேனை நூற்றிரண்டு வெள்ளமும் மேலை வாயிலில் ஆர்த்துப் போர்க்கு எழுந்தபோது, அனுமன் தன் கையால் தாக்கினனாக, அவர்கள் வீடினர் என்றவாறு. வெள்ளமும் துன்முகனும் மேவினர் என்பது சிறப்பினால் உயர்திணை முடிபாயிற்று. மேவினராய் ஆர்த்தெழ என முற்றெச்சமாக்கி இயைக்க. வீடினர் - இறந்தார். 'கையெனும் காலனால்' என்ற உருவகத்தில் முரண்தொடை யமைந்திருத்தல் காணலாம். மேலை வாயிலில் துன்முகனும் நூற்றிரண்டு வெள்ளமும் வீடினர் என அனைவரும் இறந்தனர் என்று எண்ணுமாறு கூறியிருப்பினும் "குடக்கு வாயிலில் துன்முகக் குன்றமும் அடக்கரும் வலத்தைம்பது வெள்ளமும் படக்குறைந்தனர்" (85) எனப் பின்வருதலின் இங்குத் துன்முகனும் அவனைச் சார்ந்தவர் பலரும் இறந்தனர்; அனைவரும் இறந்திலர் எனக் கொள்ளுதலே பொருத்தமுடையது. (81)

## நாற்றிசை வாயில்களிலும் நடந்த போரைப்பற்றித் தூதுவர் இராவணனுக்குச் சொல்லுதல்

**7225.** அன்ன காலையி லந்தந்த வாயிலில்
துன்னு போர்கண்ட தூதுவ ரோடினர்
மன்ன கேளென வந்து வணங்கினர்
சென்னி தாழ்க்கச் செவியிடைச் செப்பினர்.

அன்ன காலை அந்தந்த வாயிலில்
துன்னு போர் கண்ட தூதுவர் ஓடினர்,
'மன்ன! கேள்' என, வந்து வணங்கினர்
சென்னி தாழ்க்கச் செவியிடைச் செப்பினர்.

பொ :—அப்போது, அந்த அந்த வாயிலில் நெருங்கிச் செய்த போரினைக் கண்ட தூதுவர்கள் விரைந்து ஓடினராய் 'மன்னனே! கேட்பாயாக' என்று சொல்லிக் கொண்டே வந்து இராவணனை வணங்கினர்கள். (அவர் குறிப்பறிந்து இராவணன்) தலையை அவர் பக்கம் தாழ்த்த, அவன் செவியில் சொன்னார்கள்.

கு :—நால்வகை வாயிலிலும் நடந்த போரினைப் பார்த்தறிந்த ஒற்றர்கள் அதனை இராவணனுக்கு இரகசியமாகச் சொன்னார்கள் என்றவாறு, தூதுவர் என்றது ஒற்றரை. இராவணனைக் கண்டு 'மன்னகேள்' என்று ஒற்றர் சொன்னதும் அவர் சொல்லும் மறைமொழியைக் கேட்பதற்காக இராவணன் தன் சென்னியை அவர்

பக்கல் சாய்த்தானாக, அவன் செவியில் ஒற்றர்கள் சொல்லலானார்கள் என்றவாறு. செப்பியது அடுத்த செய்யுளில் புலப்படும். (82)

## கீழைவாயில் தூதுவர் கூறியது

**7226.** கீழை வாயிற் கிளர்நிரு தப்படை
ஊழி நாளினும் வெற்றிகொண் டுற்றநின்
னாழி யன்ன வனீகத் தலைமகன்
பூழி யானுயிர் புக்கது விண்ணென்றார்.

கீழை வாயில், கிளர் நிருதப்படை,
ஊழி நாளினும் வெற்றிகொண்டு உற்றநின்
ஆழி அன்ன அனீகத் தலைமகன்
பூழியான்; உயிர் புக்கது விண் என்றார்.

பொ :—'கீழை வாயிலில், ஊழியிறுதியிலும் வெற்றி கொண்டு பொருந்திய நின் ஆணைச் சக்கரத்தை ஒத்தவனாகிய பிரகத்தன் என்னும் சேனைத் தலைவன், போர் செய்யக் கிளர்ச்சி கொண்டு எழுந்த அரக்கர் படையோடு புழுதியின்கண் வீழ்ந்தவனானான்: அவன் உயிர் விண்ணுலகம் புகுந்தது' என்றார்.

கு :—ஆழி என்றது, ஆணைச் சக்கரத்தை. படைத் தலைவனை பிரகத்தன் இராவணன் ஆணையின்படி நடக்கின்றவனாகலின் 'ஆழி யன்ன அனீகத் தலைமகன்' என்றார். 'ஊழிநாளினும் வெற்றி கொண்டுள்ள நின் ஆழி' என்றது உயர்வு நவிற்சியால் கூறியது. அனீகம் படை, பூழி – புழுதி. சேனைத் தலைவன் உடம்பு புழுதியில் கிடக்கின்றது என்பார், 'பூழியான் 'என்றார். அவன் உடம்பு மண்புக உயிர் விண்புக்கது என்றவாறு, பூழியான் ஆயினன் என ஆக்கச் சொல்வருவிக்க. 'உயிர் நீத்து ஒரு மகன் கிடந்தான்' என்றாற்போல அனீகத் தலைமகன் பூழியான் என உயர்திணையாகக் கருதிக் கூறப் பட்டது. பூழியில் கிடந்தது அஃறிணையாகிய உடம்பேயாதல் தெளிக. (83)

## தென்திசைவாயில் தூதுவர் சொல்வது

**7227.** வென்றி வேற்கை நிருதர் வெகுண்டெழத்
தென்றி சைப்பெரு வாயிலிற் சேர்ந்துழிப்
பொன்றி னனச் சுபாரிசன் போயினா
ரின்று போன விடமறி யோமென்றார்.

'வென்றி வேற்கை நிருதர் வெகுண்டு எழ,
தென்திசைப் பெருவாயிலில் சேர்ந்துழி,
பொன்றினன், அச்சுபாரிசன்; போயினர்
இன்று போன இடம் அறியோம்' என்றார்.

பொ :—வெற்றி பெறுவதற்குரிய வேற்படை தாங்கிய கையை யுடைய அரக்கர்கள் தன்னோடு கோபித்து எழ, அச்சுபாரிசன் தென் திசையில் உள்ள வாயிலில் சேர்ந்தபோது (பொருது) இறந்தான்; அவனுடன் சென்றவர்கள் போன இடம் இன்று அறியகில்லோம் என்று கூறினர்.

கு :—போரில் வெற்றி காண்டற்குரிய படையிருந்தும் வென்றி யின்றிப் பொன்ற நேர்ந்தது என்பார், வென்றி வேற்கை நிருதர் எனச் சிறப்பித்தார். தென்திசை வாயிலைச் சேர்ந்ததற்கும் இறந்த தற்கும் கால இடையீடு அதிகமில்லை என்பார், 'சேர்ந்துழிப் பொன் றினன்' என்றார். (84)

## வடக்கு, மேற்கு வாயிலோர் கூற்று

**7228.** வடக்கு வாயிலின் வச்சிர முட்டியும்
குடக்கு வாயிலிற் றுன்முகக் குன்றமும்
அடக்க ரும்வலத் தைம்பது வெள்ளமும்
படச்சி தைந்தது நம்படை யென்றனர்.

'வடக்கு வாயிலில் வச்சிர முட்டியும்,
குடக்கு வாயிலில் துன்முகக் குன்றமும்
அடக்கரும் வலத்து ஐம்பது வெள்ளமும்,
படச் சிதைந்தது, நம்படை' என்றனர்.

பொ :—வடக்கு வாயிலில் வச்சிரமுட்டி என்ற தலைவனும் மேற்கு வாயிலில் துன்முகன் ஆகிய மலைபோன்ற தலைவனும், பகை வரால் அடக்க முடியாத வலிமையுடைய ஐம்பது வெள்ளச் சேனையும் இறந்து பட்டமையால் நம்படை சிதைந்து பின்னிட்டது என்று கூறினர்.

கு :—மலைபோன்ற தோற்றமுடைமையின் துன்முகன் குன்றமாக உருவகஞ் செய்யப்பட்டான். வடக்கு மேற்கு ஆகிய இரு வாயில் களிலும் இறந்தவர் தொகை ஐம்பது வெள்ளம் என்றவாறு. படுத லால் நம்படை சிதைந்தது எனக் காரணப் பொருளதாக்குக. (85)

## கேட்ட இராவணன் சினத்தல்

**7229.** என்ற வார்த்தை யெரியுகு நெய்யெனச்
சென்று சிந்தை புகுதலுஞ் சீற்றத்தீக்
கன்று கண்ணின் வழிச்சுடர் கான்றிட
நின்று நின்று நெடிதுயிர்த் தானரோ.

என்ற வார்த்தை எரிஉகும் நெய் எனச்
சென்று சிந்தை புகுதலும், சீற்றத்தீ
கன்று கண்ணின் வழிச் சுடர் கான்றிட,
நின்று நின்று, நெடிது உயிர்த்தான் அரோ.

பொ :—என்று தூதுவர் கூறிய வார்த்தைகள் நெருப்பில் ஊற்றிய நெய்யைப் போலச் சென்று இராவணன் சிந்தையிற் புகுதலும். (அச்சிந்தையிலிருந்து எழுந்த) சினத் தீயானது, வெகுளியால் சிவந்துள்ள கண்ணின் வழியாக நெருப்புப் பொறியைக் கக்காநிற்க, ஒன்றும் பேசாமல் நின்று நின்று பெருமூச்சு விட்டான்.

கு :—வானர சேனை முற்றுகையிட்டமை கண்டு சினமிக்கிருந்த இராவணன சிந்தையில் தூதுவர் கூறிய சொற்கள் மேலும் சினத்தைக் கிளரிவிட்டது என்பது தோன்ற 'எரியுகு நெய்யென வார்த்தை சென்று சிந்தை புகுதலும்' என்றார். 'மண்டும் எரியுள் மரந்தடிந் திட்டற்று' (பு-வெ. 1) என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும். நெய் பெய்தவுடன் பொங்கி யெரியும் அங்கிபோலத் தூதுவர் வார்த்தை கேட்டவுடன் இராவணன் உள்ளத்தில் பொங்கிய சினத்தீ அவன் கண்வழியே நெருப்புப் பொறிகளாக வெளிவந்தன என்றவாறு. கன்றுகண் - சினத்தால் சிவந்தகண். சீற்றத்தீ கண்ணின் வழிச் சுடர் கான்றிட என இயையும். நிற்றல் இங்கு ஒன்றும் பேசாது நின்ற வெகுளி மெய்ப்பாட்டையுணர்த்தியது. தூதுவர் வார்த்தையைக் கேட்ட இராவணனிடமிருந்து சொற்கள் ஏதும் வெளிவரவில்லை; பெருமூச்சும் நெருப்புப் பொறியுமே வெளிவந்தன என்றவாறு. இராவணன் சிந்தை எரிபோன்றது; தூதுவர் வார்த்தை நெய் போன்றது என்க. (86)

## இராவணன் கேள்விக்குத் தூதுவர் விடை கூறுதல் 7230–7232

**7230.** மறித்து மாரவ னுருயிர் வவ்வின
ரிறுத்துக் கூறு மென்றுனிசை யெங்கணும்
நிறுத்து நீல னெடும்பெருஞ் சேனையை
யொறுத்து மற்றவ னேடும்வந் துற்றனன்.

மறித்தும் 'ஆர் அவன் ஆர்உயிர் வவ்விஞர் ?
இறுத்துக் கூறும்' என்ருன்; இசை எங்கணும்
நிறுத்தும் நீலன், நெடும் பெருஞ் சேனையை
ஒறுத்து, மற்று அவனேடும் வந்து உற்றனன்.

பொ :—மீண்டும், (இராவணன்) அந்தப் (படைத் தலைவனுகிய) பிரகத்தனுடைய அரிய உயிரைக் கவர்ந்தவர் யார்? விடை சொல் லுங்கள்' என்ருன் ; (தூதுவர்கள்) தன் புகழை எட்டுத் திசையிலும் நிலைநிறுத்திய நீலன் என்பவன் நெடிய பெரிய நம் சேனையை அழித்துவிட்டு பிரகத்தனேடும் போர் செய்ய வந்து சேர்ந்தான்.

கு :—கீழை வாயில் தொடங்கி முறையே எல்லா வாயில்களிலும் நிகழ்ந்த போரைப் பற்றிக் கூறிஞர்கள் ஆதலின் அவன் என்ற சுட்டுக் கீழைவாயிலில் படைத் தலைமை பூண்டு சென்ற பிரகத்த னையே குறிக்கும் என்க. அவன் ஆருயிர் வவ்விஞர் ஆர்? என இயையும். இறுத்தல் - விடை சொல்லுதல். இறுத்துக் கூறும் என்றது விடை சொல்லுக என்னும் பொருளது. 'என இயம்பிஞர்' என அடுத்த செய்யுளில் வருதலின் 'இசை யெங்கணும்' என்று தொடங்கிக் கூறினவர் தூதுவர் என்பது புலப்படும். ஒறுத்தல் இங்கு அழித்தலை உணர்த்தியது. மற்றவன் என்றது பிரகத்தனை. நீலன் வந்துற்றனன் என்ற குறிப்பாலும் இது பெறப்படும். (87)

**7231.** உற்ற போதி னிருவரு மொன்றல
கற்ற போர்க ளெலாஞ்செய்த காலையில்
நெற்றி மேன்மற்றந் நீல னெடுங்கையா
லெற்ற வீந்தன னென்ன வியம்பிஞர்.

உற்ற போதின் இருவரும், ஒன்று அல,
கற்ற போர்கள் எலாம் செய்த காலையில்,
நெற்றி மேல், மற்ற அந்நீலன் நெடுங்கையால்
எற்ற, வீந்தனன் என்ன இயம்பிஞர்.

பொ :—'நீலன் (பிரகத்தனேடு) வந்து பொருந்தியபோது, அவ் விருவரும் ஒருவகைப் போரல்ல, தாம் தாம் கற்றிருந்த போர்கள் எல்லாவற்றையும் செய்தபோது, அந்த நீலன் தன் நெடிய கையால், பிரகத்தன் நெற்றியின் மேல் தாக்கினதால் அப்பிரகத்தன் இறந் தான்' என்று சொன்ஞர்கள்.

கு :—பிரகத்தன் வீந்தனன் என்னுது, 'நீலன் எற்ற வீந்தனன்' என்ற குறிப்பால் பிரகத்தன் என்பது புலப்படச் செய்தது. அவன் பெயர் கூறின் இராவணன் துன்பம் விஞ்சும் என்று அஞ்சிய தாலாகும். (88)

**7232.** அன்ன வன்னெடும் போன வரக்கரில்
நன்ன கர்க்கு வந்தோமைய நாங்களே
யென்ன வென்ன வெயிற்றிகல் வாய்களைத்
தின்னத் தின்ன வெரிந்தன திக்கெலாம்.

அன்னவன்னெடும் போன அரக்கரில்
நல் நகர்க்கு வந்தோம், ஐய! நாங்களே
என்ன என்ன, எயிற்று இகல் வாய்களைத்
தின்னத்தின்ன, எரிந்தன திக்கு எலாம்.

பொ :—'ஐய! அந்தப் பிரகத்தனேடு சென்ற அரக்கர்களில் இந்த நல்ல நகர்க்குத் திரும்பி வந்தவர்கள் நாங்கள் மட்டுமே' என்று தூதுவர் செல்லச் சொல்ல, (இராவணன்) பற்களோடு கூடிய வலிய வாய்களை அதுக்க அதுக்கத் திசைகள் எல்லாம் எரிந்தன.

கு :—மற்றவர்கள் போரில் இறந்தார்கள் என்று கூறின் இராவணன் பொருன் என்று கருதிப் 'போனவரக்கரில் வந்தோமைய நாங்களே' என்றனர். பாரிசேட அளவையால் மற்றவர்கள் போரில் இறந்தனர் என்பதைப் பெற வைத்தவாறு. இராவணன் பத்துவாய்களையுடையவனுதவின் 'வாய்களை' என்ருர். எயிறுகள் நிறைந்த வாய்களைச் சினத்தொடு கடித்து மென்றதாற் பிறந்த தீயினுல் திசையெலாம் எரிந்தன என்க. இதனுல் இராவணனுடைய சினமிகுதி புலப்படுத்தியவாறு தூதுவர்கள் கூறக் கூறப் பற்களைக் கடித்தலும் மிகுதிப்பட்டது என்க. (89)

தூதுவர் கூறியதை இராவணன் சினத்தால் மீட்டும் கூறுதல்

**7233.** மாடு நின்ற நிருதரை வன்கணு
னேட நோக்கி யுயர்படை யான்மற்றக்
கோடு கொண்டு பொருத குரங்கினுல்
வீடி னுனென்று மீட்டும் விளம்பினுன்.

மாடு நின்ற நிருதரை, வன்கணன்
ஓட நோக்கி, 'உயர்படையான் மற்று அக்
கோடு கொண்டு பொருத குரங்கினால்
வீடினான்!' என்று, மீட்டும் விளம்பினான்.

பொ :—(அவ்வாறு கூறி) தன் பக்கத்தே நின்ற அரக்கர்களை வன்கணினாகிய இராவணன், (அஞ்சி அவர்) ஓடுமாறு உருத்துப் பார்த்துவிட்டு, 'உயர்ந்த படைக்கலங்களையுடைய பிரகத்தன் அப் படைகள் ஏதுமின்றி மரக்கிளைகளைக் கொண்டு போர் செய்யும் அக் குரங்கினால் இறந்தான் என்று (அவர்கள் கூறியதையே) மீண்டும் சொன்னான்.

கு :—உயர்படையுடையவன், படைக்கலமே இல்லாத குரங்கினால் இறந்தான் என்பது வியத்தற்குரியது என்பதை இராவணன் மீட்டும் கூறிப் புலப்படுத்தியவாறு. வன்கணன் என்றது இராவணனை வன்கணன் நோக்கி என மூன்றனுருபு கருவிப் பொருளில் வந்ததாகக் கொள்ளலும் ஆம். கோபத்தால் பிறர் அஞ்சி ஓடுமாறு நோக்கினான் என்பார், வன்கணன் ஓட நோக்கி என்றார். குரங்கினால் வீடினான் என்பதை வினாவாக்கியுரைத்தலும் ஆம். கோடு—மரக்கிளை. கோடுகொண்டு பொரும் அக் குரங்கினால் உயர்படையான் வீடினான் என்றது உறுப்புக்குறை விசேடம் என்னும் அணியின் பாற்படும். (90)

## இராவணன் தனக்குள் சொல்வது

7234. கட்ட திந்திரன் வாழ்வைக் கடைமுறை
பட்ட திங்கொர் குரங்கு படுக்கவென்
றிட்ட வெஞ்சொ லெரியினி லென்செவி
சுட்ட தென்னுடை நெஞ்சையுஞ் சுட்டதால்.

"கட்டது, இந்திரன் வாழ்வை; கடைமுறை
பட்டது, இங்கு ஓர்குரங்கு படுக்க" என்று
இட்ட வெஞ்சொல் எரியினில் என் செவி
சுட்டது; என்னுடை நெஞ்சையும் சுட்டதால்;

பொ :—(இவன் முன்னர்) களைந்து அழித்ததோ இந்திரன் வாழ்வினை; கடைசியில் இறந்து பட்டதோ இங்கு ஒரு எளிய குரங்கு கொன்றதால் என்று (இத் தூதுவர்) சொன்ன வெப்பமான சொல் நெருப்பைப்போல என் காதுகளைச் சுட்டது; என்னுடைய மனத்தையும் சுட்டது.

கு :—தேவர் தலைவனை இந்திரன் வாழ்வினை அடியோடு களைந்து அழித்த பிரகத்தன் இப்போது ஒரு சிறிய குரங்கு கொல்ல இறந்தான் என்பது விபரீதமாக இருத்தலின் அச் சொல்லால் இராவணன் மிக வருந்தினமை புலப்படுத்த இட்ட வெஞ்சொல் எரியினில் என் செவி சுட்டது' என்றான். உருவப்பொருளாகிய செவியைச் சுட்டதோடு நில்லாமல் அருவப் பொருளாகிய என் நெஞ்சையும் சுட்டதால் என உயர்வு சிறப்பும்மை யாக்குக. எரியினில் என்புழி இல் ஒப்புப்பொருளது. இட்ட-வெளியிட்ட-சொன்ன. (91)

**7235.** கருப்பை போற்குரங் கெற்றக் கதிர்சுழல்
பொருப்பை யொப்பவன் தானின்று பொன்றினா
னருப்ப மென்று பகையையு மாரழல்
நெருப்பை யும்மிகழ்ந் தாலது நீதியோ.

' கருப்பை போல் குரங்கு எற்ற, கதிர் சுழல்
பொருப்பை ஒப்பவன் தான் இன்று பொன்றினான்;
அருப்பம் என்று பகையையும், ஆர் அழல்
நெருப்பையும் இகழ்ந்தால் அது நீதியோ ?'

பொ :—எலியைப் போன்ற (சிறிய) குரங்கு தாக்கியதால், சூரியன் வலம் வருகின்ற மேருமலையை ஒப்பவனாகிய, பிரகத்தன் இன்று இறந்துபட்டான்; ஆதலால் பகையையும் அழன்று எரிகின்ற அரிய நெருப்பையும் சிறியது என்று இகழ்ந்திருந்தால் அது நீதி யாகுமோ? ஆகாது.

கு :—கருப்பை-எலி. வரிப்புற வணிவொடு கருப்பையாடாது ... ... ... ... ... ... ஈத்திலை வேய்ந்த எய்ப்புறக் குரம்பை. (பெரும் பாண்-85-88) என்புழியும் இச்சொல் இப்பொருளில் பயின்றுள்ளமை காணலாம். சிறிய குரங்கினால் பெரியவனாகிய பிரகத்தான் இறந்தான் என்ற சிறப்பு நிகழ்ச்சிகொண்டு அருப்பமென்று பகையையும் நெருப்பையும் இகழ்தல் கூடாது என்ற பொதுப்பொருள் நிறுவப் பட்டமையால் இது வேற்றுப் பொருள் வைப்பணி. கதிர்-சூரியன் கதிர்சுழல் பொருப்பு என்றது மேருமலையை. அருப்பம்-அற்பம்-சிறியது ; பகையை அற்பம் என்று இகழ்ந்திருத்தலாகாது என்பார், அதனோடு ஒப்புமையுடைய நெருப்பையும் உடன் கூறினான்; ஒப்புமைக்கூட்டம் என்னும் அணிபற்றி. வினைபகை யொன்றிரண்டி னெச்சம் நினையுங்கால் தீயெச்சம் போலத் தெறும்-(குறள்-674) என்பது இங்கு நினைவு கூரத்தகும். சிறிய குரங்கு என்று இகழ்ந்திருத்தல் இனிகூடாது என்பதை இராவணன் உணர்ந்தமை இதனால் புலப்படும். (92)

**7236.** நிற்க வன்னது நீர்நிறை கண்ணினர்
வற்க மாயின மாப்படை யோடுஞ்சென்
றொற்கம் வந்துத வாம லுறுகென
விற்கொள் வெம்படை வீரரை யேவினன்.

'நிற்க அன்னது, நீர்நிறை கண்ணினர்
வற்க மாயின, மாப்படையோடும் சென்று
ஒற்கம் வந்து உதவாமல் உறுகென
விற்கொள் வெம்படை வீரரை ஏவினன்.

பொ :—(பிரகத்தன் முதலினோர் பட்ட நிகழ்ச்சியாகிய) அது இருக்கட்டும்; நீர்நிறைந்த கண்ணினர்தம் கூட்டமாயின நம் சேனைகளை மேலும் தளர்ச்சி வந்து அடையாமல் (நீங்கள்) சிறந்த படைகளோடும் சென்று அங்கு அடைவீர்களாக' என வில்லைத் தாங்கியுள்ள கொடிய படைவீரர்களை நோக்கிக் கட்டளையிட்டான்.

கு:—உவகைக் கண்ணீரன்றி அவலக் கண்ணீர் அறியாத அரக்கர்கள் இப்போது குரங்குகள்செய்த துன்பத்தால் நீர்நிறைந்த கண்ணினையுடையார் ஆயினரே என்ற இரக்க உணர்ச்சியால் இராவணன் நீர்நிறை கண்ணீனர் வற்கமாயினவற்றை மேலும் ஒற்கம் வந்து உதவாமல் நீவிர் உற்று உதவுக' என வீரரை ஏவினன் என்றவாறு. இதுகாறும் நீர்நிறை கண்ணினர் வற்கமாகத் தேவர்களே இருந்தவர்கள். இது போழ்து அரக்கர்களும் அவர் இயல்பினர் ஆயினர் என்றவாறு அரக்கர்க்கு நீர்நீறை கண்ணின ராதல் இயற்கையன்று. களிக்கின்றாரலால் கவல்கின்ரு ரொருவரைக் காணேன் (சுந்தரகா—ஊர்தேடு-125) என அனுமன் கூறியது ஈண்டைக்கு நினைக்க. வற்கம்-கூட்டம். ஒற்கம் - தளர்ச்சி. வற்கம் ஆயினவற்றை ஒற்கம் வந்து உதவாமல் மாப்படையோடும் சென்று உறுக என இயையும். ஆயின வினைப்பெயர். (93)

52 என்ற எண்ணுள்ள புத்தகத்தில் பின்வரும் மிகைப்பாடல்கள் காட்டப்பட்டுள்ளன.

7236 (a) ஏவி மற்றயல் நின்ற வரக்கரை
தாவில் என்னொரு தேரினைத்தம் மெனக்
கூவ மற்றவர் கொண்டுடன் நண்ணினர்
தேவ ராதியர் நெஞ்சம் திடுக்கென

(b) ஆய் வருஞ் சதகோடி யடல்பரி
மாய் வருந் திரை போல்வரப் பூண்டது
தேய மெங்குந் திரிந்தது திண்டிறல்
சாய இந்திரனே பண்டு தந்தது.

## இராவணன் தேர் ஏறுதல்

**7237.** மண்டு கின்ற செருவின் வழக்கெலாம்
கண்டு நின்று கயிலை யிடந்தவன்
புண்டி றந்தன கண்ணினன் பொங்கினன்
திண்டி றன்னெடுந் தேர்தெரிந் தேறினன்.

மண்டுகின்ற செருவின் வழக்கு எலாம்
கண்டு நின்று, கயிலை இடந்தவன்,
புண் திறந்தன கண்ணினன், பொங்கினன்,
திண் திறல் நெடுந் தேர்தெரிந்து ஏறினன்—

பொ :—கயிலை மலையினைப் பெயர்த்தெடுத்தவனாகிய இராவணன் ஒருவரை ஒருவர் மிக்குச் செய்கின்ற போரின் முறைமை எல்லாவற்றையும் பார்த்து நின்று புண்கள் வாய்திறந்தாற் போன்ற சிவந்த கண்களையுடையவனாய்க் கோபித்து, திண்மையும் திறமையும் உடைய நெடிய தேரினை ஆராய்ந்து கண்டு ஏறினன்.

கு :—மண்டுதல் - மிகுதல். கயிலைமலையைப் பெயர்த்த பெருவலியுடையவனாதலின் வானரங்களோடு போர்செய்யும் அரக்கர் மாயும் தன்மையைக் கண்டு பொருது கண்சிவந்து தானும் போய்ப் போர் செய்யத் தேரில் ஏறினன் இராவணன் என்க. கோபத்தால் சிவந்த கண்கள் இருபதும் புண்கள் வாய் திறந்தாற்போன்ற தோற்றமுடையனவாக இருந்தன என்க. பொங்குதல் சினம் மிகுதல் அரக்கர்படையை வெல்லும் ஆற்றலுடைய வானரப் படையோடு போர்செய்யப் போவதால் தேர்கள் பலவற்றுள் திண்டிறல் நெடுந் தேராக ஆராய்ந்து கண்டு அதில் ஏறலானான். (94)

52 என்ற எண்ணுள்ள புத்தகத்தில் பின்வரும் மிகைப் பாடல் காட்டப்பட்டுள்ளது.

7237 (a) ஏறினனிடத் தோள் துடித் தேயறக்
கூறி னன்குரங் கோடு மனிதரை
நீற தாக்குவெ னென்று நெருப் பெழச்
சீறி னன்சிவன் போலவத் தேரின்மேல்

## தேரின் சிறப்பு

**7238.** ஆயி ரம்பரி பூண்ட ததிர்குரல்
மாயி ருங்கடல் போன்றது வானவர்

தேய மெங்குந் திரிந்தது திண்டிறல்
சாய விந்திர னேபண்டு தந்தது.

ஆயிரம் பரிபூண்டது; அதிர் குரல்
மாயிருங் கடல் போன்றது; வானவர்
தேயம் எங்கும் திரிந்தது; திண்திறல்
சாய இந்திரனே பண்டு தந்தது.

பொ :—(இராவணன் ஏறிய தேர்) ஆயிரம் குதிரைகள் பூட்டப் பெற்றது; அதிர்க்கின்ற ஒலியால் பெரிய கடல் போன்றது; தேவர்கள்தம் விண்ணுலகம் எங்கும் திரிந்த சிறப்பினையுடையது; இந்திரன் போரில் வலிமை குறைந்து தோற்றதால் அவனே முன்பு கொடுத்தது.

கு :—பெருங்கடல்போல் ஒலிக்கின்ற தேர் என்பார் அதிர்குரல் மாயிருங்கடல் போன்றது என்றார். மண்ணில் மட்டுமன்றி விண்ணிலும் திரியும் இயல்பினது என்பார், வானவர் தேயம் எங்கும் திரிந்து என்றார். இந்திரன் தேராதலின் விண்ணில் இயங்குதல் இயல்பே. இராவணனுக்கு இந்திரன் தோற்றபோது தன் தேரை விடுத்துச் சென்றனன் ஆகலின் இந்திரனே பண்டு தந்தது என்றார். திண்டிறல் சாய்தலால் தந்தது என்க. (95)

### நாணொலி செய்தல்

**7239.** ஏற்றி யெண்ணி யிறைஞ்சி யிடக்கையா
லாற்றி னுன்ற னடுசிலை யன்னதின்
மாற்ற மென்னெடு நாணொலி வைத்தலும்
கூற்றி னுரையு மாருயிர் கொள்வதே.

ஏற்றி, எண்ணி இறைஞ்சி, இடக்கையால்
ஆற்றினுன், தன் அடுசிலை அன்னதின்
மாற்றம் என் நெடு நாண் ஒலி வைத்தலும்,
கூற்றினுரையும் ஆருயிர் கொள்வதே.

பொ :— (தன்வழிபடு கடவுளாகிய உருத்திர மூர்த்தியை) வாயால் துதித்து, மனத்தால் நீடு நினைந்து, உடம்பால் வணங்கித் தனது பகைவரைக் கொல்லும் வில்லை இடக்கையால் தாங்கினவனுய் அவ்வில்லின் சொல் என்று சொல்லத்தக்க நீண்ட நாணொலியை யுண்டாக்கலும் அவ்வொலி எமனையும் அரிய உயிரைக் கொள்வது போன்றதாக இருந்தது.

கு :—ஏத்தி என்பது எதுகை நோக்கி ஏற்றி எனத் திரிந்தது ஆற்றுதல் - தாங்குதல். அன்னதின் மாற்றமென்னெடு நாணெலி என்றது தற்குறிப்பேற்றம். நாணெலியே வில் சொல்லும் சொல் எனத்தகும் என்றவாறு. வைத்தல், இங்குச் செய்தலே உணர்த்தியது. நாணெலியின் சிறப்பைப் புலப்படுத்த, 'கூற்றினுரையுமாருயிர் கொள்வதே' என்ருர். எமனது உயிரையும் கொள்ளும் தரத்ததாக இருந்தது என்றவாறு. கூற்றினுரை உயிரை என்புழிச் செயப்படு பொருள் இரண்டுவந்தன. (96)

## இராவணன் போர்க் கோலம்

**7240.** மற்றும் வான்படை வானவர் மார்பிடை
யிற்றி லாதன வெண்ணு மிலாதன
பற்றி ஞன்கவ சம்படர் மார்பிடைச்
சுற்றி ஞனெடுந் தும்பையுஞ் சூடிஞன்.

மற்றும், வான்படை, வானவர் மார்பிடை
இற்றிலாதன, எண்ணும் இலாதன
பற்றினுன்; கவசம் படர் மார்பிடைச்
சுற்றினுன்; நெடுந் தும்பையும் சூடினுன்.

பொ :--மேலும் தேவர்கள் மார்பிடை நுழைந்து ஒடியாதனவும் எண்ணிக்கையற்றனவுமான சிறந்த படைக்கலங்களைக் கையில் கொண்டான்; தனது பரந்த மார்பகத்தில் கவசத்தைப் பூண்டு கொண்டான்; நெடிய தும்பைமாலையையும் சூடிக்கொண்டான்.

கு :—வானவர் மார்பிடை இற்றிலாதன என்றமையால் புதிய படைக்கலங்கள் என்பது புலப்படுத்தியவாறு. மார்பிடைச்சுற்றுதலாவது, பூணுதல். " மைந்து பொருளா வந்த வேந்தனைச் சென்று தலையழிக்கும் சிறப்பிற்றென்ப '' (தொல் – பொருள் 71) என்ற விதிப்படி மைந்து பொருளாக வந்த இராமனை அழிக்க எண்ணி இராவணன் போர்க்குச் செல்கின்ருன் ஆதலின், தும்பை மாலை சூடுவானுனன். (97)

## முத்துக்குடைக்கீழ் கவரிவீச இராவணன் இருத்தல்

**7241.** பேருங் கற்றைக் கவரிப் பெருங்கடல்
நீரு நீர்நுரை யும்மென நின்றவ

னூரும் வெண்மை யுவாமதிக் கீழுயர்
காரு மொத்தனன் முத்தின் கவிகையான்.

பேரும் கற்றைக் கவரிப் பெருங்கடல்
நீரும் நீர் நுரையும் என நின்றவன்,
ஊரும் வெண்மை உவாமதிக் கீழ் உயர்
காரும் ஒத்தனன், முத்தின் கவிகையான்.

பொ :—(இருபுறத்தும்) புரளுகின்ற திரட்சியான வெண் கவரியால் பெரிய கடல் நீரும் அதன்மேல் உள்ள நுரையும் போல நின்றவனுகிய இராவணன், முத்துக்குடை பிடிக்கப்பட்டமையால், வெண்ணிறம் பொருந்திய நிறைமதியின்கீழ் உயர்ந்து விளங்குகின்ற மேகத்தையும் ஒத்துத் தோன்றினுன்.

கு :—இதனுல் இராவணனுக்குச் சாமரை வீசப்பட்டமையும் முத்தவெண்குடை பிடிக்கப்பட்டமையும் கூறியவாறு. பேர்தல் — எழுந்து புரளுதல். இராவணன் கருநிற முடையனுதலின் பெருங் கடல்நீரைப் போன்ருன். அவன் பக்கத்து வீசப்பட்ட வெண்சாமரை அக்கடலின் எழுந்து புரளுகின்ற திரையின் நுரை போன்றன என்றவாறு. முத்த வெண்குடை பூரணச் சந்திரனைப் போன்றது; அக் குடையின்கீழ் அமர்ந்துள்ள இராவணன் மேகத்தை ஒத்து விளங்கினுன் என்க. பண்புவமை. வட்டமும் வெண்மையும் பற்றி முத்துக் குடைக்கு நிறைமதி உவமையாயிற்று. வெண்ணிறமும் புரளுந் தொழிலும் பற்றிக் கடற்றிரையின் நுரை வெண்சாமரைக்கு உவமையாயிற்று. வெண்மையூரும் மதி என இயையும். ஊர்தல் இங்குப் பொருந்துதலை உணர்த்தியது. முன் கடல் போன்று நின்றவன் என உவமிக்கப் பட்டமையால் காரும் ஒத்தனன் என இறந்தது தழுவிய எச்சவும்மை கொடுக்கப்பட்டது. (98)

### முரசு முதலியன முழங்கல்

**7242.** போர்த்த சங்கப் படகம் புடைத்திடச்
சீர்த்த சங்கக் கடலுகத் தேவர்கள்
வேர்த்த சங்க விசும்பு வெடித்திட
வார்த்த சங்க மறைந்த முரசமே.

போர்த்த சங்கப் படகம் புடைத்திட,
சீர்த்த சங்கக் கடல் உக, தேவர்கள்
வேர்த்து அசங்க விசும்பு வெடித்திட
ஆர்த்த சங்கம் அறைந்த முரசமே.

பொ :—சிறப்பு வாய்ந்த சங்குகளையுடைய கடல் சிதறவும், விண்ணிலுள்ள தேவர்கள் உடம்பு வேர்த்து நடுநடுங்கவும், அண்ட முகடு வெடிக்கவும், தோல் போர்த்துச் செய்யப்பெற்ற திரளான படகம் என்னும் போர்ப்பறைகள் அடிக்கப்படா நிற்க, சங்குகள் முழங்கின; முரசங்கள் அடிக்கப்பட்டன.

கு :—பேரொலி கேட்ட கடலும் இடம் பெயர்ந்து நீரைச் சிந்திற்று என்க. சங்குகள் கடலில் வாழ்தலின் சங்கக்கடல் எனக் கடலைச் சிறப்பித்தார். அசங்குதல் - நடுங்குதல். இராவணனுடைய முரச முதலிய வாச்சியங்கள் முழங்கக் கேட்ட தேவர்கட்கு அச்சத்தால் உடலில் வேர்ப்பும் நடுக்கமும் உண்டாயின. இச்செய்யுளில் திரிபு என்னும் சொல்லணி அமைந்திருத்தல் காணலாம். படகம் என்பது ஒருவகைப் போர்ப்பறை. அது தோல் போர்த்துச் செய்யப் பட்டதாதலின் போர்த்த படகம் என்றார். சங்கப் படகம், என்புழிச் சங்கம், படகங்களின் மிகுதியை யுணர்த்தியது; திரள் என்றவாறு. விசும்பு என்றது அண்டத்தின் முகட்டை. (99)

52 என்ற எண்ணுள்ள புத்தகத்தில் கீழ்வரும் மிகைப்பாடல் காணப்பட்டுள்ளது.

7242 (a) அண்ட கோடி அகிலமு மின்றெடே
விண்டு நீங்குறு மென்றுயர் விண்ணவர்
கொண்ட வாகுலத் தால்மனங் கூசியே
புண்ட ரீகன் பதியிடைப் போயினர்.

**7243.** தேரு மாவும் படைஞருந் தெற்றிட
மூரி வன்னெடுந் தானையின் முற்றினன்
நீரொ ரேழு முடிவி னெருக்குநாள்
மேரு மால்வரை யென்ன விளங்கினன்.

தேரும் மாவும் படைஞரும் தெற்றிட
மூரி வல் நெடுந் தானையின் முற்றினன்;
நீர் ஒர் ஏழும் முடிவில் நெருக்கும் நாள்.
மேருமால்வரை என்ன விளங்கினன்.

பொ :—தேர்களும், யானைகளும், குதிரைகளும், காலாட் படை வீரரும் நெருங்கிட நின்ற பெரிய வலிய நெடிய சேனையால் சூழப் பட்டவனாகிய இராவணன், ஊழிமுடிவில் கடல்கள் ஏழும் பொங்கி வந்து நெருக்கும் நாளில் மேருமலை விளங்குவது போல விளங்கினன்.

கு :—மா என்பது யானையையும், குதிரையையும் உணர்த்தியது. நால்வகைப் படையும் நெருங்கிட நின்ற சேனைக் கடலால் சூழப்பட்ட இராவணன் ஏழு கடலால் சூழப்பட்ட மேருமலை போல விளங்கினான் என்க. இதனால் இராவணன் உயர்ச்சியும் அவன் ஏறிய தேரின் உயர்ச்சியும், சேனையின் மிகுதியும் புலப்படுத்தியவாறு. தெற்றுதல் - செறிதல். மூரி - பெருமை. 'மூரிக்கடற்றானை' (பு - வெ – 3, 3.) என்றது காண்க. முற்றுதல் - சூழப்படுதல். தானையின் என்புழி இன் கருவிப் பொருளது. நீர் ஆகுபெயராய்க் கடலை உணர்த்தியது. (100)

## வீணைக்கொடி விண்ணில் பறத்தல்

**7244.** ஏழிசைக் கருவிவீற் றிருந்த தென்னினுஞ்
சூழிருந் திசைகளைத் துடக்கும் தொல்கொடி
வாழிய வுலகெலாம் வளைந்து வாயிடு
மூழியி னந்தக னாவி னோங்கவே.

ஏழ் இசைக் கருவி வீற்றிருந்தது என்னினும்
சூழ் இருந் திசைகளைத் துடக்கும் தொல்கொடி
வாழிய உலகு எலாம் வளைந்து வாய் இடும்
ஊழியின் அந்தகன் நாவின், ஓங்கவே.

பொ :—பூமியைச் சூழ்ந்துள்ள பெரிய திசைகளையெல்லாம் தன்னகப் படுத்திப் பறக்கின்ற பழமையான (இராவணனது) கொடி, உயிர்களுக்கு இன்பம் செய்யும் எழிசைக் கருவியாகிய வீணை வீற்றிருக்கப் பெற்றதாயினும், வாழ்தற்குரிய உலகமுழுவதையும் வளைந்து சென்று (உயிர்களை) வாயில் இடுகின்ற ஊழிக் காலத்து எமனுடைய நாவினைப் போல (அச்சத்தை விளைத்து) உயர்ந்து தோன்றவும்.

கு :—இதுமுதல் ஆறு கவிகள் ஒரு தொடர். உயிர்களுக்கு இன்பத்தை விளைக்க வேண்டிய வீணை, இராவணன் கொடியில் இருந்து அச்சத்தை விளைத்தலின் 'ஏழிசைக் கருவி வீற்றிருந்த தென்னினும் அந்தகன் நாவின் ஓங்கவே' என்றார். ஏழிசைகளை யெழுப்பதற்கு உரிய கருவி யாதலின் வீணை, ஏழிசைக் கருவி எனப்பட்டது. வீணைக் கொடி கட்டிய தேரினை யுடையனாய இராவணன் உலகெலாந்திரிந்து எல்லாரையும் அச்சுறுத்தி வென்றானாகலின் அக்கொடிக்கு ஊழிக் காலத்து அந்தகன் நாக்கு உவமையாயது. உடையவன் கொடுமையை உடைமையாகிய கொடிக்கும் ஏற்றிக் கூறப்பட்டது. திசைகளைக் கொடி துடக்குதலாவது, திசையெலாம் பறந்து

அவற்றைத் தன்னகப் படுத்தல். துடக்குதல் - தன்னகப்படுத்தல்; வளைத்தல். "தூண்டி விரையிற்றுடக்குள்ளுறுத்து" (பெருங்கதை—உஞ்சைக் 35, 108) என்புழியும் துடக்குதல் இப்பொருளதாதல் காண்க. கொடி இசைக்கருவி வீற்றிருந்த தெனினும் அந்தகன் நாவின் ஓங்க என இயையும். வாழிய உலகு - வாழ்ச்சி பெறுதற்குரிய உலகு; வாழிய அசை எனலும் ஆம். ஊழிக் காலத்து அந்தகன் நாக்கு உலகெலாம் வளைந்து சென்று அங்குள்ள உயிர்களை வாயின் கண் சேர்க்கும் இயல்பினது; அதுபோல இராவணனது வீணைக் கொடியும் திசையெலாம் வளைந்து அங்குள்ளாரையெலாம் அச்சுறுத்தும் இயல்பினது என்க. கயிலை மலையினை யெடுத்த ஞான்று சிவபிரான்விரலால் ஊன்றிய அளவில் மலைக்கீழ் அகப்பட்டு அழிய இருந்த நிலையை மாற்றி நாளும் வாளும் கொடுப்பித்தது வீணையே யாகலின் அதன் சிறப்புணர்ந்து இராவணன் தன் கொடியில் அவ் வீணையை யெழுதிக் கொண்டான் என்க. " எடுத்தன னெழிற்கயிலை இலங்கையர் மன்னன றன்னை, அடுத்தொரு விரலால் ஊன்ற அலறிப்போய் அவனும் வீழ்ந்து, விடுத்தனன் கைநரம்பால் வேத கீதங்கள் பாடக் கொடுத்தனர் கொற்றவாளுள் குறுக்கை வீரட்டனுரே " (தேவராம், 4-49-10) என நாவுக்கரசர் நவின்றிருத்தல் காணலாம். தன் இசைப்புலமை தோன்ற வீணைக் கொடியை உயர்த்தினன் எனலும் ஆம். (101)

## தேவர்கள் கலங்குதல்

**7245.** வேணுயர் நெடுவரை யரக்கர் வேலைக்கோர்
தோணிபெற் றனரது கடக்கும் தொல்செருக்
காணிய வந்தவர் கலக்கங் கைம்மிகச்
சேணுயர் விசும்பிடை யமரர் சிந்தவே.

வேணு உயர் நெடுவரை அரக்கர் வேலைக்கு ஓர்
தோணி பெற்றனர், அது கடக்கும் தொல்செருக்
காணிய வந்தவர், கலக்கம் கைம்மிகச்
சேணுயர் விசும்பிடை, அமரர், சிந்தவே.

பொ :—மூங்கில் உயர்ந்து வளர்ந்துள்ள நெடிய மலைபோன்ற அரக்கர்களாகிய கடலைக் கடப்பதற்கு (இராமனாகிய) ஒரு தோணியைப் பெற்றனராய், அத்தோணி கடக்கப்போகும் பழையதாகிய இலங்கைப் போர்க்களத்தைக் காணவந்தவர்களாகிய தேவர்கள், (இராவணன் வருகையால்) கலக்கம் அதிகமானதால் மிக உயர்ந்த ஆகாயத்திடையே சிதறி ஓடாநிற்க.

கு :—வேணு - மூங்கில். பேருடம்பினையுடைய அரக்கர்க்கு நெடுவரை தோற்றத்தால் உவமை ஆயிற்று. வேணுயர் நெடுவரை என உவமைக்கு அடை கொடுத்ததற்கு ஏற்பப் பொருளின் கண்ணும் பருமயிர் நிறைந்த உடம்பினையுடைய அரக்கர் என வருவித்துரைத்தலும் ஆம். அரக்கர் வேலை என்ற உருவகத்திற்கேற்ப இராமனாகிய தோணி என்ற உருவகம் உய்த்துணர்ச்சியால் கொள்ளப்பட்டது. கடலைக் கடத்தல் அரக்கரை வெல்லுதல் என்ற இரு தொழிலுக்கும் ஏற்பக் 'கடக்கும்' என்ற சொல் பொதுவாக அமைந்திருத்தல் காணலாம். "அரக்கரென் கடலிடை யாழ்கின்றுளொரு, மரக்கலம் பெற்றென மறுக்கம் நீங்கினார்'' (ஆரணிய-அகத்தியப். 6) என்றது இங்கு ஒப்புநோக்கத்தகும். தாம் பெற்ற இராமனாகிய தோணி அரக்கராகிய கடலைக் கடக்கப்போகும் போர்க்களத்தைக் காண மகிழ்ச்சியுடன் சென்ற தேவர்கள் இராவணன் வருகையைக் கண்டவுடன் அஞ்சித் துன்பத்துடன் சிதறி ஓடுவாராயினர் என்க. செரு என்றது போரினை. இராமனாகிய தோணி அரக்கராகிய கடலைக் கடத்தற்குரிய இடம் போரேயாதல் நினைக. வினை இடமாயிற்று. இராமனாகிய தோணியால் அரக்கராகிய கடலைக் கடந்து விடுவோம் என்ற உறுதியையுடைய அமரரும் இராவணன் வருகையை அறிந்தவுடன் அஞ்சிச் சிதறி ஓடினர் என்றதால் அவ்விராவணனது ஆற்றலைப் புலப்படுத்தியவாறு. (102)

### இராவணன் கண்ணில் தோன்றிய புகையின் சிறப்பு

**7246.** கண்ணுறு கரும்புகை கதுவக் கார் நிறத்
தண்ணல்வா ளரக்கர்த மரத்தப் பங்கிகள்
வெண்ணிறங் கோடலி னுருவின் வேற்றுமை
நண்ணினர் நோக்கவு மயிர்ப்பு நல்கவே.

கண் உறு கரும்புகை கதுவ, கார் நிறத்து
அண்ணல் வாள் அரக்கர்தம் அரத்தப் பங்கிகள்
வெண் நிறம் கோடலின் உருவின் வேற்றுமை
நண்ணினர் நோக்கவும் அயிர்ப்பு நல்கவே.

பொ :—(தன்னுடைய இருபது) கண்களிலும் உண்டான கருமையான கோபப்புகை சென்று படிதலால், கார்போன்ற நிறத்தையுடைய பெருமையுள்ள வாளேந்திய அரக்கருடைய சிவந்த குடுமிகள் வெண்ணிறத்தைப் பெற்றமையால் அவர்கள் உருவினது வேறுபாடு அவர்தம் உறவினர் நோக்கும்போதும் ஐயத்தை உண்டாக்கவும்.

கு :—இராவணனுடைய கண்களில் எழுந்த கோபப்புகை படித லால், சேனையில் உள்ள அரக்கர்தம் சிவந்த குடுமிகளில் வெண் ணிறம் உண்டாகி அவ்வரக்கர்தம் உருவில் வேற்றுமை தோற்று விக்கவே அவர் உறவினர்க்கும் ஐயத்தை உண்டாக்கிவிட்டது என்க. இராவணன் கண்களில் எழுந்த கோபப்புகை அரக்கரையே ஐயுறு மாறு செய்துவிட்டது என்றமையால் அப்புகையின் மிகுதி புலப்படுத் தியவாறு. கார் நிறத்து அரக்கர், வாளரக்கர் என இயையும். அண்ணல் - பெருமை; வாளுக்கு அடை. கதுவுதல் - படிதல். அரத்தம் - சிவப்பு. பங்கி - மயிர்க்குடுமி. (103)

## கொடிகள்

**7247.** கானெடுந் தேருயர் கதலி யுங்கரத்
தேனைய ரேந்திய பதாகை யீட்டமு
மானையின் கொடிகளு மளவித் தோய்தலால்
வானயா றெடுமழை யொற்றி வற்றவே.

கால் நெடுந் தேர் உயர் கதலியும், கரத்து
ஏனையர் ஏந்திய பதாகை ஈட்டமும்
ஆனையின் கொடிகளும், அளவித் தோய்தலால்
வான யாறொடு மழை ஒற்றி வற்றவே

பொ :—சக்கரங்களையுடைய தேரில் உயர்த்திக் கட்டிய வாழை மரங்களும், காலாள் வீரரும் குதிரை வீரரும் கையில் ஏந்திய பெருங் கொடிகளின் கூட்டமும், யானைமேல் கட்டியுள்ள கொடிகளும், கலந்து தோய்ந்தமையால் ஆகாய கங்கையும் மேகமும் அவற்றால் ஒற்றப் பெற்று நீர் வற்றவும்,

கு :—இதனால், இராவணனுடன் வந்த சேனையில் தேர்களில் கட்டிய வாழை மரங்களின் உயர்ச்சியும் கொடிகளின் உயர்ச்சியும் பன்மையும் புலப்படுத்தியவாறு. வாழை மரங்களும் கொடிகளும், ஆகாய கங்கையும் மேகங்களும் உள்ள இடம் வரையில் உயர்ந் திருந்தன என்பதும், அவ்வானயாறும் மேகமும் தம்பாலுள்ள நீர் வற்றும் அளவு அக்கொடிகள் பலவாக இருந்தன என்பதும் புல னாதல் காண்க. ஏனையர் என்றது, நால்வகைப் படையில் மேற் கூறிய தேர்ப்படையும் பின்கூறிய யானைப்படையும் ஒழித்து எஞ்சி நின்ற குதிரைப் படையினரையும் காலாட் படையினரையும் ஆம். பதாகை - பெருங்கொடி. (104

## சேமத் தேர்

**7248.** ஆயிரங் கோடிபே யங்கை யாயுதந்
தூயன சுமந்துபின் றொடரச் சுற்றொளிர்
சேயிரு மணிநெடுஞ் சேமத் தேர்தெரிந்
தேயின வாயிரத் திரட்டி யெய்தவே.

ஆயிரம் கோடி பேய் அங்கை ஆயுதம்
தூயன சுமந்து, பின்தொடர, சுற்று ஒளிர்
சேயிரு மணி நெடுஞ் சேமத் தேர் தெரிந்து
ஏயின ஆயிரத்து இரட்டி எய்தவே;

பொ :—ஆயிரங்கோடி பேய்கள், அகங்கையில் தூயனவாகிய ஆயுதங்களைச் சுமந்துகொண்டு பின்வர, சுற்றிலும் ஒளிவீசுகின்ற சிவந்த பெரிய மணிகள் பதித்த நெடிய சேமத் தேர்கள், ஆராய்ந்து எடுத்து (உடன் அனுப்புமாறு) கட்டளையிடப்பட்டனவாய் இரண்டாயிரம் என்ற தொகையுடையவை (உடன்) வரவும்.

கு :—சேமப் படைக்கலங்களை ஆயிரங்கோடி பேய்கள் சுமந்து பின்வர, இரண்டாயிரம் சேமத் தேர்கள் உடன் வந்தமை இதனல் கூறினர். அகங்கை என்பது இடைகெட்டு அங்கை என ஆயிற்று. தூயன என்றது முன்னைப் போர்களில் வழங்காத தூய்மையுடைய ஆயுதங்களை. 'வான்படை வானவர் மார்பிடை, இற்றிலாதன' (97) என முன் கூறியிருத்தலும் நினைக. இராவணன் கையில் உள்ள ஆயுதங்கள் வழங்கி முடியின், பின் வழங்கும் பொருட்டுப் புதிய ஆயுதங்களைப் பேய்கள் தாங்கிச் சென்றன. அவன் ஏறியுள்ள தேர் அழியின் மீண்டும் ஏறிப் போர் செய்தற்காக இருப்பில் வைக்கும் தேரே சேமத்தேர் எனப்படும். ஆயிரத்திரட்டி - இரண்டாயிரம். தெரிந்து ஏயின சேமத்தேர் ஆயிரத்திரட்டி யெய்த என இயைத்தலும் ஆம். (105)

52ல் பின்வரும் பாடல் மிகைப் பாடலாகக் காட்டப்பட்டுள்ளது.

7248. (a) வெள்ளமாங் களப்பில வெள்ளம் வாம்பரி
கொள்ளையா ரதன்கணக் கறிந்து கூறுவார்
உள்ளமாய்ந் தோதிரு நூறு வெள்ளமாம்
கள்ளவா ளரக்கர்கள் கடலிற் சூழவே.

## இராவணன் போர்க்களத்தில் தோன்றுதல்

**7249.** ஊன்றிய பெரும்படை யுலைய வுற்றுட
ஞன்றபோ ரரக்கர்க ணெருங்கி யார்த்தெழத்
தோன்றின னுலகெனத் தொடர்ந்து நின்றன
மூன்றையுங் கடந்தொரு வெற்றி முற்றினன்.

ஊன்றிய பெரும்படை உலைய, உற்று உடன்
ஆன்ற போர் அரக்கர்கள் நெருங்கி ஆர்த்து எழ,
தோன்றினன்—உலகு எனத் தொடர்ந்து நின்றன
மூன்றையும் கடந்து ஒரு வெற்றி முற்றினன்.

பொ :—எதிர் ஊன்றியுள்ள வானரப் பெரும்படை அஞ்சி வருந்தவும், தன்னுடன் பொருந்தி அமைந்த போரில் வல்ல அரக்கர்கள் நெருங்கி மகிழ்ச்சியால் ஆரவாரித்துக் கிளர்ச்சி கொள்ளவும், உலகு எனப்பட்டு ஒன்றன்மேல் ஒன்ருய்த் தொடர்ந்து நின்றனவாகிய பாதலம், பூதலம், மீதலம் என்கின்ற மூன்றையும் வென்று ஒப்பற்ற வெற்றி முற்றிலும் பெற்றவனாகிய இராவணன் வந்து (போர்க்களத்தில்) தோன்றினன்.

கு :—இலங்கையில் வந்து ஊன்றிய படை வானரப் படையாதலின் அதனை 'ஊன்றிய பெரும்படை' என்ருர். இராவணனைக் கண்டவுடன் வானரப்படை அச்சத்தால் வருந்தியது; அரக்கர்படை மகிழ்ச்சியால் கிளர்ந்து ஆரவாரித்தது. பாதலம் முதலிய உலகங்கள் ஒன்றன்மேல் ஒன்ருய் அடுக்கி நிற்பன ஆதலின், 'தொடர்ந்து நின்றன மூன்றையும்' என்ருர். கடந்து - வென்று. யாரும் பெருத வெற்றியாதலின் 'ஒரு வெற்றி' எனவும் அவ் வெற்றிக்கு வரம்பாகத் திகழ்ந்தானுதலின் 'வெற்றி முற்றினன்' எனவும் கூறினர் முற்றுதல் - நிறைதல்; முற்றினன் வினைப்பெயர். முற்றினன் தோன்றினன் என இயையும். கொடி ஓங்க, அமரர் சிந்த, புகை, நோக்கவும் அயிர்ப்பு நல்க, வானயாரெடு மழை ஒற்றிவற்ற, ஆயிரங் கோடி பேய் தொடர, சேமத்தேர் ஆயிரத்திரட்டி எய்த, ஊன்றிய பெரும்படை உலைய, அரக்கர் நெருங்கி ஆர்த்தெழ, வெற்றி முற்றினவனை இராவணன் தோன்றினன், என மேல் ஐந்து செய்யுளிலும் வந்த எச்சங்களையும் இச் செய்யுளில் வந்த எச்சங்களையும் முடித்தல் வேண்டும். இந்த ஆறு செய்யுட்களும் குளகமாய்த் 'தோன்றினன்' என்ற ஒரு வினை கொண்டு முடிந்தன. (106)

## இராவணன் வந்ததை இராமனுக்கு ஒற்றர் அறிவித்தல்

**7250.** ஓதுறு கருங்கடற் கொத்த தானையான்
தீதுறு சிறுதொழி லரக்கன் சீற்றத்தான்
போதுறு பெருங்களம் புகுந்து ளானெனத்
தூதுவர் நாயகற் கறியச் சொல்லினர்.

ஓதுறு கருங்கடற்கு ஒத்த தானையான்,
தீதுஉறு சிறுதொழில் அரக்கன், சீற்றத்தால்
போதுறு பெருங்களம் புகுந்துளான் எனத்
தூதுவர் நாயகற்கு அறியச் சொல்லினர்.

பொ :—'தீமை பொருந்திய இழிதொழிலைப் புரியும் இராவணன், ஒலிக்கின்ற கரிய கடலை ஒத்த பெரிய சேனையை யுடையவனாய், சீற்றமுடையவனாய், (நாம்) வந்துள்ள பெரிய போர்க்களத்தில் புகுந்திருக்கின்றான்' என்று ஒற்றர்கள் இராமனுக்குத் தெரியும்படி சொன்னார்கள்.

கு :—ஓதுதல் இங்கு ஒலித்தலை உணர்த்தியது. கருங்கடற்கு ஒத்ததானை என்று அரக்கர் தானைக்கு உவமை கூறியது, கரிய நிறமும் விரிவும் பற்றி. கடலை ஒத்த என்பது கடற்கு ஒத்த என உருபு மயக்கமாக வந்தது. பகை பாவம் அச்சம் பழியென்ற நான்கையும் தருகின்ற பிறர்மனை நயத்தலை மேற்கொண்டவன் இராவணன் ஆதலின் 'தீதுறு சிறுதொழிலரக்கன்' என்றும், அத்தீயவன் பெயரைக் கூறுதற்கும் கூசினவர்களாய் இராவணன் என்னாது 'அரக்கன்' என்றும் ஒற்றர்கள் குறிப்பிடுவாராயினர். போர் செய்யும் நோக்கத்தோடு முன்னே புகுந்தது இராமன் சேனையே யாகலின் 'போதுறு பெருங்களம்' என்றனர். நாம் போதுறு என ஒருசொல் வருவிக்க. தூதுவர் என்றது ஒற்றரை. நாயகன் என்றது இராமனை. (107)

## அதுகேட்டு இராமன் தோள் பூரித்தல்

**7251.** ஆங்கவ னமர்த்தொழிற் கணுகி னானென
வாங்கினன் சீதையை யென்னும் வன்மையால்
தீங்குறு பிரிவினாற் றேய்ந்த தேய்வற
வீங்கின விராகவன் வீரத் தோள்களே.

ஆங்கு அவன் அமர்த் தொழிற்கு அணுகினான் என
'வாங்கினன் சீதையை' என்னும், வன்மையால்,

தீங்குறு பிரிவினல் தேய்ந்த தேய்வு அற
வீங்கின இராகவன் வீரத் தோள்களே.

பொ :—'அப் போர்க்களத்திற்கு அவ்விராவணன் அமர் செய்வ தற்காக வந்திருக்கின்ருன்' என்று ஒற்றர் கூறியவுடன் 'சீதையைப் பெற்றுவிட்டேன்' என்னும் உறுதியான எண்ணத்தால், (இது காறும்) துன்பம் பொருந்திய பிரிவினல் மெலிந்த மெலிவு நீங்க, இராமனுடைய வீரத் தோள்கள் (மகிழ்ச்சியால்) பருத்தன.

கு :—ஆங்கு என்றது அப் போர்க்களத்தை. அவன் என்றது இராவணனை. இதுகாறும் கொல்லுதற்கு எதிர்பார்க்கப் பெற்றவன் இராவணன் ஆதலின் அவனை நெஞ்சறி சுட்டால் 'அவன்' என்ருர். ஆங்கு அணுகினுன் என்பதினும், அமர்த்தொழிற்கு அணுகினுன் என்றதே இராமன் தோள்கள் வீங்குதற்கு ஏதுவாயிற்று. இராவணன் அமர்த்தொழிற்கு வந்தபின் அவனை வெல்லுதலும் சீதையைப் பெறுதலும் தப்பா என்ற கருத்தால் "வாங்கினன் சீதையை யென்னும் வன்மையான்" என்ருர். வாங்கினன் என்புழி அன் தன்மைக்கண் வந்தது. வன்மை - உறுதி. தீங்கு – துன்பம். வன்மையால் வீங்கின என இயையும். தேய்தல் - மெலிதல். வீங்குதல் - பருத்தல். தேய்தற்குக் காரணம் சீதையின் பிரிவு; வீங்குதற்குக் காரணம் சீதையைப் பெறப் போகின்ருேம் என்ற மகிழ்ச்சி. இராவணன் அமர்த்தொழிற்கு அணுகினுன் என்றவுடன் அவனை வெல்லப் போகின்ருேம் என்பதால் இராமன் தோள்கள் பூரித்தன என்னது, 'வாங்கினன் சீதையை யென்னும் வன்மையால் வீங்கின' என்றது, சீதையைப் பெறுதலாகிய காரியத்தைக் கூறவே இராவணனை வெல்லுதலாகிய காரணம் பெறப்படும் என்ற முறைமை பற்றி என்க. இராவணனை வெல்லாமல் சீதையைப் பெறுதல் கூடாமை யுணர்க. போர் கிடைத்தால் வீரர் தோள் வீங்கும் என்பதை "பொலிந்த தாங்குமிகு போரென லோடும் மலிந்த நங்கை யெழிலால் வலிநாளும், மெலிந்த தோள்கள் வட மேருவின்மேலும் வலிந்து செல்ல மிசைச் செல்லு மனத்தான்" (இராவணன் வானரத்தானை காண் - 2) என்றதாலும் அறியலாம். சீதையைப் பெறுதல் கருத்தேயன்றி இராவணனைக் கொல்லுதல் இராமனுக்குக் கருத்தன்று என்பதும் இதனல் புலப்படுத்தி அவன் அருள் உள்ளத்தை விளக்கியவாறுமாம். (108)

## இராமன் போர்க் கோலம்

**7252.** தொடையுறு வற்கலை யாடை சுற்றிமேல்
புடையுறு வயிரவாள் பொலிய வீக்கினான்
இடையுறு கருமத்தி னெல்லை கண்டவர்
கடையுறு நோக்கினிற் காணுங் காட்சியான்.

தொடையுறு வற்கலை ஆடை சுற்றி, மேல்
புடை உறு வயிரவாள் பொலிய வீக்கினான்—
இடை உறு கருமத்தின் எல்லை கண்டவர்
கடை உறு நோக்கினின் காணும் காட்சியான்

பொ :—(பரம்பொருளை யடைதற்குத்) தடையாகப் பொருந்தியுள்ள இருவினையின் நின்றும் நீங்கினவராகிய ஞானிகள், இறுதியாகப் பொருந்திய ஞானக்கண்ணால் காணும் காட்சிப்பொருளாகவுள்ள (பரம்பொருளின் அவதாரமாகிய) இராமன், தொடுத்தல் அமைந்த மரவுரியாகிய ஆடையை இடையில் சுற்றிக்கொண்டு அதற்குமேல், பக்கத்தில் செருகுதற்குரிய வயிரம்போன்ற உறுதியுள்ள வாளை விளக்கம் பெறக்கட்டிக்கொண்டான்.

கு :—இருவினைகளும் இறைவனை அடைதற்குத் தடையாக இடைநிற்றல்பற்றி 'இடையுறு கருமம்' என்றார், இடை - தடை, கருமம் என்றது நல்வினை தீவினை ஆகிய இரண்டையும். கருமத்தின் எல்லை காணுதலாவது வேண்டுதல் வேண்டாமை இலராதல்; இருவினைகளினின்றும் நீங்கினவர் என்றவாறு. இறைவனை அடைதற்குரிய நெறிகளாகிய சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கில் ஞானம் கடைசியாக எண்ணப்படுதலின் ஞானக் கண்ணினைக் கடையுறு நோக்கு, என்றார். வினையினீங்கி விளங்கிய அறிவினராகிய ஞானிகள் ஞானக் கண்ணால் மட்டுமே காண்பதற்குரியனாகிய பரம்பொருள் இப்போது யாவரும் ஊனக் கண்ணாலும் காண்பதற்குரியனாய்ப் போர்க்கோலம் கொள்ளலானானே என்று இரங்கிக் கூறியவாறு. வற்கலை - மரவுரி. மரப்பட்டையைக் கொண்டு ஆடையாகத் தொடுத்தமைத்தமை தோன்றத் 'தொடையுறுவற்கலை' என்றார். வற்கலையாகிய ஆடை என இருபெயரொட்டாக்குக. வயிற்றின் பக்கத்தில் செருகுதற்குரியவாள் என்பார், புடையுறு வயிரவாள் என்றார். வாளின் உறுதியைப் புலப்படுத்த வயிரவாள் என்றார். உவமைத் தொகை. இயல்பாகவே பொலிவுடைய வாள் இராமனது இடையழகால் மேலும் பொலிவு பெற்றமை புலப்படுத்த, வாள் பொலிய வீக்கினான், என்றார். வீக்குதல் - கட்டுதல். (109)

### காலில் கழல் கட்டியது

7153. ஒத்துறு சிறுகுறட் பாத முற்றநாள்
வித்தக வருமறை யுவகை மிக்குமேல்
பத்துள விரல்புடை பரந்த பண்பெனச்
சித்திரச் சேவடிக் கழலுஞ் சேர்த்தினுன்.

ஒத்து உறு சிறு குறட் பாதம் உற்றநாள்
வித்தக அருமறை உவகை மிக்கு மேல்
பத்துள விரல் புடை பரந்த பண்பு எனச்
சித்திரச் சேவடிக் கழலும் சேர்த்தினுன்

பொ:—(வேறு உவமையின்மையின் தனக்குத்தானே) ஒப்பாகிப் பொருந்தியுள்ள சிறிய குறளனது (வாமனனது) திருவடி (உலகை அளக்குங்கால்) தன்னை நோக்கி வந்த போது, ஞானத்தைப் புகலுகின்ற அரிய வேதமாகிய புருடன் மகிழ்ச்சி மேலிட்டு அத் திருவடியின்மேல், பத்தாகவுள்ள தன் கைவிரல்களைப் பரப்பிப் பிடிக்க அவ் விரல்கள் அத் திருவடியின் மேல் பரவியிருந்த தன்மை போல விளங்குமாறு (இராமன் தன்) சிவந்த திருவடியில் சித்திரத் தொழில் அமைந்த வீரக்கழலையும் கட்டினுன்.

கு:—இராமன் திருவடியிலணிந்த வீரக்கழலின் ஒலி வேத ஒலி போன்றது என்ற குறிப்புப் புலப்பட அக்கழலுக்கு வேத புருடனது விரல்களை உவமை கூறியவாறு. ஒத்துறுபாதம் என இயையும் அத் திருவடிக்கு உவமையாதற்குரிய பொருள் உலகில் பிறிதின்மையின் அதற்கு அதுவே உவமை என்பார், ''ஒத்துறு பாதம்' என்ருர். இரண்டே அடி உயரமுள்ள குறள்வடிவின் சிறுமை தோன்ற, 'சிறுகுறள்' என்ருர். திருமால் குறளனுய்ச் சென்று மாவலிபால் மண் வேண்டிப் பெற்ற பின் அக் குறளனே நெடியனுய் வளர்ந்து மூவுலகு மீரடியால் அளந்தானுகலின் விக்கிரம அவதாரத்தின் பாதத்தை வாமனன் பாதமாக ஒற்றுமை நயத்தாற் கூறினுர். விண்ணுலகையளந்த பாதம் பிரமன் உலகில் சென்ற போது வேதம் வழிபட்டதை யுணர்த்துகின்ருராதலின் 'பாதம் உற்றநாள், என்ருர், பாதம் பிரமன் உலகத்தை உற்றபோது என்பதுபொருள். வித்தகம் - ஞானம். ஞானத்தை உணர்த்தும் சிறப்பியல்புடைமையின் வேதம் வித்தக அருமறை எனப்பட்டது. மறையென்றது வேத புருடனை; விரல்புடைபரந்த பண்பென என்றமையால் இக் குறிப்புருவகம் புலப்படுத்தப்படுவது காண்க. விண்ணுலகை அளக்க விக்கிரமன் திருவடியை யுயர்த்தியபோது பிரமன் கமண்டல நீர்கொண்டு பூசித்தது போலவே வேத புருடனும்

தன் இரு கைகளால் அத் திருவடியைப்பற்றிப் பத்தியோடு வணங்கினன் என்பது புலப்படுத்தியவாறு. அவன் கைவிரல்கள் பத்தும் அவ் விக்கிரமன் பாதத்தின்மேல் சுற்றித் தோன்றியதுபோல இராமன் திருவடிமேல் வீரக்கழல் விளங்கிற்று என்றவாறு. வித்தக அருமறை உவகை மிக்கு அத் திருவடிமேல் தன் கைவிரலைப் பரப்பிப் பற்ற, அப்பத்துள விரல்கள் புடைபரந்த பண்பென என வேண்டுஞ் சொற்களை இசையெச்சமாக வருவித்து முடிக்க. திருமாலின் திருவடிகளைப் பின்பற்றி வேதம் சென்றுமுழங்கும் இயல்பினது ஆதலின் இராமன் திருவடிமேலும் கழலாக இருந்து ஒலிப்பதற்கு ஏற்புடையதாதல் காண்க. நூற்றுவர்பால் நாற்றிசையும் போற்றப் படர்ந்தாரண முழங்கப் பஞ்சவர்க்குத் தூது நடந்தானை. (சிலப்-ஆய்ச்சியர் - 37) என்றது இங்கு நோக்கத்தகும். இறைவனுக்கு வேதம் காற்சிலம்பாகத் திகழ்வதும் உண்டு என்பதை "வையகம் பொலிய மறைச் சிலம் பார்ப்ப மன்றுளே மாலயன் தேட ஐயர்தாம் வெளியே யாடுகின்றாரை" (பெரியபு - தடுத்தாட்கொண்ட. 105) என்பதால் அறியலாம். கழலின் வேலைப்பாடு புலப்படச் சித்திரக் கழல் என்றார். சித்திரக்கழல் எனக் கழலுக்கு அடையாக்குக. (110)

## மார்பில் கவசமணிந்தது

**7254.** பூவியல் மீனெலாம் பூத்த வானிகர்
மேவிருங் கவசமிட் டிறுக்கி வீக்கினன்
தேவியைத் திருமறு மார்பிற் றீர்தலால்
நோவில ளென்பது நோக்கி னன்கொலோ.

பூ இயல் மீன் எலாம் பூத்த வான் நிகர்
மேவுஇரும் கவசம் இட்டு இறுக்கி வீக்கினன்
தேவியைத் திருமறு மார்பில் தீர்தலால்
நோவுஇலள் என்பது நோக்கினன் கொலோ

பொ :—பொலியும் இயல்புடைய நாண்மீன்கள் எல்லாம் தோன்றிய வானத்திற்கு ஒப்பாகும் (மணிகள் பதித்த) பெரிய கவசத்தை (இராமன்) மார்பில் பூண்டு இறுக்கிக் கட்டினன்; திரு வென்னும் மறுவினையுடைய தன் மார்பிலிருந்த சீதேவியைப் பிரிந்திருத்தலால் அத் தேவி இக் கவசத்தை இறுக்கிக்கட்டுவதால் நோவு அடையமாட்டாள் என்பதை நினைத்தான் போலும்.

கு :—பூ - பொலிவு. மணிகள் பதித்த கவசத்திற்கு மீன்பூத்த வானம் உவமை. பூத்தல் - தோன்றுதல். வானிகர்மேவு இருங்

கவசம் - வானுக்கு ஒப்பாகும் பெரிய கவசம். திருமகளை மார்பில் கொண்டிருந்தபோது இவ்வாறு இறுக்கிக் கட்டினால் அவள் நோவள் என்பதறிந்து கட்டாமல் விடுவான் என்பது குறிப்பு. தேவியை மார்பிற்றீர்தலால் அவள் நோவிலள் என்பதை நினைந்தே துணிந்து இங்ஙனம் இறுக வீக்கினன் என்றவாறு. நோக்குதல் – மனத்தால் நோக்குதல் - நினைதல். திருமாலின் மார்பில் திரு என்ற மறு - (மச்சம்) உண்டு. மார்பில் நின்றும் தேவியைத் தீர்தலால் நோவிலள் என இயையும். இராமனாக அவதரித்த போது சீதேவி மார்பில் இல்லையாதலின் இங்ஙனம் கூறினர். சீதேவி சீதையாகப் பிறந்து இராமனை மணந்து இப்போது இலங்கையில் பிரிந்திருப்பதும் நினைக. (111)

## முன்கையில் உறையணிந்தது

**7255.** நற்புறக் கோதைதன் னளினச் செங்கையில்
நிற்புறச் சுற்றிய காட்சி நேமியான்
கற்பகக் கொம்பினைக் கரிய மாசுணம்
பொற்புறத் தழுவிய தன்மை போன்றதால்.

நல்புறக் கோதை, தன் நளினச் செங்கையில்
நிற்புறச் சுற்றிய காட்சி, நேமியான்—
கற்பகக் கொம்பினைக் கரிய மாசுணம்
பொற்புறத் தழுவிய தன்மை போன்றதால்.

பொ:—சக்கரப்படையையுடைய திருமாலின் அமிசமான இராமன் நல்ல புறத் தோற்றத்தையுடைய கையுறையைத் தன் தாமரை மலர்போன்ற சிவந்த கையில் நிற்குமாறு சுற்றிக்கட்டிய காட்சி கற்பக மரத்தின் கிளையைக் கருமையான பாம்பு அழகுறத் தழுவியிருந்த தன்மை போன்றிருந்தது.

கு :—கோதை - உடும்பின் தோலால் செய்து முன்கையில் அணியும் உறை. அவ்வுறையின் புறம் அழகாக இருந்தது என்பார், 'நற்புறக்கோதை' எனச் சிறப்பித்தார். நேமியான் - திருமால். இங்கு அவன் அமிசமாக வந்துள்ள இராமனைக் குறித்தது. நேமியையுடைவன் ஆதலின் திருமால் அப்பெயர் பெற்றான். நேமியான் சுற்றிய காட்சி என இயையும். இராமனது முன்கைக்குக் கற்பகத்தின் பூங்கொம்பு உவமை; அவன் கையில் செறிந்த கோதைக்குக் கரும் பாம்பு உவமை. மாசுணம் - பாம்பு. இராமனது முன்கையின் சிறப்புப் புலப்படக் கற்பகக் கொம்பினை உவமை கூறினர். (112)

### விரலில் உறையணிந்தது

**7256.** புதையிருட் பொழுதினு மலரும் பொங்கொளி
சிதைவரு நாளலர்ச் சிவந்த தாமரை
யிதழ்தொறும் வண்டுவீற் றிருந்த தாமெனத்
ததைவுறு நிரைவிரற் புட்டி ருங்கினன்.

புதை இருட் பொழுதினும் மலரும் பொங்கு ஒளி
சிதைவு அருநாள் அலர்ச் சிவந்த தாமரை
இதழ் தொறும் வண்டு வீற்றிருந்தது ஆம் என
ததைவுறு நிரைவிரல் புட்டில் தாங்கினன்.

பொ :—எப்பொருளையும் மறைக்கின்ற இருள் நிறைந்த இரவிலும் மலர்கின்றதாய்ப் பெருகிய ஒளி மழுங்காத, அன்றலர்ந்த மலராகிய சிவந்த தாமரையின் இதழ்கள் தோறும் வண்டுகள் அமர்ந்திருந்தன என்று சொல்லுமாறு நெருங்கியுள்ள வரிசையான கைவிரல்களில் விரற்செறியை அணிந்தான்.

கு :—மலரும், தாமரை, அலர் ஆகிய தாமரை என இயையும். எப்போதும் மலர்ந்துள்ள இராமன் கைக்கு உவமையாக வேண்டி இருட் பொழுதினும் மலரும் தாமரை யிதழைக் கூறினர். இது இல்பொருளுவமை. ஏனைத்தாமரை மலர்கட்கும் இத் தாமரை மலர்க்கும் உள்ள வேற்றுமை தோன்ற இருட் பொழுதினு மலரும் தாமரை என்றார். நாளலர் என்றது, அப்பொழுது அலர்ந்த மலரை. நாளலராகிய சிவந்த தாமரை என்க. இராமனது கைவிரல்கள் தாமரை மலரின் இதழ்கள் போன்றன; அவ் விரல்களில் அணிந்த விரற்செறிகள் அத் தாமரை இதழில் அமர்ந்த வண்டுகள் போன்றன என்றவாறு. கைவிரல்கள் நெருங்கியிருத்தலும் வரிசைப் பட இருத்தலும் ஆகிய உத்தம இலக்கணம் இராமனிடம் இருந்தமை தோன்ற 'ததைவுறு நிரைவிரல்' என்றார். புட்டில் என்றது விரலில் பூணும் கவசத்தை. 'விரற்றலைப் புட்டில் வீக்கி' (சீவக–2202) என்றதும் காண்க. (113)

### தூணியைத் தோளில் கட்டியது

**7257.** பல்லிய லுலகுறு பாடை பாடமைந்
தெல்லையி னூற்கட லேற நோக்கிய
நல்லிய னவையறு கவிஞர் நாவரும்
சொல்லெனத் தொலைவிலாத் தூணி தூக்கினன்.

பல் இயல் உலகு உறு பாடை பாடு அமைந்து
எல்லை இல் நூற்கடல் ஏற நோக்கிய,
நல் இயல் நவை அறு, கவிஞர் நாவரும்
சொல் எனத் தொலைவு இலாத் தூணி தூக்கினான்.

பொ :—உலகத்துப் பொருந்திய பல இயல்புகளையுடைய மொழிகளில் சிறப்பான அறிவு அமையப் பெற்று, எல்லையில்லாத நூல்களாகிய கடலை முழுவதும் கரைகண்ட, நல்ல இயல்புகளையும் குற்றமற்ற தன்மையையும் உடைய புலவர்களின் நாவிலிருந்து மேலும் மேலும் வந்து கொண்டே இருக்கின்ற சொற்களைப் போலத் தொலையாமல் அம்புகள் வந்துகொண்டே இருக்கும் அம்பறாத்தூணியைத் தோளில் கட்டித் தொங்கவிட்டான்.

கு :—அம்பறாத்தூணிக்கு உவமை கூறு முகத்தால் நல்ல கவிஞரின் சிறப்பியல்பு புலப்படுத்தியவாறு. பல மொழிகளில் பயிற்சியில்லையேனும் அம்மொழிகளில் உள்ள பெருமைகளை உணர்தல் நல்லியற் கவிஞர்க்கு இன்றியமையாதது என்பது முதலடியால் புலப்படுத்தியவாறு. ஒரு மொழியில் உள்ள நூல்கள் பலவற்றையும் கற்றுத்துறை போதல் கவிஞர்க்கு இலக்கணம் என்பார் 'எல்லையி னூற்கடலேற நோக்கிய' என்றார். நூல்களின் மிகுதி புலப்பட எல்லையில் நூல் என்றும், நூற்கடல் என்றும் முன்னும் பின்னும் அடைமொழி கொடுத்து சிறப்பித்தார். ஏற நோக்குதல் என்றது எல்லா நூல்களிலும் பயிற்சிமிக்காராதல். "கற்றோரறியா அறிவினர் கற்றோர்க்குத் தாம் வரம்பாகிய தலைமையர்" (திருமுருகாற்றுப்-132) என்பது இங்கு நினைதல் தகும். நல்லியல்பு இருத்தலோடு குற்றம் இல்லாமலும் இருத்தல் வேண்டும் என்பார் 'நல்லியல் நவையறு கவிஞர்' என்றார். கவிஞரின் நாவில் சொற்கள் தங்குதடையின்றி வந்து கொண்டே இருத்தல் போல அம்புகளை எடுக்க எடுக்கக் குறையாது நிறைந்தேயிருக்கும் தூணி என்றவாறு. கவிஞரின் நாக்கு அம்பறாத்தூணிக்கும், அந்நாக்கில் தொலைவின்றி வரும் சொற்கள் எடுக்க எடுக்கத் தொலைவிலாத அம்புகட்கும் உவமை. தூக்குதல் - கட்டித் தொங்கவிடுதல். (114)

## தும்பை மாலை சூடியது

**7258.** கிளர்மழைக் குழுவிடைக் கிளர்ந்த மின்னென
வளவரு செஞ்சுடர்ப் பட்ட மார்த்தன
னிளவரிக் கவட்டிலை யாரொ டேர்பெறத்
துளவொடு தும்பையும் சுழியச் சூடினான்.

கிளர் மழைக் குழுவிடைக் கிளர்ந்த மின் என
அளவரு செஞ்சுடர்ப் பட்டம் ஆர்த்தனன் ;
இளவரிக் கவட்டு இலை ஆரொடு ஏர் பெறத்
துளவொடு தும்பையும் சுழியச் சூடினன்.

பொ :—எழுச்சி பெற்ற மேகக் கூட்டத்தின் நடுவே ஒளிவீசி எழுகின்ற மின்னலைப்போல, அளவிடற்கு அரிய சிவந்த நெற்றிப் பட்டத்தைக் கட்டிக் கொண்டான்; இளமையான வரிகளையும் பிளவு பட்ட இலையினையும் உடைய ஆத்தியின் மாலையோடு அழகு பொருந்தத் துளவமாலையையும் தும்பை மாலையையும் வளையச் சூடிக் கொண்டான்.

கு :—கரிய சடைக் கற்றைக்கு அருகே நெற்றியில் ஒளிவீசும் பட்டத்தின் தோற்றம் கரிய முகிலுக்கு இடையே யெழும் மின்னலைப் போலிருந்தது என்றவாறு. மழைக் குழுவினுக்கு உவமேயமாகிய கரிய சடைக் கற்றையைக் கூருமல் உய்த்துணர வைத்தது, ஒன்று குறை இரட்டையுவமம் எனப்படும். “கருங்கால் வேங்கை வீயுகு துறுகல் இரும்புலிக் குருளையிற் ருேன்றுங் காட்டிடை ” (குறுந் - 47) என்பதும் இவ்வணியாதல் காணலாம். கிளர்தல் - எழுதல்; ஒளி வீசுதல். சூரிய குலத்துத் தோன்றிய தமிழ்ச் சோழர்க்குரிய ஆத்தி மாலையையே வடநாட்டில் சூரிய குலத்தில் தோன்றிய இராமனும் தன்குலத்திற்கு அடையாள மாலையாகச் சூடினன் என்க. ஆத்தி மரத்தின் இலை பிளவுபட்டதாக இருத்தலின் ‘கவட்டிலை ஆர், என்ருர். ஆர் - ஆத்தி. இது சிவபிரானுக்குரிய மலராகும். கவட்டிலை ஆர் என்றது மரத்தை; அது முதலாகு பெயராய்ப் பூவையுணர்த்தியது. தன் வழிபடு கடவுளாகிய நாராயணனுக்குரிய மாலை துளவம் ஆதலின் அவனடியான் என்ற குறிப்புத் தோன்ற இராமன் துளவ மாலையை யணிந்தான். இராமன் முடிசூட வேண்டிய நாளில் நாகணைப் பள்ளியானுகிய ஆயிர மௌலியானை முதலில் வழிபட்ட நிகழ்ச்சி அயோத்தியா காண்டத்தில் கூறப்பட்டிருத்தல் காண்க. தும்பை மாலை மைந்து பொருளாகச் செய்யும் போர்த்துறைக்குரியது என்பது முன்னர்க் கண்டது. ‘நெடுந்தும்பையும் சூடினன்’ (97) என இராவணன் சூடிய மாலையும் இம்மாலையாகவே குறிப்பிட்டிருத்தலும் நினைக. (115)

## இராமன் வில்லை ஏந்தியது

**7259.** ஓங்கிய வுலகமு முயிரு முட்புறந்
தாங்கிய பொருள்களு மறையுந் தானெனின்

நீங்கிய தியாவது நினைக்கி லேமவன்
வாங்கிய வரிசிலை மற்றென்றே கொலோ.

ஓங்கிய உலகமும் உயிரும் உட்புறம்
தாங்கிய பொருள்களும் மறையும் தான் எனின்.
நீங்கியது யாவது? நினைக்கிலேம்; அவன்
வாங்கிய வரிசிலை மற்றென்றே கொலோ?

பொ :—சிறப்புடைய இவ்வுலகமும், இவ்வுலகத்தில் இயங்கு கின்ற உயிர்ப் பன்மையும், இவ்வுலகத்தின் உட்புறத்தே இவ்வுலகத் தால் தாங்கப் பெற்ற மரம் முதலிய நிலைத்திணைப் பொருள்களும், (இவ்வுலகுயிர்களுக்கு வழிகாட்டியாகவுள்ள) வேதமும் இராமனே என்றால், அவனாகாமல் அவனின் வேறுபட்டு நிற்கும் பொருள்தான் யாதுளது? என்பதை இப்பொழுது சிந்தனை செய்கிலேம்; எல்லாப் பொருளுமாகவுள்ள அந்த இராமன் (தன் பகைவனாகிய இராவணனை வெல்லும் பொருட்டுத் தன்னினும் வலியது எனக்கருதிக்) கைக் கொண்ட கட்டமைந்தவில் அவன் வியாபகத்திற்கு அப்பாற்பட்ட வேறொரு பொருளோ? (என்று எண்ணுமாறு சிறப்புடன் தோன்றிற்று.)

கு :—இராமனது தெய்வநிலை நினைந்து இங்ஙனம் கூறினார். எப்பொருளும் தானாகவுள்ள இராமன் ஏந்திய வில்லின் சிறப்பை வியந்தவாறு. இராமன் வாங்கிய வில் அவனுடைய வியாபகத்திற்கு உட்பட்டதே எனினும் எப்பொருளுமாகவுள்ள அவன் பகை வெல்லு தற்குத் தன்னினும் வலியது என எண்ணி எடுத்தமையால் அவன் வியாபகத்திற்கு அப்பாற்பட்ட பொருளோ? என்று ஐயுறுமாறு சிறப்புப் பெற்றுவிட்டது என்றவாறு. உலகம் தனக்கு உட்புறத்தே வைத்து மரம் முதலிய நிலைத்திணைப் பொருள்களைத் தாங்குதலின் அவற்றை 'உட்புறந்தாங்கிய பொருள்களும்' என்று குறிப்பிட்டார். உயிர்களும் மறையும் ஆகிய அருவப் பொருள்களும், உலகமும் உலகத்தால் உட்புறத்தே வைத்துத் தாங்கப்பெறும் உடம்பு முதலிய பருப்பொருள்களும் இராமனே என்னும்போது அவனாகாது தனித்து நிற்கும் பொருள் ஒன்றும் இல்லை என்பது தெளிவேயாயினும், அதைப்பற்றி இப்பொழுது சிந்திக்கிலேம்; அத்தகு பெரியோனால் தன்னினும் வலியது என எண்ணி எடுக்கப் பெற்ற வில்லின் பெருமையை நினைக்கின் அது அவனாகாத மற்றொரு பொருளோ? என வியக்க வேண்டியுளது என்பார், "நீங்கியதியாவது நினைக் கிலேமவன், வாங்கிய வரிசிலை மற்றொன்றே கொலோ?" என்றார். இராமன் உலகமாகவும் உலகத்து உயிர் முதலியனவாகவும் நிற்கும் பரம்பொருளே என்பதை; "மாபூதத்தின் வைப்பெங்கும் ஊனும்

உயிரும் உணர்வும்போல் உள்ளும் புறனு முளனென்ப; கானுங் கடலும் கடந்திமையோர் இடுக்கண் தீர்த்த கழல்வேந்தை" (அயோத்தியா - கடவுள் வாழ்த்து) என முன்னும் கூறப்பட்டிருத்தல் காண்க. "தானே தனக்குவமன் தன்னுருவே யெவ்வுருவும்" (மூன்ருந் திருவந்தாதி - 38) என்றதும் நினைக. (116)

7260. நாற்கட லுலகமும் விசும்பு நாண்மலர்
தூர்க்கவெஞ் சேனையுந் தானுந் தோன்றினன்
மாற்கடல் வண்ணன்ருன் வளரு மாலிரும்
பாற்கட லோடும்வந் தெதிரும் பான்மைபோல்.

நாற்கடல் உலகமும், விசும்பும், நாள் மலர்
தூர்க்க, வெஞ்சேனையும் தானும் தோன்றினன்—
மால்கடல் வண்ணன் தான் வளரும் மால் இரும்
பாற்கட லோடும் வந்து எதிரும் பான்மை போல்.

பொ :—கருங்கடல் போன்ற வண்ணத்தையுடைய இராமன், தான் கண்வளர்கின்ற மிகப் பெரிய பாற்கடலோடும் வந்து எதிர்ப்பட்ட தன்மை போல, நான்கு திசையிலும் உள்ள கடலால் சூழப்பட்ட மண்ணுலகத்தாரும், விண்ணுலகத்தாரும் அன்றலர்ந்த புதிய மலர்களைச் சொரிந்து வாழ்த்தா நிற்க, (வெண்ணிறமுடைய) கொடிய வானரச் சேனையும் தானுமாகப் போர்க்களத்தில் வந்து தோன்றினன்.

கு :—உலகம், விசும்பு என்பன இடவாகு பெயராய் ஆங்கு வாழும் மக்களையும் தேவர்களையும் உணர்த்தின. தம் துயர்தீர இராவணனை இராமன் வெல்வானாக என வாழ்த்தி மலர் தூவினர் என்க. தூர்க்க என்ற சொல்லால் அவர்கள் சொரிந்த மலர்களின் மிகுதி புலப்படுத்தியவாறு. உடனிகழத்தக்க மலர் தூவலும் வாழ்த்தலுமாகிய இரண்டில் மலர் தூவுதல் கூறவே வாழ்த்துதலும் பெறப்பட்டது. வெண்ணிறமுடைய வானரச் சேனை பாற்கடல் போலக் காட்சியளித்தது என்றவாறு. வெண்சேனை என்று பாடம் இருப்பின் சிறக்கும். வானர சேனையின் மிகுதி புலப்படுத்த மாலிரும் பாற்கடல் என இரண்டடை மொழிகளால் சிறப்பித்தார். மாற்கடல் வண்ணன் எதிரும்பான்மைபோல் சேனையும் தானும் தோன்றினன் என இயையும். தற்குறிப்பேற்றவணி. வானரச்சேனையின் தோற்றம் பாற்கடல் போலும் என்பதை "மார்க்கடஞ் சூழ்ந்த வைப்பி னிளையவன் மருங்கு காப்ப, நாற்கடலுடுத்த பாரின் நாயகன் புதல்வ னுமப் பாற்கடல் சுற்ற விற்கை வடவரை பாங்கு நிற்பக் கார்க்கடல் கமலம்

பூத்த தெனப் பொலிவானைக் கண்டான்" (6 - 4 - 132) என முன்னும் கூறியிருத்தல் காணலாம். சேனையும் தானும் தோன்றினன் என்பது அஃறிணையும் உயர்திணையும் விரவிச் சிறப்பினல் உயர்திணை முடிபு ஏற்றது; 'தானும் தேரும் பாகனும் வந்தென்னலனுண்டான்' என்புழிப்போல. (117)

## இராமன் பின்னணியில் நின்ற இலக்குவனோடு சேர்தல்

**7261.** ஊழியி னுருத்திர னுருவு கொண்டுதான்
ஏழுயர் உலகமு மெரிக்கின் றானென
வாழிய வரிசிலைத் தம்பி மாப்படைக்
கூழையி னெற்றி நின்றானைக் கூடினான்.

ஊழியின் உருத்திரன் உருவு கொண்டு, தான்
ஏழ் உயர் உலகமும் எரிக்கின்றான் என
வாழிய வரிசிலைத் தம்பி, மாப்படைக்
கூழையின் நெற்றி நின்றானை, கூடினான்.

பொ :—இராமன் ஊழிக்காலத்தில் உருத்திரன் உருவத்தை மேற்கொண்டு ஏழாக உயர்ந்த உலகங்களையெல்லாம் எரிக்கின்றவனைப்போல(ப் பகைவர் சேனையை அழித்துக்கொண்டு பெரிய வானரப்படையின் பின்னணியின் தலைப்பில் நின்றவனாகிய கட்டமைந்த வில்லையுடைய இலக்குவனைச் சேர்ந்தான்.

கு :—உருத்திரன் உருவுகொண்டு அழிக்கின்றானாகிய தான் என என்றும், நின்றானாகிய தம்பியைக் கூடினான் என்றும் இயையும். உருபு பிரித்துக் கூறப்பட்டது. காத்தற்குரிய திருமாலே அயனாகிப் படைத்தும் அரனாகி அழித்தும் முத்தொழிலை நடத்துவான் என்பார், 'ஊழியின் உருத்திர னுருவுகொண்டுதான் அழிக்கின்றான் என' என்றார். தான் என்றது இராமனை. இராமன் ஊழியிறுதியில் உருத்திரன் உருவுகொண்டு அழிப்பதுபோல, இலக்குவன் கோப மிக்குப் பகைவர் படைகளை அழித்துக்கொண்டு பின்னணியில் நின்றான். அவ்வாறு நின்ற இல்க்குவனோடு இராமனும் சேர்ந்து கொண்டான் என்றவாறு. உருத்திரனை ஒப்பான் இலக்குவன் என்பதை அயோத்தியா காண்டத்தும் "முற்றுமதியம் மிலைந்தான் முனிந்தானை யன்னான்" (நகர்நீங்கு - 132) என்று கூறியிருத்தல் காண்க. வாழிய, அசைநிலை. மாப்படை என்றது வானரப் படையை. கூழை - பின்னணி. நெற்றி என்றது பின்னணியின் தலைப்பினை. (118)

## அரக்கர் சேனையும் வானர சேனையும் பொருதல்

**7262.** என்புழி நிருதரா மேழு வேலையும்
மின்பொழி யெயிறுடைக் கவியின் வெள்ளமும்
தென்புலக் கிழவனுஞ் செய்கை தீட்டிடப்
புன்புலக் களத்திடைப் பொருத போலுமால்.

என்புழி நிருதராம் ஏழு வேலையும்
மின்பொழி எயிறுடைக் கவியின் வெள்ளமும்,
தென்புலக் கிழவனும் செய்கை தீட்டிடப்
புன்புலக் களத்திடைப் பொருத போலுமால்.

பொ :—(இரு பக்கத்துத் தலைவர்களாகிய இராவணனும் இராமனும் போர்க்களத்தை அடைந்தார்கள்) என்றபோது, தென் திசைக்குக் காவலனாகிய எமனும் தன் செயலை விரைந்து நடத்துமாறு, அரக்கர்களாகிய ஏழு கடலும் ஒளிவீசும் பற்களையுடைய வானர வெள்ளமும் புல்லிய இடமாகிய போர்க்களத்தில் போர் செய்யலாயின.

கு :—போலும், ஆல் அசைநிலை. தென்புலக்கிழவன் என்றது எமனை. அவன் செய்கை தீட்டுதலாவது, உடம்பினின்றும் உயிரைப் பிரித்தலாகிய தன் செயலை விரைந்து நடத்துவது. அரக்கர் சேனையின் மிகுதி தோன்ற 'நிருதராம் ஏழுவேலை' என்றும், அரக்கர் படையினும் வானரசேனை குறைந்துள்ளமை புலப்படக் 'கவியின் வெள்ளமும்' என்றுங் கூறினர். கொலை மிக நிகழும் இடமாதலின் போர்க்களத்தை 'புன்புலக்களம்' என்றார். மின்புடையெயிறுடைக் கவி எனப் பல்லுடைமையைச் சிறப்பித்தது, அப் பல்லும் படைக் கலமாகும் சிறப்புணர்த்த வேண்டி. வேலையும் வெள்ளமும் பொருத என்க. இதனாலும் ஒரு நயம் தோற்றுவித்தவாறு. (119)

52 என்ற எண்ணுள்ள புத்தகத்தில் கீழ்வரும் பாடல் (119-1) மிகைப் பாடலாகக் காட்டப்பட்டுளது.

7262 (a) நிருதர்க ளெவருமே நோக்கி நின்றுபோர்
பொருதன ரயில்முதற் படைகள் போக்கியே
மரமொடு மலைகளைப் பிடுங்கி வானரர்
செருவிடைத் தீயவர் சிதறத் தாக்கினர்.

**7263.** துமிந்தன தலைகுடர் சொரிந்த தேர்க்குல
மவிந்தன புரவியு மாளு மற்றன

குவிந்தன பிணக்குவை சுமந்து கோணிலம்
நிமிர்ந்தது பரந்தது குருதி நீத்தமே.

துமிந்தன தலை ; குடர் சொரிந்த ; தேர்குலம்
அவிந்தன ; புரவியும் ஆளும் அற்றன ;
குவிந்தன பிணக்குவை ; சுமந்து கோள் நிலம்
நிமிர்ந்தது ; பரந்தது குருதி நீத்தமே.

பொ :—தலைகள் துணிந்தன; குடல்கள் சரிந்தன; தேர்களின் கூட்டம் அழிந்தன; குதிரைகளும் காலாட்களும் வெட்டுண்டன; பிணக்குவியல்கள் பெருங் குவியலாகக் குவிந்தன; அப் பிணக்குவி யலைத் தாங்கினமையால் வலிய நிலம் மேடாக நிமிர்ந்தது; இரத்த வெள்ளம் பரவியது.

கு :—துமிதல் - துணிதல். ஆள் என்றது காலாளை. புரவியும் ஆளுமற்றன என்புழித் திணை விரவி எண்ணப்பெற்று இழிபினால் அஃறிணை முடிபு கொண்டது. சுமந்தமையால் நிலம் நிமிர்ந்தது என்க. சுமந்து, காரணப்பொருளில் வந்த வினையெச்சம்; மழை பெய்து நெல் விளைந்தது என்புழிப்போல. (120)

## வானரங்களின் வீரப் போர்

**7264.** கடுங்குரங் கிருகையா லெற்றக் கால்வயக்
கொடுங்குரந் துணிந்தன புரவி குத்தினு
லொடுங்குரந் துணிந்தனர் நிருத ரோடின
நெடுங்குரம் பெனநிறை குருதி நீத்தமே.

கடுங் குரங்கு இருகையால் எற்ற, கால் வயக்
கொடுங்குரம் துணிந்தன, புரவி ; குத்தினால்
ஒடுங்குரம் துணிந்தனர், நிருதர் ; ஓடின
நெடுங்குரம்பு எனநிறை குருதி நீத்தமே.

பொ :—கடுமையான குரங்குகள் தம் இரண்டு கைகளாலும் தட்டிய அளவில் குதிரைகள் தம் காலில் உள்ள வலியதும் வளைந் துள்ளதுமாகிய குளம்புகள் துண்டுபட்டன; அக் குரங்குகளின் கைக் குத்தினால் அரக்கர்கள் மார்பு ஒடுங்கத் துண்டுபட்டு வீழ்ந்தனர்; நெடிய நீர்த் தேக்கம்போல் நிறைந்திருந்த இரத்த வெள்ளம் ஓட லாயின.

கு :—புரவி குரந்துணிந்தன என்க. வய - வலி. கொடுங்குரம்- வளைந்த குளம்பு. நிருதர் உரம் ஒடுங்கத் துணிந்தனர் என்க. ஒடுங்குரம் என்புழி அகரம் தொகுத்தல். உரம் – மார்பு; வலிமையும் ஆம். குரம்பு-நீர்நிலை - அணையால் தடுத்து நிறுத்திய நீர்த்தேக்கம். தேங்கியிருந்த இரத்தநீர் மிகுதிப்பட்டமையால் ஓடலாயிற்று. (121)

**7265.** தெற்கிது வடக்கிது வென்னத் தேர்கிலாப்
பற்குவை பரந்தன குரக்குப் பல்பிணம்
பொற்குவை நிகர்த்தன நிருதர் போர்ச்சவம்
கற்குவை நிகர்த்தன மழையுங் காட்டின.

'தெற்கு இது; வடக்கு இது' என்னத் தேர்கிலாப்
பற்குவை பரந்தன; குரக்குப் பல்பிணம்
பொற்குவை நிகர்த்தன; நிருதர் போர்ச்சவம்
கற்குவை நிகர்த்தன; மழையும் காட்டின.

பொ :—(போர்க்களத்தில்) இது தென்திசை; இது வடதிசை என்று தெரியாதபடி செய்யும் பல பிணக் குவியல்கள் பரவிக் காணப் பட்டன; குரங்குகளின் பலவாகிய பிணங்களின் குவியல்கள் வெண் பொன்னின் குவியல்களைப்போன்று தோன்றின; அரக்கர்களில் போர் செய்து மாண்டோர் பிணக்குவியல்கள் கருங்கற் குவியலைப் போன்று தோன்றின; (இருதிறக் குவியல்களும் குருதியைச் சொரிந்து) மழையின் தன்மையையும் காட்டின.

கு :—'பிணக்குவியல்களின் உயர்ச்சியும் பன்மையும் புலப்படுத்த 'தெற்கிது வடக்கிது வென்னத் தேர்கிலாப் பற்குவை' என்றார். வெண்ணிறமுள்ள குரங்குகளின் பிணத்திற்கு உவமையாகப் பொற் குவை கூறப்பட்டமையின் அது வெண்பொற்குவை என்பது புலனும். முன்னும் வானர சேனைக்குப் பாற்கடலை உவமை கூறி யுள்ளது நினைக. போரில் மாண்டோர் சவம் என்பார், போர்ச்சவம் எனச் சுருங்கக் கூறினார். அரக்கர் நிறம் கரிது ஆகலின் அவர் பிணக்குவியலுக்குக் கற்குவை உவமையாயது. இருதிறப் பிணக் குவியல்களிலும் இரத்தம் பீறிட்டு ஒழுகலின் 'மழையுங் காட்டின' என்றார். மழைபோல் இரத்தம் பொழிந்தன என்றவாறு. (122)

### இராவணன் வில்லின் நாணினைத் தெறித்தல்

**7266.** அவ்வழி யிராவண னமர ரஞ்சத்தன்
வெவ்விழி நெருப்புக வில்லி னாணினைச்

செவ்வழிக் கோதையிற் றெறிப்பச் சிந்தின
வெவ்வழி மருங்கினு மிரிந்த வானரம்.

அவ் வழி, இராவணன் அமரர் அஞ்சத், தன்
வெவ்விழி நெருப்பு உக, வில்லின் நாணினைச்
செவ்வழிக் கோதையின் தெறிப்பச், சிந்தின,
எவ்வழி மருங்கினும் இரிந்த, வானரம்.

பொ :—அப்போது, இராவணன், தேவர்களும் அஞ்சுமாறு தன் கொடிய கண்களில் நெருப்புப் பொறிகள் சிந்தாநிற்கத் தனது வில்லில் உள்ள நாணைச் செவ்வியமுறையில் செறித்த தோலுறை மூடிய கையால் தெறித்தானாக, வானரங்கள் அந்நாணொலி கேட்டுச் சிதறினவாய்த் தமக்குக் கிடைத்த எல்லாவழியிலும் அஞ்சி ஓடலாயின.

கு:—கோதை-வில்வீரர் கையிற்பூணும் தோலுறை. தோலுறை அணிந்த கையால் தெறிப்ப என்பார், 'கோதையிற் றெறிப்ப' என ஆகுபெயராற் கூறினார். சிந்தினவாய் இரிந்த என முற்றெச்சமாக்கி முடிக்க. இராவணன் நாணினைத் தெறித்தலால் வானரம் இரிந்த எனச் செயவெனெச்சத்தைக் காரணப் பொருளதாக்குக. குரங்குகள் புகவியலாத வழியிலும் புக்குச்சென்ற அச்சநிலையைப் புலப்படுத்த 'எவ்வழி மருங்கினும் இரிந்த வானரம்' என்றார். எதிர்த்துள்ள வானரங்களேயன்றி வானவரும் அஞ்ச என்பதே கருத்தாகலின் அமரரும் என்புழி உம்மை விகாரத்தால் தொக்க தாக்குக. (123)

52 என்ற எண்ணுள்ள அச்சுப் புத்தகத்தில் பின்வரும் பாடல்கள் (123-1, 2) மிகைப்பாடலாகக் காட்டப்பட்டுள்ளன.

7266 (a) அண்டகோ ளகைவெடித் தவனி கீண்டுற
எண்டிசா முகங்களு மிடிய வீசனைக்
கொண்டவான் கயிலையும் சிகர கோடிகள்
விண்டுநீங்கி யதெனில் விளம்ப வேண்டுமோ.

7266 (b) வச்சிர வரைப்புயத் தரக்கன் வாங்கிய
கைச்சிலை நாணொலி கலந்த காலையில்
அச்சிலை புரந்தர னாதி தேவர்கள்
உச்சிகள் பொதிரெறிந் துரம டங்கினர்.

**7267.** உருமிடித் துழியுலைந் தொளிக்கு நாகமொத்
திரியலுற் றனசில விறந்த வாற்சில

வெருவலுற் றனசில விம்ம லுற்றன
பொருகளத் துயிரொடும் புரண்டு போஞ்சில.

உரும் இடித்துழி உலைந்து ஒளிக்கும் நாகம் ஒத்து
இரியலுற்றன, சில; இறந்தவால், சில;
வெருவலுற்றன, சில; விம்மலுற்றன;
பொருகளத்து உயிரொடும் புரண்டுபோம் சில.

பொ:—இடி இடித்தபோது வருந்தி ஒளிந்துகொள்ளும் பாம்பு போல, சில வானரங்கள் ஒளிந்துகொள்ள விரைந்து ஓடத் தொடங்கின; சில அவ்வொலி கேட்டுப் பொருது மாண்டுபோயின; சில அஞ்சி நடுங்கின; (சில வானரங்கள்) அழத்தொடங்கின; சில வானரங்கள் போர்க்களத்தில் உயிரோடும் புரண்டு சென்றன.

கு:—இடியொலி கேட்டுப் பாம்பு நடுங்குதலும் இறத்தலும் உண்டு. 'உருமுச் சிவந்தெறிந்த உரனழி பாம்பின்' (அகநா - 92) எனவும், "உத்தியரவின் பைத்தலை துமிய, உரவுரும் உரறும்" (அகநா - 202) எனவும் வருதல் காண்க. நாணொலி கேட்டு அஞ்சி ஓடும் குரங்குகட்கு, இடியொலி கேட்டு ஓடி ஒளிக்கும் பாம்பு உவமை. சில விம்மலுற்றன என எழுவாய் வருவிக்க. நடந்து சென்றால் என்ன நேருமோ என்ற அச்சத்தால் சில குரங்குகள் பூமியில் புரண்டே சென்றன என்றவாறு. உயிர் நீங்கிய நிலையில் அம்புகளால் புரட்டித் தள்ளப்பட்டுப் புரளுகின்ற உடம்பு அன்று என்பார் "உயிரொடும் புரண்டு போம்சில" என்றார். நிமிர்ந்து நின்று போர் செய்தற்குரிய போர்க்களத்தில் அது செய்யாமையேயன்றி, உயிரோடு புரண்டும் சென்று பிழைக்கும் குரங்குகளின் இழிவைப் புலப்படுத்தவேண்டிப் 'பொருகளத்து உயிரொடும் புரண்டுபோம்' என்றார். வெருவல் - அஞ்சுதல். விம்மல் - அழுதல். (124)

**7268.** பொரக்கரு நிறநெடு விசும்பு போழ்பட
விரக்கமி லிராவண னெறிந்த நாணினல்
குரக்கின முற்றதென் கூறற் றன்குலத்
தரக்கரு மனையதோ ரச்ச மெய்தினர்.

பொர, கருநிற நெடு விசும்பு போழ்பட
இரக்கம் இல் இராவணன் எறிந்த நாணினல்,
குரக்கினம் உற்றது என்கூறல்? தன்குலத்து
அரக்கரும் அனையது ஓர் அச்சம் எய்தினர்.

பொ :—இரக்கம் இல்லாத நெஞ்சத்தவனை இராவணன், போர் செய்தற்காகக் கரிய நிறத்தையுடைய நீண்ட மேலண்ட முகடும் பிளக்குமாறு, கையால் தெறித்த நாண் ஒலியால் எளிய குரங்குக் கூட்டம் உற்ற அச்சத்தைப் பற்றிக் கூறுவது எதற்கு? அவன் குலத்துத் தோன்றிய அரக்கர்களும் அத்தகைய பேரச்சத்தை அடைந்தார்கள்.

கு :—இராவணன் எழுப்பிய நாணொலியால் வன்னெஞ்சராகிய அரக்கரும் சொல்லொணாத ஓரச்சம் எய்தினராதலின், அவரினும் வன்மையில் குறைந்த குரக்கினம் உற்ற அச்சத்தைக் கூறுதலால் பயனென்னை? என்றவாறு. இதனால் அந் நாணொலியின் சிறப்புப் புலப்படுத்தியவாறு. நாண் ஆகுபெயராய் நாணொலியை யுணர்த்தியது. அரக்கர்கள் அஞ்சினார்கள் என்பதை மட்டும் கூறினால் அவரினும் குறைந்த குரங்குகள் அஞ்சினமையும் கைமுதிக நியாயத்தால் பெறப்படுமாதலின் 'குரக்கினம் உற்றது என் கூறல்' என்றார். பொர எறிந்த நாணினால் என இயையும். (125)

## இராவணனது நாணொலியால் நடுங்காதவர்கள்

**7269.** வீடண னொருவனு மிளைய வீரனும்
கோடணை குரங்கினுக் கரசுங் கொற்றவன்
நாடினர் நின்றனர் நாலு திக்கினும்
ஓடின ரல்லவ ரொளித்த தும்பரே.

வீடணன் ஒருவனும் இளைய வீரனும்
கோடு அணை குரங்கினுக்கு அரசும், கொற்றவன்
நாடினர் நின்றனர்; நாலு திக்கினும்
ஓடினர், அல்லவர்; ஒளித்தது, உம்பரே.

பொ :—வீடணன் ஒருவனும், இளைய வீரனாகிய இலக்குவனும், மரக்கிளையில் வாழ்கின்ற குரங்குகளுக்கு அரசனாகிய சுக்கிரீவனும் இராமனைச் சார்ந்து நின்றார்கள்; அவரை ஒழிந்த பிறர் எல்லாம் நாலு திக்கிலும் அஞ்சி ஓடினார்கள். விண்ணுலகம் அஞ்சிப்போய் ஒளித்துக் கொண்டது.

கு :—இராமன் சேனையுள் வீடணனும், இலக்குவனும், சுக்கிரீவனும் இராவணனுடைய நாணொலிக்கு அஞ்சி ஓடாது இராமனைச் சார்ந்து நின்றார்கள்; மற்றவர் அனைவரும் நாலு திக்கிலும் அஞ்சி ஓடினர் என்க. வீடணன் இராவணனுடைய நாணொலியைப் பன்முறை கேட்டுப் பழகியவனாதலின் ஓடாது நின்றவர்களில் முதலில்

எண்ணப்பட்டான். இராமனோடு நின்ற மூவரும் அவ்விராமனுக்குத் தம்பியராயமைந்தமை நினைக. 'கோடு வாழ் குரங்குங் குட்டி கூறுப' (தொல்-பொருள்-மரபியல்-13) என்ற தொல்காப்பியர் கூற்றைத் தழுவிக் கம்பரும் 'கோடணை குரங்கு' என்று கூறினர். மரக்கிளை களில் தங்கும் இயல்பினது குரங்கு என்பதை விளக்கியவாறு. கொற்றவனை நாடினர் எனல் வேண்டிய இரண்டனுருபு உயர்திணை யிடத்துத் தொக்கு வந்தது. அல்லவர் நாலு திக்கினும் ஓடினர் என இயையும். உம்பர் - விண்ணுலகம். விண்ணுலகம் ஒளித்தது என்றது, ஆண்டு வாழும் தேவர் அனைவரும் ஒளித்தனர் என்பதை இடவாகு பெயரான் உணர்த்தியவாறு. (126)

**7270.** எடுக்கினு னிலத்தை யேந்து
★ மிராவண னெறிந்த நாணின்
நடுக்கினு னுலகை யென்பார்
நல்கினு னென்னற் பாற்றோ
மிடுக்கினுன் மிக்க வானோர்
மேக்குயர் வெள்ள மேனுள்
கெடுக்குநா ளுருமி னார்ப்புக்
கேட்டன ரென்னக் கேட்டார்.

எடுக்கின், நானிலத்தை ஏந்தும்
இராவணன் எறிந்த நாணுல்
நடுக்கினுன், உலகை என்பார் ;
நல்கினுன், என்னற் பாற்றோ ?
மிடுக்கினுல் மிக்க வானோர்,
மேக்குஉயர் வெள்ளம் மேல் நாள்
கெடுக்கும் நாள் உருமின் ஆர்ப்புக்
கேட்டனர் என்னக் கேட்டார்.

பொ :—எடுக்க நினைத்தால் பூமியையே பெயர்த்தெடுக்கவல்ல இராவணன் தெறித்து எழுப்பிய நாணொலியால் இப்பூவுலகத்தையே நடுங்கச் செய்துவிட்டான் என்றுமட்டும் சிலர் சொல்லுவார்கள்; (விண்ணுலகத்தை நடுக்காமல்) அருள் செய்துவிட்டான் என்று கூறவியலுமோ? (இயலாது; என்னை,) வலிமைமிக்க தேவர்கள், முன்னாளில் மேலே உயர்ந்து எழும் பிரளய வெள்ளம் (உலகை) அழிக்கும்போது, (ஊழிக்காலத்து மேகத்தின்) இடி ஒலி கேட்டது போல அந்நாணொலியைக் கேட்டு அஞ்சினர்கள்; (ஆதலின்.)

கு :—இராவணன் நாணொலியால் மண்ணுலகமும் விண்ணுலகமும் நடுங்கின என்றவாறு. ஒரு சிலர் இராவணன் நாணொலியால் மண்ணுலகை மட்டுமே நடுக்கினான் என்று சொல்லுகின்றார்கள்; அது உண்மையன்று; விண்ணுலகத்தையும் நடுங்கச் செய்துவிட்டான் என்பதைக் கவி நிறுவியவாறு. இராவணனது வலிமையைச் சிறப்பிக்க 'எடுக்கினானிலத்தை யேந்தும் இராவணன்' என்றார். "பாரினை யெடுக்கவேண்டின்...... இராவணற்கரிதென்னென்றான்" (ஆரணிய – சடாயு உயிர்நீத்த - 60) என முன் தவவேடத்தில் நின்று இராவணனே கூறியிருத்தலும் நினைக. விண்ணுலகத்திற்கு அருள் செய்துவிட்டான் என்று கூறவியலுமோ? என்று வருவித்து முடிக்க. மனிதரினும் வானோர் வலியராதல் நினைந்து 'மிடுக்கினால் மிக்க வானோர்' என்றார். ஊழியிறுதியில் உலகம் நீரால் அழியும் போது பெய்யும் மேகத்தின் இடியொலியைக் கேட்டபோது தேவர்கள் எவ்வளவு நடுங்குவார்களோ அவ்வளவு நடுங்கினார்கள் இராவணனது நாணொலியைக் கேட்டபோது, என்பார். 'வெள்ளம் மேனாள் கெடுக்கு நாள் உருமினார்ப்புக் கேட்டனர் என்னக் கேட்டார்' என்றார். உலகு என்றது மண்ணுலகத்தை. விண்ணவர் அஞ்சியதை அறியாதவர் உலகை மட்டும் நடுக்கினான் என்பர் என்க. (127)

52 என்ற எண்ணுள்ள அச்சுப்புத்தகத்தில் பின்வரும் பாடல்கள் (127 -1, 2) மிகைப் பாடல்களாகக் காட்டப்பட்டுள்ளன.

7270 (a) இப்புறத் துயிர்க ளெல்லாம்
இரிந்திட அரக்கர் கோமான்
கைப்படு சிலையை வாங்கிக்
காலமா மழையுமெஞ்ச
முப்புறத் துலக மெல்லா
மூடிய தென்ன மூளும்
அப்புமா மாரி சிந்தி
யண்டமும் பிளக்க வார்த்தான்.

(b) ஆர்த்தவன் பகழி மாரி
சொரிந்தரிச் சேனை வெள்ளம்
தீர்த்தொரு கணத்தில் போக்கச்
செங்கதிர்ச் சிறுவன்றானும்—
பார்த்துள மழன்று பொங்கிப்
பருவலி யரக்க னோடும்
போர்த்தொழிற் கொருவன் போலப்
பொருப்பொன்றங் கேந்திப் புக்கான்.

## இராவணனும் சுக்கிரீவனும் பொருதல்

**7271.** ஏந்திய சிகர மொன்றங்
கிந்திரன் குலிச மென்னக்
காந்திய வுருமின் விட்டான்
கவிக்குலத் தரச னக்கல்
நீந்தரு நெருப்புச் சிந்தி
நிமிர்தலு நிருதர்க் கெல்லாம்
வேந்தனும் பகழி யொன்றால்
வெண்டுக ளாக்கி வீழ்த்தான்.

ஏந்திய சிகரம் ஒன்று, அங்கு இந்திரன் குலிசம் என்னக் காந்திய உருமின் விட்டான், கவிக்குலத்து அரசன்; அக்கல் நீந்தரு நெருப்புச்சிந்தி நிமிர்தலும், நிருதர்க்கு எல்லாம் வேந்தனும் பகழி ஒன்றால், வெண் துகள் ஆக்கி, வீழ்த்தான்.

பொ :—குரங்கினத்திற்கு அரசனாகிய சுக்கிரீவன், அப்போது, இந்திரனது வச்சிரப்படைபோன்று ஒளிவீசுகின்றதும் தான் கையில் தாங்கியதுமாய ஒரு மலையை, இடிபோல இராவணன் மேல் விழுமாறு வீசினான்; அந்த மலை கடப்பதற்கு அரிய நெருப்புப் பொறிகளைச் சிந்திக் கொண்டு நிமிர்ந்து செல்லுதலும், அரக்கர்க்கு எல்லாம் அரசனாகிய இராவணன், அம்பு ஒன்றினால் அம்மலையை வெண்மையான துகளாகுமாறு செய்து கீழே வீழ்த்தினான்.

கு :—சுக்கிரீவன் வீசியெறிந்த மலையை இராவணன் ஓர் அம்பினால் துகளாக்கினான் என்றவாறு. அங்கு, அப்போது எனக் காலப் பொருளையுணர்த்தியது. குலிசமென்னக் காந்தியதாகிய சிகரம், ஏந்திய சிகரம் என்க. இராவணன் மேல் இடி விழுமாறு போல விழுமாறு வலிதாய மலை ஒன்றைச் சுக்கிரீவன் வீசினான் என்க. நெருப்புப் பொறிகளின் மிகுதி தோன்ற 'நீந்தரு நெருப்பு' என்றார். சுக்கிரீவன் எறிந்த மலை துகளாகுமாறு இராவணன் ஓரம்பினால் வீழ்த்தினான் என்பதால் அவ்வம்பின் சிறப்புப் புலப்படுத்தியவாறு. கல்லின் பொடி வெண்ணிறத்ததாய் விளங்குதல் இயல்பு. ஆதலின் 'வெண்டுகளாக்கி வீழ்த்தான்' என்றார். இனி வெண்மை வெறுமையுணர்த்திற்று எனக் கொண்டு பயனற்ற வெறுந்துகளாயிற்று எனக் கூறலுமாம். (128)

**7272.** அண்ணல்வா ளரக்கன் விட்ட
வம்பினு லழிந்து சிந்தித்
திண்ணெடுஞ் சிகர நீருய்த்
திசைதிசை சிந்த லோடும்
கண்ணெடுங் கடுந்தீக் காலக்
கவிக்குலத் தரசன் கையால்
மண்மகள் வயிறு கீற
மரமொன்று வாங்கிக் கொண்டான்.

அண்ணல் வாள் அரக்கன் விட்ட அம்பினுல் அழிந்து, சிந்தி, திண் நெடுஞ் சிகரம், நீருய்த் திசைதிசை சிந்த லோடும், கண் நெடுங் கடுந்தீக் கால, கவிக்குலத்து அரசன், கையால் மண்மகள் வயிறு கீற, மரம் ஒன்று வாங்கிக் கொண்டான்.

பொ :—பெருமையிற் சிறந்த சிவன் கொடுத்த வாளை ஏந்திய இராவணன் விட்ட அம்பினுல், (தான் வீசிய) திண்ணிய நெடிய மலை அழிந்து சிதைந்து துகள்துகளாய்த் திசைகள்தோறும் சிதறியவுடன், குரங்குக் குலத்திற்கு அரசன் ஆகிய சுக்கிரீவன், தன் கண்கள் நெடிய கடிய நெருப்புப் பொறியைச் சிந்த, நிலமகளின் வயிறு கிழியும்படி கையால் ஒரு மரத்தைப் பறித்துக் கொண்டான்.

கு :—சிகரம் - மலை நீறு - துகள். சிகரம் நீருய்த் திசை திசை சிந்தலோடும் என்பது அனுவாதமாகக் கூறியது. நெடுந்தொலைவு வேர் ஓடிய மரமாதலின் அதைப் பிடுங்கும்போது நிலம் பிளந்தது என்பார், 'மண்மகள் வயிறு கீற' என்றுர். கண்ணெடுங்கடுந்தீக் கால என்றது, மிகவும் வெகுண்டு என்பதைப் புலப்படுத்தியவாறு. இராவணனது வாள் சிவன் கொடுத்தது ஆகலின், அதனை அண்ணல் வாள் எனச் சிறப்பித்தார். (129)

**7273.** கொண்டமா மரத்தை யம்பின்
கூட்டத்தாற் காட்டத் தக்க
கண்டமா யிரத்தின் மேலு
முளவெனக் கண்டங் கண்டான்
விண்டவா ளரக்கன் மீது
விசும்பெரி பரக்க விட்டான்
பண்டைமால் வரையின் மிக்க
தொருகிரி பரிதி மைந்தன்.

கொண்ட மா மரத்தை அம்பின் கூட்டத்தால், காட்டத் தக்க
கண்டம் ஆயிரத்தின் மேலும் உள எனக் கண்டம் கண்டான்
விண்ட வாள் அரக்கன்மீது விசும்பு எரி பரக்க விட்டான்
பண்டை மால் வரையின் மிக்கது ஒருகிரி, பரிதி மைந்தன்.

பொ :—(சுக்கிரீவன் கையில்) கொண்ட பெரிய மரத்தை (இராவணன் அம்புகளின் கூட்டத்தால் செய்யத்தக்க துண்டம் ஆயிரத்தின் மேலும் உண்டு என்னுமாறு பல துண்டங்களாகச் செய்தான்; சூரியன் மைந்தனுகிய சுக்கிரீவன் மரத்தைத் துண்டாக்கிய கொடிய இராவணன் மீது முன்விட்ட மலேயினும் பெரியதாகிய ஒரு மலேயை விண்ணில் நெருப்புப் பரவுமாறு விட்டான்.

கு :—காட்டுதல் - செய்தல். கண்டான் - செய்தான். ஒரு பெரிய மரத்தை அம்பினுல் ஆயிரத்திற்கு மேலும் துண்டம் செய்ய இயலும் என்பதை இராவணன் காட்டினுன் என்றவாறு. சுக்கிரீவன் கையில் பற்றியபோதே இராவணன் அம்மரத்தை அம்பினுல் பல துண்டங்களாக்கினுன் என்க. மரம் துண்டமாயினவுடன் பெரிய மலேயை இராவணன் மேல் எறிந்தான் சுக்கிரீவன். கண்டம் - துண்டம். வாளரக்கன் - கொடிய இராவணன். பரிதி மைந்தன் ஒரு கிரி அரக்கன் மீது விட்டான் என இயையும். மலே விண்ணில் செல்லும் வேகத்தில் தீப்பொறிகள் பரவின என்க. (130)

**7274.** அக்கிரி தனேயு மாங்கோ
ரம்பினு லறுத்து மாற்றித்
திக்கிரி தரப்போர் வென்ற
சிலேயினே வளேய வாங்கிச்
சுக்கிரீ வன்றன் மார்பிற்
புங்கமுந் தோன்ரு வண்ணம்
உக்கிர வயிர வாளி
யொன்றுபுக் கொளிக்க வெய்தான்.

அக்கிரிதனேயும் ஆங்கு ஓர் அம்பினுல் அறுத்து மாற்றி,
திக்கு இரிதரப் போர் வென்ற சிலேயினே வளேய வாங்கி,
சுக்கிரிவன் தன் மார்பில் புங்கமும் தோன்ரு வண்ணம்
உக்கிர வயிர வாளி ஒன்றுபுக்கு ஒளிக்க எய்தான்.

பொ :—(இராவணன்) அந்த மலேயையும் ஓர் அம்பினுல் துண்டமாக அறுத்துப் போக்கிவிட்டு, (பின்) திசையிலுள்ளோர் புறங்காட்டி ஓடுமாறு போரில் வென்ற வில்லினே வளேயுமாறு செய்து, கொடிய

உறுதியான அம்பு ஒன்றைச் சுக்கிரீவனது மார்பில் அடிப்பகுதியும் வெளித் தோன்ருதபடி புகுந்து மறையுமாறு எய்தான்.

கு :—ஆங்கு - அசை; அப்பொழுது எனலும் ஆம். மலையை அறுத்து மாற்றியபோது கொண்ட வில்லை விடுத்துத் திசைகளை வெல்லுங்கால் கொண்ட வில்லை எடுத்து வளைத்துச் சுக்கிரீவன் மார்பில் அம்பு எய்தான் என்க. இதனுல் மலையைப் பிளத்தற்கு உதவிய வில் சுக்கிரீவன் மார்பைப் பிளக்க உதவாது என்று இராவணன் கருதியமை புலப்படுத்திச் சுக்கிரீவனது வலிமையை யுணர்த்தியவாறு. புங்கம் – அம்பின் அடிப்பகுதி. உக்கிரம் - கொடுமை. வயிரம் – உறுதி. (131)

## சுக்கிரீவன் தளர்ச்சிகண்டு அனுமன் வருதல்

**7275.** சுடுகணை படுத லோடுந்
துளங்கினுன் றுளங்கா முன்னம்
குடதிசை வாயி னின்ற
மாருதி புகுந்த கொள்கை
யுடனிருந் தறிந்தா னென்ன
வோரிமை யொடுங்கா முன்னர்
வடதிசை வாயில் நின்ற
மன்னவன் முன்ன ஞனுன்.

சுடுகணை படுதலோடும் துளங்கினுன்;
துளங்கா முன்னம்
குட திசை வாயில் நின்ற
மாருதி, புகுந்த கொள்கை
உடன் உறைந்து அறிந்தான்
என்ன, ஓர் இமை ஒடுங்கா முன்னர்,
வட திசை வாயில் நின்ற
மன்னவன் முன்னன் ஆனுன்.

பொ :—இராவணன் எய்த சுடுகின்ற அம்பு தன் மார்பில் நுழைந்த அளவில் (சுக்கிரீவன்) தளர்ச்சியுற்ருன்; அவன் தளர்ச்சி யடைதற்கு முன்னரே, மேலைத்திசை வாயிலில் நின்ற அனுமன், அங்குச் சுக்கிரீவனுக்கு நேர்ந்த தன்மையை உடனிருந்து அறிந்தவனைப்போல ஓரிமை நேரம் முடிவதற்குள் வடதிசை வாயிலில் நின்ற இராவணனுக்கு முன் (வந்து) நின்ருன்.

கு :—சுக்கிரீவன் துளக்கமும் அனுமன் வருகையும் உடனிகழ்ந்தன என்ற கருத்தால், துளங்கினன் துளங்காமுன்னம் மாருதி மன்னவன் முன்னன் ஆனான் என்றார். மேலை வாயிலிலிருந்த அனுமன் வடக்கு வாயிலுக்கு இமைப்பொழுதுக்குள் விரைந்து வருதற்கு ஏற்றவனே என்ற கருத்துப் புலப்பட அவனை மாருதி என்ற பெயரால் குறிப்பிட்ட நயம் போற்றுதற்குரியது. புகுந்த கொள்கை - அங்குச் சுக்கிரீவனுக்கு நேர்ந்ததன்மை. சுக்கிரீவன் துளக்க மெய்தியவுடன் அனுமன் வரவு நிகழ்தலின் 'புகுந்த கொள்கையுடனிருந்தறிந்தா னென்ன' என்று தற்குறிப்பேற்றமாகக் கூறினார். ஓரிமைப் பொழுதிற்குள் வந்தான் என்பார், "ஓரிமை ஒடுங்கா முன்னர்" என்றார். மன்னவன் என்றது இராவணனை. முன்னன் ஆனான் என்றது, முன்வந்து நின்றான் என்றவாறு. (132)

**7276.** பரிதிசேய் தேரு முன்னம்
பருவலி யரக்க பல்போர்
புரிதியோ வென்னோ டென்னாப்
புகையெழ விழித்துப் பொங்கி
வருதியே வாவென் பான்மேன்
மலையொன்று நிலையின் வாங்கிச்
சுருதியே யனைய தோளால்
வீசினான் காலின் றோன்றல்.

பரிதி சேய் தேரு முன்னம்,
பருவலி அரக்க! பல் போர்
புரிதியோ என்னோடு? என்னா,
புகை எழ விழித்துப் பொங்கி,
வருதியே? வா! என்பான்மேல்
மலை ஒன்று நிலையின் வாங்கி,
சுருதியே அனைய தோளால் வீசினான்,
காலின் தோன்றல்.

பொ :—காற்றின் மகனாகிய அனுமன் கண்களில் புகையெழுமாறு விழித்துச் சினம்மிக்கு நின்று, 'பெரிய வலிமையுடைய அரக்கனே! சூரியன் மகனாகிய சுக்கிரீவன் தெளிதற்கு முன்னர் என்னோடு பலவகையான போரைச் செய்யவல்லையோ? என்று இராவணனை அறைகூவி, 'என்னோடு போர்செய்ய வருகின்றாயோ? வா' என்று சொல்கின்ற அவ்விராவணன்மேல், ஒரு மலையை அது நின்ற

நிலையினின்றும் பெயர்த்தெடுத்து, வேதமே போன்ற தோளால் வீசினான்.

கு:—தேருமுன்னம் என்றது தெளிவு பெறுதற்குள் என்னும் கருத்தினது. பருவலி - பெருவலி; பருமையும் வலிமையுமுடைய அரக்க எனலும் ஆம். காலின் தோன்றல் விழித்துப் பொங்கி 'அரக்க! என்னோடு பல்போர் புரிதியோ என்று, வாவென்பான்மேல் மலையொன்று வாங்கி, வீசினான்' என இயையும். 'வருதியோ வா என்பான்மேல்' என்றது, இடைப்பிறவரல். என்று வீசினான், என்பான்மேல் வீசினான் என்க. புகையெழ விழித்துப் பொங்கி என்பான்மேல் என இராவணனுக்கு அடையாக்கலும் ஆம். சுருதி போலத் தன் குறியில் தவறாத தோள் என்றவாறு. (133)

7277. மீயெழு மேக மெல்லாம்
வெந்துவெங் கரியிற் சிந்தித்
தீயெழ விசும்பி னூடு
செல்கின்ற செயலை நோக்கிக்
காய்கணை யைந்து மைந்துங்
கடுப்புறத் தொடுத்துக் கண்டித்
தாயிரங் கூறு செய்தா
னமரரை யலக்கண் செய்தான்.

மீ எழு மேகம் எல்லாம் வெந்து, வெங்கரியின் சிந்தித்
தீ எழ, விசும்பினூடு செல்கின்ற செயலை நோக்கி,
காய் கணை ஐந்தும் ஐந்தும் கடுப்புறத் தொடுத்துக் கண்டித்து
ஆயிரம் கூறு செய்தான் அமரரை அலக்கண் செய்தான்.

பொ:—தேவர்களைத் துன்புறுத்தினவனாகிய இராவணன் (அனுமன் வீசிய மலை) மேலே எழுந்து செல்லும் மேகங்கள் எல்லாம் வெந்து வெப்பமேறிய கரிபோலத் துண்டந் துண்டமாய்ச் சிதறி நெருப்புப் பறக்குமாறு விண்ணின் வழியே (தன்னை நோக்கி) வருகின்ற செயலைப் பார்த்துக் கொல்லுதற்குரிய அம்புகள் பத்தினை விரைவுறத் தொடுத்து அம்மலையைப் பிளந்து ஆயிரந் துண்டமாகச் செய்தான்.

கு:—அனுமன் வீசிய மலை செல்லும் வேகத்தில் விண்ணில் உலவும் மேகங்கள் வெந்து உதிர்ந்து நெருப்புப் பொறிகளாகப் பறந்தன என்றவாறு. மேகங்கள் படும்பாட்டால் அம்மலையின் ஆற்றலை உணர்ந்த இராவணன் அதனைப் பத்து அம்பு எய்து

துகளாக்கினன் என்க. கடுப்பு - விரைவு. கண்டித்தல் - கண்டம் செய்தல்; பிளத்தல், மலைச் சிறகறுத்தவனாகிய இந்திரனையே அலக்கண் செய்தானுக்கு அவ்விந்திரனால் அலக்கண் செய்யப்பெற்ற மலையைப் பொடியாக்குதல் அரிதோ என்ற நயந்தோன்ற இறுதியடி அமைந்திருத்தல் காணலாம். காய்கணை - கொல்லும் அம்பு. (134)

## அனுமன் வீசிய மலை இராவணனது வாகுவலயத்தைப் பொடியாக்குதல்

**7278.** மீட்டொரு சிகரம் வாங்கி
வீங்குதோள் விசையின் வீசி
யோட்டின ஞேட்ட வானத்
துருமினுங் கடுக வோடிக்
கோட்டுவெஞ் சிலையின் வாளி
முன்சென்று கொற்றப் பொற்றேள்
பூட்டிய வலயத் தோடும்
பூழியாய்ப் போயிற் றன்றே.

மீட்டு ஒரு சிகரம் வாங்கி,
வீங்குதோள் விசையின் வீசி,
ஓட்டினன் ; ஒட்ட, வானத்து
உரு மினும் கடுக ஓடி,
கோட்டு வெஞ்சி லையின் வாளி முன் சென்று,
கொற்றப் பொற்றேள்
பூட்டிய வலயத்தோடும்
பூழியாய்ப் போயிற்று அன்றே.

பொ :—(அனுமன்) மீண்டும் ஒரு மலையை எடுத்துப் பருத்த தன் தோள் வலிமை காட்டி வேகமாக வீசிச் செலுத்தினன். அவன் அவ்வாறு செலுத்த அம்மலை இடியினும் கடிய வேகத்துடன் ஓடி, இராவணன் வளைத்த கொடிய வில்லின்விடப்பட்ட அம்பு புறப்படு முன், அவனை நெருங்கிச் சென்று, அவனுடைய வெற்றி பொருந்திய அழகிய தோளில் அணிந்த வாகுவலயத்தில் தாக்கி, அவ்வலயத்தைப் பொடியாக்கித் தானும் பொடியாகப் போயது.

கு :—அனுமன் முன்வீசிய மலையை இராவணன் அம்பினல் துகளாக்கினன் ஆகலின், மீண்டும் ஒரு மலையை, அவ்விராவணன் அம்பு வந்து தாக்குதற்குமுன், அவனைச் சென்று தாக்குமாறு

விரைந்து வீசினன் என்க. அனுமன் வீசிய மலையின் வேகத்தைப் புலப்படுத்த வேண்டி, 'கோட்டு வெஞ்சிலையின் வாளி முன்சென்று' என்றார். முன்னமே வளைந்திருந்த வில்லில் விட்ட அம்பு புறப்படுதற்கு முன்னமே சென்று என்பது பொருள். இப்பொழுது வளைத்திலன் என்பார் 'கோட்டு வெஞ்சிலை' என்றார். மலையின் விரைவும் தாக்குதலும் தோன்ற வானத்து உருமினை உவமை கூறினர். வலயத்தோடும் பூழியாய்ப் போயிற்று என்றமையால், அனுமன் எறிந்த மலை இராவணனது வாகுவலயத்தைப் பொடியாக்கித் தானும் பொடியாயிற்று என்பது புலப்படுத்தியவாறு. இதனால், இராவணன் அணிந்த தோள்வளையின் உறுதித்தன்மை புலனாம். (135)

7279. மெய்யெரிந் தழன்று பொங்கி
வெங்கணான் விம்மி மீட்டோர்
மைவரை வாங்கு வானை
வரிசிலை வுளைய வாங்கிக்
கையினுந் தோளின் மேலு
மார்பினுங் கரக்க வாளி
ஐயிரண் டழுந்த வெய்தா
னவனவை யாற்றி நின்றான்.

மெய் எரிந்து அழன்று பொங்கி,
வெங்கணான் விம்மி, மீட்டு ஓர்
மை வரை வாங்குவானை,
வரிசிலை உளைய வாங்கிக்
கையினும் தோளின்மேலும்
மார்பினும் கரக்க வாளி
ஐ இரண்டு அழுந்த எய்தான்;
அவன் அவை ஆற்றி நின்றான்.

பொ :—கொடிய கண்ணையுடையவனாகிய இராவணன் (அனுமன் வீசிய மலையால் தன் தோள்வளை துகளாயினதால்) உடம்பு, கோபம் மிக்கமையால் அழன்று எரியப்பெற்றுச் சிறிது துன்பமுற்று, மீண்டும் தன்மேல் எறியுமாறு கரிய மலையைப் பெயர்க்கின்ற அனுமனை நோக்கி, கட்டமைந்த வில்லை அது வருந்துமாறு வளைத்து, அவன் கைகளிலும் தோள்கள்மேலும் மார்பிலும் புக்குமறையுமாறு பத்து அம்புகளை அழுந்த விட்டான்; அவ்வனுமன் அவ்வம்புகளை ஏற்றுக் கொண்டு வருந்தாமல் தாங்கி நின்றான்.

கு :—அனுமன் வீசிய மலை தன் தோள்வளையை யுடைத்துத் துகளாக்கியதே என்ற வருத்தத்தால் இராவணன் மனத்தில் பொங்கிய கோபம் அவன் உடம்பையே அழன்று எரித்தது என்றவாறு. இராவணன் கண்களில் இரக்கக் குறிப்புச் சிறிதுமின்றி அச்சுறுத்தும் கொடுமையே மிக்கிருத்தலின் அவனை வெங்கணன் என்றார். வெங்கணன் விம்மி சிலை வாங்கி வாளி எய்தான் என இயையும். 'வாங்குவானை' இடைப்பிறவரல். வாங்குவானை நோக்கி என ஒருசொல் வருவிக்க. இனி வாங்குவானது கையினும் தோளின் மேலும் மார்பிலும் என உருபு மயக்கமாக்கி இயைத்துரைப்பினும் ஆம். இரண்டு கை, இரண்டு தோள், ஒரு மார்பு ஆகிய ஐந்து உறுப்புகளிலும் ஒவ்வொன்றுக்கும் இவ்விரண்டு அம்புகளாக எய்தான் என்பார், வாளி ஐயிரண்டு எய்தான் என்றார். இராவணன் அம்புகள் பட்டு அனுமன் நிலைகுலையவில்லை என்பார், 'அவன் அவை ஆற்றி நின்றான்' என்றார். முன் எறிந்த மலை இராவணன் தோள்வளையைப் பொடி செய்து தானும் பொடியானமை கண்டு அனுமன், மீண்டும் ஒரு மலையை இராவணன்மேல் எறியப் பெயர்த்தான் என்பதும், அவ்வாறு பெயர்க்கின்ற அனுமன்மேல் அது பெயர்க்கவியலாதபடி இராவணன் பத்து அம்புகளை எய்தான் என்பதும் புலப்படுத்தியவாறு. (136)

**7280.** யாரிது செய்ய கிற்பா ரென்று
 கொண் டிமையோ ரேத்த
மாருதி பின்னு மாங்கோர்
 மராமரங் கையின் வாங்கி
வேரொடுஞ் சுழற்றி விட்டான்
 விடுதலு மிலங்கை வேந்தன்
சாரதி தலையைத் தள்ளிச்
 சென்றது நிருதர் சாய.

யார் இது செய்ய கிற்பார் ?
 என்று கொண்டு இமையோர் ஏத்த
மாருதி, பின்னும் அங்கு ஓர்
 மராமரம் கையின் வாங்கி
வேரொடும் சுழற்றி விட்டான் ;
 விடுதலும், இலங்கை வேந்தன்
சாரதி தலையைத் தள்ளிச்
 சென்றது நிருதர் சாய.

பொ :—(இராவணன் எய்த அம்புகள் தன் உடம்பில் பாயவும் அவ்வாறு தாங்கி நின்ற அனுமனைப் பார்த்து) தேவர்கள், 'யார் இத்தகைய செயலைச் செயவல்லவர்!' என்று மகிழ்ச்சி கொண்டு பாராட்டா நிற்க, அனுமன் மீண்டும் அங்கு நின்ற வெண்கடம்பு மரத்தைக் கையால் வேரொடும் பறித்துச் சுழற்றி (இராவணன்மேல்) விட்டான். அவ்வாறு விடுதலும் அம்மரம், இராவணனுடைய தேர்ப் பாகனது தலையைத் தள்ளிவிட்டு, அரக்கர் பலர் சாய்ந்து அழியுமாறு செய்து சென்றது.

கு :—அனுமனன்றிப் பிறர் இங்ஙனம் செய்ய இயலாது என்பார், 'யாரிது செய்ய கிற்பார்' என இமையவர் ஏத்தலாயினர். இது என்றது இராவணன் எய்த அம்புகளைத் தாங்கி நின்றமையை. கில் என்றது ஆற்றல் உணர்த்துவதோர் இடைச்சொல். வேரொடும் வாங்கி என இயையும். அம்மரம் தலையைத் தள்ளி நிருதர் சாயச் சென்றது என்க. இலங்கை வேந்தன் என்றது இராவணனை, தேர்ப்பாகன் தலையைத் தள்ளியதோடு அண்மையிலிருந்த அரக்கர் பலர் சாய்ந்து அழியுமாறும் செய்து சென்றது அம்மரம் என்க. நிருதர் சாய என்பதற்கு அரக்கர் கெட்டோட எனப் பொருள் கூறலும் ஆம். (137)

**7281.** மாறியோர் பாக னேற
 மறிதிரைப் பரவை பின்னும்
சீறிய தனைய னான
 செறிகழ லரக்கன் றெய்வ
நூறுகோ னெய்தி னெய்தா
 னவையுட னுழைத லோடும்
ஆறுபோற் சோரி சோர
 வனுமனு மலக்க ணுற்றான்.

மாறி ஓர் பாகன் ஏற,
 மறிதிரைப் பரவை பின்னும்
சீறியது அனையன் ஆன
 செறிகழல் அரக்கன், தெய்வ
நூறு கோல் நொய்தின் எய்தான் ;
 அவை உடல் நுழைத லோடும்,
ஆறு போல் சோரி சோர,
 அனுமனும் அலக்கண் உற்றான்.

பொ :—அப்பாகனுக்குப் பதிலாக வேறோர் பாகன் அத்தேரில் ஏறிச் செலுத்த, மறிந்து வீழும் அலைகளையுடைய கடல் மீண்டும் கோபித்துப் பொங்கியதைப் போன்றவனாகிய நெருங்கிய வீரக்கழலை யுடைய ஒப்பற்ற இராவணன், அப்போது தெய்வத்தன்மை வாய்ந்த நூறு அம்புகளை விரைவாக விட்டான்; அந்த அம்புகள் தன் உடலில் நுழைந்த அளவில், ஆறுபோலக் குருதி பெருக, அனுமனும் துன்ப முற்றான்.

கு :—முன் தேரைச் செலுத்திய பாகன் இறந்து வீழ்ந்தவுடன் அவனுக்குப் பதிலாக வேறோர் பாகன் அத்தேரில் ஏறிச் செலுத் தினான் என்க. ஏற என்றது ஏறிச்செலுத்த என்னும் கருத்தினது. கரிய நிறமும் பேருருவமும் பற்றி இராவணனுக்குக் கடல் உவமை யாயிற்று. இராவணன் சீறியது கடல் சீறியதுபோன்று அழிவை யுண்டாக்கும் தன்மையது என்றவாறு. ஓர் என்பது ஒப்பற்ற என்னுளர் பொருளது. இனி ஆங்கும் ஓரும் அசைநிலை எனலும் ஆம். கோல் - அம்பு. நொய்து - விரைவு. சோரி - இரத்தம் சோர்தல் - ஒழுகுதல். அனுமனும் என்புழி உம்மை உயர்வு சிறப்பு; முன் இராவணன் எய்த பத்து அம்புகள் தன்னுடம்பில் பாயவும் தாங்கி நின்ற அனுமனும் இப்போது தாங்காது அலக்கணுற்றான் என்க. அலக்கண் - துன்பம். (138)

52 என்ற எண்ணுள்ள அச்சுப் புத்தகத்தில் பின்வரும் பாடல் 138-1 மிகைப் பாடலாகக் காட்டப்பட்டுளது.

7281. (a) அலக்கணுற் றனுமன் சோர
அங்கதன் முதலாம் வீரர்
மலைக்குற மரங்கள் வாங்கி
வருதல்கண் டரக்கன் வாளி
சிலைக்கிடை தொடுத்தங் கேந்து
மாமலை சிதைத்திட் டன்னோர்
கலக்கமுற் றிரிய வொவ்வோர்
பகழியான் காய்ந்து கொல்வான்.

## இராவணன் வீரப் பேச்சு

7282. கற்கொண்டு மரங்கள் கொண்டுங்
கைக்கொண்டுங் களித்து நும்வாய்ச்
சொற்கொண்டு மயிரின் புன்றோற்
றோள்கொண்டுந் துள்ளி வெள்ளிப்

பற்கொண்டு மலைகின்றாரிற் பழிகொண்டு
பயந்த தியானோர்
விற்கொண்டு நின்ற போது
விறல்கொண்டு மீடிர் போலாம்.

" கல் கொண்டும் மரங்கள் கொண்டும்
கைக் கொண்டும் களித்து நும் வாய்ச்
சொல் கொண்டும் மயிரின் புன் தோல்
தோள் கொண்டும் துள்ளி வெள்ளிப்
பல் கொண்டும் மலைகின்றாரில்
பழிகொண்டு பயந்தது யான் ஓர்
வில் கொண்டு நின்ற போது
விறல் கொண்டு மீள்திர் போலாம்

பொ :—கற்களைக் கொண்டும் மரங்களைக் கொண்டும் கைகளைக் கொண்டும்' களித்துக் கூறுகின்ற நும் வாய்ச் சொல்லைக் கொண்டும் மயிர்ச்செறிவினையுடைய புல்லிய தோல் போர்த்த தோள்களைக் கொண்டும் துளியளவான வெள்ளிய பற்களைக் கொண்டும் போர் செய்கின்ற உங்களிடத்தில் (வில் முதலிய பெரிய போர்க் கருவிகளைக் கொண்டு போர் செய்வதால் வரும்) பழியைக் காரணமாகக் கொண்டே (இதுகாறும் யான் பயந்திருந்தது; நான் ஒரு வில்லைக் கையில் கொண்டு போர் செய்ய நின்றால் (குரங்குகளாகிய நீவிர் வெற்றிகொண்டு திரும்பிப் போவீர்களோ ?

கு :—இராவணன் இதுகாறும் கடும்போர் செய்யாதிருந்ததற்குக் காரணங் கூறியவாறு. அனுமன் வீசிய மரத்தால் தேர்ப்பாகன் தலையற்று வீழ்ந்ததை நோக்கி வானரங்கள் தன்னை எள்ளி ஆரவாரித்ததை நினைந்து இராவணன் அனுமனைப் புண்செய்த இப்போது இவ்வாறு கூறலானான். போர்க்குரிய கருவிகள் ஏதும் இல்லாதார் மாட்டு எல்லா வகையான போர்க் கருவிகளையும் உடைய இராவணன் போர் செய்தால் பழிவருமே என்ற பயத்தால்தான் இதுகாறும் கடும்போர் செய்யாதிருந்தான் என்பதும் அந்தப் பழிக்கு நாணாது படைகொண்டு நின்றால் யாரும் எதிர்நிற்க முடியாது என்பதும் புலப்படுத்தியவாறு. வானரங்களின் தோள்களை, மயிரின் புன்றோல் தோள் என இகழ்ந்து கூறியவாறு. துளி என்பது விரித்தல் விகாரம் பெற்று 'துள்ளி' என நின்றது. துளியளவான வெள்ளிய பல் என்க. வானரர்கள் எல்லாம் தன்னுடைய ஒரு வில்லுக்கு ஆற்றமாட்டார்கள் என்பான், ' நானோர் வில்கொண்டு நின்றபோது விறல்கொண்டு மீடிர்போலம் ' என்றான். போல் இங்கு இகழ்ச்சிக் குறிப்புணர்த்தியது. (139)

**7283.** என்றுரைத் தெயிற்றுப் பேழ்வா
யெரியுக நகைசெய் தியாணர்ப்
பொன்தொடர் வடிம்பின் வாளி
கடையுகத் துருமுப் போல,
வொன்றினொன் றதிக மாக
வாயிர கோடி யுய்த்தான்
சென்றது குரங்குச் சேனை
காலெறி கடலிற் சிந்தி.

என்று உரைத்து, எயிற்றுப் பேழ்வாய்
எரி உக நகை செய்து, யாணர்ப்
பொன்தொடர் வடிம்பின் வாளி
கடை உகத்து உருமுப்போல
ஒன்றின் ஒன்று அதிகம் ஆக,
ஆயிர கோடி உய்த்தான்;
சென்றது குரக்குச் சேனை,
கால் எறி கடலின் சிந்தி.

பொ :—என்று சொல்லிவிட்டுக் கோரப் பற்களையுடைய பிளவுபட்ட வாயினின்றும் நெருப்புச் சிந்துமாறு சினச்சிரிப்புச் சிரித்து, புதிய பொன்னால் செய்யப்பட்ட விளிம்பினையுடைய ஆயிர கோடி அம்புகளை ஒன்றைவிட ஒன்று விஞ்சுமாறு, ஊழியிறுதியில் வீழும் இடியைப்போலச் சென்று தாக்குமாறு விட்டான்; குரங்குப்படை காற்றால் எறியப்பட்ட கடலைப்போலச் சிதறிப் போயது.

கு :—இராவணனது அம்பின் சிறப்புத் தோன்ற அதன் விளிம்பு பொன் கொண்டிழைத்திருக்கும் என்பார். 'யாணர்ப் பொன் தொடர் வடிம்பின் வாளி' என்றார். அழிக்கும் இயல்பிற் சிறந்தது ஊழியிறுதியில் வீழும் இடியே யாதலின் அதனையே இராவணன் அம்புக்கு உவமை கூறினர். இராவணன்விட்ட ஆயிரங் கோடி அம்புகளும் அழிக்கும் செயலில் ஒன்றனை ஒன்று முந்திச் சென்றது என்றவாறு. கால் - காற்று. காற்றால் மோதப்பட்ட கடல் சிதறிப் பரத்தல்போல இராவணன் அம்பால் தாக்கப்பட்ட குரங்குச் சேனை சிதறி ஓடிற்று என்றவாறு. காற்றுப் போன்றது இராவணன் அம்பு; கடல் போன்றது குரங்குச் சேனை. பேழ்வாய் - பிளவுபட்ட வாய். (140)

## இலக்குவன் இராவணனேடு போர் செய்ய வருதல்

7284. கலக்கிய வரக்கன் வில்லின்
கல்வியும் கவிக ளுற்ற
வலக்கணுந் தலைவர் செய்த
தன்மையு மமையக் கண்டா
னிலக்குவ னென்கை வாளிக்
கிலக்கிவ னிவனை யின்று
விலக்குவெ னென்ன வந்தான்
வில்லுடை மேரு வென்ன.

கலக்கிய அரக்கன் வில்லின்
கல்வியும், கவிகள் உற்ற
அலக்கணும், தலைவர் செய்த
தன்மையும், அமையக் கண்டான்,
இலக்குவன், 'என் கை வாளிக்கு
இலக்கு இவன்; இவனை இன்று
விலக்குவென்' என்ன வந்தான்,
வில்லுடை மேரு என்ன.

பொ :—தன் சேனையைக் கலக்கிய இராவணனுடைய வில் வித்தையின் திறத்தையும், அவன் வில்லால் குரங்குகள் அடைந்த துன்பத்தையும், வானரத் தலைவர் செய்த போர்த்தன்மையையும், பொருந்தக் கண்டவனுகிய இலக்குவன், 'இவ்விராவணன் என்கை அம்புக்கு இலக்கு ஆவான், இவனை இப்போது தடுப்பேன்' என்று சொல்லிக்கொண்டு வில்லினையுடைய மேரு மலையைப்போல அங்கு வந்தான்.

கு :—வில்லின் கல்வி - வில்வித்தை; அலக்கண் - துன்பம். தலைவர் என்றது அனுமன் முதலிய படைத்தலைவர்களை. கண்டானுகிய இலக்குவன் என முற்றெச்சமாக்கி முடிக்க. இலக்கு - குறியாகும் பொருள். விலக்குதல் - தடுத்தல். இலக்குவனது நிறத்திற்கும் துளக்கமில் தோற்றத்திற்கும் மேருமலை உவமை. வில்லுடை மேரு என்ன என்றது, இல்பொருள் உவமை. பொன்னிறமும் மலைபோன்ற தோற்றமுமுடைய இலக்குவன், வில்லையுடையனுய் வருகின்றமையின் வில்லுடை மேருவென்ன என இல்பொருளுவமை கூறினர். மேருவென்ன வந்தான் என இயையும். "விற்கை வடவரை பாங்கு நிற்ப" (வீடணனடைக்கலப் - 132) என முன்னும் கூறியிருத்தல் நினையத் தகும். (141)

## இலக்குவன் நாணொலி செய்தல்

7285. தேயத்தின் றலைவன் மைந்தன்
சிலையைநா ணெறிந்தான் றீய
மாயத்தின் வினையை வல்லார்
நிலையென்னை முடிவின் மாரி
யாயத்தி னிடியி தென்றே
யஞ்சின வுலகம் யானை
சீயத்தின் முழக்கங் கேட்டல்
போன்றனர் செறுந ரெல்லாம்.

தேயத்தின் தலைவன் மைந்தன்
சிலையை நாண் எறிந்தான்; தீய
மாயத்தின் வினையை வல்லார்
நிலை என்னை? முடிவில் மாரி
ஆயத்தின் இடி இது என்றே
அஞ்சின உலகம்; யானை
சீயத்தின் முழக்கம் கேட்டல்
போன்றனர் செறுநர் எல்லாம்

பொ:—நாட்டிற்கெல்லாம் தலைவனாகிய தயரத சக்கரவர்த்தியின் இளைய மகனாகிய இலக்குவன் தன் வில்லின் நாணைத் தெறித்து ஒலி எழுப்பினான். (அதுகேட்டு அவன் எதிரில் நின்ற) கொடிய மாய வினைகளில் வல்லவராகிய அரக்கர்கள் அடைந்த நிலையைப்பற்றிக் கூறவேண்டுவது யாதுளது? ஊழி இறுதியில் மழை பெய்யும் மேகத்தின் இடியே இது என்று கருதி உலகங்கள் எல்லாம் அஞ்சின; பகைவர்கள் எல்லாம், யானை, சிங்கத்தின் கர்ச்சனையைக் கேட்டாற் போல, நடுங்கினர்.

கு:—தீய மாயத்தின் இயற்கை வல்லார் என்றது எதிர்நின்ற அரக்கரை. உலகமே அஞ்சின என்றபோது, அவ்வுலகில் ஒரு பகுதியில் இலக்குவன் எதிரில் நெருங்கியிருக்கின்ற அரக்கர் அஞ்சுதல் கூறல் வேண்டுமோ என்பார் 'நிலையென்னை' என்றார். தண்டாபூபிக நியாயத்தில் அரக்கர் அஞ்சியது பெறப்படும் என்ற வாறு. இனி உலகம் முடிவின் மாரி ஆயத்தின் இடியிதென்றே அஞ்சின; செறுநரெல்லாம் யானை சீயந்தின் முழக்கங் கேட்டல் போன்றனர்; (எனின்) மாயத்தின் வினையைவல்லார் நிலை என்னை? என இயைத்து முடித்தலும் ஆம். மாயம் – வஞ்சம்; வஞ்சனையுள்ளத் தார் நடுங்கத் தகாதவற்றிற்கும் நடுங்கும் இயல்பினர் ஆதலின்,

உலகமே நடுங்குதற்குக் காரணமாய இலக்குவன் நாணொலிக்கு அஞ்சுதல் சொல்ல வேண்டுமோ என்றவாறு. ஆயம் – மேகம். இனி, ஆயம் - கூட்டம்; எனினும், பொருந்தும். மாரிஆயம்–மழைக் கூட்டம். (142)

## இராவணன் வியத்தல்

7286. ஆற்றல்சா லரக்கன் றானு
 மயனின்ற வயவர் நெஞ்சம்
வீற்றுவீற் றாகி யுற்ற
 தன்மையும் வீரன் றம்பி
கூற்றின்வெம் புருவ மன்ன
 சிலைநெடுங் குரலுங் கேளா
வேற்றினன் மகுட மென்னே
 யிவனொரு மனிச னென்னா.

ஆற்றல்சால் அரக்கன் தானும், அயல்
 நின்ற வயவர் நெஞ்சம்
வீற்று வீற்று ஆகி உற்ற
 தன்மையும், வீரன் தம்பி
கூற்றின் வெம்புருவம் அன்ன
 சிலை நெடுங் குரலும் கேளா,
ஏற்றினன் மகுடம் 'என்னே
 இவன் ஒரு மனிசன் என்னா!'

பொ :—வலிமைமிக்க இராவணனும், தன் அருகில் நின்ற தன் வீரர்களின் நெஞ்சம் வேறு வேறாகி நடுக்கமுற்ற தன்மையையும், வீரனாகிய இராமனுடைய தம்பி இலக்குவன் (எழுப்பிய) எமனது புருவம் போன்ற வில் நாணின் நெடிய ஒலியும் கேட்டு, என்னே! இவ்வொலியை எழுப்பிய இவனும் ஒரு மனிதன்றானோ? என்று கூறிக்கொண்டு வியப்பால் மகுடத்தை உயர்த்திப் பார்த்தான்.

கு :—இத்தகைய ஒலியை எழுப்பியவன் தேவரிற் சிறந்தோனாகவே இருக்கவேண்டும்; ஒரு மனிதனாக இருக்க இயலாது என்பான் 'என்னே! இவனொரு மனிசனென்னா மகுடம் ஏற்றினன்' என்க. "அவன் மறை தேஎம் நோக்கி மற்றிவன் மகனே! தோழி என்றனள்" (அகநா–48) என்பது இங்கு ஒப்புநோக்கத்தகும். வீற்று வீற்றாகி - வேறு வேறாகி; "வீற்று வீற்றோடும் மயிலினம்

போல" (களவழி – 29) என்பதும் நினைக. இலக்குவனது வில்லின் வளைவு எமனுடைய புருவ வளைவால் உளதாகும் அழிவை விளைத்தலின், 'கூற்றின் வெம்புருவ மன்னசிலை' என்றார். வியப்பால் தலையை நிமிர்த்திப் பார்த்தல் இயல்பு. (143)

52ல் பின்வரும் பாடல் மிகைப்பாடலாகக் காட்டப்பட்டுளது.

7286 (உ) நகைத்திது புரிந்தான் கொல்லோ
என்பதன் முன்பு நாண்வாய்த்
துகைத்தொலி யொடுங்கா முன்னம்
சோனையம் புயலு மஞ்ச
மிகைப்படு சரத்தின் மாரி
வீரனுக் கிளையோன் மேவும்
பகைப்புலத் தரக்கன் சேனைப்
பரவைமேல் பொழிவ தானான்.

## இலக்குவன் அம்புமாரி

7287. கட்டமை தேரின் மேலுங்
களிநெடுங் களிற்றின் மேலும்
விட்டெழு புரவி மேலும்
வெள்ளெயிற் றரக்கர் மேலும்
முட்டிய மழையின் றுள்ளி
முறையின்றி மொய்க்கு மாபோல்
பட்டன பகழி யெங்கும்
பரந்தது குருதிப் பௌவம்.

கட்டு அமை தேரின் மேலும்,
களி நெடுங் களிற்றின் மேலும்,
விட்டு எழு புரவி மேலும்,
வெள் எயிற்று அரக்கர் மேலும்
முட்டிய மழையின் துள்ளி
முறை இன்றி மொய்க்குமா போல்
பட்டன பகழி; எங்கும்
பரந்தது, குருதிப் பௌவம்

பொ :—கட்டுதல் அமைந்த தேரின்மேலும், மதக்களிப்பு வாய்ந்த யானையின்மேலும், இடம்விட்டுத் தாவிச்செல்லும் குதிரையின்மேலும், வெள்ளிய பற்களையுடைய காலாள் வீரராகிய அரக்கர் மேலும்,

இலக்குவன் அம்புகள், நெருங்கிய மழையின் துளிகள் முறையி லாமல் எல்லாவிடத்தும் நெருங்கி வீழ்தல் போலப், பட்டன; இரத்தக் கடல் எங்கும் பரவியது.

கு :—இலக்குவன் எய்த அம்புகள் அரக்கரின் நால்வகைப் படைகள் மேலும் பட்டன; அங்ஙனம் பட்டமையால் நால்வகைப் படையிலிருந்தும் இரத்தக் கடல் தோன்றி எங்கும் பரவியது என்ற வாறு. முட்டுதல் - நெருங்குதல். துளி விரித்தல் விகாரம் பெற்றுத் துள்ளி என நின்றது. மழைத் துளிகள் ஒரு முறைமை இன்றி எல்லாவிடத்தும் விழுதல்போல இலக்குவன் அம்பும் நால்வகைப் படைகள் மேலும் படலாயின என்றவாறு. தேரின்மேலும், களிற்றின் மேலும், புரவிமேலும், அரக்கர்மேலும் பகழிபட்டன என்க. பௌவம்-கடல். மேல் இலக்குவன் நாணொலி செய்தமை கூறியதால் இங்குப் பகழி என்றது இலக்குவன் அம்பினையே என்பது பெற லாம். விட்டெழு புரவி என்பதற்குப் பாகனால் விடப்பட்டு எழுந் தோடுகின்ற குதிரை எனப் பொருள் கூறலும் ஆம். 'விட்ட குதிரை விசைப் பினன்ன' (குறுந் - 74) என்றதும் இக் கருத்தினதாதல் காணலாம். (144)

**7288.** நகங்களிற் பெரிய வேழ
நறைமத வருவி காலும்
முகங்களிற் புக்க வாளி
யபரத்தை முற்றி மொய்ம்ப
ரகங்களிற் கழன்று தேரி
னச்சினை யுருவி யப்பா
லுகங்களிற் கடை சென்ருலு
மோய்வில வோட லுற்ற.

நகங்களின் பெரிய வேழ நறைமத அருவி காலும்
முகங்களில் புக்க வாளி அபரத்தை முற்றி மொய்ம்பர்
அகங்களிற் கழன்று, தேரின் அச்சினை உருவி, அப்பால்
உகங்களின் கடை சென்ருலும், ஓய்வு இல ஓடலுற்ற.

பொ :—மலைகளினும் பெரியவாய யானைகளின் மணமுடைய மத அருவி சொரியும் முகங்களில் பட்டு நுழைந்த அம்புகள், அவ்வி யானைகளின் பின் பாகங்களின் வழியே வெளிப்போந்து, அருகி லிருந்த வலிமையுள்ள வீரர்களின் மார்பகங்களில் ஊடுருவிச் சென்று, தேர்களின் அச்சுகளில் ஊடுருவிப்போய், அதற்கு அப்

பாலும் யுகங்களின் கடைசியிலும் ஓய்வு இலாதனவாய அவ்வம்புகள் ஓடத் தொடங்கின.

கு :—நகம் – மலை. யானைகளின் முகத்திற்பட்டு அவற்றின் பின் பாகத்தின் வழியாக ஊடுருவிச் சென்ற அம்புகள், அண்மையி லிருந்த வீரர்களின் மார்புகளைத் துளைத்தோடி, அங்குள்ள தேர் களின் அச்சுகளில் ஊடுருவிச் சென்று அதற்கு மேலும் ஓய்விலவாய் ஓடத்தொடங்கின என இலக்குவனுடைய அம்பின் வலிமையையும் விசையையும் புலப்படுத்தியவாறு. ஓய்விலா என்பது வினைப்பெயர். ஓய்விலாதனவாய அவ்வம்புகள் அப்பால் ஓடலுற்ற என இயையும். இலக்குவனது ஒவ்வொரு அம்பும் இவ்வாறு செய்தன என்றவாறு. "வேழம் வீழ்த்த விழுத்தொடைப் பகழி, பேழ்வாய் உழுவையைப் பெரும்பிறி துறீஇப், புழற்றலைப் புகர்க்கலை உருட்டி, உரற்றலைக் கேழற்பன்றி வீழ வயல, தாழற்புற்றத் துடும்பிற் செற்றும் வல்வில் வேட்டம் வலம்படுத்திருந்தோன்" (புறநா - 152) என வல்வில் லோரியின் பகழயைப் பற்றி வன்பரணர் கூறியுள்ளது இங்கு ஒப்புநோக்கத்தகும். யானையை வீழ்த்திய அம்பு, பின்பு புலியையும்' அதன்பின் மானையும், அதன்பின் பன்றியையும், வீழ்த்தி முடிவில் புற்றுக்குள்ளிருந்த உடும்பின் உடம்பில் தைக்கும் தன்மையது என்றல் காண்க. அபரம் – பின்பாகம். முற்றுதல் இங்கு ஊடுருவதலை உணர்த்தியது. மொய்ம்பர் - வலிமை நிரம்பிய வீரர். யானையின் உயர்ந்த முகத்திற்பட்ட அம்பு அவ் யானையினும் தாழ்ந்துள்ள வீரர் மார்பிற் புகுதலும், அவர் மார்பில் ஊடுருவியபின் அவர் மார்பினும் தாழ்ந்துள்ள தேரின் அச்சினை ஊடுருவிச் செல்லுதலும் இயல் பாதல் காணலாம். உகங்களின் கடை சென்றுலும் ஓய்விலாதன வாய வாளி என்க. (145)

**7289.** நூக்கிய களிறுந் தேரும்
புரவியு நூழில் செய்ய
வாக்கிய வரக்கர் தானை
யையிரு கோடி கையொத்
தோக்கிய படைகள் வீசி
யுடற்றிய துலகஞ் செய்த
பாக்கிய மனைய வீரன்
றம்பியைச் சுற்றும் பற்றி.

நூக்கிய களிறும் தேரும் புரவியும் நூழில் செய்ய,— ஆக்கிய அரக்கர் தானை, ஐ·இருகோடி, கை ஒத்து

ஒக்கிய படைகள் வீசி உடற்றிய — உலகம் செய்த
பாக்கியம் அனைய வீரன் தம்பியைச் சுற்றும் பற்றி.

பொ :—(இலக்குவனுடைய அம்புகள்) அரக்கர்களின் யானைகளையும் தேர்களையும் குதிரைகளையும் கீழே தள்ளியனவாய்க் கொன்று குவியாநிற்க,—பின் அணிவகுத்து வந்த பத்துக்கோடி அளவுள்ள அரக்கர்தம் சேனைகள்—உலகம் செய்த புண்ணியப்பயன் போன்ற இராமனுடைய தம்பியாகிய இலக்குவனைச் சுற்றிலும் தொடர்ந்து சூழ்ந்துகொண்டு, தம் கை ஒத்து உயர்த்திய படைக் கலங்களை அவன்மேல் வீசிப் போர் செய்தன.

கு :—நூக்கியவாய் நூழில் செய்ய என இயையும். நூக்குதல் - தள்ளுதல். நூழில் செய்தல் - கொன்று குவித்தல். செய்தற்கு வினை முதல் இலக்குவன் அம்புகள். மேலைச் செய்யுளில் கூறப் பட்டவை. ஆக்குதல் இங்கு அணிவகுத்தலை உணர்த்தியது. ஐயிருகோடி அரக்கர்தானை தம்பியைச் சுற்றும் பற்றிக் கையொத்து ஒக்கிய படைகள் வீசி உடற்றிய என இயையும். சேனையில் உள்ளோர் அனைவரும் ஒரு தன்மையாக ஏந்திய படை என்பார், 'கையொத்து ஒக்கிய படைகள்' என்றார். ஒக்குதல் - உயர்த்துதல், ஏந்துதல். உடற்றுதல் - போர் செய்தல். சுற்றும் பற்றுதலாவது, சுற்றிலும் சூழ்ந்து கொள்ளுதல். (146)

**7290.** உறுபகை மனிச னின்றெம்
மிறைவனை யுறுகிற் பானேல்
வெறுவிது நந்தம் வீர
மென்றொரு மேன்மை தோன்ற
வெறிபடை யரக்க ரேற்றா
ரேற்றகை மாற்றா னென்ன
வறியவ ரொருவன் வண்மை
பூண்டவன் மேற்சென் றென்ன.

'உறுபகை மனிசன் இன்று எம் இறைவனை உறுகிற்பானேல்
வெறுவது, நம்தம் வீரம்' என்று ஒரு மேன்மை தோன்ற
எறிபடை அரக்கர் ஏற்றார் — ஏற்றகை மாற்றான் என்ன,
வறியவர் ஒருவன் வண்மை பூண்டவன் மேல் சென்றென்ன.

பொ :—'(புதிதின் இங்கு) வந்துற்ற பகைவனாகிய மனிதன் இப்பொழுது எம் அரசனாகிய இராவணனை நெருங்குவான் ஆனால், நம்

முடைய வீரம் பயனற்றதாகும்' என்று கருதிய பெருமிதம் தோன்ற, எறியும் படைக்கலங்களையுடைய அரக்கர்கள், வறியவர் பலர், 'இரந்து ஏற்றகையை இல்லை என்று கூறி மாற்ற மாட்டான்' என்று கருதி வள்ளல் தன்மையை மேற்கொண்டவனாகிய ஒருவன்மேல் சென்றாற்போல இலக்குவனை எதிரேற்றார்கள்.

கு:—வீரம் மிக்க இலக்குவன் ஒருவன்மேல் அரக்கர் பலர் எதிர்த்துச் சென்றது, ஒரு வள்ளலிடத்து இரவலர் பலர் ஏற்கச் சென்றது போன்றது என்றவாறு. ஏற்றல் என்பது, இரத்தலையும் எதிர்த்தலையும் உணர்த்தும் சொல்லாதல் நினைந்து, இங்ஙனம் உவமை கூறினார். வள்ளல் தன்பால் ஏற்றார் சலிக்கக் கொடுப்பது போல இலக்குவனும் தன்னை எதிர்த்து வந்த அரக்கர் சலிக்க அம்பு எய்வான் என்பதும் குறிப்பிட்டவாறு. 'ஏற்ற கை மாற்றாமை யென்னானும் தரம் வரையாது ஆற்றாதார்க் கீவதாம் ஆண்கடன்' (நாலடி - 98) என்ற பகுதியை மூன்றாமடி நினைப்பித்தல் காணலாம். தம் தலைவனைப் பகைவன் நெருங்கப் பார்த்துக்கொண்டு வாளா இருப்பது வீரர்க்கு அழகன்று என்ற கருத்தால் 'மனிசன் இன்று எம்மிறைவனை யுறுகிற்பானேல் வெறுவிது நந்தம் வீரம்' என்று அரக்கர் பெருமிதத்தோடு நினைக்கலாயினர். வறியவர் வண்மை பூண்டவன் ஒருவன்மேற் சென்றென்ன, அரக்கர் இலக்குவன்மேற் சென்று ஏற்றார் என்க. இதனால், இலக்குவன் முழங்கு கடல் ஞால முழுவதும் வரினும் வழங்கத்தவாத கணை வளம் உடையவன் என்பதும் கூறியவாறாயிற்று. (147)

**7291.** அறுத்தன னரக்க ரெய்த
வெறிந்தன வறுத்த ருத
பொறுத்தனன் பகழி மாரி
பொழிந்தன னுயிரின் போகம்
வெறுத்தன னமனும் வேலை
யுதிரத்தின் வெள்ள மீள
மறித்தன மறிந்த வெங்கும்
பிணங்களம் மலைகண் மான.

அறுத்தனன் அரக்கர் எய்த
எறிந்தன, அறுத்து, அருத
பொறுத்தனன், பகழி மாரி
பொழிந்தனன்; உயிரின் போகம்

வெறுத்தனன் நமனும்; வேலை
உதிரத்தின் வெள்ளம் மீள
மறித்தன; மறிந்த எங்கும்,
பிணங்கள் அம் மலைகள் மான.

பொ :—(இலக்குவன்) அம்பு மழையைப் பொழிந்து அரக்கர் எய்தனவாகிய அம்புகளையும் எறிந்தனவாய வேல் முதலிய வற்றையும் அறுத்து ஒழித்தான்; அங்ஙனம் அறுத்தும் அருது வந்து தாக்கிய படைக்கலங்களைத் தன்னுடம்பில் தாங்கிக் கொண்டான்; எமனும் உயிர்களை நுகரும் நுகர்ச்சியை வெறுத்துவிட்டான்; போர்க் களம் எங்கும் மடங்கிக் கிடக்கின்றனவாகிய பிணங்கள், அழகிய மலைகளைப் போலக், கடலை நோக்கிச் செல்லும் இரத்த வெள்ளம் மீளுமாறு தடுத்தன.

கு :—இலக்குவன் எய்த அம்புகளின் மிகுதி புலப்படப் பகழிமாரி பொழிந்தனன் என உருவகித்தார். அறுத்தும் என்புழி உம்மை விகாரத்தால் தொக்கது. இனி, அறுத்தனன், அறுத்து என அனு வாதம் ஆக்கலும் ஆம். பொறுத்தல் - தாங்குதல். போகம் - நுகர்ச்சி. உயிரின் போகம் என்றது, உயிரை உண்ணும் நுகர்ச் சியை. எமன் உண்ணவேண்டிய உயிர்கள் பலவானமையால் அவன் வெறுக்கலானுன். எங்கும் மறிந்த பிணங்கள் அம்மலைகள் மான உதிரத்தின் வெள்ளம் மீள மறித்தன என இயையும். இரத்த வெள்ளமும் பிண மலைகளும் பெருகுமாறு இலக்குவன் போர் செய் தான் என்றவாறு. (148)

**7292.** தலையெலா மற்ற முற்றும்
தாளெலா மற்ற தோளாம்
மலையெலா மற்ற பொற்ருர்
மார்பெலா மற்ற சூலத்
திலையெலா மற்ற வீர
ரெயிறெலா மற்ற கொற்றச்
சிலையெலா மற்ற கற்ற
செருவெலா மற்ற சிந்தி.

தலை எலாம் அற்ற; முற்றும்
தாள் எலாம் அற்ற; தோளாம்
மலை எலாம் அற்ற; பொன்[1]–
தார் மார்பு எலாம் அற்ற; சூலத்து

இலை எலாம் அற்ற; வீரர்
 எயிறு எலாம் அற்ற; கொற்றச்
சிலை எலாம் அற்ற; கற்ற
 செரு எலாம் அற்ற, சிந்தி.

பொ :—(இலக்குவன் எய்த அம்புகளால்) அரக்க வீரருடைய தலைகள் எல்லாம் முற்றும் அற்றன; கால்கள் எல்லாம் அற்றன; தோள்களாகிய மலைகள் எல்லாம் அற்றன; பொன்னாலாய மாலை அணிந்த மார்புகள் எல்லாம் அற்றன. அவர்கள் கையில் பிடித்திருந்த சூலங்களின் மூன்று பிரிவாக அமைந்த இலைகள் எல்லாம் அற்றன; அவர்தம் பற்கள் எல்லாம் அற்றுதிர்ந்தன; அவர்தம் வெற்றி பொருந்திய விற்கள் எல்லாம் முறிந்தன; இங்ஙனம் ஆனமையால் அவ்வரக்கர் கற்றிருந்த போர்த்திறன் எல்லாம் சிந்தி ஒழிந்தன.

கு :—வீரர் என்பது இடைநிலை விளக்காய் வீரர் தலையெலாம் தாளெலாம் தோளாம் மலையெலாம் மார்பெலாம் சூலத்து இலையெலாம் எயிறெலாம் அற்ற என முன்னும், வீரர் சிலையெலாம், செருவெலாம் அற்ற எனப் பின்னும் சென்று இயையும். அரக்க வீரர் தலையும் காலும் தோளும் மார்பும் பல்லும் அற்றவர்களாய்க் கையில் பிடித்த சூலமும் வில்லும் அற்றவராய் அழிந்தொழிந்தமையால் அவர் கற்ற போர்த்தொழில்களும் அவர்களோடே அழிந்தன என்றவாறு. (149)

**7293.** தேரெலாந் துமிந்த மாவின்
 றிறமெலாந் துமிந்த செங்கட்
காரெலாந் துமிந்த வீரர்
 கழலெலாந் துமிந்த கண்டத்
தாரெலாந் துமிந்த நின்ற
 தனுவெலாந் துமிந்த; தத்தம்
போரெலாந் துமிந்த கொண்ட
 புகழெலாந் துமிந்து போய.

தேர் எலாம் துமிந்த; மாவின்
 திறமெலாம் துமிந்த; செங்கண்
கார் எலாம் துமிந்த; வீரர்
 கழல் எலாம் துமிந்த; கண்டத்

தார் எலாம் துமிந்த; நின்ற
தனு எலாம் துமிந்த; தத்தம்
போர் எலாம் துமிந்த; கொண்ட
புகழ் எலாம் துமிந்து போய.

பொ :—(இலக்குவன் அம்புகளால்) அரக்க வீரர்தம் தேர்கள் எல்லாம் துண்டமாயின; தேரிற் பூட்டிய குதிரைகளின் வகை எல்லாம் துண்டமாயின; சிவந்த கண்களையுடைய யானைகள் எல்லாம் துண்டமாயின; அவ் வீரர்தம் வீரக் கழல்கள் எல்லாம் துண்டமாயின; கழுத்தில் அணிந்திருந்த மாலைகள் எல்லாம் அற்று வீழ்ந்தன; அவர் கைகளில் இருந்த விற்படைகள் எல்லாம் துண்டமாயின; அவ் வீரர் ஒவ்வொருவருடைய போர்த்திறங்கள் எல்லாம் சிதைந்து ஒழிந்தன; அவ் வீரர் இதுகாறும் பெற்றிருந்த புகழ் எல்லாம் அழிந்து போயின.

கு :—இச் செய்யுளிலும் வீரர் என்பதை இடைநிலை விளக்காக் கொண்டு முன்னும் கூட்டுக. மா என்றது குதிரையை. செங்கட் கார் என்றது, சிவந்த கண்களையுடைய கரிய முகில் போன்ற யானையை. மேலைச் செய்யுளில் அற்ற என்பதைப் பன்முறைவரத் தொடுத்தது போல இச் செய்யுளில் துமிந்த என்பதைப் பன்முறை வரத் தொடுத்தது சொற்பொருட் பின்வருநிலையணி. கண்டம் - கழுத்து. தனு – வில். அரக்கரின் போர்த்திறன் இலக்குவன் முன் பயன்படாது ஒழிந்தமையின் 'தத்தம் போரெலாந்துமிந்த' என்றார். இதுகாறும் பிறரைச் சென்ற போர்தோறும் வென்று புகழ் எய்திய அரக்கர்கள் இன்று இலக்குவனுக்கு ஆற்றாதவராய்ப் பழி எய்தினமையின் 'கொண்ட புகழ் எலாந்துமிந்த' என்றார். (150)

7294. அரவியற் றறுகண் வன்ரு
ளாள்விழ வாண்மேல் வீழ்ந்த
புரவிமேற் பூட்கை வீழ்ந்த
பூட்கைமேற் பொலன்றேர் வீழ்ந்த
நிரவிய தேரின் மேன்மே
னெடுந்தலை கிடந்த நெய்த்தோர்
விரவிய களத்து ளெங்கும்
வெள்ளிடை யரிது வீழ.

அரவு இயல் தறுகண் வன்தாள்
ஆள்விழ ஆள்மேல் வீழ்ந்த
புரவி மேல் பூட்கை வீழ்ந்த;
பூட்கைமேல் பொலன் தேர் வீழ்ந்த;
நிரவிய தேரின் மேன்மேல்
நெடுந்தலை கிடந்த; நெய்த்தோர்
விரவிய களத்துள் எங்கும்
வெள்ளிடை அரிது வீழ.

பொ:—பாம்புபோன்று சீறும் இயல்பும் அஞ்சாமையுமுடைய வலிய கால்களைக் கொண்ட காலாள் (இலக்குவன் அம்பால் கீழே) வீழ, அந்தக் காலாள்மேல் வீழ்ந்த குதிரைகள்மேல் யானைகள் வீழ்ந்தன; அந்த யானைகள்மேல் அழகிய தேர்கள் வீழ்ந்தன; வரிசைப்பட நிற்கின்ற தேர்களின்மேல் நீண்ட தலைகள் வீழ்ந்து கிடந்தன; இரத்தம் கலந்துள்ள போர்க்களத்தில் இனி வேறொன்று வீழ்தற்கு வெற்றிடம் இல்லையாயிற்று.

கு:—பகைவரைச் சீறும் தன்மையில் காலாள் வீரர் பாம்போடொப்பார் என்பார், 'அரவியற்றறுகண் வன்றாள் ஆள்' என்றார். காலாள்மேல் குதிரையும், குதிரைமேல் யானையும், யானைமேல் தேரும், தேர்மேல் காலாளுமாக நெருங்கிக் கிடந்தமையால் இனி வேறும் ஒன்று வீழ்தற்கு இடம் இல்லையாயிற்று. நிரவுதல்-வரிசைப் படுதல். நெடுந்தலை என்று கூறியது, காலாளின் தலையை. நால் வகைப் படையும் அந்தாதித் தொடையைப் போல ஒன்றன்மேல் ஒன்றாக வீழ்ந்து கிடந்தமை புலப்படுத்தியவாறு. (151)

**7295.** கடுப்பின்க ணமர ரேயுங்
கார்முகத் தம்பு கையால்
தொடுக்கின்றான் றுரக்கின் றானென்
றுணர்ந்திலர் துரந்த வாளி
யிடுக்கொன்றுங் காணார் காண்ப
தெய்தகோ னெய்தி னெய்திப்
படுக்கின்ற பிணத்தின் பம்மற்
குப்பையின் பரப்பே பல்கால்.

கடுப்பின் கண் அமரரேயும்
 'கார்முகத்து அம்பு கையால்
தொடுக்கின்ருன் துரக்கின்ருன்'
 என்று உணர்ந்திலர்; துரந்த வாளி
இடுக்கு ஒன்றும் காணுர்;
 காண்பது எய்த கோல் நொய்தின் எய்திப்
படுக்கின்ற பிணத்தின் பம்மல்
 குப்பையின் பரப்பே பல்கால்.

பொ :—(இலக்குவன் அம்புகளை) விரைவாகச் செலுத்துமிடத்து (இமையாத கண்களையுடைய) தேவர்களும், வில்லில் அம்பினைக் கையால் தொடுக்கின்ருன் என்பதையோ அவற்றை விடுக்கின்ருன் என்பதையோ உணர்கின்றலர்; அவனுல் விடுக்கப்பட்ட அம்பு பகைவரைக் கவ்வுதல் ஆகிய நிகழ்ச்சி ஒன்றையும் காண்கின்றிலர்; அத் தேவர்கள் காண்பது, இலக்குவன் எய்த அம்பு பலமுறை விரைந்து சென்று வீழ்த்துகின்ற பிணங்களின் நெருங்கிய குவியல்களின் பரப்பையே யாகும்.

கு :—கடுப்பு - விரைவு. இமையா நாட்டமுடையராதலின் ஏனையோரினும் பார்ப்பதில் சிறப்புப் பெற்றவர் என்பார், அமரரேயும் என உயர்வு சிறப்பும்மை கொடுத்துக் கூறினுர். தேவர்களும் உணரார்தபடி விரைந்து அம்புகளைத் தொடுத்தலும் விடுத்தலும் செய்தான் இலக்குவன் என்றவாறு. இடுக்குதல் - கவ்வுதல். தொடுத்தலும் விடுத்தலும் காணுராயினும் அவ்வம்பு பகைவர் உடம்புகளைக் கவ்வுதலையேனும் பார்த்தார்களா? எனின், அதுவுஞ் செய்திலர் என்பார் 'இடுக்கொன்றுங் காணுர்' என்ருர். அத் தேவர்கள் கண்டது அவ்வம்பினுல் கொல்லப்பட்ட பிணக் குப்பையின் பரப்பையே என்றவாறு. பம்மல் - நெருக்கம். பல்கால் நொய்தின் எய்தி என இயைக்க. "தடுத்திமை யாமலிருந்தவர், தாளில் மடுத்ததும், நாணுதி வைத்ததும், நோக்கார்; கடுப்பினில் யாரு மறிந்திலர்; கையால் எடுத்தது கண்டனர்; இற்றது கேட்டார்" (பால. கார்முகப்-34) என்ற செய்யுளும், "வரிசிலை நாணிற் கோத்து வாங்குதல் விடுதலொன்றும் தெரிகிலரமரரேயும்" (கும்பகருணன்–21) என்பதும் இங்கு ஒப்புநோக்கத்தகுவன. (152)

**7296.** கொற்றவாள் கொலைவேல் சூலங்
 கொடுஞ்சிலை முதல வாய
வெற்றிவெம் படைகள் யாவும்
 வெந்தொழி லரக்கர் மேற்கொண்

டுற்றன கூற்று மஞ்ச
 வொளிர்வன வொன்று நூரு
வற்றன வன்றி யொன்று
 மருதன வில்லை யன்றே.

கொற்றவாள் கொலைவேல், சூலம்
 கொடுஞ் சிலை முதல வாய
வெற்றி வெம்படைகள் யாவும்
 வெந் தொழில் அரக்கர் மேற்கொண்டு
உற்றன கூற்றும் அஞ்ச
 ஒளிர்வன ஒன்று நூருய்
அற்றன அன்றி ஒன்றும்
 அருதன இல்லை அன்றே.

பொ :—கொடிய தொழிலையுடைய அரக்கர்கள் போர்மேற் கொண்டு ஏந்தினவும், எமனும் அஞ்சுமாறு கொலைத்தொழிலில் சிறந்து விளங்குவனவுமான வெற்றி பொருந்திய வாள், கொல்லுதற் குரிய வேல், சூலம், வளைந்த வில் முதலிய வெற்றிக்குரிய கொடிய படைக்கலங்கள் யாவும் ஒன்று நூருகத் துண்டங்களாயினவே யல்லாமல் துண்டுபடாத படைக்கலங்களே இல்லை.

கு :—அரக்கர் மேற்கொண்டுற்றனவும் ஒளிர்வனவுமாய படைகள் யாவும் அற்றனவன்றி அருதனவில்லை என இயையும். அன்று, ஏ, அசை. நூறு என்பது பல என்னும் கருத்தினது. முதலவாய என்றமையால் இருப்புலக்கை, பிண்டிபாலம், தண்டு, எழு முதலிய கொள்க. (153)

52-ல் பின்வரும் மிகைப்பாடல் காட்டப்பட்டுளது.

7296 a எரிமுகப் பகழி மாரி
 இலக்குவன் சிலையின் கோலிச்
சொரிதர களிறு பொன்றேர்
 துரங்கமோ டிசைந்த காலாள்
நிருதர்க ளலப்பில் கோடி
 நெடும்படைத் தலைவர் வல்லே
பொருகள மீதில் சிந்திப்
 பொன்றினர் என்ப மன்னே

**7297.** குன்றன யானை மானக்
குரகதங் கொடித்தேர் கோப
வன்றிற லாளி சீய
மற்றைய பிறவு முற்றும்
சென்றன வெல்லை யில்லை
திரிந்தில சிறிது போதும்
நின்றன வில்லை யெல்லாங்
கிடந்தன நெளிந்த பார்மேல்.

குன்றன யானை, மானக் குரகதம், கொடித்தேர், கோப
வன்றிறல் ஆளி, சீயம் மற்றைய பிறவும் முற்றும்
சென்றன எல்லை இல்லை; திரிந்தில சிறிது போதும்;
நின்றன இல்லை; எல்லாங் கிடந்தன, நெளிந்து, பார்மேல்.

பொ :—மலைபோன்ற யானைகள், மானமுடைய குதிரைகள், கொடி கட்டிய தேர்கள், வெகுளியுடைய வலிய திறமைமிக்க ஆளிகள், சிங்கங்கள் மற்றுமுள்ள பிறவுமாய் முற்றிலும் போர்க்களத் திற்குச் சென்றனவற்றிற்கு எல்லையே இல்லை; ஆனால் அவைகள் சிறிது நேரமும் அங்குத் திரியவில்லை; நிற்கவும் இல்லை; (இலக்குவன் அம்புபட்டுத்) தரைமேற் கிடந்தனவாய் நெளிந்தன.

கு :—சிறிது போதும் திரிந்தில; சிறிது போதும் நின்றனவில்லை; எல்லாம் பார்மேல் கிடந்தன நெளிந்த என்க. மற்றைய பிறவுமாய் முற்றும் சென்றனவற்றிற்கு எல்லை இல்லை என வினைப்பெயராக்கி நான்கனுருபு விரிக்க. நெளிதலாவது, குற்றுயிரனவாய்த் தரையில் துடிதுடித்தல். (154)

**7298.** சாய்ந்தது நிருதர் தானை
தமர்தலை யிடறித் தள்ளுற்
றோய்ந்தது மொழிந்த தோடி
யுலந்தது மாக வன்றே
வேய்ந்தது வாகை வீரற்
கிளையவன் வரிவில் வெம்பிக்
காய்ந்ததவ் விலங்கை வேந்தன்
மனமெனுங் காலச் செந்தீ.

சாய்ந்தது நிருதர்தானை தமர்தலை
இடறித் தள்ளுற்று
ஓய்ந்ததும் ஒழிந்தது ஓடி
உலந்ததும் ஆக; அன்றே
வேய்ந்தது வாகை வீரற்கு
இளையவன் வரிவில்; வெம்பிக்
காய்ந்தது அவ் இலங்கை
வேந்தன் மனம் எனும் காலச் செந்தீ.

பொ :—அரக்கர் சேனையானது, (பின்னிடும்போது) தம் உறவினர் தலைகளை இடறிக்கொண்டு வீழ்ந்து வலிமை குறைந்து கிடந்ததும், ஒழிந்த சேனைப்பகுதி ஓடிச்சென்று அழிந்ததும் ஆக அடி சாய்ந்தது. அப்பொழுதே வீரனாகிய இராமனுக்கு இளையவனாகிய இலக்குவனது கட்டமைந்த வில் வாகை சூடியது; அந்த இலங்கை வேந்தனாகிய இராவணனது மனமாகிய ஊழிகாலச் செந்தீயானது வெதும்பிக் கொதித்தது.

கு :—உயிர்மேற் காதலுடையவராய் இலக்குவன் அம்பிற்குத் தப்பிப்பிழைக்க எண்ணிய அரக்கர் பின்னிட்டு ஓடுங்கால் முன்னமே இறந்து கிடக்கும் அவர்கள் உறவினரின் தலைகளை இடறி வீழ்ந்து ஓய்ந்து கிடந்தனர் சிலர்; மற்றுஞ் சிலர் அவ்வம்பிற்கு அஞ்சி ஓடிஓடி வலிவு குறைந்து இறந்தனர் என்க. தானை ஓய்ந்ததும் உலந்தது மாகச் சாய்ந்தது; அன்றே இளையவன் வில் வாகை வேய்ந்தது; வேந்தன் மனமெனுங் காலச் செந்தீ காய்ந்தது என இயையும். இராவணன் மனம் சினத்தீயால் நிரம்பப் பெற்றமை புலப்பட 'மன மெனுங் காலச் செந்தீ' என உருவகம் செய்தார். காலச் செந்தீ என்றது உகாந்த காலத்து வடவைத் தீயை. உலத்தல் – அழிதல். உயிர் பிழைக்க விரும்பி ஓடியும் உயிரிழக்கவே நேர்ந்தது என்ற வியப்புறு செய்தியை விளக்கியவாறு. (155)

### இராவணனெருங்கவும் இலக்குவன் பெயராது நிற்றல்

**7299.** காற்றுறழ் கலின மான்றேர்
கடிதினிற் கடாவிக் கண்ணுற்
றேற்றன னிலங்கை வேந்த
னெரிவிழித் திராமன் றம்பி

கூற்றுமால் கொண்ட தென்னக்
கொல்கின்றான் குறுகச் சென்றான்
சீற்றமுந் தானு நின்றான்
பெயர்ந்திலன் சிறிதும் பாதம்.

காற்று உறழ் கலின மான் தேர்
கடிதினின் கடாவிக் கண்ணுற்று
ஏற்றனன் இலங்கை வேந்தன்
எரி விழித்து இராமன் தம்பி
கூற்றுமால் கொண்டது என்னக்
கொல்கின்றான் குறுகச் சென்றான்
சீற்றமும் தானும் நின்றான்;
பெயர்ந்திலன் சிறிதும் பாதம்.

பொ :—காற்றைப் போன்ற வேகத்தையுடைய கடிவாளம் பொருத்தப்பெற்ற குதிரைகள் பூட்டிய தேரை விரைந்து செலுத்திக் கொண்டு கிட்டி இராவணன் எதிர்த்தான்; நெருப்பைப்போல் விழித்துப் பார்த்துக்கொண்டு, எமன் பித்துக் கொண்டாற்போல, அரக்கர் சேனையைக் கொன்று கொண்டிருந்தவனாகிய இலக்குவன், தன்னை எதிர்த்து வந்த இராவணனை நெருங்கிச் சென்றவனாய்ப் பாதம் சிறிதும் பெயராமல் கோபமும் தானுமாக நின்றான்.

கு :—குதிரையின் வேகத்திற்குக் காற்று உவமை. கலினம் - கடிவாளம். கடாவுதல் - செலுத்துதல். கண்ணுறல் - கிட்டுதல். 'வெட்சியாரைக் கண்ணுற்று வளைஇ' (பு-வெ 2, 4 கொளு), என்புழியும் இப்பொருளதாதல் காண்க. ஏற்றனன் - எதிர்த்தனன். எரிவிழித்துக் கொல்கின்றானாகிய இராமன் தம்பி, குறுகச் சென்றானாய்ப் பாதம் பெயர்ந்திலனாய்ச் சீற்றமும் தானும் நின்றான் என இயையும். இலக்குவன் அரக்கரைக் கொன்று குவிக்கும் மிகுதிப் பாட்டைப் பார்க்கின்றவர்கள் எமனே பித்துக்கொண்டு இவ்வாறு கொல்கின்றானோ? என்று எண்ணத் தோன்றும் என்பார் 'கூற்று மால் கொண்டதென்னக் கொல்கின்றான்' என்றார். இலக்குவன் இராவணனை நெருங்கிக் கோபத்தோடு அசையாமல் நின்றான் என்பார், சிறிதும் பாதம் பெயர்ந்திலனாய்ச் சீற்றமும் தானும் நின்றான் என்றார். இலக்குவன் பாதம் பெயராமல் நின்றதற்குக் காரணம் அவன் மேற்கொண்ட சினமேயாகும். சீற்றத்தின் மிகுதியை யுணர்த்த 'சீற்றமுந் தானும் நின்றான்' எனப் பண்பை வேறொரு பண்பிபோலப் பிரித்துக் கூறினார். 'தனியுந் தானுமத் தையலு மாயினான்' (பால-மிதிலைக்-84) என்புழியும் தனிமை என்ற பண்

பிணை வேருக்கிக் கூறி அதன் மிகுதியைப் புலப்படுத்தியிருத்தல் காணலாம். (156)

52ல் 156–1 ஆகப் பின்வரும் மிகைப்பாடல் காணப்படுகின்றது.

7299 a எதிர்வரு மரக்கர் கோமான்
இலக்குவன் றன்னை நோக்கி
மதியிலி மனிதன் நீயும்
வாளமர்க் கொருவன் போலாம்
இதுபொழு தென்கை வாளிக்
கிரையென நகைத்தான் வீரன்
முதிர்தரு கோபம் மூள
மொழிந்தமர் முடுக்க லுற்றுன்.

**7300.** காக்கின்றவென் னெடுங்காவலின்
★ வலிநீக்கிய கள்வா
போக்கின்றுனக் கரிதாலெனப்
புகன்றுன்புகை யுயிர்ப்பான்
கோக்கின்றன தொடுக்கின்றன
கொலையம்புக டலையோ
டீர்க்கின்றன கனலொப்பன
வெய்தானிகல் செய்தான்.

காக்கின்ற என் நெடுங்காவலின்
வலி நீக்கிய கள்வா!
போக்கு இன்று உனக்கு அரிதால்
எனப் புகன்றுன்; புகை உயிர்ப்பான்
கோக்கின்றன தொடுக்கின்றன
கொலை அம்புகள் தலையோடு
ஈர்க்கின்றன கனல் ஒப்பன
எய்தான்; இகல் செய்தான்.

பொ :—(சீதையை) காக்கின்ற என் பெரிய காவலின் வலிமையை வஞ்சகத்தால் நீக்கிய கள்வனே! இன்றைக்குத் தப்பிப் போதல் என்பது உனக்கு 'அரிதாகும்' எனக்கூறிய இலக்குவன், புகையோடு பெருமூச்சு விட்டவனைய் வில்லில் பூட்டித் தொடுத்தற் குரியனவும் தலையை இழுத்துச் செல்லுதற்குரியனவும் நெருப்பை ஒப்பனவும் ஆகிய கொலைத் தொழிலையுடைய அம்புகளை எய்து போர் செய்தான்.

கு :—சீதையைக் காத்து நின்ற இலக்குவன் காவலை மாரீசன் எழுப்பிய வஞ்சக ஒலியால் நீக்கிச் செல்லுமாறு புணர்த்தவன் இராவணனே ஆகலின், 'என் நெடுங்காவலின் வலி நீக்கிய' என்றும், சீதையை வஞ்சித்துக் கவர்ந்தவனாகலின் 'கள்வா' என்றும் அவனை விளித்தான். அன்று தப்பிச் சென்றதுபோல இன்றும் தப்பிக்க இயலாது என்பான், 'போக்கு இன்று உனக்கு அரிதால்' என்றான். இராவணன் செய்த கொடுஞ் செயலை நினைக்கும் தோறும் சினப் புகையும் பெருமூச்சும் தோன்றுதலின் 'புகையுயிர்ப் பான்' என்றார். புகன்றான் என்பது வினையாலணையும் பெயராய் இலக் குவனை யுணர்த்தியது. உயிர்ப்பானாய் எய்தானாய் இகல் செய்தான் என முற்றெச்சங்களாக்கி முடிக்க. கோக்கின்றன என்பதும் முற் றெச்சம். கோத்துத் தொடுக்கின்றனவும் தலையோடு ஈர்க்கின் றனவும் கனலொப்பனவும் ஆகிய கொலையம்புகள் எய்து இகல் செய் தான் என மாற்றி இயைக்க. ஊடுருவிச் செல்லும் பிறர் அம்புகள் போலாது இலக்காகிய தலையையே இழுத்துச் செல்லும் ஆற்ற லுடைய அம்பு என இலக்குவனது அம்பின் சிறப்பியல்பை யுணர்த் தியவாறு. ஈர்த்தல் - இழுத்தல். இகல் - போர். (157)

**7301.** எய்தான்சர மெய்தாவகை
யிற்றீகென விடையே
வைதாலென வைதாயின
வடிவாளியி னறுத்தான்
ஐதாதலி னறுத்தாயினி
யறுப்பாயென வழிகார்
பெய்தாலென சரமாரிகள்
சொரிந்தான் றுயில்பிரிந்தான்.

எய்தான் சரம் எய்தாவகை இற்றீக என இடையே
வைதாலென வைது ஆயின வடி வாளியின் அறுத்தான்
ஐது ஆதலின் அறுத்தாய்; இனி அறுப்பாய் என அழிகார்
பெய்தாலெனச் சர மாரிகள் சொரிந்தான், துயில் பிரிந்தான்.

பொ :—எய்தவனாகிய இலக்குவனது அம்புகள் தன்மேல் படாத படி இடையே இற்றொழிவதாக எனச் சபித்தாற்போலக் கூர்மை யுடையனவும் வடிக்கப்பட்டனவுமான அம்புகளால் (இராவணன்) அறுத்தொழித்தான்; துயில் துறந்தவனாகிய இலக்குவன், (இரா வணனை நோக்கி) "அவ்வம்புகள் சிறியவையாகலின் அறுத்து

விட்டாய்; இனி, அறுத்துவிடு பார்ப்போம்;" எனக் கூறி உலகத்தை அழிக்கின்ற ஊழியிறுதி மேகங்கள் மழை பெய்தாற்போல அம்பு மழையைச் சொரிந்தான்.

கு:—எய்தான் என்றது, இலக்குவனை. வினைப்பெயர். எய்தானது சரம் என்க. இலக்குவன் எய்த அம்புகளை இராவணன் அறுத்த விரைவை நோக்கினவர்கள் இராவணன் அம்பு எய்து அறுக்கவில்லை 'இடையே இற்றீக' எனச் சபித்தே அறுத்திருக்க வேண்டும் எனவே கருதுவார்கள் என்பார், 'சரமெய்தாவகை யிற்றீகென இடையே வைதாலென அறுத்தான்' என்றார். தற்குறிப்பேற்றவணி. எய்தான் சரம் எய்தாவகை என்பது முரண்தொடை. வைதாலென வைதாயின என்பது மடக்கு. வைது-கூர்மையுடையது. வைதாயினவும் வடித்தனவுமாய வாளியின் என்க. ஐது - சிறிது. அழிக்கும் கார் என விரிக்க; வினைத்தொகை. ஊழியிறுதியில் உலகை அழிக்கும் மேகம் மழை பெய்தாற்போல இலக்குவன் அம்புகளைச் சொரிந்தான் என்க. இராவணனால் அறுக்கப்படலாகாது என்று கருதிச் சிறிய அம்புகளை விடாது நெடிய வாளிகளையே சொரிந்தான் என்க. துயில் பிரிந்தான் என்றது இலக்குவனை; தொழிலால் வருபெயர். கான் புகுந்த நாள் முதல் இராமனைக் கண் விழித்துக் காத்து வருபவனாதலின் 'துயில் பிரிந்தான்' என்ற பெயரால் அவனைக் குறித்தவாறு. "கங்கு லெல்லை காண்பளவு நின்றானிமைப்பில னயனமென்றான்" (அயோத்தி - கங்கை - 42) என்றது காண்க. இற்றீக! என்பது ஒரு சொல்; வினைத்திரி சொல். இடையே இற்றீக என்க. (158)

52ல் கீழ்வரும் மிகைப்பாடல் காட்டப்பட்டுளது.

7301 a அரக்கன் மனங் கொதித்தாண்
டகை யமலன்தனக் கிளையோன்
துரக்கும் பல விசிகம்துகள்
படநூறின னது கண்
டருக்கன்குல மருமானழி
காலத்திடை எழுகார்
நெருக்கும்படி சரதாரையின்
நெடுமாமழை சொரிந்தான்.

**7302.** ஆங்குஞ்சர மனையான்விடு
மயில்வாளிக ளவைதாம்
வீங்குஞ்சரற் பருவத்திழி
மழைபோல்வன விலக்காத்

தூங்குஞ்சர நெடும்புட்டிலிற்
சுடர்வேலவற் கிளேயான்
வாங்குஞ்சரம் வாங்காவகை
யறுத்தானற மறுத்தான்.

ஆம் குஞ்சரம் அனேயான் விடும்
அயில் வாளிகள் அவை தாம்
வீங்கும் சரற் பருவத்து இழி
மழை போல்வன விலக்காத்
தூங்குஞ் சர நெடும் புட்டிலின்
சுடர் வேலவற்கு இளேயான்
வாங்குஞ் சரம் வாங்காவகை
அறுத்தான் அறம் மறுத்தான்.

பொ :—அறத்தை மறுத்தவனுகிய இராவணன், வலிமையுடைய தாகிய யானே போல்வனுகிய இலக்குவன் விடுகின்ற, கூதிர்ப் பருவத்தில் பெய்கின்ற பெரிய மழை போல்வனவாகிய, கூரிய அம்புகளே விலக்கிவிட்டு, ஒளி வாய்ந்த வேற்படையையுடைய இராம னுக்குத் தம்பியாகிய இலக்குவன், தன் தோளில் தொங்கிக்கொண் டிருக்கின்ற நீண்ட அம்பருத் தூணியினின்று எடுத்தற்குரிய அம்புகளே எடுக்காதபடி (அந்த அம்பருத்தூணியையே) அறுத்துத் தள்ளினுன்.

கு :—அறம் நம்மால் மேற்கொள்ளத்தக்கது அன்று என மறுத் தவன் இராவணன் என அவன் சிறுமையைப் புலப்படுத்தியவாறு. எனவே அவன் செயல்கள் யாவும் அறத்திற்கு மாறுபட்டே இருக்கும் என்றவாறு. ‘அறம்புகாதிந்த வணிமதிட்கிடக்கை நின்றகத்தின்’ (சுந்தர-ஊர்தேடு-23) என்றதும் இக் கருத்தினதே யாதல் காண்க. வாளிகளவை என்புழி ‘அவை’ பகுதிப் பொருள் விகுதி. மழை போல்வனவாகிய அயில் வாளிகளே விலக்கி (புட்டிலே) அறுத்தான் என்க. சரற்பருவம் என்றது, ஐப்பசியும் கார்த்திகையுமாகிய கூதிர்ப் பருவத்தை. வீங்கு மழை என இயையும். இழிதல் - பெய்தல். தூங்குதல் – தொங்குதல். சரம் - அம்பு. சரநெடும் புட்டில் என்றது நீண்ட அம்பருத்தூணியை. நெடுஞ்சரப் புட்டில் என மாறுக. புட்டிலின் வாங்குதற்கு உரிய சரங்களே வாங்காதபடி அந்த அம்புப் புட்டிலேயே இராவணன் அறுத்தான் எனச் செயப்படு பொருள் வருவிக்கப்பட்டது. சுடர் வேலவன் என்றது இராமனே. வில்லே அன்றி வேலும் அவனுக்கு உரியது என்பது இதனுல் புலனும். (159)

## அனுமன் இடையே புகுதல்

**7303.** அப்போதையி னயர்வாறிய
வனுமானழல் விழியாப்
பொய்ப்போர்சில புரியேலினி
யெனவந்திடை புகுந்தான்
கைப்போதக மெனமுந்தவன்
கடுந்தேரெதிர் நடந்தா
னிப்போரொழி பிற்போருள
விவைகேளென விசைத்தான்.

அப்போதையின் அயர்வு ஆறிய
அனுமான் அழல் விழியா
பொய்ப் போர் சில புரியேல் இனி
என வந்து இடை புகுந்தான்
கைப் போதகம் என முந்து
அவன் கடுந்தேர் எதிர் நடந்தான்
இப் போர் ஒழி; பின் போர்உள;
இவைகேள் என இசைத்தான்.

பொ :—அப்போது பக்கத்தில் இளைப்பாறிய அனுமன், நெருப்புப் பொறி தோன்ற விழித்துப் பார்த்து '(இராவணா!) இனிப் பொய்யான போர்கள் சிலவற்றைச் செய்யாதே!' என்று கூறிக்கொண்டு வந்து, நடுவே புகுந்தவனாய்த் துதிக்கையையுடைய யானைபோல முன்னே அவ்விராவணனது விரைந்து செல்லும் தேர்க்கு எதிரே சென்று 'பின்னே நீ செய்ய வேண்டிய போர்கள் இருக்கின்றன ஆதலால், இந்தப் போரை விடு; யான் சொல்கின்ற இவற்றைக்கேள்' எனச் சொல்லுவானானான்.

கு :—மேல் இராவணன் எய்த அம்பால் 'ஆறுபோற் குருதிசோர வனுமனு மலக்கணுற்றான்' என்று முன் (138) கூறினாராகலின் இங்கு 'அயர்வு ஆறிய அனுமான்' என அந்த அயர்ச்சி நீங்கிப் போரில் முயற்சியுடையவன் ஆனமை புலப்படுத்தியவாறு. அயர்வு-சோர்வு. ஆறுதல் – தணிதல். தன்னாற்றல் முழுவதையும் காட்டிச் செய்யாத போர் பொய்ப் போர் எனப்பட்டது. போதகம் - யானை; கை இனமில் அடை. துதிக்கையில்லாத யானை இன்மை நினைக. கடுந்தேர்-விரைந்து செல்லும் தேர். அனுமன் இசைத்தது வரும் பாடலால் அறியலாம். (160)

## அனுமன் பேருருவங்கொண்டு இராவணனெதிர் நிற்றல்

**7304.** வென்றுயுல கொருமூன்றையு
மெலியாநெடு வலியால்
தின்றுய்செறி கழலிந்திர
னிசையைத்திசை திரித்தா
யென்றுலுமின் றழிவுன்வயின்
னெய்தும்மென விசையா
நின்றுனவ னெதிரேயுல
களந்தானென நிமிர்ந்தான்.

'வென்றுய் உலகு ஒருமூன்றையும்,
மெலியா நெடு வலியால்;
தின்றுய் செறிகழல் இந்திரன்
இசையை; திசை திரித்தாய்;
என்றுலும், இன்று அழிவு உன்வயின்
எய்தும், என இசையா,
நின்றுன் அவன் எதிரே, உலகு
அளந்தான் என நிமிர்ந்தான்.

பொ :—'யார்க்கும் இளைக்காத பெரிய வலிமையால் ஒரு மூன்று உலகத்தையும் வென்றுய்; நெருங்கிய வீரக்கழலை அணிந்த இந்திரன் புகழை அழித்தாய்; திசைகளில் உள்ள யானைகளை வென்று உனக்கு அடங்கியவாக வேறுபடுத்தினுய்; என்றுலும் (அத்தகைய வலிமை படைத்த) உன்னிடத்து அழிவு இன்று எய்தும்' என்று சொல்லிக்கொண்டு அவ்விராவணன் எதிரே உலகளந்த நெடுமால் போலப் பேருருக்கொண்டு நிமிர்ந்து நின்றுன்.

கு :—இந்திரன் புகழை அழித்தாய் என்பான் 'தின்றுய்' என்றுன். தின்னப்படாதனவற்றைத் தின்றதாகக் கூறியது, வழுவமைதியின்பாற்படும்; திசை என்றது திசையானைகளை; அவற்றைத் திரித்தலாவது, அவற்றின் கொம்புகளை ஒடித்து அடக்கி வேறுபடுத்தியது. திரித்தல் - வேறுபடுத்தல். நீ பிறர்பால் செய்த அழிவு இன்று உன்வயின் எய்தும் என்றவாறு; "பிறர்க்கின்னு முற்பகற் செய்யிற் றமக்கின்னு, பிற்பகற் ருமே வரும்" (குறள்-319) என்பதை நினைப்பித்தவாறு. உலகளந்தான் என்றது, மாவலிபால் நிலம் வேண்டிக் குறளனுய்ச் சென்று பெற்று நெடியனுய் மூவுலகும் ஈரடியால் முறைநிரம்பாவகை முடியத் தாவிய சேவடியானுகிய

திருமாலை. பேருருவம் கொள்ளும் இயல்பு அனுமனுக்கும் உண்டு என்பது அனுமப்படலத்தும் உருக்காட்டுப் படலத்தும் கண்டது. (161)

## இராவணனுக்கு அனுமன் தன் பேருருவத்தைக் காட்டல்

**7305.** எடுத்தான்வலத் தடக்கையினை
யதுபோயுல கெல்லா
மடுத்தாங்குற வளந்தான்றிரு
வடியின்வடி வென்ன
மடுத்தாங்குற வளர்ந்தானென
வளர்கின்றவ னுருவம்
கடுத்தானெனக் கொடியாற்கெதிர்
காண்பாயெனக் காட்டா.

எடுத்தான் வலத் தடக்கையினை;
அதுபோய், உலகு எல்லாம்
அடுத்து ஆங்கு உற, அளந்தான்
திருவடியின் வடிவு என்ன,
மடுத்து ஆங்கு உற வளர்ந்தான்
என வளர்கின்றவன், உருவம்
கடுத்தான் எனக் கொடியாற்கு
எதிர் 'காண்பாய்' எனக்காட்டா.

பொ :—(அனுமன்) தனது பெரிய வலது கையினை உயரத் தூக்கினன்; அந்தக் கையானது, உலகையளந்த திருமாலுடைய திருவடியின் வடிவைப்போல, உயரச் சென்று மேல் உலகங்கள் எல்லாவற்றையும் அடுத்துச் சென்று பிரமன் உலகமாகிய அவ் விடத்துப் பொருந்தி நிற்க, (உலகங்களையெல்லாம்) தன்னுள் கலக்கச்செய்து மிகவும் வளர்ந்தவனாகிய அத்திருவிக்கிரமனைப்போல ஓங்கி வளர்கின்றவனாய், நஞ்சுதான் என்னுமாறு கொடியவனாக நிற்கின்ற இராவணனுக்கு 'நின் கண்ணெதிரே நீ காண்பாயாக' எனத் தன் உருவத்தைக் காட்டி,

கு :—அனுமன், உலகளந்த திருவிக்கிரமனது திருவடிபோலப் பிரமனுலகம் புகுமாறு தனது வலது கையை யுயர்த்தி, அவன் வடிவம் போலத்தான் வளர்ந்து, இராவணனை நோக்கி எதிர்காண்பாய் எனத் தன் உருவம் காட்டினன் என்றவாறு. உலகளந்தபோது தூக்கிய திருவடி பிரமனுலகம் புக்கதும் பிரமன் அத்திருவடியைத்

திருமஞ்சன மாட்டியதும் அறிந்தது. உலகளந்தவனின் திருவடி போலக் கையையும், அவன் திருவடிவுபோல வடிவையும் உடையனாக வளர்ந்து இராவணனுக்கு அனுமன் காட்டியது தன்பெருமிதம் தோன்றுதற்கும் அவனை அஞ்சுவித்தற்கும் ஆம். கடு - நஞ்சு. கொடுமை செய்வதில் இராவணன் நஞ்சுபோல்வன் என்றபடி. அனுமன் என்ற எழுவாய் வருவிக்கப்பட்டது. அனுமன் கையினை யெடுத்தான்; அது அளந்தான் திருவடியின்வடி வென்ன உலகெல் லாம் அடுத்துப்போய் ஆங்கு உற, மடுத்து ஆங்கு உற வளர்ந்தான் என வளர்கின்றவனாய்க் கொடியாற்கு எதிர், காண்பாய் எனத்தன் உருவம்காட்டி என இயையும். காட்டா என்ற செய்யாவென்னும் வாய்பாட்டு வினையெச்சம், நிகழ்த்தா, உயிர்ப்பான்; என வரும் செய்யுளில் முடியும். ஆங்கு இரண்டில் முன்னது பிரமனுலகத்தைச் சுட்டியது; பின்னது அசைநிலை. மடுத்தல் - கலக்கச் செய்தல். உற - மிகுதியாக, உற வளர்ந்தான் என்றது, திருவிக்கிரமனை. அளந்தான் என மேல் வந்தமையின், உறவளந்தான் என்றது சுட்டின் பொருளதாய் நின்றது. வளர்ந்தான் வினைப்பெயர். (162)

அனுமனது வீரப் பேச்சு

**7306.** வில்லாயுத முதலாகிய
வயவெம்படை மிடலோ
டெல்லாமிடை பயின்றாய்புய
நாலைந்தினோ டியைந்தாய்
இல்லாய்செரு வலியாய்திறன்
மறவோயினி யெதிரே
நில்லாயென நிகழ்த்தாநெடு
நெருப்பாமென வுயிர்ப்பான்.

வில் ஆயுதம் முதலாகிய வய
வெம்படை மிடலோடு
எல்லாம் இடை பயின்றாய்; புயம்
நால் - ஐந்தினொடு இயைந்தாய்;
இல்லாய் செரு; வலியாய்; திறல்
மறவோய்! இனி, எதிரே
நில்லாய், என நிகழ்த்தா, நெடு
நெருப்பாம் என உயிர்ப்பான்.

பொ :— விற்படை முதலிய வெற்றி தரத்தக்க கொடிய படைக் கலங்களை எல்லாம் வலிமையோடு இவ்வுலகத்தில் பயின்றிருக்கின்றாய்; தோள்கள் இருபதோடு பொருந்தியுள்ளாய்; போர் இல்லாதவனே! வலிமைமிக்கோனே! திறமைமிக்க வீரனே! இப்போது என் எதிரில் நிற்பாயாக' என்று சொல்லிக்கொண்டு பெரிய நெருப்புப்போலப் பெருமூச்சு விடுவான்.

கு :—போர் செய்து வெற்றிபெறுதற்கேற்ற தன்மைகள் யாவும் வாய்த்தவன் இராவணன் என்பதைப் புலப்படுத்தி, அத்தகைய நீ என்னோடு போர்க்கு நிற்பாயாக என்று அனுமன் அறைகூவியவாறு. மிடல் - வலிமை. போர் செய்தற்கு இருபது தோள்களைப் பெற்றிருந்தமையால் எதிர்த்துப் போர் செய்வாரிலையாயினை என்ற கருத்தால் 'இல்லாய் செரு' என்றான். "எய்யென எழுபகை யெங்கு மின்மையால் மொய்பொரு தினவுறு முழவுத் தோளினன" (பால-அரசியற்-12) என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும். இனி - இப்போது. நில்லாய் - நிற்பாயாக. இனி 'என் எதிரே நிற்கமாட்டாய்' எதிர்மறையாகப் பொருள் கூறுவாருமுளர். நிகழ்த்துதல், இங்குச் சொல்லுதலை உணர்த்தியது. (163)

**7307.** நீளாண்மையி னுடனேயெதிர்
நின்றாயிஃ தொன்றோ
வாளாண்மையு முலகேழினொ
டுடனேயுடை வலியும்
தாளாண்மையு நிகராருமி
றனியாண்மையு மினிநின்
றோளாண்மையு மிசையோடுடன்
றுடைப்பேனொரு புடைப்பால்.

நீள் ஆண்மையினுடனே எதிர்
நின்றாய்; இஃது ஒன்றோ?
வாள் ஆண்மையும், உலகு ஏழினொடு
உடனே உடை வலியும்,
தாளாண்மையும், நிகர் ஆரும் இல்
தனி ஆண்மையும், இனி நின்
தோளாண்மையும், இசையோடு உடன்
துடைப்பேன், ஒரு புடைப்பால்.

பொ :—(அனுமன் கூறியவாறு இராவணன் பெரிய துணிவோடு எதிரில் நின்றுஞக, அனுமன் மேலும் கூறுகின்றுன்) பெரிய துணிவோடு என் எதிரில் வந்து நின்றுய்; இது ஒரு பொருளோ? நின் வாளால் காட்டும் ஆண்மையையும், உலகம் ஏழினையும் ஒருங்கே உடைமையாகப் பெற்றுள்ள வலிமையையும் நின் முயற்சியையும், ஒப்பவர் யாருமில்லாதவாறு உயர்ந்த நின் தனித்த ஆண்மையையும் நின் தோள்களின் ஆண்மையையும் நின் புகழோடு ஒருங்கே இப்போது ஒரு குத்தில் ஒழித்து விடுவேன்.

கு :—அனுமன் தன் எதிரில் நிற்பதற்கே பெரிய ஆண்மை வேண்டும் என்ற கருத்தால் 'நீளாண்மையினுடனே யெதிர் நின்றுய் என்றுன். "என்னைமுன் னில்லன்மின் றெவ்விர் பலரென்னை முன்னின்று கன்னின்றவர்" (குறள்-771) என்பது நினைக நீளாண்மை என்றது பெரிய துணிவை. வாளாண்மையையும் வலியையும், தாளாண்மையையும், தனியாண்மையையும், தோளாண் மையையும் ஒருபுடைப்பால் இனிதுடைப்பேன் என இயையும்; உலகு ஏழினை யுடனே உடை என்பது. ஏழினேடு என உருபு மயக்க மாக வந்தது. சிவன் கொடுத்த வாளாலாகிய ஆண்மை சிறப் புடையதாகலின் அதனைத் தனியே சிறப்பித்துக் கூறியவாறு. ஏழுலகத்தையும் தன்னுடைமையாக்குதற்குக் காரணமான வலிமை என்க. தாளாண்மை - முயற்சி. தன்னேரில்லாத ஆண்மை, தனி ஆண்மை எனப்பட்டது. அது பிறர்க்குப் பொதுவன்மையின். இனி துடைப்பேன் என்க. இசை - புகழ். இனி இராவணன் வீணை வித்தகனுய்ச் சிவபிரானை உருக்கிய இசைவல்லான் ஆதல் நினைந்து அந்த இசைப் புலமையோடு துடைப்பேன் என்றதாகவும் கொள்ளலாம். (164)

**7308.** பரக்கப்பல வுரைத்தென்படர்
கயிலைப்பெரு வரைக்கும்
அரக்குற்றெரி பொறிக்கட்டிசைக்
கரிக்குஞ்சிறி தனுங்கா
வுரக்குப்பையி னுயர்தோள்பல
வுடையாயயுர னுடையாய்
குரக்குத்தனிக் கரத்திற்புடை
புடைப்பாற்றுதி கொல்லாம்.

'பரக்கப் பல உரைத்து என்?
படர் கயிலைப் பெருவரைக்கும்,
அரக்கு உற்று எரி பொறிக் கண்
திசைக் கரிக்கும், சிறிது அனுங்கா
உரக்குப்பையின் உயர்தோள் பல
உடையாய்! உரன் உடையாய்
குரக்குத் தனிக் கரத்தின் புடை
புடைப்பு ஆற்றுதி கொல்லாம்.

பொ :—விரிவாகப் பலசொல்லிப் பயன் என்? படர்ந்துள்ள கயிலையாகிய பெரிய மலைக்கும், செவ்வரக்கின்தன்மை பொருந்தி எரிகின்ற தீப்பொறி சிந்தும் கண்களையுடைய திசையானைகட்கும், சிறிதும் கெடாத வலிமைத் திரளையுடைய உயர்ந்த தோள்கள் பல உடையவனே; குரங்கு ஒரு கையால் குத்துகின்ற குத்தினை வலிமை குன்றுமல் தாங்குதியோ?

கு :—கயிலை மலையை எடுத்தமையாலும், திசையானைகள் குத்தினமையாலும் வலிமை குன்றுத தோள்கள், அனுமனது குத்தினல் வலிமை குன்றி அழியும் என்றவாறு. என் கரத்திற் புடை புடைப்பு என்பான், 'குரக்குத் தனிக்கரத்தின் புடைபுடைப்பு' எனத் தன்னைப் பிறன்போலப் படர்க்கையில் கூறினன் அனுமன். இராவணன். 'குரங்குதானே' என்று எள்ளுங் குறிப்பினன் ஆகலின், அனுமன் இங்ஙனம் கூறினன். சுருங்கச் சொல்கின்றேன் என்பான், 'பரக்கப்பல வுரைத்தென்' என்றுன். கயிலை மலையின் பெருமை தோன்றப் 'படர்கயிலைப் பெருவரை' என முன்னும் பின்னும் அடை கொடுத்துச் சிறப்பித்தான். அரக்கு – செவ்வரக்கு. அதன் தன்மையுறுதலாவது சிவத்தல். கோபத்தால் சிவந்து தீப்பொறிபரக்கும் கண்களையுடைய திசையானை என அவற்றின் மதத்தான் மிக்க கதத்தினைப் புலப்படுத்தியவாறு. அனுங்குதல் - கெடுதல்; வருந்துதல். உரம் - வலிமை. குப்பை - குவியல்' இங்கு மிகுதியை யுணர்த்தியது. 'உடையாய் உரனுடையாய்' என்பது, மடக்கு என்னும் சொல்லணி. 'உரனுடையாயாய் ஆற்றுதி கொல்லாம்' என இயையும். புடைப்பு - குத்து. ஆற்றுதல் - தாங்கிக்கொள்ளுதல். (165)

7309. என்றேள்வலி யதனலெடுத்
தியானெற்றவு மிறவா
நின்றுயெனி னீபின்னெனை
நின்கைத்தல நிரையால்

குன்றேபுரை தோளாய்மிடல்
கொடுகுத்துதி குத்தப்
பொன்றேனெனி னின்னோடெதிர்
பொருகின்றிலெ னென்றான்.

' என்தோள் வலி அதனால் எடுத்து
யான் எற்றவும், இறவா -
நின்றாய் எனின், நீ பின் எனை.
நின் கைத்தல நிரையால்,-
குன்றே புரை தோளாய் !—
மிடல் கொடு குத்துதி ; குத்தப்
பொன்றேன்; எனின், நின்னோடு
எதிர் பொருகின்றிலென் ' என்றான்.

பொ :—' மலையை ஒத்த தோளையுடையவனே ! என்னுடைய தோள் வலிமையால் யான் ஓங்கி உன்னைக் குத்தவும் நீ இறவாமல் நின்றாயானால், பின்பு நீ என்னை நின் வரிசையான கைகளால் வலிமைகொண்டு குத்துவாயாக; அவ்வாறு நீ குத்த யான் இறவேன் ; எனினும் பின்னர் நின்னோடு எதிர்த்துப் போர் செய்ய மாட்டேன் ' என்று (அனுமன்) கூறினான்.

கு :—தன்னுடைய ஒருகைக் குத்தினால் இராவணன் இறந்துபட வேண்டும் என்ற துணிவினால் அனுமன் இவ்வாறு வஞ்சினம் கூறலானான். தன்னுடைய குத்தினால் இராவணன் இறக்காவிட்டால் பின் இராவணனோடு போர் செய்வதில்லை என்பதுவே அனுமனுடைய வஞ்சினம். இராவணன் தன் இருபது கைகளாலும் வலிமையெல்லாம் காட்டிக் குத்தினாலும் 'பொன்றேன்' என்று அனுமன் கூறியது, சீதைபால் பெற்ற ஆசியை நினைந்தேயாகும். "பாழிய பணைத்தோள் வீர ! துணையிலேன் பரிவு தீர்த்த, வாழிய வள்ளலே யான் மறுவிலா மனத்தே னென்னின், ஊழியோர் பகலா யோதும் யாண்டெலா முலக மேழும் ஏழும் வீவுற்ற ஞான்றும் இன்றென இருத்தி" என்றாள். (உருக்காட்டுச்-72) என்றது நினைக. மறுவிலா மனத்தளாகிய சீதை சொன்ன இவ்வாழ்த்துப் பொய்யாது என்பதை அனுமன் நன்குணர்ந்தவனாகலின் ' நின்கைத்தல நிரையால் மிடல் கொடு குத்துதி குத்தப் பொன்றேன் ' என இராவணனுக்கு உறுதியாகக் கூறினான். எனினும் எனல்வேண்டும் உம்மை விகாரத்தால் தொக்கது. எதிர்த்துப் பொருகின்றிலன் 'என்பது எதிர் பொருகின்றிலன் என வினையெச்சம் முதனிலையளவாய் நின்றது ' வரிப் புனை பந்து ' என்புழிப்போல. (166)

## அனுமன் கூறியது கேட்டு இராவணன் வியத்தல்

**7310.** காரிற்கரி யவன்மாருதி
கழறக் கடிதுகவா
வீரற்குரி யதுசொற்றனை
விறலோயொரு தனியென்
நேர்நிற்பவ ருளரோபிறர்
நீயல்லவ ரினியுன்
பேருக்குல களவேஇனி
யுளவோபிற வென்றான்.

காரின் கரியவன், மாருதி கழற, கடிது உகவா,
வீரற்கு உரியது சொற்றனை ;- விறலோய் ஒரு தனி என்
நேர் நிற்பவர் உளரோ பிறர் நீயல்லவர்? இனி உன்
பேருக்கு உலகு அளவே? இனி, உளவோ பிற? என்றான்.

பொ :—கருமுகிலினும் மிக்க கருநிறமுடைய இராவணன், அனுமன் அவ்வாறு சொல்லக் கேட்டு மிகவும் மகிழ்ந்து, "வெற்றியுடைய அனுமனே! வீரனுக்கு ஏற்ற சொல்லையே சொன்னாய்; ஒருதனியே (போர்க்கு) என் நேரில் நிற்பவர் நீயல்லாமல் பிறர் இருக்கின்றனரோ? (இலர்) (ஆதலால், இத்தகைய வீரமுடைய) உன்புகழ் பரவுதற்கு உலகம் போதிய பேரளவையுடையதோ? அன்று ஆயினும் பிறவிடம் இல்லையே" என்றான்.

கு :—இராவணன் என்ற பெயர் கேட்டவுடனே அஞ்சி இறப்பவர்களும், அவன் உருவைக் கண்டவுடன் கலங்கி இறப்பவர்களுமே உலகத்துப் பலராதலின், இராவணன் என் நேர் நிற்பவர் உளரோ பிறர்?' என்றான். இராவணன் முன்நின்று அனுமன் அவ்வாறு சொல்லியதே அவ்வனுமனுக்கு வெற்றியாகும் என்ற கருத்தால் 'விறலோய்' என அவனை விளித்தான். ஈசனிருந்த கயிலைமலையை ஊசிவேரொடு பெயர்த்தும், திசையானைகளின் மருப்புகளை ஒடித்தும், இந்திரனை வென்றும் மூவுலகிற்கும் தலைவனாய் இருக்கின்ற தன்னைத் தனியே எதிர்த்து நின்ற அனுமன் துணிவே பெரும் புகழ்க்குக் காரணமாகும் என்பான், 'இனியுன் பேருக்கு உலகளவோ' என்றான். தன்னை எதிர்த்து நின்றமையால் அனுமன் பூமி சிறுகும்படி வளர்ந்த புகழினை யுடையவனானான் என்பது இராவணன் கருத்து. 'மண்டேய்த்த புகழினான்' (சிலப்-மங்கல வாழ்த்து-36) என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும். பேர் - புகழ். 'பிற உளவோ' என்பதற்கு 'நின்புகழ் பரவுதற்குப் பிற இடங்கள் உளவோ? இல்லையே'

ஆதலின், இல்வுலகினளவே நின்புகழ்க்கு அளவாகும் என்பது கருத்தாகக் கொள்க. (167)

7311. ஒன்றுயுத முடையாயலை
யொருநீயென துறவும்
கொன்றுயுயர் தேர்மேனிமிர்
கொடுவெஞ்சிலை கோலி
வன்றானையி னுடன்வந்தவெ
னெதிர்வந்துநின் வலியால்
நின்றுயொடு நின்றுரினி
நிகரோவுரை நெடியோய்.

'ஒன்று ஆயுதம் உடையாய் அலை; ஒரு நீ எனது உறவும் கொன்றாய்; உயர்தேர்மேல் நிமிர் கொடு வெஞ்சிலை கோலி, வன் தானையினுடன் வந்த என் எதிர் வந்து, நின் வலியால் நின்றாயொடு நின்றார் இனி நிகரோ? உரை, நெடியோய்.

பொ :—நெடிதான வடிவினை யுடையவனே! நீ ஆயுதம் ஒன்றும் கையில் கொண்டவன் அல்லை; தனியாக உள்ள நீ, என்னுடைய உறவினரையும் கொன்றொழித்தாய்; (அதுமட்டுமன்றி) உயர்ந்த தேர்மேல் ஏறிக்கொண்டு, உயர்ந்ததாகிய வளைந்த கொடிய வில்லை வளைத்துக்கொண்டு, வலிய சேனையோடு வந்திருக்கின்ற என்னுடைய எதிரில்வந்து, நின் வலிமை மிகுதியால் போர்செய்ய நின்ற நின்னோடு மற்றையோர் இனி நிகராவரோ? சொல்.

கு :—'ஆயுதம் ஒன்றும்' என மாற்றி, உம்மை விரிக்க. ஊர்தியும் ஆயுதமும் இன்றிச் சேனையும் இன்றி வந்து போர்க்கு அறைகூவு கின்ற அனுமனுக்கும், நினைத்த இடத்திற்குச் செல்லத்தக்க தேரும், மழையென அம்புகளைப் பொழியத்தக்க வில்லும், துணை நின்று உதவும் சேனையும் உடையனுயிருக்கின்ற தனக்கும், உள்ள சிறுமை பெருமைகளை யெடுத்துக் காட்டி, அத்தகு சிறுமையிருந்தும் பெருமை யுடைய தன்னொடு பொரவந்த அனுமனை இராவணன் புகழ்ந்தவாறு. இது அனுமனுக்குப் பொருட்குறை விசேடம் ஆகும். தன் உறவின ரைக் கொன்றான் அனுமன் என்று முன்னமே சினமூண்டுள்ள இராவணன் எதிரில், ஆயுதம் ஒன்றும் இன்றித் துணையும் இன்றி வரப், பிறர் எல்லாம் அஞ்சுவாராதலின், 'நின்றாரினி நிகரோ' என்றான். நின்றார் என்றது, ஏனையோரை; எஞ்சி நின்றார் என்றவாறு. (168)

**7312.** முத்தேவர்கண் முதலாயினர்
முழுமூன்றுல கிடையு
மெத்தேவர்க ளெத்தானவ
ரெதிர்வாரிக லென்னேர்
பித்தேறின ரல்லாலிடை
பேராதெதிர் மார்பில்
குத்தேயென நின்ருயிது
கூறுந்தர மன்ருல்.

'முத்தேவர்கள் முதலாயினர், முழுமூன்று உலகிடையே எத்தேவர்கள், எத்தானவர், எதிர்வாரிகல் என்நேர், பித்து ஏறினர் அல்லால்? இடைபேராது, எதிர், "மார்பில் குத்தே" என நின்ருய்; இது கூறும் தரம் அன்ருல்.

பொ :—முழுமையான மூன்று உலகங்களிலும் உள்ள முத்தேவர்கள் முதலானேரில், பித்தம் தலைக்கேறினர் அன்றி, எந்தத் தேவர்கள், எந்த அசுரர்கள் போரில் எனக்கு நேராக எதிர்வார்கள்? (யாரும் எதிர்வாரல்லர்; அங்ஙனமாகவும்) நின்ற இடத்தில் நின்று பெயராமல் 'மார்பில் குத்து' என்று சொல்லி எதிர் நின்ருய்; இவ்வாறு கூறுகின்ற நின் துணிவு சொல்லும் தரத்தது அன்று.

கு :—இராவணனை எதிர்த்தோர் எவரும் உய்யார் ஆதலின், எந்தத் தேவரும் எந்தத் தானவரும் எதிர்வாரல்லர்; தேவர்க்கும் அசுரர்க்கும் இல்லாத துணிபுடையனுய் அனுமன், இராவணனுக்கு எதிர் நின்று 'மார்பில் குத்து' என்று கூறியதுணிவு வியக்கத்தக்கது என்றவாறு. எதிர்வார் எவருமிலர் என்பான், "பித்தேறினரல்லால், எத்தேவர்கள் எத்தானவர் இகல் என் நேர் எதிர்வார்' என்ருன். பித்தர் ஆயின் தம் அழிவு நோக்காது எதிர்த்தல் இயல்பு என்றவாறு. அனுமன் வீரம் சொல்லுக்கு அடங்காதது என்பான், இது கூறுந் தரம் அன்று' என்ருன். (169)

**7313.** பொருகைத்தல மிருபத்துள
புகழும்பெரி துளதால்
வருகைத்தல மதவெங்கரி
வசைபட்டன வருவா

யிருகைத்தல முடையாயெதி
 ரிவைசொற்றனை யினிமேல்
தருகைக்குரி யதொர்கொற்றமெ
 னமர்தக்கது மன்றால்.

'பொரு கைத்தலம் இருபத்து உள; புகழும் பெரிது உளதால்;
வரு கைத்தல மத வெங்கரி வசைபட்டன; வருவாய்,
இருகைத்தலம் உடையாய், எதிர் இவை சொற்றனை இனிமேல்
தருகைக்கு உரியது ஓர் கொற்றம்என்? அமர்தக்கதும் அன்றால்.

பொ :—போர் செய்தற்கு உரிய கைகள் எனக்கு இருபது இருக்கின்றன; போர் செய்து பெற்ற புகழும் பெரிதாக இருக்கின்றது; என் எதிரில் வந்த துதிக்கையையுடைய மதமிக்க கொடிய திசை யானைகள் கொம்புகள் முரியப்பெற்றுப் பழியுற்றிருக்கின்றன; அப்படி யாகவும், இரண்டு கைகளையுடையவனே! என் எதிரில் வருகின்ற வனாய் இத்தகைய துணிவுமிக்க சொல்லைச் சொன்னாய்; இனிமேல் (யான் தோற்று நினக்குத்) தருதற்குரியதொரு வெற்றி யாதுளது? இனி அமர்செய்வது தகுதியுடையதும் அன்று.

கு :—இராவணனுடைய இருபது கைகளை நோக்கியேனும், அவன் புகழை நோக்கியேனும், திசையானைகள் அவனை எதிர்த்து வசையுற்றதை நோக்கியேனும் அஞ்சாமல் விலங்கின் பிறப்பினனாய் இரண்டு கைகளேயுடைய அனுமன், இராவணன் எதிர்நின்று இத் தகைய துணிவுடைய சொல்லைச் சொன்னதே அவ்விராவணனுக்குத் தோல்வி போன்றது என்ற கருத்தால், 'இவை சொற்றனை இனி மேல் தருகைக்குரியது ஓர் கொற்றமென்? என்றான். அனுமனுடைய துணிவுடைய சொல்லே இராவணனை வெற்றி கொண்ட பயனைத் தந்துவிட்டது என்றவாறு. இருபது கைகளையுடைய இராவணன், தன்னினும் குறைந்த இருகைகளையுடைய அனுமனோடு போர் செய் தல் வீரர் மரபுக்கு இழுக்கு ஆகலின், 'அமர்தக்கதும் அன்று' என் றான் எனலுமாம். ஒருகையுடைய தெறிவலோயானும் இருகை சுமந்து வாழ்வேன்' (தொல் - புறத் - 5, நச் - மேற் என்பதும் நினைக. (170)

7314. திசையத்தனை யையும்வென்றது
 சிதையப்புகழ் தெறுமவ்
வசைமற்றினி யுளதேயென
 துயிர்போல்வரு மகனை

அசையத்தரை அரைவித்தனை
யழிசெம்புன லதுவோ
பசையற்றில தொருநீயென
தெதிர்நின்றிவை பகர்வாய்.

'திசை அத்தனையையும் வென்றது
சிதைய, புகழ் தெறும் அவ்
வசை மற்று இனி உளதே?
எனது உயிர்போல்வரும் மகனை
அசையத் தரை அரைவித்தனை;
அழி செம்புனல் அதுவோ
பசையற்றிலது; ஒரு நீ, எனது
எதிர் நின்று இவை பகர்வாய்!

பொ :—எல்லாத்திசைகளையும் வென்ற என் பெருமை சிதையு மாறு என்புகழை அழிக்கின்ற அத்தகைய பழி இதுவல்லது வேறு இனி உண்டோ? (இல்லை;) என்னுயிர் போன்றவனாய், நின்னை எதிர்த்து வந்த, அட்சய குமாரனை உயிர் ஒழியுமாறு, தரையில் அரை படுமாறு தேய்த்தாய்; அவனுடம்பில் நின்று பெருகிய இரத்தமோ, இன்னும் ஈரம்புலராமல் இருக்கின்றது; (இத்தகைய கொடுமை செய்த) தனி ஒருவனாகிய நீ, என் எதிரில் நின்று, இப்படிப்பட்ட சொற்களைத் துணிவோடு சொல்லா நின்றாய்!

கு :—அனுமன் கூறிய சொல், இராவணனுடைய வெற்றியையும் புகழையும் அழித்துவிட்டது; இதுவரை எய்தாத. பழியை உண்டாக்கி விட்டது என்றவாறு. அட்சய குமாரனைத் தரையில் அரைபடத் தேய்த்த குற்றத்தைச் செய்த அனுமன், அவ் அட்சய குமாரனுடைய தந்தையாகிய இராவணன் முன்னின்று அஞ்சாது இந்தச் சொல்லைச் சொன்னது அவனுக்குப் பெரியதோர் இழிதகவைத்தந்தது என்பது புலப்பட 'ஒரு நீ எனது எதிர் நின்று இவை பகர்வாய்' என்றான். சேனையும் ஊர்தியும் ஆயுதமும் இல்லாத ஒரு குரங்கு ஆகிய நீ எனவும், இருபது கைகளும், தேரும், வில் முதலிய ஆயுதங்களும் நால் வகைப் படைகளுமுடைய எனது எதிர் எனவும், எனக்குப் பழிதரத் தக்க இச்சொற்களை எனவும் விரித்துரைக்க. இவை என்றது, 166ஆம் செய்யுளில் கூறியதை. செம்புனல் - இரத்தம். அழி - மிகுதி. அட்ச யனைத் தேய்த்தபோது ஒழுகிய இரத்தம் புலராத முன்னம் அவன் தந்தைக்கு முன்வந்து நின்றால், அவன் வெகுளி பொங்குமே என்ற எண்ணமும் இன்றி, அஞ்சாது வந்து நின்றதோடன்றி, இத்தகைய சொல்லையும் அஞ்சாமல் சொன்னானே! என்பது இராவணன் எண்

ணம், "வாய்த்த அக்கனை வரிசிலை மலையொடும் வாங்கித், தேய்த்த வக்குழம்பு வுலர்ந்தில இலங்கையின் தெருவில்" (இலங்கைக் கேள்விப் - 61) என்பது இங்கு நினைதல் தகும். (171)

52 ல் பின்வரும் மிகைப்பாடல் காணப்படுகிறது.

7314 (a) மாயத்துரு வெடுத்தென்னெதிர் மதியாதிது பெரிதென்
றேயித்தரை நின்றுயென தடவார்சிலை யிடையே
தீயொத்தெரி பகழிக்கிரை செய்வேனிது பொறுத்தேன்
ஞாயத்தொடு மொருகுத்தமர் புரிதற்கெதிர் வரும்நீ.

**7315.** பூணித்திவை யுரைசெய்தனை
யதனுலுரை பொதுவே
பாணித்தது பிறிதென்சில
பகர்கின்றது பழியால்
நாணித்தலை யிடுகின்றிலெ
னனிவந்துல கெவையும்
காணக்கடி தெதிர்குத்துதி
யென்றுன்வினை கடியான்.

'பூணித்து இவை உரை செய்தனை;
அதனுல், உரை பொதுவே;
பாணித்தது; பிறிது என்
சில பகர்கின்றது? பழியால்
நாணித் தலை இடுகின்றிலென்;
நனிவந்து, உலகு எவையும்
காண, கடிது எதிர் குத்துதி'
என்றுன், வினைகடியான்.

பொ :—'சூளினை மேற்கொண்டு இவற்றைச் சொன்னுய் ஆதலின், நின் வஞ்சினச் சொற்கள் வீரர் யாவர்க்கும் பொதுவானதேயாகும்; காலம் தாழ்த்துவிட்டது; வேறு சில சொல்லிப் பயன் என்னை? யான் எனக்கு வரும் பழியால் நாணம் அடைந்து தலை குனியவில்லை; நீ விரைந்து வந்து உலகம் முழுமையும் காணும்படி கடுமையாக எதிர் குத்துவாயாக' என்று கூறினுன், தீவினைகளை விட்டு நீங்காதவனுகிய இராவணன்.

கு :—வினைகடியான் என்றுன் என்க. வினை என்றது தீவினையை. கடிதல் – நீங்குதல், கடிவினையான் என மாற்றி அஞ்சத்தக்க தீவினை

செய்பவன் எனப் பொருள் கூறலும் ஆம். பூணித்தல் - சூளுறுதல் - வஞ்சினம் மேற்கொள்ளுதல். இதனை 'வஞ்சினக் காஞ்சி' என்பர், புறப்பொருள் வெண்பாமாலையுடையார். வஞ்சினங்கூறல் வீரர்தம் இயல்பு ஆதலின் 'உரைபொதுவே' என்றான். பாணித்தல் - காலம் தாழ்த்தல். அனுமன் கூறியவுடன் இராவணன் குகுதுமாறு சொல்லாது அவன் துணிவைப்பற்றி வியந்து கூறிக் காலம் கழித்தமையின் 'பாணித்தது' என்றான். ஒரு குரங்கு இங்ஙனம் வஞ்சினம் கூறுமாறு தான் எளியவனாய்விட்டமை நினைந்து நாணித்தலைகுனிய வேண்டியவன் இராவணன் ஆதலின், 'பழியால் நாணித்தலையிடுகின்றிலென்' என்றான். தன்னால் வெல்லப்பெற்ற உலக முழுமையும் காணின்தன் வெற்றி மேலும் சிறக்கும் என்ற கருத்தால், உலகெவையும் காணக் குத்துதி என்றான். தீவினை செய்வதை விலக்காதவன் அத்தீவினைப் பயனை உறப்போகின்றான் என்ற குறிப்புப் புலப்பட "வினைகடியான் குத்துதி என்றான்" என இராவணனை அப்பெயரால் குறித்தார்.
(172)

## அனுமன் இராவணனைக் குத்துதல்

7316. வீரத்திற மிதுநன்றென
வியவாமிக விளியாத்
தேரிற்கடி திவராமுழு
விழியிற்பொறி சிதறு
ஆரத்தொடு கவசத்துடல்
பொடிபட்டுக வவன்மா
மார்பிற்கடி தெதிர்குத்தினன்
வயிரக்கர மதனால்.

'வீரத்திறம் இதுநன்று!' என வியவா, மிக விளியா,
தேரில் கடிது இவரா, முழுவிழியில் பொறி சிதறு,
ஆரத்தொடு கவசத்து உடல் பொடிபட்டு உக, அவன் மா
மார்பில் கடிது எதிர் குத்தினன், வயிரக்கரம் அதனால்.

பொ :--(அனுமன் இராவணனை நோக்கி) இந்த வீரத்திறம் சிறப்புடையது' என்று வியந்து, மிகவும் ஆரவாரித்துக்கொண்டு அவனது தேரில் விரைந்து ஏறி, அகல விழித்த பெரிய கண்களில் நெருப்புப் பொறிகளைச் சிதறிக்கொண்டு, முத்தாரத்தோடு கவசத்தை யணிந்த அவனுடல் பொடிபட்டுச் சிந்துமாறு, எதிரே நின்று தன் வயிரம்போன்ற வலிய கையால் அவன் விரிந்த மார்பில் கடுமையாகக் குத்தினான்.

கு :—விளித்தல் - ஆரவாரித்தல். குத்து என இராவணன் கூறியதை நினைந்து வீரத்திறம் இது நன்று என அனுமன் வியந்தவாறு. இவர்தல்-ஏறுதல். சினத்தால் அகலவிழித்த விழியாதலின் முழுவிழி எனப்பட்டது. கடிது - கடுமை. கடிது குத்தினன் என இயையும். (173)

## அனுமனது குத்தின் விளைவுகள்

**7317.** அயிருக்கன நெடுமால்வரை
யனலுக்கன விழிகள்
தயிருக்கன முழுமூளைக
டலையுக்கன தரியா
வுயிருக்கன நிருதக்குல
முயர்வானர மெவையும்
மயிருக்கன வெயிறுக்கன
மழையுக்கன வானம்.

**அயிர் உக்கன, நெடுமால்வரை; அனல் உக்கன, விழிகள்;**
**தயிர் உக்கன, முழுமூளைகள்; தலை உக்கன; தரியா**
**உயிர் உக்கன, நிருதக்குலம்; உயர் வானரம் எவையும்,**
**மயிர் உக்கன, எயிறு உக்கன; மழை உக்கன, வானம்.**

பொ :—(அந்தக் குத்தினால் உண்டான அதிர்ச்சியினால்) நீண்ட பெரிய மலைகள் மணல் போலச்சிதறின; இராவணன் விழிகள் நெருப்பைச் சிந்தின; அவன் தலைகளிலுள்ள முழுமையான மூளைகள் தயிர் போலச் சிந்தின; அரக்கர் கூட்டங்கள் அந்த அதிர்ச்சி தாங்காமல் தலைகள் சிந்தின; உயிர் நீங்கப்பெற்றன; உயர்ந்த வானரங்கள் யாவும் அதிர்ச்சியுற்று மயிரும் பற்களும் சிந்தின; மேகங்கள் மழையைப் பொழிந்தன.

கு :—அயிர் - நுண்மணல். மூளை வெண்ணிறத்ததாகலின் அது சிந்தியதற்குத் தயிர் உவமையானது. நிருதக்குலம் தரியா தலை உக்கன, உயிருக்கன என இயையும். குத்தின் ஒலி கேட்ட அதிர்ச்சியால் இருதிறப் படைகளிலும் அழிவு ஏற்பட்டது என்றவாறு. அச்சத்தால் குரங்குகளின் மயிரும் எயிறும் உதிர்ந்தன என்க. மேகமும் அதிர்ச்சியுற்று நீரைச் சிந்தின என்றமையால் அக்குத்தின் ஒலி விண்ணையும் எட்டியது என்பது புலப்படுத்தியவாறு. உக்கன என்ற சொல் ஒரே பொருளில் பன்முறை வரத் தொடுத்தமையால் இது சொற்பொருட்பின்வருநிலையணி ஆகும். (174)

**7318.** விற்சிந்தின நெடுநாணிமிர்
கரைசிந்தின விரிநீர்
கற்சிந்தின குலமால்வரை
கதிர்சிந்தின சுடரும்
பற்சிந்தின மதயானைகள்
படைசிந்தின ரெவரும்
எற்சிந்தின வெரிசிந்தின
விகலோன்மணி யகலம்.

வில் சிந்தின நெடுநாண்; நிமிர் கரை சிந்தின, விரிநீர்;
கல் சிந்தின, குலமால்வரை; கதிர்சிந்தின, சுடரும்;
பல் சிந்தின மதயானைகள்; படை சிந்தினர், எவரும்;
எல் சிந்தின எரி சிந்தின, இகலோன் மணி அகலம்.

பொ :—(அந்தக்குத்தின் ஒலிகேட்ட அதிர்ச்சியால்) விற்கள் நீண்ட நாண்களைச் சிந்தின; விரிந்த நீரையுடைய கடல்கள் தம் கரைகள் சிந்தப் பெற்றன; எட்டுத் திசைகளிலுமுள்ள குலமலைகள் (பிளந்து) கற்களைச் சிந்தின; சூரியன் சந்திரன் என்ற இருசுடர் களும் தம் கதிர்களை யுதிர்த்தன; திசைகளில் உள்ள மதம்மிக்க யானைகள் தம் பற்கள் சிந்தப்பெற்றன; இருதிறப் படையிலுமுள்ள வீரர் அனைவரும் தம் படைகளைத் தாங்கவியலாது தரையில் சிந்தி னர்; வலிமையிற் சிறந்தவனாகிய இராவணனது மார்பு, ஒளி சிந்து கின்ற நெருப்பைச் சிந்தின.

கு :—சிந்தின என்ற சொல்லைப் பன்முறை வரத்தொடுத்தமை யால் இதுவும் சொற்பின்வருநிலையணி. குத்தின் ஒலிகேட்ட அதிர்ச்சி யால் வில்லிலிருந்த நாண் அறுபட்டது; கடலின் கரை சிதைந்தது; என்க. குலமால்வரை என்றது அட்டகுலமலைகளை. மதயானைகள் என்றது திசையானைகளை. மேலைச் செய்யுளில் அயிருக்கன நெடு மால்வரை என்றது, இலங்கையிலுள்ள மலைகளை என்க. எல் சிந்தின எரி என்க. இகலோன் என்றது இராவணனை. இகல் பகைமையுமாம். (175)

**7319.** கைக்குத்தது படலுங்கழ
னிருதர்க்கிறை கறைநீர்
மைக்குப்பையி னெழில்கொண்டொளிர்
வயிரத்தட மார்பில்

திக்கிற்சின மதயானைகள்
வயவெம்பணை செருவில்
புக்கிற்றன போகாதன
புறமுக்கன புகழின்.

கைக்குத்து அது படலும் கழல்
நிருதர்க்கு இறை கறைநீர்
மைக் குப்பையின் எழில் கொண்டு
ஒளிர் வயிரத் தட மார்பில்
திக்கில் சின மத யானைகள்
வய வெம்பணை செருவில்
புக்கு இற்றன, போகாதன,
புறம் உக்கன, புகழின்.

பொ :—(அனுமனது) கைக்குத்தானது தன்மேல் பட்ட அளவில் வீரக்கழல் அணிந்த அரக்கர்க்குத் தலைவனாகிய இராவணனது, இரத்தநீரைக் கொண்ட கரிய மேகத்திரளின் அழகைக் கொண்டு விளங்குகின்ற வயிரம்போன்று உறுதியான பெரிய மார்பில், திசைகளில் உள்ள மதமிக்க யானைகளின் வலிய கொடிய கொம்புகள் போர் செய்தபோது புகுந்து ஒடிந்தவையாய்ப் பின் அம்மார்பில் நின்று போகாதனவாய் அங்குத் தங்கியவை, அவன் புகழ் சிந்தின என்னுமாறு முதுகின் வழியாகச் சிந்தின.

கு :—இராவணன் திக்கு விசயம் செய்தபோது திசை யானைகளின் கொம்புகள் அவன் மார்பில் புகுந்து முரிந்தன என்பதும், அந்த முரிந்த கொம்புகள் அவன் மார்பிலேயே தங்கியிருந்தன என்பதும், அனுமனது வலிய குத்தினால் அக்கொம்புகள் புறம் போந்தன என்பதும் கூறியவாறு. இதனை "நாடுளதனையுமோடி நண்ணலார் காண்கிலாமல் பீடுளகுன்றம் போலும் பெருந்திசை யெல்லை யானைக் கோடுளதனையும் புக்குக் கொடும்புறத்தழுந்து புண்ணின், பாடுளதன்றித் தெவ்வர் படைக்கலம் பட்டென் செய்யும்" (இராவணன் வதைப் - 212) எனவும், "அப்பணையனைத்தும் மார்புக் கணியெனக் கிடந்த வீரக், கைப்பணை முழங்க மேனாளமரிடைக் கிடைத்த காலன், துப்பணை வயிரவாளி விசையினுங் காலின்றோன்றல் வெப்பணை குத்தினாலும் வெரிநிடைப் போயவன்றே" (213) எனவும், வீடணன் பின்னர்க் கூறுவதால் உணரலாம். கறைநீர் என்றது இரத்தத்தை. மை - மேகம். கறைநீர்மைக்குப்பை, இரத்தநீர் நிரம்பிக் கருந்தோல் போர்த்துள்ள இராவணனுடம்பிற்கு இல்பொருளுவமையாக வந்தது. புகழ் வெண்ணிறத்தது என்பது கவிமரபு ஆதலின் வெண்ணிறக்

கொம்புகள் புறத்து உக்கமைக்குப் புகழின் உக்க எனத்தற்குறிப் பேற்றமாக உவமை கூறினர். அனுமனது குத்துப்பட் டமையால் இராவணன் வெற்றிப்புகழ் நீங்கினமையும் இதனல் குறித்தவாறு. (176)

## இராவணன் தள்ளாடுதல்

**7320.** அள்ளாடிய கவசத்தவிர்
மணியற்றன திசைபோய்
விள்ளாநெடு முழுமீனென
விழவெம்பொறி யெழநின்
றுள்ளாடிய நெடுங்கால்பொர
வொடுங்காவுல குலேயத்
தள்ளாடிய வடமேருவிற்
சலித்தானறம் வலித்தான்.

அள்ளாடிய கவசத்து அவிர்மணி அற்றன, திசைபோய் விள்ளா நெடு முழுமீன் என விழ, வெம்பொரி எழ, நின்று உள் ஆடிய நெடுங்கால் பொர, ஒடுங்கா உலகு உலேயத் தள்ளாடிய வடமேருவின் சலித்தான், அறம்வலித்தான்.

பொ :—(அனுமனுடைய குத்தினல்) அலேவுற்ற கவசத்தில் ஒளி வீசிக் கொண்டிருந்த நவமணிகள் அற்றனவாய், பிளவுருத நெடிய பெரிய விண்மீன்களேப் போலத் திசைகளில் சென்று விழவும், (மார்பில்) வெம்மையான நெருப்புப் பொறிகள் எழவும், தருமத்தைத் துன்புறுத்தியவனை இராவணன், (உலகின்) உள்ளிடத்தே நின்று உலாவி வந்த நெடிய காற்று (ப் பெருவலிகொண்டு) உலகத் துயிர்கள் ஒடுங்கி வருந்துமாறு மோதுதலால், தள்ளாடிய வடமேரு மலேபோலத் தள்ளாடினன்.

கு :—கவசத்து மணி அற்றனவாய் வீழ, பொறிஎழ, இராவணன் சலித்தான் என இயையும். அறம் வலித்தான் என்பது வினைப் பெயராய் இராவணனே யுணர்த்தியது. அள்ளாடுதல்-அலேவுறுதல்; திசைச்செசல். இராவணன் கவசத்தில் பதிக்கப்பெற்றிருந்த நவ மணிகள் பருமையுடையவாதலின், அவை அனுமன் குத்தினல் அற்றுப்போய் வீழ்ந்தமைக்கு, விள்ளா நெடு முழு மீன் வீழ்தலே உவமை கூறினர். விண்மீன்களின் பிதிர்வும் வீழ்தல் உண்டாகலின், அதனே விலக்க, 'விள்ளா நெடு முழு மீன்' எனச் சிறப்பித்தார். பிதிர் வுருத நெடிய முழு விண்மீன்களே விழுந்தனபோல இராவணனு

டைய கவசத்தில் பதித்த மணிகள் வீழ்ந்தன என்றவாறு. வெம் பொறி எழ என்றது, குத்துப்பட்ட மார்பில் தீப்பொறி பறத்தலை யுணர்த்தியவாறு. பத்துத் தலைகளையுடைய இராவணன் மாருதியின் தாக்குதலால் தள்ளாடியது, ஆயிரம் சிகரங்களையுடைய மேருமலை பெருங்காற்றால் தள்ளாடியதுபோல இருந்தது என்றவாறு. உள் நின்று ஆடிய நெடுங்கால் உலகு ஒடுங்கா உலையப் பொருதலால் தள்ளாடிய வடமேருவினைப்போல அறம் வலித்தான் சலித்தான் என இயையும். ஆடுதல், உலாவுதலை உணர்த்தியது. மெல்லிதாய் உலாவிக் கொண்டிருந்த காற்று வலிதாய்ப் பேருருக்கொண்டு வீசியதுபோலச், சிறிய உருவொடு உலாவிக்கொண்டிருந்த அனுமன் பேருருக்கொண்டு இராவணனைக் குத்தினான் எனவும், அப் பெருங் காற்றின் தாக்குதலால் மேருமலை தள்ளாடியதுபோல அனுமனு டைய குத்தினால் இராவணன் தள்ளாடினான் எனவும் உவமையை விரித்துக்கொள்க. தள்ளாடுதல் - நிலைகுலைதல். (177)

## இராவணன் சலித்தமை கண்டு வானவரும் வானரரும் மகிழ்தல்

**7321.** ஆர்த்தார்விசும் புறைவோர்நெடி
தனுமான்மிசை யதிகம்
தூர்த்தார்நறு முழுமென்மல
ரிசையாசிகள் சொன்னார்
வேர்த்தார்நிரு தர்கள்வானரர்
வியந்தாரிவன் விசயம்
தீர்த்தானென வுவந்தாடினர்
முழுமெய்ம்மயிர் சிலிர்த்தார்.

ஆர்த்தார், விசும்பு உறைவோர்
நெடிது; அனுமான்மிசை அதிகம்
தூர்த்தார், நறு முழுமென்மலர்;
இசை ஆசிகள் சொன்னார்;
வேர்த்தார் நிருதர்கள்; வானரர்
வியந்தார், 'இவன் விசயம்
தீர்த்தான்' என உவந்து ஆடினர்,
முழு மெய்ம்மயிர் சிலிர்த்தார்.

பொ :—(இராவணன் சலித்தமை கண்டு) வானுலகத்தில் வாழ்கின்ற தேவர்கள் நெடிது ஆரவாரித்தார்கள்; (பின்பு) அனுமான் மேல் நறுமணம் வீசுகின்ற முழுமையான மெல்லிய மலர்களை யதிகம் சொரிந்து நிறைத்தார்கள்; (பின்பு) புகழ்தரத்தக்க ஆசி மொழிகளைச் சொன்னார்கள்; அரக்கர்கள் (அஞ்சி) வேர்த்தார்கள்; வானரர்கள், அனுமான் செயலைக் கண்டு வியப்புற்றவர்களாய், 'இந்த இராவணனது வெற்றியை ஒழித்துவிட்டான்' என்று கூறிக் கொண்டு மகிழ்ந்து ஆடினார்கள்; அம் மகிழ்ச்சியால் முழு உடம்பும் மயிர் சிலிர்க்கப் பெற்றார்கள்.

கு :—விசும்புறைவோர் என்றது தேவர்களை. நெடிது ஆர்த்தார் எனவும். மலர்கள் அதிகம் தூர்த்தார் எனவும் இயையும். தூர்த்தல்-நிறைத்தல். மலரின் இதழ்களையும் சொரிதல் உண்டாதலின் அதனை விலக்க 'முழு மென்மலர்' என்றார். இசை - புகழ். புகழ் தரத்தக்க ஆசிமொழிகளைச் சொன்னார்கள் என்றவாறு. இனி, இசையோடு ஆசிமொழிகளைச் சொன்னார் எனினும் அமையும். நிருதர்கள் - அரக்கர். அச்சத்தால் வேர்வை உண்டாதல் உண்டு ஆதலின், இராவணன் சலித்தமை கண்டு அஞ்சி நிருதர்கள் வேர்க்கலாயினர் என்க. இவன் என்றது இராவணனை. விசயம் - வெற்றி. தீர்த்தல் - நீக்குதல்; ஒழித்தல். மகிழ்ச்சியால் மயிர் சிலிர்த்தல் உண்டு. மெய் முழுமையும் மயிர் சிலிர்த்தார் என்க.
(178)

## இராவணன் உணர்வு பெறுதல்

**7322.** கற்றங்கியி னெடுவாயுவி
னிலைகண்டவர் கதியால்
மற்றங்கொரு வடிவுற்றது
மாறுடுறு காலைப்
பற்றங்கரு மையினன்னது
பயில்கின்றதொர் செயலால்
உற்றங்கது புறம்போயுடல்
புகுந்தாலென வுணர்ந்தான்.

கற்று அங்கியின் நெடுவாயுவின்
நிலைகண்டவர், கதியால்
மற்று அங்கு ஒரு வடிவு உற்று,
அது மாறுடுறு காலைப்

பற்று அங்கு அருமையின்,
அன்னது பயில்கின்றது செயலால்,
உற்று அங்கு அது புறம்போய்,
உடல் புகுந்தால் என உணர்ந்தான்.

பொ :—யோக நெறியைப் பயின்று (குண்டலியில் எழுகின்ற) அக்கினியின் நிலையினையும், நீண்ட பிராணவாயுவின் நிலையினையும் கண்டறிந்த யோகியர், ஓருயிர்க்குப் பொருந்தியுள்ள உடம்பு பிறப்பால் மாறுபடும்போது அந்தப் பழைய உடம்பில் பற்றில்லாது போகின்றமையால் அந்தப் பற்றறுதலைப் பயில்கின்ற நோக்கத்தால், தாம் பொருந்தியிருந்த அவ்வுடம்பில் நின்று புறத்தே சென்று, மீண்டும் தம்முடம்பில் புகுந்தாற்போல, நீங்கிய உணர்வினை இராவணன் மீண்டும் வரப்பெற்றான்.

கு :—பிறிதோருடம்பில் நுழையப் புறம்போகிய யோகியர் மீட்டும் தம்முடம்பில் நுழைவதுபோல இராவணனுக்குப் போயவுணர்வு மீண்டும் வந்தது என்றவாறு. உவமைக்கேற்ப 'உணர்ந்தான்' என்பதற்கு போய உணர்வு வரப்பெற்றான் என்று பொருள் கூறப்பெற்றது. யோகியர் கூடுவிட்டுக் கூடு பாய்தற்குக் காரணமும் இதனால் விளக்கக் கம்பர், கதியால் மற்றங்கொரு வடிவுற்றது மாறுடுறு காலைப் பற்றங் கருமையின் அன்னது பயில்கின்றதொர் செயலால் என்றார். உற்றதாகிய ஒரு வடிவு கதியால் மாறுடுறுகாலை என இயையும். ஆவின் உடம்பில் இருந்தபோது தன் கன்றுக்கு அன்பு செய்ததோர் உயிர் அவ்வுடம்பு நீங்கிப் புலி உடம்பு எடுத்துழி அக் கன்றுக்குத் தீங்கு செய்தல் இயல்பு ஆகலின், உடம்பு மாறுபடுங்கால் பழைய உடம்பில் இருந்த பற்று நீங்குகின்றது என்பதை அறிந்த யோகியர், தாம் எடுத்த உடம்பில் பற்று நீங்குதற்குப் பயில விரும்பிய நெறியால் தம் யோக ஆற்றலைக்கொண்டு நின்ற உடம்பை விடுத்துப் பிறிதோருடம்பிற் புகுந்து பின் தம் பழைய உடம்பில் புகுவார்கள் என்றவாறு. அங்கி என்றது குண்டலியில் எழுப்பிய ஓமாக்கினியை. நெடுவாயு வென்றது இடைகலை, பிங்கலை, சுழுமுனை என்ற நாடிகளில் இயங்கும் பிராணவாயுவை. கதி - பிறப்பு. அன்னது என்றது, அந்தப் பற்றறுதலை. தம்முடம்பில் பற்றறுதலைப் பயிலவேண்டி யோகியர் தம்முடம்பை விட்டுப் பிறிதோருடம்பிற் புகுவர் என்ற முறையை இங்கு விளக்கியவாறு காணலாம். "ஏய்ந்த தம்முடம்பிட்ட வுயிர்க்கிடம், ஆய்ந்து கொள்ளு மறிஞரின் ஆழ்கடற் பாய்ந்த பண்டுறையும் மலைப் பாந்தள்கள், போந்த மாமலையின் முழை புக்கவே" (சேதுபந்தனப் - 36) என்புழியும் கூடுவிட்டுக் கூடுபாயும் இயல்பைக் கம்பர் விளக்கியுள்ளது காணலாம்.

(179)

1, 41, 52 என்ற எண்ணுள்ள சுவடிகளில் பின்வரும் மிகைப் பாடல் காணப்படுகின்றது.

7322 a கற்றங்கிய முழுமார்பிடைக் கவியின்கர மதனால்
உற்றென்றிய குத்தின்வலி யதனாலுட லுணைவான்
பற்றின்றிய வொருமால்வரை யனையானெடு படியால்
மற்றங்குடல் பெற்றுருயிர் வந்தாலென வுய்ந்தான்.

## இராவணன் அனுமனைப் புகழ்தல் 7323—7325

**7323.** உணராநெடி துயிராவுரை
யுதவாவெரி யுமிழா
இணையாருமி லாயென்றனை
வெய்தாவலி செய்தாய்
அணையாயினி யெனதூழென
வடராவெதிர் படராப்
பணையார்புய முடையானிடை
சிலவிம்மொழி பகர்வான்.

உணரா, நெடிது உயிரா,
உரை உதவா, எரி உமிழா,
'இணை யாரும் இலாய்!
என்றனை எய்தா வலி செய்தாய்!
அணையாய்; இனி, எனது ஊழ்'
என அடரா, எதிர்படரா,
பணையார் புயம் உடையான்,
இடை சில இம்மொழி பகர்வான்.

பொ :—மரக்கிளைகள் போன்று இருபது தோள்களையுடையவனை இராவணன், அவ்வாறு உணர்வு பெற்று, பெருமூச்சு விட்டு (கோபத்தால்) நெருப்பை உமிழ்ந்து கொண்டு பேசத் தொடங்கி, "ஒப்பவர் யாரும் இலாதவனே! என்னை இதுகாறும் அடையாத துன்பத்தைச் செய்துவிட்டாய்; இனி, என்னுடைய முறையாகும்; ஆதலால், வருவாயாக! என்று கூறிக்கொண்டு (அனுமனது எதிர் வந்து நெருங்கி, நடுவே இத்தகைய சொற்கள் சிலவற்றைச் சொல்லுவானானான்.

கு :—உணரா என்பது அனுவாதம்; மேல் உணர்ந்தான் என வந்துள்ளமை காண்க. உணரா, உயிரா, உதவா, உமிழா, அடரா,

படரா என்பன செய்யாவென்னும் வாய்பாட்டு வினையெச்சங்கள் அடுக்கி வந்தன; "நயனநீர் மல்கா, வாழ்த்தா, வாய்குழறு, வணங்கா, மனத்தால் நினைந்துருகி" (திருவாசகம்-கோயில் மூத்த திருப்பதிகம்-10) என்புழிப்போல. எரி உமிழ்ந்து கொண்டு, உரை உதவுதலாவது நெருப்புப் பொறி பறக்கப் பேசத்தொடங்குதல். அனுமனது குத்தினால் அவன் வலிமை நிகரற்றது என்பதை உணர்ந்தவனாகலின் இராவணன் அனுமனை இணையாருமிலாய்! என விளித்தான். என் தனை எய்தாவலி செய்தாய் என்றது, இதுகாறும் யான் அனுபவித்து அறியாத நோயைச் செய்துவிட்டாய் என்றவாறு. அனுமன் குத்தினால் அனுபவித்த துன்பத்தை இராவணன் இதற்குமுன் அனுபவித்ததே இல்லை என்றவாறு. வலி - நோய்; துன்பம். 'யான்பட்ட வலி காண வாராயோ' (சூர்ப்பணகைப் - 102) என்புழியும் வலி இப் பொருளில் ஆளப்பட்டிருத்தல் காணலாம். அணையாய் என்றது, என்பால் நெருங்கி வருவாயாக என்றவாறு. ஊழ் - முறை. அனுமன் குத்த வேண்டிய முறை முடிந்தது ஆகலின், இனி இராவணன் குத்த வேண்டிய முறை வந்தது என்றவாறு. எதிர்படரா - எதிர்வந்து. அடரா - நெருங்கி. பணை - மரக்கிளை. இராவணன் இருபது தோள்களையுடைமை புலப்படப் "பணையார்புய முடையான்" என அவனைக் குறிப்பிட்டவாறு. பணை - பருமை எனலும் ஆம். (180)

**7324.** வலியென்பது முளதேயது
நின்பாலது மறவோய்
அலியென்பவர் புறநின்றவ
ருலகேழினு மடைத்தாய்
சலியென்றெதிர் மலரோனுரை
தந்தாலிறை சலியேன்
மெலிவென்பது முணர்ந்தேனெனை
வென்றாயினி விறலோய்.

வலி என்பதும் உளதே,
அது நின்பாலது மறவோய்!
அலி என்பவர், புறம் நின்றவர்,
உலகு ஏழினும் அடைத்தாய்;
'சலி' என்று எதிர் மலரோன்
உரை தந்தால், இறை சலியேன்;
மெலிவு என்பதும் உணர்ந்தேன்;
எனை வென்றாய், இனி, விறலோய்!

பொ :—வீரனே! (எனக்கு நிகரான) வலிமை என்பதும் இவ்வுல கத்தில் உள்ளதே; அது (வேறு எங்கும் இல்லை) நின் கண்ணதே யாகும்; ஏழு உலகத்தினும் நினக்குப் புறம்பாக நின்றவர்கள் யாரும் அலி என்று எண்ணப்படுவர் என்னுமாறு ஆண்மை நிரம்பினவனு னய்; தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமனே எதிர்நின்று 'நீ தளர்ச்சியடைவாயாக' என்று சாப உரை தந்தாலும், சிறிதும் தளர்ச்சியுருத யான், (இப்போது உன்னுல்) தளர்ச்சி என்பதையும் உணர்ந்து கொண்டேன்; வெற்றியுடையவனே! (இதனுல் நீ என்னை வென்றவனே ஆனுய்.

கு :—வலிக்கு வரம்பாக, அனுமன் உளன் என்பான். 'வலியென் பது முளதேயது நின்பாலது' என அனுமனை நோக்கிக் கூறினுன். தனக்கு நிகரான வலிமை யார் மாட்டும் இல்லை என்று எண்ணி யிருந்தவன் இராவணன் ஆதலின், அனுமன் கைக்குத்துண்டபின இங்ஙனம் கூறலானுன். உலகேழினும் புறநின்றவர் எவரும் அலி என்னப்படுவார் ஆமாறு அடைத்தாய் என ஒரு சொல் வருவித்து முடிக்க. அடைத்தல் - நிரம்புதல். இங்கு ஆண்மை நிரம்புதலை யுணர்த்தியது. அனுமனது ஆண்மையை நோக்க, ஏழுலகினும் உள்ள எவரும் அலி என்னுமாறு ஆண்மை குறைந்தவராயினர் என்றவாறு. புறநின்றவர் என்பது வினைப் பெயராய் மற்றவர்களை யுணர்த்தியது. அலி என்பவர் என்புழிச் செயப்பாட்டுவினை செய் வினையாக வந்தது. அலி எனப்படுவார் ஆக என்க. சலித்தல் - தளர் தல். 'உரைதந்தாலும்' எனல் வேண்டும் உம்மை விகாரத்தால் தொக்கது. சாபத்தில் வலியது கூறுவான், மலரோனுரையைக் கூறி னுன்; அவன் உரை தப்பாதது ஆதல் நினைந்து. இறை-சிறிது. விதி யினும் வலியன் என்பதை இராவணன் விளக்கியவாறு. மெலிதல் என்பதை, இதுகாறு முணராதேன் என்பான், மெலிவென்பதும் உணர்ந்தேன் என இழிவு சிறப்பும்மை கொடுத்துக் கூறினுன். யார்க் கும் தளராத என்னைத் தளர்வித்தாய் ஆதலின், என்னை வென்ற வனே ஆனுய் எனப் புகழ்ந்தவாறு. விறல் – வெற்றி. (181)

**7325.** ஒன்றுண்டினி யுரைநேர்குவ
துன்மார்பினென் ஞெருகைக்
குன்றின்மிசை கடைநாள்விழு
முருமேறெனக் குத்த
நின்றுந்நிலை தருவாயெனி
னின்னேர்பிற ருளரோ
இன்றும்முளை யென்றும்முளை
யிலையோர்பகை யென்ருன்.

'ஒன்று உண்டு இனி, உரை நேர்குவது;
உன்மார்பின், என் ஒருகை,
குன்றின் மிசை கடைநாள் விழும்
உருமு ஏறு எனக் குத்த
நின்று நிலைதருவாய் எனின்,
நின்நேர் பிறர் உளரோ ?
இன்றும் உளை ; என்றும் உளை ;
இலை ஓர் பகை' என்றான்.

பொ :—'இப்போது யான் சொல்லவேண்டியது ஒன்று உளது; உன்னுடைய மார்பில் என்னுடைய ஒருகையால், மலைமேல் ஊழி யிறுதியில் வீழ்கின்ற ஆண் இடிபோல, யான் குத்தவும் நீ மாயாது நிலைத்திருப்பாயானால், நினக்கு ஒப்பாவார் பிறர் இல்லை; நினக்கு ஒரு பகையும் இல்லை; இன்றும் என்றும் நீ நிலைத்திருப்பவனாவாய்' என்றான்.

கு :—குத்தின் வன்மையைப் புலப்படுத்த, "குன்றின் மிசை கடை நாள் விழும் உருமேறென" என உவமை கூறினான். குன்று போன்றவன் அனுமன், அக்குன்றில் வீழும் இடிபோன்றது இராவணனது குத்து என்றவாறு. நிலைதருதல் இறவாது உயிர் பெற்றிருத்தல். இராவணன் தன் குத்தினால் அனுமன் இறந்து படலாம் என்ற எண்ணத்தால் இங்ஙனம் கூறினான். இராவணனது குத்தினால் அனுமன் இறவாதிருப்பின் வலிமையில் அவனுக்கு நிகராவார் பிறர் இலர் என்பதையும் பின்னர் அனுமனை அழிக்கத்தக்க பகையும் இவ்வுலகில் இல்லை என்பதையும் இராவணனே தெளிவுபடுத்தியவாறு. தன்னை யழிக்கத்தக்க பகை மூவுலகிலும் இல்லாமை யறிந்தவன் இராவணன் ஆகலின் இங்ஙனம் கூறினான். சீதையின் அன்புமிகுதியால் கூறிய "உலகமேழும் ஏழும் வீவுற்ற ஞான்றும் இன்றென இருத்தி" (உருக்காட்டுப் - 73) என்ற வாழ்த்துரை போலவே, இராவணன் கூறிய 'என்றுமுளை' என்ற வஞ்சினவுரையும் இருத்தல் காண்க. அனுமானின் சிரஞ்சீவித் தன்மை நட்பாலும் பகையாலும் உருப்பெற்றவாறு நினைந்து நினைந்து வியத்தற்குரியதாகும். இனி உரை நேர்குவது ஒன்றுண்டு என மாறுக. நின்னேர் பிறர் இலர் என்ற கருத்தால் உளரோ? என வினவியவாறு. வினா எதிர்மறைப் பொருளது. கடைநாள் என்றது ஊழியின் கடைநாளை. (182)

**7326.** என்றானெதிர் சென்றானிக
லடுமாருதி யெனை நீ
வென்றாயலை யோவுன்னுயிர்
வீடாதுரை செய்தாய்
நன்றாகநின் னிலைநன்றென
நல்காவெதிர் நடவாக்
குன்றாகிய திரடோளவுன்
கடன்கொள்கெனக் கொடுத்தான்.

என்றான், எதிர் சென்றான்;
இகல் அடு மாருதி, 'எனை நீ
வென்றாய் அலையோ? உன்
உயிர் வீடாது, உரை செய்தாய்;
நன்றாக நின் நிலை நன்று'
என நல்கா, எதிர் நடவா,
குன்று ஆகிய திரள் தோள!
உன் கடன் கொள்கெனக் கொடுத்தான்.

பொ :—என்று கூறியவனாய் இராவணன் அனுமன் எதிரே சென்றான்; பகைவரை அழிக்கவல்ல அனுமன் (என் குத்தினால்) உன்னுயிர் நீங்காது நன்றாக உரையாடினாய் ஆதலின், நீ எனை வென்றாய் அல்லையோ? நின் நிலைமை நன்று என மறுமொழி நல்கி, அவ்விராவணன் எதிர் நடந்துசென்று நெருங்கி, குன்று போன்ற திரண்ட தோள்களையுடையவனே 'உன் கடனைக் கொள்க என்று (தன் மார்பைக்) கொடுத்தான்.

கு :—என்றான் என்பது அனுவாதம்; இங்கு வினைப் பெயராய் இராவணனை உணர்த்தியது. இராவணன் அவ்வாறு கூறிக் கொண்டு அனுமன் எதிரில் சென்றானாக, அனுமனும் இராவணன் வலிமையை வியந்துகூறி எதிர்சென்று தன் மார்பைக் காட்டினான் என்க. இராவணன் தன் மார்பை அனுமன் குத்துதற்குக் கொடுத்தானாகலின் அனுமன் தன் மார்பை அவன் குத்துதற்குக் கொடுப்பது கடன் கொடுப்பது போன்றது என்ற கருத்தால், 'கடன் கொள்க எனக் கொடுத்தான்' என்றார். அனுமனது குத்தினால் இராவணன் இறவாது உரையாடியதே வியப்பு என்ற கருத்தால் 'உயிர் வீடாது நன்றாக உரை செய்தாய் எனை நீ வென்றாயலையோ' என்று அனுமன் கூறினான். நின்னிலை என்றது, தன் குத்தைத் தாங்கி நின்ற நிலையை; அந்த வலிய நிலைமையை நன்று என்று அனுமன் பாராட்டியவாறு. நல்கா, செய்யாவென்னும் வாய்ப்பாட்டு வினையெச்சம்.

மறுமொழி நல்கி; என ஒருசொல் வருவித்து முடிக்க. குன்றின் தன்மைவாய்ந்த தோளாற்றலால் நீ குத்தும் குத்திற்கு அஞ்சேன். என்பான், 'குன்றுகிய திரள் தோள ! உன் கடன் கொள்க' என்று கூறிக்கொண்டு அனுமன் தன் மார்பை இராவணன் குத்துமாறு கொடுத்தான். கொடுத்தல் இங்குக் காட்டுதலை உணர்த்தியது (183)

## இராவணன் குத்துதல்

**7327.** உறுக்கித்தனி யெதிர்நின்றவ
னுரத்திற்றன தொளிர்பல்
லிறுக்கிப்பில நெடுவாய்மடித்
தெரிகண்டொறு மிழிய
முறுக்கிப்பொதி நிமிர்பல்விரல்
நெரியத்திசை முரியக்
குறுக்கிக்கர நெடுந்தோள்புற
நிமிரக்கொடு குத்த.

உறுக்கி, தனி எதிர் நின்றவன்
உரத்தில், தனது ஒளிர்பல்
இறுக்கி, பில நெடுவாய் மடித்து,
எரி கண்தொறும் இழிய,
முறுக்கிப் பொதி நிமிர் பல்விரல்
நெரிய, திசை முரியக்
குறுக்கிக் கரம், நெடுந்தோள்
புறம் நிமிரக், கொடு குத்த.

பொ :—அதட்டிக் கொண்டு தனியே எதிரில் நின்றவனுகிய அனுமானுடைய மார்பில் (இராவணன்) தனது பிலம் போன்ற நீண்ட வாயை மடித்துக்கொண்டு, ஒளிவீசுகின்ற தன் பல்லால் அவ்வாயிதழைக் கடித்துக்கொண்டு, தன் கண்கள்தோறும் நெருப்புப்பொறி சிந்தாநிற்க, திரண்டு நிமிர்ந்துள்ள தன் பல விரல்கள் நெரியுமாறு மடித்துக்கொண்டு, திசை முரியும்படி தன் கையைப் பின் செலுத்திக் குறுக்கிக் கொண்டு, நீண்ட தோள்புறத்தில் சென்று நிமிருமாறு கொண்டு குத்த.

கு :—குத்த என்ற எச்சம், வரும் செய்யுளில் சலித்தான் என்ற சொல்லொடு முடியும். ஒருவனை ஒருவன் குத்துங்கால் ஏற்படும் மெய்ப்பாடுகளை இப்பாடலில் முறைப்படுத்திக் கூறியிருப்பது காணலாம். இது தொழில் தன்மையணி எனப்படும். உறுக்குதல் - அதட்டு

தல். உறுக்குறு சொல்லான், (பஞ்ச சேனுபதிகள் வதைப் -66) என் புழியும் இச்சொல் இப்பொருளில் ஆளப்பட்டிருத்தல் காணலாம். உதட்டை மடித்துப் பல்லால் கடித்துக் கொள்ளுதலும் தீப்பொறி பறக்க விழித்துப் பார்த்தலும், குத்துதற்காகக் கைவிரல்களை நெருங் கச் செய்து முட்டியாக மடித்துக் கொள்ளுதலும் குத்துங்கால் முன் கையைப் பின்செலுத்திக் குறுக்கிக் கொள்ளுதலும், பின்புறத்தே தோளை நிமிர்த்துக் கொள்ளுதலும் ஆகிய தொழில் வேறுபாடுகள் எல்லாம் இங்கு இயல்பாகக் கூறியிருத்தல் கண்டு மகிழ்தற்குரியது. வாய் மடித்துப் பல்லிறுக்கி எனவும், விரல் நெரிய முறுக்கி எனவும் இயையும். பொதி - திரட்சி; விரலுக்கு அடை. திரண்டு நிமிர்ந்த பல விரல்களை மடக்கிக் கொடு என்க. இராவணன் தனது பெரிய கையைக்குறுக்கும்போது திசையும் அஞ்சி இடங்கொடுத்து வளைய என்க. பூரிதல் - வளைதல். (184)

52 ல் கீழ்வரும் மிகைப்பாடல் காட்டப்பட்டுளது.

7327 (a) கொடுத்தாங் கடல் அரக்கன்
கொடுங் கரமொன்றதின் வலியால்
மதித்தானெடு வயமாருதி
மார்பத்திடை வரமேல்
புதைத்தாங்குறு மிடியேறெனப்
பொறிசிந்திய புவனம்
விதித்தான்முத லிமையோருளம்
வெள்கும்படி விட்டான்.

## இராவணன் குத்த அனுமன் சலித்தல்

**7328.** பள்ளக்கடல் கொள்ளப்படர்
படிபேரினும் பதையான்
வள்ளப்பெரு வெள்ளத்தெறுழ்
வலியாரினும் வலியான்
கள்ளக்கறை யுள்ளத்ததிர்
கழல்வெய்யவன் கரத்தால்
தள்ளத்தளர் வெள்ளிப்பெருங்
கிரியாமெனச் சலித்தான்.

பள்ளக்கடல் கொள்ளப் படர் படிபேரினும் பதையான்,
வள்ளப் பெரு வெள்ளத்து எறுழ் வலியாரினும் வலியான்,

கள்ளக் கறை உள்ளத்து அதிர்கழல் வெய்யவன் கரத்தால்
தள்ள, தளர் வெள்ளிப் பெருங்கிரி ஆம் எனச் சலித்தான்.

பொ :—ஆழமான கடல் கொள்ளுதலால் பரந்த இந்தப்பூமி பேர்ந்தாலும் நடுங்காதவனும், வளமிக்க பெரிய வெள்ளம் போன்ற மிக்க வலியவர்களினும் வலியவனும் ஆகிய அனுமான், கள்ளத்தால் கறைபடிந்த மனத்தையும், அதிர்கின்ற வீரக்கழலேயுமுடைய கொடியவனுகிய இராவணன் தன் கரத்தால் (குத்தித்) தள்ள, தளர்கின்ற பெரிய வெள்ளி மலேபோலத் தளர்ந்தான்.

கு :—அனுமனது வலிமை புலப்படப் 'படி பேரினும் பதையான்' என்ருர். படி -பூமி. படி பெயர்வது கடல் கொள்ளப்படுவதால் நிகழ் கின்றமை தோன்றப் பள்ளக்கடல் கொள்ளப்படர்படிபேரினும் என்ருர். பதைத்தல் - நடுங்குதல். வள் - வளம். வளம் வாய்ந்த பெருவெள்ளம் போன்ற பெருவலி படைத்தவரினும் வலிமை மிக்கவன் அனுமன் என்க. எறுழ்வலி - ஒரு பொருட் பன்மொழி; மிக்க வலி என்க. உள்ளத்தில் கள்ளமும் வெளியில் வீரவேடமும் உடைய இராவணன் என்பார், கள்ளக்கறையுள்ளத்து அதிர் கழல் வெய்யவன் என்ருர். நல்லவன் கரத்தாலன்றிக் கள்ளன் கரத்தால் அனுமன் சலிக்க நேர்ந்ததே என்ற இரக்கமும் இங்கு புலப்படுத்தியவாறு. கரத்தால் தள்ளத் தளர்தல் உவமைக்கும் பொருளுக்கும் பொருந்துமாறு கூறிய நயம் காண்க. அனுமன் வெண்ணிறமுடையனுதலின் அவன் இராவணன் குத்தத் தளர்ந்தமைக்கு அவ் இராவணன் கரத்தால் தள்ளத் தளர்ந்த வெள்ளியங்கிரி உவமையாயிற்று. 'ஈசனுண்டிருந்தபேரிலங்கு மால்வரை, ஊசிவேரொடும் பறித்துருட்டு மூற்றத்தான். (சடாயுவதைப் - 42) என்றதால் இராவணன் கரத்தால் தள்ள வெள்ளியங்கிரி தளர்ந்தமை பெறப்படும். பதையாதவனும் வலியாரினும் வலியானுமாகிய அனுமன், வெய்யவன் கரத்தால் குத்தச் சலித்தான் என்க. கரத்தால் தள்ளுதல் அனுமனுக்குக் கூறுங்கால் குத்துதலே யுணர்த்தியது. (185)

அனுமான் சலிக்கச் சலித்தவை

**7329.** சலித்த காலேயி லிமையவ
ருலகொடுஞ் சலித்தார்

சலித்த தாலறஞ் சலித்தது
மெய்ம்மொழி தகவும்

சலித்த தன்றியும் புகழொடு
சுருதியுஞ் சலித்த
சலித்த நீதியுஞ்; சலித்தன
கருணையுந் தவமும்.

சலித்த காலையில், இமையவர் உலகொடும் சலித்தார்; சலித்ததால் அறம்; சலித்தது, மெய்ம்மொழி; தகவும் சலித்தது; அன்றியும், புகழொடு சுருதியும் சலித்த; சலித்த நீதியும்; சலித்தன கருணையும் தவமும்.

பொ:—(அனுமன் அவ்வாறு) தளர்வுற்ற போது, தேவர்கள் தம் உலகத்தோடு நடுங்கினர்கள்; தருமம் தளர்வுற்றது; வாய்மை தளர்ந்தது; மேன்மைக் குணமும் தளர்ச்சியுற்றது; அதுவல்லாமலும் புகழும் சுருதிகளும் சோர்வுற்றன; நீதிகளும் தளர்ந்தன; கருணையும் தவமும் சோர்வுற்றன.

கு:—சலித்த என்ற சொல்லே ஒரே பொருளில் பன்முறை வரத் தொடுத்தமையால் இச்செய்யுளில் சொற்பொருட்பின் வருநிலையணி அமைந்துளது காணலாம். அனுமன் அறமும் வாய்மையும் தகவும் உடையனாய்ச் சுருதிகளைக் கற்றுணர்ந்து புகழோடும் நீதியோடும் கருணையோடும் வாழ்கின்றவனாகலின் அவன் சலித்தபோது அற முதலியன சலித்தன. தேவர்களைக் காக்கும் பணியில் நின்ற அனு மன் சலித்த அளவில் தேவர்களும் அவர்கள் பொன்னுலகமும் தளர்வுறலாயின. (186)

52 ல் பின்வரும் செய்யுள் (186-1) மிகைப்பாடலாகக் காட்டப் பட்டுளது.

7329 (a) உருத்து வெஞ்சினத் தரக்க னங்கொரு கையின் புடைப்ப
வரைத் தடம்புய மாருதி மயங்கிய தறிந்து ஆங்கு
இரைத்த திண்பரித் தேர்நின்று மிருநிலத் திழியச்
சரிந்து வானர மடிந்திடச் சரமழை பொழிந்தான்.

**அப்போது வானரர் மலையை எடுத்து இராவணன்மேல் வீசுதல்**

**7330.** அனைய காலையி னரிக்குலத்
தலைவ ரவ்வழியோ
ரனைவ ரன்னவர் யாவரு
மொருகுவ டேந்தி

நினைவின் முன்னெடு விசும்பொரு
வெளியின்றி நெருங்க
வினையி தென்றறிந் திராவணன்
மேற்செல விட்டார்.

அனைய காலையின், அரிக்குலத் தலைவர் அவ்வழியோர்
எனையர் அன்னவர் யாவரும், ஒரு குவடு ஏந்தி,
நினைவின் முன்நெடு விசும்பு ஒரு வெளி இன்றி நெருங்க,
வினை இது என்று அறிந்து இராவணன் மேல் செலவிட்டார்.

பொ :—அப்போது வானரத்தலைவர்களாய் அவ்விடத்தில் எத்துணையரிருந்தனரோ அவர் அனைவரும் 'இதுதான் நாம் செய்யத் தக்கது' என்று தெளிந்து ஒவ்வொரு மலையினைத் தூக்கி நினைப்பதற்குமுன், நெடிய ஆகாயத்தில் ஒரு சிறிதும் வெளியிடம் இல்லாது நெருங்கும்படி இராவணன் மேல் செல்லுமாறு வீசினார்கள்.

கு :—யாவரும் வினையிது என்று அறிந்து, ஓர் குவடு ஏந்தி இராவணன்மேல் செலவிட்டார் என இயையும். ஒவ்வோர் குவடு ஏந்தி என்க. நினைவின் முன் செலவிட்டார், என இயையும். விடுதலாவது, வீசுதல். வினை என்றது செய்யத்தக்க நற்செயல் என்றவாறு. அவர்கள் மலையை வீசிய விரைவைப் புலப்படுத்த 'நினைவின் முன் செலவிட்டார்' என்றார். மலையை வீசுவார்கள் போலும் என்று இராவணன் நினைப்பதற்கு முன்னம் விட்டார் எனலும் ஆம். (187)

**7331.** ஒத்த கையின ரூழியி
னிறுதியி னுலகை
மெத்த மீதெழு மேகத்தின்
விசும்பெலா மிடையப்
பத்து நூறுகோ டிக்குமேற்
பனிபடு சிகரம்
எத்த மேற்செல வெறிந்தனர்
பிறிந்தன ரிமையோர்.

ஒத்த கையினர், ஊழியின் இறுதியின் உலகை
மெத்த மீது எழு மேகத்தின் விசும்பு எலாம் மிடைய,
பத்து நூறு கோடிக்குமேல் பனிபடு சிகரம்,
எத்த, மேல் செல எறிந்தனர்; பிறிந்தனர் இமையோர்.

பொ :—(வானரவீரர்) ஒரு தன்மைப்பட ஓங்கிய கையினராய், ஊழிக்காலத்து இறுதியில் உலகை அழிப்பதற்கு விண்மேல் எழுகின்ற மேகங்களைப்போல விண்ணிடமெல்லாம் நிறைய ஆயிரங் கோடிக்கு மேற்பட்ட, பனி படிந்துள்ள மலைகளை, மோதித் தாக்குமாறு இராவணன் மேல் எறிந்தார்கள்; தேவர்கள் அஞ்சித் தம் இடம விட்டுச் சென்றார்கள்.

கு :—ஒத்த கையினராய் எறிந்தனர் என்க. வானரவீரர் அனைவரும், தம் கையில் கொண்ட மலைகளை ஒரே காலத்தில் ஒருசேர வீசினார்கள் என்பது கருத்து. அவ்வானரர்கள் எறிந்த ஆயிரங்கோடிக்கு மேற்பட்ட மலைகள் விண்ணில் நெருங்கிச் சென்றமைக்கு ஊழியிறுதியின் மேகங்கள்மிடைவது உவமை. கருமையும் பருமையும் இடமின்றி நெருங்குதலும் பொதுத்தன்மை. மெத்துதல் – மிகுதல்; இங்கு மிகுதிப்பட்டு அழித்தலை யுணர்த்தியது. மிடைதல் - நெருங்குதல். சிகரம் என்றது ஆகுபெயராய் மலையை யுணர்த்தியது. எற்ற என்பது எதுகை நோக்கி எத்த எனப் போலியாய் வந்தது. விண்ணில் நின்று போரைக் கண்டு கொண்டிருந்த தேவர்கள் விண்ணிடம் எல்லாம் மலைகள் நெருங்கி வருவது கண்டு தம்மையும் தாக்குமோ என்ற அச்சத்தால் அவ்விடத்தைவிட்டு அப்பாற் சென்றனர் என்றவாறு. எறிந்தனர் பிறிந்தனர் என்க. எதுகை நயம் நோக்கிப் பிறிந்தனர் என வல்லினம் வந்தது.

(188)

**7332.** தருக்கி வீசிட விசும்பிட
 மின்மையிற் றம்மின்
நெருக்கு கின்றன நின்றன
 சென்றில நிறைந்த
வருக்க னும்மறைந் தானிருள்
 விழுங்கிய தண்டம்
சுருக்க முற்றன ரரக்கரென்
 றிமையவர் சூழ்ந்தார்.

தருக்கி, வீசிட, விசும்பு இடம் இன்மையின், தம்மின்
நெருக்குகின்றன, நின்றன; சென்றில, நிறைந்த;
அருக்கனும் மறைந்தான்; இருள் விழுங்கியது அண்டம்;
சுருக்கம் உற்றனர், அரக்கர் என்று இமையவர் சூழ்ந்தார்.

பொ :—(அவ்வாறு வானரர்கள்) செருக்கோடு வீசிடலால் விண்ணில் போதிய இடமின்மையால் (அம்மலைகள்) தமக்குள் ஒன்றை

ஒன்று நெருக்குகின்றனவாய், ஓரிடத்தில் நின்றன; அங்குச் செல்லு தலும் இல்லாதனவாய், அவ்விண்ணில் நிறைந்திருந்தன; அம்மலை களின் நெருக்கத்தால் சூரியனும் தோன்ருது மறைந்தான்; (அவன் மறைதலால்) இவ்வண்டத்தை நிறைந்த இருள் விழுங்கியது; அரக் கர்கள் அழிந்தார்கள் என்று எண்ணி (நீங்கிய) தேவர்கள் மீண்டும் வந்து சூழ்ந்து கொண்டார்கள்.

கு :—தருக்குதல் - வலிமையால் செருக்குதல். வீசிட நிறைந்த என இயையும். ஏனை நான்கு பூதங்கட்கும் இடம் தந்து அகன்றிருக் கின்ற விசும்பும் அம்மலைகளுக்கு இடம் போதவில்லை என அம்மலை களின் பன்மையைப் புலப்படுத்தியவாறு. நின்றில சென்றில நிறைந்த என்றது, வானரர்கள் வீசிய வேகத்தால் உந்தப்பட்டமை யால் அம்மலைகள் ஓரிடத்தில் நின்றில என்பதும் இடமின்மையால் சென்றிலவாய் அசைவோடே நிறைந்திருந்தன என்பதும் புலப் படுத்தியவாறு. "தோகையர் குழாமு மைந்தர் சும்மையும் துவன்றி யெங்கும், ஏகுமின் ஏகும் என்றென்றிடையிடை நிற்றலல்லால், போகில மீளகில்லா பொன்னகர் வீதியெல்லாம்" (கைகேயி சூழ்வினைப் - 72) என்பது இங்கு ஒப்பு நோக்கத் தகும். மேல் பிரிந் தனர் இமையோர் என்றமையால், அவரே அரக்கர் சுருக்கமுற்றனர் என்ற கருத்தால் மீண்டும் வந்து சூழ்ந்தார் என்க. (189)

**7333.** ஒன்றி னென்றுபட் டுடைவன
விடித்துரு மதிரச்
சென்ற வன்பொறி மின்பல
செறிந்திடத் தெய்வ
வென்றி வில்லென விழுநிழல்
விரிந்திட மேன்மேல்
கன்றி யோடிடக் கன்மழை
நிகர்த்தன கற்கள்.

ஒன்றின் ஒன்று பட்டு உடைவன,
இடித்து உரும் அதிரச்,
சென்ற வன்பொறி மின்பல
செறிந்திட, தெய்வ
வென்றி வில் என விழுநிழல்
விரிந்திட, மேன்மேல்
கன்றி ஓடிடக் கல் – மழை
நிகர்த்தன — கற்கள்.

பொ :—(வானரங்கள் வீசிய) மலைகள் - ஒன்றின்மேல் ஒன்று பட்டு உடைவனவாய் ஒலிசெய்து இடிபோல அதிரா நிற்கவும், தாக்கும்போது அந்த மலையினின்றும் புறப்பட்டுச் சென்ற வலிய நெருப்புப் பொறிகள், மின்னல்கள் பலவற்றைப் போல விண்ணில் நெருங்கா நிற்கவும், (அம்மலைகள் செல்லுங்கால் அவற்றில் நின்றும்) வீழ்கின்ற நிழல்கள், வெற்றியுடைய இந்திர வில் போல விரிந்து காணப்படவும், மேலும் மேலும் தாக்கிக் கல் துகள்கள் விரைந்து வீழ்தலால், கல்மழை சொரியும் மேகம் போன்றன.

கு :—கல்மழை பொழியுங்கால் உளவாகும் இடியும் மின்னலும் இந்திர வில்லும் கற்களும் இவ்வானரங்கள் வீசும் மலைகளிலும் உண்டாதலால், 'கல்மழை நிகர்த்தன கற்கள்' என்ருர். கற்கள் என்றது மலைகளை. மழை – மேகம். மலைகள் மேகம் போன்றன; அவை ஒன்ரேடு ஒன்று தாக்கி ஒலித்தல் இடி போன்றது; தாக்குங்கால் பிதிரும் அனற்பொறிகள் மின்னலைப் போன்றன; வீசப்பட்ட மலை விண்ணில் உயர்ந்து பின் தாழ்ந்து வீழுங்கால் உளதாகும் அம்மலை நிழல்கள் இந்திர வில்லைப் போன்றன; மலைகள் மேலும் மேலும் கன்றுமாறு தாக்குங்கால் சிதைந்து வீழும் கற்பொடிகள் கல்மழை போன்றன என உவமையை விரிக்க. இது ஏது உவமையணி. கன்றுதல் இங்குக் கன்றுமாறு தாக்குதலை உணர்த்தியது. (190)

**7334.** இரிந்து நீங்கின திராக்கதப்
பெரும்படை யெங்கும்
விரிந்து சிந்தின வானத்து
மீனெடு விமானம்
சொரிந்த வெம்பொறி படக்கடல்
சுவறின தோற்றம்
கரிந்த கண்டகர் கண்மணி
யென்பல கழறி.

இரிந்து நீங்கினது இராக்கதப் பெரும்படை; எங்கும் விரிந்து சிந்தின, வானத்து மீனேடு விமானம்; சொரிந்த வெம்பொறி பட, கடல் சுவறின; தோற்றம் கரிந்த கண்டகர் கண்மணி; என் பல கழறி ?

பொ :—(வானரர் வீசிய மலைகளால்) அரக்கர்தம் பெரிய சேனைகள் கெட்டு ஓடின. வானத்தில் உள்ள நட்சத்திரங்களோடு விமானங்கள் எங்கும் விரிவாகச் சிதறி வீழ்ந்தன; (அம்மலைகள் தாக்

கியதால்) சொரிந்த வெம்மையுடைய நெருப்புப் பொறிகள் படுதலால் கடல்கள் நீர் சுவறப் பெற்றன; பல சொல்லிப் பயன் என்னே? கொடியவர்களாகிய அரக்கர்தம் கண்மணிகளின் தோற்றமும் கரிந்து போயின.

கு :—வானரர்கள் வீசிய மலைகளால் உண்டான விளைவுகளை முன்னிரண்டடிகளிலும், அம்மலைகள் ஒன்றையொன்று தாக்கிச் சென்றதால் சொரிந்த தீப்பொறிகளால் உண்டான விளைவுகளைப் பின்னிரண்டு அடிகளிலும் கூறியவாறு. இரிந்து நீங்குதல் - கெட்டோடுதல். வானரர் வீசிய மலைகளால் "தாக்குண்டு விண்மீன்களும் விமானங்களும் தரையில் சிந்தின. மலைகள் ஒன்றை ஒன்று தாக்கியதால் வீழ்ந்த நெருப்புப் பொறியின் வெம்மை மிகுதியால் கடல்கள் நீர்சுவறப் பெற்றன என்றவாறு." அணிகொண்ட குரங்கினங்க ளலை கடலுக் கப்பாலை, மணலொன்று காணமல் வரையெடுத்து மயங்கினவே. (கலிங்கத்துப் பரணி - 96) என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும். கண்டகர் - முள்ளைப்போலத் துன்பஞ் செய்கின்றவர்களாய அரக்கர். தோற்றத்திற்குரிய கண்மணி எனலும் ஆம். அரக்கர்களின் கண்மணியே பார்வை கரிந்தன என்றால் வானரங்கள் வீசிய மலைகளால் விளைந்த விளைவு பற்றிப் பல சொல்ல வேண்டா; அது கொண்டே அனைத்தையும் அறியலாம் என்றவாறு. (191)

## இராவணன் அம்மலைகளை அம்புகளால் விலக்கல்

**7335.** இறுத்த தின்றுல கென்பதோர்
திமிலம்வந் தெய்தக்
கறுத்த சிந்தைய னிராவண
னனையது கண்டான்
ஒறுத்து வானவர் புகழ்கொண்ட
பாரவில் லுளைய
அறுத்து நீக்கின னுயிர
கோடிமே லம்பால்.

**இறுத்தது இன்று உலகு என்பது ஓர் திமிலம் வந்து எய்த**
**கறுத்த சிந்தையன் இராவணன் அனையது கண்டான்;**
**ஒறுத்து வானவர் புகழ்கொண்ட பாரவில் உளைய**
**அறுத்து நீக்கினன் ஆயிர கோடிமேல் அம்பால்.**

பொ :—இன்று உலகம் அழிந்தது என்று கருதுதற்குரிய ஒரு பெரிய ஆரவாரம் தன் செவியில் வந்து அடையவே கோபித்த மனமுடையவனுகிய இராவணன் தன்னை நோக்கிப் பல மலைகள் வருவதைப் பார்த்தான்; (பார்த்தவுடன்) தேவர்களைத் துன்புறுத்தி அவர் புகழைக் கொண்டதாகிய பெரிய வில் வருந்துமாறு வளைத்து ஆயிரங்கோடிக்கு மேற்பட்ட அம்புகளால் அம்மலைகளை அறுத்துத் தள்ளினுன்.

கு :—திமிலம் - பேரொலி. திமில நான்மறைசேர் திருப்பெருந்துறையில் (திவோசகம் - 26-4) என்புழியும் இச்சொல் இப்பொருளில் வழங்கப்பட்டிருத்தல் காணலாம். இறுத்தது, - அழிந்தது; முடிந்தது. அனுமான் தளர்ந்ததைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருந்த இராவணன் வானரர் மலைகளை யெறிந்ததை உணராதிருந்தானுக, அம்மலைகள் தன்னை நோக்கி வரும் பேரொலி கேட்டு அவற்றின் வரவைக் கண்டு விரைந்து வில்லை வளைத்து ஆயிரகோடி அம்புகளைத் தொடுத்து எய்து அம்மலைகளை அறுத்துத் தள்ளினுன். வானரர் எறிந்த மலைகள் ' பத்து நூறு கோடிக்குமேல் பனிபடு சிகரம் ' எனக் கூறப்பட்டமையின், அவற்றை அறுப்பதற்கு இராவணன் ஆயிரகோடிக்கு மேற்பட்ட அம்புகளை ஏவினுன். உளைய வளைத்து என ஒரு சொல் வருவிக்க. (192)

### இராவணன் அம்பால் மலைகள் சாம்பலாதல்

**7336.** காம்பெ லாங்கடுந் துகள்படக்
களிறெலாந் துணியப்
பாம்பெ லாம்பட யாளியு
முழுவையும் பாறக்
கூம்பல் மாமர மெரிந்துகக்
குறுந்துக ணெருங்கச்
சாம்ப லாயின தடவரை
சுடுகணை தடிய.

காம்பு எலாம் கடுந்துடுகள் பட, களிறு எலாம் துணிய, பாம்பு எலாம் பட, யாளியும் உழுவையும் பாற, கூம்பல் மாமரம் எரிந்து உக, குறுந்துகள் நெருங்க, சாம்பல் ஆயின, தடவரை சுடுகணை தடிய.

பொ :—இராவணனது சுடுகின்ற அம்புகள் துணித்தலால் (மலைகளில் உள்ள) மூங்கில்கள் எல்லாம் துகளாகவும், யானைகள்

எல்லாம் துண்டுதுண்டாகவும், பாம்புகள் யாவும் இறக்கவும், யாளியும் புலியும் அழியவும், கூம்பியுள்ள பெரிய மரங்கள் எரிந்து சிந்தவும், அந்தப் பெரிய மலைகள் சிறிய துகளாய் நெருங்குமாறு சாம்பலாயின.

கு :—காம்பு - மூங்கில். பாறுதல் - அழிதல். "பழவினைகள் பாறும் வண்ணம்" (திருவாசகம். 51-1) என்றது காண்க. கூம்பல் - குவிந்து தோன்றுதல். குவிதலாவது அடிப்பகுதி பரந்து நுனிப் பகுதி சுருங்கியிருத்தல். மாமரம் - பெரிய மரம். சுடுகணை தடிய தடவரை சாம்பராயின என்க. அம்மலையிலிருந்து அழிவுற்ற பொருள்களைத் தனித்தனியே துகள்பட, துணிய, பட, பாற, எரிந்துக எனக் கூறி இறுதியில் தடவரை குறுந்துகள் படச் சாம்பராயின என முதற்பொருளின் அழிவைக் கூறினர். துகள்பட என்பது முதலிய செயவெனெச்சங்கள் தடவரை சாம்பராயின என்ற முதல் வினையோடு முடிந்தன. இது சினைவினை முதலொடு முடிந்ததாகும். தடிய என்பது, காரணத்தின்கண்வந்த வினையெச்சம். (193)

### இராவணன் திறலை இமையவர் வியத்தல்

**7337.** உற்ற வாவென்று மொன்றுநா
ருயிர முருவா
இற்ற வாவென்று மிடிப்புண்டு
பொடிப்பொடி யாகி
அற்றவா வென்று மரக்கனை
யடுசிலைக் கொடியோன்
கற்றவா வென்றும் வானவர்
கைத்தலங் குலைந்தார்.

உற்றவா என்றும், ஒன்று நூறு ஆயிரம் உருவா
இற்றவா என்றும், இடிப்புண்டு பொடிப் பொடியாகி
அற்றவா என்றும், அரக்கனை அடுசிலைக் கொடியோன்
கற்றவா என்றும், வானவர் கைத்தலம் குலைந்தார்.

பொ :—(இராவணன் எய்த அம்புகள்) பட்டவிதம் என்னே! என்றும்; ஒரு மலை நூறுயிரம் உருவாகப் பிளந்த விதம் என்னே! என்றும், (அம்பினால்) தாக்குண்டு பொடிப்பொடியாக அவை அழிந்தவாறு என்னே! என்றும், கொடியவனான இராவணன் கொல்லுகின்ற வில்லின் கலையைக் கற்றவிதம் என்னே! என்றும், தேவர்கள் அரக்கனாகிய இராவணனை வியந்து தம் கைகள் நடுங்கினர்.

கு :—அரக்கனை வியந்து வானவர் கைத்தலங் குலைந்தார் என ஒரு சொல் எச்சமாக வருவிக்கப்பட்டது. குலைதல் - நடுங்குதல். உற்றவா என்னே! இற்றவா என்னே! அற்றவா என்னே! கற்றவா என்னே! என வியப்பிற்குரிய என்னே என்ற சொல்லை வருவிக்க; சிலையைக் கொடியோன் கற்றவா என இரண்டனுருபு விரிக்க.

(194)

**7338.** அடறு டைத்துமென் றரிக்குல
வீரரன் றெறிந்த
திடறு டைத்தன தசமுகன்
கரமவை திசைசூழ்
கடறு டைத்தன களத்தினின்
றுயர்தரு பூழி
யுடறு டைத்தன வுதிரமுந்
துடைத்தொண் புடவி.

'அடல் துடைத்தும்' என்று அரிக்குல வீரர் அன்று எறிந்த திடல் துடைத்தன, தசமுகன் கரம்; அவை திசை சூழ் கடல் துடைத்தன; களத்தின் நின்று உயர்தரு பூழி உடல் துடைத்தன உதிரமும் துடைத்தது, ஒண்புடவி.

பொ :—'இராவணனது வலிமையை ஒழிப்போம்' என்று வானரருள் சிறந்த வீரர்கள் அப்பொழுது வீசிய மலைகளை இராவணனுடைய அம்புகள் அழித்தன; அவ்வாறு அழிவுற்றுத் துகளாய மலைகள், நாலு திசைகளிலும் சூழ்ந்துள்ள கடலைத் தூர்த்துவிட்டன; அந்தப் போர்க்களத்தில் அப்போது கிளம்பிய புழுதி, சிறந்த பூமியில் பரவியிருந்த வீரர்களின் உடலைத் துடைத்துக் கொண்டு வெளிவந்த இரத்த வெள்ளத்தையும் துடைத்து விட்டது.

கு :—துடைத்தல் என்ற சொல் பன்முறை வரத் தொடுத்தமையால் இச்செய்யுள் சொற்பின் வருநிலையணி. திடல் என்றது, இங்கு மலையினை. துடைத்தல், அழித்தலை யுணர்த்தியது. தசமுகன் கரம் அரிக்குல வீரர் அன்று எறிந்த திடலைத் துடைத்தன என இயையும். அவை என்றது, தசமுகன் கரத்தால் அழிக்கப்பட்டுத் துகளான மலைகளை. அந்த மலைகளின் துகள்கள் கடலில் வீழ்ந்தமையால் கடல் நீர் வற்றியது என்பார், 'கடல் துடைத்தன' என்றார். கடல் நீரை இல்லையாக்கியது என்றவாறு. ஆயிரகோடி மலைகளும் உடைபட்டமையால் போர்க்களத்தில் எழுந்த புழுதி, அந்தக் களப்பரப்பில்

இதுகாறும், பரவியிருந்த இரத்தவெள்ளத்தில் படிந்து அதனை உலரச் செய்து விட்டது என்பார், 'பூழி உதிரமும் துடைத்த தொண் புடவி' என்றார். உடல் துடைத்தன உதிரம் என உதிரத்திற்கு அடையாக்குக ; வீரர்களின் உடலில் சிறிதும் இன்றி வெளிப்போந்த இரத்தம் என்றவாறு. ஒண்புடவி என்றது போர்க்களம் ஆகிய சிறந்த பூமியினை. இராவணன் கரங்களால் பிளவுண்ட மலைகளால் கடல் வறண்டது ; அப்போது எழுந்த புழுதியால் போர்க்களத்தில் பரவியிருந்த இரத்த வெள்ளம் வறண்டது என இராவணன் சரங் களின் திறலை வியந்தவாறு. உதிரமும் என்புழி உம்மை உயர் சிறப்பு, (195)

**7339.** கொல்வெ னிக்கண மேமற்றிவ்
வானரக் குழுவை
வெல்வென் மானிட ரிருவரை
யெனச்சினம் வீங்க
வல்வன் வார்சிலை பத்துட
னிடக்கையின் வாங்கித்
தொல்வன் மாரியிற் றொடர்வன
சுடுசரந் துரந்தான்.

"கொல்வென், இக்கணமே மற்று இவ் வானரக் குழுவை ;
வெல்வென், மானிடர் இருவரை" எனச் சினம் வீங்க,
வல்வன் வார்சிலை பத்து உடன் இடக்கையில் வாங்கி,
தொல் வன் மாரியின் தொடர்வன சுடு சரம் துரந்தான்.

பொ :—'இந்தக் கணமே இவ்வானரக் கூட்டத்தைக் கொல் வேன் ; (பின்பு) மானிடர் இருவரையும் வெல்வேன்' என்று (இரா வணன்) கோபம் பொங்க, மிக்க வலிமையுள்ள பத்து நீண்ட விற்களை இடக்கைகளில் கொண்டு ஒரு சேர வளைத்துப் பழைய ஊழிக்கடையில் பெய்யும் வலிய மழைபோலத் தொடர்ந்து செல்வன வாகிய, சுடுகின்ற அம்புகளை எய்தான்.

கு :—இக்கணமே கொல்வென், வெல்வென் எனச் சினம் வீங்க வாங்கிச் சரம் துரந்தான் என இயையும். எள்ளுங் குறிப்பால் 'வானரக் குழுவை' என்றும், அதனை அழிக்கக் காலம் பெரிது வேண்டா என்பான், இக்கணமே கொல்வென், என்றும் இராவணன் கூறினான். வானரர் அழிந்த பின் உள்ள மானிடர் இராம இலக்குவர் இருவரே யாதலின் அவ்விருவரை வெல்லுதல் எளிது என்பான்

'வெல்வென் மானிடரிருவரை' என்ருன். வீங்குதல் - மிகுதல். வல்வன் வார்சிலை என்றது, ஒரு பொருட் பன்மொழி; மிக்க வலிமை யுடைய வில் என்றவாறு. இருபது கைகளையுடையவன் இராவணன் ஆதலின், பத்து விற்களை ஒரே முறையில் பத்து இடக் கைகளில் கொண்டு வளைத்துப் பத்து வலக் கரங்களால் அம்புகளை எய்தான் என்க. பத்து வார்சிலை என்க. தொல்வன் மாரி என்றது, ஊழி யிறுதியில் பெய்யும் வலிய மழையை. தொடர்வனவாகிய சரம் என்க. துரத்தல் – எய்தல். (196)

**7340.** ஐயி ரண்டுகார் முகத்தினு
மாயிரம் பகழி
கைக ளீரைந்தி ஞலும்வெங்
கடுப்பினிற் ருெடுப்புற்
றெய்ய வெஞ்சின வானமு
மிருநில வரைப்பும்
மொய்கொள் வேலையுந் திசைகளுஞ்
சரங்களாய் முடிந்த.

ஐ - இரண்டு கார்முகத்தினும் ஆயிரம் பகழி
கைகள் ஈர் – ஐந்தினுலும், வெங்கடுப்பினில் தொடுப்புற்று
எய்ய, எஞ்சின, வானமும், இருநில வரைப்பும்,
மொய் கொள் வேலையும், திசைகளும், சரங்களாய் முடிந்த.

பொ :—பத்து விற்களிலும் ஆயிரம் அம்புகளைப் பத்துக் கைகளி ஞலும் மிக்க விரைவுடன் தொடுத்து எய்ததனுல், (ஏனை நான்கு பூதங்களினும்) மிக்கதாகிய ஆகாயமும், பெரிய நிலவுலகமும், வலிமை கொண்ட கடலும், எட்டுத் திசைகளும் அம்புகளாகவே முடிவுற்றன.

கு :—கடுப்பு - விரைவு. வெங்கடுப்பு என்றது விரைவு மிகுதியை யுணர்த்தியவாறு, ஈரைந்து கைகளினுலும் என மாற்றுக. ஆகாயம் ஏனை நான்கு பூதங்கட்கும் இடம் கொடுத்து விரிந்துள்ளமையால் 'எஞ்சின வானம்' என்று சிறப்பித்தார்; எஞ்சுதல் - மிகுதல். மொய் – வலிமை. மண்ணும் விண்ணும் கடலும் திசைகளும் எல் லாம் அம்புகளாய்க் காட்சியளித்தன என்பார், 'சரங்களாய் முடிந்த' என்ருர். சரங்கள் காட்சியளித்தனவேயன்றி விண்ணும் மண்ணும் முதலியன தோன்றவில்லை என்றவாறு. (197)

**7341.** அந்தி வானக மொத்ததவ்
வமர்க்கள முதிரம்
சிந்தி வேலையுந் திசைகளு
நிறைந்தன சரத்தால்
பந்தி பந்தியாய் மடிந்தது
வானரப் பகுதி
வந்து மேகங்கள் படிந்தன
பிணப்பெரு மலைமேல்.

அந்தி வானகம் ஒத்தது, அவ் அமர்க்களம், உதிரம்
சிந்தி; வேலையும் திசைகளும் நிறைந்தன சரத்தால்
பந்தி பந்தியாய் மடிந்தது, வானரப் பகுதி;
வந்து மேகங்கள் படிந்தன, பிணப்பெரு மலைமேல்.

பொ :—அந்தப் போர்க்களம், இரத்தம் சிந்தப் பெற்றமையால், அந்திப் போழ்தில் தோன்றும் செவ்வானத்தை ஒத்தது; கடலிலும் திசைகளிலும் நிறைந்தனவாகிய அம்புகளால் வானரப்படை வரிசை வரிசையாய் மடிந்து கிடந்தது; அவ்வானரங்களின் பிணங்களாலாகிய பெரிய மலைமேல் மேகங்கள் வந்து படிந்தன.

கு :—சிந்தி என்பது காரணப் பொருளில் வந்த வினையெச்சம்; மழை பெய்து நெல் விளைந்தது என்புழிப்போல. உதிரம் சிந்தப் பெற்றமையால் அமர்க்களம் அந்திவானகம் ஒத்தது. பண்புவமை. 'வேலையும் திசைகளும் சரங்களாய் முடிந்த' என மேல் கூறியதையே அனுவதித்து, வேலையும் திசைகளும் நிறைந்தனவாகிய சரத்தால் வானரப் பகுதி மடிந்தது என்றார். அரக்கர் பகுதியை விலக்க, வானரப் பகுதி என்றார். பிணப்பெருமலை என்றது உருவகம். பிணக்குவியலை மலையென மயங்கி மேகங்கள் வந்து படிந்தன என்றது, மயக்கவணியாகும். மேகங்கள் மலைமேல் படிதல்: இயல்பு
(198)

**7342.** நீல னம்பொடு சென்றில
னின்றில னனிலன்
கால ஞர்வயத் தடைந்தில
னேவுண்ட கவயன்

ஆல மன்னதோர் சரத்தொடு
மங்கத னயர்ந்தான்
சூல மன்னதோர் வாளியாற்
சோம்பினன் சாம்பன்.

நீலன் அம்பொடு சென்றிலன்;
நின்றிலன் அனிலன்;
காலனுர் வயத்து அடைந்திலன்,
ஏவுண்ட கவயன்;
ஆலம் அன்னது ஓர்
சரத்தொடும் அங்கதன் அயர்ந்தான்;
சூலம் அன்னது ஓர்
வாளியால் சோம்பினன், சாம்பன்.

பொ:—நீலன் என்பவன் இராவணன் விட்ட அம்போடு எங்கும் செல்லாது கிடந்தான்; அனிலன் என்பவன் நிற்கவியலாதவனுனுன். அம்பு ஏறுண்ட கவயன் என்பவன், எமனிடத்திற்குப் போகவில்லை; அங்கதன் நஞ்சனைய ஓர் அம்போடு சோர்ந்து விட்டான்; சாம்பன் என்பவன் சூலம் போன்ற ஓர் அம்பினுல் செயலற்றுக் கிடந்தான்.

கு:—நீலன் செல்லும் ஆற்றலை இழந்தான்; அனிலன் நிற்கும் ஆற்றலை இழந்தான் என்றவாறு. கவயன் காலனுர் வயத்து அடைந்திலன் என்றது இறந்திலன் என்றவாறு. கொல்லுந்தன்மையில் அம்பு நஞ்சு போன்றது என்பார் 'ஆலமன்னதோர் சரம்' என்றுர். அயர்தல் - சோர்தல். சாம்பன் சோம்பினன் என்ற எதுகைநயம் காண்க. சோம்புதல் - செயலறுதல்; சாம்பன் என்றது, கரடிகட்குத் தலைவனுகிய சாம்பவானை. வானரர்களில் சிறப்புடைய தலைவர்கள் சிலர் இறவாது மூச்சற்றுக்கிடந்தமை இதனுல் புலப்படுத்தியவாறு. (199)

7343. மற்றும் வீரர்தம் மருமத்தி
னயிலம்பு மடுப்பக்
கொற்ற வீரமு மாண்டொழிற்
செய்கையுங் குறைந்தார்
சுற்றும் வானரப் பெருங்கட
ரெலைந்தது தொலையா
துற்று நின்றவ ரோடின
ரிலக்குவ னுருத்தான்.

மற்றும் வீரர்தம் மருமத்தின் அயில் அம்பு மடுப்ப,
கொற்ற வீரமும் ஆண்தொழில் செய்கையும் குறைந்தார்;
சுற்றும் வானரப் பெருங்கடல் தொலைந்தது; தொலையாது
உற்று நின்றவர் ஓடினர்; இலக்குவன் உருத்தான்.

பொ :—மற்றும் உள்ள வீரர்கள் தங்கள் உயிர்நிலையில் கூரிய அம்புகள் பாய்தலால் வெற்றிக்குரிய வீரமும் ஆண்மைக்குரிய செயலும் குறையப் பெற்றார்கள்; அவ்வீரரைச் சுற்றியிருக்கும் வானர சேனையாகிய பெரிய கடல் அழிந்தது; அழியாமல் உயிருடன் நின்ற சில வீரரும் களத்தை விட்டு ஓடினார்கள்; அதுகண்ட இலக்குவன் வெகுண்டான்.

கு :—மருமம் - உயிர்நிலை - மார்பு. மடுத்தல் - பாய்தல். கொற்ற வீரம் - வெற்றியுறுதற்குரிய வீரப்பண்பு. தொழிற் செய்கை என்பது மீமிசைச் சொல்; ஆண்மைக்குரிய செய்கை என்பதே பொருள். குறைதலாவது, தேய்ந்து இல்லையாதல். தொலைதல் - அழிதல். உயிருடன் நின்ற சில வீரர்களும் மேலும் இராவணன் அம்பு வந்து தம்மைக் கொல்லும் என்ற அச்சத்தால் ஓடிவிட்டனர். தன் சேனைக்கு இராவணனால் நேர்ந்த இத்தகைய இழப்பைக் கண்டு இலக்குவன் வெகுள்வானானன். வானர சேனையாகிய பெருங்கடல் என்றது உருவகம். வானரம் என்பதே ஆகுபெயரான் வானர சேனையை யுணர்த்தியது. உருத்தல் - கோபித்தல். (200)

52 ல் பின்வரும் மிகைப்பாடல் காணப்படுகின்றது.

7343 (a) உருத்தி லக்குவன் ஒருகணத்
தவனெதி ரூன்றிக்
கரத்தின் வெஞ்சிலை வளைக்குமுன்
கடுஞ்சினத் தரக்கன்
சிரித்து வெம்பொறி கதுவிட
திசைமுக மடையப்
பொருத்தி வெஞ்சரம் பொழிந்திவை
விலக்கெனப் புகன்றான்.

**7344.** நூறு கோடிய நூறுநூ
றுயிர கோடி
வேறு வேறெய்த சரமெலாஞ்
சரங்களால் விலக்கி

யேறு சேவகன் றம்பியவ்
விராவண னெடுத்த
வாறு நாலுவெஞ் சிலையையுங்
கணைகளா லறுத்தான்.

நூறு கோடிய, நூறு நூறுயிர கோடி,
வேறு வேறு எய்த சரம் எலாம் சரங்களால் விலக்கி,
ஏறு சேவகன் தம்பி, அவ் இராவணன் எடுத்த
ஆறு நாலு வெஞ்சிலையையும் கணைகளால் அறுத்தான்.

பொ :—நூறுகோடி கணக்குள்ளனவும் நூறு லட்சம் கோடி கணக்குள்ளவுமாக (இராவணன்) வேறுவேருக விட்ட அம்புகள் எல்லாவற்றையும் தன் அம்புகளால் விலக்கிவிட்டு, உயர்கின்ற வீரனுகிய இராமனுடைய தம்பி (இலக்குவன்) அந்த இராவணன் கையில் ஏந்தியிருந்த பத்துக் கொடிய விற்களையும் தன் அம்புகளால் அறுத்தொழித்தான்.

கு :—நூறு நூறுயிரங்கோடி - நூறு லட்சம்கோடி. ஏறுசேவகன்- மேல்மேல் வளர்கின்ற ,வீரமுடையவன்; இராமன். போர் செய்யச் செய்ய இளைத்து வீரங் குறையும் பிறர் போலாது இராமன் போர் செய்யுந்தோறும் கிளர்ச்சியடையும் வீரமுடையவன் என அவன் தனிச் சிறப்பை விளக்கியவாறு. சேவகன் - வீரன். "சேவகன் சேவகம் செகுத்த சேவகற்கு ஆவது இவ்வுலகம்" (மந்திரப் - 76) என்பது இங்கு ஒப்புநோக்கத்தகும். ஏறு சேவகன் தம்பி என்றது இலக்குவனும் இராமன் போன்றே ஏறு சேவகம் உடையவனே என் பதைக் குறிப்பிட்டவாறு. (201)

7345. ஆர்த்து வானவ ராவலங்
கொட்டின ரரக்கர்
வேர்த்து நெஞ்சமும் வெதும்பினர்
வினையறு முனிவர்
தூர்த்து நாண்மலர் சொரிந்தன
ரிராவணன் றேளைப்
பார்த்து வந்தனன் குனித்தது
நல்லறம் பாடி.

ஆர்த்து, வானவர் ஆவலம் கொட்டினர்; அரக்கர்
வேர்த்து, நெஞ்சமும் வெதும்பினர்; வினை அறு முனிவர்
தூர்த்து, நாள்மலர் சொரிந்தனர்; இராவணன் தோளைப்
பார்த்து உவந்தனன்; குனித்தது, நல்லறம் பாடி.

பொ :—(அதைக்கண்ட) தேவர்கள் ஆரவாரித்து வாய் கொட்டி ஞர்கள்; அரக்கர்கள் உடம்பு வேர்த்து உள்ளமும் வெதும்பினுர்கள். இருவினையும் இல்லாத முனிவர்கள் அன்றலர்ந்த மலர்களை இலக்கு வன்மேல் சொரிந்து நிரப்பினர். இராவணன் இலக்குவனது தோளாற்றலைப் பார்த்து மகிழ்ச்சியுற்றுன்; நல்ல தருமதேவதை இலக்குவனைப் புகழ்ந்து பாடி மகிழ்ச்சியால் நடித்தது.

கு :—இராவணனுடைய அம்புகளும் விற்களும் அழிந்தமை கண்டு தேவர்கள் மகிழ்ச்சியும் அரக்கர்கள் நெகிழ்ச்சியும் கொண் டார்கள் என்க. வேண்டுதலும் வேண்டாமையும் இல்லாத முனிவர் களும் இலக்குவன் வீரச் செயலைக் கண்டு மகிழ்ந்து அவன் வீரம் வாழ்க என மலர் பல சொரிந்து வாழ்த்தினுர்கள் என்க. இதனுல் இலக்குவனுடைய வீரத்தின் இன்றியமையாமை புலப்படுத்தியவாறு. பகைவனுய் அம்பும் வில்லும் இழந்த இராவணனே இலக்குவனது தோளைப் பார்த்து மகிழ்ந்தான் என்பது இலக்குவனுக்குப் பெரிய ஏற்றமாகும். இராவணன், வீரச் செய்கையில் விருப்பமிக்கவ னுகலின், இலக்குவன் தன் பகைவன் - தனக்கு அழிவை யுண்டாக் கினவன் என்ற எண்ணமின்றி அவன் தோளாற்றலைப் பார்த்து மகிழ்வானுயினன். நல்லறம், தான் இது காறும் புகமுடியாத இலங் கையில் புகும் நெறி இலக்குவனுல் உண்டாயது என்ற மகிழ்ச்சியால் அவனைப் பாடி நடிக்கலாயிற்று. குனித்தல் - வளைத்தல்; காலையும் கையையும் வளைத்து நடிக்கும் இயல்பு பற்றிச் குனித்தல், நடித்தல் என்ற பொருளுடையதாயிற்று. (202)

### இலக்குவனை இராவணன் பாராட்டல்

**7346.** நன்று போர்வலி நன்றுபோ
ராள்வலி வீரம்
நன்று நோக்கமு நன்றுகைக்
கடுமையு நன்று
நன்று கல்வியு நன்றுநின்
ஞண்மையு நலனும்
என்று கைம்மறித் திராவண
னெருவனீ யென்றுன்.

'நன்று, போர்வலி; நன்று, போர் ஆள் வலி; வீரம்
நன்று; நோக்கமும் நன்று; கைக்கடுமையும் நன்று;
நன்று கல்வியும்; நன்று நின் திண்மையும் நலனும்;
என்று கைம் மறித்து, இராவணன், 'ஒருவன் நீ' என்முன்.

பொ :—நினது போர் வலிமையும் நன்று! போரைக் கையாளும் வலிமையும் நன்று! நின் வீரமும் நன்று! நின் வீரப் பார்வையும் நன்று! (அம்புகளைத் தொடுக்கும்) கையின் விரைவும் நன்று! நின் வில்லின் கல்வியும் நன்று! நினது ஆண்மையும் அழகும் நன்று! என்று கை அசைத்து இராவணன் (இலக்குவனை நோக்கி) 'நீ ஒப் பற்றவன்' என்று புகழ்ந்தான்.

கு :—போரின் பல திறங்களையும் தனித்தனியே சிந்தித்து நோக்கி இராவணன் இலக்குவனை வியந்து பாராட்டியவாறு. ஆள் வலி என்றது வினைத்தொகை; போரைக் கையாளுந்திறன் என்ற வாறு. கடுமை - விரைவு. கல்வி என்றது வில் வித்தையை. நலன் - அழகு. கைம் மறித்தல் வியப்பிற்குரிய மெய்ப்பாடாகக் கையைக் கவித்தல். ஒருவன் - ஒப்பற்றவன். (203)

7347. கானி னன்றிகற் கரன்படை
படுத்தவக் கரியோன்
தானு மிந்திரன் றன்னையோர்
தனுவலந் தன்னல்
வானின் வென்றவன் மதலையும்
வரிசிலை பிடித்த
யானு மல்லவர் யாருனக்
கெதிரென்று மிசைத்தான்.

'கானின் அன்று இகல் கரன்
படை படுத்த அக் கரியோன்
தானும், இந்திரன் தன்னை
ஓர் தனுவலம் தன்னல்
வானில் வென்ற என்
மதலையும், வரிசிலை பிடித்த
யானும், அல்லவர் யார் உனக்கு
எதிர்?' என்றும் இசைத்தான்.

பொ :—காட்டில் அன்று வலிமை மிக்க கரனுடைய சேனையை அழித்த அந்த கரியனாகிய இராமனும், இந்திரனை ஒரு வில்லின் வலிமை கொண்டு விண்ணில் சென்று வென்றவனாகிய என் மகன் இந்திரசித்தும், கட்டமைந்த வில்லைப் பிடித்திருந்த யானும் அல்லா தவரில் உனக்கு நிகராவார் யாருளர்? என்றும் சொன்னான்.

ராமனும் இந்திரசித்தும் இராவணனுமே இலக்குவனுக்கு நிக ராவர்; பிறர் யாரும் இவ்வுலகில் நிகரல்லர் என்பதை இராவணனே கூறிப் புகழ்ந்தவாறு. முன் 'நன்று போர்வலி' என்பது முதலிய கூறிப் பாராட்டியதோடு 'யாருனக் கெதிரென்றும் சொன்னான்' என்று பொருள்படுதலின் உம்மை இறந்தது தழுவியது. தனு - வில் இலக்குவனுடைய விற்போரை வியந்து கூறுகின்றானாகலின் தனு வலந்தன்னால் வென்றவன் என்றும் 'வரிசிலை பிடித்தயான்' என்றும், வில்லையே படையாகச் சிறப்பித்துக் கூறினான். (204)

**7348.** வில்லி னாலிவன் வெலப்படா
 னெனச்சினம் வீங்கக்
கொல்லு நாளுமின் றிதுவெனச்
 சிந்தையிற் கொண்டான்
பல்லி னாலித ழதுக்கினன்
 பருவலிக் கரத்தால்
எல்லி னான்முகன் கொடுத்ததோர்
 வேலெடுத் தெறிந்தான்.

'வில்லினால் இவன் வெலப்படான்'
 எனச் சினம் வீங்க,
'கொல்லும் நாளும் இன்று இது'
 எனச் சிந்தையில் கொண்டான்,
பல்லினால் இதழ் அதுக்கினன்;
 பருவலிக் கரத்தால்
எல்லின் நான் முகன் கொடுத்தது
 ஓர் வேல் எடுத்து எறிந்தான்.

பொ :—வில்லினால் இந்த இலக்குவன் வெல்லப்படான் என்று கோபம் மிகாநிற்க, 'இவனைக் கொல்லும் நாளும் இன்றைக்கே, (கொல்லும் கருவியும்) இதுவே', என்று மனத்தில் நினைத்தவனாய்ப் பல்லால் உதட்டைக் கடித்துக்கொண்டு, பருத்த வலிமையுடைய

கையினால் பிரமன் கொடுத்ததாகிய ஓர் ஒளிமிக்க வேலை எடுத்து இலக்குவன்மேல் எறிந்தான்.

கு :—விற்போரில் தன்னினும் இலக்குவன் வல்லவன் என்பதை இராவணன் அறிந்தானாகலின், 'வில்லின லிவன் வெலப்படான்' என்று நினைந்து பிரமன் கொடுத்த வேலை இலக்குவன்மேல் வீசினான் என்க. கொல்லும் நாளும் இன்று; கொல்லும் கருவியும் இது; என வருவித்து முடிக்க. கொண்டானாய் அதுக்கினனாய் எறிந்தான் என முற்றெச்சமாக்கி முடிக்க. கரத்தால் எடுத்து எறிந்தான் என இயையும். பல்லினால் இதழதுக்குதல், சினக் குறிப்பால் நிகழும் மெய்ப்பாடு. எல் - ஒளி; எல்லின் வேல் என வேலுக்கு அடையாக்குக. ஒளிமிக்க நான்கு முகங்களையுடையவன் எனக் கிடந்தாங்கே இயைத்துக் கூறினும் ஆம். (205)

**7349.** எறிந்த காலவே லெய்தவம்
பியாவையு மெரிந்து
பொறிந்து போயுகத் தீயுக
விசையினிற் போகிச்
செறிந்த தாரவன் மார்பிடைச்
சென்றது சிந்தை
அறிந்த மைந்தனு மமர்நெடுங்
களத்திடை யயர்ந்தான்.

எறிந்த கால வேல், எய்த அம்பு யாவையும் மெரிந்து
பொறிந்து போய் உக, தீ உக, விசையினிற் போகி
செறிந்த தாரவன் மார்பிடைச் சென்றது; சிந்தை
அறிந்த மைந்தனும் அமர் நெடுங் களத்திடை அயர்ந்தான்.

பொ :—(இராவணன்) எறிந்த எமனைப் போன்ற வேல், (இலக்குவன்) விடுத்த அம்புகள் யாவும் எரிந்து பொரிந்து போய்ச் சிந்துமாறு தீப்பொறிகளைச் சிந்தச் செய்து கொண்டு விரைந்துபோய், நெருங்கிய மாலையணிந்த இலக்குவனது மார்பில் பாய்ந்தது; அவ் வேலின் வலிமையை அறிந்த வலியவனாகிய இலக்குவனும் போர் செய்தற்குரிய களத்தில் சிந்தை மறந்து வீழ்ந்தான்.

கு :—வேல் செல்லுங்கால் சிந்திய நெருப்புப் பொறிகளே இலக்குவன் எய்த அம்புகள் யாவும் எரிந்து பொரிந்து போய்ச் சிதையுமாறு செய்தன என்பார், 'எய்தவம்பு யாவையும் எரிந்து பொறிந்து போயுகத் தீயுக விசையினிற் போகி' என்றார். செறிந்த தாரவன்

என்றது இலக்குவனை. சிந்தை அயர்ந்தான் என இயையும். அறிந்த என்ற வினைக்கு ஏற்ப அவ் வேலின் வலிமையை அறிந்த எனச் செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. அயர்தல் - மறத்தல்; மயக்க முறுதல். வேலின் வலிமையை அறிதலாவது அதனால் தாக்குண்டு அதன் கடுமையை அனுபவித்து அறிதல். (206)

**7350.** இரிய லுற்றது வானரப்
பெரும்படை யிமையோர்
பரிய லுற்றன ருலைந்தனர்
முனிவரும் பதைத்தார்
விரிதி ரைக்கடற் கிரட்டிகொண்
டார்த்தனர் விரவார்
திரிகை யொத்தது மண்டலங்
கதிரொளி தீர்ந்த.

இரியலுற்றது வானரப் பெரும்படை; இமையோர் பரியலுற்றனர்; உலைந்தனர், முனிவரும் பதைத்தார்; விரிதிரைக்கடற்கு இரட்டி கொண்டு ஆர்த்தனர் விரவார்; திரிகை ஒத்தது, மண்தலம்; கதிர் ஒளி தீர்ந்த.

பொ :—(இலக்குவன் அயர்ந்தது கண்டு) வானரப் பெரும்படை கெட்டோடத் தொடங்கியது; தேவர்கள் வருத்தமுற்றனர்; முனிவர் களும் வருந்தினராய்த் துடிதுடித்தார்; பகைவராகிய அரக்கர் விரிந்த அலைகளையுடைய கடலோசைக்கு இரட்டிப்பான தன்மைகொண்டு ஆரவாரித்தனர்; அந்த ஆரவாரத்தால் பூமி திரிகைபோலச் சுழன்றது; சூரியனது ஒளி நீங்கியது.

கு :—பரியல் - வருந்துதல். முனிவரும் உலைந்தனராய்ப் பதைத் தார் என இயையும். உலைதல் - வருந்துதல். அரக்கரின் மகிழ்ச்சி ஆரவாரம் கடலோசையினும் இரு மடங்கு பெரிதாயிருந்தது. விர வார் என்றது, பகைவராய அரக்கரை. திரிகை என்றது, குயவன் மண்பாண்டம் செய்யும் திரிகையை. 'மட்கலத்திகிரி' (பால-மிதிலைக்- 13) என முன்னும் வந்துளது நினைக. திரிகை சுழல்வதுபோல மண்டலம் சுழன்றது என வினையுவமமாக விரிக்க. மண்தலம் என்றது பூமியை. (207)

**7351.** அஞ்சி னனல னயன்றந்த
வேலினு மாவி
துஞ்சி னனலன் றுளங்கின
னென்பது துணியா
எஞ்சில் யாக்கையை யெடுத்துக்கொண்
டகல்வெனென் றெண்ணி
நஞ்சி னற்செய்த நெஞ்சினன்
பார்மிசை நடந்தான்.

அஞ்சினன் அலன், அயன்
தந்த வேலினும் ஆவி
துஞ்சினன் அலன்; துளங்கினன் '
என்பது துணியா
' எஞ்சு இல் யாக்கையை எடுத்துக்
கொண்டு அகல்வென் ' என்று எண்ணி
நஞ்சினல் செய்த நெஞ்சினன்
பார்மிசை நடந்தான்.

பொ :—' யார்க்கும் அஞ்சாதவனகிய இலக்குவன், பிரமன் தந்த வேலினலும் உயிர் நீங்கினன் அல்லன்; சிறிது சோர்வுற்றுள்ளான் ' என்பதைத் தெளிவாக அறிந்துகொண்டு. ' வலிமை குன்ருத (இலக்குவனது) உடம்பை எடுத்துக்கொண்டு போவேன் ' என்று நினைந்து நஞ்சினல் செய்தாற்போன்ற கொடிய நெஞ்சினனகிய இராவணன் பூமிமேல் நடந்து (அவன் கிடந்த இடத்திற்குச்) சென்ருன்.

கு :—அஞ்சினனலன் என்பது எதிர்மறை வினைப்பெயர்; அஞ்சாதவனகிய இலக்குவன் என எழுவாயாக்கித் துஞ்சினன் அலன் என்ற எதிர்மறை வினையோடு முடிக்க. வேலினும் என்புழி உம்மை உயர்வு சிறப்பு. துளங்குதல் - சோர்தல். எஞ்சுதல் - குறைதல். வலிமை குன்ருத உடம்பு என அவாய் நிலையான் வலிமை என்பதை வருவித்துரைக்க. எஞ்சு என்பது முதனிலைத் தொழிற் பெயர். நெஞ்சினன் என்றது இராவணனை. அவன் நெஞ்சின் கொடுமை புலப்பட ' நஞ்சினற் செய்த நெஞ்சினன் ' என்ருர். நஞ்சினைக் கொண்டு செய்தாற்போன்ற கொடிய நெஞ்சினையுடையவன் எனத் தற்குறிப்பேற்றமாக்குக. இலக்குவனுடைய உடம்பை இராவணன் எடுக்க எண்ணியது, நல்ல எண்ணத்தினல் அன்று என்பதைப் புலப்படுத்தவே அவனை அப்பெயராற் கூறினர். (208)

**7352.** உள்ளி வெம்பிணத் துதிரநீர்
வெள்ளத்தி னோடி
யள்ளி யங்கைக ளிருபதும்
பற்றிப்பண் டரன்மா
வெள்ளி யங்கிரி யெடுத்தது
வெள்கினு னேனை
எள்ளில் பொன்மலை யெடுக்கலுற்
றுனென வெடுத்தான்.

உள்ளி வெம்பிணத்து உதிரநீர் வெள்ளத்தின் ஓடி
அள்ளி அம்கைகள் இருபதும் பற்றிப் பண்டு அரன் மா
வெள்ளி அம்கிரி எடுத்தது வெள்கினன் ஏனை
எள்இல் பொன்மலை எடுக்கலுற்றான் என எடுத்தான்.

பொ :—அவ்வாறு நினைந்து கொடிய தோற்றமுடைய பிணங்கள் நிறைந்துள்ள இரத்தநீர் வெள்ளத்தில் ஓடிச்சென்று, முன்பு சிவனது பெரிய வெள்ளியங்கிரியை எடுத்ததற்கு நாணினவனாய், (அவ்விகழ்ச்சி நீங்க அவ்வெள்ளி மலையினும் உயர்ந்த) மற்றைய தாகிய இகழ்ச்சி இல்லாத, பொன் மலையையும இப்போது எடுக்கத் தொடங்கினான், என்னுமாறு, (இராவணன் தன்) அகங்கைகள் இருப தாலும் (இலக்குவனது பொன்மலை போன்ற உடம்பைப்) பற்றி அள்ளி எடுக்கத் தொடங்கினான்.

கு :—பொன்னினும் வெள்ளி தாழ்ந்தது ஆகலின், பொன்மலை இருக்க வெள்ளிமலை யெடுத்தது நாணுதற்குரியதாயிற்று. உயர்ந்த தாகிய பொன்மலை இருக்க அதனை எடாமல் அதனினும் தாழ்ந்த தாகிய வெள்ளிமலையை முன்பு எடுத்தது தன் பெருமைக்கு இழுக்கு என இராவணன் நாணி, இப்போது பொன்மலையும் எடுக்கத் தொடங்கினவன்போல, பொன்மலை போன்ற இலக்குவனுடம்பை எடுத்தான் என்றது தற்குறிப்பேற்றவணி. இலக்குவன் உடம்பு பொன்மலை போன்றது ஆகலின், இங்ஙனம் கற்பனை செய்தவாறு. வானரப் படைக்கு நடுவில் இலக்குவனோடு இராமன் இருந்த தோற் றத்தைக் கூறும்போது 'பாற்கடல் சுற்ற வீற்கை வடவரை பாங்கு நிற்பக் கார்க்கடல் கமலம் பூத்ததெனப் பொலிவானை' (வீடண னடைக் - 132) என இலக்குவனுக்கு மேருமலையை உவமை கூறி யிருத்தலும் நினைக. பொன்மலை எடுக்கலுற்றானென அங்கைகளிரு பதும் பற்றி அள்ளியெடுத்தான் என இயையும். 'பண்டு' என்ற தற்கேற்ப 'இன்று' எடுக்கலுற்றான் என ஒரு சொல் வருவிக்க. ஏனைப் பொன்மலை என்றது வெள்ளிமலையும் பொன்மலையும் உடன்

எண்ணத்தக்க இயைபுடைமை கருதி. வெள்ளிமலை எடுக்கத் தொடங்கி அதன்கீழ் அகப்பட்டுத் தளர்ந்தவன் பொன்மலையை (இலக்குவனை) எங்ஙனம் எடுக்க வியலும்? என்ற குறிப்பும் இங்குப் புலப்பட வைத்தவாறும் காண்க. ஓடிப்பற்றியள்ளியெடுத்தான் என இயையும். (209)

## இலக்குவனை இராவணன் எடுக்க இயலாமை

**7353.** அடுத்த நல்லுணர் வொழிந்தில
 னம்பரஞ் செம்பொன்
உடுத்த நாயகன் றானென
 வுணர்தலி னொருங்கே
தொடுத்த வெண்வகை மூர்த்தியைத்
 துளக்கிவெண் பொருப்பை
யெடுத்த தோள்களுக் கெழுந்தில
 னிராமனுக் கிளையான்.

அடுத்த நல் உணர்வு ஒழிந்திலன், அம்பரம் செம்பொன்
உடுத்த நாயகன் தானென உணர்தலின், ஒருங்கே
தொடுத்த எண்வகை மூர்த்தியைத் துளக்கி வெண்பொருப்பை
எடுத்த தோள்களுக்கு எழுந்திலன் - இராமனுக்கு இளையான்.

பொ :—இராமனுக்குத் தம்பி இலக்குவன் செம்பொனாலியன்ற ஆடையையுடுத்த திருமால் தானே என நீடு நினைந்திருந்தமையால், தன்னிடம் பொருந்திய நல்லுணர்வு நீங்காதவனானான்; ஒருசேர வரிசைப்பட்டுள்ள ஐம்பூதங்களும் ஞாயிறும் திங்களும் இயமானனும் ஆகிய எண்வகை வடிவினனாகிய சிவபிரானை அசைத்து, அவன் அமர்ந்திருந்த வெள்ளிமலையை எடுத்த (வலிமை மிக்க) தோள்களுக்கு எழுந்திலனாயினான்.

கு :—இராமனுக்கு இளையான் என்றது இலக்குவனை. இராவணன் எறிந்த வேல் மார்பில் பாயவும் இலக்குவன், தான் திருமாலே என்று உள்ளத்தில் உணர்ந்து கொண்டிருந்தமையால் உணர்வு நீங்காதவனாகவும் வெள்ளிமலை யெடுத்த இராவணனின் வீரத் தோள்களுக்கும் எடுக்க முடியாதவனாகவும் இருந்தான் என்க. தியானிக்கப்பட்ட பொருளின் பெருமையால் தியானித்தவரும் பெருமையடைவர் என்ற உண்மையை இங்குப் புலப்படுத்தியவாறு. "பிரிப் பின்றித்-தானே யுலகாம் தமியேன் உளம்புகுதல், யானே யுலகென் பன் இன்று" (சிவஞானபோதம்-2-1. உதாரணம்) என மெய்கண்

டார் கூறியுள்ளதும் காண்க. அம்பரம் - ஆடை. செம்பொன் அம்பரம் உடுத்த நாயகன் என்க; என்றது, பொன்னுடை பூண்ட திருமாலை. எண்வகை மூர்த்தி என்றது சிவபிரானை. "இருநிலனாய்த் தீயாகி நீருமாகி இயமானனாய் யெறியுங் காற்றுமாகி, அருநிலைய திங்களாய் ஞாயிருகி ஆகாசமா யட்டமூர்த்தியாகி" (6. 94-1) எனத் திருநாவுக்கரசரும் சிவபிரானைக் குறிப்பிட்டிருத்தல் காண்க. மணிமேகலை சைவ வாதியை நேர்பட்டுக் கேட்டபோது, அவன், "இரு சுடரோடியமானனைம் பூதமென், றெட்டுவகையும் உயிரும் யாக்கையுமாய்க் கட்டி நிற்போனும்" (மணிமேகலை - சமயக்கணக்கர் தந்திறங் கேட்ட காதை. 89-91) எனச் சிவபிரான் அட்டமூர்த்தியாக நின்ற நிலைமையையே கூறியிருத்தலும் காணலாம். இராவணனது ஆற்றலைப் புலப்படுத்த எண்வகை மூர்த்தியைத் துளக்கி வெண் பொருப்பை யெடுத்த தோள்கள் எனச் சிறப்பித்தவாறு. அத்தகைய தோள்களாலும் எடுக்க இயலாதவாறு இலக்குவன், நாராயணனே தான் என்ற நினைவால் பாரமுடையவனுமானான் என அவ்விலக்குவன் வலிமையைப் புலப்படுத்தியவாறு. இராமன் போலவே இலக்குவனும் நாராயணன் கூறு என்பது இதனால் புலப்படுத்தியவாறு. (210)

## இராவணன் கைகளுக்கிடையில் இலக்குவன்

**7354.** தலைகள் பத்தொடுந் தழுவிய
தசமுகத் தலைவன்
நிலைகொண் மாகட லொத்தனன்
கரம்புடை நிமிரும்
அலைக ளொத்தன வதிலெழு
மிரவியை யொத்தான்
இலைகொ டண்டுழா யிலங்குதோ
ளிராமனுக் கிளையான்.

தலைகள் பத்தொடும் தழுவிய
தசமுகத் தலைவன்,
நிலைகொள் மாகடல் ஒத்தனன்;
கரம், புடை நிமிரும்
அலைகள் ஒத்தன; அதில்
எழும் இரவியை ஒத்தான்,
இலை கொள் தண்துழாய்
இலங்குதோள் இராமனுக்கு இளையான்.

பொ :—(இலக்குவனை எடுக்க முயன்ற) தலைகள் பத்தோடு பொருந்திய இராவண வேந்தன் (கரிய பெரிய வடிவத்தால்) நிலை கொண்ட பெரிய கடலை ஒத்துத் தோன்றினான்; அவன் இருபது கைகளும் அக்கடலிடத்தே நிமிர்ந்து வீசும் அலைகளைப் போன்றன; இலைகளைக் கொண்ட குளிர்ந்த துழாய் மாலை விளங்கும் தோள்களையுடைய இராமனுக்கு இளையவனாகிய இலக்குவன், அந்த அலைகடலில் எழுகின்ற சூரியனை ஒத்துத் தோன்றினான்.

கு :—கரிய பெரிய உடம்பையுடைய இராவணனது இருபது கைகளுக்கிடையில் பொன்னிறமுடைய இலக்குவன் இலங்கியது, அலைகடலுக்கிடையில் தோன்றும் சூரியனைப் போன்று காட்சியளித்தது என்பதை மூன்றாகப் பிரித்து மூன்றிடத்தும் உவம உருபை விரித்துக் கூறினமையின் இது பல வயிற்போலி உவமை எனப்படும். இராவணனுக்குக் கருங்கடலும், அவன் இருபது கைகளுக்கு அலைகளும், அக்கைகளுக்குள்ளிருக்கும் இலக்குவனுக்கு அவ்வலைகளிடையே தோன்றும் உதயசூரியனும் உவமை. இராமன் தன் வழிபடு கடவுளாகிய நாராயணனுக்குரிய துளபமாலையை அணிந்திருந்தான் ஆதலின், 'துழாய் இலங்கு தோள் இராமன்' என்றார். "ஆரொடேர் பெறத், துளவொடு தும்பையும் சுழியச் சூடினான்" (115) என முன்னர்க் கூறியிருத்தலும் நினைக. (211)

## இலக்குவனை அனுமன் எடுத்துச் செல்லுதல்

**7355.** எடுக்க லுற்றவன் மேனியை
யேந்துதற் கேற்ற
மிடுக்கி லாமையி னிராவணன்
வெய்துயிர்ப் புற்றான்
இடுக்கி னின்றவம் மாருதி
புகுந்தெடுத் தேந்தித்
தடுக்க லாததோர் விசையின
னெழுந்தயல் சார்ந்தான்.

எடுக்கல் உற்று, அவன்
மேனியை ஏந்துதற்கு ஏற்ற
மிடுக்கு இலாமையின், இராவணன்
வெய்துயிர்ப்பு உற்றான்;

இடுக்கில் நின்ற அம்மாருதி
புகுந்து எடுத்து ஏந்தி,
தடுக்கலாதது ஓர் விசையினன்
எழுந்து, அயல் சார்ந்தான்.

பொ :—இராவணன், அவ்விலக்குவன் உடம்பை எடுக்கத் தொடங்கி அவனைத் தூக்குதற்கு ஏற்ற வலிமை தனக்கு இல்லாமையினால், வெப்பமாகப் பெருமூச்சு விடுவானானான்; ஒரு மூலையில் (இளைப்பாறி) நின்ற அந்த அனுமன் அங்குப் புகுந்து, அவ்விலக்குவனைக் கையில் எடுத்து ஏந்திக்கொண்டு, எவராலும் தடுக்க முடியாத வேகமுடையவனாய் எழுந்து வேற்றிடத்தை அடைந்தான்.

கு :—இராவணனுக்குப் பாரமாகத் தோன்றிய இலக்குவன் உடம்பு அனுமனுக்கு நொய்தாய் ஏந்துதற்கு எளிதாயது என்க. அன்புடையார்க்கு எத்தகைய திண்மையான பொருளும் நொய்தாகும் என்பது இதனால் அறியலாம். மிடுக்கு - வலிமை. பாரம் தூக்க முடியாதபோது பெருமூச்சு உண்டாதல் இயல்பு: இராவணன் நினைத்தபடி இலக்குவனைத் தூக்கிச் செல்ல முடியவில்லை என்ற வருத்தத்தில் உண்டான உயிர்ப்பு ஆகலின் அது வெய்தாயிற்று. இடுக்கு – மூலை. இனி, இடுக்கிக்கொள்ளுதற்குரிய இடம் என்று பொருள் கொண்டு, 'நின்ற வம்மாருதி புகுந்து எடுத்து இடுக்கின் ஏந்தி' என இயைத்துக் கையிடுக்கில் ஏந்திக் கொண்டு சென்றான் எனக் கூறலும் ஆம். அயல் என்றது வேற்றிடத்தை. விசையினன் முற்றெச்சம். விசையினனாய்ச் சார்ந்தான் என்க. (212)

**7356.** தொகவொ ருங்கிய ஞானமொன்
றெவரினுந் தூயான்
தகவு கொண்டதோ ரன்பெனுந்
தனித்துணை யல்லால்
அகவு காதலா லாண்டகை
யென்னினு மனுமன்
மகவு கொண்டுபோய் மரம்புகு
மந்தியை நிகர்த்தான்.

தொக ஒருங்கிய ஞானம் ஒன்று
எவரினும் தூயான்
தகவு கொணடது ஓர் அன்பு
எனும் தனித்துணை அல்லால்,

அகவு காதலால், ஆண்தகை
என்னினும், அனுமன்,
மகவு கொண்டு போய் மரம்
புகும் மந்தியை நிகர்த்தான்.

பொ :—தொகுதியாகச் சேர்ந்த ஞானம் பொருந்திய யாவரினும் தூய்மையுடையவனாகிய அனுமன், ஆண்தகையே என்றாலும், இராம இலக்குவர்தம் தகுதி நோக்கிக் கொண்ட அன்பு என்கின்ற ஒப்பற்ற துணையே யல்லாமல், இலக்குவனை அணைத்துக்கொண்டு செல்லும் காதலுமுடைமையால், மகவை ஏந்திக் கொண்டு போய் மரத்தை அடையும் பெண் குரங்கை ஒத்தவன் ஆனான்.

கு :—அகவுதல் - அகப்படுத்தல்; ஆவது அணைத்தல். குரங்கினுள் ஆணைக்கடுவன் என்றலும் பெண்ணை மந்தி என்றலும் மரபு ஆதலின் அனுமன் ஆண்டகை யென்னினும் மந்தியை நிகர்த்தான் எனப் பால் மாறுபட உவமிப்பவர் அகவுகாதலால் என ஏதுவும் கூறியவாறு; இது ஏதுவுவமை. தூய ஞானமுடையவனும் ஆண்டகையாக இருப்ப வனுமாகிய அனுமனை மந்தியோடு ஒப்பிட்டுக் கூறியது இலக்குவனை அணைத்துக் கொண்டு சென்ற காதலுடைமை ஒன்று பற்றியே யாம் என விளக்கியவாறு. அன்பின் முதிர்ச்சி காதல் எனப்படும். இலக்கு வனை இராவணன் எடுத்துச் செல்லுமுன் விரைந்து சென்று அவ் விலக்குவனை ஏந்தி வந்த நிலை தாயன்பு ஆதலின், அதனையே அகவு காதல் எனக் குறிப்பிட்டார். அகவுதல் - நீளுதல் என்றும் பொருள் படும். சடாயு, தண்டகவனத்தில் சீதையையும், இராம இலக்குவர் களையும் தீங்கு வராமல் பார்த்துக் கொண்ட நிலையைக் கூறும் போதும் சேக்கையில், பார்ப்பைப் பார்க்கும் பறவையிற் பார்க்கின் றான் (சடாயுகாண் - 43) என அவன் பறவை என்பதற்கேற்பக் கூறி யிருத்தலும் இங்கு நினையலாம். அங்கும் ஆண்பாலாகிய சடாயுவுக் குப் பெண் பறவையையே உவமை கூறியிருத்தல் காணலாம். இராவணனால் எடுக்க முடியாத இலக்குவன் அனுமனால் எடுக்கப் படும் எளியவன் ஆனமைக்கு "பத்துடையடியவர்க்கெளியவன் பிறர்களுக்கரிய வித்தகன்" (திருவாய்மொழி 1-3-1) என்பது காட்டி விளக்குவதுண்டு. (213)

7357. மையல் கூர்மனத் திராவணன்
படையினன் மயங்கும்
செய்ய வாளரி யேறனன்
சிறிதினிற் றேறக்

கையுங் கால்களு நயனமுங்
கமலமே யனைய
பொய்யி லாதவ னின்றிடத்
தனுமனும் போனான்.

மையல் கூர்மனத்து இராவணன்
படையினால் மயங்கும்
செய்ய வாள் அரி ஏறு
அனான் சிறிதினில் தேற,
கையும் கால்களும் நயனமும்
கமலமே அனைய
பொய் இலாதவன் நின்றிடத்து,
அனுமனும் போனான்.

பொ :—(காம) மயக்கம் மிக்க மனத்தையுடைய இராவணன் எறிந்த வேற்படையினால் மயங்கிக் கிடந்த செவ்விய கொடிய ஆண் சிங்கத்தைப் போன்றவனான இலக்குவன், சிறிது நேரத்தில் தெளிந்தானாக, அனுமனும், செந்தாமரை மலர்களை ஒத்த கைகளையும் கால்களையும் கண்களையும் உடைய பொய்யிலாதவனாகிய இராமன் நின்ற இடத்திற்குப் போனான்.

கு :—இராவணனது வேலினால் மயங்கிக் கிடந்த இலக்குவனை எடுத்துக் கொண்டு வேறிடத்திற்குச் சென்ற அனுமன், இலக்குவன் தேறியபின் அவனை விடுத்து இராமனை அணுகினான் என்க. இலக்குவன் மயக்கம் தேறியது போல இராவணனது மனமயக்கம் தெளியக் கூடியதன்று என்பார், மையல் கூர்மனத்து இராவணன் என்றார். மையல் என்றது சீதைபால் வைத்த மையலை. அவன் உயிர்போமளவும் அம் மையல் நீங்காதது என்பது அறிவித்தவாறு. வாள் – கொடுமை. ஆளரியேறு என்று பிரித்து நரசிங்கம் போன்றவன் இலக்குவன் எனக் கூறலும் ஆம். பொய்யிலாதவன் என்றது, இராமனை. பொய் மொழி புகலாதவன் எனவும் மெய்ப் பொருளாக இருப்பவன் எனவும் பொருள் கொள்க. 'கையுங் கால்களுநயனமுங் கமலமே யனைய பொய்யிலாதவன்' என்பது 'கண்ணும், திருவடியும் கையும் திருவாயுஞ் செய்ய கரியவனை' (சிலப்-ஆய்ச்சியர்குரவை. 36) என்ற இளங்கோவடிகள் வாக்கை நினைப்பித்தல் காண்க. நின்ற இடத்து எனல் வேண்டும் அகரம் விகாரத்தால் தொக்கு, நின்றிடத்து என்று நின்றது. (214)

## இராமன் இராவணனோடு போர்க்குப் போதல்

**7358.** போன காலையிற் புக்கனன்
புங்கவன் போர்வேட்
டியானை மேற்செலுங் கோளரி
யேறிவ னென்ன
வானு ளோர்கண மார்த்தது
தூர்த்தது மலர்மேல்
தூந வின்றவே லரக்கனுந்
தேரினைத் துரந்தான்.

போன காலையில், புக்கனன்
புங்கவன், போர்வேட்டு
யானை மேல் செலும் கோள்
அரி ஏறு இவன் என்ன;
வானுளோர் கணம் ஆர்த்தது;
தூர்த்தது மலர், மேல்;
தூ நவின்ற வேல் அரக்கனும்,
தேரினைத் துரந்தான்.

பொ :—(அனுமான்) போனவுடன் இராமன், 'யானைமேற் கோபித்துச் செல்லும் வலிய ஆண்சிங்கம் இவன்' என்று கண்டோர் கருதுமாறு போரை விரும்பி இராவணனை நோக்கிச் சென்றான்; வானுலகத்திலுள்ள தேவர் கூட்டம் ஆரவாரித்தது; இராமன் மேல் மலர்களைச் சொரிந்து நிரப்பியது; (அப்போது) ஊன் பொருந்திய வேலையுடைய அரக்கனாகிய இராவணனும் தன் தேரினை இராமன் முன் செலுத்தினான்.

கு :—தன்னிடம்வந்த அனுமானால், இலக்குவனை இராவணன் வேல் கொண்டெறிந்து சோர்வுறச் செய்த செய்தியறிந்து இராமன், உடனே அவ்விராவணன் மேல் போர்க்குப் புறப்பட்டான் என்பது புலப்பட 'போன காலையில் புக்கனன் புங்கவன்' என்றார். புங்கவன் தேவன்; இங்கு இராமனை உணர்த்தியது. புங்கவன் யானைமேற் செலுங் கோளரியேறிவனென்னப் போர்வேட்டுப் புக்கனன் என இயையும். யானைபோன்ற இராவணன் மேல் சிங்கம் போன்ற இராமன் போர்க்குச் சென்றான் என்றவாறு. வானுளோர் என்றது தேவர்களை. கணம் – கூட்டம். கணம் என்றதற்கேற்ப ஆர்த்தது தூர்த்தது என அஃறிணை முடிவு கூறியவாறு. இலக்குவனது மார்பில் நுழைந்து வந்த வேற்படையுடையவன் இராவணன் என்பது

தோன்ற 'தூநவின்ற வேல் அரக்கன்' என்றார். தூ – மாமிசம். நவிலுதல் – பொருந்துதல். இலக்குவனை எறிந்த வேல் தன்பால் உண்டு என்னும் செருக்கோடு தேரைத் திருப்பினான் இராவணன் என்ற குறிப்பும் இதனால் புலப்படும். துரத்துதல் - செலுத்துதல். அது பாகனுடையதே யாயினும் ஏவுதல் கருத்தா இராவணனே ஆதலின், 'அரக்கனும் தேரினைத் துரந்தான்' என்றார். (215)

## இராமன் தேரில்லாது செல்வதுகண்டு அனுமன் வருதல்

**7359.** தேரிற் போரரக் கன்செலச்
  சேவகன் தனியே
பாரிற் செல்கின்ற வறுமையை
  நோக்கினன் பரிந்தான்
சீரிற் செல்கின்ற தில்லையிச்
  செருவெனுந் திறத்தால்
வாரிற் பெய்கழன் மாருதி
  கதுமென வந்தான்.

தேரில் போர் அரக்கன் செலச், சேவகன் தனியே
பாரில் செல்கின்ற வறுமையை நோக்கினன், பரிந்தான்,
'சீரில் செல்கின்றது இல்லை இச் செரு' எனும் திறத்தால்,
வாரின் பெய் கழல் மாருதி கதுமென வந்தான்.

பொ:—போர் செய்தலையே இயல்பாகக் கொண்ட இராவணனாகிய அரக்கன் தேரில் செல்ல, (அவனினும் சிறந்த) வீரனாகிய இராமன தனியே தரையில் நடந்து செல்கின்ற வறுமை நிலையைப் பார்த்து, இரக்கம் கொண்டவனாய், வாரினால் கட்டிய வீரக் கழலையுடைய அனுமான், இந்தப் போர் (இவ்வாறு செல்லின்) ஒத்த நிலையில் நிகழ்வதாகாது என்ற காரணத்தால் விரைந்து வந்தான்.

கு:—இராவணன் போர் செய்பவனே ஆயினும் அவன் போர் கள்ளப்போரே ஆதலின், அவனைச் சேவகன் என்று கூறாது 'போரரக்கன்' என்றே கூறி, இராமன் வஞ்சனையறியாது நேர் நின்று செய்யும் போரில் வல்ல வீரன் ஆதலின், அவனைச் 'சேவகன்' என்று சிறப்பித்தது சாலப் பொருத்தமுடையதாதல் காண்க. தாழ்ந்தவனாகிய அரக்கன் தேரிற் செல்ல, உயர்ந்தவனாகிய இராமன் பாரிற் செல்லுதல் கண்ட அனுமனுக்குப் பரிவு தோன்றுதல் இயல்பு. பரிவு - இரக்கம். சீர் - சமம்; ஒப்பு. "உல்கு சீர்பெற விருந்தான்"

(அகத்தியப் - 40) என முன்னும் இச் சொல் இப்பொருளில் ஆளப் பட்டிருத்தல் காணலாம். போர் செய்யும் இரு வீரரும் ஒத்த நிலையில் இருப்பதே முறைமையாகலின், ஒருவன் தேர்மேலிருந்தும் மற்றொருவன் பார்மேலிருந்தும் போர் செய்வது ஒத்த நிலையுடையது ஆகாது என்பது அனுமான் கருத்து. திறம் - காரணம். செவ்வே - நேரே. இராமனுக்குத் தான் ஊர்தியாக இருக்க நினைந்து வருகின்றான் அனுமன் என்பார், 'இச்செரு சீரில் செல்கின்றதில்லை எனும் திறத்தால் கதுமென வந்தான்' என்றார். கதுமென விரைவுக் குறிப்புணர்த்தும் இடைச்சொல். "கதுமெனத் தாநோக்கி" (குறள் - 1173) என்றதும் காண்க. (216)

இச் செய்யுளுக்குப் பின் நல்ல பல ஏடுகளில் இல்லாத ஒரு மிகைப்பாடல் காணப்படுகின்றது.

7359 (a) பண்டைநாடரு பனித்திரைப் புனற்சடை யேற்றுக்
கொண்ட தூயவன் கொடுந்தொழி னிருதர்கள்குழுமி
மண்டு வாளமர்க் களத்திலம் மலர்க்கழல்சேறல்,
கண்டு கூசல னிற்குமென்றுலது கடனே.

**7360.** நூறு பத்துடை நொறில்பரித்
தேரின்மே னுன்முன்
மாறில் போரரக் கன்பொர
நிலத்துநீ மலைதல்
வேறு காட்டுமோர் வெறுமையை
மெல்லிய வெனினு
மேறு நீயைய வென்னுடைத்
தோளின்மே லென்றான்.

'நூறு பத்துடை நொறில்
பரித் தேரின்மேல் நுன்முன்
மாறு இல் போர் அரக்கன்
பொர, நிலத்து நீ மலைதல்
வேறு காட்டும், ஓர் வெறுமையை;
மெல்லிய எனினும்
ஏறு நீ, ஐய! எனனுடைத்
தோளின்மேல்' என்றான்.

பொ :—ஐய! நின் முன்னே, நிகரில்லாத, போரைச் செய்யும் அரக்கன் விரைவுடைய ஆயிரங் குதிரைகள் பூட்டிய தேரின்மேல் நின்று போர் செய்யா நிற்க, நீ (ஊர்தியேதுமின்றி) நிலத்தில் நின்று போர் செய்தல், ஒரு வெறுமையைத் தனியே காட்டாநிற்கும்; (ஆதலின்) (என் தோள்கள் நின்னைத் தாங்கும் வலிவுடையவன்றி) மெலியன ஆயினும், நீ என்னுடைத் தோள்மேல் ஏறுவாயாக' என்று வேண்டிக் கொண்டான்.

கு :—நொறில்பரி - விரைந்து செல்லும் குதிரை. நொறில்பரி நூறு பத்துடைதேர் என்க. ஆயிரங் குதிரைகள் பூட்டிய தேர் என்றவாறு. நுன் என்றது திசைச் சொல்; நின் என்பதே பொருள். மாறு-ஒப்பு. போரில் நினக்கு ஒப்பாகாது தாழ்ந்தவனாகிய அரக்கன் உயர்ந்த தேரில் நின்று பொர, உயர்ந்தோனாகிய நீ தரையில் தாழ இருந்து போர் செய்தல் ஒரு வெறுமைத்தன்மையை உணர்த்தும் ஆதலின் என் தோள்மேல் ஏறிப் போர் செய்க என அனுமன் இராமனை வேண்டியவாறு. நெடியோனாகிய இராமனுடைய திருமேனியைத் தாங்கும் ஆற்றல் அனுமன் தோள்களுக்கு இருந்தாலும் தன் பணிவு தோன்ற 'மெல்லிய வெனினும் ஏறுநீ' என்றான். வெறுமை-இன்மை; ஊர்தி இல்லாத ஒரு வெறுமையைத் தனியே உணர்த்துமாறு தரையில் நின்று போர் செய்ய வேண்டா என்றவாறு. (217)

### இராமன் நன்றென அனுமன் தோள்மேல் அமர்தல்

**7361.** நன்று நன்றென நாயக
 னேறின ஞமக்
குன்றின் மேலிவர் கோளரி
 யேறெனக் கூடி
அன்று வானவ ராசிக
 ளியம்பின ரீன்ற
கன்று தாங்கிய தாயென
 மாருதி களித்தான்.

'நன்று, நன்று!' என
 நாயகன் ஏறினன் நாமக்
குன்றின் மேல் இவர் கோள்
 அரி ஏறு எனக் கூடி,

அன்று வானவர் ஆசிகள்
இயம்பினர் ; ஈன்ற
கன்று தாங்கிய தாய்
என மாருதி களித்தான்.

பொ :—இராமன் நல்லது நல்லது! என்று புகழ் பொருந்திய மலைமேல் ஏறுகின்ற வலிய ஆண்சிங்கம் என்னுமாறு (அனுமன் தோள்மேல்) ஏறினன்; அப்பொழுது தேவர்கள் ஒன்றுகூடி (இராமனுக்கும் அனுமனுக்கும்) வாழ்த்துகள் கூறினர்கள்; தான் ஈன்ற கன்றைத் தாங்கிய தாய்போல (இராமனைத் தாங்கிய) அனுமன் களிப்பானுனன்.

கு :—நாயகன், நன்று நன்றென, நாமக்குன்றின் மேலிவர் கோளரியேறென ஏறினன் என இயையும். இராமன் அனுமன் தோள்மேல் அமர்ந்த அழகைக்கண்டு மகிழ்ந்த தேவர்கள் அவ்விருவரையும் வாழ்த்தினர்கள் என்க. நாமம்-பெயர்; புகழ்; நாமக்குன்று என்றமையால் பெரிய மலை என்பது புலப்படுத்தியவாறு. அனுமனுடைய தோள்கள் பெரிய மலை போன்றன; அத் தோள்மேல் ஏறும் இராமன், மலைமீது ஏறும் ஆண் சிங்கம் போன்றவனுனன் என்றவாறு. இனி, நன்று நன்று என நாயகன் ஏறினன்; அக்காட்சியைக் கண்ட அன்று வானவர், குன்றின்மேலிவர் கோளரியேறெனக் கூறி ஆசிகள் இயம்பினர் என இயைத்து உரைத்தலுமாம். தான் ஈன்ற கன்றைத் தாங்குவதில் தாய்க்குண்டாகும் மகிழ்ச்சி இராமனைத் தாங்குவதில் அனுமனுக்கு உண்டாயிற்று என, அனுமனின் தாயன்பைப் புலப்படுத்தியவாறு. பேருருவமுடைய அனுமான் தாய் போன்ருன்; அவன் மேலமர்ந்த இராமன் கன்று போன்ருன் என்க. தான் ஈன்ற குட்டி தன் முதுகின்மேல் ஏறி அமர்கின்றபோது, அக் குட்டியை மகிழ்ச்சியுடன் தாங்கிச் செல்வது மந்தியின் இயல்பு இந்த இயல்பையே இங்குக் கம்பர் புலப்படுத்தியுள்ளார். 'அனுமன் மகவு கொண்டு போய் மரம்புகும் மந்தியை நிகர்த்தான்' என (213) முன்னும் வானரத்தின் இயல்பைப் புலப்படுத்தியிருத்தல் காணலாம்.
(218)

அனுமனைக் கண்டு கலுழனும் அனந்தனும்
நாணுதலும் நடுங்குதலும்

**7362.** மாணி யாயுல களந்தநா
ளவனுடை வடிவை
யாணி யாயுணர் மாருதி
யதிசய முற்ருன்

காணி யாகப்பண் டுடையனு
மொருதனிக் கலுழன்
நாணி னுன்மற்றை யனந்தனுந்
தலைநடுக் குற்ருன்.

மாணியாய் உலகு அளந்த
நாளவன் உடை வடிவை
ஆணியாய் உணர் மாருதி
அதிசயம் உற்ருன் ;
காணியாகப் பண்டு உடையனும்
ஒருதனிக் கலுழன்
நாணினுன் ; மற்றை அனந்தனும்
தலை நடுக்குற்ருன்.

பொ :—(மாவலிபால்) பிரமசாரியாய்ச் சென்று உலகளந்த நாளை உடையவனுகிய இராமனுடைய திருமேனியை ஆதார மாய்த் தாங்கிநின்று அதன் பெருமையை உணர்ந்த அனுமான் அதிசயமடைந்தான்; அப்பெருமானைத் தாங்கும்பேறு தனக்கே உரிமையாக முன் பெற்றிருந்த ஒப்பற்ற கருடன் (அனுமானும் தாங் கியதைக் கண்டு) நாணமுற்ருன்; (அப்பெருமானது படுக்கையாய்த் தாங்கும் பேறுபெற்ற) அனந்தனும் (தன் பகைவனுடைய மகன் தாங்கியதைக் கண்டு அச்சத்தால்) தலை நடுங்குவானுனுன்.

கு :—இராமனுடைய வடிவத்தைத் தாங்கிநின்ற அனுமன் அதி சயம் அடையத்தக்கவாறு அவ்வுடம்பு அமைந்ததற்குக் காரணம் கூறுவாராய் 'மாணியாயுலகளந்த நாளவன்' என இராமனைக் குறிப் பிட்டார். உலகளந்த நாளில் கொண்ட பேருருவத்தையும் இராமன் உடையவனுதலின், அனுமனும் அதிசயிக்கத்தக்கவாறு திண்ணிய வடிவுடையனுயது இயல்பே என்பது புலப்படுத்தியவாறு. ஆணி- ஆதாரம். 'ஆணி யிவ்வுலகுக்கெல்லாம்' (கிட்கிந்தா - அனுமப் - 21) என முன்னும் இப்பொருளில் இச்சொல் ஆட்சி பெற்றிருத்தல் காணலாம். இராமனது வடிவைக் கண்ணுல் கண்டபோது அதன் அழகுமட்டுமே புலனுயது; அவ்வுடம்பைத் தாங்கிநின்ற இப்போது அதன் திண்மை முழுதும் நன்கு புலப்பட்டதாகலின் அனுமன் அதிசய முறலானுன். முன் கண்டிராத ஒன்றைக் காணும்போது உளதாகும் வியப்புணர்ச்சியே இங்கு அதிசயம் எனப்பட்டது. திரு மாலின் வடிவைத் தாங்கும்பேறு தனக்கேயுரியது என்றிருந்த கலுழன் இப்போது அனுமனும் அப்பேறு பெற்றதைக் கண்டு பழைய செருக்கடங்கி நாணுவானுயினுன். அப் பிரானுக்குப் படுக்கை

யாய்த் தாங்கிநிற்குமுரிமை பெற்றிருந்த அனந்தன், இப்போது தன் பகைவனுக்கு மகனாகிய அனுமனும் அவன் வடிவைத் தாங்கியது கண்டு அச்சத்தால் தலை நடுக்கங் கொள்ளலானான். தெய்வநிலையில் திருமாலின் வாகனமாகவும் படுக்கையாகவும் தாங்கும்பேறு பெற்றோ ராகிய கலுழனும் அனந்தனும் அவதார நிலையில் அப்பிரானைத் தாங்கும்பேறு அனுமனுக்கு மட்டுமே கிடைத்தது கண்டு நாணமும் நடுக்கமும் உற்றனர் எனலும் ஆம். தெய்வநிலையில் திருமாலுக்கு வாகனமாகும் கலுழனைப் பெரிய திருவடி என்றும், அவதார நிலையில் வாகனமாகத் தாங்கிய அனுமனைச் சிறிய திருவடி என்றும் வழங்குவது வைணவ மரபு. உலகளந்த தாளவன் என்று பாடம் இருப்பின் சிறக்கும். அளத்தற்குக் கருவியாயது தாளேயாதல் நினைக.

(219)

அனுமன் தோளில் இராமன் அமர்ந்தமைக்குவமை 7363-7364

**7363.** ஓத மொத்தனன் மாருதி
யதனகத் துறையும்
நாத னொத்தன னென்னினோ
துயில்கில னம்பன்
வேத மொத்தனன் மாருதி
வேதத்தின் சிரத்தின்
போத மொத்தன னிராமன்வே
றிதினிலை பொருவே.

ஓதம் ஒத்தனன் மாருதி;
அதன் அகத்து உறையும்
நாதன் ஒத்தனன் என்னினோ,
துயில்கிலன் நம்பன்;
வேதம் ஒத்தனன் மாருதி;
வேதத்தின் சிரத்தின்
போதம் ஒத்தனன் இராமன்;
வேறு இதின் இலை பொருவே.

பொ :—அனுமன் திருப்பாற்கடலை ஒத்தான்; (இராமன்) அந்தப் பாற்கடலில் தங்கியுள்ள திருமாலை ஒத்தனன் என்று சொல்லலாம் என்றாலோ, இராமன் இங்குத் துயிலவில்லை; (ஆதலால் அந்த உவமை பொருந்தாது;) அனுமன் வேதத்தை ஒத்தனன்; இராமன்

அந்த வேதத்தின் முடிவில் புலப்படும் ஞானத்தெளிவை ஒத்தனன்; (என்னலாம்) இதைக் காட்டிலும் வேறு உவமை இல்லை.

கு :—வெண்ணிறமுடைய அனுமன் தோள்மேல் கருநிறமுடைய இராமன் வீற்றிருந்த தோற்றம் பாற்கடலில் திருமால் தங்கியிருப்பது போன்றது என உவமை கூறலாம் என வண்ணம் பற்றிக் கருதியவர், பாற்கடலில் பரமன் துயில்வது போல இராமன் இங்குத் துயிலாது விழிப்புடன் இருத்தலின் அவ்வுவமை பொருந்தாது என விலக்கிப் பிறிதோருவமை கூறி, அதனினும் சிறந்த உவமை இல்லை என்பதையும் உறுதிப்படுத்தியுள்ளார். அனுமன் வேதங்களில் தெளிந்த ஞானமுடையவனுதல் பற்றி அவனை வேத மொத்தனன் எனவும் இராமன் வேதாந்தத்தின் தெளிவாக விளங்குபவனுதலின் அவனை 'வேதத்தின் சிரத்தின் போத மொத்தனன் எனவும் கூறியது பொருத்தமாக இருத்தலின் 'இதின் வேறிலை பொருவே' எனச் சிறப்பித்தவாறு. மாருதி வேதங்களில் வல்லன் என்பதை, "இல்லாத வுலகத் தெங்கு மீங்கிவன் இசைகள் கூரக் கல்லாத கலையும் வேதக் கடலுமே என்னுங் காட்சி சொல்லாலே தோன்றிற்றன்றே" (அனுமப் - 20) என்று இராமனே சிறப்பித்துள்ளமையால் அறியலாம். "கைவிலேந்தி யிலங்கையிற் பொருதாரன்றே மறைகளுக் கிறுதியாவார்" (சுந்தர - கடவுள் வாழ்த்து) என்றமையால் இராமன் வேதசிரத்தின் போதமாவன் என்பதை உணரலாம். போதம் - ஞானம். பொரு - உவமை. நம்பன் என்றது இராமனை; விரும்பத் தக்கவன் என்ற காரணம் பற்றிய பெயர். (220)

**7364.** தகுதியாய் நின்ற வென்றி
  மாருதி தனிமை சார்ந்த
மிகுதியை வேறு நோக்கி
  னெவ்வணம் விளம்புந் தன்மை
புகுதிகூர்ந் துள்ளார் வேதம்
  பொதுவுறப் புலத்து நோக்கும்
பகுதியை யொத்தான் வீரன்
  மேலைத்தன் பதமே யொத்தான்.

தகுதியாய் நின்ற வென்றி
  மாருதி தனிமை சார்ந்த
மிகுதியை வேறு நோக்கின்,
  எவ்வணம் விளம்பும் தன்மை ?

புகுதி கூர்ந்துள்ளார் வேதம்
பொதுவுறப் புலத்து நோக்கும்
பகுதியை ஒத்தான்; வீரன்,
மேலைத் தன் பதமே ஒத்தான்.

பொ:—இராமனுக்குத் தகுதியுடைய வாகனமாய் நின்ற வெற்றியுடைய அனுமானது தனித்தன்மை பொருந்திய சிறப்பைச் சொல்லுவது எவ்வாறு? இன்னும் வேறுபட அச்சிறப்பை நோக்குவோமாயின், ஞானமிக்குள்ளார்க்கு உரியதாகிய வேதம் பொதுவாகத் தன் அறிவால் நோக்கிக் கூறுகின்ற மூலப்பகுதியை ஒத்தான் (அனுமான்); வீரனுகிய இராமன் அம்மூலப்பகுதிக்கு மேலே உள்ள தன் பரமபதத்தையே ஒத்து விளங்கினுன்.

கு:—அனுமான் இராமனுக்கு வாகனமாய் அமர்ந்த நிலை கம்பருள்ளத்தில் மிக்க மகிழ்ச்சியுணர்வை எழுப்பிவிட்டமையால் மேலே பொருந்திய உவமை என்று ஒன்றைக் கூறியபின்னும் அவர் ஆர்வம் அடங்காமையின், மாருதி தனிமை சார்ந்த மிகுதியை விளம்புந் தன்மை எவ்வணம்? என்று வியந்தபின்னும் 'வேறு நோக்கின்' 'பகுதியை யொத்தான்; வீரன் மேலைத்தன் பதமே யொத்தான்' என்று மீண்டுமோர் உவமை கூறினுர். மூலப் பிரகிருதிக்கு மேல் பரமபதம் விளங்குவதுபோல அனுமனுக்குமேல் இராமன் விளங்கினுன் என்றவாறு. பகுதி என்றது மூலப் பிரகிருதியை. இருபத்து நாலாம் தத்துவமாக இது வேதத்தில் கூறப்படுதலின் 'வேதம் பொதுவுறப் புலத்து நோக்கும் பகுதி' எனச் சிறப்பித்தார். காட்சியளவையாலன்றி நூலளவையால் நோக்கியறிதற்குரியது மூலப் பிரகிருதி என்பது புலப்படுத்தியவாறு. புகுதி கூர்ந்துள்ளார் வேதம் என வேதத்தைச் சிறப்பித்தவாறு. புகுதி - ஞானம். நூல்களில் நுண்ணிதாய்ப் புகும் இயல்பினது என்ற காரணம் பற்றி ஞானம், புகுதி எனப்பட்டது. கூர்தல் - மிகுதல். ஞானமிக்கோரால் விரும்புதற்குரிய வேதம் என்க. வேதபுருடன் என்றும் வழக்கு இருத்தலால் அவ்வேதத்திற்கும் புலம் இருப்பதாகக் கூறியவாறு. பகுதி, புகுதி என்ற சொற்களை இப்பொருளில் இவர் 'பகுதியினுட் பயன்' 'புகுதியில்லாதவர்' (இரணியன் வதைப்-69) என முன்னும் ஆண்டிருத்தல் நினைக. முன்னமோர் உவமை கூறிவிட்டமையால் இங்கு வேறு நோக்கின் என்று தொடங்கி வேறு உவமை கூறினுர். மண் முதலிய தத்துவங்களுக்கெல்லாம் காரணமாய் இருபத்து நாலாவது தத்துவமாய், இருபத்தைந்தாவது தத்துவமாகச் சொல்லப்படும் பரம் பொருளுக்கு ஆதாரமாய் இருப்பது மூலப்பகுதி என்பது நூற்கொள்கை. (221)

## அனுமானது தோளின் பெருமை

**7365.** மேருவின் சிகரம் போன்ற
தென்னினும் வெளிறுண் டாமால்
மூரிநீ ரண்ட மெல்லாம்
வயிற்றிடை முன்னங் கொண்ட
வாரியற் கனேக மார்க்கத்
தாலிடம் வலம தாகச்
சாரிகை திரிய லான
மாருதி தாமப் பொற்றோள்.

மேருவின் சிகரம் போன்றது
என்னினும், வெளிறு உண்டாமால்—
மூரிநீர் அண்டம் எல்லாம்
வயிற்றிடை முன்னம் கொண்ட
ஆரியற்கு, அனேக மார்க்கத்தால்,
இடம் வலமது ஆகச்
சாரிகை திரியல் ஆன மாருதி
தாமப் பொன் — தோள்.

பொ :—பெரிய கடலால் சூழப்பட்ட அண்டம் எல்லாவற்றையும் முன் (பிரளய காலத்தில்) தன் வயிற்றிடைக் கொண்டிருந்த திருமாலின் அமிசமான இராமனுக்கு (வாகனமாய்ப்) பல வழிகளில் இடம் வலமாகச் சாரிகை திரிதற்குரிய அனுமானது மாலையணிந்த அழகிய தோள், 'மேருமலையின் சிகரம் போன்றது' என்று கூறினாலும் குற்றமுண்டாகும்.

கு :—அண்ட முழுவதையும் உண்டவனைத் தாங்கித் திரியும் தோள்களுக்கு அவ்வண்டத்தின் ஓரிடத்தில் இருக்கும் மேருமலையின் சிகரத்தை உவமை கூறுதல் பொருந்தாது என்றவாறு. இது விலக்குவமை. வெளிறு - குற்றம். மூரி - பெருமை. ஆரியன் என்றது இராமனை. அனுமானது தோளுக்கு உலக முண்டவனது உடம்பு நொய்மையாகத் தோன்றியது என்பது புலப்பட 'அனேக மார்க்கத்தால் இடம் வலமதாகச் சாரிகை திரியலான......தோள்' என்றார். அனேக மார்க்கம் - பல வழிகள். இடமும் வலமுமாகத் திரிதலையே சாரிகை திரிதல் என்பர். தாமம் - மாலை. பொன் போன்ற நிறமுடைய தோள் எனலும் ஆம். திரியும் தோள்களுக்குத் திரியாதமலை உவமையாகாது என விலக்கியவாறாகவும் கொள்வர். (222)

### அருந்தவர் ஆசியும் வானவர் வருகையும்

**7366.** ஆசி சொல்லின ரருந்தவ
ரறமெனுந் தெய்வம்
காசி னன்னெடுங் கரமெடுத்
தார்த்தது கயிலை
ஈச னுன்முக னென்றிவர்
முதலிய விமையோர்
பூசல் காணிய வந்தன
ரந்தரம் புகுந்தார்.

ஆசி சொல்லினர் அருந்தவர்;
அறம் எனும் தெய்வம்
காசு இல் நல் நெடுங் கரம்
எடுத்து ஆர்த்தது; கயிலை
ஈசன் நான்முகன் என்றிவர்
முதலிய இமையோர்
பூசல் காணிய வந்தனர்
அந்தரம் புகுந்தார்.

பொ :—(அனுமான் இராமனைத் தோள்மேற்கொண்ட தோற்றத்தைக் கண்டு) அரிய தவமுனிவர்கள் வாழ்த்துக் கூறினர்; தருமம் என்கின்ற தெய்வம் தனது குற்றமற்ற நல்ல நெடிய கைகளைத் தூக்கி ஆரவாரித்தது; கயிலையில் உள்ள உருத்திரன் பிரமன் என்ற இவர்கள் முதலாக உள்ள தேவர்கள் (இராம இராவணர்) போரைக் காண்பதற்காக வந்து ஆகாயத்தில் புகுந்தார்கள்.

கு :—காசு - குற்றம். பூசல் - போர். அந்தரம் என்றது இலங்கைப் போர்க்களத்திற்கு மேற்பகுதியாக உள்ள ஆகாயத்தை. இராமன் வெல்க என்பது அருந்தவரின் ஆசியாகக் கொள்ளலாம். இதுகாறும் புகாதிருந்த இலங்கையில் தான் புகுமாறு இராமன் வெல்வான் என்ற மகிழ்ச்சியால் அறம் கரம் எடுத்து ஆரவாரிக்கலாயிற்று. இராம இராவணப் போர் சிறப்பாக இருக்கும் என்ற கருத்தால் தேவர்கள் அப்போரைக் காண அந்தரம் புகுந்து நின்றனர் என்க.
(223)

## இராமன் வில்நாணைத் தெறித்தல்

7367. அண்ண லஞ்சன வண்ணனு
மமர்குறித் தமைந்தான்
எண்ண ரும்பெருந் தனிவலிச்
சிலையைநா ணெறிந்தான்
மண்ணும் வானமு மற்றைய
பிறவுந்தன் வாய்ப்பெய்
துண்ணுங் காலத்தவ் வுருத்திர
னார்ப்பொத்த தோதை.

அண்ணல், அஞ்சன வண்ணனும்,
அமர் குறித்து அமைந்தான்
எண்ணரும் பெருந் தலைவலிச்
சிலையை நாண் எறிந்தான்;
மண்ணும் வானமும், மற்றைய
பிறவும், தன் வாய்ப் பெய்து
உண்ணும் காலத்து, அவ் உருத்திரன்
ஆர்ப்பு ஒத்தது ஓதை.

பொ :—பெருமையுடைய, மை போன்ற நிறத்தவனாகிய இராமனும் (இராவணனோடு) போர் செய்தலைக் கருதி ஆயத்தமானான்; நினைத்தற்கு அரிய பெரிய ஒப்பற்ற வலிமையுடைய தன் வில்லினது நாணினைத் தெறித்தான்; அந்த நாணினது ஓசை, மண்ணுலகையும் விண்ணுலகையும் மற்றுமுள்ள பிறவற்றையும் வாயில் போட்டு உண்ணும் மகா சங்கார காலத்தில் அந்த உருத்திரன் ஆரவாரிக்கின்ற ஆரவாரத்தை ஒத்தது.

கு :—அண்ணலாகிய அஞ்சன வண்ணன் என இருபெயரொட்டாக்குக. குறித்தல் - நினைத்தல். போர் செய்தற்கு ஆயத்தமானான் என்பார், 'அமர்குறித்தமைந்தான்' என்றார். அமைந்தானாய் நாணெறிந்தான் என்க. சிலையினது நாண் என உருபு மயக்கமாக்குக. (எறிந்த) ஓதை உருத்திரனார்ப்பொத்தது என இயையும். அழித்தற்குரிய உருத்திரன் உலக முழுமையையும் அழிக்குங்கால் செய்யும் ஆரவாரம் போன்று இராமனது நாணொலி மிக்கொலித்தது என்றவாறு. அழித்தலை வாய்ப்பெய் துண்ணுவதாகக் கூறியது இலக்கணை. போர் தொடங்குவதற்கு அடையாளமாக வில்லினது நாணினைத் தெறிப்பது வீரர் மரபு. (224)

## நாணொலியின் விளைவுகள்

**7368.** ஆவி சென்றிலர் நின்றில
　　ரரக்கரோ டியக்கர்
நாவு லர்ந்தனர் கலங்கினர்
　　விலங்கினர் நடுங்கிக்
கோவை நின்றபே ரண்டமுங்
　　குலைந்தன குலையாத்
தேவ தேவனும் விரிஞ்சனுஞ்
　　சிரதலங் குலைந்தார்.

ஆவி சென்றிலர், நின்றிலர்,
　　அரக்கரோடு இயக்கர்;
நா உலர்ந்தனர்; கலங்கினர்,
　　விலங்கினர்; நடுங்கி,
கோவை நின்ற பேர்
　　அண்டமும் குலைந்தன; குலையாத்
தேவ தேவனும், விரிஞ்சனும்,
　　சிரதலம் குலைந்தார்.

பொ:—(இராமனது நாணொலியைக் கேட்ட) அரக்கரும் இயக்கரும் உயிர் பிரிந்திலராயினும், நின்ற இடத்தில் நில்லாதவர்களாய், நாவறண்டு, மனங்கலங்கி, உடல்நடுங்கி வேறிடங்கட்கு விலகி ஓடினர்; வரிசைப்பட நின்ற பெரிய அண்டங்களும் நடுங்கின; எதற்கும் நடுங்காத உருத்திரனும் பிரமனும் தலை நடுங்கினர்.

கு:—உயிர் போதற்குரிய துன்பமுற்றனர்; என்பார், 'ஆவி சென்றிலர்' என்றார். வலியருள் வலியராய அரக்கரும் இயக்கரும் இங்ஙனம் அல்லலுற்றனர் எனவே ஏனையோர் அல்லல் கூறுமலே புலனும் என்ற கருத்தால் அவ் விருதிறத்தாரின் அல்லலை மட்டும் விதந்து கூறியவாறு. நின்றிலர் நாவுலர்ந்தனர், கலங்கினர் என்பன முற்றெச்சங்கள். அரக்கரோடியக்கர் ஆவி சென்றிலராய் ஓரிடத்து நின்றிலராய் நாவுலர்ந்து கலங்கி, நடுங்கி, விலங்கினர் என முடிக்க. கோவை - வரிசை. குலைதல் - நடுங்குதல். (225)

52ல் 225-1, 2, 3, 4 ஆகப் பின்வரும் மிகைப்பாடல்கள் காணப் படுகின்றன.

**7368 a** அனைய கண்டிக லரக்கருக் கிறைவனப் பொழுதில்
(—) மனம் நெருப்பெழக் கொதித்தொரு மனிதனென் வலியை

நினைய கிற்றிலன் நெடுஞ்சம ரென்றொடுந் துணிந்த
வினையம் இன்றொடும் போக்குவ னெனவிழி சிவந்தான்.

b அடுக்கி நின்றிடு பகிரண்டப் பரப்பெலா மதிரத்
துடிக்கு நெஞ்சகத் திமையவர் துளங்குறக் கூற்றும்
நடுக்க முற்றிட நல்லற மேங்கிடக் கயிலை
எடுக்குந் திண்டிற லரக்கனும் சிலையைநா ணெறிந்தான்.

c எறிந்தடல் சிலைவளைத் தொரு கணத்திடை யெரியின்
நிறந் தரும்பல நெடுஞ்சுடர்ப் பகழிகள் நெறியின்
அறிந்திடற்கரி தாகிய அளப்பில்பல் கோடி
செறிந்திடத்திசை வானகம் வெளியின்றிச் செறித்தான்.

d ஐய னோக்கினன் நன்றென நகைத்தவன் சிலைவாய்
எய்த வெஞ்சரம் பொடிபட யாவையு முடுக்கி
வெய்தி னங்கவன் மேற்செல வெழுகணை விடுத்தான்
கைதவன்கணை யேழுகொண் டக்கணை கடிந்தான்.

## இராம இராவணன் போர்

**7369.** ஊழி வெங்கன லொப்பன
துப்பன வுருவ
வாழி நீரையுங் குடிப்பன
திசைகளை யளப்ப
வீழின் மீச்செலின் மண்ணையும்
விண்ணையுந் தொளைப்ப
வேழு வெஞ்சர முடன்றொடுத்
திராவண னெய்தான்.

ஊழி வெங்கனல் ஒப்பன, துப்பு அன உருவ,
ஆழி நீரையும் குடிப்பன, திசைகளை அளப்ப,
வீழின், மீச்செலின், மண்ணையும், விண்ணையும், தொளைப்ப,
ஏழு வெஞ்சரம், உடன் தொடுத்து, இராவணன் எய்தான்.

பொ :—(அப்போது) ஊழிக்காலத்து இறுதியில் தோன்றும் கொடிய நெருப்பைப் போன்ற வெம்மையுடையனவும், பவழம் போன்ற செம்மை நிறமுடையனவும், கடல் நீரையும் வற்றுமாறு குடிக்க வல்லனவும், திசைகளை யெல்லாம் அளக்கவல்ல விரைவுடையனவும், கீழ்வீழ்ந்தால் நிலத்தையும், மேற்சென்றால் வானத்தையும்

தொளைக்கும் தன்மையனவுமான ஏழு கொடிய அம்புகளை ஒரே தொடுப்பில் தொடுத்து இராவணன் விடுத்தான்.

கு :—வீழின் மண்ணையும் மீச்செலின் விண்ணையும் தொளைப்ப என நிரனிறை வகையால் இயைக்க. இராவணன் விடுத்த அம்புகளின் வெம்மையும் நிறமும், வன்மையும, விரைவும், கூர்மையும் புலப்படுத்தியவாறு. (226)

**7370.** எய்த வாளியை யேழினு
லேழினே டேழு
செய்து வெஞ்சர மைந்தொரு
தொடையினிற் சேர்த்தி
வெய்து காலவெங் கனல்களும்
வெள்குறப் பொறிகள்
பெய்து போம்வகை யிராகவன்
சிலையினிற் பெய்தான்.

எய்த வாளியை, ஏழினுல், ஏழினேடு ஏழு
செய்து, வெஞ்சரம் ஐந்து ஒரு தொடையினில் சேர்த்தி,
வெய்து கால வெங்கனல்களும் வெள்குற, பொறிகள்
பெய்து போம்வகை, இராகவன் சிலையினிற் பெய்தான்.

பொ :—இராவணன் விட்ட அம்பு ஏழினையும் தன் ஏழு அம்புகளால் பதினுன்கு துண்டுகளாகுமாறு துண்டித்து விட்டு, கொடிய ஐந்து அம்புகளை ஒரு தொடையில் அமைத்து, வெம்மைமிக்க இறுதிக் காலத்து எழும் கொடிய நெருப்புப் பொறிகளும் நாணுமாறு அனற்பொறிகளைப் பெய்து கொண்டு போகுமாறு இராமன் தன் வில்லில் நின்றும் விடுத்தான்.

கு :—இராவணன் விட்ட ஒவ்வொரு கணையும் இரண்டு துண்டு ஆகுமாறு இராமன் செய்தான் என்பார், 'எய்த வாளியை ஏழினுல் ஏழினேடு ஏழு செய்து' என்ருர். வெள்குதல் - நாணுதல். ஊழியிறுதியில் உலகையழிக்கும் நெருப்பு சிந்தும் கனற்பொறிகளினும் இராமன் அம்புகள் பெய்யும் கனற்பொறிகள் மிக்கன என்பார், 'காலவெங்கனல்களும் வெள்குறப் பொறிகள் பெய்து' என்ருர். பெய்தல், விடுத்தலை உணர்த்தியது. (227)

**7371.** வாளி யைந்தையு மைந்தினுல்
விசும்பிடை மாற்றி
யாளி மொய்ம்பினவ் வரக்கனு
மையிரண் டம்பு
தோளி னுனுற வாங்கினன்
றுரந்தனன் சுருதி
யாளு நாயக னவற்றையு
மவற்றினு லறுத்தான்.

வாளி ஐந்தையும் ஐந்தினுல்
விசும்பிடை மாற்றி,
ஆளி மொய்ம்பின் அவ் அரக்கனும்,
ஐ — இரண்டு அம்பு
தோளில் நாண் உற வாங்கினன்,
துரந்தனன்; சுருதி
ஆளும் நாயகன் அவற்றையும்
அலற்றினுல் அறுத்தான்.

பொ :—சிங்கத்தின் வலிமை படைத்த அந்த இராவணனும் இராமன் விட்ட ஐந்து அம்புகளையும் தன் ஐந்து அம்புகளால் விண்ணிடத்தே அழியுமாறு மாற்றிவிட்டுப் பத்து அம்புகளை வில்லில் தொடுத்து, நாண் தன் தோளில் பொருந்துமாறு இழுத்து விடுத்தான்; வேதங்களில் சிறப்பித்துப் பேசப்படுகின்ற பரம்பொருளின் அமிசமான இராமன் அந்த அம்புகளையும் அவ்வளவினையுடைய அம்புகளினுல் அறுத்து எறிந்தான்.

கு :—சுருதி - வேதம். சுருதியால் ஆளப்படும் நாயகன் எனச் செயப்பாட்டு வினையாக்குக. ஆளுதல் இங்குச் சொல்லுதல் என்ற பொருளில் வந்தது. தோளில் நாணுற வாங்கினன் என்றது, மிக வன்மையோடு நாணையிழுத்து விடுத்ததை உணர்த்தியது. அவற்றினுல் என்றது, இராவணன் விடுத்த அளவுள்ள அம்புகளால் - பத்து அம்புகளால் என்னும் பொருளது. சுட்டு, அளவினை யுணர்த்தியது. (228)

**7372.** அறுத்து மற்றவ னயனின்ற
வளப்பரு மரக்கர்
செறுத்து விட்டன படையெலாங்
கணைகளாற் சிந்தி

யிறுத்து வீசிய கிரிகளை
யெரியுக நூறி
யொறுத்து மற்றவர் தலைகளாற்
சிலமலை யுயர்த்தான்.

அறுத்து, மற்று அவன் அயல்
நின்ற அளப்பரும் அரக்கர்
செறுத்து விட்டன படை
எலாம் கணைகளால் சிந்தி,
இறுத்து வீசிய கிரிகளை
எரி உக நூறி,
ஒறுத்து, மற்று அவர் தலைகளால்
சில மலை உயர்த்தான்.

பொ :—அவ்வாறு அறுத்து எறிந்துவிட்டு அந்த இராவணன் பக்கத்தில் நின்றவர்களாகிய அளவிடற்கு அரிய அரக்கர்கள் வெகுண்டு வீசிய படைக்கலங்களை எல்லாம் தன் அம்புகளால் சிதறச் செய்துவிட்டு, அவர்கள் பறித்து வீசிய மலைகளை நெருப்புப் பொறி சிந்துமாறு சிதைத்து அழித்துவிட்டு அவ்வரக்கர் தலைகளைக் கொய்து அத்தலைகளால் சில மலைகளை உண்டாக்கினான்.

கு :—அளப்ப அரும் என்றதில் அகரம் விகாரத்தால் தொக்கது. செறுத்தல் - வெகுளல். நூறுதல் துகளாக்குதல்; இராமன் அம்பு எய்து கொன்ற அரக்கர் தலைகளின் குவியல்கள் சில மலைகள்போல உயர்ந்து காணப்பட்டன என்பார், 'அவர் தலைகளால் சிலமலை உயர்த்தான்' என்றார். ஒறுத்தல் இங்கு அழித்தலை உணர்த்தியது. (229)

**7373.** மீனு டைக்கருங் கடல்புரை
யிராக்கதர் விட்ட
ஊனு டைப்படை யிராவண
னம்பொடு மோடி
வான ரக்கடல் படாவகை
வாளியான் மாற்றித்
தானு டைச்சரத் தாலவர்
தலைமலை தடிந்தான்.

மீனுடைக் கருங்கடல் புரை இராக்கதர் விட்ட
ஊனுடைப் படை, இராவணன் அம்பொடும் ஓடி,
வானரக் கடல் படாவகை, வாளியால் மாற்றி,
தானுடைச் சரத்தால் அவர் தலைமலை தடிந்தான்.

பொ :—மீன்களையுடைய கரிய கடல் போன்ற அரக்கர்கள் விட்ட தசைபடிந்த படைக்கலங்கள், இராவணன் விட்ட அம்போடும் ஓடி வானரப் படையாகிய கடலில் படாதவண்ணம் அம்பினால் அவற்றை அழித்துவிட்டு, தன்னுடைய சிறந்த அம்புகளால் அவ்வரக்கர்தம் தலைகளாகிய மலைகளை அறுத்து வீழ்த்தினான். (இராமன்).

கு :—கரிய நிறத்தாலும் பரப்பாலும் அரக்கர் படைக்குக் கருங் கடல் உவமையாயிற்று. மீனுடைக் கருங்கடல் என்ற உவமை அடைக்கேற்ப, மீன் போன்ற வேல் முதலிய படைக்கலங்களை யுடைய அரக்கர் எனப் பொருளின் கண்ணும் வருவித்துரைக்க. பகைவர் உடம்பில் பட்டுப் பழகிய படையாதல் தோன்ற "ஊனுடைப் படை' என்றார். ஓடிப் படாவகை என இயையும். படுதல் இங்குத் தாக்குதலை உணர்த்தியது. வானரக்கடல் என்றது, வானர சேனை யாகிய கடல் என்றவாறு. வானரப் படையாகிய கடலில் சென்று தாக்காதவாறு இராமன் தன் அம்புகளால் அவ்வரக்கர் படைக் கலங்களை இடையே அறுத்தொழித்தான் என்றவாறு. தலையாகிய மலை என்றது உருவகம். இதனால் அரக்கர்தம் தலைகளின் பருமை புலப்படுத்தியவாறு. (230)

## அனுமானின் வேகம்

**7374.** இம்ப ரானெனின் விசும்பின
னாகுமோ ரிமைப்பிற்
றும்பை சூடிய விராவணன்
முகந்தொறுந் தோன்றும்
வெம்பு வஞ்சகர் விழிதொறுந்
திரியுமே னின்றான்
அம்பின் முன்செலு மனத்திற்கு
முன்செலு மனுமன்.

இம்பரான் எனின், விசும்பினன்
ஆகும், ஓர் இமைப்பில்;
தும்பை சூடிய இராவணன்
முகம் தொறும் தோன்றும் :

வெம்பு வஞ்சகர் விழி தொறும்
திரியும்; — மேல் நின்றான்
அம்பின் முன் செலும், மனத்திற்கும்
முன் செலும் அனுமன்.

பொ :—தன்மேல் நின்ற இராமனுடைய அம்புக்கு முன் விரைந்து செல்கின்றவனும், மனத்தினும் விரைந்து முன் செல்கின்றவனுமான அனுமன் - இவ்வுலகத்தில்தான் இருக்கின்றான் என்று நினைத்தால் ஓர் இமைப்பொழுதில் விண்ணகத்தவனாவான்; தும்பை மாலை சூடிய இராவணனுடைய முகங்கள் தோறும் தோன்றுவான்; மனம் வெதும்புகின்ற வஞ்சக அரக்கர்தம் கண்கள் தோறும் திரிவான்.

கு :—இம்பர் - இந்நிலவுலகம். இதனால் அனுமானின் விரைந்த செலவினைப் புலப்படுத்தியவாறு. இராமன் அம்பு விரைந்து செல்லும் இயல்பினது; அனுமன் அந்த அம்பினும் விரைந்து செல்கின்ற இயல்பினன் என்க. விரைந்து செல்லுதற்குரிய இராமன் அம்பைக் காட்டிலும் மனத்தைக் காட்டிலும் விரைந்த நடையினையுடையவன் அனுமன் ஆதலின், மண்ணிலிருக்கின்றான் என்று எண்ணும்போதே விண்ணிலிருப்பான், இராவணன் முகந்தொறும் தோன்றுவான்; வஞ்சகர் விழிதொறும் திரிவான் ஆனான் என்க. மைந்து பொருளாக நடக்கும் போராதலின் தும்பை மாலையை இராவணன் சூடினான். இராவணனுக்கு முகம் பத்தாகலின் அம்முகங்கள் ஒவ்வொன்றன் முன்னும் தோன்றி அச்சுறுத்தினான் அனுமன் என்க. தன்மைந்தினைக் காட்டத் தும்பை சூடிய இராவணன் முகந்தொறும் தோன்றி அவன் மைந்துகெடச் செய்தான் என்பது குறிப்பு. மேனின்றான் என்பது அனுமன் தோள்மேல் நின்றான் என்ற பொருளோடு யாவர்க்கும் மேல் நின்றான் என்ற பொருளையும் தருதல் காணலாம். அனுமனைக் கண்டவுடன் அரக்கர் மனம் வெம்பினர் ஆதலின், "வெம்புவஞ்சகர்" என்றார். (231)

## போர்க்களக் காட்சிகள்

7375. ஆடு கின்றன கவந்தமு
மவற்றொடு மாடிப்
பாடு கின்றன வலகையு
நீங்கிய பனைக்கைக்

கோடு துன்றிய கரிகளும்
பரிகளுந் தலைக்கொண்
டோடு கின்றன வுலப்பில
வுதிரவா றுவரி.

ஆடுகின்றன, கவந்தமும்; அவற்றொடும் ஆடிப்
பாடுகின்றன, அலகையும்; நீங்கிய பணைக்கைக்
கோடு துன்றிய கரிகளும் பரிகளும் தலைக் கொண்டு
ஓடுகின்றன, உலப்பு இல, உதிர ஆறு உவரி.

பொ :—கவந்தங்களும் ஆடுகின்றன; அந்தக் கவந்தங்களோடு பேய்களும் ஆடிக்கொண்டு பாடுகின்றன; பனைமரம் போன்ற துதிக்கைகள் துண்டிக்கப்பெற்றனவும் கொம்புகள் நெருங்கியுள்ளனவுமான யானைகளையும் குதிரைகளையும் தலைமேற் கொண்டு அளவிலாத இரத்த ஆறுகள் கடலை நோக்கி ஓடுகின்றன.

கு :—கவந்தம் - தலையற்ற உடல். அலகை - பேய். பணைக்கை நீங்கிய கரிகள், கோடுதுன்றிய கரிகள் என இயையும். உலப்பில உதிரவாறு கரிகளும் பரிகளுந் தலைக் கொண்டு உவரி ஓடுகின்றன என இயையும். உவரி - கடல். இரத்த ஆற்றில் இறந்த யானைகளும் குதிரைகளும் மிதந்து செல்கின்றன என்பார், கரிகளும் பரிகளும் தலைக்கொண்டு உதிர ஆறு ஓடுகின்றன என்றார். ஒரு கவந்தம் போர்க்களத்தில் ஆட வேண்டுமாயின் ஆயிரம் யானைகளும் பதினாயிரம் தேர்களும் ஒருகோடி குதிரைகளும், ஆயிரம் படைத் தலைவர்களும் இறந்துபடவேண்டும். இங்குப் பல கவந்தங்கள் ஆடின என்றமையால் இப்போரில் இறந்தவர்களின் எண்ணிக்கை எண்ணவியலாதது என்பது தெளிவு. ஆனையாயிரம் தேர்பதினாயிரம் அடர்பரியொருகோடி, சேனைகாவலர் ஆயிரம்பேர்படின் செழுமணிக் கவந்தமொன்றாடும் (மூலபலவதைப்–228) என்று பின் கூறப்படுதல் காண்க. (232)

**7376.** அற்ற வாழிய வறுப்புண்ட
வச்சின வம்போ
டிற்ற கொய்யுளைப் புரவிய
தேர்க்குல மெல்லாம்

ஒற்றை வாளியோ டுருண்டன
கருங்களிற் றோங்கல்
சுற்றும் வாசியுந் துமிந்தன
வமர்க்களந் தொடர்ந்த.

அற்ற ஆழிய, அறுப்புண்ட அச்சின, அம்போடு
இற்ற கொய் உளைப் புரவிய, தேர்க்குலம் எல்லாம்;
ஒற்றை வாளியோடு உருண்டன, கருங்களிற்று ஓங்கல்;
சுற்றும் வாசியும் துமிந்தன, அமர்க்களம் தொடந்த.

பொ :—போர்க்களத்தில் தொடர்ந்து வந்தனவாகிய, தேர்களின் கூட்டம் எல்லாம், இராமனுடைய அம்பினுல் அற்றுப்போன சக்கரங் களையுடையனவாகவும், துண்டிக்கப்பட்ட அச்சுகளையுடையனவாக வும், இறந்துபோன குதிரைகளையுடையனவாகவும் ஆயின; கரிய யானைகளாகிய மலைகள் இராமனது ஓர் அம்பினுல் உருண்டன; சுற்றித்திரியும் குதிரைகளும் துண்டமாயின.

கு :—அம்போடு, வாளியோடு என்புழி ஓடு கருவிப் பொருளன; 'ஊசியொடுகுயின்ற தூசும் பட்டும்' என்புழிப் போல. தேர்க்குலங் களின் ஆழிகள் அற்றன; அச்சு அறுப்புண்டன; புரவிகள் இற்றன என்பார், அற்ற ஆழிய அறுப்புண்ட அச்சின, இற்ற புரவிய தேர்க் குலம் எல்லாம் என்றார். கொய்யுளைப் புரவி - கத்தரித்த பிடரி மயிரையுடைய குதிரை. வாசி துமிதற்கும் ஒற்றை வாளியையே கருவியாகக் கொள்க. யானைப் படைகட்கு ஓரம்பும் குதிரைப் படைகட்கு ஓரம்பும்விட்டு இராமன் அழித்தான்என்றவாறு. துமிதல்- துண்டுபடுதல். அமர்க்களம் தொடர்தல் தேர்க்குலத்திற்கும் கருங் களிற்றுக்கும் வாசிக்கும் இயைத்து இறுதிநிலை விளக்காக்குக (233)

**7377.** தேரி ழந்துவெஞ் சிலைகளு
மிழந்துசெந் தறுகட்
காரி ழந்துவெங் கலினமாக்
கால்களு மிழந்து
சூரி ழந்துவன் கவசமு
மிழந்துதுப் பிழந்து
தாரி ழந்துபின் னிழந்தனர்
நிருதர்தந் தலைகள்.

தேர் இழந்து, வெஞ்சிலைகளும் இழந்து, செந்தறுகண்
கார் இழந்து, வெங்கலினமாக் கால்களும் இழந்து,
சூர் இழந்து வன்கவசமும் இழந்து, துப்பு இழந்து,
தார் இழந்து, பின் இழந்தனர் நிருதர், தம் தலைகள்.

பொ :—அரக்கர்கள் – தம்தேர்களை இழந்து கொடிய விற்களை இழந்து நேர்மையுடன்கூடிய அஞ்சாமையையுடைய மேகம் போன்ற யானைகளை இழந்து கொடுமை வாய்ந்த, கடிவாளத்தையுடைய குதிரைகளாகிய ஊர்திகளை இழந்து, சூரத்தன்மையை இழந்து, மார்பிலணிந்த கவசத்தை இழந்து. வலிமையை இழந்து, மாலைகளை இழந்து பின் தம் தலைகளையும் இழந்தார்கள்.

கு :—தேர் வீரர், யானை வீரர், குதிரை வீரர் என்பார் தம் ஊர்திகளையும், கையில் தாங்கிய விற்களையும், மார்பிலணிந்த கவசங்களையும், மாலைகளையும், சூரப்பண்பினையும், வலிமையையும் முறை முறையே இழந்து பின் தலைகளையும் இழந்தார்கள் என்றவாறு. செய்யுளாகலின் சில முறை மாறிநின்றன; கால் என்பது ஊர்தி என்னும் பொருளில் வந்தது. கலினமாவாகிய ஊர்தி என்க. செந்தறுகட்கார் என்றமையால் கார் என்றது யானையை உணர்த்திற்று என்பது தெளிவு. (234)

### அரக்கியர் தம் கணவர்தம் தலையொடு முடிதல்

**7378.** அரவி னுண்ணிடை யரக்கியர்
கணவர்த மற்ற
சிரமு மன்னவை யாதலின்
வேற்றுமை தெரியார்
புரவி யின்றலை பூட்கையின்
றலையிவை பொருத்திக்
கரவி லின்னுயிர் துறந்தனர்
கவவுறத் தழுவி.

அரவின்நுண் இடை அரக்கியர், கணவர்தம் அற்ற
சிரமும் அன்னவை ஆதலின், வேற்றுமை தெரியார்
புரவியின் தலை பூட்கையின் தலை இவை பொருத்திக்
கரவில் இன் உயிர் துறந்தனர், கவவுறத் தழுவி.

பொ :—பாம்பு போலத் துவளுகின்ற சிறிய இடையையுடைய அரக்கியர், தம் கணவருடையனவாய் (இராமன் அம்பினால்) அற்றுப்

போன தலைகளும் குதிரை யானைகளின் தலைகளைப் போன்றனவே யாதலின், (தம் கணவர் தலைகட்கும் அவ்விலங்குகளின் தலைகட்கும்) வேறுபாடு அறியமாட்டாதவராய்க் குதிரையின் தலை யானையின் தலை இவற்றை மறைவான இடத்திற்குக் கொண்டுபோய்த் (தம் முலை யினும் முகத்தினும்) பொருத்தி இறுகத் தழுவிக்கொண்டு தம் இனிய உயிரை விட்டனர்.

கு :—துவட்சியால் பாம்பு, மகளிர் இடைக்கு உவமையாயது. 'பாம்பேர் மருங்குல்' (சிறுபாணாற்றுப் படை வெண்பா) என்றதும் காண்க. கற்புடைப் பெண்டிர் போரில் இறந்த தம் கணவர்களின் தலையொடு முடிதல் மரபு. "முலையும் முகனும் சேர்த்திக் கொண் டோன் தலையொடு முடியும் நிலையொடு தொகை இ" (தொல் - பொருள் - 79) எனவும் "மண்டமருள் மாருமைந்திற், கொண்டான் றலையொடு கோல்வளை முடிந்தன்று" (பு-வெ-காஞ்சி–13) எனவும் கூறியுள்ளமை காண்க. இங்குக் கூறிய அரக்கியரின் கணவர்கள் குதிரைத்தலையுடையராகவும் யானைத்தலையுடையவராகவும் இருந் தார்கள் ஆதலின் அவர் தம் தலைகள் இராமன் அம்புகளால் அற்று வீழ்ந்தபின், அம்மகளிர் தம் கணவர் தம்தலைகளோடு தழுவிக் கொண்டு இறக்கக் கருதிப் போர்க்களத்தில் வந்து தேடித் தம் கணவர்தம் தலை என்று மயங்கி யானைகளின் தலைகளையும் குதிரை களின் தலைகளையும் எடுத்துக்கொண்டு மறைவான இடத்திலிருந்து தம் முலைகளினும் முகங்களினும் அத்தலைகளைப் பொருந்தச் செய்து இறுகத் தழுவிக்கொண்டு, தம் இனிய உயிரை விடுத்தனர் என்க. இது மயக்க அணி. குதிரை யானை என்ற விலங்குகளின் தலைகட்கும் வெட்டுண்ட தம் கணவர் தலைகட்கும் இருந்த ஒற்றுமையே இம்மயக் கத்திற்குக் காரணமாயிற்று. பிறரறிய முலையினும் முகத்தினும் சேர்த்துத் தலைகளைத் தழுவுதல் கூடாமையின் கரவில் நின்று தழுவ லாயினர். கரவு - மறைவான இடம். பூட்கை - யானை. சீதையின் கற்பில் இழுக்குண்டாக்க முயலும் அரக்கரின் மனைவியர், தாமே கற்பில் இழுக்குற நேர்ந்தமை காட்டியவாறு. (235)

52ல் 236–1 ஆகப் பின்வரும் மிகைப்பாடல் காணப்படுகின்றது.

7378 (a) எய்து வெள்ள நூற்றிரண்டெனத்
திரண்ட கால்வயவர்
மொய் கொள் சேனையந்
தலைவர்கள் முரண்கரிபரிதேர்
வெய்ய வீரர்கள் அளப்பிலர்
கோடியர் விறல்சேர்
ஐயன் வெஞ்சரம் அறுத்திட
அனைவரும் அவிந்தார்.

7379. ஆர்ப்ப டங்கின வாயெலா
மழற்கொழுந் தொழுகப்
பார்ப்ப டங்கின கண்ணெலாம்
பலவகைப் படைகள்
தூர்ப்ப டங்கின கையெலாந்
தூளியின் படலைப்
போர்ப்ப டங்கின வுலகெலா
முரசெலாம் போன.

ஆர்ப்பு அடங்கின, வாய் எலாம்;
அழற்கொழுந்து ஒழுகப்
பார்ப்பு அடங்கின, கண் எலாம்;
பல வகைப் படைகள்
தூர்ப்பு அடங்கின, கை எலாம்;
தூளியின் படலைப்
போர்ப்பு அடங்கின உலகு எலாம்;
முரசு எலாம் போன.

பொ :—(அரக்கர்தம்) வாய்கள் எல்லாம் ஆரவாரித்தல் அடங்கின; கண்கள் எல்லாம் நெருப்புப்பொறி சிந்துமாறு பார்த்தல் ஒழிந்தன; அவர் கைகள் எல்லாம் பலவகையான படைக்கலங்களை விடுதல் ஒய்ந்தன; (அவர்கள் கால்களால் எழுப்பப்படும்) தூளியின் திரள் உலகமுழுமையையும் மூடிக் கொள்ளும் நிலை நீங்கின; முரசங்கள் எல்லாம் ஒலி அடங்கின.

கு :—ஆர்ப்பு, பார்ப்பு, தூர்ப்பு, போர்ப்பு என்பன தொழிற் பெயர்கள். வாய் ஆர்ப்பு அடங்கின; கண் பார்ப்பு அடங்கின; கை தூர்ப்பு அடங்கின; தூளியின் படலைப்போர்ப்பு அடங்கின என இயையும். அரக்கர்கள் எல்லாம் இறந்து பட்டமையால் அவர்கள் வாய்கள் முன்போல ஆரவாரித்தலும் அவர்கள் கண்கள் முன்போல் சினக் கனல் சிந்தப் பார்த்தலும், அவர்கள் கைகள் பகைவர் மேல் படைகளை விட்டு நிரப்புதலும், அவர்கள் இயக்கத்தால் எழும் தூளி முன் போல உலகை மூடிக்கொள்ளுதலும் அவர்கள் வீர முரசங்கள் அடிக்கப்படுதலும் இலவாயின என்றவாறு. தூர்த்தல் - நிரப்புதல். போர்த்தல் - மூடுதல். அடங்கின என்ற சொல் பன்முறை வரத் தொடுத்தமையால் இது சொற்பின் வருநிலையணி. முரசெலாம் போன என்றது, ஒலி அடங்கின என்றவாறு; கிழிந்து போன எனலும் ஆம். (236)

7380. ஒன்று நூற்றினே டாயிரங்
கொடுந்தலை யுருட்டிச்
சென்று தீர்வன வெனப்பல
கோடியுஞ் சிந்தி
நின்ற தேரொடு மிராவண
னொருவனு நிற்பக்
கொன்று வீழ்த்தின திராகவன்
சரமெனுங் கூற்றம்.

ஒன்றும் நூற்றினேடு ஆயிரம் கொடுந்தலை, உருட்டி,
சென்று தீர்வன எனப் பலகோடியும் சிந்தி,
நின்ற தேரொடும் இராவணன் ஒருவனும் நிற்பக,
கொன்று வீழ்த்தினது - இராகவன் சரம் எனும் கூற்றம்.

பொ :—இராமனது அம்பு என்கின்ற எமன், நின்ற தேரோடு இராவணன் ஒருவன் மட்டும் உயிருடன் நிற்க விடுத்து ஒரு லட்சம் அரக்கர்களின் கொடிய தலைகளை அறுத்துத் தரையில் உருட்டியும், சென்று ஒழிவனவாக எனப் பலகோடி சேனைகளைச் சிதைத்தும் கொன்று வீழ்த்தின.

கு :—கூற்றம் உருட்டிச் சிந்திக் கொன்று வீழ்த்தின என இயையும். கொல்லும் தன்மையில் எமன் போன்றது இராமன் அம்பு ஆகலின், இராகவன் சரம் எனும் கூற்றம், என உருவகஞ் செய்தார். போர்க்கு வந்த அரக்கர்களில் இராவணனைத் தவிர ஏனையோர் அனைவரையும் இராமன் அம்பு கொன்று வீழ்த்தியது என்க. நூற்றினேடு ஒன்றும் ஆயிரம் என்றது நூறுயிரத்தை. இராமன் அம்பு லட்சம் அரக்கர்களைகளைத் தலைகொய்து கொன்றது; பலகோடி அரக்கர்களைச் சின்னபின்னப்படுத்திக் கொன்றது; என வகைப் படுத்திக் கூறியவாறு. வடிவமும் தெரியாதபடி சென்று ஒழிவுதாக என நினைந்து பலகோடி அரக்கர்களைச் சிதைத்தது அம்பு என்றவாறு. சேமத்தேர் ஒன்றுதானும் இல்லை என்பது புலப்பட, நின்ற தேரோடும்' என்றார். இராவணனை இப்போது கொல்லலாகாது என்ற கருத்தால் விடுத்ததன்றி இயலாமையாலன்று என்பார் இராவணனொருவனும் நிற்பக் கொன்று வீழ்த்தினது என்றார். (237)

7381. தேரும் யானையும் புரவியு
மரக்கருந் தெற்றிப்
பேரு மோரிட மின்றெனத்
திசைதொறும் பிறங்கிக்
காரும் வானமுந் தொடுவன
பிணக்குவை கண்டான்
மூரி வெஞ்சிலை யிராவண
னராவென முனிந்தான்.

தேரும் யானையும் புரவியும்
அரக்கரும் தெற்றி,
பேரும் ஓர் இடம் இன்று
எனத் திசைதொறும் பிறங்கி,
காரும் வானமும் தொடுவன
பிணக்குவை கண்டான்,—
மூரி வெஞ்சிலை இராவணன் —
அரா என முனிந்தான்.

பொ :—தேர்களும் யானைகளும் குதிரைகளும் அரக்கர்களும் வீழ்ந்து பின்னிக் கிடப்பதால் ஒருவர் பெயர்ந்து செல்வதற்குச் சிறிது இடமும் இல்லை என்னும்படி திசைகள் தோறும் விளங்கி, மேக மண்டலத்தையும் வானத்தையும் தொடுவனவாகிய பிணக் குவியல்களைக் கண்டு பெரிய கொடிய வில்லையுடைய இராவணன் பாம்பு போலச் சீறினான்.

கு :—நால்வகைப் படையுள் காலாட் படையை இங்கு அரக்கர் என்ற சொல்லால் குறிப்பிட்டவாறு. தெற்றுதல் - பின்னுதல். ஓரிடம் என்றது சிறிதிடம் என்னும் கருத்தினது. பிணக்குவியலின் உயர்ச்சி புலப்பட, 'காரும் வானமும் தொடுவன' என்றார். கண்டான் என்ற முற்றெச்சம் முனிந்தான் என்ற வினையொடு முடிந்தது. பத்துத் தலைகளையுடைய இராவணன் சீறியது பல தலைகளையுடைய பாம்பு படமெடுத்துச் சீறுவது போலக் காணப் பட்டமையின் 'அராவென முனிந்தான்' என்றார். பஞ்சவடியில் சீதைக்குமுன் இராவணன் சினந்து உண்மை வடிவொடு தோன்றியதைக் குறிப்பிடும்போதும், "தீவிடத் தரவந்தானே உருகெழு சீற்றம் பொங்கிப் பணம் விரித்துயர்ந்த தொத்தான்" (சடாயு வுயிர் நீத்த - 63) என இவ்வாறே பாம்பை உவமை கூறியிருத்தல் காண லாம். தன்னுடன் வந்த நால்வகைப் படையும் அழிந்தமை கண்டு இராவணன் சினம் மிக்கது என்றவாறு. (238)

## இராவணன் இராமன்மேல் அம்பு எய்தல்

**7382.** முரண்டொ குஞ்சிலை யிமைப்பினின்
முறையுற வாங்கிப்
புரண்டு தோளுறப் பொலங்கொணாண்
வலம்படப் போக்கித்
திரண்ட வாளிகள் சேவகன்
மரகதச் சிகரத்
திரண்டு தோளினு மிரண்டுபுக்
கழுந்திட வெய்தான்.

முரண்தொகும் சிலை இமைப்பினில்
முறையுற வாங்கி,
புரண்டு தோள் உறப் பொலன்கொள்
நாண் வலம்படப் போக்கி,
திரண்ட வாளிகள் சேவகன்
மரகதச் சிகரத்து
இரண்டு தோளினும் இரண்டு
புக்கு அழுந்திட, எய்தான்.

பொ :—அழகு பொருந்திய நாண் தோளில் பொருந்தப் புரளு மாறு வலிமை சேர்ந்துள்ள வில்லை இமைப்பொழுதில் வளைத்து, திரட்சிமிக்க அம்புகள் இரண்டினை வலிமை பொருந்தத் தொடுத்து, இராமனுடைய மரகதமலை போன்ற இரண்டு தோள்களிலும் புகுந்து அழுந்துமாறு விடுத்தான்.

கு :—வலிமைகள் யாவும் ஒருங்கு திரண்டாற் போன்றுள்ள வில் என்பார், 'முரண் தொகுஞ்சிலை' என்றார். புரண்டு தோளுற என்பதைத் தோளுற்றுப் புரள என மாறுக. நாண் புரளச் சிலை வாங்கி வாளிகள் இரண்டு வலம்படப் போக்கி இரண்டு தோளினும் அழுந்திட எய்தான் என இயையும். சேவகன் என்றது வீரனாகிய இராமனை. (239)

**7383.** முறுவ லெய்திய முகத்தினன்
முளரியங் கண்ணன்
மறுவி லாததோர் வடிக்கணை
தொடுத்துற வாங்கி

யிறுதி யெய்துநாட் கால்பொர
 மந்தர மிடையிட்
டறுவ தாமென விராவணன்
 சிலேயினே யறுத்தான்.

முறுவல் எய்திய முகத்தினன்,
 முளரி அம் கண்ணன்,
மறு இலாதது ஓர் வடிக்கணே
 தொடுத்து, உற வாங்கி,
இறுதி எய்தும் நாள்,
 கால்பொர, மந்தரம் இடையிட்டு
அறுவது ஆம் என,
 இராவணன் சிலேயினே அறுத்தான்.

பொ :—தாமரை மலர் போன்ற கண்களேயுடைய இராமன் புன்சிரிப்புப் பொருந்திய முகத்தினனுய்க் குற்றமில்லாத ஒரு கூரிய அம்பினே நாணில் தொடுத்து இழுத்து (விடுத்து), உலகம் அழியும் நாளில் கடுங்காற்று மோதுதலால் மந்தரமலே நடுவிலே முரிவது போலும் என்னும்படி இராவணனது வில்லே அறுத்தான்.

கு :—இராவணனது பெரிய வில் ஒடிந்தது. மந்தரமலே முரிந்தது போலத் தோன்றிற்று என்றவாறு. இராமன் அம்பு ஊழியிறுதியில் வீசும் காற்றுப் போன்றது என்க. இராவணன் அம்புகள் தன் தோளில் பாய்ந்ததைப் பொருட்படுத்தவில்லே இராமன் என்பார். 'முறுவலெய்திய முகத்தினன்' என்ருர். இதனுல் இராமன் போர் விளேயாட்டாக இருந்ததே அன்றிச் சினத்தால் நிகழ்ந்ததாகத் தெரிந்திலது என்பது புலப்படுத்தியவாறு. "எறிந்தபோ ரரக்க ராவி யெண்ணிலா வெள்ள மெஞ்சப், பறித்தபோ தென்னே யந்தப் பரிபவம் முதுகிற் பற்றப் பொறித்தபோது அன்று னந்தக் கூனி கூன் போகவுண்டை தெறிந்தபோ தொத்த தன்றிச் சினமுண்மை தெரிந்த தில்லே" (கும்பகருணன் வதைப்-17) என இந்த நிலேயை இராவணன் பின்பு மாலியவானிடத்தில் விளக்குதல் காணலாம். (240)

பின்வரும் மிகைப்பாடல்கள் 52ல் 240-1, 2, 3 ஆகக் காணப்படுகின்றன.

7383 (a) அறுத்து வில்லிழந் தழியுமுன் னேயிருகரத்தும்
 பொறுத்து வெஞ்சிலே நாஞெலி புடைத்தடர் பகழி
 நிறுத்தி வீசினன் நெடுந்திசை விசும்பொடு நிமிரக்
 கறுத்த வான்முகில் கல்மழை பொழிதரும் கடுப்பின்.

(b) நிரைக்கு மையிரு சிலையிடைச் சரமழை நிருதன்
துரக்க மாருதி யுடலுறு குருதிகள் சொரிந்த
குரக்கு வான்படை குறைந்தன கூசி வானவர்கள்
இரக்க முற்றுலைந் தோடின ரிருண்டதெவ் வுலகும்.

(c) எறுழ்வலி புயத்திராகவன் இளநகை எழும்ப
முறுவலித்தவன் பகழிகள் யாவையு முரிக்கி
பிறைமுகச்சரம் ஐயிரண் டொடுதொடை பிடித்தாங்
குறுதி யற்றவன் சிலையொரு பத்தையு மொறுத்தான்.

**7384.** மாற்று வெஞ்சிலை வாங்கினன்
வடிம்புடை நெடுநா
ணேற்று ருமுன மிடையறக்
கணைகளா லெய்தான்
காற்றி னுங்கடி தாவன
கதிர்மணி நெடுந்தேர்
ஆற்று கொய்யுளைப் புரவியின்
சிரங்களு மறுத்தான்.

மாற்று வெஞ்சிலை வாங்கினன்,
வடிம்புடை நெடுநாண்
ஏற்றுரு முனம், இடை
அறக்கணைகளால் எய்தான்;
காற்றினும் கடிது ஆவன,
கதிர் மணி நெடுந்தேர்
ஆற்று, கொய் உளைப் புரவியின்
சிரங்களும் அறுத்தான்.

பொ :—(இராவணன்) வேறு கொடிய வில்லை வளைத்து, விளிம்பினையுடைய நீண்ட நாணினை ஏற்றுவதற்கு முன்னமே நடுவே முரியுமாறு தன் அம்புகளால் எய்தான்; பின் காற்றினும் விரைந்து செல்லும் தன்மையனவும், ஒளிமிக்க மணிகள் அழுத்திச் செய்த உயர்ந்த தேரினை நடத்துவனவுமான கத்தரித்த பிடரியினையுடைய குதிரைகளின் தலைகளையும் அறுத்துத் தள்ளினான்.

கு :—முன்னைய வில் ஒடிந்ததால் வேறொரு வில்லை இராவணன் வளைத்தானாக, இராமன் அவ்வில்லையும் முரித்து, அவன் தேரில் பூட்டிய குதிரைகளின் தலைகளையும் அறுத்துத் தள்ளினான் என்றவாறு. வாங்குதல் – வளைத்தல். வாங்கினன் என்ற முற்றெச்சம்

எய்தான் என்ற வினைகொண்டு முடிந்தது. வடிம்பு - விளிம்பு. வில்லை வளைத்து நாணையேற்றுதற்கு முன்னமே அவ்வில்லை இராமன் தன் அம்பால் ஒடித்தான் என்க. கடிதாவன புரவி; ஆற்று கொய்யுளைப் புரவி எனத் தனித் தனி இயையும். குதிரையின் வேகத்திற்குக் காற்று உவமையாகாது தோற்குமாறு விரைந்து செல்வனவாய குதிரைகள் என்பார் 'காற்றினுங் கடிதாவன' என்றார். ஆற்றுதல் - நடத்துதல். (241)

7385. மற்றும் வெம்படை வாங்கினன்
வழங்குரு முன்ன
மற்ற ழிந்துக வயில்நெடுங்
கணைகளா லறுத்தான்
கொற்ற வெண்குடை கொடியொடுந்
துணிபடக் குறைத்தான்
கற்றை யஞ்சுடர்க் கவசமுங்
கட்டறக் கழித்தான்.

மற்றும் வெம்படை வாங்கினன் வழங்குரு முன்னம்,
அற்று அழிந்து உக அயில் நெடுங் கணைகளால் அறுத்தான்;
கொற்ற வெண்குடை கொடியொடுந் துணிபடக் குறைத்தான்;
கற்றை அம் சுடர்க் கவசமும் கட்டு அறக் கழித்தான்.

பொ :—(வில் ஒடிந்தமையால் இராவணன்) தன்னிடத்துள்ள வேறு கொடிய படையை எடுத்து விடுவதற்கு முன்னே அவை முரிந்து அழிந்து சிந்துமாறு இராமன் தன் கூரிய நீண்ட அம்பு களால் அறுத்தான்; (பின்பு) அவனுடைய வெற்றி வெண்குடையும் வீணைக் கொடியும் துண்டுபடுமாறு குறைத்தான். பின் அவன் திரளான அழகிய ஒளிமிக்க கவசத்தையும் கட்டு அறுமாறு நீக்கினன்.

கு :—இராவணன் தன் வில் அற்றுப் போனபின் தன்னிடத் துள்ள வேல் முதலிய படைக் கலங்களை எடுத்துவிடத் தொடங் கினனாக, அவ்வாறு அவன் விடுதற்கு முன்னமே அவன் கையிலேயே அற்றொழியுமாறு இராமன் தன் அம்புகளால் அறுத் தான் என்க. அறுத்தல் என்பது இருகூறு செய்தல்; குறைத்த லாவது சிறிது இழக்கச் சிதைத்தல் என வேறுபாடு காண்க. கவசத்தை மார்பொடு சேர்த்துக் கட்டிய கட்டு. அறுமாறு செய்து நீக்கியதையே 'கட்டறக் கழித்தான்' என்றார். வெண்குடையினும்

தனக்கு அடையாளமாகிய வீணை யெழுதிய கொடி சிறப்புடையது ஆதலின் கொடியொடும் வெண்குடை துணிபட எனக் கொடிக்கு உயர்பின் வழிவரும் ஒடுக் கொடுத்தார். "ஒருவினை யொடுச் சொல் உயர்பின் வழித்தே" (தொல் - சொல். வேற்றுமை மயங்கியல-91) என்றது காண்க. கற்றைச் சுடர், அம் சுடர் என இயையும். (242)

**7386.** மாற்றுத் தேரவண் வந்தன
வந்தன வாரா
வீற்று வீற்றுக வெயிலுமிழ்
கடுங்கணை விட்டான்
சேற்றுச் செம்புனற் படுகளப்
பரப்பிடைச் செங்கட்
கூற்றுங் கையெடுத் தாடிட
விராவணன் கொதித்தான்.

மாற்றுத் தேர் அவண்
வந்தன வந்தன வாரா,
வீற்று வீற்று உக, வெயில்
உமிழ் கடுங்கணை விட்டான்;
சேற்றுச் செம்புனல் படுகளப்
பரப்பிடைச் செங்கண்
கூற்றும் கை எடுத்து ஆடிட,
இராவணன் கொதித்தான்.

பொ:—(இராவணனுக்கு) மாற்றுத் தேர்களாக அங்கு வரிசை வரிசையாக வந்தவைகள் யாவும் அவனிடம் வந்து சேராமல் வேறு வேறாகச் சிதைந்து விழுமாறு, (இராமன்) ஒளிவீசுகின்ற கடுமையான அம்புகளை விடுத்தான்; (அதுகண்டு) சேறுபட்ட இரத்த நீரையுடைய போர்க்களப் பரப்பில் சிவந்த கண்ணையுடைய எமனும் கைகளை உயர்த்திக் கொண்டு ஆடாநிற்க, (அது கண்டு) இராவணன் சினத்தால் மனம் கொதித்தான்.

கு:—மாற்றுத் தேர் என்றது, முன் ஏறியிருந்த தேர் அழிந்த போது மாறி ஏறுதற்குரிய தேரினை. இராவணன் ஏறிய தேர் அழிந்தவுடன் பற்பல தேர்கள் மாற்றுத் தேர்களாக அங்கு வந்து கொண்டிருந்தன. அவ்வாறு வரிசை வரிசையாக வந்து கொண்டிருந்த தேர்கள் இராவணனை வந்து அடையாதபடி தொலைவிலேயே அவை அழியும்படி இராமன் தன் அம்புகளால் சிதைத்து ஒழித்தான்

என்றவாறு. வந்தன வந்தன என்ற அடுக்குப் பல வரிசைகளாக வந்தமையைப் புலப்படுத்தியது. வந்தன, வினையாலணையும் பெயர்; வந்தவைகள் வாராது உகக் கணை விட்டான் என இயையும். வாரா என்றது, ஈறுகெட்ட எதிர்மறை வினையெச்சம். 'காக்கை கரவா கரைந்துண்ணும்' (குறள். 527) என்புழிப்போல. வீற்று வீற்று – வேறு வேறு. கூற்றும் என்புழி உம்மை இழிவு சிறப்பு. தனக்கு அஞ்சி ஏவல் பூண்டொழுகிய எமனும் இப்போது தன்முன் துணிந்து மகிழ்ந்து ஆடுகின்றனே! என இராவணன் கொதித்தல் இயல் பன்றே? "கும்பிட்டு வாழ்கிலேனியான் கூற்றையும் ஆடல் கொண் டேன்" (கும்பகருணன்வதைப்-160) எனப் பின் கும்பகருணன் கூறு தலும் காணலாம். கூற்றுவன் தன்னை அடக்கி ஏவல் கொண்ட இராவணனது அவல நிலையைக் கண்டு மகிழ்ந்து கைகளை உயர்த்தி ஆடலாயினன் எனவும் அதுகண்டு இராவணன் மனங் கொதித்தான் எனவும் கொள்க. (243)

**7387.** செறிந்த பன்மணிப் பெருவனந்
திசைபரந் தெரியப்
பொறிந்த வாய்வயக் கடுஞ்சுடர்க்
கணைபடும் பொழுதின்
எறிந்த கால்பொர மேருவின்
கொடுமுடி யிடிந்து
மறிந்து வீழ்ந்தது மொத்ததவ்
வரக்கன்றன் மகுடம்.

செறிந்த பல் மணிப் பெருவனம் திசைபரந்து எரிய,
பொறிந்த வாய், வயக்கடுஞ்சுடர்க்கணை படும் பொழுதின்
எறிந்த கால் பொர, மேருவின் கொடுமுடி இடிந்து
மறிந்து வீழ்ந்ததும் ஒத்தது, அவ்வரக்கன் தன் மகுடம்.

பொ :—(இராமனுடைய) வலிய வாயினையுடைய கடுமையான ஒளியுள்ள அம்பு, (இராவணன் முடிமேல்) படும்போது, (அம்முடியில்) நெருங்கியிருந்த பல மணிகளாகிய பெரிய திரள், திசைகள் தோறும் பரவி எரியுமாறு பொறிவனவாயின; அந்த இராவணனுடைய மகுடம் (இராமனது கணைபட்டபோது) வீசிய காற்று மோதுதலால் மேருமலையின் சிகரங்கள் இடிந்து கீழ்மேலாய்ப் புரண்டு வீழ்ந்த தன்மையையும் போன்றது.

கு :—பன்மணியாகிய பெருவனம் என்க. வனம் என்றது திரள் என்னும் பொருளது. பொறிந்த - பொறிந்தன; முற்று. வயவாய் என மாற்றுக. வலிய வாயினையுடைய கணை ; கடுஞ்சுடரையுடைய கணை என்க. கணைபடும் பொழுதின் பன்மணிப் பெருவனம் பொறிந்த என முன்னும் கூட்டி இடைநிலை விளக்கு ஆக்குக. கணைபடும் பொழுதின் அரக்கன் தன் மகுடம், கால்பொர மேருவின் கொடுமுடி வீழ்ந்ததும் ஒத்தது என இயையும். இராவணன் மேருமலை போன்றவன்; அவன் முடிகள் மேருவின் கொடுமுடி போன்றன ; இராமன் அம்பு காற்றுப் போன்றது என்க. (244)

## இராவணனது முடியை வீழ்த்துதல்

**7388.** மின்னும் பன்மணி மவுலிமே
லொருகணை விட்டான்
அன்ன காய்கதி ரிரவிமேற்
பாய்ந்தபோ ரனுமன்
என்ன லாயதோர் விசையினிற்
சென்றவன் றலையில்
பொன்னின் மாமணி மகுடத்தை
வீழ்த்தது புணரி.

மின்னும் பல் மணி மவுலிமேல் ஒருகணை விட்டான் ;
அன்ன காய்கதிர் இரவிமேல் பாய்ந்த போர் அனுமன்
என்னலாயது ஓர் விசையினில் சென்று, அவன் தலையில்
பொன்னின் மாமணி மகுடத்தை வீழ்த்தது புணரி.

பொ :—(இராவணன் சூடியிருந்த) மின்னுகின்ற பல மணிகள் பதித்த மகுடத்தின்மேல் ஓர் அம்பினை விடுத்தான், (இராமன். அவ்வம்பு,) அந்தக் காய்கின்ற கிரணங்களையுடைய சூரியன்மேல் பாய்ந்த போர் செய்யும் ஆற்றல் படைத்த அனுமன் என்று சொல்லத்தக்கதொரு விரைவோடு சென்று, அவ்விராவணன் தலையில் இருந்த பொன்னாலியன்ற சிறந்த மணிகள் பதித்த மகுடத்தைக் கடலில் விழச் செய்தது.

கு :—இராவணனது மணிமகுடம் சூரியனைப் போன்றது; அம்மகுடத்தின்மேல் விரைந்து சென்ற அம்பு அச்சூரியன்மேல் விரைந்து பாய்ந்த அனுமனைப் போன்றது என்றவாறு. ஒரு கணை விட்டான் ; அது அனுமன் என்னலாயதோர் விசையினிற் சென்று மகுடத்தை புணரியில் வீழ்த்தது என அவாய் நிலையால் எழுவாய் வருவித்து

இயைக்க. அனுமன் பிறந்தவுடன் சூரியனைக் கனியென நினைந்து அவன்மேற் சென்று பற்ற முயன்றதை; "அழுதரற்றிய பாலகன் அன்னை முன்னுரைத்த, பழநமக்கிதுவாமெனப் பரிதிமேற் பாய்ந்தான்" (உத்தர - அனுமப்படலம்-12) என்பதால் அறியலாம். புணரியின்கண் வீழ்த்தது என்க. கண்ணுருபு இறுதியில் தொக்கது. "ஐயுங்கண்ணுமல்லாப் பொருள்வயின் மெய்யுருபு தொகா இறுதியான" (தொல் - சொல். வேற்றுமை மயங்கியல், 105) என்றது காண்க. (245)

7389. அண்டர் நாயக னடுசிலை
யுதைத்தபே ரம்பு
கொண்டு போகப்போய்க் குரைகடற்
குளித்தவக் கொள்கை
மண்ட லந்தொடர் வயங்குவெங்
கதிரவன் றன்னை
யுண்ட கோளொடு மொலிகடல்
வீழ்ந்தது மொக்கும்.

அண்டர் நாயகன் அடுசிலை உதைத்த பேர் அம்பு
கொண்டு போகப்போய்க் குரைகடல் குளித்த அக்கொள்கை
மண்டலம் தொடர் வயங்கு வெங்கதிரவன், தன்னை
உண்ட கோளொடும் ஒலிகடல் வீழ்ந்ததும் ஒக்கும்.

பொ :—மகுடம், தேவர்கள் தலைவனான இராமனது கொல்லும் தன்மையிற் சிறந்த வில்லில் நின்றும் விடப்பட்ட பெரிய அம்பு கொண்டு போகச் சென்று ஒலிக்கின்ற கடலில் மூழ்கிய அத்தன்மை, வட்டமாகப் பொருந்திய, விளங்குகின்ற வெப்பமான கிரணங்களையுடைய சூரியன், தன்னை விழுங்கிய கேது வென்னும் கோளோடு, ஒலிக்கின்ற கடலில் வீழ்ந்த தன்மையையும் ஒக்கும்.

கு :—சூரியன் மகுடத்திற்கும், கேது வென்னும் கோள் அம்புக்கும் உவமை. உதைத்தல் - செலுத்துதல். சூரியன் கேதுவால் பற்றப்பட்ட நிலையில் மேலைக் கடலில் வீழ்தலும் உண்டு; அந்த நிலையே இங்கு இராவணனது மகுடம் இராமன் அம்பால் தள்ளப்பட்டுக் கடலில் வீழ்ந்தமைக்கு உவமமாயிற்று. இது தற்குறிப்பேற்ற அணி. மண்டலந் தொடர் கதிரவன், வயங்கு வெங்கதிரவன் என இயையும். மகுடம் அம்பு கொண்டு போகப் போய்க் கடல் குளித்த

அக்கொள்கை, கதிரவன் கோளொடு கடல் வீழ்ந்ததும் ஒக்கும் என எழுவாய் வருவித்துரைக்க. கோள் என்றது இங்குக் கேதுவென்னும் செம்பாம்பினை. (246)

### மகுடமிழந்த இராவணன் நிலை

7390. சொல்லு மத்தனை யளவையின்
மணிமுடி துறந்தா
னெல்லி மைத்தெழு மதியமு
ஞாயிறு மிழந்த
வல்லு மொத்தனன் பகலுமொத்
தனனமர் பொருமேல்
வெல்லு மத்தனை யல்லது
தோற்றிலா விறலோன்.

சொல்லும் அத்தனை அளவையில்
மணிமுடி துறந்தான்;
எல் இமைத்து எழு மதியமும்
ஞாயிறும் இழந்த
அல்லும் ஒத்தனன்; பகலும்
ஒத்தனன்; அமர் பொருமேல்,
வெல்லும் அத்தனை அல்லது
தோற்றிலா விறலோன்.

பொ :—போர் செய்வானாயின், வெல்வதே அன்றி யார்க்கும் தோற்றிலாத வெற்றியையுடைய இராவணன், ஒரு சொல் சொல்லும் அளவுள்ள சிறிய போழ்தில் தனது மணிகள் பதித்த முடியை இழந்தவனாய், ஒளிவிளங்கி எழுகின்ற சந்திரனை இழந்த இரவையும், சூரியனை இழந்த பகலையும் ஒத்து விளங்கினான்.

கு :—'சொல்லுமத்தனை அளவையின்' என்றது, காலச் சிறுமையை உணர்த்தியது. விறலோன் துறந்தானாய் மதியமும் ஞாயிறுமிழந்த அல்லையும் பகலையும் ஒத்தனன் என முற்றெச்சமாக்கி முடிக்க. எல் - ஒளி. இமைத்தல் - விளங்குதல். மதியமும் ஞாயிறுமிழந்த அல்லுமொத்தனன் பகலுமொத்தனன் என்றது நிரனிறையணி. ஒத்தனன் என்பது இருமுறை வந்தது பல்வயிற் போலியுவமையின் பாற்படும். மதியமிழந்த அல் உண்டு; ஞாயிறிழந்த பகல் இல்லை; இல்பொருளுவமையாக இங்குக் கூறப்பட்டது. இராவணனது கரிய

உடம்பு மணிமுடி இழந்த நிலையில் ஒளியிழந்து தோன்றியதை விளக்க இவ்வாறு உவமை கூறியவாறு. எனவே இராவணன் மணி முடி சூடியிருந்தபோது மதி ஒளிவீசும் இரவையும் சூரியனொளிவீசும் பகலையும் ஒத்து விளங்குவான் என்பதும் புலப்படுத்தியவாறு. சென்ற போர் தோறும் வென்றியே புனையும் இராவணன், இப்போது இராமன்பால் தோற்க நேர்ந்ததே என இரக்கந் தோன்றக் கூறி அவன் தீவினையை நினைப்பித்தவாறு. 'மணிமுடி துறந்தான்' என்ற சொல்லாற்றலால் இனி இலங்கை வேந்தனாக அரசாளான் என்ற குறிப்பும் தோற்றுவித்தவாறு ஓர்க. (247)

**7391.** மாற்ற ருந்தட மணிமுடி
யிழந்தவா ளரக்க
னேற்ற மெவ்வுல கத்தினு
முயர்ந்துள னெனினு
மாற்ற னன்னெடுங் கவிஞனோ
ரங்கத முரைப்பப்
போற்ற ரும்புக ழிழந்தபே
ரொருவனும் போன்றான்.

மாற்றருந்தட மணிமுடி இழந்த வாள் அரக்கன்,—
ஏற்றம் எவ் உலகத்தினும் உயர்ந்துளன் எனினும்,
ஆற்றல் நல் நெடுங் கவிஞன் ஓர் அங்கதம் உரைப்ப,
போற்று அரும் புகழ் இழந்த பேர் ஒருவனும்-போன்றான்.

பொ :—யாராலும் மாற்றுவதற்கு அரிய பெரிய மணிமுடியை இழந்த கொடிய இராவணன் - பெருமையால் எல்லா உலகத்தினும் உயர்ந்துளன் ஆயினும், ஆற்றல் மிக்க நல்ல பெரிய கவிஞன் ஒரு வசைச் செய்யுளைச் சொன்னவுடன் யாவரும் போற்றுகின்ற அரிய புகழை இழந்த பெரியோன் ஒருவனையும் ஒத்தான்.

கு :—இராவணன் அணிந்திருந்த மணிமுடியை மாற்றினவர் யாரும் இலராதலின் மாற்றருந்தட மணிமுடி எனப்பட்டது. மாற்றுதல் - நீக்குதல்; மாற்று, ஒப்பு என்று கொண்டு, ஒப்பற்ற மணி முடி எனலும் ஆம். அருளிக் கூறினும் வெகுண்டு கூறினும் அவ்வப் பயன்களைத் தன் அங்கதப் பாட்டால் உண்டாக்கும் ஆற்றல் மிக்க கவிஞன் என்க. எல்லாவுலகத்தினும் பரவிய புகழையுடைய பெரியனாயினும் கவிஞன் ஒருவனுடைய அங்கதச் செய்யுளால் அவன் பெரும் புகழ் இழத்தல்போல, மூவுலகாளும் ஆற்றல்மிக்க இரா

வணன் இராமனது அம்பால் முடி இழக்கலானுன் என்றவாறு. இராமன் அம்புக்கு ஆற்றல் மிக்க கவிஞனது அங்கதம் உவமை. இராவணன் மணிமுடிக்குப் பேராளன் ஒருவன் புகழ் உவமை. அங்கதம் - வசை. "அங்கதந்தானே யரிறபத் தெரியிற் செம் பொருள், கரந்தது என இருவகைத்தே" (தொல் - செய்யுள் - 124) எனவும், "செம்பொருளாயின வசையெனப்படுமே" (125) 'மொழி கரந்து சொல்லினது பழிகரப்பாகும்' (126) எனவும் அங்கதத்தின் வகையும் பெயரும் கூறப்படுதல் காண்க. "இருடீர் மணிவிளக்கத் தேழிலார் கோவே, குருடேயு மன்றுநின் குற்றம் - மருடீர்ந்த, பாட்டு முரையும் பயிலாதன விரண், டோட்டைச் செவியு முள" என்பது ஔவையார் ஏழிலார் கோவினை முனிந்து பாடிய வசை அங்கதம் ஆகும். கவிஞன் சொல்லும் இராமன் அம்பும் ஒப்புமையுடையன என்ற கருத்தால் 'சொல்லொக்குங்கடிய வேகச் சுடுசரம்' (பால. தாடகைவதை. 72) என முன்னும் கூறியிருத்தல் காணலாம். (248)

## இராவணன் நாணுதல்

**7392.** அறங்க டந்தவர் செயலிதென்
றுலகெலா மார்ப்ப
நிறங்க ரிந்திட நிலம்விரல்
கிளைத்திட நின்ருன்
இறங்கு கண்ணின னெல்லழி
முகத்தினன் றலையன்
வெறுங்கை நாற்றினன் விழுதுடை
யாலன்ன மெய்யன்.

'அறம் கடந்தவர் செயல் இது'
என்று, உலகு எலாம் ஆர்ப்ப,
நிறம் கரிந்திட, நிலம் விரல்
கிளைத்திட, நின்ருன் —
இறங்கு கண்ணினன், எல்
அழி முகத்தினன், தலையன்,
வெறுங் கை நாற்றினன்,
விழுதுடை ஆல் அன்ன மெய்யன்.

பொ :— (போர்க்குரிய கருவிகள் ஏதும் இன்மையால் வலி குன்றிக்) கீழே பார்க்கும் கண்களையுடையவனும் ஒளி அழிந்த முகத் தையும் தலையையும் உடையவனும் (ஆயுதமில்லாத) வெறுங்கைகளைத்

தொங்கவிட்டவனுய், அதனுல் விழுதுகளையுடைய ஆலமரத்தைப் போன்ற உடம்பையுடையவனுமாகிய இராவணன், உலகோர் 'தருமத்தைக் கடந்த பாவிகளின் செயல் இத்தகையதாகும்' என்று கூறிக்கொண்டு ஆரவாரிப்ப, நிறம் முன்னேயினும் கருகிடவும் கால் விரல் தரையைக் கீறவும் நின்ருன்.

கு :—இராவணன் இராமனுக்குத் தோற்று நாணி நின்ற மெய்ப்பாட்டை விளக்கியவாறு. இராமனை எதிர்த்து நேரே நோக்க மனம் கூசுதலால் தரையைப் பார்த்து நின்ருன் என்பார், 'இறங்கு கண்ணினன்' என்ருர். இறங்கும் கண் என்றது கீழ் நோக்கும் பார்வையை. எல் - ஒளி. அகத்தில் துன்ப இருள் நிறைதலின் முகத்தில் ஒளி குன்றியது என்பார். 'எல்லழி முகத்தினன்' என்ருர் எல்லழி தலையன் எனவும் இயையும். ஒளிமிக்க மணிமகுடம் நீங்கினமையின் எல் அழிதலையினன் ஆனுன். ஆயுதமின்றி இருபது கைகளையும் கீழே தொங்கவிட்டுக் கொண்டு நின்ற தோற்றம், பல விழுதுகள் தொங்க நிற்கும் ஆலமரம் போலுதலின், 'விழுதுடை ஆலன்ன மெய்யன்' என்ருர். மூவுலகிற்கும் தலைவனுய்க் கூற்றையும் ஆடல் கொண்ட இராவணன் இவ்வாறு தோல்வியுற்றது, பிறன் கடை நின்ற பாவத்தால் ஆயது என்பதை அறிந்த உலக மக்கள் 'அறங் கடந்தவர் செயலிது' என்று இராவணன் நிலையைச் சுட்டிக்காட்டி, ஆரவாரிப்பாராயினர். அறங்கடந்தவர் என்றது பாவிகளை. "அறன் கடை நின்ருருளெல்லாம் பிறன்கடை நின்ருரிற் பேதையா ரில்" (குறள்-142) என்றது இங்கு நினையத்தகும். நிறம் கரிதல் துன்பத்தால் தோன்றுவது. நிலம் விரல் கிளைத்தல், வேறு ஒன்றும் செய்ய இயலாமையைப் புலப்படுத்த இயல்பில் நிகழும் செயல்; நாணத்தால் நிகழும் மெய்ப்பாடு; களவுடம்படுநரிற் கவிழ்ந்து நிலங்கிளையா நாணி நின்ரேள் (அகநா - 16) என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும். கண்ணினன், முகத்தினன், தலையன், மெய்யன், ஆர்ப்ப, கரிந்திட, கிளைத்திட நின்ருன் என இயையும். (249)

## இராவணனை நோக்கி இராமன் சொல்லத் தொடங்குதல்

**7393.** நின்ற வன்னிலை நோக்கிய
நெடுந்தகை யிவனைக்
கொன்ற லென்றனி வெறுங்கைநின்
ருனெனக் கொள்ளா

வின்ற விந்தது போலுமுன்
 றீமையென் றிசையோ
டொன்ற வந்தன வாசக
 மினையன வுரைத்தான்.

நின்றவன் நிலை நோக்கிய
 நெடுந்தகை, இவனைக்
கொன்றல் என் ? தனி வெறுங்கை
 நின்ருன்' எனக் கொள்ளா,
'இன்று அவிந்தது போலும்,
 உன் தீமை' என்று இசையோடு
ஒன்ற வந்தன வாசகம்,
 இனையன உரைத்தான்;

பொ :—தன் எதிரில் நாணி நின்றவனுகிய இராவணனது நிலைமையை நோக்கிய பெருந்தகையாகிய இராமன், 'தனித்து வெறுங்கையனுக நின்றவனுகிய இவனைக் கொல்வது எதற்கு? என்று நினைந்து, (அவனை நோக்கி) 'உன் தீமை இப்பொழுது அடங்கியது போலும்' என்று கூறிவிட்டுப், புகழோடு பொருந்துவன வாகிய இத்தன்மையவான சொற்களைச் சொல்லலானுன்.

கு :—பகைவன் அழிவுக்கும் இரங்கும் பொருளுடைமை புலப்பட இராமனை 'நெடுந்தகை' என்ற பெயரால் குறிப்பிட்டவாறு. 'தனி வெறுங்கை நின்ருன், இவனைக் கொன்றல் என்' எனக்கொள்ளா, என்று, இனையன உரைத்தான், என இயையும். கொல்லல் என்பது, எதுகை நோக்கிக் கொன்றல் என வந்தது. தீமை என்றது, தீய செயலை. அவிந்தது போலும் - அடங்கியது போலும். என்று – என்று சொல்லிவிட்டு. இசை-புகழ். புகழோடு பொருந்துவனவான வாசகம் என்றது, 'அறத்தினுலன்றி அமரர்க்கும் அருஞ்சமம் கடத்தல் மறத்தினுல் அரிது' என்ருற் போன்றவற்றை; வரும் செய்யுளிற் காண்க. (250

## இராமன் அறிவுரை 7394-7398

**7394.** அறத்தி னுலன்றி யமரர்க்கு
 மருஞ்சமங் கடத்தல்
மறத்தி னுலரி தென்பது
 மனத்திடை வலித்தி

பறத்தி நின்னெடும் பதிபுகக்
கிளையொடும் பாவி
யிறத்தி யானது நினைகிலென்
றனிமைகண் டிரங்கி.

"அறத்தினல் அன்றி அமரர்க்கும் அருஞ்சமம் கடத்தல்
மறத்தினல் அரிது" என்பது மனத்திடை வலித்தி;
பறத்தி, நின் நெடும்பதிபுக; கிளையொடும், பாவி !
இறத்தி; யான் அது நினைகிலென் தனிமை கண்டு இரங்கி.

பொ :--தருமத்தினல் அல்லது வலிமையினல் மட்டும் பெரிய போரில் வெற்றி கொள்வது என்பது, (உயர்ந்தோராகிய) தேவர் கட்கும் அரிது என்பதை நின்மனத்தில் உறுதியாகக் கொள்க; பாவீ ! இறந்தநின் சுற்றத்தாரோடு நீயும் இறந்திருப்பாய்; ஆனல், நின் தனிமையைக் கண்டு உளமிரங்கியதனல் யான் (நின்னைக் கொல்லு தலாகிய) அதனை நினைந்திலேன்; எனவே நின்னுடைய பெரிய நகரத்தில் புகுந்து ஒளிந்து கொள்ள நீ ஓடுவாயாக !

கு :—பாவி, வலித்தி! கிளையொடும் இறத்தி, இரங்கியானது நினைகிலென்; நின் பதிபுகப் பறத்தி! என இயையும். மறம் - வலிமை போரில் வெற்றி உண்டாக்குவது அறமே; ஆள்வலியும் தோள் வலியும் படைக்கலவலியும் அன்று என்பதை இராவணன் இப்போது தன் தோல்வியினல் கண்டறிந்தானகலின். அதனையே உறுதியாகக் கொண்டால் போதும் என்ற கருத்தால் இராமன் இராவணனை நோக்கி 'மறத்தினலரிது என்பது மனத்திடை வலித்தி' எனக் கூற லானன். அறத்தில் வழுவிய இராவணனைத் திருத்தும் அறச்சிந்தனை யோடு இராமன் போர் தொடங்கினன்; இராவணனே தன் வலிமை கொண்டு அந்த இராமனை வென்றுவிடலாம் என எண்ணிப் போரையே விரும்பிச் செய்தான். படைக்கலம் ஏதும் இல்லாத - வலிமையில் குறைந்த வானரப்படைகளையே துணையாகக் கொண்ட— இராமன் வென்றதும், ஆள்வலியாலும் படைக்கல வலியாலும் தோள்வலியாலும் மிக்க இராவணன் தோற்றதும் மேற்கூறிய உண்மையை விளக்குதல் காணலாம். அமரர்க்கும் என்புழி உம்மை உயர்வு சிறப்பு. அமரர் என்றது இங்குப் பெருந்தேவர்களை. சூரறுத்த வனுஞ் சுடர் நேமியும் ஊரறுத்த வொருவனுந் தோன்றினும், ஆரறத்தினெ டன்றி நின்ருரவர் வேரறுப்பன் (ஆரணிய - அகத்தியப் - 22) என முன் இராமன் தண்டக வனத்து முனிவர் களுக்குக் கூறியதும் இக்கருத்துப் பற்றியேயாம். போரில் வெற்றி, போர் செய்வோரின் வன்மை மென்மை நோக்கியதன்று; அவர் மேற்கொண்ட அறத்தினை நோக்கியதேயாகும் என்பது இதனல்

விளக்கியவாறு. "மீளருந் தருமந்தன்னை வெல்லுமோ பாவம்!" (ஆரணிய – சடாயு உயிர்நீத்த - 57) எனச் சீதையும் தவவேடத்தில் மறைந்திருந்த இராவணனுக்குக் கூறியிருத்தல் இங்கு நினைக்கத்தகும். வலித்தல் - உறுதியாகக் கொள்ளுதல். பறத்தல் - விரைந்து ஓடுதலை உணர்த்தியது. வலித்தி பறத்தி என்பன ஏவல் வினை முற்றுகள்; இறத்தி என்பது முன்னிலை வினைமுற்று. இறத்தி – இறப்பாய்; இறந்திருப்பாய் என்றவாறு. இராவணன் பிறனில் விழைந்த பாவமே அவன் தோல்விக்குக் காரணம் என்பது புலப்பட அவனைப் 'பாவி' என விளித்த நயம் ஓர்க. (251)

**7395.** உடைப்பெ ருங்குலத் தினரொடு
முறவொடு முதவும்
படைக்க லங்களு மற்றுநீ
தேடிய பலவும்
அடைத்து வைத்தன திறந்துகொண்
டாற்றுதி யாயின்
கிடைத்தி யல்லையே லொளித்தியாற்
சிறுதொழிற் கீழோய்.

'உடைப் பெருங் குலத்தினரொடும் உறவொடும்; உதவும்
படைக்கலங்களும், மற்றுநீ தேடிய பலவும்,
அடைத்து வைத்தன திறந்து கொண்டு, ஆற்றுதி ஆயின்,
கிடைத்தி; அல்லையேல், ஒளித்தியால்; சிறுதொழில் கீழோய்!

பொ :—சிறு தொழிலை விரும்பும் கீழ் மகனே! போர் செய்யும் வலிமையுடையையாயின், போர்க்கு உதவுகின்ற ஆயுதங்களும் நீ தேடித் தொகுத்துள்ள மற்றைய பல படைகளுமாக அரண்மனையில் அடைத்து வைத்துள்ளனவற்றைத் திறந்து எடுத்துக்கொண்டு உன்னுடைய பெரிய இனத்தவரோடும் உன் உறவினரோடும் போர்க்களத்திற்கு வருவாயாக! போர்க்கு ஆற்றாய் ஆயின் அரணுக்குள் ஒளித்துக் கொள்வாயாக.

கு : கீழோய்! ஆற்றுதியாயின், உதவும் படைக்கலங்களும் நீ தேடிய மற்றும் பலவுமாக அடைத்துவைத்தனவற்றைத் திறந்து கொண்டு, குலத்தினரொடும் உறவொடும் கிடைத்தி! அல்லையேல் ஒளித்தி என இயையும். 'மறவையாயின் போரொடு திறத்தல்' (புறநா - 44) என்பது இங்கு நினைவு கூரத்தகும். கிடைத்தி, ஒளித்தி என்பன ஏவல் வினைகள். கிடைத்தல் - நெருங்குதல்; இங்குப்

போர்க்கு வருதலை உணர்த்தியது. குலத்தினர் என்றது அரக்க இனத்தவரை. உறவு என்றது தம்பியும் புதல்வரும் போன்ற கிளைஞரை. படைக்கலங்கள் என்றது வில்லும் வேலும் வாளும் போன்றனவற்றை. மற்றுநீ தேடிய பலவும் என்றது, தேர் முதலிய நால் வகைப் படைகளை. படைக்கலங்களையும் படைகளையும் பிறர் அறியா வாறு ஓரிடத்து அடைத்து வைத்தல் அரசர் இயல்பு. அடைத்து வைத்தனவற்றை எனப் பெயராக்குக. சிறு தொழில் என்றது பிறர்மனை நயத்தலை. மூவுலகாளும் மேன்மையுடையனுயினும் பிறர் மனை நயந்தமையால் கீழோன் ஆனுன் என்பது தோன்றச் 'சிறு தொழிற் கீழோய்' என்ருன். "எனைத்துணைய ராயினு மென்னுந் தினைத்துணையும் தேரான் பிறனில் புகல்." (குறள் – 144) என்றது நினைக. (252)

**7396.** சிறையில் வைத்தவ டன்னைவிட்
டுலகினிற் றேவர்
முறையில் வைத்தநின் றம்பியை
யிராக்கதர் முதற்பே
ரிறையில் வைத்தவற் கேவல்செய்
திருத்தியே லின்னும்
தரையில் வைக்கிலெ னின்றலை
வாளியிற் றடிந்து.

சிறையில் வைத்தவள் தன்னை
விட்டு உலகினில் தேவர்
முறையில் வைத்தநின் தம்பியை
இராக்கதர் முதல் பேர்
இறையில் வைத்து அவற்கு
ஏவல்செய்து இருத்தியேல், இன்னும்
தரையில் வைக்கிலென், நின்தலை
வாளியின் தடிந்து.

பொ :—நின்னால் சிறையில் வைக்கப்பட்டவளாகிய சீதையை விடுத்து, பூதேவராகிய அந்தணர் வரிசையில் வைத்து மதிக்கத்தக்க நின் தம்பி வீடணனை இராக்கதர்க்கு முதல்வனுகும் பேரரசப் பதவி யில் வைத்து, அவ்வீடணனுக்குப் பணிசெய்து இருப்பாயானுல், (இப்பொழுது மட்டுமன்றி) இனிமேலும் நின்தலையை அம்பினுல் அறுத்துத் தரையில் தள்ளமாட்டேன்.

கு :—உலகினிற் றேவர் என்றது, அந்தணரை. வீடணன் பிறப்பால் அரக்கனாயினும் ஒழுக்கத்தால் அந்தணர் வரிசையில் வைத்து எண்ணத்தக்கவன் என அவன் ஒழுக்கத்தைச் சிறப்பித்தவாறு. "நிந்தனை நறவமும் நெறியி லூன்களும், தந்தன கண்டிலேன் தரும தானமும், வந்தனை நீதியும் பிறவும் மாண்பமைந்து, அந்தணரில்லெனப் பொலிந்ததாமரோ" (வீடணனடைக் - 100) என வீடணன் வீட்டைப்பற்றி அனுமன் கூறியுள்ளது இங்கு நினையத்தகும். பேரிறையில் - பேரரசப் பதவியில். இன்னும் - இனிமேலும். இப்போது தனிமை கண்டிரங்கி வைக்காததே அன்றி, இனிமேலும் தரையில் வைக்கமாட்டேன் என்றவாறு. சீதையை விடுத்தால் மட்டும் போதாது, தான் முன்னமே இலங்கை வேந்தனுக்கிய வீடணனை அப்பதவியில் வைத்து அவனுக்கு இராவணன் ஏவல் செய்யவும் வேண்டும் என்பது இராமன் விதிக்கும் கட்டளையாகும். விட்டு, ஏவல் செய் திருத்தியேல், இன்னும் நின்தலை தடிந்து தரையில் வைக்கிலென் என இயையும். (253)

**7397.** அல்லை யாமெனி னாரம
ரேற்றுநின் றாற்ற
வல்லை யாமெனி னுனக்குள
வலியெலாங் கொண்டு
நில்லை யாவென நேர்நின்று
பொன்றுதி யெனினும்
நல்லை யாகுதி பிழைப்பினி
யுண்டென நயவேல்.

'அல்லையாம் எனின், ஆர்அமர் ஏற்றுநின்று ஆற்ற
வல்லையாம் எனின், உனக்குள வலியெலாம் கொண்டு,
"நில், ஐயா!" என நேர் நின்று பொன்றுதி; எனினும்,
நல்லை ஆகுதி; "பிழைப்பு இனி உண்டு" என நயவேல்.

பொ :—அவ்வாறு செய்ய விருப்பமில்லையானால், அரிதாகிய போரை யேற்றுச் செய்ய வலிமையுடையவனானால், உனக்கு உள்ள படை வலி யெல்லாவற்றையும் கொண்டு வந்து 'நில் ஐயா' என என் எதிர்நின்று போர் செய்து இறப்பாயாக; அவ்வாறு இறந்தாயானாலும் நல்லவனாவாய்; ஆனால் இனி உயிர் பிழைக்கலாம் என்று மட்டும் விருப்பங் கொள்ளாதே.

கு :—உனக்குள வலி என்றது ஆள்வலியையும் ஆயுத வலியையும் ஆம். ‘ நில்லையா ’ என்பது இராவணன் சொல்ல வேண்டிய சொல்லை இராமன் வாங்கிக் கூறியவாறு. பொன்றுதி என்பது ஏவல். தன் எதிர் நின்று பொருது இறந்தாலும் வீரசுவர்க்கமும் வீரன் என்ற புகழும் கிடைக்குமாதலின் ‘ நல்லையாகுதி ’ என்றான். ‘ வெற்றியும் தோல்வியும் மாறியும் வருதல் கூடும்; பின்னர்ப் படையுடன் வந்தால் யான் வென்று உயிர்தப்பி விடலாம், என்று மட்டும் நீ நயப்புறாதே; என இராவணன் மாய்வது உறுதி யென்பதைத் தெளிவுபடுத்தியவாறு. (254)

இச் செய்யுளுக்குப் பின் சில சுவடிகளில் பின்வரும் மிகைப் பாடல் காணப்படுகிறது.

7397 (a) வளைத்த வில்லு மிரதமு மற்றது
கிளைத்த யானையுஞ் சேனையும் கெட்டது
இளைத்தனையினி யின்றுபோய் நாளைவா
விளைத்த வெஞ்சமஞ் செய்திட வேண்டியேல்.

**7398.** ஆளை யாவுனக் கமைந்தன
மாருத மறைந்த
பூளை யாயின கண்டனை
யின்றுபோய்ப் போர்க்கு
நாளை வாவென நல்கின
னாகிளங் கமுகின்
வாளை தாவுறு கோசல
நாடுடை வள்ளல்.

‘ ஆள் ஐயா ! உனக்கு அமைந்தன மாருதம் அறைந்த
பூளை ஆயின கண்டனை ; இன்று போய், போர்க்கு
நாளை வா ’ என நல்கினன்—நாகு இளங் கமுகின்
வாளை தாவுறு கோசல நாடுடை வள்ளல்.

பொ :—மூவுலகையும் ஆள்கின்ற ஐயா ! உனக்கு அமைந்தனவாகிய படைகள் யாவும் பெருங்காற்றால் மோதப்பட்ட பூளைப் பூப்போல அழிந்தொழிந்தவற்றை நின் கண்ணால் கண்டாய் ; (எனவே நீ இப்போது போர் செய்ய இயலாதவனாகின்றாய் ஆதலின்) இன்றைக்கு (அரண்மனை) சென்று, நாளைக்குப் படையுடன் போர்க்கு வா ’ எனச் சொல்லியருளினான் ; (யாரெனின் ?) மிக்க இளமையான

கமுக மரத்தில் வாளைமீன் தாவிக் குதிக்கின்ற வளமிக்க கோசல நாட்டைத் தனக்குரிமையாக உடைய வள்ளலாகிய இராமன்.

கு:—மூவுலகையும் ஆள்கின்ற ஐயா எனச் செயப்படுபொருள் வருவிக்க. அமைந்தனவாகிய படைகள் என வினைப் பெயராக்குக. அழிந்தன என்பான் அதற்கோர் உவமைகாட்டி 'மாருத மறைந்த பூளையாயின' என்றான். பூளை என்பது, ஓர் செடி வகை. அதன்பூ பஞ்சு போன்றது ஆகலின், பெருங்காற்றால் மொத்துண்டபோது எளிதில் உதிர்ந்து அழியும். இராமன் கணையால் தாக்குண்டு வீழ்ந்தழிந்த இராவணன் படைக்கு மாருதத்தால் மோதப்பட்டு உதிர்ந்தழிந்த பூளைப்பூ உவமை; "காற்றிடைப் பூளை கரந்தென வரந்தையுறக் கடலரக்கர்தம் சேனை, கூற்றிடைச் செல்லக் கொடுங்கணை துரந்த கோலவில் லிராமன்றன் கோயில்" (பெரிய திருமொழி 4-10-6) எனத் திருமங்கையாழ்வாரும் அரக்கர் இராமன் கணையால் அழிந்தமைக்கு இந்த உவமையையே கூறியிருத்தல் காணலாம். தன் மனையாளை வஞ்சித்துக் கவர்ந்த கொடியவனைத் தனித்த நிலையில் கண்டும் கொல்லுதல் செய்யாது 'இன்று போய் நாளைவா' வெனச் சொல்லி உயிரை நல்குதல் செய்த பெருந்தன்மை நினைந்து இராமனை 'வள்ளல்' என்று சிறப்பித்தார். கோசல நாட்டு வளத்தால் வாளை மீன்களும் வலமிகப் பெற்றுக் கரையிடை வளர்ந்த கமுகின் பாளையில் தாவிக் குதிக்கும் எனின், அந்நாட்டின் தலைமகனாகிய இராமன் இலங்கையர்கோனை வெல்லுதல் சொல்ல வேண்டுமோ என்ற குறிப்புத் தோன்ற 'நாகிளங்கமுகின் வாளை தாவுறு கோசல நாடுடை வள்ளல்' என்று சிறப்பித்தார். நாகு - இளமை. நாகிள என்பது மீமிசைச் சொல். இவ்வாறு கூறுவது தழிஞ்சி என்னும் புறத்துறையாம். "அழிகுநர் புறக்கொடையயில்வா ளோச்சாக் கழிதறுகண்மை காதலித்து உரைத்தன்று" (புற - 72) என்றது காண்க. (255)

52-ல் கீழ்வரும் மிகைப்பாடல் காட்டப்பட்டுளது.

7398 (a) என்றி ராமனியம்ப விராவணன்,
ஒன்று மோதலன் உள்ளத்தி னென்வலி
நின்ற நேர்மை நினைத்திலன் மானிடன்,
நன்று சொன்னதென நகைத் தேகினன்.

முகற் போர்ப் படலம் முற்றிற்று.

# 15. கும்பகருணன் வதைப் படலம்

இது கும்பகருணன் வதையைக் கூறும் படலம் எனவிரியும். இப்படலம் இராமன் கும்பகருணனைக் கொன்றதைக் கூறுகின்றது. 11, 44, 68 ஆம் எண்ணுள்ள சுவடிகளில் இப்படலப் பெயர் கும்ப கருணப் படலம் எனக் குறிக்கப்பட்டுள்ளது.

முதல் நாட் போரில் இராமனுடைய அம்பினுல் வருந்திய இராவணன் தனியாய் அரண்மனைக்குச் சென்று, தூதர்களைப் பணியாளால் வரவழைத்து, நாற்றிசையிலுமுள்ள அரக்கர்களைக் கொணரும்படி கட்டளையிட்டனுப்பித் தன் பாட்டனுகிய மாலியவானேடு தன் குறைகளைக் கூறி வருந்தினுன். அது கேட்ட மாலியவான் அறிவுரை கூறியபோது மகோதரன் கெடுமதி கூறி அதனைத் தடுத்து, இராவணனுடைய ஆற்றலைப் பலபடியாகப் புகழ்ந்து, அவன் போரில் ஈடுபடும்படி அவனை ஊக்கப்படுத்தினுன். கும்பகருணனை எழுப்பிப் போருக்கனுப்பினுல் அவன் ஒருவனுகவே வென்று வருவன் எனவும் கூறினுன்.

இராவணனுடைய ஏவலால் மல்லர்கள் பலவாருக முயன்று கும்பகருணனை எழுப்பிக்கொண்டு வர, அவன் போர் தோன்றிவிட்ட நிலையை அறிந்து வருந்திச் 'சீதையை விட்டிடுதலே செயத்தக்கது' என இராவணனுக்கு அறிவுரை கூறினுன். அவன் தன் சொல்லைக் கேளாமையால் அவனுக்கு நேரவிருக்கும் கேட்டிற்கு வருந்தி, அவன் மனம் வருந்தாவண்ணன் போர் செய்ய விடைபெற்றுச் சென்ருன்.

போர்க்களங்குறுகிய கும்பகருணனை வீடணனுல் அறிந்து கொண்ட இராமன், வீடணனை அவன்பால் சென்று, தம்பக்கல் சேர இசைவானுயின் அவனை அழைத்து வருமாறு அனுப்பினுன். தன்பால் வீடணன் வரக்கண்ட கும்பகருணன் பெரிதும் வருந்தி, அவன் தன்பால் வரலாகாது; இராமனிடம் செல்லுதலேதக்கது எனக் கூறினுன். அவ்வாறு கூறிய கும்பகருணனிடம் வீடணன், அவன் இராமனையடைந்தால் உண்டாகும் நன்மைகளை எல்லாம் எடுத்துக் கூறி இராமனைச் சேர்ந்து உய்யுமாறு வேண்டினன். அதனைக் கேட்ட கும்பகருணன், தன்னை நெடிது நாள் வளர்த்த அண்ணனுக்காகப் போர் செய்து உயிர் விடுதலே தனக்குத் தக்கது என்றும், வீடணன் இராமன்பால் சேர்ந்திருத்தலே அவனுக்குத் தக்கதென்றும் கூறித் தன் கருத்தைப் புலப்படுத்தினுன்.

வீடணன் கும்பகருணன் மனக்கருத்தை இராமனுக்குக் கூற அவனும், 'நின் தமையனை நின்னெதிரே கொல்லுதல் நல்லதன்று என்ற கருத்தினாலே இதனைச் சொன்னேன்; விதியை யார் தீர்க்க கிற்பார்' என்று கூறினன்.

பின்னர்க் கும்பகருணனுக்கும் இராமன் படையினருக்கும் கடும் போர் நிகழலாயிற்று. கும்பகருணனோடு நீலன் போர் செய்து தளர்ந்தது கண்டு அங்கதன் வந்து பொருதான். அப்பொழுது அங்கதன் தோல்வியுற, அநுமன் வந்து எதிர்த்தான். தோற்ற அங்கதனை வானரர்கள் எடுத்துச் சென்றனர். அநுமனும் கும்ப கருணனும் வீர உரை பகர்ந்து போர் செய்தனர். அநுமன் தான் எறிந்த மலையைக் கும்பகருணன் தள்ளிவிட்டானானால் அவனோடு போர் செய்ய மாட்டேன் எனக் கூறினான். தான் எறிந்த பெரு மலையைக் கும்பகருணன் பொருட்படுத்தாது தோள்மேல் ஏற்றமை யின், தன் சொற்படி அநுமன் போர் செய்யாமல் விலகிச் சென்றான். கும்பகருணனால் அப்பொழுது வானரச் சேனைகள் பெரிதும் அழிந்தன.

அதுகண்ட இலக்குவன் கும்பகருணன் முன் தோன்றிப் போர் செய்தான். இருவரும் வீர உரை பகர்ந்து கடும் போர் செய்தனர். இலக்குவன் கும்பகருணனுடைய சேனைகளை அழித்துத் தேரினையும் அழித்தான். அப்பொழுது இராவணனால் அனுப்பப்பட்ட துணைப் படை வரவே அப்படையுடன் இலக்குவன் போர் செய்து கொண்டிருந்தான்.

அந்நிலையில் கும்பகருணன் சுக்கிரீவனோடு போர் செய்யும் நிலை ஏற்பட்டது. அவன் சுக்கிரீவன் மேல் சூலத்தை எறிய, அதனை அநுமன் தடுத்து முறித்தான். ஆயினும் அநுமன் முன் சொன்ன சூளுரையினை நினைந்து கும்பகருணனோடு போர் செய்ய முற்பட வில்லை. கும்பகருணன் சுக்கிரீவனைத் தன்னுடைய இறுக்கிய பிடியால் உணர்விழக்கச் செய்து இலங்கைக்குக் கொண்டு சென்றான்.

அதனை வானரர்களால் அறிந்த இராமன் அம்புமாரி சொரிந்து திசைகளையெல்லாம் மறைத்து அம்பாலாக்கிய மதிலால் கும்பகரு ணன் இலங்கையினுள் நுழையாவண்ணம் தடுத்தான். இராமன் அம்பினால் அமைத்த மதிலைக் கும்பகருணன் கடக்கச் சென்றபோது, கடக்க இயலா அதன் அருமையை அறிந்து திரும்பிப் பார்த்த போது இராமனைக் கண்டான். அவன் இராமனை நோக்கிச் 'சுக்கிரீவனை நீ என்னிடமிருந்து மீட்டாயானால் சீதையையும் மீட்டனையாவாய்' என்று வீர உரை பகர்ந்தான். அது கேட்ட இராமன் தன் அம்பைக் கும்பகருணன் நெற்றியிற் செலுத்தி அவனுக்கு மயக்கமுண்டாக்கவே

அவனுடைய குருதி நீர் பட்டமையால் சுக்கிரீவன் மயக்கம் தெளிந்து, அவனுடைய மூக்கையும் காதையும் கடித்து எடுத்துக் கொண்டு, வானரப் படை உள்ள இடத்திற்கு அவர்கள் மகிழும் வண்ணம் போய்ச் சேர்ந்தான்.

உணர்வு பெற்றெழுந்த கும்பகருணன் மூக்கும் காதும் இழந்தமை கண்டு, தனக்கு நேர்ந்த பேரவமானத்தால் வெகுண்டு இராமனுடன் போர்க்கெழுந்தான். இராமனுடன் நிகழ்த்திய போரில் அவன் வாளினை இழக்க, அப்பொழுது இராவணன் அனுப்பிய பெரும்படை அவனுக்கு உதவியாக வந்தது. இராமனுக்கும் கும்பகருணனுக்கும் நிகழ்ந்த போரில் நால்வகைப் படைகளுக்கும் உண்டாகிய அழிவு பலபடியாகக் கம்பரால் சுவைபட விரித்துக் கூறப்பட்டுள்ளது. இராமனால் சூலப்படை அழிக்கப்பட்டவுடன் கும்பகருணன் வாளேந்திப் போர் செய்தான். இராமன் அவனுடைய வலக் கையை முன்னரும் இடக்கையைப் பின்னருமாக இரு கைகளையும் துணித்தான். கைகள் இழந்த நிலையிலும் அவன் கால்களால் வானர சேனையைத் துகைத்தான். அது கண்ட இராமன், அவன், வலக் காலையும் இடக் காலையும்' துணித்தனன். கைகளும் கால்களும் இழந்த நிலையிலும் அவன் செய்த போர் வீரங்கண்டு இராமனும் வியந்தான்.

கும்பகருணன் இராமனை நோக்கி, இராவணன் வீடணனைக் கொல்ல வேண்டுமென்று கறுவு கொண்டிருப்பதால் அமயம் வாய்ப்பின் அவன் கொல்லத் தயங்கான்; அவனால் வீடணனுக்கு ஒரு துன்பமும் நேராவண்ணம் காக்க வேண்டும்' என்று வேண்டினன். இறுதியாகத் தன் மூக்கிழந்த முகத்தை யாரும் காணாவண்ணம் தன் தலையை அறுத்துக் கடலினுள்ளே வீழ்த்துதல் வேண்டும் என வேண்டிக்கொண்டான். இராமன், அவன் வேண்டிக்கொண்டவாறே அவன் தலையை அறுத்துக் கடலுள் ஆழும்படி செய்தான். வானவர்களும் அரமகளிரும் வேதியரும் வானரர்களும் கும்பகருணன் இறந்ததறிந்து பெரு மகிழ்வெய்தினர். அரக்கர்கள் குடல்கலங்கி அத்துயரச் செய்தியை இராவணனுக்கு அறிவிக்க ஓடினர். இதுவே இப்படலத்துட் கூறப்படும் பொருட் சுருக்கமாகும்.

இராமன் வீடணனை அனுப்பிக் கும்பகருணன் இசைவானால் அவனைத் தம்பக்கல் அழைத்து வரும்படி கூறினமையும், வீடணன் கும்பகருணனிடம் 'இராமனைச் சேர்தலே தக்கது' எனப் பல காரணங்களால் விளக்கிக் கூறியதும், கும்பகருணன், தான் இராவணனை இத்தகைய துன்ப நிலையில் விடுத்துவாரேன் என்றும் அவன் பொருட்டுப் போர் செய்து செஞ்சோற்றுக் கடன் கழித்துச் சாதலே தன் விருப்பமென்றும் கூறியதும் வான்மீகி இராமாயணத்

தில் காணப்படாதன. இதனைக் கம்பர் படைத்துக் கூறியதன் மூலம், கும்பகருணன் இராவணனிடத்துக் கொண்டிருந்த பேரன்பு போலவே வீடணனிடத்தும் பேரன்பு கொண்டிருந்தானென்பதும், வீடணன் இராமன்பால் சேர்ந்தது பற்றி அவன்பால் வெறுப்புக் கொள்ளவில்லை என்பதும், அவன் செய்தது தக்கதே என அதற்கு மகிழ்ந்திருந்தானென்பதும் புலனாகின்றன. வீடணன் கும்பகருணன் ஆகிய இருவருடைய மனநிலையையும் அறிதற்குப் பேருதவியாக நிற்கும் இப்பகுதி, கம்பருடைய காப்பியப் படைப்பின் திறமையை அறிதற்கு உறுதுணையாக நின்று நிலவுகின்றது.

# 15. கும்பகருணன் வதைப் படலம்

## இராவணன் இலங்கை நோக்கி மீளுதல்

7399. வாரணம் பொருத மார்பும்
★ வரையினை யெடுத்த தோளும்
நாரத முனிவற் கேற்ப
நயம்பட வுரைத்த நாவும்
தாரணி மவுலி பத்துஞ்
சங்கரன் கொடுத்த வாளும்
வீரமுங் களத்தே போட்டு
வெறுங்கையோ டிலங்கை புக்கான்.

வாரணம் பொருத மார்பும்,
வரையினை எடுத்த தோளும்,
நாரத முனிவற்கு ஏற்ப
நயம்பட உரைத்த நாவும்,
தார்அணி மவுலி பத்தும்,
சங்கரன் கொடுத்த வாளும்,
வீரமும் களத்தே போட்டு,
வெறுங்கையோடு இலங்கை புக்கான்.

பொ :—திசை யானைகள் (எதிர்த்துத் தங்கள் தந்தங்களால் குத்திப்) பொருதற்கு இடமாகிய (வலிய) மார்பையும், கயிலாய மலையைப் பெயர்த்தெடுத்த தோள்களையும், (இசையில் வல்ல) நாரத முனிவனும் (நன்றாயிருக்கிற தென்று) ஏற்றுக்கொள்ளும் வண்ணம் இன்பம் உண்டாகும்படி (சாமவேதம்) பாடிய நாவையும், மாலையணிந்த பத்து மணி முடிகளையும், சிவபெருமான் கொடுத்த வாளையும், வீரத்தையும் (பயன்படாதவைகளாகப்) போர்க்களத்திலே போட்டுவிட்டு வெறுங் கையோடு இலங்கையை அடைந்தான்.

கு :—வாரணம் - யானை. நயம்பட - இனிமை உண்டாக. உரைத்தல் - சொல்லுதல்; இங்கே இசைத்தல் என்னும் பொருள் பட நின்றது. மவுலி - முடி. இராவணன் இலங்கை புக்க பொழுது தற்கிழமைப் பொருளான மார்பு, தோள், நா, வீரம் என்பனவும், பிறிதின்கிழமைப் பொருளான மவுலி, வாள் என்பனவும் அவனுடன் சென்றிருக்கவும், இவற்றைக் களத்தே போட்டுச் சென்றான் என்

பதன் கருத்து யாதெனின், அநுமன் குத்திய பொழுது இராவணன் மார்பில் தைத்திருந்த திசையானைகளின் கொம்புகள் முதுகு வழியே உதிர்ந்து போனமையால் மார்பின் வன்மையும், தன் வேலால் மூர்ச் சித்து வீழ்ந்த இலக்குவனைத் தூக்க முயன்றும் தூக்க முடியாமை யால் தோளின் வலிமையும், படைகளொழிந்து தனியனாய் நின்ற பொழுது 'ஊர்க்குச் சென்று படைகளைத் தொகுத்துக் கொண்டு போர் செய்தற்கு நாளைவர எண்ணுகின்றனையோ? சீதையை விட்டு விடுதற்கு எண்ணுகின்றனையோ? உன் கருத்து யாது?' என்று இராமன் கேட்டபோது ஒன்றும் பேசாதிருந்தமையின் நாவின் வன் மையும், அவன் மணி முடிகளை இராமனுடைய அம்பு வீழ்த்திவிட் டமையால் மணிமுடிகளும், இராவணன் விட்ட அம்புகளை யெல்லாம் இராமன் தன் அம்புகளால் அழித்தமையின் சங்கரன் அளித்த இவ் வாளையும் அழித்து விடுவன் என்று கருதி அவ்வாளினைப் பயன் படுத்தாதிருந்தமையின் சங்கரன் கொடுத்த வாளும் போர்க் களத்தில் பயன்படாதொழிய இராவணன் வறிதே மீண்ட தன்மை யினை விளக்குதற் பொருட்டாம். மார்பு, தோள், நா என்பவை முறையே நெஞ்சத்து உறுதியையும் தோள் வன்மையையும் நாவன் மையையும் சுட்டி நின்றன. அநுமன் குத்தினமையால் இராவணன் மார்பில் தைத்திருந்த திசையானைகளின் கொம்புகள் அவன் முதுகு வழியே உதிர்ந்தமை 'கைக்குத்தது படலும்' (முதற் போர்ப் படலம்–176) என்னும் பாடலிற் கூறப்பட்டது. இராவணன் இலக்கு வனைத் தூக்க முயன்றும் முடியாமல் சலித்தமை 'எடுக்கலுற்றவன்' (முதற் போர்ப் படலம்-212) என்னும் பாடலால் புலனாம். 'ஊர்க்குப் போய்ப் படைகளைத் தொகுத்துக் கொண்டு போர் செய்ய நாளை வர எண்ணுகின்றனையோ? சீதையை விட்டு விடுதற்கு எண்ணுகின் றனையோ? உன் கருந்து யாது' என்று இராமன் கேட்டபோது அவன் ஒன்றும் பேசாமலிருந்தமை முதற் போர்ப் படலம் 252-256 ஆம் பாடல்களிற் குறிக்கப்பட்டது. இராவணன் மணிமுடி இராமனுடைய அம்பினால் வீழ்ந்தமை முதற் போர்ப் படலம் 245 ஆம் பாடலிற் கூறப்பட்டது. மற்றைய படைகளைக் கூறாது சங்கரன் வாளை மட்டும் கூறியது அதன் சிறப்புப்பற்றி. எல்லாம் இழந்த மைக்குக் காரணம் வீரம் இழந்தமையாதலால் அதனை இறுதியடியின் முதலிலே வைத்துக் கூறினார். வீரமும் என்பதிலுள்ள உம்மை இறந்தது தழுவிய எச்சவும்மை; உயர்வு சிறப்பும்மையாகவும் கொள்ளலாம்.

(1)

7400. கிடந்தபோர் வலியார் மாட்டே
கெடாதவா னவரை யெல்லாங்
கடந்துபோ யுலக மூன்றுங்
காக்கின்ற காவலாளன்
தொடர்ந்துபோம் பழியி னோடுந்
தூக்கிய கரங்க ளோடும்
நடந்துபோய் நகரம் புக்கா
னருக்கனு நாகஞ் சேர்ந்தான்.

கிடந்த போர்வலி யார்மாட்டே?
கெடாத வானவரை எல்லாம்
கடந்துபோய், உலகம் மூன்றும்
காக்கின்ற காவலாளன்,
தொடர்ந்து போம் பழியினோடும்,
தூக்கிய கரங்களோடும்,
நடந்துபோய், நகரம் புக்கான்;
அருக்கனும் நாகம் சேர்ந்தான்.

பொ :—(யாரிடத்தும்) தோலாத தேவர்களை யெல்லாம் வென்று போய் மூவுலகங்களையும் பாதுகாக்கின்ற காத்தற்றொழிலையுடைய இராவணன் (போரில் தோற்றமையால், தன்னைப் பின்பற்றி வருகின்ற வசையுடனும் (பகைவர்களை வெல்ல உதவாமையால் வறிதே) சுமந்த கைகளுடனும் நடந்துபோய் இலங்கையிற் புகுந்தான்; சூரியனும் (அத்த) மலையை அடைந்தான்; போர் செய்யும் வலிமை யாரிடத்துத்தான் (உரிமையாகக்) கிடந்தது?

கு :—வானவர்களை வென்று உலகம் மூன்றையும் காக்கின்ற காவலாளன் மனித குலத்திற் றோன்றிய இராமனிடம் தோல்வியுற்றுத் தொடர்ந்து போம் பழியினோடும் தூக்கிய கரங்களோடும் நடந்துபோய் நகரம்புக்கா னுதலால், 'போர்வலி யார்மாட்டே கிடந்த?' என்றார். யாவரையும் வென்ற இராவணனது வீரச் சிறப்பினைத் 'திக்கின், மா வெலாந் தொலைத்து வெள்ளிமலை யெடுத்துலக மூன்றும், காவலான்' (சூர்ப்பணகைப் படலம்-39) என ஆசிரியர் சிறப்பித்துக் கூறியுள்ளமை இங்கு நோக்கத் தக்கதாகும். போர்வலி ஒருவரிடத்தே மட்டும் நிலையாகக் கிடப்பதன்று என்பார் 'போர் வலி யார்மாட்டே கிடந்த?' என்றார். 'ஆருழையடங்குமழகிற் கவதியுண்டோ?' (சூர்ப்பணகைப்படலம்-36) எனவும், 'சேனுயர் பெருமை ஓர் திறத்தது அன்றெனு, நாணுறும்' (உருக்காட்டுப் படலம்-104) எனவும் அழகும் பெருமையும் ஓரிடத்திலேயே நிற்பன.

அல்ல என ஆசிரியர் கூறியுள்ளமை ஈண்டு ஒப்புநோக்கத்தக்கதாம். முன்பெல்லாம் அவனுக்குத் துணையாகிய கரங்களே இப்பொழுது சுமையாக இருந்தன என்பார். 'தூக்கிய கரங்களோடும்' என்றார்; 'இரு தோளெனச் சோம்பி ஓங்கும் கல்லும் சுமந்தேன்' (அயோ. காண். 1830) என்றாற்போல. மூவுலகமும் ஆளும் இராவணன், பின் வரும் பரிசனமும் ஏறிச் செல்லும் வாகனமும் இல்லாமல் நடந்து செல்ல நேர்ந்த நிலையை' நடந்துபோய் நகரம்புக்கான்' என இரக்கம் தோன்றக் கூறினர் ஆசிரியர். (2)

## இராவணனது நாண நிலை

**7401.** மாதிர மெவையு நோக்கான்
வளநகர் நோக்கான் வந்த
காதலர் தம்மை நோக்கான்
கடற்பெருஞ் சேனை நோக்கான்
தாதவிழ் கூந்தன் மாதர்
தனித்தனி நோக்கத் தானப்
பூதல மென்னு நங்கை
தன்னையே நோக்கிப் புக்கான்.

மாதிரம் எவையும் நோக்கான்,
வளநகர் நோக்கான், வந்த
காதலர் தம்மை நோக்கான்,
கடல்பெருஞ் சேனை நோக்கான்,
தாது அவிழ் கூந்தல் மாதர்
தனித்தனி நோக்க, தான் அப்
பூதலம் என்னும் நங்கை
தன்னையே நோக்கிப் புக்கான்.

பொ :—(இராவணன் போரிலே தோற்ற நாணத்தினால்) திசைகள் எவற்றையும் பாராதவனாய், தன் நகர் வளத்தினைக் காணாதவனாய், (தன்னைக் காண) வந்த புதல்வர்களை நோக்காதவனாய். (வரவேற்க வந்த) கடல்போல் பரந்த (தன்) சேனையைப் பாராதவனாய், மலர் விரியப் பெற்ற கூந்தலையுடைய மகளிரெல்லோரும் தனித்தனியே (தன்னை) நோக்கிக் கொண்டிருக்கத் தான் (எவரையும் பாராதவனாய்), அப்பூமியாகிய பெண்ணொருத்தியையே பார்த்தவண்ணம் (அரண்மனையில்) புகுந்தான்.

கு :—இராவணன் வெற்றி பெற்றுத் திரும்பி வருவானென் றெண்ணி அவனை எதிர்கொண்டு சென்று காணும் அவாவினால் அவனுடைய புதல்வர்களும் சேனைகளும் மகளிரும் அவன் வருகையை எதிர் நோக்கிப் பார்த்துக் கொண்டிருந்தனர். இராவணன் போரில் தோற்ற நாணத்தால் அவர்களைப் பாராமல் தலை கவிழ்ந்து பூமியைப் பார்த்தவண்ணம் தன் அரண்மனையை யடைந்தான். மாதிரம் - திசை. காதலர் - புத்திரர். தாது - மலர். பூதலமென்னும் நங்கை தன்னையே நோக்குதல் - தன் எதிர்ப்பட்டாரைத் தலைநிமிர்ந்து பார்த்தற்கு வெட்கித் தலைகுனிந்து நிலத்தையே நோக்குதல். இப் பாட்டில் அரண்மனையடைதற்கு முன் இலங்கை நகரில் நிகழ்ந்த நிகழ்ச்சிகள் கூறப்பட்டுள்ளன. (3)

### அரண்மனையை அடைந்த இராவணன் தன்மை

**7402.** நாளொத்த நளின மன்ன
முகத்தியர் நயன மெல்லாம்
வாளொத்த மைந்தர் வார்த்தை
யிராகவன் வாளி யொத்த
கோளொத்த சிறைவைத் தாண்ட
கொற்றவற் கற்றை நாடன்
தோளொத்த துணைமென் கொங்கை
நோக்கங்குத் தொடர்கி லாமை.

நாள் ஒத்த நளினம் அன்ன
முகத்தியர் நயனம் எல்லாம்
வாள் ஒத்த; மைந்தர் வார்த்தை
இராகவன் வாளி ஒத்த;—
கோள் ஒத்த சிறைவைத்து
ஆண்ட கொற்றவற்கு, அற்றைநாள் தன்
தோள் ஒத்த துணைமென் கொங்கை
நோக்கு அங்குத் தொடர்கிலாமை.

பொ :—நவக்கிரகங்களை (வென்று தன் மனத்திற்குப்) பொருத்த மான சிறைச்சாலையில் வைத்து (அடிமைகளாக) ஆண்ட வெற்றியை யுடைய இராவணனுக்கு, முதற்போர் நிகழ்ந்த அந்த நாளில், தன் தோள்களில் பொருந்திய இரட்டையாகிய மெல்லிய தனங்களை யுடைய வெற்றித் திருமகளுடைய பார்வை அவனிடத்திற் செல்லா மையால், அன்று அலர்ந்த தாமரை மலரைப் போன்ற முகத்தை

யுடைய மகளிரின் கண்களெல்லாம் அவனுக்கு வாட்படையைப் போன்றிருந்தன; மக்கள் (கூறுகின்ற) சொற்களெல்லாம் இராம னுடைய அம்புகளைப் போன்றிருந்தன.

கு :—'நளின மன்ன முகத்தியர்' என்பது இராவணனுடைய மனைவியர்களைக் குறிக்கும். இராவணன் போரில் தோற்று வந்த படியால் அவனுடைய மனைவியர் காதலோடு பார்க்கும் பார்வை வாட்படைபோலவும், மக்கள் அன்போடு கூறும் சொற்கள் இராம னுடைய அம்புகள் போலவும் அவன் உள்ளத்திற்குத் துன்பத்தைத் தந்தன என்பதாம். போர்க்களத்தில் துன்புற்று மீண்ட இராவணன், அமைதியாக இருத்தற்குரிய தன் அரண்மனையிலும் வாளாலும் அம் பாலும் துன்புறலாயினன் என ஆசிரியர் கூறிய திறம் உணர்ந்து மகிழத்தக்கதாகும். இடத்தாலும் பண்பாலும் தம்முள் மாறுபட்ட கோள்களை ஓரிடத்தே ஒரு நிரலாக வைத்துச் சிறைப்படுத்தி ஏவல் கொண்டவன் இராவணன் என்பார், 'கோள், ஒத்த சிறைவைத் தாண்ட கொற்றவன்' என்றார். 'துணைமென் கொங்கை' என்பது ஆகுபெயராய் இரட்டையான மெல்லிய தனங்களையுடைய கொற்ற வையை உணர்த்திற்று. வீரத்திரு விரும்பித் தங்குதற்கும் விருப் புடன் நோக்குதற்கும் ஒத்த வலியும் சிறப்பும் அமைந்த தோள்கள் என்பார், 'தன் தோளொத்த துணைமென் கொங்கை நோக்கு' என்றார். ஈண்டுத் 'தன்' என்றது இராவணனை. கொற்றவையி னுடைய பார்வையாகிய வெற்றி நோக்கம் தனக்குக் கிட்டாமையின் இவையெல்லாம் நிகழ்ந்தன என்க. (4)

## தனிமையாக அரண்மனையை யடைந்த இராவணன் தூதரை அழைத்து வருமாறு கஞ்சுகியை ஏவுதல்

**7403.** மந்திரச் சுற்றத் தாரும்
வாணுதற் சுற்றத் தாருந்
தந்திரச் சுற்றத் தாருந்
தன்கிளைச் சுற்றத் தாரும்
எந்திரப் பொறியி னிற்ப
யாவரு மின்றித் தானே
சிந்துரக் களிறு கூடம்
புக்கெனக் கோயில் சேர்ந்தான்.

மந்திரச் சுற்றத்தாரும், வாணுதல் சுற்றத்தாரும் தந்திரச் சுற்றத்தாரும், தன்கிளைச் சுற்றத்தாரும்,

எந்திரப் பொறியின் நிற்ப, யாவரும் இன்றி, தானே
சிந்துரக் களிறு கூடம் புக்கென, கோயில் சேர்ந்தான்.

பொ :—ஆலோசனைக்குத் துணையான அமைச்சர்களும் ஒளி பொருந்திய நெற்றியையுடைய மனைவியர்களும் சேனைத் தலைவர்களும் தன்னுடைய உறவினர்களும் (இயக்குவாரற்ற) எந்திரப் பொறிகளைப் போன்று (செயலற்று) நிற்க, (ஒருவருமின்றித்) தான் தனியாகச் சிந்துரப் பொட்டணிந்த யானை கொட்டாரத்தைச் சேர்ந்தது போல அரண்மனையின் உட்புறத்துச் சென்றான்.

கு :—இராவணன் நிலையைக் கண்டு திகைத்துச் செயலற்று நின்ற சுற்றத்தாருக்கு இயக்குவாரற்ற எந்திரப்பொறி உவமை. கருநிற மேனியனாகிய இராவணன் போரில் அம்பு பட்டதனால் முகத்தில் குருதி ஒழுகச் சென்றானாதலின் அவனுக்குச் சிந்துரக் களிறு உவமையாகச் சொல்லப்பட்டது. மந்திரம் - ஆலோசனை. தந்திரம் - சேனை. சிந்துரம் - நெற்றியிலணியும் செம்பொடி. கூடம் - யானை நிற்கும் கொட்டாரம். (5)

**7404.** ஆண்டொரு செம்பொற் பீடத்
திருந்துதன் வருத்த மாறி
நீண்டுயர் நினைப்ப னாகிக்
கஞ்சுகி யயனின் றானை
ஈண்டுநந் தூதர் தம்மை
யிவ்வழித் தருதி யென்றான்
பூண்டதோர் பணியன் வல்லை
நால்வரைக் கொண்டு புக்கான்.

ஆண்டு ஒரு செம்பொன் பீடத்து
இருந்து, தன் வருத்தம் ஆறி,
நீண்டு உயர் நினைப்பன் ஆகி,
கஞ்சுகி அயல் நின்றானை,
'ஈண்டு நம் தூதர்தம்மை
இவ்வழித் தருதி' என்றான்
பூண்டது ஓர் பணியன், வல்லை
நால்வரைக் கொண்டு புக்கான்.

பொ :—(இராவணன்) அங்கே செம்பொன்னால் செய்யப்பட்ட ஒரு பீடத்தின் கண்ணேயிருந்து, (போர்க்களத்தில் இராமனுடைய

அம்புகளால் உற்ற) தன் வருத்தம் நீங்கி, மிகப் பெரிய சிந்தனையை உடையவனாகித் தன் பக்கத்தில் நின்ற சட்டையிட்ட மெய்காப்பாளனைப் (பார்த்து), 'இப்பொழுதே நமது தூதுவரை இவ்விடத்திற்கு அழைத்து வருவாயாக' என்றான். மேற்கொண்ட அக் கட்டளையையுடைய ஏவலாளன், விரைவாகத் தூதர் நால்வரை அழைத்துக்கொண்டு (இராவணன் உள்ளவிடத்தில்) புகுந்தான்.

கு:—போரில் தோற்றுவந்த இராவணன் வெல்லுதற்குரிய வழிகளை மிக ஆழ்ந்து சிந்திப்பவனானான் என்பார், 'நீண்டுயர் நினைப்பனாகி' என்றார். கஞ்சுகி - சட்டையணிந்த மெய்காப்பாளன். கஞ்சுகம் - சட்டை. அயல் நின்றானாகிய கஞ்சுகியை என உருபு பிரித்துக் கூட்டுக. (6)

## வந்த தூதரிடம் எட்டுத் திக்கிலுமுள்ள அரக்கர் சேனையைக் கொணருமாறு பணித்தல்

**7405.** மனகதி வாயு வேகன்
மருத்தன்மா மேக னென்றிவ்
வினையறி தொழிலர் முன்னா
வாயிலர் விரவி னாரை
நினைவதன் முன்ன நீர்போய்
நெடுந்திசை யெட்டு நீந்திக்
கனைகழ லரக்கர் தானை
கொணருதிர் கடிதி னென்றான்.

மனகதி, வாயுவேகன், மருத்தன், மாமேகன், என்று இவ் வினை அறிதொழிலர் முன்னா, வாயிலர் விரவினாரை, 'நினைவதன் முன்னம் நீர்போய் நெடுந்திசை எட்டும் நீந்தி, கனைகழல் அரக்கர் தானை கொணருதிர், கடிதின்' என்றான்.

பொ:—(இராவணன்), மனகதி, வாயுவேகன், மருத்தன், மாமேகன் என்று சொல்லப்படுகின்ற தாம் செய்யவேண்டிய காரியங்களை நன்றாக அறிந்த வினைத்திறம் வாய்ந்த இவர்கள் முதலாக வந்து கூடிய தூதுவர்களை(ப் பார்த்து), 'நீங்கள் மனத்தால் நினைக்கின்ற காலத்தினும் விரைவாகச் சென்று, நீண்ட எட்டுத் திசைகளையும் கடந்து, ஒலிக்கின்ற வீரக் கழல்களை யணிந்த அரக்கர் சேனைகளை விரைவாகக் கொண்டு வாருங்கள்' என்றான்.

கு :—மனத்தின் விரைவையும் காற்றின் விரைவையும் வாயு தேவனின் வல்லமையையும் மேகத்தின் நிறத்தையும் கொண்ட காரணத்தினுல் அன்னோர் மனகதி, வாயுவேகன், மருத்தன், மாமேகன் எனப் பெயர் பெற்றனர். அன்னோர் தூதுவர்க்கு வேண்டிய குணங்களெல்லாம் நன்கு அமையப் பெற்றவரென்பார். 'வினையறி தொழிலர்' என்ருர். முன்னு - முதலாக. (7)

7406. ஏழ்பெருங் கடலுஞ் சூழ்ந்த
வேழ்பெருந் தீவு மெண்ணில்
பாழியம் பொருப்புங் கீழ்பா
லடுத்தபா தாளத் துள்ளும்
ஆழியங் கிரியின் மேலு
மரக்கரா னவரை யெல்லாந்
தாழ்விலிர் கொணர்தி ரென்ரு
னவரது தலைமேற் கொண்டார்.

'ஏழ் பெருங்கடலும், சூழ்ந்த
ஏழ் பெருந்தீவும், எண் இல்
பாழி அம்பொருப்பும், கீழ்பால்
அடுத்த பாதாளத் துள்ளும்
ஆழி அம் கிரியின் மேலும்,
அரக்கர் ஆனவரை எல்லாம்
தாழ்வு இலிர் கொணர்திர் என்ருன்;
அவர் அது தலைமேற் கொண்டார்.

பொ :—'ஏழு பெருங்கடல்கள் சூழ்ந்துள்ள ஏழு பெரிய தீவு களிலும், அளவில்லாத வலிமையுள்ள அழகிய மலைகளிலும், நிலத்தின் கீழ்ப்புறத்திலிருக்கின்ற பாதாள உலகத்திலும், அழகிய சக்கரவாளகிரியின் மேலும் உள்ள அரக்கர் கூட்டத்தினரை எல்லாம் காலந்தாழ்த்தாமல் கொண்டு வாருங்கள்' என்று (இராவணன்) கட்டளையிட்டான்; அந்தத் தூதுவர்களும் அந்தக் கட்டளையைத் தலைமேற் கொண்டார்கள்.

கு :—'எண்ணில் பாழியம்' பொருப்பு என்றது இந் நில எல்லைக் குட்பட்டுள்ள எண்ணில்லாத பெருமலைகளை. ஆழியங்கிரி என்றது இந் நிலத்தின் புறத்ததாய்ப் பெரும்புறக் கடலை ஒட்டி அமைந்த சக்கரவாளகிரியை. அவர் - தூதுவர். அது - கட்டளை. தலைமேற் கொள்ளுதல் - வணக்கத்துடன் ஏற்றுச் செய்தல். (8)

## இராவணன் மலர்ப் படுக்கையிற் சேர்ந்து வருந்தியிருத்தல்

**7407.** மூவகை யுலகு ளோரு
முறையினின் றேவல் செய்வார்
பாவக மின்ன தென்று
தெரிகிலர் பதைத்து விம்மத்
தூவக லாத வைவா
யெஃகுறத் தொளேக்கை யானே
சேவகம் அமைந்த தென்னச்
செறிமல ரமளி சேர்ந்தான்.

மூவகை உலகுளோரும் முறையில்
நின்று ஏவல் செய்வார்,
பாவகம் இன்னது என்று
தெரிகிலர், பதைத்து விம்ம,
தூ அகலாத வை வாய்
எஃகு உறத் தொளேக்கையானே
சேவகம் அமைந்தது என்னச்
செறிமலர் அமளி சேர்ந்தான்.

பொ :—முறைப்படி யிருந்து இட்ட கட்டளையைச் செய்பவராகிய மூன்று உலகத்திலுள்ளவர்களும் (தன்னுடைய) கருத்தை இன்ன தென்று அறியாதவர்களாகி (மனம்) வருந்தித் துடிக்க, (இராவணன்) தசை நீங்காத கூரிய முனேயையுடைய வேற்படை தைக்க, (அதனுல்) துவாரம் பொருந்திய துதிக்கையையுடைய யானே, தான் துயிலுமிடத்திற்குச் சென்று பொருந்தியதுபோல, நெருக்கமாகப் பூக்கள் பொருந்திய மலர்ப் படுக்கையிலே சேர்ந்தான்.

கு :—இராவணன் தோல்வியடைந்த அவமானத்தால் கோபங் கொண்டு என்ன [துன்பத்தைச் செய்வானே என்று மூவுலகத்தி லுள்ளவர்களும் அஞ்சுவாராயினர். பாவகம் - கருத்து. இராமனிடம் போரில் தோற்று அவமானமடைந்து வருந்தும் இராவணனுக்கு அம்பு தைத்தலால் வருந்தும் யானே உவமை. தூ-தசை. வைவாய்-கூரியமுனே. எஃகு-வேல். சேவகம்-யானேக்கூடம். (9)

**7408.** பண்ணிறை பவளச் செவ்வாய்ப்
பைந்தொடிச் சீதை யென்னும்
பெண்ணிறை கொண்ட நெஞ்சி
னிறை கொண்ட பின்னர்க்

கண்ணிறை கோடல் செய்யான்
கையறு கவலை சுற்ற
உண்ணிறை மானந் தன்னை
யுமிழ்ந்தெரி யுயிர்ப்ப தானுன்.

பண் நிறை பவளச் செவ்வாய்ப்
பைந் தொடிச் சீதை என்னும்
பெண் இறைகொண்ட நெஞ்சின்
நாண் நிறைகொண்ட பின்னர்,
கண் இறைகோடல் செய்யான்,
கையறு கவலை சுற்ற,
உள்நிறை மானம் தன்னை
உமிழ்ந்து, எரி உயிர்ப்பதானுன்.

பொ :—பண்ணினது இனிமை நிறைந்த பவளத்தைப்போன்ற சிவந்த வாயையும் பசிய (பொன்னுல் செய்யப்பட்ட) வளையல்களையும் உடைய சீதை என்று சொல்லப்படுகின்ற பெண் தங்கியிருக்கின்ற நெஞ்சில் நாணமானது நிரம்பிய பின்னர், செயலறுதற்குக் காரண மான கவலை சூழ்ந்து கொண்டதனுல் சிறிதும் கண் துயிலாதவனுய், உள்ளே நிறைந்த அவமானத்தை வெளிப்படுத்திக்கொண்டு, (கொல்லன் ஊதுலைத்) தீயினைப் போன்று பெருமூச்சு விடுவானு யினுன்.

கு :—இராமனுக்குத் தோற்று நாணத்தால் நலிந்தவிடத்தும் இராவணனுக்குச் சீதையின் மேலிருந்த காதல் அகலவில்லை என் பார், ‘பண்ணிறை பவளச் செவ்வாய்ப் பைந்தொடிச் சீதை என்னும் பெண் இறை கொண்ட நெஞ்சு’ என்றும், முன் சீதை ஒருத்திக்கே இடங் கொடுத்த நெஞ்சம் போரில் தோல்வியுற்ற இந்நிலையில் நாணத்திற்கும் இடமாயிற்று என்பார், ‘பெண் இறை கொண்ட நெஞ்சில் நாண் நிறைகொண்ட பின்னர்’ என்றும் கூறினுர். பெண் ணெருத்திக்கு இடம் தந்த இராவணனது நெஞ்சில் பெண்மைக் குரிய பண்பாகிய நாணமும் குடி புகுந்தது என்பது ஒரு நயம். கண் கோடல்-கண் இமை பொருந்தப்பெறுதல்; துயிலுதல். கையறுதல்- செயலறுதல். மானம் என்றது போரில் தோற்றதனுல் உண்டாகிய அவமானத்தை. எரி உயிர்த்தல் - வெகுளியால் தீத் தோன்ற மூச்சு விடுதல். ஈண்டு எரி என்றது கொல்லன் ஊதுலையிற்றேன்றும் தீயினை. ‘கொல்லன் ஊதுலையிற் கனலென்ன வெய்துயிர்த்தான்’ (கைகேயி சூழ்வினைப் படலம் - 16) என்பது ஈண்டு ஒப்பு நோக்கத் தகும். (10)

7409. வானகு மண்ணு மெல்லா
நகுநெடு வயிரத் தோளான்
நானகு பகைஞ ரெல்லா
நகுவரென் றதற்கு நாணுன்
வேனகு நெடுங்கட் செவ்வாய்
மெல்லியன் மிதிலை வந்த
சானகி நகுவ ளென்றே
நாணத்தாற் சாம்பு கின்ருன்.

'வான் நகும்; மண்ணும் எல்லாம்
நகும்;'—நெடு வயிரத் தோளான்—
'நான் நகு பகைஞர் எல்லாம்
நகுவர்' என்று, அதற்கு நாணுன்;
'வேல் நகு நெடுங்கண்
செவ்வாய் மெல்லியல், மிதிலை வந்த
சானகி நகுவள்' — என்றே
நாணத்தால் சாம்புகின்ருன்.

பொ :—வயிரம் போல் உறுதி பொருந்திய நெடிய தோள்களை யுடைய இராவணன், (என் தோல்வி காரணமாக என்னை நோக்கி) 'வானத்திலுள்ளோர் யாவரும் சிரிப்பார்கள்; மண்ணுலகத்திலுள்ளோர் எல்லோரும் சிரிப்பார்கள்; நான் (வென்று) அவமதித்துச் சிரித்த பகைவர்களெல்லோரும் (இப்பொழுது என்னை இகழ்ந்து) சிரிப்பார்கள்' என்று எண்ணி(த் தனக்கு வந்த) அப்பழிக்கு நாணுதவனுய், 'வேற்படையை அவமதிக்கின்ற நீண்ட கண்களையும் சிவந்த வாயினையும் மெல்லிய தன்மையினையுமுடைய மிதிலை நகரத்தில் பிறந்த சானகி (தன் தோல்வி கண்டு) சிரிப்பாள்' என்னும் அது பற்றியே நாணத்தினுல் வாடுபவன் ஆனுன்.

கு :—வான் மண் என்பன இட ஆகுபெயராய் முறையே தேவர் களையும் மக்களையும் உணர்த்தி நின்றன. நகுதல் - பரிகசித்துச் சிரித்தல். வீரர் கையிலிருக்கும் வேல் மாற்ருர் உடலிற் பாய்ந்து தான் அவர்களை வருத்துவதாயிருக்கப் பெண்களின் கண்கள் தம்மீது காதல் கொண்டு தம்மை அடையப் பெருத காதலரைத் தீண்டாமலே அவர்கள் உள்ளத்தை வருத்தும் ஆற்றலுடையதாதலின் 'வேல் நகு நெடுங்கண்' என்ருர்; வேலை வென்ற கண்கள் என்றபடி. வேல் நகு நெடுங்கண் என்பதற்கு நகு என்பதை உவம உருபாகக் கொண்டு வேல் போன்ற நீண்ட கண்கள் எனவும் பொருள் கொள்ளலாம். நெடுங்கண்ணையும் செவ்வாயையும் மெல்

லியலேயும் உடைய சானகி என இயையும். மெல்லியல்-மென்மை யான தன்மை. சாம்புதல் - வாடுதல். இராவணனுடைய முக்கிய நோக்கம் சீதை தன்னை மதித்துக் காதலிக்க வேண்டுமென்பதே. ஆதலின் மற்றெல்லாருடைய அவமதிப்பினலும் வாட்டமுருத இராவணன், சீதை தன்னை அவமதித்துச் சிரிப்பாள் என்ற ஒரே காரணத்திற்காக மனம் வாடுபவன் ஆயினன். (11)

### மாலியவான் வந்து 'உற்றது என்?'என இராவணனை வினவுதல்

**7410.** ஆங்கவன் றன்மூ தாதை
யாகிய மூப்பின் யாக்கை
வாங்கிய வரிவி லன்ன
மாலிய வானென் ருேதும்
பூங்கழ லரக்கன் வந்து
பொலங்கழ லிலங்கை வேந்தைத்
தாங்கிய வமளி மாட்டோர்
தவிசுடைப் பீடஞ் சார்ந்தான்.

ஆங்கு, அவன் தன் மூதாதை
ஆகிய, மூப்பின் யாக்கை
வாங்கிய வரிவில் அன்ன,
மாலியவான் என்று ஓதும்
பூங்கழல் அரக்கன் வந்து
பொலங்கழல் இலங்கை வேந்தைத்
தாங்கிய அமளி மாட்டு,
ஓர் தவிசுடைப் பீடம் சார்ந்தான்.

பொ :—அப்போது இராவணனுடைய பாட்டனுகிய, வளைக்கப் பெற்ற வரிந்த வில்லைப் போன்று வளைந்த முதுமையுற்ற உடலை யுடைய மாலியவான் என்று சொல்லப்படுகின்ற அழகிய வீரக் கழலை யணிந்த அரக்கன் வந்து, பொன்னுலாகிய வீரக் கழலணிந்த இலங் கைக்கு அரசனுகிய இராவணனைத் தாங்கிய படுக்கையின் பக்கத்தி லுள்ளதோர் மெத்தையிட்ட பீடத்திலே இருந்தான்.

கு :—வாங்கிய வரிவில் அன்ன மூப்பின் யாக்கை மாலியவான் என இயையும், வரிவில் - கட்டமைந்த வில். அமளி - படுக்கை. தவிசுடைப் பீடம் - மெத்தையிட்ட ஆசனம். (12)

**7411.** இருந்தவ னிலங்கை வேந்த
னியற்கையை யெய்த நோக்கிப்
பொருந்தவந் துற்ற போரிற்
ரோற்றனன் போலு மென்று
வருந்தினை மனமுந் தோளும்
வாடினை நாளும் வாடாப்
பெருந்தவ முடைய வைய
வென்னுற்ற பெற்றி யென்ருன்.

இருந்தவன், இலங்கை வேந்தன்
இயற்கையை எய்த நோக்கி,
'பொருந்த வந்துற்ற போரில்
தோற்றனன் போலும்' என்று,
'வருந்தினை மனமும்; தோளும்
வாடினை;—நாளும் வாடாப்
பெருந்தவம் உடைய ஐய!—
என், உற்ற பெற்றி?' என்ருன்.

பொ :—(பீடத்திலே) அமர்ந்திருந்தவனாகிய மாலியவான் இலங்கை வேந்தனாகிய இராவணன் (அப்போதிருந்த) தன்மையை உற்று நோக்கித் 'தனக்குத் தகுதியாக வந்து பொருந்திய போரிலே தோற்று விட்டனன் போலும்' என்று நினைத்து, 'எக்காலத்தும் கெடாத பெரிய தவத்தினையுடைய ஐயனே, மனமும் வருந்தினாய்; தோள்களும் வாடப் பெற்றாய்; நிகழ்ந்த செயல் யாது?' என்று வினவினன்.

கு :—எய்த நோக்குதல்-உற்றுப் பார்த்தல். மனமும் வருந்தினை, தோளும் வாடினை என்றியைக்க. 'என் உற்ற பெற்றி' என்பதனை உற்ற பெற்றி என் என மாற்றுக. (13)

## இராவணன் மாலியவானிடம் நிகழ்ந்தவற்றை உரைத்தல்

**7412.** கவையுறு நெஞ்சன் காந்திக்
கனல்கின்ற கண்ணன் பத்துச்
சிவையின்வா யென்னச் செந்தீ
யுயிர்ப்புறச் சிவந்த மூக்கன்

நவையறு பாகை யன்றி
　　யமுதினை நக்கி னுலும்
சுவையறப் புலர்ந்த நாவா
　　னினையன சொல்ல லுற்ருன்.

கவைஉறு நெஞ்சன், காந்திக்
　　கனல்கின்ற கண்ணன், பத்துச்
சிவையின் வாய் என்னச்
　　செந்தீ உயிர்ப்பு உறச்சிவந்த மூக்கன்,
நவை அறு பாகை அன்றி
　　அமுதினை நக்கினுலும்
சுவை அறப்புலர்ந்த நாவான்,
　　இனையன சொல்லலுற்ருன்:

பொ :—(போரிலே தோல்வியடைந்ததை எண்ணித்) துன்பம் பொருந்திய மனத்தை யுடையவனும், பற்றி எரிகின்ற கண்களை யுடையவனும், துருத்தியின் வாயைப் போலச் சிவந்த நெருப்பை (வெளிப்படுத்துகின்ற) பெருமூச்சுக் காற்று வெளிப்படச் சிவந்த பத்து மூக்குகளையுடையவனும், (நினைந்தால் நாவில் உமிழ்நீர் ஊறச் செய்யும்) குற்றமற்ற வெல்லப் பாகினையேயன்றி அமுதத்தையே நக்கினுலும் சுவை உணர்ச்சி தோன்ருதபடி ஈரம் வற்றிய நாவை உடையவனும் ஆன இராவணன் இவ்வாருன சொற்களைச் சொல்லலுற்ருன்.

கு :—துன்பம் எனப் பொருள்படும் கவ்வை என்ற சொல் கவை எனத் தொகுத்தல் விகாரமாக நின்றது; சிவை - துருத்தி. கொல்லனுடைய ஊதும் துருத்தியிலிருந்து சிவந்த நெருப்பு வெளிப்படுவதைப்போல இராவணனின் பத்து மூக்குகளிலுமிருந்து வெப்பமாகப் பெருமூச்சு வெளிப்படலாயிற்று. அப்பெருமூச்சினல் மூக்குகள் சிவந்து காணப்பட்டமையின் 'சிவந்த மூக்கன்' என்ருர், அமிழ்தனைய நுகர் பொருளை நுகருங்கால் நாவில் நீரூறுதல் இயல்பாயினும், இராவணன் துன்புற்ற இந்நிலையில் அமிழ்தத்தையே நுகரினும் நீரூறப் பெருத புலர்ந்த நாவினை உடையனுனன் என்பார், 'நவையறு பாகையன்றி அமுதினை நக்கினுலும், சுவையறப் புலர்ந்த நாவான்' என்ருர். (14)

**7413.** சங்கம்வந் துற்ற கொற்றத்
தாபதர் தம்மோ டெம்மோ
டங்கம்வந் துற்ற தாக
வமரர்வந் துற்ரு ரன்றே
கங்கம்வந் துற்ற செய்ய
களத்துநங் குலத்துக் கொவ்வாப்
பங்கம்வந் துற்ற தன்றிப்
பழியும்வந் துற்ற தென்ருன்.

'சங்கம் வந்து உற்ற கொற்றத்
தாபதர் தம்மோடு எம்மோடு
அங்கம் வந்து உற்றது ஆக,
அமரர் வந்து உற்ருர் அன்றே;
கங்கம் வந்து உற்ற செய்ய
களத்து, நம் குலத்துக்கு ஒவ்வாப்
பங்கம் வந்து உற்றது அன்றி,
பழியும் வந்து உற்றது என்ருன்.

பொ :—'தொகுதியாகப் பொருந்திய வெற்றிகளைப் பெற்ற தவக்கோலத்தையுடைய மானிடருக்கும் எமக்கும் போர் வந்து மூண்டதாக, தேவர்களும் (போரைக் காண என்முன் அச்சமின்றி) வந்து சேர்ந்தார்கள் ; பருந்துகள் வந்து நெருங்கிய சிவந்த போர்க் களத்திலே, நம்முடைய குலத்திற்குப் பொருந்தாத தோல்வி நேரிட்டதல்லாமல் (மானிடரிடத்தும் தோல்வியடைந்தோம் என்ற) வசையும் வந்து சேர்ந்து விட்டது' என்ருன்.

கு :—தாடகையைக் கொன்றும் சிவன் பிடித்த வில்லை முறித்தும் பரசுராமனை வென்றும் காட்டிலே கரன் முதலியோரை அழித்தும் வாலியைக் கொன்றும் இராமன் பெற்ற வெற்றிகளை யெல்லாம் வீடணனுல் இராவணன் அறிந்திருந்தானுதலின், 'சங்கம் வந்துற்ற கொற்றத்தாபதர்' என்ருன். சங்கம் - கூட்டம். ஈண்டுத் தாபதர் என்றது மர உரி உடுத்துச் சடைமுடி தாங்கித் தவக்கோலத்தினராக விளங்கிய இராம இலக்குவரை. அங்கம் - போர். தனக்கு அஞ்சிக் கிடக்கும் அமரர்கள் தான் மானிடரோடு செய்யும் போரைக் காண அச்சமின்றி வந்து கூடிவிட்டார்களே என்னும் வருத்தம் தோன்ற, 'அமரர் வந்துற்ருர் அன்றே' என்ருன். கங்கம் - பருந்து. மூவுலகுக்கும் காவலானுகிய இராவணன் மானிடருக்குத் தோற்றதனுல், 'நம் குலத்துக் கொவ்வாப், பங்கம் வந்துற்றதன்றிப் பழியும் வந்துற்றது' என்று கூறினுன். பங்கம் - தோல்வி. (15)

**7414.** முளையமை திங்கள் சூடு
முக்கணன் முதல்வ னாகக்
கிளையமை புவன மூன்றும்
வந்துடன் கிடைத்த வேனும்
வளையமை வரிவில் வாளி
மெய்யுற வழங்கு மாயின்
இளையவன் தனக்கு மாற்று
தென்பெருஞ் சேனை நம்ப.

'முளை அமை திங்கள் சூடும்
முக்கணன் முதல்வன் ஆக,
கிளை அமை புவனம் மூன்றும்
வந்து உடன் கிடைத்த வேனும்,
வளை அமை வரிவில் வாளி
மெய் உற வழங்கும் ஆயின்,
இளையவன் தனக்கும் ஆற்றுது,
என் பெருஞ்சேனை – நம்ப!

பொ :—'பெரியோனே, முளைத்தல் பொருந்திய பிறைச்சந்திரனை (முடியில்) சூடிய மூன்று கண்களையுடைய சிவபெருமானை முதல்வனாகக் கொண்டு, மேன்மேல் வளருந் தன்மையுடைய மூவுலகத்து வீரர் திரளும் ஒருசேர வந்து (போர்த்துணையாக எனக்குக்) கிடைத்தன ஆயினும், என்னுடைய பெரிய சேனையானது, (இலக்குவன்) வளைதல் பொருந்திய கட்டமைந்த வில்லினின்றும் (வெளிப்படுத்துகின்ற) அம்புகளை உடலில் தாக்கும் வண்ணம் செலுத்துவானானல் இளையவனாகிய அவனுக்கும் எதிர் நிற்கமாட்டாது.

கு :—புவனம் மூன்றும் என்பது இட ஆகுபெயராய் மூவுலகத்திலுமுள்ள வீரர் தொகுதியை உணர்த்தி நின்றது. 'இளையவன் தனக்கு மாற்றுதென் பெருஞ் சேனை' என்னும் சொல்லாற்றலால் இளையவனுக்கே ஆற்றுத என் சேனை அவனைவிட ஆண்டிலும் ஆற்றலிலும் மிக்கோனாகிய இராமனுக்கு எங்ஙனம் ஆற்றும் என்னும் குறிப்புணர நின்றது. இராவணனுடைய ஆற்றல் பகைவனாகிய இராவணனாலும் சிறப்பித்துப் பாராட்டப்படுதல் ஈண்டுக் கருதத்தக்கது. (16)

7415. எறித்தபோ ரரக்க ராவி
யெண்ணிலா வெள்ள மெஞ்சப்
பறித்தபோ தென்னை யந்தப்
பரிபவ முதுகிற் பற்றப்
பொறித்தபோ தந்நா ளந்தக்
கூனிகூன் போக வுண்டை
தெறித்தபோ தொத்த தன்றிச்
சினமுண்மை தெரிந்த தில்லை.

'எறித்த போர் அரக்கர் ஆவி
எண் இலாவெள்ளம் எஞ்சப்
பறித்தபோது, என்னை அந்தப்
பரிபவம் முதுகில் பற்றப்
பொறித்தபோது, அந்நாள் அந்தக்
கூனி கூன்போக உண்டை
தெறித்தபோது ஒத்தது அன்றி,
சினம் உண்மை தெரிந்தது இல்லை.

பொ :—'அந்த இராமன், (படைக்கலங்களை வீசி) எறியப்பெற்ற போரில் எண்ணில்லாத வெள்ளக் கணக்கினரான அரக்கர்களுடைய உயிர் நீங்குமாறு (அவர்களுடைய உயிரைக்) கவர்ந்தபோதும், என்னை அந்த அவமானம் (என்னுடைய) முதுகை யிடமாகக் கொண்டு பொருந்துமாறு (தன் அம்புகளைக்கொண்டு) பதியச் செய்த போதும், (அவ்விராமனுடைய முகக் குறிப்பு), முன்னுளிலே அந்தக் கூனியினுடைய கூனிலே பொருந்தும்படி (சிறு வில்லினின்று) மண் உருண்டையைத் தெறித்த போதிருந்த நிலைமையை ஒத்திருந்ததே யன்றிக் கோபத்தோடு கூடியிருந்ததாகத் தெரியவில்லை.

கு :—எறிந்த என்பது வலித்தல் விகாரமாய் 'எறித்த' என நின்றது. வெள்ளம் - பேரெண். இராமன் விடுத்த அம்பு இராவணன் மார்பிற்பட்டு முதுகு வழியாகச் சென்றதாகலின் அதனுல் ஏற்பட்ட புறப்புண் அவனுக்குப் பேரவமானத்தை விளைத்தமையின், 'அந்தப் பரிபவம் முதுகில் பற்றப் பொறித்தபோது' என்ருன். பரிபவம் - அவமானம். பெருவீரன் வீரங்காட்டிப் போர் செய்யும்போது மாற்ருன் விடுத்த அம்பு அவனது மார்பிற்பட்டு முதுகு வழியாக ஊடுருவிப் போதலுண்டென்பதும், அந்நிலையில் அது அவனுக்குப் பேரவமானத்தினையும் பழியினையும் விளைக்குமென்பதும் புறப்புண் நாணி வடக்கிருந்து உயிர் துறந்த சேரமான் பெருஞ்சேரலாதன் வரலாற்ருல் உணரப்படும். (புறம் - 65, 66) என்னுடைய எண்ணில்

லாத அரக்கர்களை அழித்தபோதும், அந்தப் பரிபவம் என் முதுகிற் பற்றப் பொறித்தபோதும், அவன் நிலைமை இளம் பருவத்தில் விளையாட்டாகக் கூனியின் கூனிலே பொருந்தும்படி மண் உருண்டையைச் சிறு வில்லினின்றும் தெறித்த போதிருந்த நிலைமையை ஒத்திருந்ததேயன்றிக் கோபத்தோடு கூடியிருந்ததாகத் தெரிய வில்லை என்றமையால் இராவணன் இராமனுக்கு இயல்பாக அமைந்த வீரப் பெருமையை வியந்தவாறும். கூற இயலாத பேரவமானம் தனக்கு உண்டாயிற்றென்பது புலப்பட, 'அந்தப் பரிபவம்' என்ருன். சினந் தோன்ருத நிலையில் பொருத தன்மையே இவ்வாருயின் சினத்தொடு போர் செய்யின் என் நிலை என்னுகும் என இராவணன் கருதியதும் இதனுற் புலனும். இத்தகைய பேராற்றலுடையோன் அரசிழந்து காடுபுக்கு அல்லற்படுதற்கு ஏதுவாகிய கொடுமையை விளைத்தாள் என்பான் 'அந்தக் கூனி' எனச் சுட்டினுன். (17)

**7416.** மலையுறப் பெரிய ராய
 வாளெயிற் றரக்கர் தானை
நிலையுறச் செறிந்த வெள்ள
 நூற்றிரண் டெனினு நேரே
குலையுறக் குனித்த வாளி
 குதிரையைக் களிற்றை யானைத்
தலையுறப் பட்ட தல்லா
 லுடல்களிற் றங்கிற் றுண்டோ.

'மலை உறப் பெரியர் ஆய வாள்
 எயிற்று அரக்கர் தானை
நிலையுறச் செறிந்த வெள்ளம்
 நூற்று – இரண்டு எனினும், நேரே
குலை உறக் குளித்த வாளி,
 குதிரையைக் களிற்றை ஆளைத்
தலை உறப் பட்டது அல்லால்,
 உடல்களில் தங்கிற்று உண்டோ?

பொ:—'மலைபோலப் பெரியவர்களான கூரிய பற்களையுடைய அரக்கர் சேனை நிலையாக நெருங்கிய நூற்றிரண்டு வெள்ளத்து அளவை உடையதாயினும், (இராமனல் செலுத்தப்பட்டுக்) குறி தவருமல் கூட்டமாக ஆழப்பதிந்த அம்புகள் (எல்லாம்), குதிரை

களையும் யானைகளையும் காலாட் படைகளையும் தலைகள் (அற்று நிலத்தில்) பொருந்தத் தாக்கியதல்லாமல் உடல்களில் தங்கிய துண்டோ? (இல்லை).

கு:—இராமனுடைய அம்புகள் குறி தவறாமல் கூட்டமாகப் பாய்ந்து சென்று அரக்கர்களையும் அவர்களுடைய யானை, குதிரை, காலாட் படைகளையும் தலைகள் அறுந்து விழும்படி செய்தனவே யன்றி அவர்களின் உடல்களில் தைத்துத் தங்கியதில்லை என இராம னுடைய அம்பின் ஆற்றல் இராவணனால் வியந்து கூறப்பட்டது. குலைஉற - கூட்டமாக. குளித்தல் - ஆழப்பதிதல். (18)

**7417.** போயபி னவன்கை வாளி
யுலகெலாம் புகுவ தல்லால்
ஓயுமென் றுரைக்க லாமோ
வூழிசென் றாலு மூழித்
தீயையுந் தீய்க்குஞ் செல்லுந்
திசையையுந் தீய்க்குஞ் சொல்லும்
வாயையுந் தீய்க்கு முன்னின்
மனத்தையுந் தீய்க்கு மன்னோ.

'போயபின், அவன் கைவாளி,
உலகு எலாம் புகுவது அல்லால்,
ஓயும் என்று உரைக்கலாமோ,
ஊழி சென்றாலும்? ஊழித்
தீயையும் தீய்க்கும்; செல்லும்
திசையையுந் தீய்க்கும்; சொல்லும்,
வாயையும் தீய்க்கும்; முன்னின்,
மனத்தையும் தீய்க்கும் மன்னோ.

பொ:—'(தலைகள் நிலத்தில் விழுமாறு தாக்கிச்) சென்றபின், அந்த இராமனுடைய அம்புகள் உலகமெங்கும் புகுவனவேயன்றி ஊழிக்காலம் சென்றாலும், (பகைவரை அழித்தலாகிய தன் தொழிலில்) ஓய்ந்துவிடுமென்று சொல்லலாகுமோ? (அந்த அம்புகள் யுக முடிவில் தோன்றும்) ஊழித் தீயையும் எரிக்கும்; செல்லுகின்ற திசையையும் எரிக்கும்; (அந்த அம்புகளை இகழ்ந்து) சொல்லுகின்ற வாயையும் எரிக்கும்; (இகழ்ந்து) நினைக்கின், (அந்த) மனத்தையும் எரிக்கும்.

கு :—அவன் கைவாளி உலகெலாம் புகுவதல்லால் ஊழி சென்ருலும் ஓயுமென் றுரைக்கலாமோ என்றியைக்க. இராமனுடைய அம்பின் ஆற்றலைக் குறித்து,

'ஏழு மாமர முருவிக்கீ ழுலகமென் றிசைக்கும்
ஏழு மூடுபுக் குருவிப்பின் னுடனடுத் தியன்ற
ஏழி லாமையால் மீண்டதவ் விராகவன் பகழி
ஏழு கண்டபி னுருவுமா லொழிவதன் றின்னும்'

(கிட்கிந்தா. மராமரப் படலம் - 14) என வரும் பாடல் ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கது. ஊழித்தீ - ஊழிக்கால முடிவில் உலகத்தை அழிக்கத் தோன்றும் தீ. தீய்த்தல் - எரித்தல். அருவப்பொருளான மனத்தையும் தீய்க்கும் என்றது இராமனுடைய அம்பின் கூர்மையை விளக்குதற் பொருட்டாம். (19)

**7418.** மேருவைப் பிளக்கு மென்ருல்
விண்கடந் தேகு மென்ருல்
பாரினை யுருவு மென்ருற்
கடல்களைப் பருகு மென்ருல்
ஆருமே யவற்றி ஞற்ற
லாற்றுமே லனந்த கோடி
மேருவும் விண்ணும் மண்ணுங்
கடல்களும் வேண்டு மன்றே.

'மேருவைப் பிளக்கும் என்ருல்,
விண்கடந்து ஏகும் என்ருல்,
பாரினை உருவும் என்ருல்,
கடல்களைப் பருகும் என்ருல்,
ஆருமே அவற்றின் ஆற்றல் ;
ஆற்றுமேல் அனந்தகோடி
மேருவும் விண்ணும் மண்ணும்
கடல்களும், வேண்டும் அன்றே.

பொ :—(அந்த அம்புகள்) மேருவைப் பிளக்குமென்ருலும், ஆகாயத்தைக் கடந்து அப்பாற் செல்லுமென்ருலும், பூமியினை ஊடுருவிச் செல்லுமென்ருலும், கடல்களை யெல்லாம் பருகு மென்ருலும் (இலக்குப் பொருள்களாகிய) அவற்றின் வன்மை, (அந்த அம்புகளுக்குப்) போதுமானதாகுமா? (அந்த அம்புகளின் ஆற்றலைத்) தாங்க வேண்டுமாயின், பல கோடிக்கணக்கான மேரு

மலையும் விண்ணுலகங்களும் மண்ணுலகங்களும் கடல்களும் வேண்டும்.

கு :—இச் செய்யுளில் இராமனுடைய அம்புகளின் எல்லையில்லா ஆற்றல் கூறப்பட்டுள்ளது. ஆர்தல் - நிறைதல்; போதுமானதா யிருத்தல். ஆற்றுதல் - தாங்குதல். ஆருமே அவற்றின் ஆற்றல் என்பதனை அவற்றின் ஆற்றல் ஆருமே என மாற்றுக. (20)

**7419.** வரிசிலை நாணிற் கோத்து
வாங்குதல் விடுத லொன்றுந்
தெரிகில ரமரரேயு மாரவன்
செய்கை தேர்வார்
பொருசினத் தரக்க ராவி
போகிய போக வென்று
கருதவே யுலக மெங்குஞ்
சரங்களாய்க் காட்டு மன்றே.

'வரிசிலை நாணில் கோத்து
வாங்குதல் விடுதல் ஒன்றும்
தெரிகிலர், அமரரேயும்; ஆர்
அவன் செய்கை தேர்வார்?
"பொருசினத்து அரக்கர் ஆவி,
போகிய போக" என்று
கருதவே உலகம் எங்கும்
சரங்களாய்க் காட்டும் அன்றே.

பொ :—'கட்டமைந்த வில்லை நாணிலே கோத்து வளைத்தலையும், (அந்த வில்லில் அம்புகளைத் தொடுத்து) விடுதலையும், (ஆகிய இவற்றில்) ஒன்றையும் (கண்ணிமைக்காமலிருக்கும்) தேவர்களும் கூட அறிய முடியாதவரானார் (என்றால்), அவ்விராமனது விற்றொழிலை ஆராய்ந்து அறியக்கூடியவர் யார்? "பொருதல் தொழிலில் வல்ல வெகுளிமிக்க அரக்கர்களுடைய உயிர் போகும்படி (இந்த அம்புகள்) செல்வனவாக" என்று நினைத்த அளவிலே, உலக முழுவதும் அம்புகளாய்த் தோன்றும்.

கு :—இராமன் வில்லை வளைத்து அம்பு செலுத்தும் விரைவைப் புலப்படுத்த, 'வரிசிலை நாணிற்கோத்து வாங்குதல் விடுதலொன்றும், தெரிகிலர் அமரரேயும்' என்றார். இமைக்காமல்

பார்க்குந் தன்மையுள்ள தேவர்களுக்கே அவன் விற்ருெழிற்றிறம் தெரியவில்லை என்ருல் மற்று யார்தாம் அறியமுடியும் என்னும் கருத்துப்பட, 'யாரவன் செய்கை தேர்வார்?' என்ருர். போகிய - செய்யிய என்னும் வாய்பாட்டு வினையெச்சம்; போகும் பொருட்டு எனப் பொருள்படும். போக - (இந்த அம்புகள்) செல்வனவாக. இறைவன் நினைத்த மாத்திரத்தில் உலகப் படைப்பு நிகழ்தல்போல இராமன் இந்த அம்புகள் அரக்கர்களுடைய உயிர் போகும்படி செல்வனவாக' என்று நினைத்த அளவிலே, உலக முழுவதும் அம்புகளாய்த் தோன்றும் என்றதனுல் இராமனுடைய மனத்திற்கு ஒப்ப விரைந்து நிகழும் அவன் விற்ருெழிற்றிறனையும் தெய்வத் தன்மையையும் புலப் படுத்திஞராயிற்று. 'கருதவே உலகமெங்குஞ் சரங்களாய்க் காட்டு மன்றே' என்னும் அடியுடன் 'கைந்நின்ற சக்கரத்தன் கருதுமிடம் பொருது' (10: 6: 8) என்னும் திருவாய்மொழி ஒப்பு நோக்கத்தக்கது. (21)

**7420.** நல்லியற் கவிஞர் நாவிற்
பொருள்குறித் தமைந்த ஞானச்
சொல்லெனச் செய்யுட் கொண்ட
தொடையெனத் தொடையை நீக்கி
எல்லையிற் செல்வந் தீரா
விசையெனப் பழுதி லாத
பல்லலங் காரப் பண்பே
காகுத்தன் பகழி மாதோ.

'நல் இயல் கவிஞர் நாவில்
பொருள் குறித்து அமைந்த ஞானச்
சொல் என, செய்யுள் கொண்ட
தொடை என, தொடையை நீக்கி
எல்லையில் செல்வம் தீரா
இசை என, பழுது இலாத
பல் அலங்காரப் பண்பே
காகுத்தன் பகழி மாதோ.

பொ :—ககுத்தனுடைய மரபில் தோன்றிய இராமனுடைய அம்புகள், நல்ல இயல்பினையுடைய புலவர்களது நாவிலே (அப் புலவர்கள் கருதிய) பொருள்களைத் தெளிவாகப் புலப்படுத்திப் பொருந்திய அறிவுமயமாகிய சொல்லைப் போலவும், (அச் சொற்க ளால் இயற்றப்பட்ட) செய்யுள் கொண்டுள்ள தொடை போலவும்,

(அப் பாட்டிலே அமைந்துள்ள) தொடைகளை விட்டு (நிற்கின்ற) அளவு சொல்ல முடியாத (அப் புலவனின்) உணர்ச்சிச் செல்வத்தை விட்டு நீங்காத (அப் பாட்டின்) ஓசை போலவும், குற்றமில்லாத பல வகைப்பட்ட அணிநலங்களாகிய பண்பனைத்தையும் உடையனவாய் விளங்கின.

கு :—காகுத்தன் பகழி சொல் என, தொடை என, இசை என, பல் அலங்காரப் பண்பினவாய் விளங்கின என முடிக்க. நல்ல கவிஞரின் உள்ளத்திலே தோன்றுகின்ற கருத்துக்களைத் தாங்கி அவருடைய நாவினின்றும் வெளிப்பட்ட சொற்கள் புகழுடன் நெடுங்காலம் விளங்குகின்றன. இராமனுடைய வில்லில் தொடுக்கப் பட்ட அம்புகள் அவன் குறித்த இலக்கிலே சென்று, அவனுல் தொடுக்கப்பட்டமையின் புகழுடன் நெடுங்காலம் விளங்கும் சிறப் பைப் பெறுகின்றன. சொற்கள் பொருட் பொருத்தமுறத் தொடை யாக அமைந்து புலவன் கருதிய கருத்தை விளக்குகின்றன. இராமன் விடுத்த அம்புகள் ஒன்றேடொன்று தொடர்ச்சியாகச் சென்று, பகை வரை அழித்தலாகிய அவன் கருத்தை முற்றுவிக்கின்றன. செய் யுளிலே அமைந்த ஓசை ஒழுங்கு, செய்யுளால் அறிவிக்கப்படும் பொருளுக்கு அப்பாற்பட்டு விளங்கும் புலவனின் உணர்ச்சியைப் புலப்படுத்துகின்றது. இராமனுடைய அம்புகள் தொடர்ச்சியாகச் சென்று, புதிய ஆற்றலைப் பெற்றுப் பகைவர்களை அழிக்கின்றன. செய்யுளில் அமைந்துள்ள அணிகள் அதனை விளக்கமுடையதாக்கி யாவரும் விரும்பிப் படிக்கும் வண்ணம் செய்கின்றன. பகைவரைத் தாக்கி அழிக்கின்ற இராமனுடைய அம்புகளின் நுட்பப் போர் முறைகள் அதனைக் காணும் யாவரும் போரில் ஈடுபடும் விருப்பத்தை உண்டாக்குகின்றன. இவ்வாற்ருன் காகுத்தன் பகழி நல்லியற் கவிஞர் நாவில் அமர்ந்த சொல் எனவும், செய்யுள் கொண்ட தொடை எனவும், இசை எனவும் (அமைந்து), பல் அலங்காரப் பண்புகளையுடையதாய் விளங்கியது என்பதாம். நாமம் - புகழ். மாதோ - அசை. (22)

**7421.** இந்திரன் குலிச வேலு
மீசன்கை யிலைமூன் றென்னு
மந்திர வயிலு மாயோன்
வளையெஃகின் வரவுங் கண்டேன்

அந்தர நீளி தம்மா
தாபத னம்புக் காற்ரு
நொந்தனென் யான லாதார்
யாரவை நோற்க கிற்பார்.

இந்திரன் குலிச வேலும்,
ஈசன்கை இலைமூன்று என்னும்
மந்திர அயிலும், மாயோன்
வளை எஃகின் வரவும் கண்டேன்;
அந்தரம் நீளிது, அம்மா!
தாபதன் அம்புக்கு ஆற்ரு
நொந்தனென் யான் அலாதார்
யார் அவை நோற்ககிற்பார் ?

பொ :—'(யான் திக்கு விசயம் செய்த காலத்தில்) இந்திரனுடைய குலிசப் படையையும், சிவபெருமான் கையிலுள்ள மூன்று இலை வடிவு கொண்ட மந்திரத்தின் ஆற்றலைப் பொருந்திய சூலப் படையையும், திருமாலினுடைய வளைந்த சக்கரப் படையின் வருகையையும் கண்டுள்ளேன்; (அவற்றிற்கும் இராமன் அம்பிற்கும் உள்ள) வேற்றுமை மிகவும் பெரிது; (அம் மூவர் படைகளையும் தாங்கிய) யானே அம் முனிவனுகிய இராமனது அம்புகளின் ஆற்றலைத் தாங்க மாட்டாது வருந்தினேன் என்ருல் என்னைத் தவிர வேறு யார் அவைகளை ஏற்றுத் தாங்கவல்லார்? [ஒருவருமில்லை என்றபடி].

கு :—இந்திரன், சிவன், மாயோன் ஆகிய மூவரையும் வென்ற பேராற்றலுடைய யானே இத் தாபதனுடைய அம்பினுல் நொந்தேனுயின் இவ்வம்புகளின் வரவினை அஞ்சாது எதிர்த்துத் தாங்கும் ஆற்றலுடையார் யாருமிலர் என்பான், 'தாபதன் அம்புக்கு ஆற்ரு நொந்தனென் யானலாதார் யார் அவை நோற்ககிற்பார்?' என்ருன். நோற்றல் - பொறுத்தல்; எதிர்த்துத் தாங்குதல். (23)

**7422.** பேயிருங் கணங்க ளோடு
சுடுகளத் துறையும் பெற்றி
யேயவன் ரேள்க ளெட்டு
மிந்திர னிரண்டு தோளும்

மாயிரு ஞால முற்றும்
வயிற்றிடை வைத்த மாய
னுயிரந் தோளு மன்னுன்
விரலொன்றி னுற்ற லாற்ரு.

'பேய் இருங்கணங்களோடு சுடு
களத்து உறையும் பெற்றி
ஏயவன் தோள்கள் எட்டும்,
இந்திரன் இரண்டு தோளும்
மாஇரு ஞாலம் முற்றும்
வயிற்றிடை வைத்த மாயன்
ஆயிரம் தோளும், அன்னுன்
விரல் ஒன்றின் ஆற்றல் ஆற்ரு.

பொ :—'அந்த இராமனுடைய ஒரு விரலின் வலிமையைப் பெரிய பேய்க் கூட்டங்களோடு சுடுகாட்டில் வாழும் தன்மையினை யுடைய சிவபெருமானுடைய எட்டுத் தோள்களும், இந்திரனுடைய இரண்டு தோள்களும், மிகப் பெரிய நிலவுலக முழுவதையும் தன் வயிற்றில் அடக்கிய திருமாலின் ஆயிரம் தோள்களும் தாங்கும் வலிமையுடையன ஆகமாட்டா.

கு :—சிவன் எட்டுத் தோள்களும் இந்திரன் இரண்டு தோளும் மாயவன் ஆயிரம் தோளும் அன்னுன் விரல் ஒன்றின் ஆற்றல் ஆற்ரு என்பதனுல் இராமனின் பேராற்றல் இராவணனுல் புகழப்பட்டுள் ளமை ஈண்டு நோக்கத்தக்கது, ஆற்றுதல் - வல்லமையுடைய தாதல். (24)

7423. சீர்த்தவீ ரியரா யுள்ளார்
செங்கண்மா லெனினும் யானக்
கார்த்தவீ ரியனை நேர்வா
ருளரெனக் கருத லாற்றேன்
பார்த்தபோ தவனு மற்றத்
தாபதன் தம்பி பாதத்
தார்த்ததோர் துகளுக் கொவ்வா
னுரவற் காற்ற கிற்பார்.

'சீர்த்த வீரியராய் உள்ளார், செங்கண்
மால் எனினும், யான் அக்
கார்த்த வீரியனை நேர்வார்
உளர் எனக் கருதல் ஆற்றேன்;
பார்த்தபோது அவனும், மற்று
அத் தாபதன் தம்பி பாதத்து
ஆர்த்தது ஓர்துகளுக்கு ஒவ்வான்;
ஆர் அவற்கு ஆற்றகிற்பார்?

பொ:—'சிறப்புற்ற வீரமுள்ளவர்களாய் இருப்பவர்களில் சிவந்த கண்களையுடைய திருமாலேயாயினும், யான் அந்தக் கார்த்த வீரியார்ச்சுனனைப் போல்வார் உள்ளார் என்று நினைக்கமாட்டேன்; பார்த்த அளவில் அக்கார்த்த வீரியார்ச்சுனனும், அம்முனிவனாகிய இராமனுடைய தம்பியின் பாதத்தில் ஒட்டிப் பொருந்திய ஒரு தூசுக்கு ஒப்பாகமாட்டான் (என்றால்) அந்த இராமனுக்கு முன் எதிர்த்து நிற்க வல்லவர் யார்?

கு:—திக்கு விசயத்தில் தேவர்களை யெல்லாம் வென்று பெருஞ் செருக்குற்ற இராவணன் கார்த்தவீரியனோடு போர் செய்தபோது அவனால் தோல்வியுற்றுச் சிறையிலிடப்பட்டு அவனது போர் வீரத்தை நேரில் கண்டறிந்தவனாதலின், அக் கார்த்த வீரியனுக்குத் திருமாலும் போர்த்திறத்தில் ஒப்பாகமாட்டான் என்பது தோன்றச் 'செங்கண்மாலெனினும் யானக், கார்த்த வீரியனை நேர்வாருள ரெனக் கருதலாற்றேன்' என்றான். துகள்-தூசு. இலக்குவனுடைய வலிமையே இவ்வாறாயின் இராமனுக்கு முன் எதிர்த்து நிற்க வல்லார் ஒருவருமில்லை என்பது பட, 'யார் அவற்கு ஆற்றகிற்பார்?' என்றான். ஆற்றகிற்பார் - எதிர்த்து நிற்க வல்லவர். (25)

7424. முப்புர முருங்கச் சுட்ட
மூரிவெஞ் சிலையும் வீரன்
அற்புத வில்லுக் கையா
வம்பெனக் கொளலு மாகா
ஒப்புவே றுரைக்க லாவ
தொருபொரு ளில்லை வேதம்
தப்பின போது மன்னன்
றனுவுமிழ் சரங்க டப்பா.

'முப்புரம் முருங்கச் சுட்ட மூரி வெஞ்சிலையும், வீரன்
அற்புத வில்லுக்கு, ஐயா! அம்பு எனக்கொளலும் ஆகா;
ஒப்பு வேறு உரைக்கல் ஆவது ஒரு பொருள் இல்லை; வேதம்
தப்பினபோதும், அன்னோன் தனு உமிழ் சரங்கள் தப்பா.

பொ :—'ஐயனே, மூன்று புரங்களையும் அழியும்படி எரித்த (மா மேருவாகிய) வலிமை பொருந்திய கொடிய வில்லும் இராமனுடைய அதிசயத் தன்மை வாய்ந்த வில்லுக்கு அம்பாகக் கொள்ளுதற்கும் தகுதியுடையதாகாது, (ஆகவே இராமனுடைய வில்லுக்கு) ஒப்பாக வேறொன்றை எடுத்துச் சொல்லக் கூடியதான ஒரு பொருளில்லை; வேதங்கள் கூறுகின்ற மெய்ப் பொருள்கள் பொய்த்துப் போவதாயினும் அந்த இராமனுடைய வில் வெளிப்படுத்துகின்ற அம்புகள் (அவன் எண்ணிய செயலைச் செய்வதற்குத்) தவறமாட்டா.

கு :—முருங்குதல் - அழிதல். முப்புரங்களை அழித்தற்குச் சிவன் ஏந்திய மாமேருவாகிய வில்லும் இராமனுடைய வில்லுக்கு அம்பாக அமைதற்குக் கூடத் தகுதியற்றது என்பதனாலும், அதற்கு ஒப்பாகச் சொல்லக்கூடிய பொருள் வேறொன்றில்லை என்பதனாலும் இராவணன் இராமனுடைய வில்லின் பெருமையையும் ஆற்றலையும் புலப்படுத்தினானாயிற்று. இராமனுடைய அம்புகள் அவன் குறித்த செயலைத் தவறாது ஆற்றும் என்பதுபட, 'வேதந் தப்பின போதும் அன்னோன் தனு உமிழ் சரங்கள் தப்பா' எனக் குறித்தான். வேதம் தப்பாது என்பது, 'நாஅல்வேதம் நெறிதிரியினும்' (புறம். 2 : 18) என்பதனால் உணரப்படும். (26)

**7425.** உற்பத்தி யயனே யொக்கு
மோடும்போ தரியே யொக்குங்
கற்பத்தி லரனே யொக்கும்
பகைஞரைக் கலந்த காலைச்
சிற்பத்தி னம்மாற் பேசச்
சிறியவோ வென்னைத் தீராத்
தற்பத்தைத் துடைத்த வென்றாற்
பிறிதொரு சான்று முண்டோ.

'உற்பத்தி அயனே ஒக்கும்;
ஓடும்போது அரியே ஒக்கும்;
கற்பத்தில் அரனே ஒக்கும்,
பகைஞரைக் கலந்த காலை;

சிற்பத்தின் நம்மாற் பேசச்
சிறியவோ ? என்னைத் தீராத்
தற்பத்தைத் துடைத்த என்ருல்,
பிறிது ஒரு சான்றும் உண்டோ ?

பொ :—'(அந்த இராமனுடைய அம்புகள் வில்லினின்று) தோன்றும்போது (நான்கு முகங்களேயுடைய) பிரமனை ஒக்கும் ; (பகைவரை நோக்கி) ஓடும்போது (ஆயிரம் முகங்களேயுடைய) திருமாலை ஒக்கும் ; பகைவர்களைச் சேர்ந்தபோது ஊழிக் காலத்துத் தோன்றுகின்ற உருத்திரனை ஒக்கும் ; (அந்த அம்புகள்,) செய்யும் தொழில் திறமையில் நம்மால் சொல்லப்படும் அளவுக்குச் சிறியனவோ ? (அவை) என்னுடைய நீங்காத செருக்கினையே நீக்கின என்ருல் (அவற்றின்) வல்லமைக்கு வேருெரு சான்றும் வேண்டுமோ ?

கு :—இராமனுடைய அம்புகள் நான்கு முகங்களையுடைய பிரமனைப் போலப் புறப்பட்டு, ஆயிரம் முகங்களையுடைய திருமாலைப் போலப் பரவிச் சென்று, ஊழிக்காலத்து உலகையழிக்கும் உருத்திரனைப்போலப் பகைவரை அழிக்கும் என்றதனுல் அவை மும்மூர்த்திகள் போல விளங்கிச் செயலாற்றும் திறன் குறிக்கப் பட்டது. கற்பம் - உலகம் அழியுங் காலம். சிற்பம் - தொழில் திறமை, தன்னுடைய செருக்கையே அடக்கியதனுல் அவற்றின் வல்லமைக்குப் பிறிதொரு சான்று வேண்டியதில்லை என்பான் ' பிறிதொரு சான்றும் உண்டோ ?' என்ருன். (27)

**7426.** குடக்கதோ குணக்க தேயோ
கோணத்தின் பால தேயோ
தடத்தபே ருலகத் தேயோ
விசும்பதோ வெங்குந் தானே
வடக்கதோ தெற்க தோவென்
றுணர்ந்திலென் மனிதன் வல்வில்
இடத்ததோ வலத்த தோவென்
றுணர்ந்திலென் யானு மின்னும்.

' குடக்கதோ ? குணக்கதேயோ ?
கோணத்தின் பாலதேயோ ?
தடத்த பேர் உலகத்தேயோ ?
விசும்பதோ ? எங்கும் தானே ?

வடக்கதோ ? தெற்கதோ ? என்று
உணர்ந்திலென் – மனிதன் வல்வில்—
இடத்ததோ ? வலத்ததோ ? என்று
உணர்ந்திலேன், யானும் இன்னும்.

பொ :—'மனிதனான இராமன் தாங்கியுள்ள வலிய வில், மேற்றிசையிலுள்ளதோ ? கிழக்குத் திசையிலுள்ளதோ ? மூலேத் திசையிலுள்ளதோ? அகன்ற பெரிய நிலவுலகத்திலுள்ளதோ ? வானத்திலுள்ளதோ ? எங்குந்தான் உள்ளதோ? வடக்குத் திசையிலுள்ளதோ ? தெற்குத் திசையிலுள்ளதோ என்று உணர்ந்தேனில்லே; (அன்றியும் அவ்வில்) அவனுடைய இடப் பக்கத்திலுள்ளதோ? வலப் பக்கத்திலுள்ளதோ என்று யானும் இன்னும் உணர்ந்திலேன்.

கு :—இராமன் வில்லுடன் எல்லாத் திசைகளிலும் சென்று அம்பு மழை சொரிதலால், அவ்வில்லிலிருந்து வெளிப்படும் அம்புகள், தமக்கு நிலேக்களனான வில்லேயும் திசையையும் மறைத்தன என்பதாம். இவ்வாறு எல்லாத் திசைகளிலும் சென்று போர் செய்தலேச் சாரிகை வருதல் என்பர். தடத்த என்பது பெருமை எனப் பொருள்படும் தட என்னும் உரிச்சொல் அடியாகப் பிறந்த பெயரெச்சம். உலகத்ததேயோ எனற் பாலது விகாரப்பட்டு உலகத்தேயோ என நின்றது. (28)

**7427.** ஏற்றமொன் றில்லே யென்ப
தேழைமைப் பால தன்றே
ஆற்றல்சால் கலுழ னேதா
னாற்றுமே யமரி னாற்றல்
காற்றையே மேற்கொண் டானே
கனலேயே கடாவி னானே
கூற்றையே யூர்கின் றானே
குரங்கின்மேற் கொண்டு நின்றான்.

'ஏற்றம் ஒன்று இல்லே என்பது
ஏழைமைப் பாலது அன்றே ?
ஆற்றல்சால் கலுழனே தான்
ஆற்றுமே அமரின் ஆற்றல் !—
காற்றையே மேற்கொண்டானே ?
கனலேயே கடாவினானே ?
கூற்றையே ஊர்கின்றானே ?
குரங்கின்மேல் கொண்டு நின்றான்.

பொ :—'(இராமன்) காற்றையே ஊர்தியாகக் கொண்டானே? நெருப்பினையே (ஊர்தியாகக் கொண்டு) செலுத்தினனே? எமனையே (ஊர்தியாகக் கொண்டு) செலுத்துகின்றானே? (இவற்றுள் ஒன்றை யும் அவன் ஊர்தியாகக் கொண்டானல்லன்). ஒரு குரங்கின்மேல் தான் ஏறிக்கொண்டுள்ளான். (அந்த ஊர்தியாகிய குரங்கு) போரில் செய்யும் ஆண்மைச் செயல்களை வலிமை மிக்க கருடன்தான் செய்ய வல்லதோ? (இவ்வாறிருக்க, அவனுக்குப் போர்க்களத்தில் செலுத்து தற்குரிய தேர் முதலிய) ஊர்தி ஒன்றும் இல்லை எனக் கூறுவது அறி யாமையின்பாற்பட்டதன்றோ?

கு :—ஏற்றம் - ஊர்தி; வாகனம். 'ஏறு ஏற்றமாவேறி எண் கணனும் பின் படர' (தேவாரம் - 4-19-4) ஏழைமை - அறிவின்மை. கலுழன் – கருடன். இராவணன் திக்கு விசயம் செய்தபோது திருமாலைத் தாங்கிய கருடனின் ஆற்றலை முன்பே கண்டுள்ளா னாதலின், இப்போது கண்ட அநுமனின் ஆற்றலோடு ஒப்பிட்டு நோக்கி, 'ஆற்றல்சால் கலுழனேதான் ஆற்றுமே அமரின் ஆற்றல்' எனக் குறிப்பிட்டான். பகைவர்மேற் செல்லும் விரைவு பற்றிக் காற்றும், வெகுளி பற்றித் தீயும், கொல்லும் தொழில் பற்றிக் கூற்றும் அநுமனுக்கு உவமையாகக் கூறப்பட்டன. யானை குதிரை தேர் என்னும் மூவகைப் படைகளின் வலிமையையும் அவனுக்கு ஊர்தியாகிய வானரம் ஒன்றே பெற்றிருத்தலின், பகைவரொடு பொருங்காலத்து இன்றியமையாது வேண்டப்படும் தேர் முதலிய ஊர்திகளில் ஒன்றும் இராமனுக்கு இல்லை என அவனது படை வலியைக் குறைத்து எண்ணுவது மிகவும் பேதைமையாம் என்பான், 'ஏற்ற மொன்றில்லை யென்ப தேழைமைப் பாலதன்றே' என்று கூறினான். (29)

**7428.** போயினித் தெரிவ தென்னே
பொறையின லுலகம் போலும்
வேயெனத் தகைய தோளி
யிராகவன் மேனி நோக்கித்
தீயெனக் கொடிய வீரச்
சேவகச் செய்கை கண்டால்
நாயெனத் தகுது மன்றே
காமனு நாமு மெல்லாம்.

'போய் இனித்தெரிவது என்னே ?
பொறையினுல் உலகம் போலும்
வேய் எனத்தகைய தோளி
இராகவன் மேனி நோக்கி,
தீ எனக் கொடிய வீரச்
சேவகச் செய்கை கண்டால்
நாய் எனத் தகுதும் அன்றே
காமனும் நாமும் எல்லாம்.

பொ :—(நாம் போருக்குச்) சென்று இனித் தெரிந்து கொள்ள வேண்டியது என்ன இருக்கிறது? பொறுமையினுல் பூமிதேவியை ஒத்திருப்பவளான மூங்கில் போன்ற தோள்களையுடைய சீதை, இராமனுடைய உடம்பைப் பார்த்து, நெருப்புப் போலக் கொடிய (அவனுடைய) மிகுந்த வீரச் செய்கையையும் கண்டாளாயின், (அவள் காதலனுகிய இராமனெடு ஒப்பிட்டு நோக்கும் நிலையில் அவளுக்கு) மன்மதனும் நாமும் ஆகிய யாவரும் (இழிந்த) நாயென்று சொல்லத்தகும் இயல்புடையோம் அல்லவா ?

கு :—நேற்று நிகழ்ந்த போரில் யாவும் விளங்கியனவாதலின் இனி அறிந்துகொள்ள வேண்டியது ஒன்றுமில்லை என்பான், 'போயினித் தெரிவதென்னே' என்றுன். தோளி - தோளையுடையவள்; ஈண்டுச் சீதையை உணர்த்திற்று. இகர விகுதி வினைமுதற் பொருள் குறித்து நின்றது. சீதை, இராகவன் மேனியின் அழகோடு ஒத்து நோக்கில் காமன் நாயெனத் தகுவன் என்றும், அவனுடைய வீரச் செய்கை நோக்கில் இராவணனுகியதான் நாய் எனத் தகுவன் என்றும் இராவணன் இராமனது அழகையும் வீரத்தையும் முறையே வியந்து பாராட்டினன் என்பதாம். தீ அழிக்கும் இயல்புடையதாதலின் இராமனுடைய வீரத்திற்கு அதனை உவமையாகக் கூறினுன். சேவகம் - வீரம். வீரச்சேவகம் என்பது ஒரு பொருட் பன்மொழியாய் ஈண்டு மிகுந்த வீரத்தை உணர்த்தி நின்றது. பேரரசனுதலின் இராவணன் தன் பெருமை தோன்றத் தன்னையே நாம் என உயர்த்துக் கூறினுன்; இச்செய்யுளில் இராவணனுல் இராமனின் அழகும் ஆண்மையும் பாராட்டப்படுகின்றன. (30)

**7429.** வாசவன் மாயன் மற்றை
மலருளோன் மழுவா ளங்கை
யீசனென் றினைய தன்மை
யிளிவரு மிவரா லன்றி

நாசம்வந் துற்ற போது
நல்லதோர் பகையைப் பெற்றேன்
பூசல்வண் டுறையுந் தாரா
யிதுவிங்குப் புகுந்த தென்றான்.

'வாசவன், மாயன், மற்றை
மலருளோன், மழுவாள் அங்கை
ஈசன், என்று இனைய தன்மை
இளிவரும் இவரால் அன்றி,
நாசம் வந்து உற்றபோதும்,
நல்லது ஓர் பகையைப் பெற்றேன்;—
பூசல் வண்டு உறையும் தாராய்! -
இது இங்குப் புகுந்தது' என்றான்.

பொ :—'ஆரவாரிக்கின்ற வண்டுகள் தங்குகின்ற மாலையை உடையவனே. இந்திரன், திருமால், மற்றும் உள்ளவரான தாமரை மலரிலுள்ள பிரமன், மழுப்படையை அழகிய கையிலே கொண்ட சிவபெருமான் என்று சொல்லப்படுகின்ற இத்தன்மையினையுடைய (எனக்குத் தோற்று) இகழ்ச்சியடைந்த இந்தத் தேவர்களால் அல்லாமல், எனக்கு அழிவு வந்து சேர்ந்த காலத்திலும் சிறந்ததொரு பகைவனைப் பெற்றேன். இந்தச் செயல் இவ்விடத்தில் நிகழ்ந்தது' என்று இராவணன் (மாலியவானிடம்) கூறினன்.

கு :—வாசவன் - இந்திரன். மழுவாள் - மழுப்படை. இளிவருதல் - இகழ்ச்சிக்கு ஆளாதல். இராவணன் திக்கு விசயம் செய்த பொழுது இந்திரன், திருமால், பிரமன், ஈசன் ஆகியோரையெல்லாம் வென்று விட்டானாதலின், 'இளிவரும் இவர்' என்றும், இவர்களால் தனக்கு அழிவு வாராமல் இவர்களினும் ஆண்மை மிகுந்த இராமனால் அழிவு வருதற்குத்தான் மகிழ்கின்றேன் என்பான், 'நாசம் வந்துற்ற போதும் நல்லதோர் பகையைப் பெற்றேன்' என்றும் கூறினான். புகுதல் - நிகழ்தல். தன்னினும் மிகச் சிறந்த வீரன் ஒருவனால்தான் தான் அழியவேண்டும் என எண்ணும் இராவணனது வீர உள்ளம் பாராட்டற்குரியது. (31)

இச் செய்யுளையடுத்து, 52ஆம் எண்ணுள்ள அச்சுப் புத்தகத்தில் பின்வருமாறு மூன்று மிகைப்பாடல்கள் காணப்படுகின்றன.

7429 (௧) என்றெடுத் துரைத்தோன் பின்னும்
உளம்கனன் றினைய சொல்வான்
வன்திறல் மனிதன் வெம்போர்
எவரினும் வலியனேனும்

பொன்றுதல் இல்லா என்னைப்
போர்வெலற் கெளிதோ காலம்
ஒன்றல உகங்கள் கோடி
உடற்றினு மொழிவ துண்டோ?

(b) மானிடன் என்றே நாணி
கடவுள்மாப் படைகள் யாதும்
யானெடுத் தேகல் விட்டேன்
இன்றை வெஞ்சமரம் போக
தானமர் அழிந்தே னென்னத்
தக்கதோ வென்றான் அந்த
மானமில் அரக்கன் பின்னர்
மாலியவானும் சொல்வான்.

(c) முப்புர மெரித்தோ னாதி
தேவரும் முனிவர் தாமும்
தப்பற உணர்தற் கெட்டாத்
தருமமே கைவில் ஏந்தி
இப்பிறப் பிராம னென்றே
எம்மனோர் கிளையை எல்லாம்
துப்பற முருக்க வந்தான்
என்றசொல் பிழைப்பதுண்டோ.

## மாலியவானின் அறிவுரை

7430. முன்னுரைத் தேனை வாளா
முனிந்தனை முனியா வும்பி
யின்னுரைப் பொருளுங் கேளா
யேதுவுண் டெனினு மோராய்
நின்னுரைக் குரைவே றுண்டோ
நெருப்புரைத் தாலு நீண்ட
மின்னுரைத் தாலு மொவ்வா
விளங்கொளி யலங்கல் வேலோய்.

'முன் உரைத்தேனை வாளா
முனிந்தனை; முனியா உம்பி
இன் உரைப்பொருளும் கேளாய்;
ஏது உண்டு எனினும், ஓராய்;

நின் உரைக்கு உரை வேறு உண்டோ?
நெருப்பு உரைத்தாலும், நீண்ட
மின் உரைத்தாலும், ஒவ்வா
விளங்கு ஒளி அலங்கல் வேலோய்!

பொ:—'நெருப்பை (உவமையாகச்) சொன்னாலும் நீண்ட மின்னலை (உவமையாகச்) சொன்னாலும் ஒப்பாகாத, விளங்குகின்ற ஒளியையுடைய (வெற்றி) மாலை சூடிய வேற்படையை யுடையோனே, (போருக்குச் செல்வதற்கு) முன்னே (இராமனுடைய ஆற்றலை எடுத்துக்) கூறிய என்னை வீணே கோபித்தாய்; (என்றுமே) கோபிக்காத உன் தம்பியாகிய வீடணனுடைய இனிய சொற்பொருளையும் கேளாது விட்டனை; (இவ்வாறு நாங்கள் கூறுதற்குக்) காரணங்கள் உண்டு என்று கூறியபோதும் (அவற்றை) ஆராயாது விட்டாய்; உன்னுடைய சொற்களுக்கு மாறான உரைகளும் உண்டோ? (ஒருவரும் மறுத்துச் சொல்லார்கள் என்றபடி).

கு:—முன்பு தான் கூறிய அறிவுரைகளைக் கேளாது சினந்தானாதலின், 'முன்புரைத்தேனை வாளா முனிந்தனை' என்றான். வீடணன் கூறிய அறிவுரை மந்திரப் படலத்தில் வரும் 66 முதல் 99 வரையுள்ள செய்யுட்களால் விளங்கும். நந்தி நவின்ற சாபத்தாலும், தீக்குளித்த வேதவதி, 'நோய் உனக்கு யான்' எனக் கூறிய சாபத்தாலும் (மந்திரப் படலம் 80, 81) இராவணனுக்குக் கேடு வரும் என்று வீடணன் ஏதுக்காட்டி உரைக்கவும் அதனை இராவணன் கேளாமையை 'ஏது உண்டெனினும் ஓராய்' என்பதனால் புலப்படுத்தினான். உறுதிபயக்கும் முறையில் இடித்துரைக்கும் அமைச்சர் முதலியோருடைய அறிவுரைகளைப் புறக்கணித்து வெகுளாது ஏற்றுக்கொள்ளும் மனமின்றி அவர்களை வெகுண்டு புறக்கணிக்கும் இயல்பினையுடைய நின் சொல்லுக்கு அஞ்சாது எதிர்மாற்றம் கொடுக்கவல்லார் ஒருவரும் இலர் என்பான், 'நின் உரைக்கு உரை வேறுண்டோ' என்றான். (32)

**7431.** உளைவன வெனினு மெய்ம்மை
யுற்றவர் முற்று மோர்ந்து
விளைவன சொன்ன போதுங்
கொள்கிலை விடுதி கண்டாய்

கிளைதரு சுற்றம் வெற்றி
கேண்மைநங் கல்வி செல்வங்
களைவருந் தானை யோடுங்
கழிவது காண்டி யென்ருன்.

'உளைவன எனினும், மெய்ம்மை
உற்றவர், முற்றும் ஓர்ந்து
விளைவன சொன்னபோதும்
கொள்கிலை; விடுதி கண்டாய்;
கிளைதரு சுற்றம், வெற்றி,
கேண்மை, நம்கல்வி, செல்வம்,
களைவு அருந்தானையோடும்
கழிவது காண்டி' என்ருன்.

பொ :—'(மனத்திற்கு) வருத்தத்தை விளைவிப்பனவாயிருந்தாலும், உண்மையான உறவினர் முழுவதும் உணர்ந்து மேல் நிகழப் போவனவற்றை (ஆராய்ந்து) கூறியபோதும் ஏற்றுக்கொள்ளாயாய் விடுகின்ருய்; (அரக்கர்களாகிய) நம்முடைய பெருகி வருகின்ற சுற்றத்தாரும் வெற்றியும் நட்பும் கல்வியும் செல்வமும் வெல்லுதற்கரிய சேனைகளோடும் இறந்துபடுவதை நீ காணப் போகின்ருய்' என்று (மாலியவான்) கூறினுன்.

கு :—மெய்ம்மை உற்றவர் முற்றும் ஓர்ந்து விளைவன சொன்ன போது உளைவன எனினும் கேட்கவேண்டுமென்பது, 'செவி கைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை வேந்தன், கவிகைக்கீழ்த் தங்கும் உலகு' (திருக்குறள் - 389) என்பதனுல் அறியப்படும். உளைதல் - வருந்துதல். கண்டாய் - முன்னிலை அசை. விளைவன சொன்ன போதும் கேளா தொழிந்தனையாதலின் சுற்றம் முதலாயின தானையோடும் அழிந்தொழிதலை நீ நேரிலேயே காணப்போகின்ருய் என்பான், 'கிளைதரு சுற்றம் வெற்றி கேண்மை நம் கல்வி செல்வம், களைவரும் தானையோடும் கழிவது காண்டி' என்ருன். (33)

இச் செய்யுளையடுத்து 52ஆம் எண்ணுள்ள அச்சுப் புத்தகத்தில் பின்வருமாறு ஒரு மிகைப் பாடல் காணப்படுகின்றது.

7431 (a) ஆதலின் இறைவ கேட்டி
அவன் பெருந் தேவிஆன
மாதினை விடுத்து வானோர்
முனிவரர் வருந்தச் செய்யும்

தீதினை வெறுத்துத் தேவர்
தேவனும் சிலை இராமன்
பாதமே பணியின் நம்பால்
பகைவிடுத்து அவன்போம் என்றான்.

## அப்போது மகோதரன் வந்து இராவணனுக்குச் சொல்லிய உறுதிமொழிகள்

**7432.** ஆயவ னுரைத்த லோடு
மப்புறத் திருந்தா னான்ற
மாயைகள் பலவும் வல்ல
மகோதரன் கடிதின் வந்து
தீயெழ நோக்கி யென்னிச்
சிறுமைநீ செப்பிற் றென்னா
ஓய்வுறு சிந்தை யானுக்
குருதபே ருறுதி சொன்னான்.

ஆயவன் உரைத்தலோடும்
அப்புறத்து இருந்தான், ஆன்ற
மாயைகள் பலவும் வல்ல
மகோதரன், கடிதின் வந்து,
தீஎழ நோக்கி, 'என் இச்
சிறுமை நீ செப்பிற்று?' என்னா,
ஓய்வுறு சிந்தையானுக்கு உருத
பேர் உறுதி சொன்னான்.

பொ :—அந்த மாலியவான் சொன்னவுடனே அப்புறத்திலே இருந்தவனான, நிறைந்த மாயைகள் பலவற்றிலும் வல்ல மகோதரன் விரைந்து வந்து தீப்பொறி பறக்கும்படியாக (மாலியவானை)ப் பார்த்து, 'நீ இப்படிச் சிறுமைதரும் மொழிகளைக் கூறியது என்ன காரணம்' என்று (அவனை) அதட்டி, ஓய்ந்த மனத்தைக் கொண்டவனான இராவணனுக்கு நன்மை பயவாத உறுதிமொழிகளைக் கூறினான்.

கு :—ஆன்ற - நிறைந்த. என் இச் சிறுமை நீ செப்பிற்று என்னா என்பதனை நீ இச் சிறுமை செப்பிற்று என் என்னா என இயைக்க. செப்பிற்று - சொல்லியது. போரில் இராவணன் தோற்றமையால், 'ஓய்வுறு சிந்தையான்' ஆயினன். உருத - நன்மை

பயவாத. தளர்ச்சியுற்ற இராவணனுக்கு மகோதரன் கூறும் உறுதியுரைகள் அந்நிலையில் அவனுக்குப் பேருறுதி பயப்பனபோன்று தோன்றினும் உண்மையான் நோக்குமிடத்து, அவை அவனது தளர்ச்சியைப் போக்கி நலந்தருதற்கு உரிய அல்லாத பயனற்ற வெற்றுரைகளாய் அமைந்தன என்பார், 'உருதபேருறுதி' என்றார். (34)

**7433.** நன்றியீ தென்று கொண்ட
நயத்தினை நயந்து வேறு
வென்றியே யாக மற்றுத்
தோற்றுயிர் விடுத லாக
வொன்றிலே நிற்றல் போலா
முத்தமற் குரிய தொல்கிப்
பின்றுமே லவனுக் கன்றே
பழியொடு நரகம் பின்னை.

"நன்றி ஈது" என்று கொண்ட
நயத்தினை நயந்து, வேறு
வென்றியே ஆக, மற்றுத்
தோற்று உயிர் விடுதல் ஆக,
ஒன்றிலே நிற்றல் போலாம்,
உத்தமற்கு உரியது? ஒல்கிப்
பின்றுமேல், அவனுக்கு அன்றே,
பழியொடு நரகம் பின்னை?

பொ:—உத்தமனுக்கு உரிய செயல், இது நன்மையைத் தருவது என்று கருதி மேற்கொண்ட கோட்பாட்டையே விரும்பிச் சிறந்த வெற்றியே விளைவதாயினும், அதற்கு மாருக(ப் பகைவர்க்கு)த் தோற்று உயிர்விடும் நிலையே நேர்வதாயினும், (இவ்விரண்டையும் பொருட்படுத்தாமல் தான் மேற்கொண்ட அந்த) ஒரு செயலிலே உறுதியாக நிற்றலாம். மனம் தளர்ந்து (தான் மேற்கொண்ட செயலைச் செய்யப்) பின் வாங்குவானுனல், அவனுக்கென்று அமைந்தன அல்லவா (இப் பிறப்பில்) பழியும் மறு பிறப்பில் நரகமும்?

கு:—நன்றி - நன்மை. நயம் - கோட்பாடு. இது நன்மை தருவது என்று ஒரு கொள்கையை மேற்கொண்டால் அதனல் வெற்றி யுண்டாவதாயினும் தோல்வி யுண்டாவதாயினும் அச்

கொள்கையிலேயே ஊன்றி நிற்றல் உத்தமனுக்குரிய செயல் என்ற தனால் இராவணன் வெற்றி தோல்விகளைப் பற்றிக் கவலையுருமல் தான் முன்பு கொண்ட கொள்கையிலேயே உறுதியாக இருக்க வேண்டுமென்பதை மகோதரன் வற்புறுத்திஞனுயிற்று. தான் கொண்ட கொள்கையில் பின்வாங்கிஞல் இம்மையில் பழியும் மறு மையில் நரகும் விளையுமென்பதைப், பின்றுமேல் அவனுக்கன்றே பழியொடு நரகும் பின்னை' என்பதனால் புலப்படுத்தினன். (35)

**7434.** திரிபுர மெரிய வாங்கோர்
தனிச்சரந் துரந்த செல்வன்
ஒருவனிப் புவன மூன்று
மோரடி யொடுக்கிக் கொண்டோன்
பொருதுனக் குடைந்து போனர்
மானுடர் பொருத போர்க்கு
வெருவுதி போலு மானக்
கயிலையை வெருவல் கண்டாய்.

'திரிபுரம் எரிய, ஆங்கு ஓர்
தனிச் சரம் துரந்த செல்வன்,
ஒருவன் இப்புவனம் மூன்றும்
ஓர் அடி ஒடுக்கிக் கொண்டோன்,
பொருது உனக்கு உடைந்து
போனர்; மானுடர் பொருத போர்க்கு
வெருவுதி போலும்; மானக்
கயிலையை வெருவல் கண்டாய்!

பொ :—'பெருமையையுடைய கயிலைமலையை அஞ்சச் செய்த வனே, மூன்று புரங்களும் எரியும்படி அங்கே ஒப்பற்றதோர் அம்பைச் செலுத்திய எல்லாச் செல்வங்களுக்கும் உரியவஞன சிவபெரு மானும், தான் ஒருவஞக நின்று இந்த உலகங்கள் மூன்றையும் ஓரடியிலே அடங்கச் செய்த திருமாலும் (உன்னுடன்) போர் செய்து உனக்குத் தோற்றுப் போனர்கள். (அவ்வாறிருக்க) மானிடர் செய்த போருக்கு நீ அஞ்சுகின்றனை போலும்.

கு :—உயர்ந்த வெற்றியும் உயிரையே விடக்கூடிய தோல்வியும் சிறந்த வீரர்கள் பெறக்கூடியனவே என்று கூறிய மகோதரன் இரா வணனுக்குப் போர் வேட்கையை உண்டுபண்ண அவன் பெற்ற பழைய வெற்றிகளை எடுத்துக் கூறுகின்ருன். சிவனையும் திருமாலையும்

வென்று கயிலைமலையைத் தூக்கிய பெருமையுடைய நீ மானிடர் செய்யும் போருக்கு அஞ்சலாமோ என்பான், 'பொருதுனக் குடைந்து போனர், மானுடர் பொருத போர்க்கு, வெருவுதிபோலும்' என்ருன். ஆற்றல் மிக்க கடவுளர்களையே வென்ற நீ ஆற்றலற்ற மனிதரொடு செய்யும் போர்க்கு அஞ்சுதலாகாது என மகோதரன் அறிவுறுத்தினன் என்பதாம். குபேரனை வென்று புட்பக விமானத்தில் மீளும்போது கயிலைமலைக்கு அருகில் வந்ததும் அவ்விமானம் தடைப்பட, அதனல் சினந்த இராவணன் கயிலைமலையைப் பெயர்த்தானுதலின் 'மானக் கயிலையை வெருவல் கண்டாய்' என மகோதரனல் குறிப்பிடப் பெற்ருன். 'மானக் கயிலையை' என்னும் தொடர் 'மானக் கயிலைமலையாய் போற்றி' (போற்றித் திருவகவல்-167) என வரும் திருவாசகத் தொடருடன் ஒப்புநோக்கத்தக்கது. (36)

**7435.** வென்றவர் தோற்பர் தோற்ருேர்
வெல்குவ ரெவர்க்கு மேலாய்
நின்றவர் தாழ்வர் தாழ்ந்தோ
ருயர்குவர் நெறியு மஃதே
என்றன ரறிஞ ரன்றே
யாற்றலுக் கெல்லை யுண்டோ
புன்றவ ரிருவர் போரைப்
புகழ்தியோ புகழ்க்கு மேலோய்.

"வென்றவர் தோற்பர்; தோற்ருேர்
வெல்குவர்; எவர்க்கும் மேலாய்
நின்றவர் தாழ்வர்; தாழ்ந்தோர்
உயர்குவர்; நெறியும் அஃதே"
என்றனர் அறிஞர் அன்றே!
ஆற்றலுக்கு எல்லை உண்டோ?
புன்தவர் இருவர் போரைப்
புகழ்தியோ?– புகழ்க்கு மேலோய்!

பொ :—'யாவர் புகழ்ச்சிக்கும் மேம்பட்டிருப்பவனே, வென்றவர் தோற்பார்கள்; தோற்றவர் வெல்வார்கள்; எவர்க்கும் மேலாக நின்றவர்கள் தாழ்ச்சியடைவார்கள்; (எவர்க்கும்) தாழ்ந்தவர்கள் மேன்மையடைவார்கள்; (உலகத்தில் நிகழும்) முறைமையும் அதுவே யாகுமென்று அறிஞர்கள் கூறினரல்லவா? (ஆதலின்), வல்லமைக்கு (ஒரே யிடத்தில் நிற்பது என்னும்) ஒரு வரம்பு உண்டோ?

(இவ்வாறிருக்க), எளிய தவசிகள் இருவரின் போரைப் புகழ்கின்ருயோ ?

கு :—வெற்றியும் தோல்வியும் ஒருவர் பக்கலிலேயே நிற்பது அன்று என்பான், 'வென்றவர் தோற்பர் தோற்ருேர் வெல்குவர்' என்ருன். 'எவர்க்கும் மேலாய் நின்றவர் தாழ்வர் தாழ்ந்தோர் உயர்குவர் நெறியும் அஃதே' என்பதனுடன், 'தாழ்ந்தோர் உயர்வ ரென்றும் மிக உயர்ந்தோர் தாழ்வரென்றும் அறம், சூழ்ந்தோ ருரைக்கும் உரை கண்டாம்' (பிரபுலிங்க. மாயை உற்பத்தி கதி-14) என்னும் பகுதி ஒப்பு நோக்கி மகிழற்பாலது. வென்றவர் தோற் பதும் தோற்றவர் வெல்வதும் உலகத்தியற்கை என்றதாலும், 'ஆற்றலுக் கெல்லே யுண்டோ' என்றதாலும் நேற்று வென்ற இராம இலக்குவர்கள் இனித் தோல்வியுறவும் கூடும். நேற்றுத் தோல்வியுற்ற நீ இனி வெற்றி பெறவும் கூடும் என்பதைக் குறிப் பித்தான். 'புகழ்க்கு மேலோய்' என்னும் தொடருடன், 'திசை யானே விசை கலங்கச் செருச் செய்து மருப் பொசித்த, இசையாலே நிறைந்த புயத்து இராவணவோ இராவணவோ' (சூர்ப்பணகைப் படலம் - 110) என்னும் பகுதி ஒப்புநோக்கத்தக்கது. (37)

**7436.** தேவியை விடுதி யாயிற்
றிறலது தீரு மன்றே
ஆவியை விடுவ தல்லா
லல்லதொன் ருவ துண்டோ
தாவரும் பெருமை யம்மா
நீயினித் தாழ்த்த தென்னே
காவல விடுதி யின்றிக்
கையறு கவலே நொய்தின்.

'தேவியை விடுதி ஆயின்,
திறல் அது தீரும் அன்றே;
ஆவியை விடுவது அல்லால்
அல்லது ஒன்று ஆவது உண்டோ ?
தா அரும் பெருமை அம்மா
நீ இனித் தாழ்த்தது என்னே ?
காவல ! விடுதி, இன்று இக்
கையறு கவலே நொய்தின்.

பொ :—' அரசே, இராமன் தேவியாகிய சீதையைச் சிறையினின்றும் விடுவாயானால் உன்னுடைய வலிமை நீங்குமல்லவா? (ஆதலின், சீதையின் பொருட்டுப் போர் செய்து) உயிரை விட்டு விடுதலல்லாமல் பிறிதொரு செயல் (உனக்குத் தகுதி) ஆவதுண்டோ? அழிதலில்லாத (உன்) பெருமையை நீ இப்பொழுது தாழ்த்துக் கொள்வது என்ன காரணம்? இப்பொழுது கொண்டுள்ள செயலறுதற்குக் காரணமான இக்கவலையை விரைவில் விட்டிடுவாயாக.

கு :—மாலியவான் கூறியதுபோலத் தேவியை விடுதியாயின் உன் வலிமை நீங்கியதாகக் கருதப்படும். ஆதலின் சீதையின் பொருட்டுப் போர் செய்து ஆவியை விடுதலல்லாமல் பிறிதொரு செயல் உனக்கு ஏற்றதாகுமோ என மகோதரன் கூறினான். "இழைத்த திகவாமைச் சாவாரை யாரே, பிழைத்த தொறுக்கிற் பவர்" (779), 'எற்றென் றிரங்குவ செய்யற்க செய்வானேல், மற்றன்ன செய்யாமை நன்று' (655) என்னும் திருக்குறட் பாக்களின் கருத்துக்கள் ஈண்டு நினைக்கத் தகுவன. தேவியை விடுத்து என்றேனும் ஒருநாள் போகும் ஆவியை நிறுத்தலைவிட, ஆவியை விடுத்து, கொண்ட கொள்கையை நிறுவுதலின் மூலம் என்றும் இறவாத புகழை நிலைநிறுத்துதலே நீ செய்யத் தக்கது என்பான், ஆவியை விடுதலல்லால் அல்லதொன்றுவதுண்டோ' என்றான். மாலியவான் கூறியது போலச் சீதையை விடுதல் உன் பெருமைக்குக் குறைவு என்பதை வெளிப்படுத்தத் 'தாவரும் பெருமை அம்மா நீ இனித் தாழ்த்ததென்னே' என்றான். தா-கேடு. அருமை, ஈண்டு இன்மைப் பொருள் குறித்து நின்றது. அம்மா-வியப்பிடைச் சொல்; இது எதற்கும் கலங்காத இராவணன் கலங்கியது குறித்த வியப்பைக் குறித்து நின்றது. இன்று கையறு இக் கவலை நொய்தின் விடுதி என இயைக்க. (38)

7437. இனியிறை தாழ்த்தி யாயி
னிலங்கையும் யாமு மெல்லாம்
கனியுடை மரங்க ளாகக்
கவிக்குலங் கடக்குங் காண்டி
பனியுடை வேலை சின்னீர்
பருகின னிரவி யென்னத்
துனியுழந் தயர்வ தென்னே
துறத்தியித் துன்பந் தன்னை.

'இனி இறை தாழ்த்தி ஆயின்
இலங்கையும் யாமும் எல்லாம்
கனியுடை மரங்கள் ஆக,
கவிக்குலம் கடக்கும் காண்டி;
பனியுடை வேலை, "சில்நீர்
பருகினன் இரவி" என்னத்
துனி உழந்து அயர்வது என்னே?
துறத்தி இத்துன்பம் தன்னை.

பொ :—'இனிச் சிறிது பொழுதாவது (இக்கையறு நிலையில்) காலம் போக்கினையானால் இலங்கையும் நாங்களும் எல்லாம் பழங்களை யுடைய மரங்கள் போலாகும்படி குரங்குக் கூட்டம் வென்று விடும்; (இதனை நீ) காண்பாய்; குளிர்ச்சி பொருந்திய கடல், "சிறிது நீரைச் சூரியன் பருகிவிட்டான்" என்று (வருந்துவதுபோலத்) துன்பத்தால் வருந்திச் சோர்வது என்ன காரணம்? இப்பொழுது கொண்டுள்ள துன்பத்தை நீ நீக்குவாயாக.

கு :—இறை - சிறிது பொழுது. இன்னும் சிறிது நேரம் போர் தொடங்காது காலந் தாழ்த்திருப்பாயாயின் குரங்குகள், பழமரங்களை அழித்தல் போல இலங்கை நகரையும் எங்களையும் அழித்துவிடு மென்பான், 'கனியுடை மரங்களாகக் கவிக்குலம் கடக்கும்' என்றான். கடத்தல் - வெல்லுதல், 'சென்றமர் கடந்து நின் ஆற்றல் தோற்றிய' (புறம் - 99). காண்டி - காண்பாய்; முன்னிலை ஒருமை எதிர்கால வினைமுற்று. கடல் தன்னிடத்திலுள்ள சிறிது நீரைச் சூரியன் பருகிவிட்டதற்காக வருந்திச் சோர்வதில்லை. அதுபோல நீயும் நின்னுடைய சேனையில் ஒரு சிறு பகுதி அழிந்துவிட்டதற்காக வருந்திச் சோர்தலாகாது என்பான், 'பனியுடை வேலை சின்னீர் பருகினன் இரவி என்னத், துனியுழந்தயர்வது என்னே? என்றான். துனி - துன்பம் 'இனிதுறு கிளவியும் துனியுறு கிளவியும்' (தொல். பொருள் 303). (39)

7438. முன்னுனக் கிறைவ ரான
மூவருந் தோற்றார் தேவர்
பின்னுனக் கேவல் செய்ய
வுலகொரு மூன்றும் பெற்றாய்

புன்னுனைப் பனிநீ ரன்ன
மனிதரைப் பொருளென் றுன்னி
என்னுனக் கிளைய கும்ப
கருணனை யிகழ்ந்த தெந்தாய்.

'முன், உனக்கு, இறைவர்
ஆன மூவரும் தோற்றார்; தேவர்
பின், உனக்கு ஏவல் செய்ய
உலகு ஒரு மூன்றும் பெற்றாய்;
புல் நுனைப் பனிநீர் அன்ன
மனிதரைப் பொருள் என்று உன்னி,
என், உனக்கு இளைய கும்பகருணனை
இகழ்ந்தது?—எந்தாய்!

பொ:—'(எங்கள் குலத்திற்குத்) தந்தை போன்றவனே, கடவுளர்களான பிரமன், திருமால், சிவன் ஆகிய மூவரும் (நீ திக்கு விசயம் செய்த) முன்னாளில் உனக்குத் தோற்றார்கள்; பின்பு தேவர்களெல்லாம் உனக்கு ஏவல் செய்ய மூன்று உலகங்களையும் (நின் ஆணையின்கீழ்) பெற்றாய்; (இத்தகைய வெற்றியுடைய நீ) புல்லின் நுனியிலே ஒட்டியுள்ள பனித்துளியைப் போன்ற மனிதர்களாகிய இராம இலக்குவர்களை ஒரு பொருளாக மதித்து உனக்குத் தம்பியாகிய கும்பகருணனை (நீ மனத்தில் நினையாமல்) இகழ்ந்திருந்தது என்ன காரணம்?

கு:—மூவரை வென்று தேவரை ஏவல்கொண்டு மூவுலகங்களையும் அடிப்படுத்திய நீ, இராம இலக்குவர்களை ஒரு பொருளாக மதிக்கலாகாது என்பான், 'புல்நுனைப் பனிநீரன்ன மனிதரைப் பொருளென்றுன்னி' என்றான். பேராற்றலுடைய நின் தம்பியாகிய கும்பகருணனை இதுவரை நினையாமலிருந்தது என்ன காரணம் என்பான், 'என் உனக்கிளைய கும்பகருணனை இகழ்ந்தது' என்றான். கும்பகருணனை மதித்துப் போருக்கு அனுப்பாத செயலையே ஈண்டு இகழ்ந்ததாகக் கூறினன். 'புல்நுனைப் பனிநீரன்ன மனிதர்' என்றதனால் புல்நுனிப் பனிநீர் சூரியனைக் கண்டு அழிதல்போல, இராம இலக்குவர் கும்பகருணனைக் கண்டதும் அழிவர் என்பதாம். 'ஓங்கலே போல்வான்மேனி காணவே ஒளிப்பர்' என அடுத்த செய்யுளில் வரும் தொடர் இக்கருத்தினை விளக்குதல் காணலாம். (40)

**7439.** ஆங்கவன் றன்னைக் கூவி
யேவுதி யென்னி னைய
ஓங்கலே போல்வான் மேனி
காணவே யொளிப்ப ரன்றே
தாங்குவர் செருமுன் னென்னிற்
றாபத ருயிரைத் தானே
வாங்குமென் றினைய சொன்ன
னவனது மனத்துக் கொண்டான்.

'ஆங்கு அவன் தன்னைக் கூவி,
ஏவுதி என்னின், ஐய!
ஓங்கலே போல்வான் மேனி
காணவே ஒளிப்பர் அன்றே;
தாங்குவர் செரு முன் என்னின்,
தாபதர் உயிரைத் தானே
வாங்கும்' என்று இனைய சொன்னான்;
அவன் அது மனத்துக் கொண்டான்.

பொ:—'தலைவனே, அந்தக் கும்பகருணனை அழைத்து(ப் போருக்கு) ஏவுவாயேயானால் மலையை ஒத்த அந்தக் கும்பகருணனுடைய உடம்பைப் பார்த்த அளவிலே (அச்சமுற்று, அப்பகைவர்கள்) ஒளிந்து கொள்வார்கள்; (அவ்வாறு ஒளிந்து கொள்ளாமல்) அப்போரிடத்து எதிர்த்து நிற்பாராயின், தவக்கோலத்தையுடைய இராம இலக்குவர்களின் உயிரைத் தான் ஒருவனாக நின்றே போக்கி விடுவன் என்று இப்படிப்பட்ட சொற்களை (மகோதரன்) கூறினான்; அந்த இராவணன் (மகோதரன் கூறிய) அம்மொழியைத் தன் மனத்தில் ஏற்றுக்கொண்டான்.

கு:—ஓங்கல் - மலை. முதல்நாட் போரில் தோற்ற இராவணன் சிறிது உள்ளம் தளர்ந்த நிலையில் அவனது தளர்ச்சியைப் போக்க மகோதரன் எண்ணினனாதலின், 'ஓங்கலே போல்வான் மேனி காணவே ஒளிப்பர்' என இங்ஙனம் இராவணனுக்கு ஊக்க உரை பகர்ந்தான் என்க. செருமுன் தாங்குவரெனனின் என இயைக்க. தாங்குதல் - எதிர்த்து நிற்றல். அவன் - இராவணன். அது என்றது மகோதரன் கூறிய 'காணவே ஒளிப்பர்' 'தாபதர் உயிரைத் தானே வாங்கும்' என்னும் உறுதிமொழியை. இத்தகைய சொற்களால் இராவணன் போரில் ஈடுபடும்படி அவன் மனத்தை மாற்றி அவனுக்கு அழிவை உண்டாக்கினனாதலின் மகோதரனை, 'உருத பேருறுதி சொன்னான்' (34) என்றார் ஆசிரியர். (41)

## மகோதரன் கூறியதை இராவணன் புகழ்ந்து மனம் வேறுபடுதல்

**7440.** பெறுதியே யெவையுஞ் செல்வம்
பேரறி வாள சீரி
தறிதியே யென்பால் வைத்த
வன்பினுக் கவதி யில்லை
உறுதியே சொன்னு யென்னு
வுள்ளமும் வேறு பட்டான்
இறுதியே விளைவ தாஞ
லிடையொன்ருற் றடையு முண்டோ.

'பெறுதியே, எவையும் செல்வம்;
பேர் அறிவாள! சீரிது
அறிதியே; என்பால் வைத்த
அன்பினுக்கு அவதி இல்லை;
உறுதியே சொன்னுய்' என்னு,
உள்ளமும் வேறுபட்டான்;—
இறுதியே விளைவது ஆனல்,
இடை, ஒன்ருல் தடையும் உண்டோ?

பொ:—(அது கேட்ட இராவணன் மகோதரனை நோக்கிப்) 'பேரறிவுடையவனே, எல்லாச் செல்வங்களும் நீ பெறுதற்குரியை; (எனக்குச்) சிறப்புடைய செயலையும் அறிகின்ருய்; (நீ) என்னிடத்து வைத்த அன்பினுக்கு எல்லையேயில்லை; (எனக்கு) உறுதிபயக்கும் சொற்களையே கூறினுய் என்று சொல்லி(த் தன்னுடைய) மனம் மாற்றமடைந்தான்; (ஒருவனுக்கு) முடிவு நேர்வதாக இருந்தால் (அங்ஙனம் நேர இருந்த முடிவு), நடுவிலே வந்த வேருெரு செயலால் தடைப்படுவதும் உண்டோ? (இல்லை என்றபடி).

கு:—மகோதரன் கூறிய அழிவைத் தரும் கருத்துக்களை இராவணன் ஏற்றுக்கொண்டமை, 'பேரறிவாள, எவையும் செல்வம் பெறுதியே, சீரிது அறிதியே, என்பால் வைத்த அன்பினுக் கவதி யில்லை, உறுதியே சொன்னுய்' என மகோதரனை அவன் பாராட்டியமையால் விளங்கும். 'உள்ளமும் வேறுபட்டான்' என்பதனுல் தளர்ந்த உள்ளம் உடையவனுக இருந்த இராவணன் கிளர்ந்த உள்ளம் உடையவனுக மாறினமை பெறப்படும். ஒருவனுக்கு ஊழின்படி சாவு நேர்வதாக இருந்தால் அதனை மாலியவான் முயற்சி போன்ற எதுவும் தடுக்க முடியாது" என்பதனை, 'இறுதியே

விளைவதானுல் இடையொன்ருல் தடையுமுண்டோ?' என்பதனுல் விளக்கியுள்ளார். இது கவிக்கூற்று; வேற்றுப் பொருள் வைப்பு என்னும் அணியின் பாற்படும். 'ஊழிற் பெருவலி யாவுள மற்ருென்று, சூழினும் தான் முந்துறும்' (380) என்னும் திருக்குறள் ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கது. (42)

## இராவணன் கும்பகருணனை அழைத்து வருமாறு பணியாளரை ஏவ, அவர் கும்பகருணனது அரண்மனையை அடைதல்

**7441.** நன்றிது கரும மென்ன
நம்பியை நணுக வோடிச்
சென்றிவட் டருதி ரென்ரு
னென்றலு நால்வர் சென்ருர்
தென்றிசைக் கிழவன் றூதர்
தேடினர் திரிவ ரென்னக்
குன்றினு முயர்ந்த தோளான்
கொற்றமாக் கோயில் புக்கார்.

'நன்று இது கருமம்' என்ன,
'நம்பியை நணுக ஓடிச்
சென்று இவண் தருதிர்' என்ருன்;
என்றலும், நால்வர் சென்ருர்;
தென்திசைக் கிழவன் தூதர்
தேடினர் திரிவர் என்ன,
குன்றினும் உயர்ந்த தோளான்
கொற்றமாக் கோயில் புக்கார்.

பொ :—('கும்பகருணனைப் போருக்குச் செல்ல விடுதலாகிய) இச் செயல் தக்கது' என்று சொல்லி, (தூதரை நோக்கி, 'நீங்கள்) விரைந்து சென்று, சிறந்த கும்பகருணனை இவ்விடத்திற்கு வருமாறு கொண்டு வாருங்கள்' என்று (இராவணன்) கட்டளையிட்டான், (இவ்வாறு அவன்) கட்டளையிடுதலும், தூதர் நால்வர், தென் திசைக்கு உரிய தலைவனுன இயமனுடைய தூதுவர்கள் தேடின ராய்த் திரிவாரைப் போலச் சென்று, மலையினும் உயர்ந்த தோள்களையுடைய கும்பகருணனது வெற்றி பொருந்திய பெரிய அரண்மனையை அடைந்தார்கள்.

கு :—இது கருமம் நன்று என்னு எனவும், ஓடிச்சென்று நம்பியை இவண் நணுகத் தருதிர் எனவும் இயைக்க. நம்பி - ஆண்களிற் சிறந்தோன். தருதிர் - முன்னிலை ஏவற்பன்மை வினைமுற்று. சென்ருர் என்பது முற்றெச்சம். தென்திசைக் கிழவன் - தென் திசைக்கு உரியவனுகிய இயமன். அத்தூதர் கும்பகருணனை எவ்வா ருயினும் கொண்டுவர வல்லவர் என்பதைப் புலப்படுத்தவும், கும்ப கருணன் போரில் தவருமல் இறக்கப் போகின்ருன் என்பதைப் புலப்படுத்தவும் 'தென்திசைக் கிழவன் தூதர் தேடினர் திரிவ ரென்ன, நால்வர் சென்ருர்' என்ருர். தேடினர் - முற்றெச்சம் நால்வர் தேடினர் திரிவரென்னச் சென்ருர் புக்கார் என முடிக்க.

(43

### பணியாளர் கையாலும் தூணுலும் தாக்கவும் கும்பகருணன் எழுந்திராமை

**7442.** கிங்கரர் நால்வர் சென்றக்
கிரியனுன் கிடந்த கோயில்
மங்குரேய் வாயில் சார்ந்து
மன்னநீ யுணர்தி யென்னத்
தங்கையி னெழுவி ஞலே
தலைசெவி தாக்கிப் பின்னும்
வெங்கணுன் றுயில்கின் ருனை
வெகுளியா லினைய சொன்னுர்.

கிங்கரர் நால்வர் சென்று,
அக் கிரி அனுன் கிடந்த கோயில்
மங்குல்தோய் வாயில் சார்ந்து,
'மன்ன நீ உணர்தி' என்ன,
தம் கையின் எழுவிஞலே
தலை செவி தாக்கி, பின்னும்
வெங்கணுன் துயில்கின்ருனை
வெகுளியால் இனைய சொன்னுர்.

பொ :—பணியாளர் நால்வர் சென்று, மலையை ஒத்தவனுன அந்தக் கும்பகருணன் படுத்திருக்கின்ற, மேகம் படிந்துள்ள அரண் மனையின் வாயிலைச் சார்ந்து, '(இளைய) அரசனே, நீ துயில் நீங்கி எழுந்திருப்பாயாக' என்று சொல்ல (எழுந்திராமையால்), தம் முடைய கையிலுள்ள இருப்புத் தூணினுல் தலையிலும் செவியிலும்

மோதவும், பின்னும் கொடுமையுடையனாய் உறங்குகின்ற அக் கும்ப கருணனைப் பார்த்துச் சினத்தினால் பின்வரும் சொற்களைச் சொல்ல லானார்.

கு :—கிங்கரர் - பணியாளர். கைங்கரியம் என்ற சொல், இதனடியாகப் பிறந்ததாம். 'கிரி அனான்' என்பதனால் கும்ப கருணனின் பேருருவமும், 'எழுவினாலே தலை செவிதாக்கிப் பின்னும், வெங்கணான் துயில்கின்றானை' என்பதனால் அவனுடைய நீண்ட உறக்கமும் சொல்லப்பட்டன. 'மங்குல்தோய் வாயில் சார்ந்து' என்பதால் அவ் வரண்மனைவாயிலின் உயர்ச்சி பெறப்பட்டது. உணர்தி - துயில்நீங்கி எழுவாய்; முன்னிலை ஒருமை ஏவல் வினை முற்று. எழு - இருப்புத்தூண். தாக்கி என்பதைத் தாக்க எனக் கொண்டு உம்மை விரிக்க. வெங்கண் - கொடுமை. இனைய - சுட் டடியாகப் பிறந்த குறிப்பு வினையாலணையும் பெயர். (44)

### எழுப்பச் சென்ற கிங்கரர் வெகுளியாற் கூறுவன

**7443.** ★ உறங்கு கின்ற கும்பகன்ன
வுங்கண் மாய வாழ்வெலாம்
இறங்கு கின்ற தின்று
காணெ ழுந்திரா யெழுந்திராய்
கறங்கு போல விற்பிடித்த
கால தூதர் கையிலே
யுறங்கு வாயு றங்குவாயி
னிக்கி டந்து றங்குவாய்.

'உறங்குகின்ற கும்பகன்ன ! உங்கள் மாய வாழ்வு எலாம்
இறங்குகின்றது, இன்று காண் ; எழுந்திராய் ! எழுந்திராய்
கறங்கு போல வில் பிடித்த கால தூதர் கையிலே
உறங்குவாய், உறங்குவாய் ! இனிக் கிடந்து உறங்குவாய் !

பொ :—'துயிலுகின்ற கும்பகன்னனே, உங்களுடைய பொய் யாகிய வாழ்வெல்லாம் இன்று வீழ்ச்சியடையத் தொடங்கி விட்டது; (இதனை நீ) காண்பாயாக ; எழுந்திருப்பாயாக, எழுந்திருப்பாயாக ; காற்றாடி போல(த் திரிகின்றவரும்), வில்லைக் கையிலே ஏந்தியவரு மாகிய இயமதூதர் கையிலே இனி அகப்பட்டுக் கிடந்து (எழுந் திடாமல்) ஒரே உறக்கமாகப் படுத்து உறங்குவாய்.

கு :—'மாய வாழ்வு' என்பதற்கு வஞ்சனை நிறைந்த வாழ்வு எனவும் பொருள் கொள்ளலாம். கும்பகருணனோடு அரக்கர்களும் இன்று அழியப் போகின்றார்கள் என்னும் கருத்தினராய், 'உங்கள் மாய வாழ்வெலாம் இறங்குகின்றது இன்று' என்றனர். விரைவு பற்றி எழுந்திராய் எழுந்திராய் என இருமுறை அடுக்கி வந்தது. கறங்கு போலத் திரிகின்ற காலதூதர் எனவும், வில் பிடித்த கால தூதர் எனவும் தனித்தனி இயையும். கும்பகருணன் இராமனால் கொல்லப்படுவானென்பதை அவனை எழுப்பச் சென்ற பணியாளர், 'கறங்கு போல வில் பிடித்த கால தூதர் கையிலே, உறங்குவாய் உறங்குவாய் இனிக் கிடந்துறங்குவாய்' என்பதனால் புலப்படுத்தினர். (45)

**7444.** என்று மீறிலாவ ரக்க
 ரின்ப மாய வாழ்வெலாம்
சென்று தீயநும்மு னோன்றெ
 ரிந்து தீமை தேடினான்
இன்றி றத்த றிண்ணமாக
 வின்னு முன்னு றக்கமே
யன்ற லைத்த செங்கையால
 லைத்த லைத்து ணர்த்தினார்.

'என்றும் ஈறு இலா அரக்கர்
 இன்பமாய வாழ்வு எலாம்
சென்று தீய, நும் முனோன்
 தெரிந்து தீமை தேடினான் ;
இன்று இறத்தல் திண்ணமாக,
 இன்னும் உன் உறக்கமே ?
அன்று அலைத்த செங்கையால்
 அலைத்து அலைத்து, உணர்த்தினார்.

பொ :—'அரக்கரது, எப்பொழுதும் முடிவில்லாதன (என்று நினைத்திருக்கின்ற) இன்பமாகிய அழிந்து போகக் கூடிய வாழ்க்கையெல்லாம் சென்று அழியும்படி உம்முடைய தமையன் தெரிந்தே தீமையைத் தேடிக் கொண்டான்; இன்று இறத்தல் திண்ணமாக இருக்கவும், இன்னும் நீ தூங்குவதோ ? (என்று சொல்லி), அந்நாள் துன்புறுத்திய சிவந்த கைகளால் அடித்தடித்து எழுப்பினார்கள்.

கு :—ஈறிலா வாழ்வு, இன்பு வாழ்வு, மாய வாழ்வு எனத் தனித் தனி இயையும். தெரிந்து தீமை தேடினவன் தப்பிக்க முடியா தாதலின், 'இன்றிறத்தல் திண்ணம்' என்றனர். இன்றிறத்தல் திண்ணமாகவும் என எச்சவும்மை விரிக்க. உறக்கமே என்பதில் ஏகாரம் வினுப் பொருள் குறித்து நின்றது. அலேத்தல் - வருத்துதல் உணர்த்தினுர் - உணர்வு பெறச் செய்தார்; எழுப்பினுர் என்றபடி 'வெகுளியால் இனேய சொன்னுர்' (44) என்னும் பகுதியின் இனேய என்னும் சுட்டடியாகப் பிறந்த வினேயாலணேயும் பெயரை விளக்கியன இவ்விரண்டு செய்யுட்களும். (46)

### கிங்கரர் கும்பகருணனே எழுப்ப முடியாமையைத் தெரிவிக்க, குதிரை யாளி முதலியவற்றை மிதிக்கவிட்டு எழுப்புங்கள் என்று இராவணன் ஏவுதல்

**7445.** என்று சொல்ல வன்ன வன்னெ
ழுந்தி ராமை கண்டுபோய்
மன்ற றங்கு மாலே மார்ப
வன்று யில்லெ ழுப்பலம்
அன்று கொள்கை கேண்மி
னென்று மாவொடாளி யேவினு
ஞென்றின் மேலொ ராயி ரம்மு
ழக்கி விட்டெ ழுப்புவீர்.

என்று சொல்ல, அன்னவன்
எழுந்திராமை கண்டு போய்,
'மன்றல் தங்கு மாலே மார்ப!
வன் துயில் எழுப்பலம்,'
அன்று, 'கொள்கை கேண்மின்' என்று,
மாவொடு ஆளி ஏவினுன்,
'ஒன்றன் மேல் ஒர் ஆயிரம்
உழக்கி விட்டு எழுப்புவீர்.'

பொ :—அக்கும்பகருணன் எழுந்திராமையைப் பார்த்து, (இராவ ணனிடம்) சென்று, 'மணந்தங்கிய மாலேயணிந்த மார்பையுடைய வனே, (அவனே) வலிய உறக்கத்தினின்றும் எழுப்பும் வல்லமை உடையோம் அல்லோம்' என்று சொல்ல, அப்பொழுது (இரா வணன்) 'எழுப்பும் வழியைக் கேளுங்கள்; ஒன்றின்மே லொன்றுய்

யானையோடு யாளியை ஓராயிரக் கணக்காக மிதிக்கச் செய்து எழுப்புவீர்' என்று சொல்லி, (அவைகளை அவர்களுடன்) அனுப்பினான்.

கு :—எழுப்பலம் என்று சொல்ல என இயைக்க. எழுப்புவீர் என்று சொல்லி அவைகளை ஏவினான் எனச் சுட்டுச் சொல் வருவித்து முடிக்க. கொள்கை - கோட்பாடு; ஈண்டு எழுப்பும் வழியை உணர்த்தி நின்றது. மா என்றது ஈண்டு யானையை. உழக்கி விடுதல் - மிதிக்கச் செய்தல். (47)

## யானையும் யாளியும் எழுப்ப முடியாமல் திரும்பியதைத் தெரிவிக்க, இராவணன் மல்லரைச் சேனையோடு செல்லுமாறு ஏவுதல்

**7446.** அனைய தானை யன்று செல்ல
வாண்டு நின்று பேர்ந்தில
னினைய சேனை மீண்ட தென்றி
ராவ ணற்கி யம்பலும்
வினையம் வல்ல நீங்க ளுங்க
டானை யோடு சென்மினென்
றினைய மல்ல ராயி ராரை
யேவி நின்றி யம்பினான்.

'அனைய தானை அன்று செல்ல,
ஆண்டு நின்று பேர்ந்திலன்;
இனைய சேனை மீண்டது' என்று
இராவணற்கு இயம்பலும்,
'வினையம் வல்ல நீங்கள் உங்கள்
தானையோடு சென்மின்' என்று,
இனைய மல்லர் ஆயிராரை
ஏவி நின்று இயம்பினான்.

பொ :—'மாவொடு யாளியாகிய அச்சேனைகள் அப்பொழுது மிதித்துச் செல்லவும், தான் உறங்கிய அந்த இடத்திலிருந்து (கும்ப கருணன்) அசையவில்லை; (உன்னால் அனுப்பப்பட்ட) இந்தச் சேனையும் (அவனை எழுப்ப முடியாமல்) மீண்டது' என்று (அந்த நான்கு கிங்கரர்களும்) இராவணனுக்குச் சொல்லவும். (அவன்) இப்படிப்பட்ட மல்லர்கள் ஆயிரவரை (நோக்கித்) 'தொழில் திறமை

வல்ல நீங்கள், உங்கள் சேனையோடு சென்று எழுப்புங்கள்' என்று கட்டளையிட்டான்.

கு :—வினையம் - தொழில் திறம். 'இனையமல்லர் ஆயிரானரை' நோக்கி என ஒரு சொல் வருவித்துரைக்க. அம்மல்லர்களின் கொடுமைத் தன்மையைச் சொல்லால் விவரிக்க முடியாமையின் இனையமல்லர் எனச் சுட்டுச் சொல்லாற் கூறினர். 'ஏவிநின்றியம்பினன்' என்பது ஒரு சொல் நீர்மைத்து; கட்டளையிட்டான் எனப் பொருள்படும். நோக்கி, நீங்கள் சென்மின் என்றியம்பினன் என முடிக்க. (48)

இச் செய்யுளை யடுத்து 23. 26, 43, 44, 70 ஆம் எண்ணுள்ள ஏடுகளில் பின்வரும் மிகைப் பாடல்கள் காணப்படுகின்றன.

7446. (a) என்றுமே மனத்தின் பின்னு
மெண்ணுவா னெம்மா லீண்டு
வன்றிறற் கருணன் றன்னை
யெழுப்பலாம் வகையும் கேண்மோ
குன்றினை யனைய யானை
பாய்பரிக் குழுவோ டேனைச்
சென்றிவட் டருதி யென்ன
மகோதரற் கினைய செப்பும்.

(b) அன்னவ னுரைப்பக் கேளா
வளையெயிற் றரக்கர் நால்வர்
சொன்னது செய்து மென்னப்
படையெழச் சொல்லு மாற்றன்
மின்னெனு மருப்பு வேழக்
குழாத்தின்மேல் முரசம் எற்றி
இன்னகர் தன்னி னுள்ள
படையெலாம் எழுக என்றார்.

(c) ஆனைமேல் மணிமுர சேற்றி அன்னவர்
சேனையை யெழுகெனச் சென்று சாற்றலும்
மேனிமிர் தூளியின் படலம் விம்மிப்போய்
வானவர் மகளிர்தம் குழன்ம றைத்தவே.

(d) இன்னவா றெழுந்தசேனைப் பெருமையை
யெய்த நோக்கி
என்னகொல் அரக்கர் தானைப்
பெருமையென் றையமுற்றார்

பன்னெடுங் கால மெல்லாம்
கணக்கிடை யிட்டுப் பார்க்கிற்
சொன்னதோர் பிரம னாலும்
உரைக்கவுந் தோன்றா தென்றார்.

(e) என்றனர் தேவ ரிப்பால்
இரைத்தெழு தானை மண்டி
வன்றிறல் உடைய கும்ப
கருணன்றன் கோயில் வாயிற்
சென்றது நோக்கி நின்ற
மகோதரன் றிகைத்த நெஞ்சன்
குன்றெனத் திரண்ட தோளான்
சேனையை நோக்கிக் கூறும்.

(f) எழுப்புமின் கருணன் றன்னை
யிவ்வழி வீர ரெல்லாம்
முழைப் பொலி சீயமன்னார்
மூரிவே ழங்கள் கொண்டே
உழக்குமின் ஊற்ற முள்ள
படைக்கல முலப்பிலாத
தெழிப்பொடு புடைப்பு மார்ப்பிற்
செழுந்துயி லெழுப்பு மன்றே.

(g) கோடியின் மேலு மெல்லா
குத்துத னன்றென் றோடித்
தாடைகள் சந்து மார்பு
தலைகளின் முதுகிற் றாக்கி
வாடிய கைய ராகி
வலியது தானு மோய்ந்து
நீடுறு குரங்கு போல
நெடுந்துயில் கொள்வ தானன்.

(h) அவ்வழி அவ்வுரை ஆற்றி அழைப்பத்
தெவ்வரை சென்றிடல் தொன்றிய தென்றார்
அவ்வழி சென்றுறு வன்றிற லோனை
நைவழி மற்றவன் மார்பு நடந்தார்.

(i) அன்னவன் மார்பினில் ஐயிரு கோடி
துன்னிருள் தொக்கன போல்திறலி யானை
இன்ன திறத்தில் இரட்டிய தேரும்
மின்னும் வயப்பரி யோடுமி டைந்தார்.

(j) மற்றவன் மார்பினி லேறி மலைந்தார்
எற்றுறு திண்படை யாவு மெறிந்தார்
பெற்றெரு வன்படை பேறலர் பின்னும்
சுற்றினர் சூழ்ந்து துகைத்தன ரார்த்தார்.

(k) தழித்தன ரார்த்தனர் சங்கொடு பேரி
கொழித்தன ரூழியிற் கார்மழை போல
எழுத்தொடர் தோமரந் தண்டு முசுண்டி
மழுக்கொடு மார்பினி லெற்றினர் மண்டி.

(l) இன்னவா றிவர்க ளெல்லாம் எற்றியும் குத்தி யிட்டும்
மின்னென விளங்குகின்ற வெயிற்றினுன் றன்னை யாது
முன்னிய வுறக்கந் தன்னை யாவரு மொழிக்க மாட்டார்
என்னிவர் தாமு நாடி மேலென்கொல் செய்வதென்றார்.

(m) ஆனையுந் தேரு மாவு
மியாளியு மற்றுமுள்ள
சேனையின் பெருமை வெள்ளத்
தியாவையும் பரப்பிச் சென்று
வானிமிர் வயிரத் தோளான்
தன்னுடை மார்பு தன்னில்
ஏனைய பிறவு மெண்ணில்
இழித்தக வுடைய தம்மா.

(n) ஒன்றவர் உரைத்து மண்டி
ஊழியிற் சிறந்த கால்போல்
வன்றிறல் கருணன் றன்மேல்
நடந்துபோய் வருத்தம் செய்தார்
கன்றிய வுயிர்ப்பி னூழிக்
காற்றினுற் சேனை யெல்லாம்
சென்றவன் வாயி னூடும்
செவியினும் புக்க தன்றே.

(o) புக்கவன் உடலஞ் சேர்ந்து
சேனையும் புறம்போம் காற்றின்
மிக்கதோர் வேகந் தன்னுற்
றானையு மீண்டு போகி
லுக்கவெம் புறம்போ மென்னும்
உள்ளெழு மூழிக் காற்றால்
தொக்குடன் புறப்பட் டோடி
மீளவும் தொக்கு கின்றார்.

(p) இன்னவா றினைய சேனை போவது வருவ தாகி
மன்னிய பிறப் பிறப்பு மிவையென்று காட்டு மாபோல்
அன்னவா றரக்கர் சேனை யலைகடற் றிரையே போல
மின்னுறு படைய வீர ரியாவரும் விரைவதானர்.

(q) ஆனையுந் தொகுதியும் பரியின் வெள்ளமும்
சேனையும் பெருமையும் திரண்ட யாவையும்
மேனிமிர் அரக்கன துயிர்ப்பின் வேகத்தால்
ஊனையுங் கடந்துபோய் ஊச லாடுமால்.

(r) ஆயிடை அவர்களு மரிதி னகத் தம்
பாயலிற் புறப்படா நின்று பார்த்தவர்
ஏயிடை நெஞ்சின ரியாதும் நாம்புகும்
போயிட மில்லையாம் பொன்றிப் போதுவோம்.

(s) ஒன்றல வரக்கர்கள் ஊழியிற் சிறந்
தன்றியும் மழையினு மிரட்டி யார்த்தனர்
வன்றிற லரக்கன்றன் மார்பி லேறிமேல்
குன்றின்மேல் விழுந்தன படைகள் கூட்டினர்.

(t) ஆர்த்தன ரடித்தன ரசனி யேற்றினும்
சீர்த்தன படைக்கலஞ் சிந்தினர் கடம்
தூர்த்தனர் படையுக முடுக்கிச் சூன்மழை
பார்த்தன திரிந்தனர் படை வழங்கினர்.

(u) இங்கிவர் அகன்று சென்றங் கினமணி முடிகடாங்கு
மங்கைவே லிராவணன்ற னடியினை யிறைஞ்சி யைய
உங்கையி னெழுவி னலே அடித்துற வெழுப்பி னல்லா
லங்கவன் உறக்க நீங்கான் அருளினிச் செய்வ தென்றார்.

(v) இனைய கூறி யானை வாசி
ஏறவும் மெ ழுந்திலன்
புனையு மாலை முடியினய்
இனிச் செயல் புகலென
வினையும் வல்ல ரல்லர்
நீங்கள் மீண்டு சேனையோடும் போய்
அனைய மல்ல ராயி
ரவ்வரேகு மென்ன வருளினன்.

### ஆயிரம் மல்லர்கள் கும்பகருணனை எழுப்புமாறு அவன் அரண்மனையை அடைதல்

**7447.** சென்றனர் பத்து நூற்றுச்
★ சீரிய வீர ரோடி
மன்றலந் தொங்க லான்றன்
மனந்தனின் வருத்த மாற
இன்றிவன் முடிக்கு மென்னு
வெண்ணின ரெண்ணி யீண்டக்
குன்றினு முயர்ந்த தோளான்
கொற்றமாக் கோயில் புக்கார்.

சென்றனர், பத்து நூற்றுச்
சீரிய வீரர் ஓடி,
'மன்றல் அம் தொங்கலான்தன்
மனம்தனில் வருத்தம் மாற
இன்று இவன் முடிக்கும்' என்னு,
எண்ணினர்; எண்ணி, ஈண்ட,
குன்றினும் உயர்ந்த தோளான்
கொற்ற மாக் கோயில் புக்கார்.

பொ :—சிறந்த ஆயிரம் வீரர்களும், மணந்தங்கிய அழகிய மாலையினையுடைய இராவணன்—தன் மனத்திலுண்டாகிய வருத்தம் நீங்க, இவ்விடத்து இப்பொழுது இவன் பகையை வெல்லுவான்' என்று எண்ணினர்; (அவ்வாறு) எண்ணி மிக விரைவாக ஓடிச்சென்று, மலையினும் உயர்ந்த தோள்களையுடைய அந்தக் கும்பகருணனது பெரிய அரண்மனையினுள் புகுந்தார்கள்.

கு :—சீரிய பத்து நூற்று வீரர் என இயைக்க. சென்றனர் என்பது முற்றெச்சம். ஓடிச் சென்றனர் புக்கார் என முடிக்க. (49)

### மல்லர்கள் தம் வலியால் அரண்மனை வாயிலுட் புகுதல்

**7448.** திண்டிறல் வீரர் வாயி
றிறத்தலுஞ் சுவாச வாத
மண்டுற வீர ரெல்லாம்
வருவது போவ தாகக்

கொண்டுறு தடக்கை பற்றிக்
குலமுடை வலியி ஞலே
கண்டுயி லெழுப்ப வெண்ணிக்
கடிதொரு வாயில் புக்கார்.

திண் திறல் வீரர் வாயில் திறத்தலும், சுவாச வாதம்
மண்டுற, வீரர் எல்லாம் வருவது போவது ஆக,
கொண்டு உறுதடக்கை பற்றி, குலமுடை வலியினுலே
கண் துயில் எழுப்ப எண்ணி, கடிது ஒரு வாயில் புக்கார்.

பொ :—மிக்க வலியினையுடைய (வாயிற் காவலராகிய) வீரர்கள் கதவைத் திறந்த அளவிலே மூச்சுக்காற்று நெருங்கிவர, (அதனுல்) எழுப்ப வந்த வீரர்களெல்லாம் வெளியே வருவதும் உள்ளே போவதுமாக, (இவ்வாறு தத்தளித்துப் பின்னர்) அரக்கர் குலத்திற் குரிய வலிமையினுலே மிக்க பெரிய கைகளால் (ஒருவரை ஒருவர்) பற்றிக்கொண்டு, (கும்பகருணனைத்) துயிலெழுப்ப நினைத்து, விரைந்து (வேறு) ஒரு வாயிலின் வழியாகப் புகுந்தார்கள்.

கு :—சுவாசவாதம்-மூச்சுக்காற்று. குலமுடை வலியினுலே உறு தடக்கை பற்றிக்கொண்டு என இயைக்க. மூச்சுக்காற்றுக்கு எதிர் நிற்க மாட்டாதவராகி வேறு வாயிலின் வழியாகப் புகுந்தார்கள் என்றபடி. (50)

இச் செய்யுளையடுத்து 18, 19, 29, 40, 41, 52, 60, 61, 62, 63, 65, 66, 71 ஆகிய எண்ணுள்ள பிரதிகளில் பின்வருமாறு ஒரு மிகைப் பாடல் காணப்படுகிறது.

7448 (a) ஓதநீர் விரிந்த தென்ன
வுறங்குவான் நாசிக் காற்ருற்
கோதிலா மலைகள் கூடி
வருவது போவதாகி
ஈதெலாம் கண்டு வீரரேங்கினர்
துணுக்க முற்ருர்
போதுவான் அருகு செல்லப்
பயந்தனர் பொறிகொள் கண்ணர்.

இச் செய்யுளையடுத்து 23, 26, 43, 44, 70 ஆம் எண்ணுள்ள பிரதிகளில் பின்வருமாறு ஒரு மிகைப்பாடல் காணப்படுகிறது.

(b) பங்கயன் சங்கபாணி பசுபதி
முதலாய் அஞ்சும்
துங்கவன் தோற்றத்தானைக் கண்டு
மெய் துணுக்கமுற்று

வங்கையாற் றீண்ட வஞ்சி
யாழ்செவி யதனினுள்ளே
சங்கொடு தாரை சின்னம்
சமைவுற ஊதலுற்ருர்.

### வீரர்கள் கும்பகருணனைத் துயிலெழுப்பச் சங்கு தாரை முதலியவற்ருல் ஒலி எழுப்புதல்

**7449.** இங்கிவன் றன்னை யாமின்
றெழுப்பலாம் வகையே தென்று
துங்கவெவ் வாயு மூக்குங்
கண்டுமெய் துணுக்க முற்று
ரங்கைகட் டீண்ட வஞ்சி
யாழ்செவி யதனி னூடு
சங்கொடு தாரை சின்னஞ்
சமைவுறச் சாற்ற லுற்ருர்.

'இங்கு இவன் தன்னை யாம் இன்று
எழுப்பல் ஆம் வகை ஏது?' என்று,
துங்க வெவ் வாயும் மூக்கும் கண்டு,
மெய் துணுக்கம் உற்ருர்;
அங்கைகள் தீண்ட அஞ்சி,
ஆழ் செவி அதனினூடு,
சங்கொடு தாரை, சின்னம்,
சமைவுறச் சாற்றலுற்ருர்.

பொ :—(அவ்வாறு புகுந்த வீரர்கள், அவனுடைய) அகலமான கொடிய வாயையும் மூக்கையும் கண்டு மெய் நடுக்க முற்ருராகி, 'இவ் விடத்திலே இவனை யாம் இப்பொழுது எழுப்பும் உபாயம் என்ன' என்று (கருதி), அழகிய கைகளாலே அடித்தெழுப்ப அஞ்சி, ஆழ மாகிய செவியினிடத்துச் சங்கு, தாரை, சின்னம் முதலிய ஊது கருவிகளின் ஒலி பொருந்தும்படியாக ஊதலுற்ருர்கள்.

கு :—மெய் துணுக்கமுற்ருர் என்னும் முற்றினை எச்சமாக்கி எழு வாய் வருவித்துத் துணுக்கமுற்று, கருதி, அஞ்சி, சாற்றலுற்ருர் என முடிக்க. கைகள் தீண்ட என்பது கைகளால் அடித்தலை உணர்த்தி நின்ற உலக வழக்குச் சொல். சாற்றுதல் என்பது ஈண்டு ஒலி உண்டாக்குதலை உணர்த்திற்று. (51)

இச் செய்யுளை அடுத்து 52 ஆம் எண்ணுள்ள அச்சுப் பிரதியில் பின்வருமாறு ஒரு மிகைப்பாடல் காணப்படுகிறது.

7449 (a) சாற்றிய சங்குதாரை ஒலி
அவன் செவியில் சார
ஆற்றலின் அமைந்த கும்பகருணனுக்கு
அதுவும் தாராட்டு
ஏற்றது ஒத்து அனந்தல்
முன்னர்க் கிரட்டிகொண் டுறங்கமல்லர்
கூற்றமும் குலைய நெஞ்சம்
குறித்து இவை புரியலுற்ருர்.

## ஓசை முதலியவற்ருல் கும்பகருணனை எழுப்ப இயலாமையை இராவணனுக்கு உரைப்ப, அவன் குதிரைகளை மேலே செலுத்துமாறு கூறுதல்

**7450.** கோடிக றண்டு கூடங்
குந்தம்வல் லோர்கள் கூடித்
தாடைகள் சந்து மார்பு
தலையெனு மவற்றிற் ருக்கி
வாடிய கைய ராகி
மன்னவற் குரைப்பப் பின்னும்
நீடிய பரிக ளெல்லா
நிரைத்திடும் விரைவி னென்ருன்.

கோடு, இகல்தண்டு, கூடம்,
குந்தம், வல்லோர்கள் கூடி,
தாடைகள், சந்து, மார்பு,
தலை எனும் அவற்றில் தாக்கி,
வாடிய கையர் ஆகி, மன்னவற்கு
உரைப்ப, 'பின்னும்
நீடிய பரிகள் எல்லாம் நிரைத்திடும்
விரைவின்' என்ருன்.

பொ :—கொம்பு, வலிமையையுடைய தண்டு, சம்மட்டி, ஈட்டி (ஆகிய இப் படைகளில்) வல்லவர்கள் திரண்டு தாடைகளிலும் மூட்டுகளிலும் மார்பிலும் தலையிலும் அடித்துச் சோர்ந்த கைகளை உடையவராகி(த் திரும்பிச் சென்று), இராவணனுக்குச் சொல்ல,

(அவன்) 'விரைவாக மேலும் பெரிய குதிரைப் படைகளையெல்லாம் ஏவிவிட்டு எழுப்புங்கள்' என்றான்.

கு :—இகல் என்பதனைத் தண்டுக்கேயன்றி ஏனையவற்றோடு கூட்டலும் ஆம். 'கோடு இகல் தண்டு கூடம் குந்தம் வல்லோர்கள்' என்றமையால் படைக்கலம் பழகிய முரட்டுக் கையர் என்பது பெறப் பட்டது. 'வாடிய கையராகி' என்றமையால் வீரர்கள் சலிப்புற்றார்கள் என்பது பெறப்பட்டது. 'நிரைத்திடும்' என்றது பரிகளை மிகுதியாகச் செலுத்தி எழுப்புங்கள் என்பதை உணர்த்தி நின்றது. (52)

## குதிரைகளால் துகைக்க, அதனால் கும்பகருணன் இனிது உறங்குதல்

**7451.** கட்டுறு கவன மாவோ
ராயிரங் கடிதின் வந்து
மட்டற வுறங்கு வான்றன்
மார்பிடை மாலை மான
விட்டுற நடத்தி யோட்டி
விரைவுள சாரி வந்தார்
தட்டுறு குறங்கு போலத்
தடந்துயில் கொள்வ தானான்.

கட்டுறு கவன மா ஓர் ஆயிரம் கடிதின் வந்து,
மட்டு அற உறங்குவான் தன் மார்பிடை, மாலை மான
விட்டு உற நடத்தி, ஓட்டி, விரைவு உள சாரி வந்தார்;
தட்டுறு குறங்கு போலத் தடந்துயில் கொள்வதானான்.

பொ :—(இராவணனுடைய ஏவலாலே,) கட்டப்படுதலையுடைய விரைந்து செல்லும் ஆயிரங் குதிரைகள் விரைவின் வர, (அவற்றின் வீரர்கள்), பெருந் தூக்கங்கொண்ட கும்பகருணனுடைய மார்பிலே, மாலையை ஒத்துத் தோன்றும்படி மிகுதியாக அவன் மேற்செல்லும் படி (அவற்றை) நடத்தி ஓட்டி, வேகமான சாரியாக வந்தார்கள்; (அவ்வாறு வருதலை, அவன்) தொடைதட்டிக் கொடுத்தலைப் போலக் கொண்டு பெருந் தூக்கத்தை மேற்கொள்வானாயினன்.

கு :—கட்டுறும் - வலிமை பொருந்திய எனலுமாம். ஆயிரம் என்பது எண்ணிக்கை மிகுதியைக் குறித்தது. வந்து என்னும் செய்தென் எச்சத்தை வர எனத் திரிக்க. மாலைமான என்பது வட்டமாக

வருதலைக் குறித்தது. நடத்தி ஓட்டுதல் - விரைவாகச் செலுத்துதல், குறங்கு - தொடை. தொடை தட்டுதல், உலக வழக்கு. இச் செயல்கள் பயன்படவில்லை என்பதைக் குறிக்கத் 'தடந்துயில் கொள்வதானுன்' என்ருர். (53)

## பணியாளர் கும்பகருணனை எழுப்ப இயலாமையை இராவணனுக்கு அறிவித்தல்

**7452.** கொய்மலர்த் தொங்க லான்றன்
குரைகழல் வணங்கி யைய
உய்யலாம் வகைக ளென்றிங்
கெழுப்பலாம் வகையே செய்தும்
கய்யெலாம் வலியு மோய்ந்த
கவனமாக் காலு மோய்ந்த
செய்யலாம் வகைவே றுண்டோ
செப்புதி தெரிய வென்ருர்.

கொய் மலர்த் தொங்கலான் தன்
குரைகழல் வணங்கி, 'ஐய!
உய்யலாம் வகைகள் என்று, இங்கு
எழுப்பல் ஆம் வகையே செய்தும்,
கய் எலாம் வலியும் ஓய்ந்த;
கவனமா காலும் ஓய்ந்த;
செய்யலாம் வகை வேறு உண்டோ?
செப்புதி, தெரிய' என்ருர்.

பொ :—(எழுப்ப அனுப்பப்பட்ட வீரர்கள்), பறித்த மலர்களால் தொடுக்கப்பட்ட மாலையை அணிந்த இராவணனது ஒலிக்கும் வீரக்கழல் அணிந்த அடிகளில் வணங்கி, 'ஐயனே, (நாமெல்லாம்) பிழைத்துப் போதற்குரிய வழியென்றெண்ணி, இப்பொழுது (இவனை) உறக்கத்தினின்று எழுப்புதற்குரிய வகையெல்லாம் செய்தோம்; (அதனுல்) எங்களுடைய கைகளின் வலியெல்லாம் ஓய்ந்தன; வேகமாகச் செல்லும் இயல்புடைய குதிரைகளும் காலோய்ந்து போயின; செய்யக்கூடிய வேறு உபாயம் உண்டோ? விளங்கச் சொல்லுவாயாக' என்ருர்கள்.

கு :—உய்யலாம் வகைகள் என்பதில் 'கள்' அசைநிலை. வகை என்பது, 'ஆங்கவன் தன்னைக் கூவி ஏவுதி என்னின்ஐய' (41)

என்னும் செய்யுளை நினைப்பூட்டியது. அரசன் ஆணை என்று மட்டும் கருதி அவனை எழுப்பவில்லை. எங்களுக்கும் நன்மையாயிற்றே என்னும் பொறுப்புணர்ச்சியோடும் எழுப்பினேமென்பார், 'உய்ய லாம் வகைகளென்றிங் கெழுப்பலாம் வகையே செய்தும்' என்றார். செய்தும் என்பது இறந்தகாலத் தன்மைப் பன்மை வினைமுற்று. காலும் என்பதிலுள்ள உம்மையைப் பிரித்து மாவும் என எச்சவும்மை யாக்கி உரைக்க. ஓய்ந்த என்பது அன்சாரியை பெருமல் வந்த வினைமுற்று. (54)

இச் செய்யுளை அடுத்து 52 ஆம் எண்ணுள்ள அச்சுப் புத்த கத்தில் பின்வருமாறு ஒரு மிகைப் பாடல் காணப்படுகிறது.

**7452.** (a) அன்னவர் உரைப்பக் கேளா
அரசன் மோதரனை நோக்கி
மின்னெனு மெயிற்று வீர
எம்பியைக் கொணர்தி என்ன
இன்னதே செய்வென் என்று
எழுந்தடி வணங்கிப் போவான்
பொன்னென விளங்குவான் போய்த்
தன்பெரும் கோயில் புக்கான்.

## இராவணன் சூலம் மழு முதலியன எறிந்தாவது கும்பகருணனை எழுப்புக எனல்

**7453.** இடைபேரா வினையானை
★ யிணையாழி மணிநெடுந்தேர்
படைபேரா வரும்போதும்
பதையாத வுடம்பானை
மடைபேராச் சூலத்தான்
மழிவாட்கொண் டெறிந்தானும்
புடைபேராத் துயிலானைத்
துயிலெழுப்பிக் கொணர்கென்றான்.

'இடை பேரா இளையானை,
இணை ஆழி மணி நெடுந்தேர்
படை பேரா வரும்போதும்,
பதையாத உடம்பானை,

மடை பேராச் சூலத்தால்,
மழு வாள்கொண்டு, எறிந்தானும்,
புடை பேராத் துயிலானைத்
துயில் எழுப்பிக் கொணர்க' என்றான்.

பொ :—'(பகைவருடைய) பொருத்தப்பட்ட சக்கரங்களையுடைய மணிகள் பதித்த பெரிய தேரும் படைகளும் எதிர்த்து வரும்போதும் நடுக்கமுறாத உடம்பையுடையவனும், இடையறவு படாத உறக்கத்தையுடையவனும், என்னைவிட்டுப் பிரியாத தம்பியுமான கும்பகருணனைக் குத்துதலால் வாய் மழுங்காத சூலத்தோடு மழுவையும் வாளையும் கொண்டு எறிந்தாவது துயிலினின்றும் எழுப்பிக்கொண்டு வாருங்கள்' என்று கூறினான்.

கு :—இளையானை உடம்பானை துயிலானை என்பன கும்பகருணனைக் குறித்து வந்த பல பெயர்கள். இணை ஆழி – இரட்டைச் சக்கரம் எனலுமாம். பேரா வருதல் என்பது ஈண்டுப் பகைவர் படை திரண்டு வருதலைக் குறித்தது. மடுத்தல் - உடம்பிற் செலுத்துதல். மடை என்பதில் ஐ செயப்படு பொருள் விகுதி. பேர் தல் - நிலை மாறுதல்; ஈண்டு வாய் மழுங்குதலை உணர்த்திற்று. ஆரணிய காண்டத்தில் சரபங்கர் பிறப்பு நீங்கு படலத்தில், 'வெல்வான் நசையால் விசையால் விடுநாள்' (13) எனத் தொடங்கும் செய்யுளில் 'வல்வாய் மடியா வயிரப்படை' என்பது 'மடை பேராச் சூலம்' என்பதனோடு ஒப்புநோக்கத் தக்கது. மடைபேராச் சூலம் என்பதற்கு மூட்டு வாய் கழலாத சூலம் எனவும் பொருள் கொள்ளலாம். எறிந்தானும் என்ற உம்மையால் 'மேல் கையெலாம் வலியும் ஓய்ந்த' (54) என்றதைக் கொண்டு வீரர்கள் கும்பகருணை எழுப்பப் படைக்கலங்களைப் பயன்படுத்தவில்லை என்று இவன் கருதினான் என்பது பெறப்படுகிறது. கொணர்கென்றான் என்பதில் அகரம் தொக்கது. மேல் 'கையெலாம் வலியும் ஓய்ந்த' (54) என்றமையின் கொணர்க என்றது வேறு வீரர்களை நோக்கி என்பது பெறப்படும். (55)

## ஆயிரம் வீரர் முசலம் கொண்டு கன்னத்தில் அடிக்கக் கும்பகருணன் துயிலெழுதல்

**7454.** என்றலுமே யடிவணங்கி
யீரைஞ்ஞூ றிராக்கதர்கள்
வன்றொழிலாற் றுயில்கின்ற
மன்னவன்றன் மாடணுகி

நின்றிரண்டு கதுப்புமுற
நெடுமுசலங் கொண்டடிப்பப்
பொன்றினவ னெழுந்தாற்போற்
புடைபெயர்ந்தங் கெழுந்திருந்தான்.

என்றலுமே அடிவணங்கி, ஈர்
ஐஞ்ஞூறு இராக்கதர்கள்,
வன்தொழிலால் துயில்கின்ற
மன்னவன்தன் மாடு அணுகி,
நின்று இரண்டு கதுப்பும் உற
நெடு முசலம் கொண்டு அடிப்ப,
பொன்றினவன் எழுந்தாற் போல்,
புடை பெயர்ந்து அங்கு எழுந்திருந்தான்.

பொ :—(இராவணன்) கொண்டு வருக என்று சொன்ன அளவில், ஆயிரம் இராக்கதர்கள் (அவனுடைய) அடியில் வணங்கி விட்டு, தூங்கிக் கொண்டிருக்கின்ற கும்பகருணனிடத்து நெருங்கி நின்று, (தமது) வலிய தொழில் செய்யுந் தன்மையால் இரண்டு கன்னங்களிலும் பொருந்தும்படியாகப் பெரிய உலக்கைகளைக் கொண்டு அடிக்க, இறந்தவன் எழுந்ததுபோல (அந்தக் கும்ப கருணன்) பக்கத்திலே புரண்டு துயில் நீத்து எழுந்து அமர்ந்திருந் தான்.

கு :—துயில்கின்ற மன்னவன் என்றதால் கும்பகருணனை உணர்த்தியது. கும்பகருணனை மன்னவன் என்றது உபசார வழக்கு. வன்தொழிலால் நெடுமுசலம் கொண்டடிப்ப என இயைக்க. முசலம் - உலக்கை. முசலம் கொண்டு என்பதில் கொண்டு என்பது மூன்ருவதில் வந்த சொல்லுருபு. கும்பகருணன் எப்போதும் உறக் கத்தையே மேற்கொண்டவனுதலின் அவன் துயில் நீங்கி எழுந்த தற்கு இறந்தவன் எழுந்ததை உவமையாகக் கூறினர். (56)

**7455.** மூவகை யுலகு முட்க

முரட்டிசைப் பனைக்கை யானை
தாவருந் திசையி னின்று
சலித்திடக் கதிரு முட்கப்

பூவுளான் புணரி மேலான்
பொருப்பினுன் முதல்வ ராய
யாவருந் துணுக்குற் றேங்க
வெளிதினி னெழுந்தான் வீரன்.

மூவகை உலகும் உட்க, முரண் திசைப் பனைக்கை யானை
தாவரும் திசையின் நின்று சலித்திட, கதிரும், உட்க,
பூவுளான், புணரிமேலான், பொருப்பினுன் முதல்வர் ஆய
யாவரும் துணுக்குற்று ஏங்க, எளிதினின் எழுந்தான் வீரன்.

பொ :—வீரன் மூவகை உலகத்திலுள்ளோரும் அஞ்சவும், மாறு பாட்டையுடைய திசையில் நிற்கின்ற பனை போன்ற கையையுடைய யானைகள் (தாம்) நீங்குதலில்லாத திசைகளிலிருந்து வருந்தவும், சூரிய சந்திரர்கள் அஞ்சவும், தாமரை மலரின் மேலுள்ள பிரமனையும் கடலில் பள்ளி கொண்டிருப்பவனுன திருமாலையும் கயிலாய மலையி லுள்ள சிவபெருமானையும் முதல்வராகக் கொண்ட தேவர்களெல் லோரும் அச்சமுற்றுக் கவலைப்படவும் எளிதாக எழுந்தான்.

கு :—உட்குதல் - அஞ்சுதல். இயல்பாகத் திசைகளைத் தாங்கும் வலிமையுடைய யானைகள் இவன்புடை பெயர்தலினுல் மிக்க வருத்த முற்றன என்பார், 'தாவரும் திசையின் நின்று சலித்திட' என்ருர். தாவு அரும் - நீங்குதல் அரிய. தேவர்களுக்கெல்லாம் தலைவர்க ளாதலின் பூவுளான் முதலாகிய மூவரையும் குறித்தார். எப்பொ ழுதும் உறக்கமுடைய கும்பகருணன் எழுந்தது குறித்துத் திக்கு விசய காலத்து இவனுல் நலிவுற்றவர்களாதலின் மூவகை உலகத் தோரும் அஞ்சுவாராயினர். 31, 40 ஆம் எண்ணுள்ள சுவடிகளிலும் 52 ஆம் எண்ணுள்ள அச்சுப் புத்தகத்திலும் இப்பாடல் பொருட் டொடர்பு கருதி 'என்றலுமே அடிவணங்கி' என்பதன் பின்வைக்கப் பட்டுள்ளமையின் அவ்வாறே வைக்கப்பட்டுள்ளது. (57)

கும்பகருணனது உருவின் தன்மை

7456. விண்ணினை யிடறு மோலி
விசும்பினை நிறைக்கு மேனி
கண்ணெனு மவையி ரண்டுங்
கடல்களிற் பெரிய வாகு

மெண்ணினும் பெரியனுன விலங்கையர்
வேந்தன் பின்னேன்
மண்ணினே யளந்து நின்ற
மாலென வளர்ந்து நின்ருன்.

விண்ணினே இடறும் மோலி ; விசும்பினே நிறைக்கும் மேனி ;
கண்ணெனும் அவை இரண்டும் கடல்களின் பெரிய ஆகும் ;
எண்ணினும் பெரியன் ஆன இலங்கையர் வேந்தன் பின்னேன்
மண்ணினே அளந்து நின்ற மால் என வளர்ந்து நின்ருன்.

பொ :—(உருவத்தாலன்றி) எண்ணத்தாலும் உயர்ந்தவனுன இலங்கையர்களுக்கு அரசனுன இராவணனது தம்பியாகிய கும்பகருணன், உலகத்தை அளந்து நின்ற திருமால் போல(ப் பேருருவத்தோடு) ஓங்கி நின்ருன் : (அங்ஙனம் நின்றபோது, அவனுடைய) முடியானது வானத்தை முட்டும்; உடலானது வான வெளியை மறைக்கும் ; அவனுடைய கண்களென்று சொல்லப்படுகின்ற அவை இரண்டும் கடல்களேவிடப் பெரியவாகும்.

கு :—மோலி - மகுடம். பெரிய உருவத்தில் அமைந்த கண்களாதலின் 'கடல்களின் பெரியவாகும்' என்ருர். நின்றபடியே நெடுந்தூரம் வரை பார்ப்பவனென்பது பெறப்படுகிறது. எண்ணினும் பெரியனுன பின்னேன், இலங்கையர் வேந்தன் பின்னேன் எனத் தனித்தனி இயையும். கும்பகருணன் எண்ணத்தாலும் உயர்ந்தவனென்பது அவன் இராவணனுக்குக் கூறிய அறிவுரைகளாற் புலனும். எண் என்பதற்கு மதிப்பு எனப் பொருள் கொண்டு எல்லோருடைய மதிப்பிலும் பெரியவனுன இலங்கையர் வேந்தன் என அதனே இராவணனுக்கு ஏற்றிக் கூறுதலும் அமையும். எண்ணினும் என்ற எச்சவும்மையால் பிற உயர்வுகளாலன்றி மதிப்பினுலும் இராவணன் உயர்ந்தவன் என்பது பெறப்படுகிறது. 'வையந் தந்த நான்முகன் மைந்தன் மகன் மைந்தன், ஐயன் வேதம் ஆயிரம் வல்லான் அறிவாளன்' (சுந்தர காண். 483) என்னும் பகுதி ஈண்டு ஒப்புநோக்கத் தக்கது.

இச்செய்யுள், 40 ஆம் எண்ணுள்ள அச்சுப் புத்தகத்தில் 'அவ்வழி இராவணன் அனேத்து நாட்டமும்' (99) என்னும் செய்யுளுக்குப்பின் வைக்கப்பட்டிருத்தல் ஆராயத்தக்கது. (58)

## எழுந்த கும்பகருணன் உணவு முதலியன உட்கொள்ளுதல்

**7457.** ★ உறக்க மவ்வழி நீங்கி யுணத்தகும்
வறைக்க மைந்தன வூனெடு வாக்கிய
நறைக்கு டங்கள் பெருன்கடை நக்குவான்
இறக்க நின்ற முகத்தினை யெய்துவான்.

உறக்கம் அவ் வழி நீங்கி, உணத்தகும்
வறைக்கு அமைந்தன ஊனொடு, வாக்கிய
நறைக் குடங்கள் பெருன், கடை நக்குவான்
இறக்க நின்ற முகத்தினை எய்துவான்.

பொ :—அப்பொழுது உறக்கத்தினின்றும் எழுந்து, (தான்) உண்ணத்தக்க வறுத்தல் பொருந்திய இறைச்சியொடு (வடித்து) வார்க்கப்பட்ட கட்குடங்களும் பெருதவனுகி, வாயின் கடையை நக்கிக் கொண்டு தலைதாழ்த்தி நின்ற முகத்தினை உடையவனுக நின்ருன்,

கு :—வறை - வறுத்தல். வாக்குதல் - வார்த்தல்; ஊற்றுதல். 'அடர்பொற் சிரகத்தால் வாக்கி' (கலித்தொகை - 51). உணவின்றி உலர்ந்த வாயையுடையவன் என்பார், 'கடைநக்குவான்' என்ருர். இறக்க - தாழ. இறங்க என்பது வலிந்து நின்றது. இறக்க நின்ற முகம் என்றமையால் உணவுக்காக அவன் சுற்றிலும் பார்த்தமை பெறப்படும். உயர்ந்து நின்ற உருவத்தனுதலின் தாழ்ந்து பார்த்தான் என்க. (59)

**7458.** ஆறு நூறு சகடத் தடிசிலு
நூறு நூறு குடங்களு நுங்கினு
னேறு கின்ற பசியை யெழுப்பினுன்
சீறு கின்ற முகத்திரு செங்கணுன்.

ஆறு நூறு சகடத்து அடிசிலும்,
நூறு நூறு குடம் க(ள்)ளும் நுங்கினுன்;
ஏறுகின்ற பசியை எழுப்பினுன்;
சீறுகின்ற முகத்து இரு செங்கணுன்.

பொ :—கோபத்தோடு கூடிய முகத்தில் சிவந்த இரண்டு கண்களையுடைய கும்பகருணன், அறுநூறு வண்டி உணவையும் இரு நூறு குடம் கள்ளையும் விழுங்கினவனுய் மேலும் மேலும் மிகுகின்ற பசியைக் கிளப்பினுன்.

கு :—சகடம் - வண்டி. அடிசில் - சமைக்கப்பட்டது. நூறு நூறு என்பதற்குப் பல நூற்றுக்கணக்கான எனப் பொருள் கொள்ளு தலும் பொருந்தும். கள்ளும் எனற்பாலது இடைக்குறைந்து 'களும்' என நின்றது. நுங்குதல், உணவிற்கும் கள்ளிற்கும் ஏற்ற பொதுவினை. பெரும்பசி உடையவனுக்குச் சிறிது உணவு கிடைத்த மையின் பசி அடங்காதாயிற்று. பசி அடங்காமையை எழுப்பினுன் என்பது உலக வழக்கு. கோபம், உணவு பெருமையால் வந்தது. (60)

**7459.** எருமை யேற்றையோ ரீரறு நூற்றையு
மருமை யின்றியே தின்றிறை யாறினுன்
பெருமை யேற்றது கோடுமென் றேபிறங்
குருமை யேற்றைப் பிசைந்தெரி யூதுவான்.

எருமை ஏற்றை ஓர் ஈர் – அறுநூற்றையும்
அருமை இன்றியே தின்று, இறை ஆறினுன்
பெருமை ஏற்றது கோடும் என்றே - பிறங்கு,
உருமை ஏற்றைப் பிசைந்து, எரி ஊதுவான்.

பொ :—விளங்குகின்ற இடியேற்றினைக் கையாலே பிசைந்து நெருப்புப் பொறியாகப் பறக்கும்படி ஊதவல்ல கும்பகருணன், பெருமை பெற்றதாகிய உணவை (பேருண்டியைப் பின்னர்) உட் கொள்வோமென்று கருதி, ஆயிரத்திருநூறு எருமைக் கடாக்களையும் எளிதாக(ச் சிற்றுண்டியாக)த் தின்று சிறிது (புசி) ஆறினுன்.

கு :—ஏற்றை - ஆற்றலோடு கூடிய ஆண்பால் விலங்கு. இறை - சிறிது. 'பெருமை ஏற்றது கோடுமென்றே' என்பதற்குத் தங்கள் குலப் பெருமைக்கு ஏற்றதாகிய செயலையே செய்ய மேற் கொள்வோம் என்று கருதி எனப் பொருளுரைத்தலும் பொருந்தும். கொள் + தும் = கோடும். இத்தன்மைப் பன்மை வினை முற்று ஈண்டு ஒருமையில் உயர்வு பற்றி வந்தது. உருமை என்பதில் ஐ சாரியை. உரும் ஏறு - பேரிடி. இடிக்குப் பெருமையாவது ஏல்லாவற்றையும் தான் உண்ணுதல். எரி ஊதுதல் - நெருப்புப் பொறி பறக்கும்படி ஊதுதல். (61

**7460.** இருந்த போது மிராவண னின்றெனத்
தெரிந்த மேனியன் றிண்கட லின்றிரை
நெரிந்த தன்ன புருவத்து நெற்றியான்
சொரிந்த சோரிதன் வாய்வரத் தூங்குவான்.

இருந்தபோதும், இராவணன் நின்றெனத்
தெரிந்த மேனியன் ; திண் கடலின் திரை
நெரிந்தது அன்ன புருவத்து நெற்றியான் ;
சொரிந்த சோரி தன் வாய் வர, தூங்குவான் ;

பொ :—(கும்பகருணன்) உட்கார்ந்திருந்தபோதும் இராவணன் நின்றாற்போன்று விளங்கிய உடம்பையுடையவன் ; வலிய கடலின் அலைகள் வளைந்து தோன்றுவதை ஒத்த புருவத்தைக் கொண்ட நெற்றியினையுடையான் ; (தான் உண்ட இறைச்சியினின்றும்) வெளிப்பட்ட இரத்தம் தன் வாயினின்றும் ஒழுகும்படியாக இயல்பான தூக்கத்தையுடையவன் ;

கு :—கும்பகருணன் அமர்ந்திருக்கும்போதும் இராவணன் நின்றாற்போன்று அவ்வளவு உயரமுடையவனாகத் தோன்றுவன் என்றமையால் கும்பகருணனது உயர்ந்த தோற்றம் நமக்குப் புலனாகின்றது. குருதி ஒழுகுதல், இறைச்சி உணவை உடையவன் என்பதை விளக்குகிறது. (62)

**7461.** உதிர வாரியோ டூனொ டெலும்புதோ
லுதிர வாரி நுகர்வதோ ரூணினான்
கதிர வாள்வயி ரப்பணைக் கையினான்
கதிர வாள்வயி ரக்கழற் காலினான்.

உதிர வாரியோடு ஊனொடு எலும்பு தோல்
உதிர, வாரி நுகர்வது ஓர் ஊணினான் ;
கதிர வாள் வயிரப் பணைக் கையினான் ;
கதிர வாள் வயிரக் கழற் காலினான் ;

பொ :—இரத்த வெள்ளமும் இறைச்சியும் எலும்பும் தோலும் சிந்துமாறு எடுத்து உண்ணும்படியான உணவை உடையவன் ; நெற்கதிர் போன்ற வாளினை ஏந்திய உறுதியான பெரிய கையினை உடையவன் ; சந்திரனுடைய ஒளிபோன்ற வயிரக் கற்கள் பதிக்கப் பெற்ற கழலையணிந்த காலினையுடையவன் ;

கு :—ஓடு ஒடு இரண்டும் எண்ணுப் பொருள. வாரி நுகர்வதால் உதிர்வனவாயின. கதிரவாள் என்பது வடிவு உவமம் பற்றி வந்தது. கதிர என்பது குறிப்புப் பெயரெச்சம். நான்காம் அடியிலுள்ள கதிரவாள் என்பதில் அகரம் உடைமைப் பொருள். இச்செய்யுளில் யமகம் என்னும் சொல்லணி அமைந்துள்ளது. (63)

**7462.** இரும்ப சிக்கு மருந்தென வெஃகிஞே
டிரும்ப சிக்கு மருந்து மெயிற்றிஞன்
வருங்க ளிற்றினைத் தின்றனன் மாலரு
வருங்க ளிற்றிரி கின்றதோ ராசையான்.

இரும் பசிக்கு மருந்து என, எஃகிஞேடு
இரும்பு அசிக்கும் அருந்தும் எயிற்றிஞன்;
வரும் களிற்றினைத் தின்றனன்; மால் அரு
அரும் க(ள்)ளில் திரிகின்றது ஓர் ஆசையான்;

பொ :—கொடிய பசியாகிய நோய்க்கு மருந்து என்று எஃகிஞேடு இரும்பையும் உண்ணும், (மென்று தின்பதற்கு அவை வன்மை யுடையன அல்ல என்று) அவமதித்துச் சிரிக்கும் பற்களையுடையான்; தன்பால் வருகின்ற யானைகளைத் தின்று, பசி மயக்கம் நீங்காது, அரிய கள்ளின் மேலே செல்லுகின்ற ஒப்பற்ற ஆசையினை உடையான்;

கு :—எஃகு – உருக்கப்பட்டது. அசித்தல் - அவமதித்துச் சிரித்தல். அருந்தும் எயிற்றிஞன், அசிக்கும் எயிற்றிஞன் எனத் தனித்தனி இயையும். எனவென் எச்சம் அருந்தும் என்னும் வினை யொடு முடிதலின் அதனை அசிக்கும் என்பதன் முன் கூட்டப்பட்டது. முதல் இரண்டடிகளால் அவன் பற்களின் வன்மை குறிப்பிடப் பட்டது. 'தின்றனன்' என்பது முற்றெச்சம். மால் - பசியால் உண்டான மயக்கம். அருது என்பது ஈறு குறைந்து நின்றது. கள்ளில் என்பது இடைக் குறைந்து நின்றது. (64)

**7463.** சூல மேகந் திருத்திய தோளிஞன்
சூல மேக மெனப்பொலி தோற்றத்தான்
காலன் மேனிமிர் மத்தன் கழற்பொரு
காலன் மேனிமிர் செம்மயிர்க் கற்றையான்.

சூலம் ஏகம் திருத்திய தோளிஞன்;
சூல மேகம் எனப் பொலி தோற்றத்தான்;
காலன்மேல் நிமிர்மத்தன்; கழல் பொரு
காலன்; மேல் நிமிர் செம் மயிர்க் கற்றையான்;

பொ :—சூலம் ஒன்றையே சிறந்தது என்று கொண்ட கையினை யுடையவன்; சூல் கொண்ட மேகத்தைப் போன்ற கருத்த வடிவை யுடையவன்; இயமன் மேலும் போருக்குச் செல்லவல்ல செருக்குடை

யவன்; வீரக் கழலணிந்த காலினையுடையவன்; தலையின் மேலோங்கிய செம்மயிர்த் தொகுதியினை உடையான்;

கு:—சூலம் ஏகமே எனப் பிரிநிலை ஏகாரம் வருவித்துரைக்க. ஆலமுண்டவனால் தரப்பட்டு வெற்றிச் சிறப்பினையுடையதாதலின் படைபலவற்றுள்ளும் இதனையே மிகுதியாகப் பயிறலுடையவனென்பார், 'சூலம் ஏகம் திருத்திய தோளினான்' என்றார். சூலமே கந்து இருத்திய தோளினான் எனப் பிரித்து எப்பொழுதும் சூலத்தையே அதன் கழுத்தடியில் பிடித்திருக்கும் கையினை உடையான் எனப் பொருள் கொள்ளுதலும் ஆம். ஏகாரம் பிரிநிலை ஏகாரம். சூல என்பது சூல் என்பதனடியாகப் பிறந்த குறிப்புப் பெயரெச்சம். எல்லா உயிர்களையும் கொல்லும் காலனையும் எதிர்க்கும் ஆற்றலுடையவன் என்பதால் அவன் வன்மை பெறப்பட்டது. (65)

**7464.** எயிற லைத்த கரதலத் திந்திரன்
எயிற லைத்த கரதலத் தெற்றினான்
அயிற லைத்தொட ரங்கையன் சிங்கவூன்
அயிற லைத்தொட ரங்ககல் வாயினான்.

எயில் தலைத் தகர, தலத்து இந்திரன்
எயிறு அலைத்த கரதலத்து, எற்றினான்;
அயில் தலைத் தொடர் அங்கையன்; சிங்க ஊன்
அயிறலைத் தொடர் அங்கு அகல் வாயினான்;

பொ:—சுவர்க்க லோகத்திலுள்ள இந்திரனை (அவன்) பற்களை உதிரச் செய்த கையினாலே அண்டப் பித்திகையின்கண் (அவன் வலி) சிதையும்படியாக மோதியவன்; முத்தலைச் சூலத்தையும் சிறந்த பாசத்தையும் பற்றிய அழகிய கையினை உடையான்; சிங்கத்தின் இறைச்சியை உண்ணுதலை மேலும் தொடர்ந்து செய்கின்ற அகன்ற வாயினை உடையான்;

கு:—கும்பகருணன் இந்திரனை எற்றியது திக்கு விசயத்தின் போது. தலத்து இந்திரன் எயிறு அலைத்த கரதலத்து, எயில் தலைத் தகர எற்றினான் என இயைக்க. முதலடியில் தகரத் தலத்து என மிக்கு வரற்பாலது மடக்குப் பற்றி மிகாது வந்தது. மூன்றும் அடியிலுள்ள தொடர் என்பது பாசம் என்னும் படையை உணர்த்திற்று. 'சிங்க ஊன்' என்பதை ஊன் சிங்க என மாற்றி(த் தொழிலாளர் கொண்டு வந்த) இறைச்சி குறைந்த அளவிலே, மேலும் உண்ணுதற்குத் தொடங்குகின்ற அகன்ற வாயையுடையவன் எனலும் ஆம்.

சிங்குதல் - குறைதல். 'சிங்காவண்புகழ்ச் சிங்கபுரத்து' (சிலப். பதிகம் - 47) சிங்க, அயிறலைத் தொடர் வாயினன் என இயைக்க. அயில் + தல் = அயிறல்; உண்ணுதல். அங்கு - அசை. (66)

**7465.** உடல்கி டந்துழி யும்பர்க்கு முற்றுயிர்
குடல்கி டந்தடங் காநெடுங் கோளினன்.
கடல்கி டந்தது நின்றதன் மேற்கதழ்
வடக டுங்கனல் போன்மயிர்ப் பங்கியான்.

உடல் கிடந்துழி, உம்பர்க்கும் உற்று, உயிர்,
குடல் கிடந்து அடங்கா நெடுங் கோளினன்;
கடல் கிடந்தது நின்றதன்மேல் கதழ்
வட கடுங் கனல்போல் மயிர்ப் பங்கியான்;

பொ :—தேவர்களுக்கும் அவன் உடம்பு கிடந்த விடத்தும் (அதனைப் பார்த்துத் தம்முடைய) உயிர், குடலிலே பொருந்திக் கிடந்து அடங்காமல் வெளிப்படுதற்குக் காரணமான பெரிய வலிமை மிகு தோற்றத்தினையுடையான்; கிடந்ததாகிய கடல் நிமிர்ந்து நின்றதன்மேல் விரையுந் தன்மையுள்ள கொடிய வடவைத் தீப்போல விளங்குகின்ற மயிர்க் கற்றையை உடையவன்;

கு :—முதல் இரண்டடிகளால் தேவர்களையும் அஞ்சச் செய்யும் உருவத்தையுடையான் என்பது பெறப்பட்டது. உழி - காலப் பொருட்டு. உழியும் என உம்மை விரிக்க. கோள் - வலிமை; ஈண்டு ஆகுபெயராய் வலிமையுடைய உருவத்தை உணர்த்திற்று. கதழ்வு - விரைதல். 'கதழ்வும் துனைவும் விரைவின் பொருள' (தொல். சொல். உரி. 17). கடல் நிமிர்ந்து நின்றால் உள்ள தோற்றம் கும்ப கருணனது கரிய மேனியின் தோற்றத்திற்கும் கடல்மேல் பொங்கி எழும் வடவைத் தீயின் தோற்றம் அவன் தலைமேலுள்ள செம்பங்கிக்கும் உவமையாய் வந்தன. (67)

**7466.** திக்க டங்கலும் வென்றவன் சீறிட
மிக்க டங்கிய வெங்கதி ரங்கிகள்
புக்க டங்கிய மேருப் புழையெனத்
தொக்க டங்கித் துயிறரு கண்ணினன்.

திக்கு அடங்கலும் வென்றவன் சீறிட,
மிக்கு அடங்கிய வெங்கதிர் அங்கிகள்

புக்கு அடங்கிய மேருப் புழை என,
தொக்கு அடங்கித் துயில்தரு கண்ணினன் ;

பொ :--திக்குகள் யாவற்றையும் வென்றவனுகிய இராவணன் கோபிக்க, (அதனுல் தம் ஆற்றல்) மிகவும் அடங்கிப் போன சுடுகின்ற கிரணங்களையுடைய சூரியனும் அக்கினியும் போய்ப் பதுங்கிக் கொண்ட மேருமலையிலுள்ள குகையைப்போல, (கோபம்) திரண்டு அடங்கித் துயிலுகின்ற கண்களையுடையான் ;

கு :—வெம் கதிர் - வெம்மையான கிரணங்களையுடைய சூரியன். அங்கி - அக்கினி. சூரியனும் அக்கினியுமாகிய இரண்டும் எனப் பன்மை குறிக்கக் கள் விகுதி வந்தது. இராவணனுக்குத் தோற்றோடிய சூரியனும் அக்கினியும் மலைமுழைஞ்சினுள் பதுங்கினர் எனப் பொருள்படக் கூறிய நயம் பாராட்டற்குரியது. சூரியனும் அக்கினியும் அடங்கிய மாமேருவின் முழைபோன்றன கும்பகருணனின் துயிலுகின்ற கண்கள் என்பதாம். மாமேரு கும்பகருணன் உடலுக்கும் அதன்கண் உள்ள புழை அவனுடைய கண்களுக்கும் உவமையாக வந்தன. (68)

**7467.** காம்பி றங்குங் கனவரைக் கைம்மலை
தூம்பி றங்கு மதத்தின துய்த்துட
லோம்பு றும்முழை யென்றுயர் மூக்கினன்
பாம்பு றங்கும் படர்செவிப் பாழியான்.

காம்பு இறங்கும் கன வரைக் கைம்மலை,
தூம்பு இறங்கும் மதத்தின, துய்த்து, உடல்
ஓம்புறும் முழை என்று உயர் மூக்கினன் ;
பாம்பு உறங்கும் படர் செவிப் பாழியான் ;

பொ :—மூங்கில்கள் தங்கியிருக்கும்படியான பெருத்த மலை போன்ற யானைகள் துளைவழியாக ஒழுகுகின்ற மதத்தினை உடையனவாய், உணவுண்டு தன் உடலைக் காப்பாற்றுதற்கு வந்து தங்கும் குகை என்று சொல்லும்படியாக உயர்ந்த மூக்கினையுடையவன் ; பாம்புகள் தங்கும்படியான அகன்ற செவியாகிய குகைகளையுடையவன் ;

கு :—காம்பு - மூங்கில். தூம்பு - துளை. யானைகள் உறங்கும் முழைபோலப் பெரியது அவன் மூக்கு என்பது பெறப்பட்டது. பாழி - குகை. 'இருந்தபோதும் இராவணன் நின்றென' (62) என்னும்

செய்யுள் முதல் 'காம்பு இறங்கும் கனவரை' (69) என்னும் செய்யுள் முடிய வருவன கும்பகருணனது தோற்றத்தை விளக்கியவாறு. (69)

இச்செய்யுளையடுத்து 52 ஆம் எண்ணுள்ள அச்சுப் புத்தகத்தில் பின்வருமாறு ஒரு மிகைப்பாடல் காணப்படுகிறது.

7467 (a) இனைய கும்ப கருணன் இராக்கதர்
தனை முனிந்து இடி ஏறு எனச் சாற்றினன்
எனை நெடுந் துயில் போக்கியது என்னென
மனம் நடுங்கினர் வாய்புதைத்து ஓதினர்,

## தமையன் அழைத்த செய்திகேட்டு, இராவணன் முன்சென்று கும்பகருணன் வணங்குதல்

**7468.** கூயி னன்னும்மு னென்றவர் கூறலும்
போயி னன்னகர் பொம்மென் றிரைத்தெழ
வாயில் வல்லை நுழைந்து மதிதொடும்
கோயி லெய்தினன் குன்றன கொள்கையான்.

'கூயினன் நும்முன்' என்று, அவர் கூறலும்,
போயினன், நகர் பொம்மென்று இரைத்து எழ;
வாயில் வல்லை நுழைந்து, மதிதொடும்
கோயில் எய்தினன், குன்று (அ)ன்ன கொள்கையான்.

பொ :—எழுப்பச் சென்றவர்கள், 'உன் தமையன் (உன்னை) அழைத்துவரச் சொன்னான்' என்று சொல்லுதலும், மலைபோன்ற சலியாத கொள்கையை உடையவனாகிய கும்பகருணன், நகரிலுள்ளார் ஆரவாரித்து ஒலி எழுப்ப விரைந்து சென்று, புறவாயிலில் நுழைந்து, திங்களைத் தீண்டும்படியாக உயர்ந்த அரண்மனையை அடைந்தான்.

கு :—போயினன் என்பது முற்றெச்சம். வல்லைபோயினன் என இயைக்க. 'பொம்மென்று' என்றது ஒலிக்குறிப்பு. 'இரைத்தெழ' என்றது ஒரு சொல் நீர்மைத்து. பெருமை, வலியுடைமை, சலியாமைகளை உடையவன் என்பார், 'குன்றன கொள்கையான்' என்றார். கொள்கையான், கூறலும் எழ, போய் நுழைந்து எய்தினன் என முடிக்க. (70)

**7469.** நிலை கிடந்த நெடுமதிட் கோபுரத்
தலை கிடந்த விலங்கைய ரண்ணலைக்
கொலை கிடந்தவேற் கும்ப கருணனோர்
மலை கிடந்தது போல வணங்கினான்.

நிலை கிடந்த நெடுமதிள் கோபுரத்து
அலை கிடந்த இலங்கையர் அண்ணலைக்
கொலை கிடந்தவேல் கும்பகருணன், ஓர்
மலை கிடந்தது போல, வணங்கினான்,

பொ :—கொல்லுதலைச் செய்யும் வேலையுடைய கும்பகருணன், பெரிய மதிலையுடையதும் பல நிலைகளைக் கொண்ட கோபுரத்தை யுடையதுமான, கடலால் சூழப்பெற்று விளங்கிய இலங்கையிலுள்ளார்க்குத் தலைவனாகிய இராவணனை ஒரு மலை கிடந்தது போல(த் தோன்றும்படி) கீழே விழுந்து வணங்கினான்.

கு :—நெடு மதிலையும் நிலை கிடந்த கோபுரத்தையும் உடைய இலங்கை, அலை கிடந்த இலங்கை எனத் தனித் தனி இயையும். 'அலை' என்பது ஆகுபெயராய்க் கடலை உணர்த்தி இலங்கைக்கு அடைமொழியாக நின்றது. 'கொலை கிடந்த வேல்' என்பது இயற்கையடை. கும்பகருணன் நிலத்தில் விழுந்து வணங்கிய தோற்றம் மலை கிடந்ததுபோல விளங்குவதாயிற்று. (71)

## இராவணன் தம்பியைத் தழுவி, அவனுக்கு உணவு முதலியன அளித்துப் போர்க்கோலம் செய்தல்

**7470.** வன்று ணைப்பெருந் தம்பி வணங்கலுந்
தன்றி ரண்டதோ ளாரத் தழுவினான்
நின்ற குன்றொன்று நீணெடுங் காலொடுஞ்
சென்ற குன்றைத் தழீஇயன்ன செய்கையான்.

வன் துணைப் பெருந்தம்பி வணங்கலும்,
தன் திரண்ட தோள் ஆரத் தழுவினான்
நின்ற குன்று ஒன்று, நீள் நெடுங் காலொடும்
சென்ற குன்றைத் தழீஇயன்ன செய்கையான்.

பொ :—(இராவணன், தனது) வலிய துணைவனாகிய பெரிய தம்பி வணங்கி எழுதலும், நின்று கொண்டிருக்கின்ற ஒரு மலை (தன் எதிரில்) நீண்ட பெரிய காலோடு வந்த மலையைத் தழுவியது

போன்ற தன்மையனாய், (அவனைத்) தன்னுடைய திரண்ட தோள்களால் பொருந்தத் தழுவிக் கொண்டான்.

கு :—சிறிய தம்பியும் ஒருவன் உளனாதலின் பெரிய தம்பி என்றார். வன்துணைத் தம்பி என்பதனுடன் 'திண்பொருளெய்தலாகும் தெவ்வரைச் செகுக்கலாகும்' (சீவக சிந். 1760) என்னும் செய்யுட் பகுதி ஒப்பு நோக்கத்தக்கது. தோளாரத் தழுவினான் என்றதால் கையொடும் நின்ற குன்று என உவமானத்திற்கேற்பக் கொள்ளப்படும். தழுவினான் என்றதனால் வணங்கி எழுந்தான் என்பது பெறப்பட்டது. நின்ற குன்று - இராவணன். நீள் நெடுங் காலொடும் சென்ற குன்று – கும்பகருணன். தழீஇயன்ன செய்கையான் என்பதற்குத் தழுவியது போன்ற தன்மையனாய் எனப் பொருள் கொண்டு ஆரத் தழுவினான் என்பதைப் பயனிலையாக்குக. (72)

**7471.** உடனி ருத்தி யுதிரத்தொ டொண்ணறைக்
குடனி ரைத்தவை யூட்டித் தசைக்கொளீஇக்
கடனு ரைத்துகில் சுற்றிக் கதிர்க்குழாம்
புடைநி ரைத்தொளிர் பல்கலன் பூட்டினான்.

உடன் இருத்தி, உதிரத்தொடு ஒள்நறைக்
குடன் நிரைத்தவை ஊட்டி, தசைக் கொளீஇ,
கடல் நுரைத் துகில் சுற்றி, கதிர்க்குழாம்
புடை நிரைத்து ஒளிர் பல்கலன் பூட்டினான்.

பொ :—தன்னுடன் இருக்கச் செய்து உதிரமும் சிறந்த கட்குடங்களும் வரிசைப்பட வைத்து, அவற்றை உண்பித்து, (மேலும்) ஊனையும் உண்ணச் செய்து, கடலினது நுரைபோன்ற மெல்லிய ஆடையை உடுத்தி, ஒளித் தொகுதிகளைப் பக்கத்திலே வரிசையாக வைத்ததுபோல விளங்குகின்ற பல இரத்தின ஆபரணங்களையும் அணிவித்தான்.

கு :—குடன் என்பது மகர ணகரப் போலி. கொளீஇ-கொள்ளச் செய்து; உண்பித்து என்றபடி. ஆடையினது வெண்மைக்கும் மென்மைக்கும் கடல் நுரை உவமிக்கப்பட்டது. நிரைத்தாற்போல என்பது நிரைத்து என நின்றது. (73)

**7472.** பேர விட்ட பெருவலி யிந்திரன்
ஊர விட்ட களிற்றொடு மோடுநாள்

சோர விட்ட சுடர்மணி யோடையை
வீர பட்ட மெனநுதல் வீக்கினுன்.

பேர விட்ட பெரு வலி இந்திரன்
ஊர விட்ட களிற்ருெடும் ஓடுநாள்,
சோர விட்ட சுடர்மணி ஓடையை
வீரபட்டம் என, நுதல் வீக்கினுன்.

பொ :—(தன்னுடைய) மிக்கவலி தொலைந்துபோன இந்திரன், (தான்) ஊர்ந்துவந்த யானையோடும் (தனக்குப்) புறமுதுகிட்டு ஓடின போது, நழுவி வீழ்ந்த விளக்கத்தையுடைய மணிகள் பதித்த (தான் எடுத்து வந்த) முகபடாத்தை (இவனுடைய) வீரத்தை விளக்கும் பட்டம் என்று சொல்லும்படியாக நெற்றியில் கட்டினுன்.

கு :—இந்திரன் தோற்ருேடியது இராவணனது திக்கு விசய காலத்து. ஓடை - யானையினுடைய முகபடாம்; என்றது துணியில் மணிகள் வைத்துத் தைக்கப்பட்ட முக அணியை. (74)

**7473.** மெய்யெலா மிளிர் மின்வெயில் வீசிடத்
தொய்யில் வாசத் துவர்துதைந் தாடிய
கய்யி ஞக மெனக்கடல் மேனியிற்
றெய்வ நாறுசெஞ் சாந்தமும் சேர்த்தினுன்.

மெய் எலாம் மிளிர் மின்வெயில் வீசிட,
தொய்யில் வாசத் துவர் துதைந்து ஆடிய
கய்யின் நாகம் என, கடல் மேனியில்,
தெய்வம் நாறு செஞ்சாந்தமும் சேர்த்தினுன்.

பொ :—வாசனையோடு கூடிய சிவந்த சந்தனக் குழம்பில் படிந்து மூழ்கிய துதிக்கையைக் கொண்ட யானைபோல(த் தோன்றுமாறு, அந்தக் கும்பகருணனுடைய) உடம்பெல்லாம் விளங்குகின்ற மின்னலைப்போன்ற ஒளி வீசிடும்படியாகத் தெய்வமணம் வீசுகின்ற சிவந்த சந்தனக் குழம்பைக் கடல் போலப் பரந்த மார்பில் பூசினுன்,

கு :—வாசத்துவர் தொய்யில் துதைந்தாடிய கையின் நாகம். செஞ்சாந்து பூசப்பட்ட கும்பகருணனுக்கு உவமை. தொய்யில் - சந்தனக்குழம்பு. கைநாகம் என்பது இன்சாரியை பெற்று வந்தது. கடல், பரப்பாலும் நிறத்தாலும் மேனிக்கு உவமையாயிற்று. மேனி என்றது ஈண்டு மார்பின் அளவாக நின்றது. மார்பில் பூசிய சந்தனம் உடம்பெல்லாம் ஒளி வீசியதென்றபடி. (75)

7474. விடமெ ழுந்தது போனெடு விண்ணினைத்
தொடவு யர்ந்தவன் மார்பிடைச் சுற்றினன்
இடப முந்து மெழிலிரு நான்குதோட்
கடவு ளீந்த கவசமுங் கட்டினன்.

விடம் எழுந்ததுபோல், நெடு விண்ணினைத்
தொட உயர்ந்தவன் மார்பிடைச் சுற்றினன்,
இடபம் உந்தும், எழில் இரு–நான்கு தோள்,
கடவுள் ஈந்த கவசமும் கட்டினன்.

பொ :—ஆலகாலம் (ஓர் உருப்பெற்று) எழுந்து நின்றாற்போன்று பெரிய விசும்பைத் தொடும்படியாக உயர்ந்து நின்ற கும்பகருணனுடைய மார்பில், ஆனேற்றைச் செலுத்துகின்ற, அழகிய எட்டுத் தோள்களையுடைய சிவபெருமான் கொடுத்த கவசத்தைச் சுற்றிக் கட்டினான்.

கு :—விடம், உருப்பெற்று எழுந்து நின்றாற்போல எனப் பொருளுக்கேற்ப வருவிக்கப்பட்டது. முன்பு திருப்பாற்கடலில் எழுந்த நஞ்சினால் தேவர்கள் அஞ்சினாற்போலக் கும்பகருணன் எழுச்சியினாலும் அஞ்சப் போகின்றார்கள் என்பதை ஆசிரியர் உவமையால் உய்த்துணரவைத்தார். கருமை நிறமும் கொடுமையும் உடைமைபற்றி நஞ்சு உவமையாயிற்று. இடபம் உந்தும் கடவுள், எழில் இரு நான்கு தோள் கடவுள் எனத் தனித்தனி இயைக்க. சுற்றினன் என்பதை எச்சமாக்கிக் கட்டினன் என்பதனோடு கூட்டி முடிக்க. சுற்றினன் என்பதற்குச் சுற்றி வந்து எனப் பொருள் கொண்டு, கும்பகருணனுடைய மார்பின் அகலம் இராவணன் கைகளுக்கு அடங்காமையின் சுற்றி வந்து கட்டினன் எனக் கூறுதலும் அமையும. (76)

இச் செய்யுளை அடுத்து 1, 10, 11 ஆம் எண்ணுள்ள ஏட்டுச் சுவடிகளில் பின் வருமாறு ஒரு மிகைப்பாடல் காணப்படுகிறது.

7474 (a) வட்ட விண்ணையு மாதிர மெட்டையும்
கட்டி வீரங் கணிப்பரும் காவலான்
தொட்ட பல்கல னுஞ்சுடர் மௌலியும்
தெட்ட சோதி திளைப்பநின் றனரோ.

## கும்பகருணன் போர்க்கோலம் செய்ததற்குக் காரணம் வினவுதல்

**7475.** அன்ன காலையி லாயத்தம் யாவையும்
என்ன காரணத் தாலென் றியம்பினான்
மின்னி னன்ன புருவமும் விண்ணினைத்
துன்னு தோளு மிடந்துடி யாநின்றான்.

அன்ன காலையில், 'ஆயத்தம் யாவையும்
என்ன காரணத்தால்?' என்று இயம்பினான்—
மின்னின் அன்ன புருவமும், விண்ணினைத்
துன்னு தோளும், இடம் துடியா நின்றான்.

பொ :—அப்பொழுது, மின்னலைப் போன்ற (விளக்கத்தை யுடைய) இடப் புருவமும் விசும்பைத் தொடும்படியான இடத் தோளும் துடிப்ப நின்றவனாகிய கும்பகருணன், 'இவ்வாறு சிறப்புச் செய்வன வெல்லாம் எதைக் குறித்து?' என்று (இராவணனைக்) கேட்டான்.

கு :—ஆயத்தம் - ஏற்பாடுகள். ஆடவர்க்கு இடப் புருவமும் இடத்தோளும் துடித்தல் தீநிமித்தமாகும். இடம் என்பது புருவம், தோள் ஆகிய இரண்டுடனும் கூட்டப்பட்டது. துடியா நின்றான் - ஆநின்று என்னும் நிகழ்கால இடைநிலை பெற்ற சொல். துடியா நின்றான் இயம்பினான் என முடிக்க. (77)

இச் செய்யுளையடுத்து 1, 10, 11, 65 ஆம் எண்ணுள்ள ஏட்டுச் சுவடிகளில் பின்வருமாறு ஒரு மிகைப்பாடல் காணப்படுகின்றது.

7475 (a) என்ற போதி லெறுழ்வலிச் செம்மணிக்
குன்ற மையிரண் டேந்திக் குலவரை
சென்ற தென்னத் திரிந்துல கியாவையும்
வென்ற வீர னினைய விளம்பினான்.

## இராவணன் கும்பகருணனைப் போர் செய்ய ஏவுதல்

**7476.** வான ரப்பெருந் தானையர் மானிடர்
கோன கர்ப்புறஞ் சுற்றினர் கொற்றமும்
ஏனை யுற்றனர் நீயவ ரின்னுயிர்
போன கத்தொழின் முற்றுதி போயென்றான்.

'வானரப் பெருந் தானையர், மானிடர்,
கோ நகர்ப் புறம் சுற்றினர்; கொற்றமும்
ஏனை உற்றனர்; நீ அவர் இன் உயிர்
போனகத் தொழில் முற்றுதி போய்' என்றான்.

பொ:—(அதற்கு இராவணன்), 'மானிடர் (இருவர்) பெரிய குரங்குப் படையினை உடையராகி, தலைமை பொருந்திய நகர்ப் புறத்தே சுற்றி வளைத்துக்கொண்டு என்னையும் வெற்றி கொண்டனர்; நீ போய் அவர் இனிய உயிரை உண்ணுகின்ற செயலை முடிப்பாயாக' என்றான்.

கு:—மானிடர் தானையராய்ச் சுற்றிக்கொண்டு என்னையும் கொற்றம் உற்றனர் என இயைக்க. தானையர் ஆகி என விரிக்க. சுற்றினர் முற்றெச்சம். ஏனை என்பது எனை என்பதன் நீட்டல். கொற்றமும் என்பதிலுள்ள உம்மை ஏனை என்பதனோடு பிரித்துக் கூட்டப்பட்டது. இவ்வாறன்றி ஏனைக் கொற்றமும் உற்றனர் என இயைத்து இதுவரை எவரும் பெருததான வெற்றியையும் பெற்றனர் எனவும் பொருள் கொள்ளலாம். 'உயிர் போனகத் தொழில் முற்றுதி' எனவே அவர்களைக் கொன்று உண்டு பசியடங்குவாயாக என எளிமைப்படக் கூறினன். 'நீ அவர் இன்னுயிர் போனகத்தொழில் முற்றுதிபோய்' என்ற தொடர், அவர்கள் உன்னுடைய இன்னுயிரை உண்ணுந் தொழிலாகச் செய்ய நீ போய் முற்றுவிப்பாய் என்றதோர் அமங்கலப் பொருளுந்தோன்ற நின்றது. இங்ஙனம் இராவணன் அறியாமலே அவனுடைய பேச்சில் கும்பகருணன் போரில் இறந்து விடுவான் என்ற கருத்தும் குறிப்பினுல் தோன்றுமாறு கம்பர் கூறியுள்ள திறம் பாராட்டற்குரியது. (78)

## கும்பகருணன் போர் நேர்ந்தமைக்கு வருந்தி இராவணனுக்கு அறிவுரை கூறுதல்

**7477.** ஆனதோ வெஞ்சம மலகில் கற்புடைச்
★ சானகி துயரினந் தவிர்ந்த தில்லையோ
வானமும் வையமும் வளர்ந்த வான்புகழ்
போனதோ புகுந்ததோ பொன்றுங் காலமே.

'ஆனதோ வெஞ்சமம்? அலகில் கற்புடைச்
சானகி துயர் இனம் தவிர்ந்தது இல்லையோ?
வானமும் வையமும் வளர்ந்த வான்புகழ்
போனதோ? புகுந்ததோ, பொன்றும் காலமே?

பொ :—'(அண்ணா) கொடிய போர் உண்டாகி விட்டதோ? உயர்ந்த கற்புடைய சானகியினுடைய துன்பம் இன்னும் நீங்க வில்லையோ? தேவருலகத்தும் மண்ணுலகத்தும் வளர்ந்த (நம் முடைய) மேலான புகழ் போய்விட்டதோ? (நாம் எல்லாம்) அழியும் படியான காலம் வந்துவிட்டதோ?

கு :—சமம் - போர். அலகு - எண்ணிக்கை. 'அலகில் கற்பு' என்றதால் உயர்ந்த கற்பு என்பது பெறப்பட்டது. சனகன் மகள் சானகி எனப்பட்டாள். மந்திராலோசனையின்போது சானகியை விட்டுவிடுமாறு கூறினவனாதலின், இன்னும் சிறையிலிருந்து விட வில்லை என்று உட்கொண்டு, 'சானகி துயர் இனம் தவிர்ந்த தில்லையோ?' என்று கூறினான். ஒரு பெண்ணினால் அரக்கர் குலம் அழிந்தது என்னும் பழி மேலிட இருப்பதால், 'வான்புகழ் போனதோ?' என்றான். அடாத காரியம் செய்திருத்தலின் 'அடாது செய்பவர் படாது படுவர்' என்றதைக் கொண்டு, பொன்றுங்காலம் புகுந்ததோ?' என்றான். (79)

**7478.** கிட்டிய தோசெருக் கிளர்பொற் சீதையைச்
சுட்டிய தோமுனஞ் சொன்ன சொற்களால்
திட்டியின் விடமன்ன கற்பின் செல்வியை
விட்டிலை யோவிது விதியின் வண்ணமே.

'கிட்டியதோ, செரு? கிளர் பொன் சீதையைச்
சுட்டியதோ? முனம், சொன்ன சொற்களால்,
திட்டியின் விடம் அன்ன கற்பின் செல்வியை
விட்டிலையோ? இது விதியின் வண்ணமே!

பொ :—'போர் நெருங்கி விட்டதோ? (அப்போர்) விளங்கு கின்ற இலக்குமியாகிய சீதையைக் கருதி ஏற்பட்டதோ? மந்திரா லோசனைக் காலத்தில் (யான்) சொன்ன சொற்களைக் கொண்டு திட்டிவிடப் பாம்புபோன்ற கற்பினையுடைய சீதையை இன்னும் விட வில்லையா? இவ்வாறு விட்டிடாமலுள்ளது உன்னுடைய விதியின் தன்மையினாற் போலும்.

கு :—'மானிடர் கோநகர்ப்புறம் சுற்றினர்' என்னும் இராவணன் கூற்றை யுட்கொண்டு, 'செரு கிட்டியதோ?' என வினவினான். சுட்டியது - கருதியது. திட்டியின், இன் சாரியை. திட்டிவிடம், கண்ணில் நஞ்சுடைய பாம்பு; பார்வையினாற் கொல்லும் என்றபடி. 'திட்டிவிட முணும் செல்லுயிர் போனால், தீயழல் அவனொடு சேயிழை

மூழ்குவை' (மணிமேகலை 9: 49 - 50) ஏனைய விடங்கள் உண்ட வழிக் கொல்லும்; இவ்விடம் கண்ட வழிக் கொல்லும் ஆதலால் 'திட்டியின் விடமன்ன கற்பின் செல்வி' என்றான். விதி - ஊழ். 'விதியின் வண்ணமே' என்பதனுடன் 'ஊழிற் பெருவலியாவுள மற்றொன்று, சூழினும் தான்முந்துறும்' (380) என்னும் திருக்குறள் ஒப்புநோக்கத் தக்கது. (80)

**7479.** கல்லலா முலகினை வரம்பு கட்டவும்
சொல்லலாம் பெருவலி யிராமன் றோள்களை
வெல்லலா மென்பது சீதை மேனியைப்
புல்லலா மென்பது போலுமா லையா.

'கல்லலாம் உலகினை; வரம்பு கட்டவும்
சொல்லலாம்; பெருவலி யிராமன் தோள்களை
வெல்லலாம் என்பது, சீதை மேனியைப்
புல்லலாம் என்பது போலுமால்—ஐயா!

பொ :—'தலைவனே, பூமியினை அகழ்ந்து எடுத்தும் விடலாம்; அதனைச் சுற்றி எல்லை கட்டவும் ஏவலாம்; (ஆனால்) மிக்க வலிமையுடைய இராமனுடைய தோள்களை வென்று விடலாமென்று நீ நினைப்பது, சீதை உடம்பினைத் தழுவலாம் என்று நினைத்திருப்பது போல முடியாத காரியமாகும்.

கு :—'கல்லலாம் உலகினை' என்பதனோடு 'கல்லில் அம்கை உலகங் கவர்கிற்போர்' (இராவணன் வானரத்தானை காண் படலம்- 11) என்னும் பகுதி ஒப்பு நோக்கத்தக்கது. 'உலகினை' என்பது இடைநிலை விளக்காய் நின்று, 'கல்லலாம்' என்பதனோடும் 'வரம்பு கட்டவும் சொல்லலாம்' என்பதனோடும் இயைந்து நின்றது. 'வரம்பு கட்டவும் சொல்லலாம்' என்றதன் கருத்து, தன் விருப்பப்படி செய்விக்கலாம் என்றபடி. சீதை பார்ப்பதனாலேயே கொல்லும் கற்புத் தன்மை வாய்ந்தவள் என்பதை உணர்ந்தவனாதலின், இராமனை வெல்லுதற்கு அவளை அடைதலை உவமையாகக் கூறினான். எவ்வாறாயினும் சீதையை அணையலாம் என்னும் இராவணனுடைய கருத்து நிறைவேறாது என உணர்த்துவான் அதனை உவமை முகத்தாற் கூறினான். முன்னிரண்டடியில் குறிப்பிடப்பட்டன செய்ய முடியாதன. அவைகளை ஒருகால் செய்ய இயன்றாலும் இவைகளைச் செய்ய முடியாதென்று வலியுறுத்தியவாறு. 'விதியின் வண்ணமே' என்று கருதியவன், 'ஊழையும் உப்பக்கங் காண்பர் உலைவின்றித், தாழா துஞற்று

பவர்' (620) என்னுங் குறட் கருத்தை உட்கொண்டு நற்புத்தி கூறுகின்ருன். (81)

**7480.** புலத்தியன் வழிமுதல் வந்த பொய்யறு
குலத்தியல் பழிந்தது கொற்ற முற்றுமோ?
வலத்திய லழிவதற் கேது மையறு
நிலத்திய னீரிய லென்னு நீரதால்.

'புலத்தியன் வழிமுதல் வந்த பொய்அறு
குலத்து இயல்பு அழிந்தது; கொற்றம் முற்றுமோ?
வலத்து இயல் அழிவதற்கு ஏது, மைஅறு
நிலத்து இயல் நீர் இயல் என்னும் நீரதால்,

பொ:—'புலத்தியன் வழியில் வந்த குற்றமற்ற குலத்தினது இயல்பு அழிந்துவிட்டது; (அவர்களை) வெற்றி கொள்ளுதல் முடியுமோ? (முடியாது); (நம்முடைய) வெற்றியினது இயல்பு அழிதற்குக் காரணம், குற்றமற்ற நீரினது தன்மை நிலத்தினது தன்மையைப் பொறுத்தது என்னும் தன்மையுடையது.

கு:—'சிட்டர் செயல் செய்திலை குலச் சிறுமை செய்தாய்' (53) என மந்திரப் படலத்துக் குறித்ததனையே ஈண்டுக் 'குலத்தியல் பழிந்தது' என்று தெளிவாகக் கூறினன். 'முற்றுமோ' என்பதிலுள்ள ஓகாரம் எதிர்மறைப் பொருளில் வந்தது. நிலத்தியல்பு நீர் திரிதற்குக் காரணமாதல்போல நின் தீய குணம் நீ வெற்றித் திறன் குன்றி அழிவதற்குக் காரணமாயிற்றென்பான், 'நிலத்தியல் நீரியல் என்னும் நீரதால்' என்ருன். 'நிலத்தியல்பால் நீர்திரிந்தற்ருகும் மாந்தர்க், கினத்தியல்ப தாகு மறிவு' (452) என்னுங் குறள் ஈண்டு எடுத்தாளப்பட்டுள்ளது. (82)

**7481.** கொடுத்தனை யிந்திரற் குலகுங் கொற்றமும்
கெடுத்தனை நின்பெருங் கிளையு நின்னையும்
படுத்தனை பலவகை யமரர் தங்களை
விடுத்தனை வேறினி வீடு மில்லையால்.

'கொடுத்தனை, இந்திரற்கு உலகும் கொற்றமும்;
கெடுத்தனை நின்பெருங் கிளையும்; நின்னையும்
படுத்தனை; பலவகை அமரர் தங்களை
விடுத்தனை; வேறு இனி வீடும் இல்லையால்.

பொ :—'(நீ சீதையை எடுத்து வந்த செயலால்) இந்திரனுக்கு (அவனிடமிருந்து பெற்ற) உலகத்தையும் வெற்றியையும் திரும்பக் கொடுத்தவன் ஆனாய்; நின்னுடைய பெரிய சுற்றத்தார்களையும் கெடுத்திட்டாய்; நின்னையும் அழியச் செய்தாய்; பலவகைத் தேவர் களையும் (சிறையிலிருந்து) விடுவித்தவனானாய்; இனிமேல் (உனக்கு இத் தீவினையிலிருந்து) விடுதலை பெறும் வழியும் வேறு இல்லை.

கு :—தெளிவு பற்றிக் கொடுத்தனை, கெடுத்தனை, படுத்தனை, விடுத்தனை என இறந்த காலத்தாற் கூறியது காலவழுவமைதி. படுத்தல் - அழியச் செய்தல். அமரர் தங்களை என்பதில் தம், கள் இரண்டையும் அசையாக்கி முற்றும்மை விரிக்க. வீடு - விடுதலை. ஈண்டு அது தப்பித்துச் செல்லும் வழியை உணர்த்திற்று. தப்பிக்க மாட்டாய் என்பான் 'வீடும்' என உம்மை கொடுத்துக் கூறினான். 'இல்லையால்' என்பதில் ஆல் அசை. (83)

**7482.** அறமுனக் கஞ்சியின் றொளித்த தாலதன்
திறமுன முழத்தலின் வலியுஞ் செல்வமும்
நிறமுனக் களித்ததங் கதனை நீக்கிநீ
இறமுனங் கியாருனை யெடுத்து நாட்டுவார்.

'அறம் உனக்கு அஞ்சி, இன்று ஒளித்ததால்; அதன்
திறம் முனம் உழத்தலின் வலியும் செல்வமும்
நிறம் உனக்கு அளித்தது; அங்கு அதனை நீக்கிநீ
இற, முன் அங்கு யார் உனை எடுத்து நாட்டுவார்.

பொ :—'அறமானது உன்னிடத்தில் இருப்பதற்கு அஞ்சி (உன்னைப் பிரிந்து) இப்பொழுது மறைந்து கொண்டது; அந்த அறத்தின் கூறுபாட்டை முன்பு நீ வருந்திச் செய்ததனால் (அதனா லுண்டான) வலிமையும் செல்வமும் உனக்குப் புகழைத் தந்தன; நீ அந்த அறத்தினைக் கைவிட்டு (அதன் காரணமாக) அழிகையில், முன் (வந்து) உன்னை அவ்விறப்பினின்றும் தடுத்து நிலைநிறுத்த வல்லவர் யார்? (ஒருவருமில்லை என்றபடி).

கு :—பிறன் மனையாளைக் கவர்ந்து வந்தமையின் பாவம் பெரி தாய் விட்டதால் அறத்தைக் கைவிட்டாய் என்பான், 'அறம் உனக்கு அஞ்சி இன்று ஒளித்தது' என அறத்தின் மேலேற்றிக் கூறினான். உழத்தல் - வருந்திச் செய்தல். முன் என்பது அம்முப் பெற்று முனம் என வந்தது. முனம் அதன் திறம் உழத்தலின் வலியும் செல்வமும் உனக்கு நிறம் அளித்தது என இயைக்க. நிறம் - புகழ். அங்கு

என்பது ஈரிடத்தும் அசை. இறுதல் - அழிதல். இற - அழிய; அழிகையில். முன் உனை எடுத்து நாட்டுவார் யார் என இயைக்க. 'யார் உனை எடுத்து நாட்டுவார்?' என்றதனால் நல்லினம் இன்மை பெறப்பட்டது. ஆரணிய காண்டம் மாரீசன் வதைப் படலத்து 'திறத்திறனாலோ செய்தவ முற்றித் திருவுற்றாய்' (179) எனத் தொடங்கும் செய்யுள் ஈண்டு நினைவு கூரற்பாலது. (84)

**7483.** தஞ்சமுந் தருமமுந் தகவு மேயவர்
நெஞ்சமுங் கருமமு முரையு மேநெடு
வஞ்சமும் பாவமும் பொய்யும் வல்லநாம்
உஞ்சுமோ வதற்கொரு குறையுண் டாகுமோ.

'தஞ்சமும் தருமமும் தகவுமே, அவர்
நெஞ்சமும் கருமமும் உரையுமே; நெடு
வஞ்சமும் பாவமும் பொய்யும் வல்லநாம்
உஞ்சுமோ? அதற்கு ஒரு குறை உண்டாகுமோ?

பொ :—'அவர்களுடைய எண்ணமும் செயலும் சொல்லும் அடைக்கலம் புகுந்தோரைத் தாங்குதலும் அறநிலை நிற்றலும் நடுவு நின்று உண்மை கூறுதலும் ஆம்; (அவைகளுக்கு மாறாகப்) பெரிய வஞ்சனையும் பாவமும் பொய்யும் மிகுதியாக மேற்கொண்டுள்ள நாம் (அவர்களிடத்தினின்றும்) பிழைப்போமா? (அவர்களுடைய) அற நிலைக்கு அழிவு உண்டாகுமோ? (உண்டாகாதென்றபடி).

கு :—'அவர் நெஞ்சமும் கருமமும் உரையும்' என்றமையால் அவர் மனம், மெய், மொழி ஆகிய மூன்றாலும் தூய்மையுடையர் என்பதை விளக்கினான். 'வஞ்சமும் பாவமும் பொய்யும் வல்ல நாம்' என்றமையால் நாம் அம்மூன்றாலும் தூய்மையற்றவர் என்பதை வெளிப்படுத்தினான். 'நெஞ்சமும் கருமமும் உரையும்' என இடைநிலை விளக்காய் முறை நிரனிறைப் பொருளவாயிற்று. தகவு என்பது ஈண்டு நடுவு நின்று உண்மை கூறுதலை உணர்த்தியது. 'அதற்கொரு குறையுண்டாகுமோ?' என்னும் பகுதியொடு, 'அறம் வெல்லும் பாவந் தோற்கும்', 'வெல்லுமோ தீவினை அறத்தை மெய்ம்மையால்' (சுந்தரகாண்டம் 190, 405) என்னும் பகுதிகள் ஒப்பிடற்பாலன. (85)

**7484.** என்றுகொண் டினையன வியம்பி யானுனக்
கொன்றுள துணர்த்துவ துணர்ந்து கோடியேல்
நன்றது நாயக நயக்கிலா யெனிற்
பொன்றினை யாகவே கோடி போக்கிலாய்.

என்று கொண்டு இனையன இயம்பி, யான் உனக்கு
ஒன்று உளது உணர்த்துவது ; உணர்ந்து கோடியேல்,
நன்று அது ; நாயக! நயக்கிலாய் எனின்,
பொன்றினை ஆகவே கோடி ; போக்கு இலாய்.

பொ :—என்று இவ்வாறன சொற்களைச் சொல்லி, 'தலைவனே, உனக்கு யான் (இறுதியாகத்) தெரிவிப்பது ஒன்று உளது; அதனை (நீ) ஆராய்ந்து ஏற்றுக்கொள்வாயேல் நல்லது; அதனை விரும்பி ஏற்றுக்கொள்ளா விட்டால் தப்பித்தற்கு வழி இல்லாதவனாகி இறந்தவனாகவே எண்ணிக் கொள்வாய்.

கு :—என்று கொண்டு - ஒரு சொல் நீர்மைத்து. இனையன, குறிப்பு வினையாலணையும் பெயர். உணர்த்துவது ஒன்று உளது என மாற்றுக. அது என்பது பின்னருங் கூட்டப்பட்டது; இடைநிலை விளக்கணியின்பாற்படும். நயத்தல் - விரும்புதல்; ஈண்டு விரும்பி ஏற்றுக்கொள்ளுதலை உணர்த்திற்று. கொள்+த்+இ; கோடி; முன்னிலை ஒருமை ஏவல் வினைமுற்று. 'போக்கிலாய்' என்பதனைத் தப்பித்தற்கு வழியில்லாதவனே என விளியாக்கி உரைப்பினும் அமையும். (86)

**7485.** காலினிற் கருங்கடல் கடந்த காற்றது
போலவன் குரங்குள சீதை போகிலள்
வாலியை யுரங்கிழித் தேக வல்லன
கோலுள யாமுளேங் குறையுண் டாகுமோ?

'காலினின் கருங் கடல் கடந்த காற்றது
போல வன் குரங்கு உள ; சீதை போகிலள் ;
வாலியை உரம் கிழித்து ஏக வல்லன
கோல் உள ; யாம் உளேம் ; குறை உண்டாகுமோ ?

பொ :—'காற்றைப் போலக் காலாலே கரிய கடலைத் தாண்டிய வலிமையுடைய குரங்கு (நம் பகைவர்க்குத்) துணையாக உள்ளது; சீதையும் போகாமல் (சிறையிலேயே) இருக்கின்றாள்; வாலியினது மார்பையும் கிழித்துச் செல்ல வல்லமையுடையதாகிய அம்பு உளது;

(நீ இன்னும் சீதையை விடாமையால், அவைகளுக்கு இலக்காக) நாம் இருக்கின்றோம்; (நம்மை முடிப்பதற்கு, இனி) என்ன குறை யிருக்கின்றது?

கு:—தாண்டிவர முடியாத கடலாகிய நீரகழியை உடையோ மென்று செருக்குற்றிருக்கின்ற இராவணனது எண்ணத்தைப் போக்க வேண்டிக் 'காலினின் கருங்கடல் கடந்த' என எளிமை தோன்றக் கூறினன். காற்றது - அது பகுதிப் பொருள் விகுதி. அவர்களுடைய அம்பின் வலிமையை உணர்த்துவான் வாலியின் மார் பையும் கிழித்தது என எடுத்துக் காட்டினன், இவனினும் வாலி வலியனாதலின். 'வாலியை உரங்கிழித் தேக வல்லன கோலுள' என்ற பகுதியோடு 'உங்கள் அம்பும் உண்டென்று சொல்லு நம் ஆணையே' (கிட்கிந்தா. கிட்கிந்தை - 4) என்னும் பகுதி ஒப்பிடற் பாலது. 'கோல் உள' என்றமையால் தாடகை, மாரீசன், மரா மரம், வாலி முதலியவர்களை அழித்த கோல் ஒன்றே இராவணனையும் அழிக்கு மென்பது பெறப்பட்டது. இராமனுடைய அம்பு ஒருவரை ஒழித்த அளவில் ஒழிந்து விடாது அவன் வேண்டும் போதெல்லாம் உதவுவதென்பது பெறப்பட்டது. இராவணன் வதைப் படலத்தில் வரும் 'ஆர்க்கின்ற வானவரும்' (199) எனத் தொடங்கும் செய்யுள் இதனை வலியுறுத்தும், உளது என்பது ஈரிடத்தும் ஈறுகுறைந்து நின்றது; உள எனப் பன்மையாகக் கோடலும் ஆம். நாம் அழிவ தற்கு வேண்டுவன வெல்லாம் உள்ளனவாதலின், நாம் அழிவ தற்குத் தடையில்லை என்பான், 'குறையுண்டாகுமோ?' என்றான். ஓகாரம் எதிர்மறை. (87)

**7486.** தையலை விட்டவன் சரணந் தாழ்ந்துநின்
ஐயறு தம்பியோ டளவ ளாவுதல்
உய்திற மன்றெனி னுளது வேறுமோர்
செய்திற மன்னது தெரியக் கேட்டியால்.

'தையலை விட்டு, அவன் சரணம் தாழ்ந்து நின்
ஐ அறு தம்பியோடு அளவளாவுதல்
உய்திறம்; அன்று எனின், உளது வேறும் ஓர்
செய்திறம்; அன்னது தெரியக் கேட்டியால்;

பொ:—'சீதையை விட்டு இராமனுடைய திருவடிகளிலே வணங்கி, உன்னுடைய ஐயமற்ற தம்பியாகிய வீடணனோடு நட்புக் கொண்டிருத்தல் (நீ) பிழைக்கும் வழியாகும்; அவ்வாறு செய்யா

விடின், (பிழைத்துப் போதற்குச்) செய்யும் மற்ருெரு வழியும் உண்டு; அதனை விளங்கக் கேட்பாயாக.

கு :—ஐயம் அறு என்பது தொகுத்தல் விகாரமாப் 'ஐ அறு' என நின்றது. எப்பொருளேயும் ஆராய்ந்து ஐயத்திற்கிடனின்றி ஒரு தலேயாச் சொல்லும் உணர்வுமிக்க தம்பி என்பான் தன் தம்பியாகிய வீடணனை 'ஐயறு தம்பி' எனச் சிறப்பித்தான். 'ஐயறு தம்பி' என்பதற்கு நின்ஞல் ஐயப்படத் தகாத தம்பி எனவும் பொருளுரைக்கலாம். அளவளாவுதல் - நெஞ்சு கலத்தல்; ஈண்டு அது நட்புக் கொண்டிருத்தலே உணர்த்திற்று. செய்திறமும் என உம்மை விரிக்க. கேட்டி – முன்னிலே ஏவல் ஒருமை வினைமுற்று. (88)

**7487.** பந்தியிற் பந்தியிற் படையை விட்டவை
சிந்துதல் கண்டுநீ யிருந்து தேம்புதல்
மந்திர மன்றுநம் வலியெ லாமுடன்
உந்துதல் கருமமென் றுணரக் கூறிஞன்.

'பந்தியில் பந்தியில் படையை விட்டு, அவை
சிந்துதல் கண்டு, நீ இருந்து தேம்புதல்
மந்திரம் அன்று; நம் வலி எலாம் உடன்
உந்துதல் கருமம்' என்று உணரக் கூறிஞன்.

பொ :—'பகுதி பகுதியாகச் சேனைகளே ஏவிவிட்டு அவைகள் அழிந்து போதலேக் கண்டு நீ வருந்தி இருத்தல் ஆலோசனையின் பாற்பட்டதன்று; (ஆதலின்), நம் (படை) வலி எல்லாவற்றையும் சேர்த்(துப் பகைவர்மேல்) செலுத்துதல் செய்யத்தக்கதாகும்' என்று (இராவணன்) அறிந்து கொள்ளும்படி கூறிஞன் (கும்பகருணன்).

கு :—பிளவுபடுதல் வலி குறைதலுக்கு ஏதுவாகலின், படைகள் பிரிந்து செல்வதை விட ஒருங்கு செல்லுதல் வலி மிகுதிக்கு ஏதுவாகுமென்றெண்ணி இவ்வாறு கூறிஞன். சிந்துதல் - கெடுதல், அழிதல். இருந்து தேம்புதல் என்பது தேம்பி இருத்தல் என விகுதி பிரித்துக் கூட்டப்பட்டது. மந்திரம் - ஆலோசனை. (89)

### இராவணன் கும்பகருணனைச் சினந்து மொழிதல்

**7488.** உறுவது தெரியவன் றுன்னைக் கூயது
சிறுதொழின் மனிதரைக் கோறி சென்றெனக்

கறிவுடை யமைச்சனீ யல்லை யஞ்சினை
வெறுவிதுன் வீரமென் றிவை விளம்பினுன்.

'உறுவது தெரிய அன்று; உன்னைக் கூயது,
சிறுதொழில் மனிதரைக் கோறி, சென்று; எனக்கு
அறிவுடை அமைச்சன் நீ அல்லை, அஞ்சினை;
வெறிவிது உன் வீரம்' என்று இவை விளம்பினுன்.

பொ:—'(இவற்றைக் கேட்ட இராவணன், கும்பகருணனை நோக்கி) அற்பத் தொழிலையுடைய மனிதர்களைப் போய்க் கொல்வாயாக (என்று சொல்ல) உன்னை அழைத்ததாகும்; (எனக்கு) இனி நிகழப் போவதைத் தெரிந்து கொள்ள அன்று; நீ எனக்கு (அறிவு கூறுதற்குரிய) அறிவுடைய அமைச்சனும் அல்லை; (பகைவருக்கு) அஞ்சினுய்; உன் வீரம் பயனற்றுப் போய்விட்டது என்று சொல்லி(ப் பின்னும்) இவைகளைச் சொல்லலானுன்:

கு:—உறுவது - இனிமேல் நிகழவிருப்பது. கூயது - வினைமுற்றுச்சொல். 'சிறு தொழில் மனிதர்' என்றமையால் அரக்கர்குலமாகிய தன்னை நோக்கத் தாழ்ந்தவர் என்பதைக் குறித்தான்; இதனுல் வீரமின்மை பெறப்பட்டது. கொல்+த்+இ= கோறி. இவ்வேவல் வினைக்கு ஏற்றபடி என்று சொல்ல எனவும், 'அறிவுடை' என்பதற்கேற்ப அறிவு கூறுதற்குரிய எனவும் சொற்கள் பெய்துரைக்கப்பட்டன. வெறுவிது என்பது பயனின்மை குறிக்கும் ஒரு சொல். 'வெஞ்சின வேழமுண்ட வெள்ளிலின் வெறியமாக' (சீவக சிந்தா. 1024). (90)

**7489.** மறங்கிளர் செருவினுக் குரிமை மாண்டனை
பிறங்கிய தசையொடு நறவும் பெற்றனை
இறங்கிய கண்முகிழ்த் திரவு மெல்லியும்
உறங்குதி போயென வுளையக் கூறினுன்.

'மறம் கிளர் செருவினுக்கு உரிமை மாண்டனை;
பிறங்கிய தசையொடு நறவும் பெற்றனை;
இறங்கிய கண்முகிழ்த்து இரவும் எல்லியும்
உறங்குதி, போய்' என உளையக் கூறினுன்.

பொ:—வீரம் விளங்கும் போருக்குத் தகுதி இல்லாதவனுயினுய்; மிகுந்த ஊனேடு கள்ளும் உண்டாய்; (இனி, உள்ளே) போய் இரவும்

பகலுமாகச் சோர்ந்த கண்களை மூடிக்கொண்டு தூங்குவாயாக' என (அவன்) மனம் வருந்துமாறு கூறினன்.

கு :—மேலே 'அஞ்சினை' என்றதைத் தழுவி 'உரிமை மாண்டனை' என்றும், தன்னால் உண்பிக்கப் பெற்றவனாதலின் 'பெற்றனை' எனவும் கூறினன். 'இறங்கிய கண்' என்பதால் கும்பகருணன் எப்போதும் உறக்கத்தையுடையவன் என்பது பெறப்படுகின்றது. தன் வீரத்தை இகழ்ந்து கூறினமையின் கும்பகருணன் வருந்துவதற் கேதுவாயிற்று. (91)

**7490.** மானிட ரிருவரை வணங்கி மற்றுமக்
கூனுடைக் குரங்கையுங் கும்பிட் டுய்தொழில்
ஊனுடை யும்பிக்கு முனக்கு மேகடன்
யானது புரிகிலே னெழுகபோ கென்றான்.

'மானிடர் இருவரை வணங்கி, மற்றும் அக்
கூனுடைக் குரங்கையும் கும்பிட்டு, உய்தொழில்
ஊனுடை உம்பிக்கும் உனக்குமே கடன்;
யான் அது புரிகிலேன்; எழுகபோக!' என்றான்.

பொ :—'(எளிய) மானிடர் இருவரையும் (இராம இலக்குவரையும்) வணங்கியும், மேலும் அந்த உடம்பு வளைந்த குரங்குகளைக் கும்பிட்டும் உயிர் வாழும்படியான தொழில், உடம்பையே பேணுதலுடைய உனது தம்பிக்கும் உனக்குமே முறையான செயலாம்; (மானமே பெரிதாக எண்ணும்) யான் அக் காரியத்தைச் செய்யமாட்டேன்; (இவ்விடத்தினின்றும்) நீ எழுக, போவாயாக' என்றான், (இராவணன்)

கு :—மானிடர் இருவரையும் என முற்றும்மை விரித்துரைக்க. கூன் - உடல் வளைவு. குரங்கையும் என்பதில் உம்மை இழிவு சிறப்பும்மை. 'கும்பிட்டு உய்தொழில்' என்றது அடிமை வாழ்க்கையை. 'கும்பிட்டு வாழ்கிலேன் யான் கூற்றையும் ஆடல்கொண்டேன்' (கும்பகருணன் வதைப் படலம் - 159) என்னும் பகுதி நினைவு கூர்தற்பாலது. 'எழுக போக' என்னும் வியங்கோள் வினைமுற்றுக்கள் ஏவற்பொருளில் வந்தன. போக என்பதில் அகரம் தொக்கது. (92)

**7491.** தருகவென் தேர்படை சாற்றென் கூற்றையும்
வருகமுன் வானமு மண்ணு மற்றவும்

இருகைவன் சிறுவரோ டொன்றி யென்னொடும்
பொருகவெம் போரெனப் போதன் மேயினன்.

'தருக, என்தேர், படை, சாற்று என் கூற்றையும்;
வருக, முன் வானமும் மண்ணும் மற்றவும்;
இருகை வன் சிறுவரோடு ஒன்றி என்னொடும்
பொருக, வெம்போர்' எனப் போதல் மேயினன்.

பொ :—(இராவணன் ஏவலாளரை நோக்கி) 'என் தேரையும் படைக்கலங்களையும் கொண்டுவருக; (போர் செய்ய வேண்டு மென்னும்) என்னுடைய ஆணையையும் தெரிவிக்க (எனக் கூறி), விண்ணுலகத்திலுள்ளாரும் மண்ணுலகத்திலுள்ளாரும் மற்றவை களும் இரண்டு கைகளையுடைய வலிய சிறுவரான இராம இலக்குவர் களோடு சேர்ந்து கொண்டு (என்) முன் வருக; என்னொடும் கொடிய போரைச் செய்க' என்று சொல்லிக்கொண்டே (போருக்குப்) புறப் பட்டான்.

கு :—படை என்றது படைக்கலங்களை உணர்த்தியது; சேனை களையும் ஆம். தேர்படை, உம்மைத்தொகை. 'தருக, சாற்று' என்னும் ஏவல் வினைகளை நோக்கிச் சொற்கள் பெய்துரைக்கப் பட்டன. அவனுடைய வீரம் தோன்றும்படியாக 'வருக' எனவும் 'பொருக' எனவும் கூறிக்கொண்டே போருக்குப் புறப்பட்டான். வானம், மண் என்பன இட ஆகுபெயர். இராம இலக்குவர்கள் குரங்குப் படையுடன் வந்திருப்பதைக் கண்டவனாதலின் 'மற்றவும்' என அஃறிணைப் பொருள்களையும் உடன் கூறினான். தான் இருபது கைகளை யுடையனாதலின் 'இருகை வன் சிறுவர்' என இகழ்ச்சிக் குறிப்புத் தோன்றக் கூறினான். 'என்னொடும்' என்றதனால் படைக ளில்லாமலே பொரவல்லேன் என்பதனைப் புலப்படுத்தினான். 'போதல் மேயினன்' என்பது ஒரு சொல். (93)

போருக்கு எழுந்த இராவணனை வணங்கி 'பொறுத்தி' என்று கூறி, கும்பகருணன் போருக்குச் செல்ல விடைபெறுதல்

7492. அன்னது கண்டவன் றம்பி யானவன்
பொன்னடி வணங்கிநீ பொறுத்தி யாலென
வன்னெடுஞ் சூலத்தை வலத்து வாங்கினன்
இன்னமொன் றுரையுள தென்னக் கூறினன்.

அன்னது கண்டு, அவன் தம்பியானவன்
பொன் அடி வணங்கி, 'நீ பொறுத்தியால்' என,
வல் நெடுஞ் சூலத்தை வலத்து வாங்கினன்,
'இன்னம் ஒன்று உரை உளது' என்னக் கூறினன்.

பொ :—அவன் போருக்குப் புறப்படுதலைப் பார்த்து அவன் தம்பியாகிய கும்பகருணன் 'நீ பொறுத்துக் கொள்வாயாக' என்று சொல்லி, (அவனுடைய) அழகிய அடிகளில் வணங்கி(த் தனது) வலிய பெரிய சூலத்தை வலக்கையிலே பிடித்துக்கொண்டு, (இறுதியாக) 'இன்னும் ஒரு சொல் உரைக்க வேண்டுவது உளது' (கேட்பாயாக) என்று (பின்வருவனவற்றைக்) கூறினன்.

கு :—அன்ன அது என்பது தொகுத்தல். அன்ன என்பது இராவணன் போருக்குப் புறப்பட்ட செயலைச் சுட்டியது. வலத்து வாங்கியது அவன் போருக்குச் செல்ல ஒருப்பட்டதைப் புலப்படுத்தியது. வாங்கினன் என்பது முற்றெச்சம். (94)

7493. வென்றிவண் வருவனென்
றுரைக்கி லேன்விதி
நின்றது பிடர்பிடித்
துந்த நின்றது
பொன்றுவென் பொன்றினற்
பொலன்கொ டோளியை
நன்றென நாயக
விடுதல் நன்றரோ.

'வென்று இவண் வருவென் என்று உரைக்கிலேன்; விதி
நின்றது, பிடர்பிடித்து உந்த நின்றது;
பொன்றுவென்; பொன்றினல், பொலன்கொள் தோளியை,
"நன்று" என, நாயக, விடுதல் நன்று அரோ.

பொ :—'தலைவனே, (பகைவரை) வென்று இவ்விடத்திற்குத் திரும்ப வருவேனென்று சொல்ல முடியாதவனுயிருக்கிறேன்; (ஏனெனில்) என்னைத் தொடர்ந்து நின்றதாகிய ஊழ்வினையானது என்னைக் கழுத்தைப் பிடித்துத் தள்ளுதற்கென்றே காத்து நிற்கின்றது; (ஆதலின், யான் போரில்) இறப்பேன்; (அங்ஙனம்) இறந்து போவேனேயானல் (பின்னராவது), அழகிய தோளையுடைய சீதையை "நல்லது" என்று கருதி விட்டிடுதல் (உனக்கு) நன்மை பயப்பதாகும்.

கு :—ஊழ்வினையினாலே தவறாமல் இறக்க நேரும் என்று கருதி, 'வென்றிவண் வருவனென் றுரைக்கிலேன்' என்றும், 'பொன்று வென்' என்றும் கூறினான். நின்றது விதி என மாற்றுக. தன் தமையன் வாழ வேண்டுமென்னும் எண்ணத்தைக் கொண்டு பின்ன ராவது 'விடுதல் நன்று' என்றான். 'நன்று' என்பது செய்யத்தக்க காரியம் என்பதை உணர்த்தியது. பின்னர் 'நன்று' என்றது இம்மை மறுமை ஆகிய இருமையையும் கருதிக் கூறியது. (95)

7494. இந்திரன் பகைஞனு மிராமன் றம்பிகை
மந்திர வம்பினான் மடிதல் வாய்மையால்
தந்திரங் காற்றுறு சாம்பற் பின்னரு
மந்தர முணர்ந்துனக் குறுவ தாற்றுவாய்.

'இந்திரன் பகைஞனும், இராமன் தம்பி கை
மந்திர அம்பினால் மடிதல் வாய்மையால்;
தந்திரம் காற்றுறு சாம்பல்; பின்னரும்
அந்தரம் உணர்ந்து, உனக்கு உறுவது ஆற்றுவாய்.

பொ :—'இந்திரனைப் பகைத்து வென்றவனாகிய இந்திரசித்தும் இராமன் தம்பியாகிய இலக்குவன் கையில் கொண்ட மந்திர வலிமை யோடு கூடிய அம்பினால் இறத்தல் உண்மை; (மற்றுமுள்ள) சேனைக ளெல்லாம் பெருங் காற்றிற்பட்ட சாம்பலைப் போலச் சிதறிவிடும்; (ஆதலின்) பின்பும் (உனக்கு நிகழ இருக்கும்) முடிவை அறிந்து உனக்கு நன்மை பயப்பனவற்றைச் செய்வாயாக.

கு :—'பகைஞனும்' என்பதிலுள்ள உம்மை சிறப்பும்மை. 'இராமன் தம்பி கை மந்திர அம்பினால் மடிதல் வாய்மையால்' என்ற தனால் தேவரினும் இம் மனிதர்கள் வலியுடையவர்களென்பது பெறப் பட்டது. மந்திர அம்பு - மந்திர வலிமையோடு கூடிய அம்பு; என்றது தவறாமல் கருதியதைச் செய்யும் என்றபடி. 'மறைகளே தேறத்தக்க' எனவும், 'நேமியுங் குலிசவேலும்' எனவும் தொடங்கு கின்ற இந்திரசித்து வதைப் படலத்து 51, 52 ஆம் செய்யுட்களைக் காண்க. சேனை சாம்பல்போல் ஆகும் என்பது, சாம்பல் என வினை குறைந்து உவமமாக வந்தது. முன்னரே சீதையைவிட உடன்பட மாட்டான் என்பதை உணர்ந்தவனாதலின், 'அந்தர முணர்ந்துனக் குறுவதாற்றுவாய்' என்றான். (96)

7495. என்னைவென் றுளரெனி லிலங்கை காவல
உன்னைவென் றுயருத லுண்மை யாதலால்
பின்னை நின் றெண்ணுதல் பிழையப் பெய்வளை
தன்னை நன் களிப்பது தவத்தின் நன்றரோ.

'என்னை வென்றுளர் எனில், இலங்கை காவல!
உன்னை வென்று உயருதல் உண்மை; ஆதலால்'
பின்னை நின்று எண்ணுதல் பிழை; அப்பெய்வளை
தன்னை நன்கு அளிப்பது தவத்தின் நன்றரோ.

பொ :—'இலங்கைக்கு அரசனே, என்னை வெல்லுவார்களாயின் உன்னையும் வென்று மேம்படுதல் உண்மையாகும்; ஆதலால், யான் இறந்த பிறகு அமைச்சர்களோடு கூடிநின்று ஆராய்தல் தவருகும்; (ஆதலால்) அணிந்திருக்கின்ற வளையல்களையுடைய அச் சீதையை நன்முறையில் திருப்பி அவர்களிடம் ஒப்படைப்பது தவத்தைக் காட்டிலும் நன்மையுடையதாகும்.

கு :—'சூழ்ச்சி முடிவு துணிவெய்தல் அத்துணிவு, தாழ்ச்சியுள் தங்குதல் தீது' (திருக்குறள் - 671) என்பதை உட்கொண்டு, சீதையை விடுதலில்லை என்னும் அவனுடைய கருத்து மாற 'அளிப்பது தவத்தின் நன்று' எனப் பின்னருங் கூறினன். 'பெய்வளை' என்பது அன்மொழித் தொகையாய்ச் சீதையை உணர்த்திற்று. 'பெய்வளை தன்னை' என்பதில் தன், சாரியை. (97)

7496. இற்றைநாள் வரைமுதல்
யான்முன் செய்தன
குற்றமு முளவெனிற்
பொறுத்தி கொற்றவ
அற்றதான் முகத்தினில்
விழித்த லாரிய
பெற்றனென் விடையெனப்
பெயர்ந்து போயினன்.

'இற்றை நாள் வரை, முதல், யான் முன் செய்தன
குற்றமும் உள எனின் பொறுத்தி; கொற்றவ!
அற்றதால் முகத்தினில் விழித்தல்; ஆரிய!
பெற்றனென் விடை' என, பெயர்ந்து போயினன்.

பொ :—'அரசனே, முன்னை நாள்முதல் இந்நாள் வரையில் யான் செய்தனவாகிய குற்றங்களிருந்தால் (அவற்றையெல்லாம்) பொறுத்துக் கொள்வாயாக; (இனி) உன்னைக் காணும் பேறு இல்லை யாயிற்று; தலைவனே, விடைபெற்றுக் கொண்டேன்' என்று சொல்லிப் புறப்பட்டான்.

கு :—'குற்றமும்' என்பதில் 'உம்' அசை. 'குற்றமும் உள வெனில்' என்றது இராவணனுடைய கருத்தை நோக்கி. இறந்து விடுவோம் என்னும் துணிவுடையனாதலின் 'அற்றதால் முகத்தினில் விழித்தல்' என்றான். 'பெயர்ந்து போயினான்' என்பது ஒரு சொல்; பெயர்ந்துபோ என்பது பகுதி. (98)

## கும்பகருணன் புறப்பட்டபோது இராவணனும் மற்றையோரும் வருந்துதல்

**7497.** அவ்வழி யிராவண னனைத்து நாட்டமும்
செவ்வழி நீரொடுங் குருதி தேக்கினான்
எவ்வழி யோர்களு மிரங்கி யேங்கினார்
இவ்வழி யவனும்போய் வாயி லெய்தினான்.

அவ்வழி இராவணன் அனைத்து நாட்டமும்
செவ்வழி நீரொடும் குருதி தேக்கினான்;
எவ்வழியோர்களும் இரங்கி ஏங்கினார்;
இவ்வழி அவனும் போய், வாயில் எய்தினான்.

பொ :—அப்பொழுது இராவணன் எல்லாக் கண்களிலும் செம்மை அழிந்த நீரும் இரத்தமும் நிறையப் பெற்றான்; எல்லாப் பக்கங்களிலுள்ளவர்களும் மனம் வருத்தமுற்றுத் துன்புற்றனர்; இங்ஙனம் நிகழ்கையில், கும்பகருணனும் சென்று நகர் வாயிலை அடைந்தான்.

கு :—'தானாடாவிடினும் தன் உடலாடும்' என்பது உலக வழக்காதலின், கும்பகருணன் ஒருகால் போரில் இறந்துவிடுவானோ என்னும் எண்ணத்தால் இராவணன் கண்களிலே நீர் நிரம்பின. 'அனைத்து நாட்டமும்' என்பதை நாட்டம் அனைத்தும் என மாற்றுக. செம்மை+அழி; செவ்வழி. அன்புக் கண்ணீரும் உளதாதலின் செவ்வழி நீர் எனப்பட்டது; அழுகை நீர் என்க. அவலத்தினாலே நீரும் வீரத்தினாலே குருதியும் கண்களில் நிரம்பின. வாயிலை அடைந்தான் என்பதனால் இராவணனை விட்டு நீங்கினமை பெறப் பட்டது. (99)

இச்செய்யுளையடுத்து 52 ஆம் எண்ணுள்ள அச்சுப் புத்தகத்தில் பின்வருமாறு ஒரு மிகைப் பாடல் காணப்படுகிறது.

7497. (a) அக்கணத்து அரக்கர்கோன் அளப்பில் யானைதேர்
மிக்கவான் புரவிகால் வயவர் வெள்ளமோடு
ஒக்கவான் படைப் பெருந் தலைவர் ஒன்றறப்
புக்குமின் இளவலைப் புறத்துச் சூழ்ந் தென்றான்.

## இராவணன் கும்பகருணனுக்குத் துணைப்படை அனுப்புதல்

7498. இரும்படை கடிப்பெடுத் தெற்றி யேகுக
பெரும்படை யிளவலோ டென்ற பேச்சினால்
வரும்படை வந்தது வானு ளோர்கடம்
சுரும்படை மலர்முடி தூளி தூர்க்கவே.

'இரும் படை கடிப்பு எடுத்து எற்றி ஏகுக!
பெரும் படை இளவலோடு' என்ற பேச்சினால்,
வரும் படை வந்தது, வானுளோர்கள் தம்
சுரும்பு அடை மலர்முடி தூளி தூர்க்கவே.

பொ :—(அதனைக் கண்ட இராவணன்), 'பெரிய படைக் கலங்களையுடைய எனது தம்பியோடு மிகுதியான படைகள் குறுந்தடியை எடுத்து(ப் போர்ப்பறையை) அடித்துக் கொண்டு செல்வனவாக' என்ற ஆணையால் வருகின்ற படை தேவர்களுடைய வண்டுகள் பொருந்திய மலர் மாலை யணிந்த தலைகளைத் தூசி மூடும்படியாக வந்தது.

கு :—தன்னுடன் சேனைகள் எழுக என முன் சொன்ன ஆணையை மாற்றித் தம்பியுடன் செல்க என ஆணையிட்டான். கடிப்பு - குறுந்தடி. பேச்சு - ஆணை. தேவர்கள் சூடிய மலரில் வண்டு மொய்க்காதாகலின் மலருக்குச் 'சுரும்பு அடை' என்பது இயற்கை அடைமொழி. 'தூளி தூர்க்க' என்றதால் சேனை மிகுதி பெறப் பட்டது. (100)

## படைகளின் பெருக்கம்

7499. தேர்க்கொடி யானையின் பதாகை சேணுறு
தார்க்கொடி யென்றிவை ததைந்து வீங்குவ
போர்க்கொடுந் தூளிபோய்த் துறக்கம் புக்கிட
ஆர்ப்பன துடைப்பன போன்ற வாடுவ.

தேர்க்கொடி, யானையின் பதாகை, சேண்உறு
தார்க்கொடி, என்று இவை ததைந்து வீங்குவ
போர்க்கொடுந் தூளிபோய்த் துறக்கம் புக்கிட,
ஆர்ப்பன துடைப்பன போன்ற ஆடுவ.

பொ :—தேரின் மீது கட்டியிருக்கும் கொடிகளும், யானையின் மீது பிடித்துக் கொண்டிருக்கும் கொடிகளும், முன் செல்லும் சேனைகள் பிடித்திருக்கின்ற உயர்ந்திருக்கின்ற கொடிகளும் ஆகிய இவைகள் நெருங்கி மேலெழுகின்றவை, போரின் கொடிய தூசிகள் போய்ச் சுவர்க்கத்தில் படியவும், (அவற்றை) ஆரவாரித்துத் துடைப்பன போன்றனவாய் ஆடலாயின.

கு :—பதாகை - கொடி. சேண் - உயர்வு. தார் - முன் செல்லும் படை; தூசிப் படை. ததைந்து வீங்குவ ஆர்ப்பன துடைப்பன போன்ற ஆடுவ என முடிக்க. தூளி – தூசி. ஆர்த்தல் - ஒலித்தல். (101)

**7500.** எண்ணுறு படைக்கல மிழுக வெற்றிட
நண்ணுறு பொறிகளும் படைக்கு நாயகர்
கண்ணுறு பொறிகளுங் கதுவக் கண்ணகல்
விண்ணுறு மழையெலாங் கரிந்து வீழ்ந்தவால்.

எண்ணுறு படைக்கலம் இழுக எற்றிட
நண்ணுறு பொறிகளும், படைக்கு நாயகர்
கண்ணுறு பொறிகளும், கதுவ, கண் அகல்
விண்ணுறு மழைஎலாம் கரிந்து வீழ்ந்தவால்.

பொ :—யாவராலும் மதிக்கப்படுகின்ற படைக்கலங்கள் (ஒன்றோடொன்று) உராய்தலாலும் மோதுதலாலும் உண்டாகின்ற நெருப்புப் பொறிகளும், சேனைத் தலைவர்களுடைய கண்களில் (கோபத்தினால்) உண்டாகின்ற பொறிகளும் போய்ப் பற்றுதலால், இடமகன்ற ஆகாயத்திலுள்ள மேகங்களெல்லாம் கரிந்து வீழ்ந்தன.

கு :—இழுகுதல் - உராய்தல். எற்றுதல், ஈண்டு மோதுதல், கதுவுதல் - பற்றுதல் ; பொருந்துதல். (102)

இச்செய்யுளையடுத்து 52 ஆம் எண்ணுள்ள அச்சுப் புத்தகத்தில் பின்வருமாறு ஒரு மிகைப்பாடல் காணப்படுகிறது.

7500. (a) வெள்ளம் நூறு இரதம் மற்று இரட்டி வெங்கரி
துள்ளு வான் பரி அதற்கு இரட்டி தொக்குறும்
வெள்ளி வேல் அரக்கர் மற்று இரட்டி மேம்படும்
கொள்ளை வான் படைப் பெருந் தலைவர் கோடியால்.

7501. தேர்செலக் கரிசெல நெருக்கிச் செம்முகக்
கார்செலத் தேர்செலப் புரவிக் கால்செலத்
தார்செலக் கடைசெலச் சென்ற தானையும்
பார்செலற் கரிதென விசும்பிற் பாய்ந்ததால்.

தேர்செல, கரிசெல, நெருக்கிச் செம்முகக்
கார்செல, தேர்செல, புரவிக் கால் செல,
தார்செலக் கடைசெலச் சென்ற தானையும்,
'பார் செலற்கு அரிது' என விசும்பில் பாய்ந்ததால்.

பொ :—(முன்னரே) தேர்கள் செல்ல, (பின்னே) யானைகள் செல்ல, (இவற்றை முன்னிட்டுக் கொண்டு) தூசிப்படை செல்ல, நெருக்கிக் கொண்டு செம்புள்ளியமைந்த முகத்தையுடைய மேகம் போன்ற யானைகள் செல்லத் தேர்கள் செல்லக் குதிரைகள் காற்றுப் போல விரைந்து செல்ல, (இவற்றை முன்னிட்டுக் கொண்டு) கூழைப் படை செல்ல (இடை வெளியில்) சென்ற சேனை, '(அந்தப் போர்க்களப்) பூமி நடந்து செல்லுதற்கு அரிது' என்று கருதி ஆகாயத்தில் பாய்ந்து செல்லலாயிற்று.

கு :—கார், உவம ஆகுபெயராய் யானையை உணர்த்திற்று. கால்-காற்று. தேரும் யானையும் ஆகியவற்றை முன்னிட்டுக் கொண்டு தூசிப்படை இடத்தை அடைத்துக் கொண்டு செல்லுதலாலும், யானையும் தேரும் குதிரையும் ஆகியவற்றை முன்னிட்டுக் கொண்டு கூழைப்படை நெருக்கிக் கொண்டு செல்லுதலாலும், இடை நின்ற சேனை நடந்து செல்ல இடம் பெறாமல் வானில் பாய்ந்து செல்லலாயிற்றென்க. (103)

இச்செய்யுளை யடுத்து 52 ஆம் எண்ணுள்ள அச்சுப் புத்தகத்தில் பின்வருமாறு ஒரு மிகைப் பாடல் காணப்படுகின்றது.

7501. (a) அன்னபோது இராவணற்கு இளவல் ஆகிய
மின்னுவேல் கும்பகன் என்னும் மேலையோன்
துன்னுபோர் அணிகலம் யாவும் சூடியே
தன் ஒரு தேரினைத் தொழுது தாவினன்

## கும்பகருணன் தேரில் ஏறுதல்

7502. ஆயிரங் கோளரி யாளி யாயிரம்
ஆயிர மதகரி பூத மாயிரம்
பாயிரு ஞாலத்தைச் சுமப்ப வாங்குவ
தேயிருஞ் சுடர்மணித் தேரொன் றேறினான்.

ஆயிரம் கோள்அரி, ஆளி ஆயிரம்,
ஆயிரம் மதகரி, பூதம் ஆயிரம்
மா இரு ஞாலத்தைச் சுமப்ப, வாங்குவது
ஏய் இருஞ் சுடர்மணித் தேர் ஒன்று ஏறினான்.

பொ :—மிகப் பெரிய பூமியைச் சுமக்கும் ஆற்றலுடையனவாகிய, கொல்லுகின்ற ஆயிரம் சிங்கங்களும் ஆயிரம் யாளிகளும் மதம் ஒழுகுகின்ற ஆயிரம் யானைகளும் ஆயிரம் பூதங்களும் இழுப்பதாகிய மிக்க ஒளி பொருந்திய மணிகளையுடைய ஒரு தேரில் (கும்பகருணன்) ஏறினான்.

கு :—'ஆயிரம் கோளரி ஆளி ஆயிரம் ஆயிரம் மதகரி பூதம் ஆயிரம் வாங்குவது (ஆகிய) தேர்' எனவும், 'ஏய் இரும் சுடர்மணித் தேர்' எனவும் தனித்தனி இயையும். வாங்குதல் - இழுத்தல். 'மத்தம் ஒலிப்ப வாங்கி' (பெரும்பாண். 156) (104)

7503. தோமரஞ் சக்கரஞ் சூலங் கோன்மழு
நாமவே லுலக்கைவா ளுஞ்சி றண்டெழு
வாமவில் வல்லையங் கணைய மற்றுள
சேமவெம் படையெலாஞ் சுமந்து சென்றவால்.

தோமரம், சக்கரம், சூலம், கோல், மழு,
நாமவேல், உலக்கை, வாள், நாஞ்சில், தண்டு, எழு,
வாமவில், வல்லையம், கணையம், மற்று உள
சேம வெம் படை எலாம் சுமந்து சென்றவால்.

பொ :—கைவேல், சக்கரம், சூலம், அம்பு, சிறுகோடரி, அச்சத்தைச் செய்யும் வேல், உலக்கை, வாள், கலப்பை, பெருந்தடி, (உருக்கினால் செய்யப்பட்ட) தூண், அழகிய வில், எறி ஈட்டி, வளைதடி மற்றுமுள்ள பாதுகாப்புக்குரிய கொடிய படைகளை யெல்லாம் சுமந்து கொண்டு (காலாட் படைகள்) சென்றன.

கு :—வல்லையம் - எறி ஈட்டி. கணையம் - வளைதடி. சேமப்படை - கையிலுள்ள படைக்கலங்கள் அழிந்தபோது உதவுவதற்காகச் சேமித்து வைக்கப்பட்டுள்ள படைக் கலங்கள். (105)

**7504.** நறையுடைத் தசும்பொடு நறிதின் வெந்தவூன்
குறைவினற் சகடமோ ராயி ரங்கொடு
பிறையுடை யெயிற்றவன் பின்பு சென்றனர்
முறைமுறை கைக்கொடு முடுகி நீட்டுவார்.

நறையுடைத் தசும்பொடு நறிதின் வெந்தஊன்
குறைவு இல் நல் சகடம் ஓர் ஆயிரம் கொடு,
பிறையுடை எயிற்றவன் பின்பு சென்றனர்,
முறைமுறை கைக்கொடு முடுகி நீட்டுவார்.

பொ :—பிறைபோன்ற பற்களையுடைய கும்பகருணனின் பின்பு (அரக்கர்கள்), கட்குடத்தோடு நன்ருக வெந்த இறைச்சி குறைவில்லாமல் (ஏற்றப்பட்ட) நல்ல ஆயிரம் வண்டிகளைச் செலுத்திக் கொண்டு, வரிசை வரிசையாகக் (கள்ளையும் ஊனையும்) கையிற் கொண்டு (அவன் வேண்டும்போது) நீட்டுவாராய் விரைந்து சென்ருர்கள்.

கு :—தசும்பு - குடம். நறிதின் வெந்த ஊன் - நன்ருக வெந்த இறைச்சி. பிறையுடை எயிற்றவன் என்பதில் உடை, உவம உருபு. (அரக்கர்கள்) நீட்டுவாராய் முடுகிச் சென்றனர் என்க. (106)

இச் செய்யுளையடுத்து 52 ஆம் எண்ணுள்ள அச்சுப் புத்தகத்தில் பின்வருமாறு மூன்று மிகைப் பாடல்கள் காணப்படுகின்றன.

**7504.** (a) தொண்டகம் துடி கனபேரி துந்துமி
திண்டிமம் படகம் மாமுரசு திண்மணிக்
கண்டைகள் கடையுகத்து இடிக்கும் ஓதையின்
எண்திசை செவிடு எறிதரச் சென்று உற்றதால்.

(b) எழுகருங் கடல்கரை எறிந்திட்டு ஊழிநாள்
முழுதுலகு அடங்கலும் மூடும் தன்மையின்
தழுவியது என, தசமுகன் தன் ஆணையால்
கிளர்பெரும் படைக்கடல் கெழுமிப் போந்ததால்.

(c) இரைக்கும் மும்மதம்பொழி தறுகண் யானையின்
நெருக்கமும் நெடுங்கொடித் தொகையின் தேர்க்குலப்
பெருக்கமும் புரவிகள் பிறங்கும் ஈட்டமும்
அரக்கர்தம் பெருக்கமும் ஆயது எங்குமே.

### கும்பகருணன் ஊனையும் கள்ளையும் உண்டவண்ணம் செல்லுதல்

**7505.** ஒன்றல பற்பல ருதவு மூனறை
பின்றரு பிலனிடைப் பெய்யு மாறுபோல்
வன்றிற லிருகரம் வழங்க மாந்தியே
சென்றனன் யாவரும் திடுக்க மெய்தவே.

ஒன்று அல பற்பலர் உதவும் ஊன் நறை
பின்று அரு பிலனிடைப் பெய்யு மாறு போல்,
வன்திறல் இருகரம் வழங்க மாந்தியே
சென்றனன், யாவரும் திடுக்கம் எய்தவே.

பொ :—(கும்பகருணன்) எல்லோரும் கண்டு அஞ்சும்படியாகப் பலரும் பலவாகக் கொடுக்கின்ற இறைச்சியையும் கள்ளையும், மீளுதல் அரிய பாதாளத்தில் போடுவதுபோல, மிக்க வலிமையையுடைய தன்னுடைய இரண்டு கைகளும் வாங்கி வாயிலிட, உண்டு கொண்டே சென்றான்.

கு :—'ஒன்றல' என்றமையின் ஊனையும் நறையையும் மாற்றி மாற்றித்தர என்றபடி. 'பின்று' என்பது முதனிலையளவாக நின்று பின்றுதல் என்னும் பொருளைத் தந்தது; பின்றுதல் - மீளுதல். 'பெரும்படைதான் வரிற்பின்றி நீங்கிற்பழி' (சீவக. 1827) பின்று அரு என்பது பிலனுக்கு அடைமொழி. உண்டுகொண்டே சென்றான் என்றபடி. (107)

### கும்பகருணனது செயலைக் கண்டு அமரர் அஞ்சியோடுதல்

**7506.** கணந்தரு குரங்கொடு கழிவ தன்றிது
நிணந்தரு நெடுந்தடிக் குலகு நேருமோ
பிணந்தலைப் பட்டது பெயர்வ தெங்கினி
உணர்ந்தது கூற்றமென் றும்ப ரோடினர்.

'கணம் தரு குரங்கொடு கழிவது அன்று, இது;
நிணம் தரு நெடுந்தடிக்கு உலகு நேருமோ ?
பிணம் தலைப்பட்டது; பெயர்வது, எங்கு இனி ;
உணர்ந்தது கூற்றம்' என்று உம்பர் ஓடினர்.

பொ :—தேவர்களெல்லாம், ('இப்பொழுது) இயமன் விழித்துக் கொண்டான்; (கும்பகருணன் செல்லுகின்ற) இக் கோலம் கூட்டமாகிய (இக்) குரங்குகளோடு முடிவதன்று; (இவன் உண்ணுகின்ற)

நிணத்தோடு கூடிய மிக்க மாமிசத்திற்கு இவ்வுலகத்திலுள்ள உயிர்களெல்லாம் போதியனவாகுமோ? (எங்கும்) பிணம் விழத் தொடங்கியது; (ஆயின் நாம்) இனி எங்கு ஓடிச் செல்வது?' என்று சொல்லிய வண்ணம் ஓடினார்கள்.

கு :—இது என்றது அவன் மேற்கொண்ட போர் வெறியைக் குறித்தது. தடி - மாமிசம். 'உலகு' என்பது ஆகுபெயராய் உலகத்துயிர்களை உணர்த்திற்று. நேர்தல் - பொருந்துதல்; ஈடுப் போதுமானதாதல் என்னும் பொருளிற் பயின்றது.' 'பிணந்தலைப்பட்டது' ஆயின் என ஒரு சொல் வருவித்துரைக்க. 'கூற்றம் உணர்ந்தது' என்பது ஒரே காலத்தில் பல்லுயிர்களும் மடியப்போவதை உணர்த்தியது. (108)

இச் செய்யுளையடுத்து 52 ஆம் எண்ணுள்ள அச்சுப் புத்தகத்தில் பின்வருமாறு ஒரு மிகைப்பாடல் காணப்படுகிறது.

7507 (a) நாற்படை வகைதொகை நடக்க, தூளிகள்
மேற்பட விசும்பகம் மறைந்த வெண்திரைப்
பாற்கடல் எனப்பொலி கவிப் பெரும்படை
காற்படு கதியினின் கரந்தது ஓடியே.

## தேரில் வந்த கும்பகருணனை இராமன் நோக்கி, 'இவனை இன்னார் என்று தெரிவி' என்று வீடணனைக் கேட்டல்

**7507.** பாந்தளி னெடுந்தலை வழுவிப் பாரொடும்
வேந்தென விளங்கிய மேரு மால்வரை
போந்தது போற்பொலந் தேரிற் பொங்கிய
ஏந்தலை ஏந்தெழி லிராம னோக்கினான்.

பாந்தளின் நெடுந்தலை வழுவி, பாரொடும்
வேந்து என விளங்கிய மேரு மால்வரை
போந்தது போல், பொலந் தேரில் பொங்கிய
ஏந்தலை, ஏந்து எழில் இராமன் நோக்கினான்.

பொ :—ஆதிசேடனுடைய பெரிய தலையினின்றும் நீங்கிப் பூமியோடுகூட (மலைகளுக்கெல்லாம்) அரசனை ஒத்து விளங்கிய பெரிய மேருமலையானது வந்ததுபோல, அழகிய தேரின்மேல் விளங்கித் தோன்றிய பெருமையிற் சிறந்தோனாகிய கும்பகருணனை மிக்க அழகையுடைய இராமன் பார்த்தான்.

கு :—பாந்தள் - பாம்பு. பாரொடும் மேருமால்வரை வந்தது போலத் தேரொடு கும்பகருணன் வந்தான். பொலம் - பொன்; ஈண்டு அழகை உணர்த்திற்று. (109)

7508. வீணையென் றுணரி னஃதன்று விண்டொடும்
சேணுயர் கொடியது வயவெஞ் சீயமால்
காணினுங் காலின்மே லரிய காட்சியன்
பூணொளி மார்பினன் யாவன் போலுமால்.

'வீணை என்று உணரின், அஃது அன்று; விண்தொடும்
சேண் உயர் கொடியது, வய வெஞ் சீயமால்;
காணினும் காலின் மேல் அரிய காட்சியன் ;
பூணொளிர் மார்பினன் ; யாவன் போலுமால் ?

பொ :—'ஆகாயத்தைத் தொடும்படியான மிக உயர்ந்த (இத் தேரின்) கொடியில் எழுதியது வீணையோ என்று பார்த்தால் வீணை யன்று; வெற்றியையுடைய கொடிய சிங்கம்; பார்த்தாலும் காலுக்கு மேல் பார்க்க முடியாதவனாயிருக்கின்றான்; ஆபரணம் விளங்குகின்ற மார்பையுடைய இவன் யாவனோ?

கு :—கும்பகருணனைக் கண்ட இராமன், அவன் கொடி, உருவம் முதலியவற்றைக் கண்டு இராவணன் அல்லாத இவன் யாவனோ என ஐயுற்றான். காட்சி அரியன் என்று கூட்டிப் பார்க்கமுடியாதவன் என்க. ஈண்டு அருமை, இன்மையை உணர்த்திற்று. மேல் 'விசும் பினை நிறைக்கும் மேனி' (58) என்றதைக் 'காணினும் காலின்மேல் அரிய காட்சியன்' என்னும் தொடர் சுட்டுகிறது. அவனுடைய உடலின் பெருமையைக் 'காணினும் காலின்மேல் அரிய காட்சியன்' என்று கூறியது நினைந்து மகிழற்பாலது. 'காலின்மேல் அரிய காட் சியன்' என்று கூறிவிட்டுப் 'பூணொளிர் மார்பினன்' என்றதால் இயற்கையடை என்பது பெறுதும். திருவிளையாடற் புராணத்தில் மாமனாக வந்து வழக்குரைத்த படலத்தில், 'மாதுலராகி வந்தோர்' (23) எனத் தொடங்கும் செய்யுளில் 'தாதுலராத கோதை' எனக் கூறியதுபோல இயற்கையடை. போலும், ஆல் இரண்டும் அசை. யாவன் என்பது ஐயவினா. (110)

**7509.** தோளொடு தோள்செலத்
தொடர்ந்து நோக்குறின்
நாள்பல கழியுமா
னடுவ ணின்றதோர்
தாளுடை மலைகொலாஞ்
சமரம் வேட்டதோர்
ஆளென வுணர்கிலே
னார்கொலா மிவன்.

'தோளொடு தோள்செலத் தொடர்ந்து நோக்குறின்,
நாள்பல கழியுமால்; நடுவண் நின்றது ஓர்
தாளுடை மலைகொலாம்; சமரம் வேட்டது ஓர்
ஆள் என உணர்கிலேன்; ஆர்கொலாம் இவன்?

பொ :—(இவனுடைய) ஒரு தோளோடு (தொடங்கி மறு) தோள் வரை செல்லும்படி தொடர்ந்து பார்த்தால் (பார்த்து முடியுமுன்) பல நாட்கள் கழிந்துவிடும். (பூமியின்) நடுவே நிற்பதாகிய ஒப்பற்ற கால் முளைத்த மாமேருமலை (இப்படி வந்தது) கொல்லோ? போரை விரும்பி வந்த ஒரு வீரன், என உணரமாட்டாதேனுயுள்ளேன்; இப்படியுள்ளவன் யார்?

கு :—பரந்த மார்பை யுடையவனென்பார் தோளொடு தோளைச் சேர்த்துப் பார்க்க முடியாதென்றார். 'தாளுடை மலை' என்றது இல்பொருளுவமை. சமரம் - போர். வேட்டல் - விரும்புதல். காலுடை மலை என நினைத்தானுதலின் 'ஆளென உணர்கிலேன்' என்றான். 'உணர்கிலேன்' என்பதில் 'கில்' ஆற்றலுணர்த்தும் இடைநிலை. (111)

இச் செய்யுளை யடுத்து 1, 10, 11 ஆம் எண்ணுள்ள ஏட்டுச் சுவடியிலும் 52 ஆம் எண்ணுள்ள அச்சுப் புத்தகத்திலும் பின்வருமாறு ஒருமிகைப் பாடல் காணப்படுகின்றது.

7509. (a) குரக்கினப் பெரும்படை குலைகு லைந்துபோய்
வெருக்கொள விசும்பிடை வெய்ய மாயையின்
அரக்கனின் றமைத்ததோர் உருக்கொ லாளின
துருக்கொடே கரியகுன் றுற்றவே கொலாம்.

**7510.** எழுங்கதி ரவனொளி மறைய வெங்கணும்
விழுங்கிய திருளிவன் மெய்யி னுல்வெரீஇப்

புழுங்குநம் பெரும்படை யிரியல் போகின்ற
தழுங்கலில் சிந்தையாய் யார்கொ லாமிவன்.

'எழும் கதிரவன் ஒளி மறைய, எங்கணும்
விழுங்கியது இருள், இவன் மெய்யினுல்; வெரீஇ,
புழுங்கும் நம் பெருப்படை இரியல் போகின்றது;
அழுங்கல் இல் சிந்தையாய்! யார் கொலாம் இவன்?'

பொ :—'(உதய மலையினின்றும் உயர) எழுகின்ற சூரியனுடைய ஒளியானது இவனுடைய உடம்பினுல் மறைந்திட, எல்லா இடமும் இருளால் விழுங்கப் பெற்றது; இவன் உடம்பைக் கண்டு அஞ்சி (மனம்) வேர்க்கின்ற நம்முடைய பெரிய சேனையானது நிலைகெட்டு ஓடுகின்றது; கெடுதல் இல்லாத மனத்தையுடைய வீடணனே, இவன் யாவனோ?

கு :—ஒளியைக் கண்டு இருள் ஓடுதல் இயல்பாகவும் இவன் மேனியின் கருநிறத்தைக் கண்டு ஒளி ஓடியது என்றது, அவன் கரு நிறத்தின் மிகுதியையும், ஞாயிற்றையும் மறைத்து நின்ற அவன் பேருருவின் நெடுமையையும் உணர்த்தியது. 'இவன் மெய்யினுல்' என்பது இடை நிலை விளக்காய், 'இவன் மெய்யினுல் கதிரவன் ஒளி மறைய' எனவும், 'இவன் மெய்யினுல் வெரீஇப் புழுங்கும் நம் பெரும் படை' எனவும் ஈரிடத்தும் இயைந்து நின்றது. வீடணன் அஞ்சத் தக்கன கண்ட வழியும் அஞ்சிக் கெடுதலில்லாத மனத்தையுடையா ஞதலின் இராமன் அவனை 'அழுங்கல் இல் சிந்தையாய்' என்ருன். அழுங்கல் - கெடுதல்.

இப்பாடல் 1, 10, 11 ஆகிய ஏட்டுச் சுவடிகளிலும் 52 ஆம் எண் ணுள்ள அச்சுப் புத்தகத்திலும் காணப்படுதலாலும், இராமன் வீடணனை நோக்கி வினவிய வினக்களுள் இதுவும் ஒன்ருகத் தொடர்புபட்டமைதலாலும் மூலத்தில் சேர்க்கப்பட்டது. (112)

**7511.** அரக்கனவ் வுருவொழித்
தரியின் சேனையை
வெருக்கொளத் தோன்றுவான்
கொண்ட வேடமோ
தெரிக்கிலே னிவ்வுருத்
தெரியும் வண்ண நீ
பொருக்கென வீடணு
புகறியா லென்ருன்.

'அரக்கன் அவ் உரு ஒழித்து, அரியின் சேனையை
வெருக்கொளத் தோன்றுவான் கொண்ட வேடமோ?
தெரிக்கிலேன் இவ் உரு; தெரியும் வண்ணம், நீ
பொருக்கென, வீடண! புகறியால்' என்றான்.

பொ :—'இராவணன், தன்னுடைய உருவத்தை விட்டுக் குரங்குச் சேனைகளை அச்சங்கொள்ள(ச் செய்ய)த் தோன்றும் பொருட்டு மேற்கொண்ட உருவமோ (இது)? இவ்வுரு (இன்னதென்று) எனக்குத் தெரியவில்லை; (யான்) உணரும்படி வீடணனே, நீ விரைவாகச் சொல்லுவாயாக' என்றான் (இராமன்).

கு :—அரி - குரங்கு. 'அரியின் சேனையை' என்பதில் 'இன்' சாரியை. 'தோன்றுவான்' என்பதில் வான் வினையெச்ச விகுதி. 'தெரிக்கிலேன்' என்பது விரித்தல். 'பொருக்கென' என்பது விரைவுக் குறிப்பு. 'புகறி' முன்னிலை ஏவல் ஒருமை வினைமுற்று. 'வீணையென்றுணரின்' (110) என்ற செய்யுள் தொடங்கி இந்த நான்கு செய்யுட்களையும் குளகமாகக் கொண்டு, இராமன் கும்பகருணனை யாவன் போலும் என ஐயுற்று, 'ஆர்கொலாமிவன் வீடண, புகறி' என்றான் என முடிபு காண்க. (113)

## வீடணன் கும்பகருணனுடைய தன்மையை எடுத்துரைத்தல்

**7512.** ★ ஆரிய னனைய கூற
வடியிணை இறைஞ்சி யைய
பேரிய லிலங்கை வேந்தன்
பின்னவ னெனக்கு முன்னோன்
காரியல் காலனன்ன கழற்கும்ப
கருண னென்னும்
கூரிய சூலத் தானென்
றவனிலை கூற லுற்றான்.

ஆரியன் அனைய கூற,
அடி இணை இறைஞ்சி, 'ஐய!
பேர் இயல் இலங்கை வேந்தன்
பின்னவன்; எனக்கு முன்னோன்;
கார் இயல் காலன் அன்ன
கழல் கும்பகருணன் என்னும்
கூரிய சூலத்தான்' என்று,
அவன் நிலை கூறலுற்றான்;

பொ :—இராமன் அவ்வாறு சொல்ல, (வீடணன் அவனுடைய) இரண்டு திருவடிகளையும் வணங்கி, (அவனை நோக்கித்) ' தலைவனே, (இவன்) பெருமையையுடைய இலங்கை வேந்தனாகிய இராவணனுக்குப் பின் பிறந்தோன் ; எனக்கு முன்னே பிறந்தவன் ; கருத்த நிறத்தையுடைய இயமனைப் போன்ற, வீரக் கழலையணிந்த கும்பகருணன் என்று சொல்லப்படும் கூரிய சூலத்தையுடையவன் ' என்று அவனுடைய நிலையைச் சொல்லலுற்றான்.

கு :—கம்பர், ' ஆரியன் ' என்னும் இச்சொல்லை உயர்ந்தவன் என்னும் பொருளைக் குறிக்குமாறு பல இடங்களில் குறிக்கின்றார். ' சூலமேகம் திருத்திய தோளினான் ' (65) என்றும். ' வன்னெடுஞ் சூலத்தை வலத்து வாங்கினான் ' (94) என்றும் முன்னர்க் கூறியவாறு அவனுடைய அடையாளப் படை தோன்றுமாறு ஈண்டும் ' கூரிய சூலத்தான் ' என்றார். இதனை வலியுறுத்திச் ' சூலமே கொடு சூடினான் ' (117) எனவும் " சூலம் உண்டு " (122) எனவும் பின்னரும் (114) கூறுவர்.

இச் செய்யுளை யடுத்து 1, 10, 11 ஆகிய ஏட்டுச் சுவடிகளிலும் 52 ஆம் எண்ணுள்ள அச்சுப் புத்தகத்திலும் பின்வரும் மிகைப் பாடல் காணப்படுகின்றது.

7512. (a) ஏழெனு மோச னைக்கு
முயர்ந்தபே ருருவ னெட்டுச்
சூழிவெங் கரியுந் தாங்குந்
திசையெலாஞ் சுமக்குந் தோளான்
தாழ்வரு தவத்தின் மிக்கோன்
சதுமுகன் வரத்தினாலே
வீழ்பெருந் துயிலும் பெற்றான்
வெங்கடுங் கூற்றின் வெய்யோன்.

7513. தவனுணங் கியரும் வேதத்
தலைவரு முணருந் தன்மைச்
சிவனுணர்ந் தலரின் மேலைத்
திசைமுக னுணருந் தேவன்
அவனுணர்ந் தெழுந்த காலத்
தசுரர்கள் படுவ தெல்லாம்
இவனுணர்ந் தெழுந்த காலத்
திமையவர் படுவ ரெந்தாய்.

' தவன் நுணங்கியரும் வேதத்
தலைவரும் உணரும் தன்மைச்
சிவன் உணர்ந்து, அலரின்
மேலைத் திசைமுகன் உணரும் தேவன்—
அவன் உணர்ந்து எழுந்த
காலத்து அசுரர்கள் படுவது எல்லாம்
இவன் உணர்ந்து எழுந்த
காலத்து இமையவர் படுவர், எந்தாய்!

பொ :—' எம் தந்தை போன்றவனே, தவத்தால் உடல் சுருங்கி' அறிவு கூர்மையடையப் பெற்றவர்களும், வேதத்தில் தலைமையினை யுடையவர்களும் உணரும்படியான தன்மையினையுடைய சிவனால் உணர்ந்து போற்றப்பட்டு, பழையனாகிய தாமரை மலர் மேலுள்ள நான்முகனாலும் உணர்ந்து போற்றப்படுகின்ற தலைவனாகிய அந்தத் திருமால், யோகத் துயில் நீங்கி எழுந்த காலத்தில் அசுரர்கள் படும் பாடுகளை யெல்லாம் (கும்பகருணனாகிய) இவன் உறக்கத்தினின்றும் எழுந்த காலத்துத் தேவர்களெல்லோரும் படுவர்.

கு :—உலகினைப் படைத்து அளித்து அழிக்கும் தொழிலையுடைய மூன்று தேவர்களில் அழிப்பும் படைப்புமுடைய சிவன், திசைமுகன் என்ற இருவராலும் உணரப் படுபவன் அளிக்கும் கடவுள் எனக் கூறி, அவன் உலகினது நன்மையை அறிந்துகொண்டே தூங்கு கின்றான் என்ற நூல் முறைப்படி அவன் உணர்ந்தெழுந்து தீய வரை அழிக்கின்றான் ; இவன் வெறுந் தூக்கமுடையவனாதலின் தூங்கி விழித்தபோது தேவர்களை இடுக்கண் செய்கின்றான் என ஒப்புமை கூறியது நுணுகி அறிதற்பாலது. அளித்தல் என்பது ஈண்டு விரும்பியதைக் கொடுத்தலும் பகைவரைப் போக்கலும் ஆதலின், பகைவரைப் போக்கவே அளித்தல் செயல் பெறப்படு கின்றது. ' அறந்தலை நிறுத்தி வேத மருள்சுரந் தறைந்த நீதித் திறந்தெரிந் துலகம் பூணச் செந்நெறி செலுத்தித் தீயோர் இறந்துக நூறித் தக்கோ ரிடர்துடைத் தேக வீண்டுப் பிறந்தனன் ' (சுந்தரகாண். 1123) என மேல் கூறியதற்கேற்ப ஈண்டும் ' அசுரர்கள் படுவதெல்லாம் இவனுணர்ந்தெழுந்த காலத்து இமையவர் படுவர் ' என உவமை முகத்தால் கூறியதால், அவனே நீ யாதலின் உன்னால் இவர்களெல்லாம் படுவர் என்னும் குறிப்புத் தோன்றக் கூறினான். (115)

**7514.** ஆழி யாயிவ னாகுவான்
★ ஏழை வாழ்வுடை யெம்முனோன்

தாழ்வி லாவொரு தம்பியோன்
ஊழி நாளு முறங்குவான்.

'ஆழியாய்! இவன் ஆகுவான்,
ஏழை வாழ்வுடை எம்முனோன்
தாழ்விலா ஒரு தம்பியோன்;
ஊழி நாளும் உறங்குவான்;

பொ:—சக்கரத்தை யுடையவனே, இவன் அறிவில்லாத வாழ்வையுடைய எனது தமையனாகிய இராவணனுக்குத் தாழ்ச்சி யில்லாத ஒரு தம்பியாவன்; ஊழிக்கால மளவும் உறங்குபவன்;

கு:—'ஆழியாய்' என்றது திருமாலே இராமன் என்பதை உணர்த்தியபடி; ஆணைச் சக்கரத்தை உடையவனே எனலுமாம். 'ஆகுவான்' என்பது ஆனவன் என்பதுபோல வரும் எழுவாய்ச் சொல்லுருபு. ஏழை வாழ்வு - செய்வது தவிர்வது இன்னதென்றறி யாத அறியாமையுடைய வாழ்வு; இகழ்ச்சியையுடைய வாழ்வு என்ற படி. 'தாழ்விலா ஒரு தம்பியோன்' என்றதால் போரில் இராவணன் தாழ்வுறாதிருக்க உதவும் ஒப்பற்ற தம்பி என்றபடி. 'திண்பொரு ளெய்தலாகுந் தெவ்வரைச் செகுக்கலாகும்......எம்பியை ஈங்குப் பெற்றேன் என்னெனக் கரிய தென்றான்' (1760) என்னும் சீவக சிந்தாமணிச் செய்யுள் ஈண்டு ஒப்புநோக்கத்தக்கது. 'இது ஓராயிரம் கங்குல் ஊழிகளே' (திருவிருத்தம் - 70) என்பதுபோல் ஈண்டு ஊழி என்பது கால நெடுமையை உணர்த்தியது. (116)

**7515.** கால னாருயிர்க் காலனால்
காலின் மேனிமிர் காலினான்
மாலி னார்கெட வாகையே
சூல மேகொடு சூடினான்.

காலனார் உயிர்க் காலனால்;
காலின் மேல் நிமிர் காலினான்;
மாலினார் கெட, வாகையே
சூலமே கொடு சூடினான்.

பொ:—காலனுடைய அரிய உயிருக்கு இயமன் போன்றவன்; காற்றுக்குமேல் விரைவாகச் செல்லுகின்ற கால்களையுடையவன்; திருமால் தோல்வியடையும்படியாகச் சூலத்தால் வெற்றிமாலையைச் சூடினான்;

கு :—காலக் கடவுளுக்கும் காலன் என்றதால் இவனுடைய வலி மிகுதி பெறப்படுகின்றது. 'காலின்மேல்' என்பதில் 'இன்' உறழ்ச்சிப் பொருள் குறித்து நின்றது. 'மாலினுர்' என்பதற்குக் கரு நிறம் உடையவர் எனப் பொருள்கொண்டு இந்திரனைக் குறித்த தாகக் கொள்ளலும் பெருமையையுடைய பகைவர்கள் எனப் பொருள் கொள்ளலும் ஆம். 'மாலினுர்' என்பதில் 'இன்' சாரியை. 'கெட, சூலமே கொடு வாகை சூடினுன்' என முடிக்க. 'சூலமே' என்பதிலுள்ள ஏகாரம் பிரிநிலை. (117)

**7516.** தாங்கு கொம்பொரு நான்குகால்
ஓங்க லொன்றினை யும்பர்கோன்
வீங்கு நெஞ்சன் விழுந்திலான்
தூங்க நின்று சுழற்றினுன்.

'தாங்கு கொம்பு ஒரு நான்குகால்
ஓங்கல் ஒன்றினை, உம்பர்கோன்
வீங்கு நெஞ்சன் விழுந்திலான்
தூங்க, நின்று சுழற்றினுன்.

பொ :—'மிக்க பயத்தைக் கொண்ட நெஞ்சையுடைய தேவர் களுக்குத் தலைவனுகிய இந்திரன், கீழே விழாதபடி தொங்கிக் கொண்டிருக்கத் தான் ஒருவனுக நின்று, ஒரு நான்கு தந்தங்களைக் கொண்ட நான்கு கால்களையுடைய மலைபோன்ற வெள்ளை யானை யைச் சுழற்றினுன்;

கு :—'ஒரு நான்கு கொம்பு தாங்கு' எனவும், ஒன்று ஓங்கலினை எனவும் இயைக்க. 'விழுந்திலான்' என்றதனுல் சுழற்சி வேகம் பெறப்படுகின்றது. தூங்குதல் - தொங்குதல். (118)

**7517.** கழிந்த தீயொடு காலையும்
பிழிந்து சாறுகொள் பெற்றியான்
அழிந்து மீனுக வாழிநீர்
இழிந்து காலினி னெற்றுவான்.

'கழிந்த தீயொடு காலையும்
பிழிந்து சாறுகொள் பெற்றியான்;
அழிந்து மீன்உக ஆழிநீர்
இழிந்து, காலினின் எற்றுவான்.

பொ :—'(யாவருடைய வன்மைக்கும் அடங்காமல்) அப்பாற் பட்ட நெருப்பையும் (அதற்குக் காரணமாகிய) காற்றையும் பிழிந்து சாறு கொள்ளும் தன்மையினையுடையான்; கடலில் இறங்கி விண் மீன்களெல்லாம் நிலைபெயர்ந்து விழும்படியாகக் காலினால் நீரை உந்துவான்;

கு :—கால் - காற்று. சாறு இல்லாத நெருப்புக்கும் காற்றுக்கும் சாறு உள்ளதாகக் கூறுவது இலக்கணை வழக்காகும். 'ஆழி இழிந்து, உக, காலினின் நீர் எற்றுவான்' என இயைக்க. காலினின்-காலால்; உருபு மயக்கம். எற்றுவான் - உந்துவான்; 'கழல் விரலின் உந் தினான்' (கிட்கிந்தா. துந்துபிப் படலம் - 14) என்ற இடத்துப்போல. இதனால் கும்பகருணன் தீ, காற்று, நீர் ஆகிய மூன்று பூதங்களையும் வென்றமை கூறப்பட்டது. (119)

**7518.** ஊனு யர்ந்த வுரத்தினன்
மேனி மிர்ந்த மிடுக்கினன்
தானு யர்ந்த தவத்தினன்
வானு யர்ந்த வரத்தினன்.

'ஊன் உயர்ந்த உரத்தினன் :
மேல் நிமிர்ந்த மிடுக்கினன் ;
தான் உயர்ந்த தவத்தினன் ;
வான் உயர்ந்த வரத்தினன் ;

பொ :—'மாமிச உணவினால் பருத்த உடலையுடையவன்; (யாவ ரினும்) மேம்பட்ட வலிமையை உடையவன்; சிறந்த தவத்தினை யுடையவன்; வானம்போல் உயர்ந்த வரத்தினையுடையவன்;

கு :—'ஊன் உயர்ந்த உரத்தினன்' என்பதால் ஊன் உணவால் உடம்பு பெருக்கும் என்பது பெறப்பட்டது. 'தன்னூன் பெருக்கற்குத் தான் பிறிதூன் உண்பான்' (திருக்குறள் - 251) எனவும், 'ஊனைத் தின்றூனைப் பெருக்காமை முன்னினிதே' (இனியவை நாற்பது - 5) எனவும் வருவன ஒப்புநோக்கற்பாலன. உரம் என்பது ஆகுபெய ராய் உடலை உணர்த்தியது. மேல் நிமிர்ந்த - மேம்பட்ட. முதல் இரண்டடிகளுக்கு உடலுக்கேற்ப உயர்ந்த மன உறுதியையுடையவ னென்றும், யாவர் மேலும் செருக்குற்றுச் செல்லும் வலிமையுடையவ னென்றும் பொருள் கொள்ளலாம். உரத்தினன், மிடுக்கினன் முதலியன ஆண்பால் குறிப்பு வினைமுற்று. உரத்தினன், தவத் தினன் என்பனவற்றை மூன்றன் உருபேற்ற பெயராகக் கொண்டு

உரத்தினன் (மன உறுதியினல்) மிடுக்கினன் என்றும், தவத்தினன் (தவத்தினல்) வரத்தினன் என்றும் பொருள் கூறுதலும் அமையும். 'தான்' என்பது அசை. 'வான் உயர்ந்த' என்பதற்கு மிகுதியாக உயர்ந்த எனவும் பொருள் கூறலாம். (120)

**7519.** திறங்கொள் சாரி திரிந்தநாள்
கறங்க லாது கணக்கிலான்
இறங்கு தாரவ னின்றுகா
றுறங்க லாலுல குய்ந்ததால்.

'திறம் கொள் சாரி திரிந்த நாள்,
கறங்கு அலாது கணக்கு இலான்;
இறங்கு தாரவன் இன்றுகாறு
உறங்கலால் உலகு உய்ந்ததால்.

பொ :—தொங்குகின்ற மாலையை அணிந்துள்ள இவன், (இடம் வலம் என்னும்) வகையினைக் கொண்ட சாரிகைத் தொழிலை மேற்கொண்டு திரிந்தபோது காற்றாடியல்லது வேறு உவமை கூறுதற்கு இல்லாதவன்; (திக்கு விசயம் செய்தது முதல்) இன்று வரையிலும் உறங்குதலால் உலகிலுள்ளோர்கள் பிழைத்திருக்கின்றார்கள்;

கு :—சாரிகை என்பது சாரி என நின்றது. காற்றாடியைப் போலச் சுழன்றான் என்பார், 'கறங்கலாது கணக்கிலான்' என்றார். 'கணக்கு' என்றது ஈண்டு உவமவாசகம். இன்று காறும் என்பதிலுள்ள உம்மை விகாரத்தால் தொக்கது. உலகு என்பதற்கேற்ப உய்ந்தது என அஃறிணை முடிபு கொடுத்தார். உலகு, இட ஆகு பெயர். பசி மிக்கபோது விழித்து உணவருந்திப் பின்னும் உறங்கும் இயல்பினனாதலின், உறங்காமலிருந்தால் உலகினரெல்லாம் அவனுக்கு இரையாகியிருப்பார்கள் என்பதுபட 'உலகு உய்ந்தது' என்றார். (121)

**7520.** சூல முண்டது சூருளோர்
கால முண்டது கைக்கொள்வான்
ஆல முண்டவ னாழிவாய்
ஞால முண்டவ நல்கினன்.

'சூலம் உண்டு; அது சூர் உளோர்
காலம் உண்டது; கைக்கொள்வான்,

ஆலம் உண்டவன் ஆழிவாய்,
ஞாலம் உண்டவ! நல்கினன்;

பொ :—உலகத்தை உண்டவனே, வீரம் உடையவர்களுடைய வாழ்நாளை அழித்ததாகிய சூலப்படை ஒன்றுள்ளது; அதனை (இவன்) கைக்கொள்ளும்படி கடலில் தோன்றிய நஞ்சையுண்ட சிவபெருமான் கொடுத்தான்;

கு :—சூருளோர் காலம் உண்டது, (ஆகிய) சூலம் உண்டு; அது (இவன்) கைக்கொள்வான், ஆழிவாய் ஆலம் உண்டவன் நல்கினன் என முடிக்க. சூர் - வீரம். அதை என்னும் இரண்டாம் வேற்றுமை ஏற்ற சுட்டுச்சொல், அது எனக் குறைந்து நின்றது. ஆலம் - ஆலஹாலம்; தேவர்களும் அசுரர்களும் கடல் கடைந்தபோது வாசுகியால் கக்கப்பட்ட நஞ்சு. (122)

**7521.** மின்னி னொன்றிய விண்ணுளோர்
முன்னி லென்றமர் முற்றினர்
என்னி லென்றுமவ் வெண்ணிலார்
வென்னி லன்றி விழித்திலான்.

'மின்னின் ஒன்றிய விண்ணுளோர்,'
'முன் நில்' என்று, அமர் முற்றினர்—
என்னில், என்றும் அவ் எண்ணிலார்
வென்னில் அன்றி விழித்திலான்.

பொ :—'மின்னலைப் போல (ஒளியுடையராய்த்) திரண்ட தேவர்கள், 'என் எதிரிலே நிற்பாய்' என்று போர் செய்தாரானல், எப்பொழுதும் அந்தக் கணக்கில்லாத தேவர்களின் முதுகுப்புறமன்றிப் பார்க்காதவன்;

கு :—'ஒன்றிய விண்ணுளோர்' என்றதால் தேவர்களின் கூட்ட மிகுதி பெறப்பட்டது. அதனையே பின்னர், 'அவ் எண்ணிலார்' எனச் சுட்டினர். வென் - முதுகு. 'வெந்' என வரவேண்டியது எதுகைக்கேற்ப றன்னகரமாய்த் திரிந்து நின்றது. 'வென்னில் அன்றி விழித்திலான்' என்றதால் இவன் முன்நின்று பொருதார் யாருமிலர் என்றபடி. (123)

**7522.** தரும மன்றிது தானிதால்
வருந மக்குயிர் மாய்வெனு
உருமின் வெய்யவ னுக்குரை
இருமை மேலு மியம்பினன்.

'"தருமம் அன்று இதுதான்; இதால்
வரும், நமக்கு உயிர் மாய்வு" எனு.
உருமின் வெய்யவனுக்கு உரை
இருமை மேலும் இயம்பினன்.'

பொ :—(பிறன் மனைவியைக் கவர்ந்து வந்து சிறை வைத்த தாகிய) இச் செயல் அறநெறியன்று; இச் செய்கையால் நமக்கு உயிரிழப்பு உண்டாகுமென்று இடியைக் காட்டினும் கொடிய இராவண னுக்கு நீதியை இரண்டாந்தடவையாக மறுபடியும் சொன்னான்.

கு :—இது என்றது சீதையைக் கவர்ந்து சிறை வைத்ததைச் சுட்டியது. 'நமக்கு உயிர் மாய்வு வரும் எனு' என்று இயைக்க. இராவணன் தன்னை இழிவுபடுத்தி வெய்ய சொற்களைக் கூறின மையின் அவனை 'உருமின் வெய்யவன்' என்று வீடணன் கூறினான். உரை என்றது ஈண்டு நீதியை உணர்த்தியது. மந்திராலோசனைக் காலத்து, 'நீ செய்தது அறமன்று' எனக் கூறினவன் போருக்குப் புறப்படும்போதும் கூறினனாதலின், இரண்டாந் தடவையாக மறு படியும் சொன்னான் என்பான், 'இருமை மேலும் இயம்பினன்' எனக் கூறினான். இருமை - இரண்டாந்தடவையாக. மேலும் - மறுபடியும். (124)

**7523.** மறுத்த தம்முனை வாய்மையால்
ஒறுத்து மாவ துணர்த்தினன்
வெறுத்து மாள்வது மெய்யெனு
இறுத்து நின்னெதி ரெய்தினன்.

'மறுத்த தம்முனை, வாய்மையால்
ஒறுத்தும், ஆவது உணர்த்தினன்;
வெறுத்து, 'மாள்வது மெய்' எனு
இறுத்து நின் எதிர் எய்தினன்,'

பொ :—('தன்னுடைய நற்புத்தியைக் கேளாது) மறுத்த தமையனை மெய்ம்மொழிகளால் கடிந்து கூறியும் (அவனுக்கு) உறுதி

யைச் சொன்னான்; (தன் சொற்களைக் கேளாமையின்) தான் இறப்பது உண்மை என்று சொல்லி(த் தன் உயிரை) வெறுத்து, நின் எதிரில் போருக்காக வந்து நின்றான்.

கு :—கும்பகருணன் இராவணனுக்கு அறிவுரை கூறியதை ஒற்றர் மூலமாக வீடணன் உணர்ந்தானாதலின் இவ்வாறு கூறினான். தம் முன்னவனை என்பது 'தம்முனை' என வந்தது. மென்மொழி யாற் கூறியதேயன்றி வன்மொழியாலும் கடிந்து கூறினான் என்பான், 'ஒறுத்தும்' எனக் குறித்தான். மேல் மந்திரப் படலத்துக் கூறிய, 'சிட்டர் செயல் செய்திலை குலச் சிறுமை செய்தாய்' என்பன போன்றன ஒறுத்துக் கூறியன. ஆவது - மேல் நிகழ்வது; ஈண்டு உறுதியை உணர்த்திற்று. இறுத்தல் - சொல்லுதல். 'வென்றிவண் வருவெனென்றுரைக்கிலேன்......பொன்றுவென்' (95) எனக் கும்ப கருணன் முன்னரே கூறியுள்ளானாதலின், 'மாள்வது மெய் எனா இறுத்து' என வீடணன் கூறினான். (125)

**7524.** நன்றி தன்று நமக்கெனா
ஒன்று நீதி உணர்த்தினான்
இன்று காலன்மு னெய்தினான்
என்று சொல்லி இறைஞ்சினான்.

'"நன்று இது அன்று நமக்கு" எனா,
ஒன்று நீதி உணர்த்தினான்;
இன்று காலன் முன் எய்தினான்'
என்று சொல்லி, இறைஞ்சினான்.

பொ :—'("பிறன் மனைவியைக் கவர்ந்து வைத்திருக்கும்) இது, நமக்கு நல்லது அன்று" என்று (அதற்கேற்பப்) பொருந்திய நீதிகள் பலவற்றையும் அறிவுறுத்தினான்; (அவன் கேளாமையின்), இன்று இயமனுக்கு முன் வந்து சேர்ந்தான்' என்று சொல்லி (இராமனை) வணங்கினான் (வீடணன்).

கு :—இது என்பது சீதையைக் கவர்ந்து வந்து சிறையில் வைத் திருத்தலைக் குறித்தது. 'தருமம் அன்று இதுதான்' (124) என முன் கூறப்பட்டதே ஈண்டும், 'நன்று இது அன்று நமக்கு' என அநுவ தித்துச் சொல்லப்பட்டது. இன்று நின்னொடு எதிர்த்துப் பொரும் இப் போரில் கூற்றுவன் இவனது உயிரைக் கொள்ளுதல் உறுதி என்பான், 'இன்று காலன்முன் எய்தினான்' என்றான். காலன்முன் எய்துதல் - இறத்தல். (126)

## வீடணன் சொற்களைக் கேட்ட சுக்கிரீவன் இவனை நம்முடன் சேர்த்துக் கொள்ளுதல் நலம் என இராமனுக்குச் சொல்லுதல்

7525. என்றவ னுரைத்த லோடு
★ மிரவிசே யிவனை யின்று
கொன்றொரு பயனு மில்லைக்
கூடுமேற் கூட்டிக் கொண்டு
நின்றது புரிது மற்றிந்
நிருதர்கோ னிடரு நீங்கும்
நன்றென நினைந்தே னென்றா
னாதனு நலனி தென்றான்.

என்று அவன் உரைத்தலோடும்,
இரவிசேய், 'இவனை இன்று
கொன்று ஒரு பயனும் இல்லை;
கூடுமேல், கூட்டிக் கொண்டு
நின்றது புரிதும்; மற்று இந்
நிருதர்கோன் இடரும் நீங்கும்;
"நன்று" என நினைந்தேன்' என்றான்;
நாதனும், 'நலன் ஈது' என்றான்.

பொ :—என்று வீடணன் சொல்லுதலும், (உடனிருந்த) சூரியன் மகனான சுக்கிரீவன், (இராமனை நோக்கி) 'கும்பகருணனை இப் பொழுது கொல்லுதலால் நமக்கு ஒரு பயனுமில்லை; (இவன் நம் மோடு) சேருவானானால் நம்மொடு சேர்த்துக்கொண்டு மேல் செய்ய வேண்டியவற்றைச் செய்வோம்; (அவ்வாறு செய்தலால்) இவ் வீடணனுக்கு(த் தமையன் இறந்து விடுவானே என்பதால் உண் டாகும்) துன்பமும் நீங்கும்; "(இவ்வாறு செய்தல்) நன்மை பயப்ப தாகும்" என்று நினைத்தேன்' என்று சொன்னான். (அதனைக் கேட்ட) இராமனும் 'இது நல்லது' என்று கூறினான்.

கு :—இராவணன் தமையனாக இருந்தும் ஓரமின்றி அவன் செயலைக் கண்டித்துக் கூறினமையின் இவன் கொல்லுதற்குரியன் அல்லன் என்னும் கருத்தைக்கொண்டு, 'இவனை இன்று கொன் றொரு பயனுமில்லை' என்று கூறினான். நின்றது - மேல் நிகழ வேண்டிய செயல். நிருதர்- அரக்கர். (127)

## 'கும்பகருணனை அழைத்தற்குச் செல்வார் யாவர்?' என்று இராமன் கேட்க, வீடணன் உடன்பட்டு விடைபெற்றுச் செல்லுதல்

**7526.** ஏகுதற் குரியார் யாரே
யென்றலு மிலங்கை வேந்தன்
ஆகின்மற் றடியேன் சென்றங்
கறிவினு லவனை யுள்ளம்
சேகறத் தெருட்டி யீண்டுச்
சேருமேற் சேர்ப்ப னென்ருன்
மேகமொப் பானு நன்று
போகென விடையு மீந்தான்.

'ஏகுதற்கு உரியார் யாரே?'
என்றலும், இலங்கை வேந்தன்,
'ஆகின் மற்று அடியேன் சென்று
அங்கு அறிவினுல் அவனை உள்ளம்
சேகு அறத் தெருட்டி, ஈண்டுச்
சேருமேல், சேர்ப்பன்' என்ருன்;
மேகம் ஒப்பானும், 'நன்று, போக!'
என விடையும் ஈந்தான்.

பொ:—(கும்பகருணனிடம்) 'செல்லுதற்கு உரியவர் யார்?' என்று இராமன் கேட்ட அளவில், இலங்கை அரசனுகிய வீடணன், 'அப்படியாயின் அடியேன் சென்று என் அறிவைக்கொண்டு கும்பகருணனுடைய மனம் ஐயம் நீங்கும்படியாகத் தெளிவுறச் செய்து நம்மிடம் சேருவானுயின் அழைத்து வருவேன்' என்று சொன்னுன். மேகம் போன்ற நிறத்தையுடைய இராமனும் 'நல்லது, போவாயாக' என்று விடை கொடுத்தான்.

கு:—ஆயின் என்பது எதுகை நோக்கி ஆகின் என நின்றது. மற்று, அசைநிலை. அடியேன்-அடிமை செய்பவனுகிய யான். சேகு-ஐயம். மேற்பாட்டில் 'கூடுமேல்' என்பதனை விளக்கி 'ஈண்டுச் சேருமேல்' எனக் கூறினர். போக என என்பதில் அகரம் தொக்கது. விடையும் என்பதிலுள்ள உம்மை அசை. (128)

## வீடணன் கும்பகருணனை அடைந்து வணங்குதல்

**7527.** தந்திரக் கடலை நீந்தித்
தன்பெரும் படையைச் சார்ந்தான்
வெந்திற லவனுக் கைய
வீடணன் விரைவி னுன்பால்
வந்தனன் என்னச் சொன்னுர்
வரம்பிலா வுவகை கூர்ந்து
சிந்தையாற் களிக்கின் ருன்றன்
செறிகழற் சென்னி சேர்த்தான்.

தந்திரக் கடலை நீந்தி,
தன் பெரும் படையைச் சார்ந்தான்;
வெந்திறலவனுக்கு, 'ஐய! வீடணன்
விரைவின் உன்பால்
வந்தனன்' என்னச் சொன்னுர்;
வரம்பு இலா உவகை கூர்ந்து,
சிந்தையால் களிக்கின்ருன் தன்
செறிகழல் சென்னி சேர்த்தான்,

பொ :—(வீடணன், வானரச்) சேனைக் கடலைக் கடந்து கும்ப கருணனுடைய பெரிய படையை அடைந்தான்; (அதனைக்கண்ட தூதர்கள்) மிக்க வலிமையுடைய கும்பகருணனிடம் (சென்று) 'தலைவனே, வீடணன் உன்னிடத்து விரைவாக வருகின்ருன்' என்று சொன்னுர்கள். (அதனைக்கேட்டு) மனத்தில் அளவில்லாத மகிழ்ச்சி மீதூரப் பெற்றுக் களிக்கின்றவனுகிய கும்பகருணனுடைய கழல் பொருந்திய பாதங்களை (வீடணன்) தன் முடியில் சேர்த்துக் கொண் டான்.

கு :—தந்திரம் - சேனை. 'தெவ்வர் தந்திரமிதனைத் தெய்வப் படையினுற் சமைப்பினல்லால்' (பிரமாத்திரப் படலம் - 156). தன் என்றது கும்பகருணனை. வீடணன் அரக்கனுதலின் அரக்கர் படை யைத் 'தன் படை' எனக் குறித்தார் எனக் கொள்ளுதலும் ஒன்று. சேனையைக் கடல் என்றதற்கேற்ப, 'நீந்தி' என்ருர்; உருவகஅணி. வருகின்றவனை விரைவு பற்றி 'வந்தனன்' எனக் கூறியது காலவழு வமைதி. வீடணன் அரக்கர் கூட்டுறவினின்றும் நீங்கி இராமனை யடைந்து நன்மை பெற்றதற்கு மேலெழுந்தவாறன்றி உண்மை யாகவே கும்பகருணன் மகிழ்ந்தானுதலின் 'சிந்தையால் களிக் கின்ருன்' என்ருர். செறிகழல் - அன்மொழித்தொகை. (129)

## தன்னை வந்து வணங்கிய வீடணனுக்குக் கும்பகருணன் 'வந்தது தகுதி அன்று' என்று கூறுதல்

**7528.** முந்திவந் திறைஞ்சி ஞனை
முகந்துயிர் மூழ்கப் புல்லி
உய்ந்தனை யொருவன் போனு
யெனமன முவக்கின் றேன்றன்
சிந்தனை முழுதும் சிந்தத்
தெளிவிலார் போல மீள
வந்ததென் றனியே யென்ருன்
மழையினீர் வழங்கு கண்ணுன்.

முந்தி வந்து இறைஞ்சினுனை,
முகந்து, உயிர் மூழ்கப்புல்லி,
'உய்ந்தனை, ஒருவன் போனுய்'
எனமனம் உவக்கின்றேன் தன்
சிந்தனை முழுதும் சிந்த,
தெளிவு இலார் போல மீள
வந்தது என், தனியே?' என்ருன்,
மழையின் நீர் வழங்கு கண்ணுன்.

பொ:—மழையைப்போல (அன்பினுல்) நீர் பெருகும் கண்ணை யுடையவனுன கும்பகருணன், தன் எதிரே வந்து வணங்கிய வீடணனைத் தாங்கி அணைத்து, உயிர் ஆரத் தழுவி, '(நம்முள்) ஒருவனுகிய நீ பிழைத்துப் போனுய்' என உள்ளம் மகிழ்கின்ற என்னுடைய எண்ணம் முழுதும் கெடுமாறு, அறிவில்லாதாரைப் போன்று தனிமையாகத் திரும்பிவந்த காரணமென்ன என்று கேட்டான்.

கு:—உடலோடு உடல் தழுவியதை ஆர்வம் மிகுதி குறித்து 'உயிர் மூழ்கப் புல்லி' என்ருர். 'உய்ந்தனை போனுய்' என்பது உய்ந்தாய் என்னும் பொருள் குறித்த ஒரு சொல். இடையே இடைப்பிற வரலாய் 'ஒருவன்' என்பது வந்தது. பகைவர்களோடு வீடணன் சேர்ந்து விட்டமையின் அரக்கர்களால் இடையூறு நேரக்கூடும் என்ற கருத்தில் 'வந்ததென் தனியே' என்று வினவினுன். (130)

**7529.** அவயநீ பெற்ற வாறு
மமரரும் பெறுத லாற்ரு
உவயலோ கத்தி லுள்ள
சிறப்புங்கேட் டுவந்தே னுள்ளம்
கவிஞரி னறிவு மிக்காய்
காலன்வாய்க் களிக்கின் றேம்பால்
நவையுற வந்த தென்னீ
யமுதுண்பாய் நஞ்சுண்பாயோ.

'அவயம் நீ பெற்றவாறும்,
அமரரும் பெறுதல் ஆற்ரு
உவய லோகத்திலுள்ள சிறப்பும்,
கேட்டு உவந்தேன், உள்ளம்
கவிஞரின் அறிவு மிக்காய்!
காலன் வாய்க் களிக்கின்றேம்பால்
நவை உற வந்தது என், நீ?
அமுது உண்பாய் நஞ்சு உண்பாயோ?

பொ :—'நீ (இராமனுல்) அடைக்கலமாக ஏற்றுக் கொள்ளப் பெற்ற தன்மையையும், (அந்த இராமனுல்) தேவர்களும் பெற முடியாத (இம்மை மறுமை என்ற) இரண்டு உலகத்திலுமுள்ள சிறப்பைப் பெற்ற படியையும் கேட்டு மனம் மகிழ்ந்தேன்; கவிஞரைக் காட்டிலும் அறிவு மிகுந்தவனே, இயமன் வாயில் இருந்த வண்ணம் களிக்கின்ற எம்மிடத்துக் குற்றம் உண்டாகும்படியாக நீ வந்த காரணம் என்ன? அமுதத்தை உண்டு கொண்டிருக்கிற நீ நஞ்சை அருந்தலாமா?

கு :—உவயம் - இரண்டு. அடைக்கலம் பெற்றபோதே இராமனுல் முடிசூட்டி வைக்கப் பெற்றவனுதலின் இவ்வுலகச் சிறப்பும், இராமனுடைய அருளால் மறுமையில் உய்தியுறல் உறுதியாகலின் அவ்வுலகச் சிறப்பும் பெற்றமை கொண்டு 'உவயலோகத்திலுள்ள சிறப்பும்' என்ருன். உயிரை இயமன் பிடித்துச் செல்லுகின்ருன் என்னும் முறை பற்றிக், 'காலன்வாய்க் களிக்கின்றேம்' என்று கூறினன். இராமனை அடைந்த நீ மீளவும் அரக்கர்களோடு தொடர்புறல் ஆகாது என்பான், 'அமுதுண்பாய் நஞ்சுண்பாயோ?' என்ருன். அவர்களோடு கூடினல் நீ உய்தி பெறுவை; எங்களோடு கூடினல் இறந்துபடுவை என்றதை விளக்கியவாறு. (131)

**7530.** குலத்தியல் பழிந்த தேனுங்
குமரமற் றுன்னைக் கொண்டே
புலத்தியன் மரபு மாயாப்
புண்ணியம் பொருந்திற் றென்னு
வலத்திய ரோளை நோக்கி
மகிழ்கின்றேன் மன்ன வாயை
உலத்தினை திரிய வந்தா
யுளைகின்ற துள்ள மந்தோ.

'"குலத்து இயல்பு அழிந்ததேனும்,
குமர! மற்று உன்னைக் கொண்டே
புலத்தியன் மரபு, மாயாப்
புண்ணியம் பொருந்திற்று" என்னு,
வலத்து இயல் தோளை நோக்கி
மகிழ்கின்றேன்; மன்ன வாயை
உலத்தினை, திரிய வந்தாய்;
உளைகின்றது உள்ளம், அந்தோ.

பொ :—'"தம்பி, (சீதையைச் சிறை செய்தலால்) நம் குலத்தினுடைய பெருமை அழிந்ததாயினும், உன்னால் புலத்தியன் முதலாக வந்த (நம்) குலம் கெடாத நன்மையை அடைந்தது" என்று, வெற்றியின் தன்மை வாய்ந்த (உன்) தோளைக்கண்டு மகிழ்கின்றேன்; மன்னவனே, என்னுடைய வாயை உலரச் செய்தவனாய்த் திரும்பி வந்துள்ளாய்; ஐயோ, என் மனம் வருந்துகிறது.

கு :—ஒரு குலத்திற் பிறந்த புதல்வனது நற்செய்கையால் அவன் குலத்திற் பிறந்த முன்னோர்களும் நன்மை பெறுவார்கள் என்பது பகீரதனால் அறியலாம். மற்று - வினைமாற்று. தோளை மட்டும் கூறியது அவன் வடிவத்தையே உணர்த்தியது. வீடணன் திரும்பி வந்திருத்தல் அவன் மகிழ்ச்சியைக் கெடுத்ததாதலின், 'வாயை உலத்தினை' என்றான். (132)

**7531.** அறப்பெருந் துணைவர் தம்மை
யபயமென் றடைந்த நின்னைத்
துறப்பது துணியார் தங்க
ளாருயிர் துறந்த போதும்

இறப்பெனும் பயத்தை விட்டா
யிராமனென் பளவு மற்றிப்
பிறப்பெனும் புன்மை யில்லை
நினைந்தென்கொல் பெயர்ந்த வண்ணம்.

'அறப் பெருந் துணைவர், தம்மை
அபயம் என்று அடைந்த நின்னைத்
துறப்பது துணியார், தங்கள்
ஆர் உயிர் துறந்தபோதும்
இறப்பு எனும் பயத்தை விட்டாய்;
இராமன் என்பளவும் மற்று இப்
பிறப்பு எனும் புன்மை இல்லை:
நினைந்து என்கொல் பெயர்ந்த வண்ணம்?

பொ :—'அறத்திற்குப் பெருந் துணையாயுள்ள அந்த இராம இலக்குவர்கள், தம்மை அடைக்கலம் என்று அடைந்த நின்னைத் தங்களுடைய அரிய உயிர் போகும்படியாக இருந்தாலும் கைவிடுதற்குத் துனிந்திடார்; (அவர்களைச் சேர்ந்தமையால் நீ) இறப்பென்னும் பயம் நீங்கப்பெற்ருய்; இராமன் என்னும் பெயர் நிலைத்திருக்குமளவும் (உனக்கு) இந்தப் பிறப்பு என்னும் இழிவு இல்லை; (இப்படியிருக்க, அவர்களை விட்டு நீ) மீண்டு வந்த விதம் எந்தப் பயனைக் கருதி?

கு :—வீடணன் அடைக்கலப் படலத்து, 'ஆழியானவனை நோக்கி' (142) எனத் தொடங்குஞ் செய்யுளில் இராமன் சொன்னதை மேல், 'அவயம் நீ பெற்றவாறும்' எனத் தொடங்கும் செய்யுளால் 'கேட்டுவந்தேன்' (131) என்ருனுதலின், 'இறப்பெனும் பயத்தை விட்டாய்' என இப்பொழுது கூறினுன். இராமன் கடவுளாதலின் அவனையடைந்த நினக்கு இனிப் பிறப்பும் இல்லை என்பான், 'பிறப்பெனும் புன்மை இல்லை' எனவும் கூறினுன். (133)

7532. அறமென நின்ற நம்பற்
கடிமைபெற் றவன்ற னுலே
மறமென நின்ற மூன்று
மருங்கற மாற்றி மற்றும்

திறமென நின்ற தீமை
யிம்மையே தீர்ந்த செல்வ
பிறர்மனை நோக்கு வேமை
யுறவெனப் பெறுதி போலாம்.

'அறம் என நின்ற நம்பற்கு
அடிமை பெற்று, அவன் தனாலே
மறம் என நின்ற மூன்றும்
மருங்கு அற மாற்றி, மற்றும்,
திறம் என நின்ற தீமை
இம்மையே, தீர்ந்த செல்வ!
பிறர் மனை நோக்குவேமை
உறவு எனப் பெறுதி போலாம்?

பொ :—'தருமமே வடிவாகி நின்ற இராமனுக்கு அடிமையாகப் பெற்று, அவனாலே பாவத்திற்குக் காரணம் என்னுமாறு நின்ற காமம், வெகுளி, மயக்கம் ஆகிய மூன்றையும் உன்னிடத்தில் இல்லாமற் போக்கி, மேலும் வலிமையுடையதாக நின்ற தீவினைப்பயன் இப் பிறப்பிலேயே நீங்கப் பெற்ற மெய்ஞ்ஞானச் செல்வமுள்ள வீடணனே, பிறர் மனைவியை விரும்பிப் பார்க்கின்ற எங்களை உறவு என்று நினைக்கின்றாயோ?

கு :—நம்பன் - எல்லோராலும் விரும்பப்படுபவன். 'நம்பும் மேவும் நசையாகும்மே'. (தொல் - சொல் - உரியியல் - 31). பாவம் பிறப்புத்தோறும் தொடர்ந்துகொண்டே வருமாதலின் அதனைத் 'திறம் என நின்ற தீமை' என்றும், இவனுக்கு இனிமேல் பிறவி யில்லை என்பான் 'இம்மையே தீர்ந்த' என்றும் கூறினான். 'காமம் வெகுளி மயக்கம் இவை மூன்றன், நாமம் கெடக் கெடும் நோய்' (360) என்றார் திருவள்ளுவரும். பிறர்மனை நோக்குதல், பாவம் மூன்றனுள் முதன்மைத்தாதலின் அதனைச் செய்த இராவணனுக்குத் தான் துணையாக வந்தமைபற்றி 'நோக்குவேமை' எனத் தன்னையும் உளப் படுத்திக் கூறினான். (134)

**7533.** நீதியும் தரும நின்ற
நிலைமையும் புலமை தானும்
ஆதியங் கடவு ளாலே
யருந்தவ மாற்றிப் பெற்றாய்

வேதியர் தேவன் சொல்லால்
விளிவிலா வாயுப் பெற்ருய்
சாதியின் புன்மை யின்னுந்
தவிர்ந்திலே போலுந் தக்கோய்.

'நீதியும், தருமம் நின்ற
நிலேமையும், புலமைதானும்,
ஆதி அம் கடவுளாலே
அருந்தவம் ஆற்றிப் பெற்ருய்;
வேதியர் தேவன் சொல்லால்,
விளிவு இலா ஆயுப் பெற்ருய்;
சாதியின் புன்மை இன்னும்
தவிர்ந்திலே போலும்,—தக்கோய்?

பொ :—'அரிய தவத்தைச் செய்து ஒழுங்கும், தருமம் உன்னிடத்தில் நிலேபெற்ற தன்மையும், அறிவும் படைப்பில் முதல்வளுகிய பிரமஞலே அடைந்தாய்; வேதியர்களுக்குத் தலேவளுகிய அப் பிரமஞல் அழிவில்லாத ஆயுளேயும் பெற்ருய்; தகுதியுடையவனே, (அவ்வாறு பெற்றும்) சாதியால் வந்த இழி குணத்தினின்றும் நீ நீங்கவில்லே போலும்.

கு :—முதலில் பிரமனேப் படைத்து அவஞல் உலகம் படைக்கப் பட்டது என்பது வேத முறையாதலின் 'ஆதியங்கடவுள்' என்பதற்கு இவ்வாறு பொருள் கூறப்பட்டது. 'வேதியர் தேவன்' என்பது அவன் என்னும் சுட்டளவாய்ப் பிரமனேக் குறித்து நின்றது. வீடணன் பிரமஞல் விளிவிலா ஆயுப் பெற்றது 'விரிஞ்சனவை, எல்லாம் பெறுதிநீ யென்று மிறவாதிருத்தியென வுரைத்தான்' (உத்தர காண். இராவணன் பிறப்புப் படலம் - 30) என வருவதால் அறியப் படும். 'குலத்தளவே யாகும் குணம்' (வாக்குண்டாம் - 7) என்பதைக் கொண்டு 'சாதியின்புன்மை' என்ருன். (135)

7534. ஏற்றிய வில்லோன் யார்க்கு
மிறையவ னிராம னின்ருன்
மாற்றமும் தம்பி நின்ருன்
மற்றையோர் முற்று நின்ருர்

கூற்றமு நின்ற தெம்மைக்
கொல்லிய விதியு நின்ற
தோற்றவெம் பக்க லைய
வெவ்வலி தொலைய வந்தாய்.

'ஏற்றிய வில்லோன், யார்க்கும்
இறையவன் இராமன், நின்றான்;
மாற்ற அருந் தம்பி நின்றான்;
மற்றையோர் முற்றும் நின்றார்;
கூற்றமும் நின்றது, எம்மைக்
கொல்லிய; விதியும் நின்ற:
தோற்ற எம் பக்கல், ஐய!
வெவ்வலி தொலைய வந்தாய்.

பொ :—'எங்களைக் கொல்லும் பொருட்டு யாவர்க்குந் தலைவனாகிய இராமன் நாணேற்றிய வில்லையுடையவனாய் நிற்கின்றான்; (பிறரால்) விலக்கற்கரிய அவன் தம்பியாகிய இலக்குவனும் (அவனுக்குத் துணையாக) நிற்கின்றான்; சேனை வீரர்கள் எல்லோரும் நிற்கின்றார்கள்; இயமனும் (உயிரைக் கொண்டுபோக) நிற்கின்றான்; (எங்களுடைய) ஊழ்வினையும் (அவ்வாறாகக்) காத்திருக்கின்றது; ஐயனே, தோற்றே போவேமாயுள்ள எம்மிடத்து, (நீ பெற்ற) மிக்க வலிமை யெல்லாம் தொலையும்படியாக வந்துவிட்டாயே.

கு :—நிகழ்காலச் சொற்களை இறந்தகாலச் சொற்களால் கூறியது இயல்புபற்றி. எதிரி வலிக்குத் தம் வலி குறைந்தது என உணர்ந்தானாதலின் 'தோற்ற' என்றான். எம் பக்கல் நின் பெரு வலி யெல்லாம் தொலையுமாறு வந்து விட்டாயே எனக் கும்பகருணன் இரக்கமுற்றுக் கூறினான் என்க. (136)

**7535.** ஐயநீ யயோத்தி வேந்தற்
கடைக்கல மாகி யாங்கே
உய்கிலை யென்னின் மற்றிவ்
வரக்கரா யுள்ளோ ரெல்லாம்
எய்கணை மாரி யாலே
யிறந்துபாழ் முழுதும் பட்டால்
கையினா லெண்ணீர் நல்கிக்
கடன்கழிப் பாரைக் காட்டாய்.

'ஐய! நீ அயோத்தி வேந்தற்கு
அடைக்கலம் ஆகி, ஆங்கே
உய்கிலை என்னின், மற்று இவ்
அரக்கராய் உள்ளோர் எல்லாம்
எய்கணை மாரியாலே இறந்து,
பாழ் முழுதும் பட்டால்,
கையினல் எள் நீர் நல்கி,
கடன் கழிப்பாரைக் காட்டாய்.

பொ :—'ஐயனே, நீ (எங்களை விட்டு நீங்கி) அயோத்தி அரசனாகிய இராமனுக்கு அடைக்கலப் பொருளாகிப் பிழைக்காமற் போனால், இந்த எல்லா அரக்கர்களும் (இராமன்) எய்கின்ற அம்பு மழையினாலே இறந்து (இலங்கை) முழுவதும் பாழாகப் போனால், கையினால் எள்ளும் நீரும் சொரிந்து பிதிர்களுக்குச் செய்யும்) கடனைச் செய்வா(ர் வேறு யார் இருக்கின்றார்? அவ)ரைக் காட்டுவாய். (ஒருவரும் இல்லையே).

கு :—திரும்பிப்போய் அவர்களோடு சேர்ந்து கொண்டு எங்கள் எல்லோருக்கும் நீ பிதிர்க்கடன் செய்யவேண்டும் எனச் சொல்ல வேண்டியவன், 'கடன் கழிப்பாரைக் காட்டாய்' என்றான். (137)

**7536.** வருவது மிலங்கை மூதூர்ப்
புலையெலா மாண்ட பின்னைத்
திருவுறை மார்ப னேடும்
புகுந்துபின் னென்றுந் தீராப்
பொருவருஞ் செல்வந் துய்க்கப்
போதுதி விரைவி னென்றான்
கருமமுண் டுரைப்ப தென்றா
னுரையெனக் கழற லுற்றான்.

'வருவதும், இலங்கை மூதூர்ப்
புலை எலாம் மாண்ட பின்னை
திரு உறை மார்பனேடும்;
புகுந்து பின் என்றும் தீராப்
பொருவ அருஞ் செல்வம்
துய்க்கப் போதுதி, விரைவின்' என்றான்.
'கருமம் உண்டு உரைப்பது' என்றான்;
'உரை' என, கழறலுற்றான்,

பொ :—'(நீ) வரக்கூடிய காலம் இலங்கையாகிய மூதூரிலுள்ள இந்த இழிதொழிலையுடைய நாங்களெல்லாம் இறந்த பின்னர் இலக்குமி தங்கும் மார்பையுடைய இராமனோடு (கூடியேயாகும்). (அப்படி) வந்து, பிறகு எப்பொழுதும் அழியாத ஒப்பற்ற அரசச் செல்வத்தை அநுபவிப்பதற்காக (இப்பொழுது) விரைந்து போவாயாக' என்று கூறினன் (கும்பகருணன்). (அதனைக் கேட்டுச்) 'சொல்ல வேண்டிய காரியம் ஒன்று உண்டு' என்றான் (வீடணன்). (கும்பகருணன்) 'கூறு' என்று சொல்ல, (வீடணன்) சொல்லத் தொடங்கினன்.

கு :—'வருவதும்' என்பதிலுள்ள உம்மை அசை. புலை, ஆகு பெயராய்ப் புலைத் தொழிலையுடையோரைக் குறித்து நின்றது. இப்பொழுது வந்தால் இராவணனால் இடையூறு நேரலாம் என்பதை மனத்திற்கொண்டு எல்லோரும் இறந்தபின் வருக என்றான். 'பொருவருஞ் செல்வம்' என்பது இம்மையில் அரசச் செல்வத்தையும் மறுமையில் அடையும் வீட்டின்பத்தையும் குறித்து நின்றது. (138)

## இராமனைச் சரண்புகுமாறு வீடணன் கும்பகருணனுக்கு உரைத்தல்

**7537.** இருளுறு சிந்தை யேற்கு
மின்னருள் சுரந்த வீரன்
அருளுநீ சேரி னொன்றோ
வவயமு மளிக்கு மன்றி
மருளுறு பிறவி நோய்க்கு
மருந்துமா மாறிச் செல்லும்
உருளுறு சகட வாழ்க்கை
யொழித்துவீ டளிக்கு மன்றே.

'இருள் உறு சிந்தையேற்கும் இன் அருள் சுரந்த வீரன் அருளும், நீ சேரின்; ஒன்றோ, அவயவமும் அளிக்கும்; அன்றி, மருள் உறு பிறவி நோய்க்கு மருந்தும் ஆம்; மாறிச் செல்லும் உருளுறு சகட வாழ்க்கை ஒழித்து, வீடு அளிக்கும் அன்றே.

பொ :—'மயக்கம் பொருந்திய மனத்தையுடைய எனக்கும் இனிய கருணையைப் பொழிந்த வீரனாகிய இராமன், நீ (அவனுடன்) சேர்ந்தால் (உனக்கும்) அருள் செய்வான்; அது மட்டுமன்றி உன்னை அடைக்கலமாகவும் ஏற்றுக்கொள்வான்; அல்லாமலும் மயக்கத்தைச்

செய்யும் பிறவியாகிய நோய்க்கு (அவனையடைதல்) மருந்தும் ஆகும். மாறிமாறிப் பிறக்கும்படியான, சக்கரம் பூண்ட வண்டி போன்ற பிறவியை நீக்கி முத்தியையும் கொடுப்பான்.

கு :—'பஞ்செனச் சிவக்கும் மென்கால் தேவியைப் பிரித்தபாவி வஞ்சனுக்கிளைய' (வீடணன் அடைக்கலப் - 126)வன் எனத் தன்னை நினைத்துத் தான் அடைக்கலம் புகுந்தால் ஏற்றுக்கொள்வானோ, ஏற்றுக்கொள்ளமாட்டானோ என்னும் எண்ணத்தைக் கொண்டிருந்தானாதலின், 'இருளுறு சிந்தையேன்' என்று கூறினான். 'இருளுறு சிந்தையேற்கும்' என்பதிலுள்ள உம்மை இழிவு சிறப்பு. 'மாறிச் செல்லும் வாழ்க்கை' எனவும், 'சகட வாழ்க்கை' எனவும் கூட்டுக. மாறிச் செல்லுதல் நால்வகைக் கதிகளில் உழலுதல். சகட வாழ்க்கை, இடையறாது வருதல். வாழ்க்கை – உயிர் உடம்போடு கூடி வாழ்தல்; இது பிறவியைக் குறித்தது. (139)

**7538.** எனக்கவன் றந்த செல்வத்
திலங்கையு மரசு மெல்லாம்
நினக்குநான் றருவென் றந்துன்
னேவலி னெடிது நிற்பென்
உனக்கிதி னுறுதி யில்லை
யுத்தம வுன்பின் வந்தேன்
மனக்குநோய் துடைத்து வந்த
மரபையும் விளக்கு வாழி.

'எனக்கு அவன் தந்த செல்வத்து
இலங்கையும் அரசும் எல்லாம்
நினக்கு நான் தருவென்; தந்து,
உன் ஏவலின் நெடிது நிற்பென்;
உனக்கு இதின் உறுதி இல்லை;
உத்தம! உன்பின் வந்தேன்:
மனக்கு நோய் துடைத்து,
வந்த மரபையும் விளக்கு வாழி!

பொ :—'நற்குணமுடையவனே, எனக்கு இராமன் தந்த செல்வத்தையுடைய இலங்கையும் அதனை ஆளும் அரசுரிமையும் மற்றெல்லாச் சிறப்பும் உனக்கு யான் கொடுப்பேன்; கொடுத்து உன்னுடைய ஏவலின்படி எப்பொழுதும் நடப்பேன்; உனக்கு இதைக் காட்டிலும் வேறு நன்மை பயப்பது இல்லை; உனக்குப் பின் பிறந்த தம்பி

யாகிய என்னுடைய (உன் பொருட்டு நேரும்) மனத் துன்பத்தை நீக்கி, நாம் வந்த குலத்தையும் சிறப்புறச் செய்வாயாக.

கு :—கும்பகருணன் இராமனைச் சேர்ந்தால் அவன் அருளும் அடைக்கலமும் வீட்டின்பமும் பெறுதலேயன்றி இவ்விலங்கைச் செல்வத்தையும் பெறலாமாதலின், 'உனக்கிதின் உறுதி இல்லை' என்றான் வீடணன். அறத்தை மறந்த இராவணனுக்குத் துணையாக நின்று கும்பகருணன் போரில் இறக்கப் போகின்றானே என வீடணன் பெரிதும் வருந்தினனாதலின் அதனையே ஈண்டு 'மனக்கு நோய்' எனக் குறித்தான். மன நோய் என்பது 'கு' என்னும் சாரியை பெற்று 'மனக்கு நோய்' என வந்தது. (140)

**7539.** போதலோ வரிது போனாற்
புகலிட மில்லை வல்லே
சாதலோ சரத நீதி
யறத்தொடுந் தழுவி நின்றாய்
ஆதலா லுளதா மாவி
யநாயமே யுகுத்தென் னைய
வேதநூன் மரபுக் கேற்ற
வொழுக்கமே பிடிக்க வேண்டும்.

'போதலோ அரிது; போனால், புகலிடம் இல்லை; வல்லே,
சாதலோ சரதம்; நீதி அறத்தொடும் தழுவி நின்றாய்
ஆதலால், உளதாம் ஆவி அநாயமே உகுத்து என்? ஐய!
வேதநூல் மரபுக்கு ஏற்ற ஒழுக்கமே பிடிக்க வேண்டும்.

பொ :—'(இராமனிடத்தினின்றும்) தப்பிப் போதலோ முடியாது; அவ்வாறு போனாலோ (வேறு) புகலிடமும் கிடையாது; விரைவாக இறத்தலோ உண்மை; (நீ) நீதியும் தருமமும் பொருந்தி நின்றாயாதலின், உனக்கு உண்டாகிய இந்த உடலின் ஆவியை வீணே போக்குதலினால் என்ன பயன்? ஐயனே, வேதமாகிய நூலினது முறைமைக்குப் பொருந்திய ஒழுக்கத்தையே நாம் கொள்ளல் வேண்டும்.

கு :—'யாண்டுச் சென்றி யாண்டு முளராகார் வெந்துப்பின், வேந்து செறப்பட்டவர்' (திருக்குறள். 895) என்பதைக் கொண்டு, 'போதலோ அரிது' என்றும், 'போனால் புகலிடமில்லை' என்றும்

கூறினன். புகலிடமும் என உம்மை விரிக்க. நீதியொடும் அறத்தொடும் எனத் தனித்தனி கூட்டுக. அநாயம் - வீண். வேதநூல் - உண்மையைத் தெரிவிக்கும் நூல். (141)

**7540.** தீயவை செய்வ ராகிற்
சிறந்தவர் பிறந்த வுற்றூர்
தாயவை தந்தை மாரென்
றுணர்வரோ தருமம் பார்ப்பார்
நீயவை யறிதி யன்றே
நினக்குநா னுரைப்ப தென்னே
தூயவை துணிந்த போது
பழிவந்து தொடர்வ துண்டோ.

'தீயவை செய்வர் ஆகின்,
சிறந்தவர், பிறந்த உற்றூர்,
தாய் அவை, தந்தைமார், என்று
உணர்வரோ, தருமம் பார்ப்பார்?
நீ அவை அறிதி அன்றே?
நினக்கு நான் உரைப்பது என்னே?
தூயவை துணிந்த போது
பழிவந்து தொடர்வது உண்டோ?

பொ :—' அறநெறியில் ஒழுகுகின்றவர்கள், (ஒருவர்) தீத்தொழிலைச் செய்வாராஞல் (அப்படிச் செய்தாரை) இவர் நமக்கு உயிரினும் சிறந்தவரென்றும், உடன் பிறந்தாரென்றும், உறவினரென்றும், தாயென்றும் தந்தை யென்றும் நினைத்துப் பார்ப்பரோ? நீ அந்த நீதிகளை யெல்லாம் அறிவாயன்றோ? (அத்தகைய) உனக்கு யான் சொல்லும்படியான நீதியும் ஒன்றுண்டோ? நல்ல காரியங்களைச் செய்யத் துணிந்தபோது (அதனால்) பழி வந்து தொடர்வது உண்டாகுமோ? (உண்டாகாது என்றபடி).

கு :—பிறந்தார் என்பது 'பிறந்த' எனக் குறைந்து நின்றது. தாய் அவை – இரு பெயரொட்டு. அவ்வை என்பது 'அவை' எனக் குறைந்து நின்றது. தந்தைமார் என்பதில் 'மார்' அசை. தமையனை விட்டு நீங்கி இராமனை அடைதல் அறநெறியாதலின் அதனால் பழி வாரா தென்பான், 'தூயவை துணிந்தபோது பழி வந்து தொடர்வதுண்டோ?' என்றான். (142)

**7541.** மக்களைக் குரவர் தம்மை
மாதரை மற்று ளோரை
ஒக்குமின் னுயிரன் னாரை
யுதவிசெய் தாரோ டொன்றத்
துக்கமித் தொடர்ச்சி யென்று
துறப்பராற் றுணிவு பூண்டோர்
மிக்கது நலனே யாகி
வீடுபே றளிக்கு மன்றே.

'மக்களை, குரவர் தம்மை
மாதரை, மற்றுளோரை
ஒக்கும் இன் உயிர் அன்னாரை,
உதவி செய்தாரோடு ஒன்ற,
"துக்கம், இத் தொடர்ச்சி" என்று,
துறப்பரால் துணிவு பூண்டோர்;
மிக்கது நலனே ஆகி,
வீடுபேறு அளிக்கும் அன்றே!

பொ:—'மக்களையும் இரு முது குரவர்களான தாய் தந்தையர்களையும் மனைவியரையும் மற்றுமுள்ள உறவினர்களையும் இனிய உயிரை யொத்த நண்பர்களையும் உதவி செய்தவர்களையும் "இவர்களோடு உண்டாகிய இத்தொடர்பு துக்கத்தை விளைவிக்கக் கூடியது" என்று கருதி(த் துறத்தலில்) துணிவுகொண்டவர்கள் (இவர்கள் யாவரையும்) ஒரு சேரத் துறப்பர்; மேம்பட்ட அந்தத் துறவானது நன்மையே உடையதாகி வீடுபேற்றைக் கொடுக்கும்.

கு:—துறவிகள் தாம் மேற்கொண்ட துறவறங் காரணமாகக் குற்றமற்ற தாய் தந்தையர் முதலியோரைத் துறப்பார்களானால், அறங் காரணமாக நீ குற்றமுள்ள உன் தமையனைத் துறத்தல் மிக நியாயமானது என்று வீடணன் கும்பகருணனுக்குக் கூறினான். ஒன்ற - ஒருமிக்க; ஒரு சேர. ஒன்றத் துறப்பர் என இயைக்க. மற்றெல்லா அறங்களிலும் உதவி செய்தலாகிய அறம் சிறந்ததாகலின், 'உதவி செய்தாரொடு' என ஒடுக்கொடுத்துப் பிரித்தார்.(143)

**7542.** தீவினை யொருவன் செய்ய
வவனொடுந் தீங்கி லாதோர்
வீவினை யுறுத லைய
மேன்மையோ கீழ்மை தானே

ஆய்வினை யுடையை யன்றே
யறத்தினை நோக்கி யீன்ற
தாய்வினை செய்ய வன்றோ
கொன்றனன் தவத்தின் மிக்கான்.

'தீவினை ஒருவன் செய்ய,
அவனொடும் தீங்கு இலாதோர்
வீவினை உறுதல், ஐய,
மேன்மையோ கீழ்மை தானோ?
ஆய்வினை உடையை அன்றே?
அறத்தினை நோக்கி ஈன்ற
தாய் வினைசெய்ய அன்றோ,
கொன்றனன், தவத்தின் மிக்கான்?

பொ :—'ஐயனே, ஒருவன் தீவினை செய்ய அவனொடுங் கூடித் தீங்கு செய்யாதவர்கள் அழிதல் சிறந்ததா? தாழ்ந்ததா? (என்பதை) நீ ஆராய்ந்து கொள்ளும் (தகுதி) உடையவனல்லவா? தவத்தில் சிறந்தவனான பரசுராமன், தன்னைப் பெற்ற தாய் தீவினை செய்ததனா லன்றோ அறநெறியை நோக்கி(த் தாய் என்றும் கருதாமல்) கொன்றான்.

கு :—வீதல் - அழிதல். வீதல் என்பது ஈண்டுப் பகுதியளவாக நின்றது. வீவினை உறுதல் - அழியும் தொழிலைப் பொருந்துதல்; அதாவது அழிதல் என்றபடி. தீவினை செய்தவர்களோடு கூடுதல் தகாதென்பான், 'மேன்மையோ கீழ்மைதானோ (என்பதை) 'ஆய் வினை உடையை' என்றான். ஆய்வு என்பது 'இன்'சாரியையும் 'ஐ' உருபும் ஏற்று 'ஆய்வினை' என நின்றது. பரசுராமன் தாயாகிய இரேணுகை தண்ணீர் கொண்டுவர நீர்த் துறைக்குச் சென்றபோது, அங்கே வந்த கார்த்தவீரியன் பேரழகிலீடுபட்டு மனம் நெகிழ்ந்தாள். அதனை ஞான திருட்டியினாலறிந்த அவள் கணவனாகிய சமதக்கினி அவளைக் கொல்லுமாறு அவள் மகனாகிய பரசுராமனை ஏவ, அவன் அவளைக் கொன்றனன் என்பது இதிகாச கதை. (144)

**7543.** கண்ணுத றீமை செய்யக்
கமலத்து முளைத்த தாதை
அண்ணறன் றலையி னொன்றை
யறுக்கவென் றமைந்தா னன்றே

புண்ணுறு புலவு வேலோய்
பழியொடும் பொருந்திப் பின்னை
எண்ணுறு நரகின் வீழ்வ
தறிஞரு மியற்று வாரோ.

'கண்ணுதல், தீமை செய்ய,
கமலத்து முளைத்த தாதை
அண்ணல்தன் தலையின் ஒன்றை
அறுக்க என்று அமைந்தான் அன்றே?
புண்உறு புலவு வேலோய்!
பழியொடும் பொருந்தி, பின்னை,
எண்ணுறு நரகின் வீழ்வது
அறிஞரும் இயற்றுவாரோ?

பொ :—'(பகைவர் மார்பிலே ஊடுருவிச் சென்று உண்டாக்கிய) புண்ணிலே உள்ள புலால் நாறும்படியான வேலையுடையவனே, நெற்றிக் கண்ணையுடைய சிவபெருமான், (திருமாலின்) உந்தித் தாமரையில் தோன்றிய (உலகுயிர்களைப் படைத்த) தந்தையாகிய பெருமையிற் சிறந்தவனாகிய பிரமன் தீமை செய்தலினால், அவனு டைய தலைகளுள் ஒன்றை அறுக்க வேண்டுமென்று மனங் கொண் டான் அல்லவா? (அழியாத) பழிச் சொல்லையும் ஏற்றுப் பின்னர் எண்ணி எண்ணிக் கவலைப்படத்தக்கதான நரகத்தில் வீழ்வதற்குக் காரணமான செயலை அறிஞர்களும் செய்வார்களோ? (செய்யார் என்றபடி).

கு :—பிரமன் உலகத்தை யெல்லாம் படைப்பவனாதலின் அவனைத் 'தாதை' என்றான். பிரமன், தனக்குரிய நான்கு தலைக ளோடு ஐந்தாவதாக ஒரு தலையினைப் படைத்துக் கொண்டு சிவனோடு ஒப்பத்தன்னையும் எண்ணிச் செருக்குற்றிருந்தமையின், அவனுடைய தலைகளுள் ஒன்றைச் சிவபெருமான் கிள்ளி எறிந்து ஆணவத்தை அடக்கினர் என்பது புராணத்துட் கூறப்படும் செய்தி யாகும். 'பழியொடும்' என்பதிலுள்ள உம்மை பாவத்தைத் தழுவியது; அதனை நரகின் வீழ்வது என்பதனால் விளக்கினான். (145)

**7544.** உடலிடைத் தோன்றிற் றொன்றை
யறுத்தத னுதிர மூற்றிச்
சுடலுறச் சுட்டு வேறோர்
மருந்தினாற் றுயரந் தீர்வர்

கடலிடைக் கோட்டந் தேய்த்துக்
கழிவது கரும மன்றால்
மடலுடை யலங்கன் மார்ப
மதியுடை யவர்க்கு மன்னே.

'உடலிடைத் தோன்றிற்று ஒன்றை
அறுத்து, அதன் உதிரம் ஊற்றி,
சுடல் உறச் சுட்டு, வேறுஓர்
மருந்தினால் துயரம் தீர்வர்;
கடலிடைக் கோட்டம் தேய்த்துக்
கழிவது கருமம் அன்றால்,
மடலுடை அலங்கல் மார்ப!
மதி உடையவர்க்கு மன்னே.

பொ :—இதழ்களையுடைய மலர் மாலையணிந்த மார்பையுடையவனே, உடம்பிலே தோன்றிய இரணக் கட்டியை (அதன் நச்சுநீர் பரவி உடலைக் கெடுக்காதபடி) அறுத்து, (அதிலுள்ள கெட்ட) இரத்தத்தை ஒழுகச் செய்து, காரத்தைப் பொருந்த வைத்துச் சுட்டு, (ஆறுதற்குரிய) வேறோர் மருந்தினால் (அந்த இரணக் கட்டியினால் உண்டாகிய) துன்பம் நீங்குவர் (உலகத்தார்); அறிவுடையோருக்கு (நறுமணமுள்ள) கோட்டத்தைக் கடலிலே உரைத்துத் தேய்த்துக் கழியும்படி விடுவது, செய்யத்தக்க தொழிலாகாது.

கு :—அறுத்தல், உதிரம் ஊற்றுதல், காரமருந்து வைத்தல் என்பவைகளால் 'ஒன்று' என்பது இரணக் கட்டியை உணர்த்திற்று. வீடணன், முதல் இரண்டடிகளில் கூறிய உவமானத்தால் தமது குலமாகிய உடம்பில் இரணக் கட்டிபோல உள்ள இராவணன் அக் கட்டிபோல ஒழிக்கப்பட்டாலன்றித் தம் குலமாகிய உடம்பு அழிந்து விடும் என்பதைக் குறிப்பித்தான். நறுமணமுடைய கோட்டம் புலால் நாற்றமுடைய கடலில் கரைக்கப்பட்டால் வீணாகப் போவதன்றிப் புலால் நாற்றத்தை ஒழிக்க அது பயன்படாமைபோல, புண்ணியமுடைய நீ இராவணனோடு கலத்தலால் நீ அழிதலன்றி அவனை நல்லவனாகச் செய்யாய் என்பது மூன்றாம் அடியில் குறிக்கப்பட்ட பொருளாகும். (146)

**7545.** காக்கலா நும்முன் றன்னை
யெனினது கண்ட தில்லை
ஆக்கலா மறத்தை வேறே
யென்னினு மாவ தில்லை

தீக்கலாங் கொண்ட தேவர்
சிரிக்கலாஞ் செருவி லாவி
போக்கலாம் புகலாம் பின்னை
நரகன்றிப் பொருந்திற் றுண்டோ.

'காக்கலாம் நும்முன் தன்னை
எனின், அது கண்டது இல்லை;
ஆக்கலாம் அறத்தை வேறே
என்னினும், ஆவது இல்லை;
தீக்கலாம் கொண்ட தேவர்
சிரிக்கலாம்; செருவில் ஆவி
போக்கலாம்; புகலாம், பின்னை
நரகு; அன்றிப் பொருந்திற்று உண்டோ?

பொ :—' உன்னுடைய தமையனாகிய இராவணனை(ப் போர்க் களத்தில் இறந்து படாமல்) காக்கலாமென்றால் அது முடியாத காரியம்; (அவனுடனிருந்தே) தருமத்தை வேறு விதத்தினால் செய்வோ மென்றாலும் (அதுவும்) ஆகக் கூடியதாக இல்லை; கொடிய மாறுபாட்டினைக் கொண்ட தேவர்கள் சிரித்தலைச் செய்யலாம்; போரில் உயிரை விடலாம்; பின்னர் (செய்த பாவச் செயல்களால்) நரகத்திலும் புகலாம்; இவையன்றி நிகழக்கூடிய செயல் (வேறு) உண்டோ? (இல்லை என்றபடி).

கு :—தான் இராவணனை விட்டு நீங்கி வந்தமையின் அவனை, 'நும் முன்' என்று குறித்தான். பகைவலியை நோக்கிக் காக்க முடியாதென்றும், உறுதிமொழியைக் கேளாமை நோக்கி 'ஆவதில்லை' என்றும் கூறினான். இராவணனைக் காக்கவும் இயலவில்லை; அவனுடனிருந்து கொண்டே அறத்தைச் செய்யவும் இயலவில்லை; ஆதலின் அவனை விட்டு நீங்கும் நிலை ஏற்பட்டது என வீடணன் குறித்தான். தேவர்கள், இராவணன் முதலியோரால் துன்புற்றவர்களாதலின் அவர்களுக்குத் துன்பம் வந்தபோது சிரிப்பார்கள் என்பான், 'தேவர் சிரிக்கலாம்' என்றான். தீ கலாம் - கொடிய மாறுபாடு. (147)

**7546.** மறங்கிளர் செருவில் வென்று
வாழ்ந்திலை மண்ணின் மேலா
இறங்கினை யின்று காறு
மிளமையும் வறிதே யேக

உறங்கினை யென்ப தல்லா
லுற்றதொன் றுளதோ வென்னீ
அறங்கெட வுயிரை நீத்து
மேற்கொள்வா னமைந்த தையா.

'மறம் கிளர் செருவில் வென்று
வாழ்ந்திலை; மண்ணின் மேலா
இறங்கினை; இன்று காறும்
இளமையும் வறிதே ஏக,
உறங்கினை என்பது அல்லால்,
உற்றதுஒன்று உளதோ? என், நீ
அறம் கெட உயிரை நீத்து
மேற்கொள்வான் அமைந்தது? ஐயா.

பொ :—'ஐயனே, வீரம் விளங்குகின்ற போரில் (பகைவரை) வென்றும் நீ வாழவில்லை; பூமியின் கண்ணே தாழ்வையடைந்தாய்; (நீ வரம்பெற்றது முதல்) இன்று வரையிலும் உன்னுடைய இளமைத் தன்மையும் பயனின்றிக் கழியும்படியாகத் தூங்கினுய் என்பதேயன்றி (உனக்கு ஒரு வாழ்க்கை இன்பம்) பொருந்தியது உளதோ? (இல்லை என்றபடி); அறநெறி கெடும்படி உயிரை விட்டு அதன் மேலே நீ அடையும்படி பொருந்தியது என்ன உள்ளது?

கு :—அரச இன்பத்தை அடைந்தவன் இராவணனுதலின் அவனுக்குத் துணையாகச் சென்று பகை வென்றதனுல் உனக்குப் பயனில்லை என்பான், 'வென்றும் வாழ்ந்திலை' என்ருன். வென்றும் என உம்மை விரிக்க. இளமைப் பருவத்திற்குரிய காமம் முதலாகிய இன்பத்தினையும் நீ நுகரவில்லை என்பான், 'உறங்கினை' என்றும் கூறினுன். இவ்வாறு கூறியதனுல் இம்மைக்குரிய இன்பம் பெறவில்லை என்பது பெறப்பட்டது. அவனேடு சேர்ந்து வினை செய்தலால் பாவம் உண்டாதலின் மறுமை இன்பமும் உனக்கு உண்டாகாதென்பான் 'உயிரை நீத்து மேற்கொள்வான் அமைந்தது என்' என்ருன். இதனுல் கும்பகருணனுக்கு இருமை இன்பமும் இல்லை என்று கூறினுன், வீடணன். (148)

7547. திருமறு மார்ப னல்க
வனந்தருந் தீர்ந்து செல்வப்
பெருமையு மெய்தி வாழ்தி
யீறிலா நாளும் பெற்ருய்

ஒருமையே யரசு செய்வா
யுரிமையே யுளதே யொன்றும்
அருமையே யிவற்றி னில்லைக்
காலமு மடுத்த தையா.

'திரு மறு மார்பன் நல்க,
அனந்தரும் தீர்ந்து, செல்வப்
பெருமையும் எய்தி, வாழ்தி;
ஈறு இலா நாளும் பெற்ருய்;
ஒருமையே அரசு செய்வாய்;
உரிமையே உளதே; ஒன்றும்
அருமையே இவற்றின் இல்லை;
காலமும் அடுத்தது, ஐயா!

பொ:—ஐயனே, இலக்குமியையும் (ஸ்ரீவத்சம் என்னும்) மச்சத்தையும் மார்பிலுடையவனுன இராமன் அருள் செய்ய, (நீண்ட) உறக்கம் நீங்கப் பெற்றுப் பெருஞ் செல்வமும் அடைந்து, அழிவில்லாத ஆயுளும் பெற்ருயாகி வாழ்வாய்; நீ (பொது நீக்கித்) தனியாகவே அரசு செலுத்துவாய்; (இராவணனுக்கு அடுத்த தம்பியாதலால், அவ்வாறு அரசாளுதற்கு) உரிமையே இருக்கின்றதே; (மேற்கூறிய) இவற்றில் ஒன்றும் நீ அடையக் கூடாததில்லை; இவற்றை அடைவதற்குரிய காலமும் உனக்கு இப்பொழுது வந்து சேர்ந்திருக்கிறது.

கு:—அனந்தர் என்பது அனந்தல் என்பதன் போலி. எய்தி பெற்ருயாகி வாழ்தி என முடிக்க. வாழ்தி - முன்னிலை ஒருமை எதிர் கால வினைமுற்று. 'தெண்கடல்வளாகம் பொதுமை இன்றி, வெண்குடை நிழற்றிய ஒருமையோர்க்கும்' (புறநா. 189) என்ருற்போல ஒருமையே என்பது இணையில்லாமையை உணர்த்திற்று. 'எய்தற் கரிய தியைந்தக்கா லந்நிலையே, செய்தற் கரிய செயல்' (489) என்னும் குறள் 'காலமும் அடுத்தது ஐயா' என்பதனேடு நினைவு கூர்தற்குரியது. (149)

**7548.** தேவர்க்குந் தேவ னல்க
விலங்கையிற் செல்வம் பெற்ருல்
ஏவர்க்குஞ் சிறியை யல்லை
யாருனை நலியு மீட்டார்

மூவர்க்குந் தலைவ ரான
மூர்த்தியா ரறத்தை முற்றும்
காவற்குப் புகுந்து நின்ருர்
காகுத்த வேடங் காட்டி.

'தேவர்க்கும் தேவன் நல்க;
இலங்கையின் செல்வம் பெற்ருல்,
ஏவர்க்கும் சிறியை அல்லை!
யார்,உனை நலியும் ஈட்டார்?—
மூவர்க்கும் தலைவர் ஆன
மூர்த்தியார், அறத்தை முற்றும்
காவற்குப் புரிந்து நின்ருர்,
காகுத்த வேடம் காட்டி.

பொ :—'(முத்தொழில்களைச் செய்கின்ற) மூன்று கடவுளர்க்கும் முதல்வராகிய இறைவன், தருமத்தை முழுதும் நிலைநிறுத்துவதற் காகக் காகுத்த மரபிலே இராமனுகத் தன்னுடைய உருவத்தைக் காட்டி வந்திருக்கின்ருர்; (அப்படிப்பட்ட) தேவர்களுக்கும் தேவனுகிய அந்த இராமன் (இப்பொழுது உனக்கு) அருள் செய்ய, இலங்கைச் செல்வம் பெற்ருயானுல் நீ எவர்க்கும் தாழ்ந்தவனுகமாட்டாய்; (உயர்வை யடைவாய் என்றபடி.) அதன் பிறகு உன்னை வருத்தும் படியான வலிமையுடையார் யார்? (இல்லை என்றபடி).

கு :—இலங்கையின் செல்வம் என்பதில் 'இன்'சாரியை; இலங்கைச் செல்வம் என்றபடி. சுட்டுச் சொல்லால் உணர்த்தவேண்டிய விடத்துத் 'தேவர்க்கும் தேவன்' எனப் பெயரையே கூறினுர்; செய்யுளாதலின். எவர்க்கும் என வரற்பாலது 'ஏவர்க்கும்' என நீண்டு வந்தது செய்யுள் விகாரம். நலிதல் - துன்புறுத்தல். ஈடு - வலிமை. 'புகுந்து நின்ருர்' என்பது ஒரு சொல். இந்திரனுக்கு அசுரர்களால் ஏற்பட்ட இடரை நீக்கிய காகுத்தனைக் குறிப்பிட்டது, அரக்கர் களால் உலகிற்கு ஏற்பட்டிருக்கின்ற இடரை இராமன் நீக்கித் தருவானென்பதைக் குறிப்பித்தற் பொருட்டு. அறத்தைக் காத்தலாவது தீமையை விலக்கி நன்மை விளையச் செய்தல். (150)

**7549.** உன்மக்க ளாகி யுள்ளா
ருன்னெடு மொருங்கு தோன்றும்
என்மக்க ளாகி யுள்ளா
ரிக்குடிக் கிறுதி சூழ்ந்தான்

தன்மக்க ளாகி யுள்ளார்
தலையொடுந் திரிவ ரன்றே
புன்மக்கட் டருமம் பூணப்
புலமக்கட் டருமம் பூண்டால்.

'உன் மக்கள் ஆகி உள்ளார்,
உன்னெடும் ஒருங்கு தோன்றும்
என் மக்கள் ஆகி உள்ளார்,
இக்குடிக்கு இறுதி சூழ்ந்தான்—
தன் மக்கள் ஆகி உள்ளார்,
தலையொடும் திரிவர் அன்றே—
புன்மக்கள் தருமம் பூணப்
புலமக்கள் தருமம் பூண்டால்.

பொ :—' கீழ்மக்களுடைய செயலை மேற்கொள்ளாத அறிவுடையவர்களுடைய செயலை (நீ) மேற்கொண்டால், உன்னுடைய மக்களும் உன்னேடு கூடப்பிறந்த என்னுடைய மக்களும் இந்த அரக்கர் குடிக்கே முடிவைத் தேடியவனான இராவணனுடைய மக்களும் தலைநிமிர்ந்து வாழ்வார்.

கு :—இராமனேடு கும்பகருணனைச் சேர்த்து வைத்தல் சிறந்தது என்னும் முடிவை வீடணன் கொண்டவனாதலின் அதனால் உண்டாகும் பயனை இச்செய்யுளால் அறிவுறுத்தினன். 'சூழ்ந்தான் தன்' என்பதில் 'தன்' என்பது சாரியை. 'சூழ்ந்தான் தன் மக்களாகி யுள்ளார்' என்றமையின் சூழ்ந்தானாகிய இராவணனை விட்டானாயிற்று; அவன், தன் உரை கேளாமையின். இராமனை அடைவாய் என்று கூறவேண்டியவன், உலகின்மேல் வைத்து நல்லொழுக்கத்தையுடையவர் செயலை மேற்கொண்டால் நன்மையடையலாம் எனக் கூறினன். தருமம் என்றது ஈண்டுப் பண்பை உணர்த்தியது. (151)

7550. முனிவருங் கருணை வைப்பர்
மூன்றுல கத்துந் தோன்றி
இனிவரும் பகையு மில்லை
யீறுண்டென் றிரங்கல் வேண்டா
துனிவருஞ் செறுந ரான
தேவரே துணைவ ராவர்
கனிவருங் காலத் தைய
பூக்கொய்யக் கருத லாமோ.

'முனிவரும் கருணை வைப்பர்;
மூன்று உலகத்தும் தோன்றி
இனிவரும் பகையும் இல்லை;
"ஈறுஉண்டு" என்று இரங்கல்வேண்டா;
துனிவரும் செறுநர் ஆன
தேவரே துணைவர் ஆவர்;
கனி வரும் காலத்து,ஐய!
பூக் கொய்யக் கருதலாமோ?

பொ:—'ஐயனே, (நீ இராமனைச் சேர்ந்திடின், வெறுப்புடையராயிருக்கின்ற) முனிவரும் (உன்மேல்) இரக்கம் கொள்வர்; மூன்று உலகத்திலும் தோன்றி இனி வருகின்ற பகையுமில்லை; (இனி உனக்கு) அழிவு உண்டாகுமென்று வருந்தவேண்டியதில்லை; வெறுக்கும் பகைவராயிருந்த தேவர்களும் (விரும்பும்) நண்பர்களாவார்கள்; (ஆதலின்) வருங்காலத்திலே கனியாவதொன்றைப் பூவாம் நிலையிலேயே பறிப்பதற்கு எண்ணங்கொள்ளலாமோ?

கு:—'மூன்றுலகத்தும்' என்றது ஓரிடத்தும் என்றபடி. ஈறு - அழிவு; அழிவாவது மக்கள், செல்வம் முதலியன அழிதலைக் குறித்தது. கனிக்குக் காரணம் பூவாதல்போல, மேற் செய்யுளில் கூறியவாறு மக்களெல்லாம் வாழ்வதற்கு நீ இராமனையடைந்து உயிர் வாழ்தல் காரணமாதலின், இராமனோடு போரிட்டு நீ அழியாதிருத்தல் வேண்டுமென்பான் கனிக்குக் காரணமாகிய பூவோடு உவமித்துப் பூவை அழிக்கக் கூடாதென்றான். பூவானது பிஞ்சாய், காயாய் முற்றிக் கனியாதலின் அதனை வருங்காலத்துக் கனி என்றான். 'கனி வருங்காலத்து' என்பதனை வரும் காலத்துக் கனி என மாற்றுக. ஈற்றடியில் கூறிய உவமானப் பொருள் உவமேயத்தை விளக்கியது பிறிது மொழிதலணி. (152)

**7551.** வேதநா யகனே உன்னைக்
கருணையால் வேண்டி விட்டான்
காதலா லென்மேல் வைத்த
கருணையாற் கரும மீதே
ஆதலா லவனைக் காண
வறத்தொடுந் திறம்பா தைய
போதுவாய் நீயே யென்னப்
பொன்னடி யிரண்டும் பூண்டான்.

'வேத நாயகனே உன்னைக்
கருணையால், வேண்டி, விட்டான்;
காதலால், என்மேல் வைத்த
கருணையால், கருமம் ஈதே;
ஆதலால் அவனைக் காண,
அறத்தொடும் திறம்பாது, ஐய!
போதுவாய் நீயே' என்னப்
பொன்அடி இரண்டும் பூண்டான்.

பொ :—'வேதத்தில் தலைவனாகக் கூறப்படுகின்ற இராமனே (தன் மாட்டுள்ள) இரக்கத்தினால், என்மேல் வைத்த ஆசை காரணமாக (உன்மேல் வைத்த) இரக்கத்தினாலே, உன்னை (அழைத்துவர) வேண்டி (என்னை) இங்கே அனுப்பினான்; இதுதான் (யான் வந்த) காரியமாதலால், ஐயனே, நீ அறத்தொடு மாறுபடாமல் அவனைக் காண (என்னுடன்) வருவாய்' என்று சொல்லி அவனுடைய அழகிய பாதங்களில் வணங்கினான்.

கு :—இறைவன் கருணையே வடிவமாக உடையவனாதலின், பகைவனோடு சேர்ந்த என் மீது காதல் வைத்தானென அவனது பொதுக் கருணையைக் காரணமாகவும், என் மீது வைத்த காதல் காரணமாக உன்மீது சிறப்புக் கருணை வைத்தான் என அக்காதலைக் காரணமாக்கியும் காரண காரியத் தொடர்ச்சியாய்க் கூறினான். 'கேசவன்தமர் கீழ்மேலெமர் ஏழெழு பிறப்பும், மாசதிரிதுபெற்று நம்முடை வாழ்வு வாய்க்கின்றவா' (திருவாய் மொழி 2-7: 1) என்ற நம்மாழ்வார் பாடல் ஈண்டு ஒப்பு நோக்கத் தக்கது. அறத்தொடும் திறம்பாமையாவது அறவடிவமாகிய இராமனுடைய சொல்லை மறுக்காமை. (153)

### வீடணன் உரையைக் கேட்ட கும்பகருணன் கூறுதல்

**7552.** தும்பியந் தொடையன் மாலைச்
சுடர்முடி படியிற் றோயப்
பம்புபொற் கழல்கள் கையால்
பற்றினன் புலம்பும் பொற்றோட்
டம்பியை யெடுத்து மார்பிற்
றழுவித்தன் தறுக ணூடு
வெம்புனீர் சொரிய நின்று
னினையன விளம்ப லுற்றான்.

தும்பி அம் தொடையல் மாலைச்
சுடர்முடி படியில் தோய,
பம்பு பொற் கழல்கள் கையால்
பற்றினன் புலம்பும் பொன்தோள்
தம்பியை எடுத்து, மார்பில்
தழுவி, தன் தறுகணூடு
வெம்புணீர் சொரிய நின்ருன்,
இனையன விளம்ப லுற்ருன்;

பொ :—அஞ்சாமையுடைய கண்களிலிருந்து கொடிய இரத்தநீர் ஒழுகும்படியாக(ச் சிந்தனையுடன்) நின்ற கும்பகருணன், வண்டுகள் மொய்க்கின்ற அழகிய தொடுத்தலையுடைய மாலையணிந்த ஒளியை யுடைய முடி பூமியிலே படும்படியாகப் பரந்த அழகிய கழல்கள் அணிந்த கால்களை(த் தன்னுடைய) கைகளால் பிடித்துக்கொண்டு அழுகின்ற அழகிய தோளையுடைய தம்பியாகிய வீடணனைத் தூக்கித் தன்னுடைய மார்பிலே தழுவிக்கொண்டு கீழ்வருவனவற்றைச் சொல்லத் தொடங்கினன்.

கு :—' நின்ருன், எடுத்து, தழுவி விளம்பலுற்ருன் ' என முடிக்க. ' தும்பியந் தொடையல் மாலைச் சுடர் முடி ' என்பது இயற்கையடை. தறுகண் என்பது அதனை வெளிப்படுத்தும் கண்களை உணர்த் திற்று. ' விழித்த கண் வேல்கொண்டெறிய அழித்திமைப்பின், ஓட்டன்ரே வன்க ணவர்க்கு ' (775) என்ற குறளால் கண்களி லிருந்து தறுகண்மை தோன்றுதல் காண்க. (154)

**7553.** நீர்க்கோல வாழ்வை நச்சி
நெடிதுநாள் வளர்த்துப் பின்னைப்
போர்க்கோலஞ் செய்து விட்டாற்
குயிர்கொடா தங்குப் போகேன்
தார்க்கோல மேனி மைந்த
வென்றுயர் தவிர்த்தி யாகிற்
கார்க்கோல மேனி யானைக்
கூடுதி கடிதின் ஏகி.

' நீர்க்கோல வாழ்வை நச்சி,
நெடிதுநாள் வளர்த்துப் பின்னைப்
போர்க்கோலம் செய்து விட்டாற்கு
உயிர்கொடாது, அங்குப் போகேன்;

தார்க்கோல மேனி மைந்த!
என்துயர் தவிர்த்தி ஆகின்,
கார்க்கோல மேனியானைக்
கூடுதி கூடிதின் ஏகி.

பொ :—'மாலையணிந்த அழகிய உடம்பையுடைய மைந்தனே, நீரில் எழுதப்பட்ட எழுத்துப் போன்று (அழியும்படியான) செல்வ வாழ்க்கையை விரும்பி, இதுவரை என்னை வளர்த்துப் பிறகு போர்க் குரிய ஒப்பனை செய்து (போர் புரியும்படி) அனுப்பிய என் தமையனுக் காக (என்னுடைய) உயிரை விடாமல் இராமனிடத்திற்கு வரமாட் டேன்; என்னுடைய துன்பத்தை நீ நீக்குவதாயிருந்தால் மேகம் போன்ற அழகிய திருமேனியுடைய இராமனை விரைவாகச் சென்று கூடுவாய் என்றான்.

கு :—நச்சிப் போகேன் என்க. இராவணன், யான் போர் புரிவேன் என்ற நம்பிக்கையோடிருக்கும்போது யான் இராமனுடன் சேர்தல் நன்றியின்மையும் நம்பிக்கைத் துரோகமுமாதலால் அவ் வாறு செய்யேனென்பான், 'போர்க் கோலம் செய்து விட்டாற்கு உயிர்கொடாது அங்குப் போகேன்' என்றான். தன் தம்பியை 'மைந்த' என்றது அன்பு பற்றிய மரபு வழுவமைதி. நீ இராமனைப் போயடைந்தால் என் துயர் தீருமென்பான், 'என் துயர் தவிர்த்தி யாகின்' என்றான். வீடணன் பகைவனாகிய இராமனோடு கூடி விட்டபடியால் இங்குள்ளாரால் அவனுக்குக் கேடு விளையும் என்ற எண்ணத்தைக் கொண்டு 'கடிதின் ஏகிக் கூடுதி' என்றான். (155)

**7554.** மலரின்மே லிருந்த வள்ளல்
வழுவிலா வரத்தி னானீ
உலைவிலாத் தருமம் பூண்டா
யுலகுள தனையு முள்ளாய்
தலைவனீ யுலகுக் கெல்லா
முனக்கது தக்க தேயால்
புலையுறு மரண மெய்த
லெனக்கிது புகழ தேயால்.

'மலரின்மேல் இருந்த வள்ளல்
வழு இலா வரத்தினால், நீ
உலைவு இலாத் தருமம் பூண்டாய்;
உலகு உளதனையும் உள்ளாய்;

தலைவன் நீ, உலகுக்கு எல்லாம்;
உனக்கு அது தக்கதேயால்;
புலையுறு மரணம் எய்தல்
எனக்கு இது புகழதேயால்.

பொ :—'தாமரை மலரின் மேலிருந்த வள்ளலாகிய பிரமன் தந்த குற்றமில்லாத வரத்தினால் நீ கெடாத தரும வழியை மேற் கொண்டாய்; (அவ்வரத்தால்) நீ உலகு உள்ள அளவும் இறவாமல் இருப்பாய்; (இங்ஙனம் சிறந்த பேறுகளைப் பெற்ற) நீயே உலகத்தி லுள்ளோரெல்லோருக்கும் தலைவனாக விளங்குவாய்; (அப்படிப்பட்ட) உனக்கு (இராமனையடைந்துவாழ்தலாகிய) அச்செயல் தகுதியுடை யதேயாகும்; எனக்கு இழிவு பொருந்திய மரணத்தையடைதலாகிய இச்செயல் புகழுடையதேயாகும்.

கு :— நீ சிரஞ்சீவியாதலால் உயிருக்கு அஞ்சி இராமனோடு சேர்ந்து கொண்டாய் என்று யாரும் உன்னைப் பழி கூறமாட்டார்கள் என்பான், 'உலகுளதனையும் உள்ளாய்' என்றும், 'உனக்கது தக்கதேயால்' என்றும் கூறினான். தீயவர்களோடு சேர்ந்து அழிதல் தாழ்ந்தது என்பதைப் 'புலையுறு மரணம்' என்பதால் விளக்கினான். வீடணன் வரம் பெற்றபோதே புகழுடம்பை நோக்கி வரம் பெற்ற வனாதலாலும், கும்பகருணன் அக்கருத்துமாறிப் பூத உடம்பை நோக்கி வரம் பெற்றவனாதலாலும், தனக்குப் புகழுடம்பு வேண்டு மெனக் கருதி இராவணனுக்காக அவன் உயிர்விடத் துணிந்தானா தலின் 'எனக்கிது புகழதேயால்' என்றான். (156)

**7555.** கருத்திலா விறைவன் றீமை
கருதினா லதனைக் காத்துத்
திருத்தலா மாகி லன்றே
திருத்தலாந் தீரா தாயின்
பொருத்துறு பொருளுண் டாமோ
பொருதொழிற் குரிய ராகி
ஒருத்தரின் முன்னஞ் சாத
லுண்டவர்க் குரிய தம்மா.

'கருத்து இலா இறைவன் தீமை
கருதினால், அதனைக் காத்துத்
திருத்தலாம் ஆகில் அன்றோ
திருத்தலாம்? தீராது ஆயின்,

பொருத்து உறு பொருள் உண்டாமோ?
பொருதொழிற்கு உரியர் ஆகி
ஒருத்தரின் முன்னம் சாதல்
உண்டவர்க்கு உரியது அம்மா.

பொ :—அறிவில்லாத அரசன் தீய செயலைச் செய்யக் கருதினுனல், (அவனைச் சார்ந்தவர்கள்) அச்செயலைச் செய்யாமல் தடுத்து அவனைத் திருத்தக் கூடுமானலல்லவா திருத்தலாம்? திருத்த முடியாதாயின் (அவனை நன்னெறியில்) பொருந்தச் செய்தற்கேற்ற உபாயம் வேறென்றுளதோ? (இல்லை என்றபடி) (அவனல்) போர் செய்யுந் தொழிலுக்குத் தாம் உரியவராகி(த் தம்மை வளர்த்த) ஒப்பற்ற அவ்வரசன் இறப்பதற்கு முன்னே உயிரை விடுதல் அவனுடைய உணவை உண்டவர்க்கு உரிய செயலாகும்.

கு :—'திருத்தலாமாகிலன்றே' என்பதில் அன்று, ஓ இரண்டும் அசை. உண்டவர்க்கு என்பதற்கேற்ப ஒருத்தரின் என்பதற்கு வளர்த்த ஒருவரின் எனப் பொருள் கொள்ளப்பட்டது. 'ஒருத்தரின் முன்னம் சாதல் உண்டவர்க்குரியதம்மா' என்பதனுள், 'புரந்தார் கண்ணீர் மல்கச் சாகிற்பின் சாக்கா, டிரந்து கோட்டக்க துடைத்து' (780) என்னும் குறளுரை அடங்கிக் கிடத்தல் காண்க. நம்மை வளர்த்த அண்ணனுகிய இராவணன் தீய செயலை மேற்கொண்டான் என்பது குறித்து நம் அண்ணனை வெறுத்து அவனைக் கொல்ல வந்த மாற்றுனுடன் சேர்ந்து வாழ்வது அறமாகாது; நமது அண்ணனை எதிர்த்த பகைவருடன் போர் புரிந்து அவன் இறக்குமுன்னே இறந்துபோதல்தான் நேரிய செயலாகும் எனக் கும்பகருணன் வீடணனுக்குக் குறிப்பாகக் கூறுகின்ருன். (157)

**7556.** தும்பியந் தொடையல் வீரன்
சுடுகணை துரப்பச் சுற்றும்
வெம்புவெஞ் சேனை யோடும்
வேறுள கிளைஞ ரோடும்
உம்பரும் பிறரும் போற்ற
வொருவன்மூ வுலகை யாண்டு
தம்பிய ரின்றி மாண்டு
கிடப்பனே தமையன் மண்மேல்.

'தும்பி அம் தொடையல் வீரன்
சுடுகணை துரப்ப, சுற்றும்
வெம்பு வெஞ் சேனையோடும்,
வேறு உள கிளைஞரோடும்,
உம்பரும் பிறரும் போற்ற
ஒருவன் மூவுலகை ஆண்டு,
தம்பியர் இன்றி மாண்டு
கிடப்பனோ தமையன் மண்மேல்.

பொ :—' (நமது) தமையன், தேவர்களும் பிறரும் போற்றுமாறு ஒப்பற்றவனாகி மூவுலகையும் ஆண்டு, (இனி) வண்டுகள் மொய்க்கும் படியான அழகிய மாலையணிந்த இராமன் கொல்லும் அம்பை விடுதலால், தன்னைச் சுற்றியிருக்கின்ற வாட்டமுற்ற கொடிய சேனைகளோடும் மற்றுமுள்ள சுற்றத்தார்களோடும் தம்பியர் இன்றிப் பூமியின் மேல் இறந்து கிடப்பானோ ?

கு :—துரப்ப, சேனையோடும் கிளைஞரோடும் மாண்டு எனக் கூட்டுக. போற்ற என்பது ஆண்டு என்பதனோடு இயையும். ஒரு தம்பியும் இல்லாத ஒருவன், போர்க்களத்தில் இறந்து கிடக்கும்படி நேர்ந்தபோது தம்பியில்லாமற் கிடத்தல் இயல்பு. ஆனால் உடன் பிறந்த இரு தம்பியரையுடைய இராவணன், அவர்களை விட்டு ஏனையராகிய சேனையோடும் கிளைஞரோடும் இறந்து கிடத்தல் தகுதியன்று என்பான், 'தமையன் தம்பியரின்றிக் கிடப்பனோ' என்றான். இதனால் அத்தகைய குறை நேராமல் என் தமையனாகிய இராவணன் பொருட்டுப் போர் செய்து இறத்தலே எனது கடன் எனக் கும்பகருணன் கூறியவாறு. (158)

**7557.** அணையின்றி யயர்ந்த வென்றி
யஞ்சினர் நகைய தாகப்
பிணையொன்று கண்ணாள் பங்கன்
பெருங்கிரி நெருங்கப் பேர்த்த
பணையொன்று திரடோள் கால
பாசத்தாற் பிணிப்பக் கூசித்
துணையின்றிச் சேற னன்றோ
தோற்றுள கூற்றின் சூழல்.

'அணை இன்றி அயர்ந்த வென்றி
அஞ்சினர் நகையது ஆக,
பிணை ஒன்று கண்ணாள் பங்கன்
பெருங்கிரி நெருங்கப் பேர்த்த
பணை ஒன்று திரள்தோள் கால
பாசத்தால் பிணிப்பக் கூசித்
துணை இன்றிச் சேறல் நன்றோ,
தோற்றுள கூற்றின் சூழல்.

பொ :—'பெண்மானின் கண்களை யொத்த கண்களையுடைய உமாதேவியைப் பாகத்திலே கொண்ட பரமசிவனது பெரிய மலையை வேரோடும் எடுத்த பருத்தலைப் பொருந்திய திரண்ட இராவணனுடைய தோள்கள் கால பாசத்தினாலே கட்டுண்ண, (அதனாலே) அச்சமுற்று(த் தனக்குத்) தோற்றுப்போன இயமனது இருப்பிடத்தே, (பிறர் எவராலும்) தடுக்கப்படுதல் இல்லாமல் செய்த வெற்றிச் செய்கைகளினால் அஞ்சினர் (ஆன தேவர்கள்பால்) நகையுண்டாக, உடன்பிறந்தவர்களும் இல்லாமல் செல்லுதல் தகுதியோ?

கு :—அஞ்சினர் - அஞ்சினராகிய தேவர்கள். முன்னர்த் தனக்குத் தோற்ற கூற்றினிடத்தே இப்பொழுது தான் தோற்றுப் போகின்றான் என்று தேவர்கள் நகை செய்வர் என்பான், 'அஞ்சினர் நகையதாக' என்றான். 'தோற்றுளகூற்றின் சூழல் துணையின்றிச் சேறல் நன்றோ' என்றதனால் என் அண்ணன் துணையின்றித் தனியனாய்க் கூற்றுவன் உலகிற்குச் செல்லமாட்டான்; நானும் அவனுடன் செல்லத் துணிந்து விட்டேன் எனக் கும்பகருணன் தன் கருத்தைக் குறிப்பினால் புலப்படுத்தினான். கூசுதல் - அஞ்சுதல். துணையும் இன்றி என உம்மை விரிக்க. (159)

**7558.** செம்பிட்டுச் செய்த விஞ்சித்
திருநகர்ச் செல்வந் தேறி
வம்பிட்ட தெரிய லெம்மு
னுயிர்கொண்ட பகையை வாழ்த்தி
அம்பிட்டுத் துன்னங் கொண்ட
புண்ணுடை நெஞ்சோ டைய
கும்பிட்டு வாழ்கி லேன்யான்
கூற்றையு மாடல் கொண்டேன்.

'செம்பு இட்டுச் செய்த இஞ்சித்
திருநகர்ச் செல்வம் தேறி,
வம்பு இட்ட தெரியல் எம்முன்
உயிர்கொண்ட பகையை வாழ்த்தி,
அம்பு இட்டுத் துன்னம் கொண்ட
புண்ணுடை நெஞ்சோடு ஐய!
கும்பிட்டு வாழ்கிலேன் யான்—
கூற்றையும் ஆடல் கொண்டேன்!

பொ :—'ஐயனே, இயமனையும் வெற்றி கொண்ட யான், செம்பை உருக்கிவிட்டுக் கட்டப்பெற்ற மதிலையுடைய அழகிய இலங்கைச் செல்வத்தை நிலையானதென்று தெளிந்து, வாசனையுடைய மாலையணிந்த எமது அண்ணனுடைய உயிரைக் கொண்ட பகைவனாகிய இராமனை வாழ்த்தி, அம்பு தைத்துக் கிழிப்புண்டு புண்ணுற்றாற் போன்ற நெஞ்சோடு வணங்கி வாழமாட்டேன்.

கு :—'திருநகர்ச் செல்வம்' ஒரு காலத்தில் அழியக் கூடியதாகலின் அழியாதது என்று தெளிந்து வாழ்கிலேன் என்றான். 'ஒட்டார்பின் சென்றொருவன் வாழ்தலின் அந்நிலையே, கெட்டான் எனப்படுதல் நன்று' (திருக்குறள் - 967) ஆதலின் 'பகையை வாழ்த்தி வாழ்கிலேன்' என்றான். தம்முன்னவனது உயிர் அவர்களால் போதல் திண்ணம் என்பதை உணர்ந்தவனாதலின், 'உயிர் கொண்ட பகை' என்றான். நெஞ்சிற்குப்புண்ணாவது பகையை வணங்கி வாழ்தல். 'அம்பிட்டுத் துன்னங் கொண்ட புண்ணுடை நெஞ்சு' என்றது இராமன் இராவணனைக் கொன்றதற்காக அவனை வெறுத்து வருந்தும் நெஞ்சினைக் குறித்தது. இதனால் ஒருகால் இராவணனே முதலில் இறந்தானாயினும் அப்போதும் இராமனைச் சேரேன் என்று கும்பகருணன் தன் மன உறுதியை வெளிப்படுத்தினான். (160)

**7559.** அனுமனை வாலி சேயை
அருக்கன்சேய் தன்னை யம்பொற்
றனுவுடை யவரை வேறோர்
நீலனைச் சாம்பன் றன்னைக்
கனிதொடர் குரங்கின் சேனைக்
கடலையுங் கடந்து மூடும்
பனிதுடைத் துலகஞ் சுற்றும்
பருதியிற் றிரிவென் பார்த்தி.

'அனுமனை, வாலி சேயை,
அருக்கன்சேய் தன்னை, அம்பொன்
தனு உடையவரை, வேறுஓர்
நீலனை, சாம்பன் தன்னை,
கனி தொடர் குரங்கின் சேனைக்
கடலையும், கடந்து, மூடும்
பனி துடைத்து உலகம் சுற்றும்
பருதியின் திரிவென்; பார்த்தி;

பொ :—'அனுமனையும், வாலியின் மகனாகிய அங்கதனையும் சூரியன் மகனாகிய சுக்கிரீவனையும் அழகிய பொன்மயமான வில்லையுடைய இராம இலக்குவரையும் (இவர்களின்) வேருக (நின்று சேனைகளை நடத்தும்) ஒப்பற்ற (படைத்தலைவனாகிய) நீலனையும் சாம்பவானையும் கனிகளைப் பறித்தற்காகத் தொடர்கின்ற கடல் போன்ற குரங்கின் சேனைகளையும் வெற்றி கொண்டு, மூடியிருக்கின்ற பனியை நீக்கிஉலகத்தைச் சுற்றி வருகின்ற சூரியனைப் போலத் திரிவேன், பார்ப்பாய்.

கு :—வலியுடையவர்களையெல்லாம் எடுத்துக் கூறியதனுல் அவர்களினும் தான் ஒருவனே வலியன் என உரைத்தானாயிற்று. சேய்தன், சாம்பன்தன் என்பவைகளிலுள்ள தன் சாரியை. எண்ணும்மைகள் தொக்கன. குரங்கின் கடல் என்றதனைக் கடல் போன்ற குரங்கு என மாற்றி மிகுதியைக் குறித்ததாகக் கொள்க. பார்த்தி, முன்னிலை ஏவல் வினைமுற்று. (161)

**7560.** ஆலங்கண் டஞ்சி யோடு
மமரர்போ லரிக ளோடச்
சூலங்கொண் டோடி வேலை
தொடர்வதோர் தோற்றந் தோன்ற
நீலங்கொள் கடலு மோட
நெருப்பொடு காலு மோடக்
காலங்கொ ளுலகு மோடக்
கறங்கெனத் திரிவன் காண்டி.

'ஆலங் கண்டு அஞ்சி ஓடும்
அமரர்போல் அரிகள் ஓட,
சூலம் கொண்டு ஓடி, வேலை
தொடர்வது ஓர் தோற்றம் தோன்ற,

நீலம் கொள் கடலும் ஓட,
நெருப்பொடு காலும் ஓட,
காலம் கொள் உலகும் ஓட,
கறங்கு எனத் திரிவன்; காண்டி!

பொ :—'(கடல் கடைந்தபோது அதனிடை எழுந்த) ஆலகால விடத்தைக் கண்டு அஞ்சி ஓடிய தேவர்களைப் போலக் குரங்குகள் ஓடவும், (ஊழிக்காலத்திலே உலகை அழிக்கும்படியான வலிமை மிக்க) நீல நிறத்தைக் கொண்ட கடலும் தோற்கவும், ஊழித் தீயோடு ஊழிக்காற்றும் தோற்கவும், ஊழிக்காலத்தால் அழிக்கப் படும் உலகமும் (அக்காலம் வருவதற்கு முன்னரே) அழிந்து ஓடவும், ஒரு கடலானது சூலத்தைக் கையிற்கொண்டு ஓடி (மற்ளெருகடலை)த் தொடர்வது போன்ற காட்சி உண்டாகக் காற்றாடியைப் போலத் திரிவேன்; (நீ) பார்ப்பாய்.

கு :—சூலத்தைக் கையிற் கொண்ட கும்பகருணன் வானர சேனையைத் துரத்திக்கொண்டு ஓடுதல், ஒரு கடல் மற்றொரு கடலைத் துரத்திக்கொண்டு ஓடுவதொரு தோற்றம்போலுமென்க. நீர், நெருப்பு, காற்று, பூமி ஆகியவற்றைக் காட்டிலும் தான் வலியன் என்பது தோன்ற அவைகளெல்லாம் தோற்கும்படியாக என்றான். ஓடுதல் என்பது தோற்றல். நெருப்பொடு காலும் என்பதில் 'ஒடு' உடனிகழ்ச்சிப் பொருளது. காண்டி, முன்னிலை ஏவல் ஒருமை வினைமுற்று. (162)

**7561.** செருவிடை யஞ்சார் வந்தென்
கண்ணெதிர் சேர்வ ராகிற்
கருவரை கனகக் குன்ற
மென்னலாங் காட்சி தந்த
இருவரு நிற்க மற்றங்
காருளா ரவரை யெல்லாம்
ஒருவருந் திரிய வொட்டே
னுயிர்சுமந் துலகி லென்றான்.

'செருவிடை அஞ்சார் வந்து, என்
கண் எதிர் சேர்வராகின்,
கருவரை, கனகக் குன்றம்,
என்னல் ஆம் காட்சி தந்த

இருவரும் நிற்க, மற்று அங்கு
ஆர் உளார், அவரை எல்லாம்,
ஒருவரும் திரிய ஒட்டேன்,
உயிர் சுமந்து உலகில்' என்றான்.

பொ :—'போரில் அஞ்சாதவராகி வந்து என் கண்ணிற்கு எதிரே அடைவராயின், கரிய மலையும் பொன்மலையும் என்று சொல்லும்படியான தோற்றத்தைக் கொண்டு நின்ற இராம இலக்குவராகிய இருவரும் நீங்க, வேறாக அங்கு யார் இருக்கின்றார்களோ அவர்களையெல்லாம் ஒருவரேனும் இவ்வுலகில் உயிரைத் தாங்கிக் கொண்டு உலவும்படி விடமாட்டேன்' என்று (கும்பகருணன்) கூறினான்.

கு :—என் தோற்றத்தைக் கண்டே பயந்து ஓடுவர் என்பது தோன்ற, 'என் கண்ணெதிர் சேர்வராகின் என்றான். கருவரை, கனகக்குன்றம் முறையே இராமனுக்கும் இலக்குவனுக்கும் நிறம் பற்றிவந்த நிரனிறை உவமம். இராம இலக்குவர் தன்னின் மிக்க வலியவர் என்னும் எண்ணமுடையவனாதலின், 'இருவரும் நிற்க' என்றான். அவர்கள் கண்ணெதிரிலேயே அவர்களுடைய சேனையை அழிப்பேன் எனத் தன் வலிமிகுதி தோன்றக் கூறியதாகக் கொள்ளலும் ஒன்று. இருவரும் என்பதிலுள்ள உம்மை முற்றும்மை. யாருளர் அவரையெல்லாம் என்றது எல்லோரையும் என்றபடி. ஒருவரும் என்பதிலுள்ள உம்மை எஞ்சாமைப் பொருட்டு. (163)

**7562.** தாழ்க்கிற்பா யல்லை யென்சொற்
றலைக்கொளத் தக்க தென்று
கேட்கிற்பா யாயி னெய்தி
யவரொடுங் கெழீஇய நட்பை
வேட்கிற்பா யினியோர் மாற்றம்
விளம்பினால் விளைவுண் டென்று
சூழ்க்கிற்பா யல்லை யாருந்
தொழநிற்பா யென்னச் சொன்னான்.

'தாழ்க்கிற்பாய் அல்லை, என் சொல்
தலைக் கொளத் தக்கது என்று
கேட்கிற்பாய் ஆயின், எய்தி,
அவரொடும் கெழீஇய நட்பை

வேட்கிற்பாய்; "இனி ஓர் மாற்றம்
விளம்பினல் விளைவு உண்டு" என்று
சூழ்க்கிற்பாய் அல்லை; யாரும்
தொழ நிற்பாய்,' என்னச் சொன்னன்.

பொ :—'என் சொல் சிறந்ததாகக் கொள்ளத்தக்கது என்று கேட்பாயானல், தாமதம் செய்யாமல் சென்று அந்த இராம இலக்குவரோடு பொருந்திய நட்பையே விரும்புவாய்; இனி (என்னேடு) ஒரு பேச்சுப் பேசினல் நன்மை விளையுமோ என்று எண்ணங் கொள்ளுதற்கு உரியவன் அல்லை; (என் சொற்படி நீ அவர்களோடு போய்ச் சேர்ந்தால்) எல்லோராலும் புகழப்படுவாய்' என்றும் (கும்பகருணன்) கூறினன்.

கு :—தாழ்த்தல் - காலதாமதம் செய்தல். 'தூங்கற்க, தூங்காது செய்யும் வினை' (672) என்னும் குறட்பகுதி ஈண்டு நினைவு கூரற் பாலது. தலைக்கொள்ளுதல் - சிறந்ததாகக் கொள்ளுதல். தமையன் சொல்லைக் கொள்ளவேண்டும் என்னும் எண்ணம் உடையையாயின் என்பான், 'கேட்கிற்பாயாயின்' என்ருன். இவ்விடத்து, 'அம்புவியில் முன்பிறந்தோர் அரசு நெறிமுறை உரைத்தால் அது கேளாமல், தம்பியரும் மறுப்பரோ' (கிருட்டினன் தூதுச்சருக்கம் - 21) என்னும் பகுதி நினைவு கூரத்தக்கது. பொருந்திய நட்பைக் குலைக்காதே என்பான், 'வேட்கிற்பாய்' என்ருன். வேட்டல் - விரும்புதல். எதுகை நோக்கிச் 'சூழ்க்கிற்பாய்' எனமிக்கது. பகை வந்தவிடத்துத் தமையனை விட்டுப் போய்விட்டான் என்று பழித்துச் சொல்லாது அற நெறியே ஒழுகினன் என எல்லோரும் புகழ்வர் என்பான், 'யாரும் தொழநிற்பாய்' என்ருன். இதனல் இருமையினும் பயன் உண்டென்பது பெறப்பட்டது. 'யாரும் தொழ நிற்பாய்' என்பதனை விளியாக்கிக் கூறலுமாம். இது ஈரடி இடையிட்டெதுகைப்பாட்டு.

(164)

**7563.** போதிநீ ஐய பின்னைப்
பொன்றினர்க் கெல்லா நின்ற
வேதியர் தேவன் றன்னை
வேண்டினை பெற்று மெய்ம்மை
ஆதிநூன் மரபி னலே
கடன்களு மாற்றி யேற்ற
மாதுயர் நரக நண்ணு
வண்ணமுங் காத்தி மன்னே.

'போதி நீ, ஐய! பின்னைப்
பொன்றினர்க்கு எல்லாம் நின்ற
வேதியர் தேவன் தன்னை
வேண்டினை பெற்று, மெய்ம்மை
ஆதி நூல் மரபினாலே,
கடன்களும் ஆற்றி, ஏற்ற
மாதுயர் நரகம் நண்ணா
வண்ணமும் காத்தி மன்னோ.

பொ :—'ஐயனே, நீ (விரைந்து இராமனிடம்) செல்வாயாக; போர் முடிந்த பிறகு இறந்தவர்களுக்கெல்லாம் வெற்றி கொண்டிருக்கிற இராமனை வணங்கினையாய் (அவன் உடன்பாட்டைப்) பெற்று, மெய்ம்மையாகிய வேத நூல் முறைமைப்படி (இறந்தவர்களுக்குச் செய்யவேண்டிய) இறுதிக் கடன்கள் யாவற்றையும் செய்து, (அவர்களுக்குப்) பொருந்திய மிக்க துயரத்தை விளைவிப்பதாகிய நரகத்தை (அவர்கள்) அணுகாதபடி (அவர்களைக்) காப்பாற்றுவாயாக.

கு :—பின்னை - போர் முடிந்த பிறகு. இறந்தவர்களுக்கு ஈமக் கடன் செய்ய வேண்டுமென்பது நூல் விதியாதலின் 'ஆதி நூல் மரபினாலே' கடன் இயற்றுதி என்றான். 'மரபினால்' என்பது முறைப்படி என்னும் பொருளது. அரக்கர் குலத்திற் பிறந்த வீடணன் இராமனால் தன் குலத்தவன் என்று கொள்ளப்பட்டவனாதலின், அவனை இராமன் உடன்பாடு பெற்று இறுதிக் கடன்கள் செய் என்றான். 'அன்னதோ என்னாஈசன்' (இராவணன் வதைப் படலம் 216) எனத் தொடங்கும் பாடலில் 'வீடணாதக்கதன்றால், என்னதோ இறந்துளார் மேல் வயிர்த்தல் நீ இவனுக்கீண்டு, சொன்னதோர் முறையினாலே கடன் செயத் துணிதி' என இராமன் கூறியதாகப் பின்னருங் கூறுவர் ஆசிரியர். 'அந்தணர் மாட்டந்தி வைத்த மந்திரத்தை மந்திரத்தால் மறவாதென்றும் வாழுதியேல்' (திருநெடுந் தாண்டகம்-4) என்ற ஆழ்வார் பாடலைக் கருத்திற் கொண்டு, 'வேதியர் தேவன்' என்றார். ஆதிநூல் என்பது வேதம்; அது அழியாததாதலின் 'மெய்ம்மை' என்றார். (165)

**7564.** ஆகுவ தாகுங் காலத்
தழிவது மழிந்து சிந்திப்
போகுவ தயலே நின்று
போற்றினும் போதல் திண்ணம்

சேகற வுணர்ந்தோர் நின்னின்
யாருளர் வருத்தஞ் செய்யா
தேகுதி யெம்மை நோக்கி
யிரங்கலே யென்று முள்ளாய்.

'ஆகுவது, ஆகும் காலத்து;
அழிவதும், அழிந்து சிந்திப்
போகுவது; அயலே நின்று
போற்றினும் போதல் திண்ணம்;
சேகு அற உணர்ந்தோர் நின்னின்
யார் உளர்? வருத்தம் செய்யாது
ஏகுதி; எம்மை நோக்கி
இரங்கலே; என்றும் உள்ளாய்!'

பொ :—'என்றும் நிலைத்திருப்பவனே, ஆகவேண்டிய பொருள்கள் (அவை) உண்டாகும் காலம் நேர்ந்தபோது உண்டாகும்; அழிந்து போகும் பொருள்களும் (அவை போகுங் காலம் நேர்ந்தபோது) அழிந்து சிதறுண்டு போகுவதாகும்; (அப்படி அழிதலைப்) பக்கத்திலே இருந்து காப்பாற்றினும் அழிந்து போதல் உறுதி; (பொருள்களின் உண்மைத் தன்மைகளைக்) குற்றமற உணர்ந்தோர் நின்னைக் காட்டிலும் வேறு யார் இருக்கின்றார்கள்? எனக்கு வருத்தம் உண்டாக்காது (இராம இலக்குவரிடம்) போவாயாக; எங்களைக் குறித்து வருந்தாதே.'

கு :—'ஆம் பொருள்களாகுமது யார்க்கு மழிக்கொண்ணுப் போம் பொருள்கள் போகுமவை பொறியின் வகை வண்ணம்' (848) என்னும் சீவக சிந்தாமணிச் செய்யுள் ஈண்டு ஒப்புநோக்கத்தக்கது. 'போற்றினும் போதல் திண்ணம்' என்பதால் முயற்சி செய்தாலும் காலமல்லாதவழிக் கருமங்கள் கைகூடா என்பது அருத்தாபத்தியாற் பெற்றும், சேகு - குற்றம். வீடணன் வந்ததால் 'உளைகின்றது உள்ளம்' (132) என்றவனுதலின் 'வருத்தம் செய்யாது ஏகுதி' என்றான். வீடணன் தன் மக்களையும் துறந்து சென்றவனுதலின் அவர்களையும் உளப்படுத்தி 'எம்மை' எனப் பன்மையாற் கூறினான். (166)

## கும்பகருணன் வீடணனைத் தழுவி விடை கொடுக்க, வீடணனும் அவனைப் பணிந்து மீளுதல்

**7565.** என்றவன் றன்னை மீட்டு
மெடுத்துமார் பிறுகப் புல்லி
நின்றுநின் றிரங்கி யேங்கி
நிறைகணு னெடிது நோக்கி
இன்றொடுந் தவிர்ந்த தன்றே
யுடன்பிறப் பென்று விட்டான்
வென்றிவெந் திறலி னானு
மவனடித் தலத்து வீழ்ந்தான்.

என்று, அவன் தன்னை மீட்டும்
எடுத்து, மார்பு இறுகப் புல்லி,
நின்று நின்று, இரங்கி ஏங்கி,
நிறைகணால் நெடிது நோக்கி,
'இன்றொடும் தவிர்ந்தது அன்றே,
உடன் பிறப்பு' என்று விட்டான்;
வென்றி வெந் திறலினானும்,
அவன் அடித் தலத்து வீழ்ந்தான்.

பொ :—என்று சொல்லிக் (கும்பகருணன்,) வீடணனை மீளவும் தூக்கி மார்பிலே பொருந்தத் தழுவிக்கொண்டு (திரும்பச் சந்திக்க முடியாத பிரிவு நேர்ந்ததே என்றெண்ணி) நெடுநேரம் வாய்விட்டுப் புலம்பி ஏக்கமடைந்து (நீர்) நிறைந்த கண்களால் நெடுநேரம் உற்றுப் பார்த்து, 'நாம் இருவரும் கூடிப் பிறந்த உறவு இன்றோடு முடிந்துவிட்டது' என்று சொன்னான். வெற்றியைக் கொள்ளும்படியான மிக்க வலியையுடைய வீடணனும் அவன் அடிகளில் வீழ்ந்தான்.

கு :—'முகந்து உயிர் மூழ்க' முன்னர்ப் புல்லினானாதலின் 'மீட்டும்' என்றார். 'நின்று நின்று இரங்கி ஏங்கி' என்றது தேம்பித் தேம்பி அழுதலை உணர்த்திற்று. அழுகை நீர் கண்ணை மறைத்தலால், 'நெடிது நோக்கி' என்றார். 'நின்று நின்றிரங்கியேங்கி நிறைகணால் நெடிது நோக்கி' என்ற தொடருடன் 'கடைக்கணால் நோக்கி நோக்கி யிருகணீர் கலுழப் போனான்' (இந்திரசித்துவதைப் படலம் - 14) என இந்திரசித்தின் நிலையைக் கம்பர் உணர்த்துகின்ற தொடர் ஒப்புநோக்கத்தக்கது. (167)

**7566.** வணங்கினுன் வணங்கிக் கண்ணும்
வதனமு மனமும் வாயும்
உணங்கினு னுயிரோ டியாக்கை
யொடுங்கினு னுரைசெய் தின்னும்
பிணங்கினு லாவ தில்லைப்
பெயர்வதென் றுணர்ந்து பேர்ந்தான்
குணங்களா லுயர்ந்தான் சேனைக்
கடலெலாங் கரங்கள் கூப்ப.

வணங்கினுன்; வணங்கி, கண்ணும்
வதனமும் மனமும் வாயும்
உணங்கினுன்; உயிரோடு யாக்கை
ஒடுங்கினுன்; 'உரைசெய்து இன்னும்
பிணங்கினுல் ஆவது இல்லை;
பெயர்வது' என்று உணர்ந்து பேர்ந்தான்,
குணங்களால் உயர்ந்தான், சேனைக்
கடல் எலாம் கரங்கள் கூப்ப.

பொ :—குணங்களால் உயர்ந்தவனுகிய வீடணன், (கும்ப கருணனை) வணங்கினுன்; (அப்படி) வணங்கிக் கண்களும் முகமும் மனமும் வாயும் வாடினுன்; உயிரும் உடம்பும் ஒடுங்கினுன்; '(இவனேடு)' இதன் மேலும் (இவன் கொள்கையை மறுத்து) மாறுபட்டுப் பேசுவதனுல் ஆகக்கூடிய பயன் ஒன்றுமில்லை; மீளுதலே (சிறந்தது)' என்று உணர்ந்து, கடல் போன்ற சேனையிலுள்ள யாவரும் கைகுவித்துத் தன்னை வணங்கப் புறப்பட்டு விட்டான்.

கு :—குணங்களால் உயர்ந்தான் வணங்கினுன்; வணங்கி உணங்கினுன், ஒடுங்கினுன், ஆவதில்லை, பெயர்வது என்று உணர்ந்து கூப்பப் பேர்ந்தான் என முடிக்க. 'கண்ணும் வதனமும் மனமும் வாயும் உணங்கினுன்' என்பது மெய்ப்பாடு. வார்த்தை சொல்ல முடியாமையின் 'வாயும் உணங்கினுன்' எனப்பட்டது. 'உயிரோடு யாக்கை' என்பதற்கு உயிர் ஓடிக் கொண்டிருக்கும் உடம்பு எனலும் ஆம். 'மாற்றம் விளம்பினுல் விளைவுண்டென்று, சூழ்க்கிற்பாயல்லை' (164) எனக் கும்பகருணன் கூறிவிட்டதால், 'பிணங்கினுலாவதில்லை' என்று கருதினுன். வீடணனுடைய பெருந் தன்மை நோக்கிச் சேனையிலுள்ளோரெல்லாம் வணங்கினுர்கள் என்றபடி. (168)

## வீடணன் செல்லக் கண்ட கும்பகருணன் கண்ணில் உதிரநீர் பெருக நிற்றல்

**7567.** கள்ளநீர் வாழ்க்கை யேமைக்
கைவிட்டுக் காலும் விட்டான்
பிள்ளைமை துறந்தா னென்னுப்
பேதுறு நிலைய ஞகி
வெள்ளநீர் வேலை தன்னில்
வீழ்ந்தநீர் வீழ வெங்கண்
உள்ளநீ ரெல்லா மாறி
யுதிரநீ ரொழுக நின்ருன்.

'கள்ள நீர் வாழ்க்கையேமைக்
கைவிட்டு, காலும் விட்டான்;
பிள்ளைமை துறந்தான்' என்னுப்
பேதுறும் நிலையன் ஆகி,
வெள்ள நீர் வேலை தன்னில்
வீழ்ந்த நீர் வீழ, வெங்கண்
உள்ள நீர் எல்லாம் மாறி,
உதிர நீர் ஒழுக, நின்ருன்.

பொ :—இளமைப் பருவத்தின் அறியாமையை விட்டு நீங்கிய வனுகிய வீடணன், வஞ்சக வாழ்க்கையுடைய எம்மை வெறுத்து (அரக்கர் குலத்) தொடர்பையும் அறுத்துக் கொண்டான் என்று நினைத்து, மயங்கிய நிலையை உடையவனுகி(க்கும்பகருணன்), மிகுந்த நீரையுடைய கடலின் கண்ணே வீழ்ந்த ஆற்றுநீரும் (உவமை யாகாமல்) பின்னிடுமாறு வெம்மையுடைய கண்களிலுள்ள நீர் முழுதும் வழிந்து முடிந்தபின்பு, இரத்தமாகிய நீர் ஒழுகும்படி நின்ருன்.

கு :—'கள்ளநீர் வாழ்க்கை' என்பது வஞ்சக வாழ்க்கை. கைவிடுதல் - விட்டுவிடுதல்; ஒருசொல். கால்விடுதல் - தொடர்பு அறுதல். 'கைவிட்டுக் காலும் விட்டான்' என்பதில் கை, கால் என்னும் சொல் நயம் காண்க. பிள்ளைமை துறத்தல் - பேதையறிவு நீங்குதல் (அறிவுடையனுதல்). 'வேலை தன்னில் வீழ்ந்த நீர் வீழ' என்றது வீடணன் மாட்டு வைத்த அன்பினுலும் இரக்கத்தினுலும் கும்பகருணன் கண்களிலிருந்து பெருகிய நீரைக் குறித்தது. துன்பத்தைப் புலப்படுத்தும் கண்ணீர், அத்துன்பம் எல்லைகடந்து மிகுதலால் மாறிப் புண்ணீராயிற்றென்றபடி. (169)

## வீடணன் இராமனிடம் கும்பகருணனுடைய மனநிலையைக் கூறுதல்

**7568.** எய்திய நிருதர் கோனு
மிராமனை யிறைஞ்சி யெந்தாய்
உய்திற னுடையார்க் கன்றே
வறநெறி யொழுக்க முண்மை
பெய்திற னெல்லாம் பெய்து
பேசினன் பெயருந் தன்மை
செய்திலன் குலத்து மானந்
தீர்ந்திலன் சிறிது மென்றான்.

எய்திய நிருதர் கோனும்
இராமனை இறைஞ்சி, 'எந்தாய்!
உய்திறன் உடையார்க்கு அன்றே
அறநெறி ஒழுக்கம் உண்மை?
பெய்திறன் எல்லாம் பெய்து
பேசினன்; பெயருந் தன்மை
செய்திலன்; குலத்து மானம்
தீர்ந்திலன் சிறிதும் என்றான்.

பொ :—இராமனை அடைந்த வீடணன், (அவனை) வணங்கி, எமது தலைவனே, அறநெறியே ஒழுகும் ஒழுக்கம் உளதாதல் (தீமையினின்றும் விலகிப்) பிழைக்கின்ற தன்மை உடையார்க்கு அல்லவா? (அவன் மனமாற்றமடையும்படியாக வேண்டும் சொற்களைப்) பெய்து, பேசும் திறமை எல்லாம் பயன்படுத்திச் சொல்லிப் பார்த்தேன்; அரக்கர் குலப் பற்றுச் சிறிதும் நீங்காதவனாகி (த் தன் தமையனுக்காக உதவி நிற்கின்ற அந்த நிலையினின்றும்) மாறுந் தன்மையை மேற்கொண்டானில்லை.

கு :—முன்னர்ப் 'பேர்ந்தான்' (168) எனக் கூறினாராதலின் ஈண்டு 'எய்திய நிருதர் கோனும்' என்றார். அறநெறி ஒழுகுதல் அறிவினாலாதலின், அந்த அறிவு ஊழால் விளையும் என்பதனை, 'உய் திறனுடையார்க்கன்றே அறநெறி ஒழுக்கமுண்மை' என்பதனால் விளக்கினர். 'அறிவகற்றும் ஆகலூழ் உற்றக்கடை' (372) என்றார் வள்ளுவரும். பெய்திறன் எல்லாம் பெய்து பேசுதலாவது நூல் வழியும் முன்னோர்கள் ஒழுகின வழியும் எடுத்துக் கூறுதல்.

பெய்திறன் எல்லாம் பெய்து பேசியும் 'குலத்து மானம் தீர்ந்திலன் சிறிதும்' என்றதனுல் நம்முடைய முயற்சி பயனில்லாது கழிந்தது என்ருன். (170)

## வீடணனுடைய உரையைக் கேட்டு இராமன் கூறுதல்

**7569.** கொய்திறச் சடையின் கற்றைக்
கொந்தளக் கோலக் கொண்டல்
நொய்தினிற் றுளக்கி யைய
நுன்னெதிர் நும்மு னேனை
எய்திறத் துணித்து வீழ்த்த
லினிதன்றென் றினைய சொன்னேன்
செய்திற னினிவே றுண்டோ
விதியையார் தீர்க்க கிற்பார்.

கொய்திறச் சடையின் கற்றை
கொந்தளக் கோலக் கொண்டல்,
நொய்தினில் துளக்கி, 'ஐய!
"நுன் எதிர், நும்முனேனை
எய்து இறத் துணித்து வீழ்த்தல்
இனிது அன்று" என்று இனைய சொன்னேன்;
செய் திறன் இனி வேறு உண்டோ?
விதியை யார் தீர்க்ககிற்பார்?'

பொ :—கொய்து விடுதற்குரிய சடைத் தொகுதியினையுடைய மயிர் முடியினைக் கொண்ட அழகிய மேகம் போன்ற இராமன், (அது கேட்டு) இலேசாகத் தலை அசைத்து, ஐயனே, உன் எதிரிலே உனக்கு முன்னுய்ப் பிறந்த தமையனை அம்பு செலுத்தி (அவன்) மாளும்படியாக(த் தலையை) அறுத்து வீழ்த்துதல் நல்லது அல்ல என்று அவனை அழைத்து வரும்படியாகச் சொன்னேன்; இதன் மேலும் (நாம்) செய்யத்தக்க காரியம் வேறு ஏதேனும் இருக்கின்றதோ? (இல்லை என்றபடி). (இவ்வுலகில்) விதியை விலக்க வல்லவர்கள் யார்? (ஒருவரும் இல்லை).

கு :—கொந்தளம் - மயிர்முடி. நொய்தினின் என்றது ஈண்டுச் சிறிது என்னும் பொருளை உணர்த்தியது. 'இனைய சொன்னேன்' என்றதனுல் அவன் தன் கையால் மாள்வன் என்பதை இராமன் முன்னரே உணர்ந்தவன் என்பது பெறப்படுகின்றது. 'விதியை

யார் தீர்க்ககிற்பார்' என்பதுடன், "ஊழிற் பெருவலியாவுள மற்றொன்று, சூழினும் தான்முந்துறும்" (380) என்னும் திருக்குறளும் "சூழ்வினை நான்முகத் தொருவர்ச் சூழினும், ஊழ்வினை ஒருவரால் ஒழிக்கற்பாலதோ' (அயோத். காண். நகர்நீங்கு. 160) என்னும் பகுதியும் ஒப்பு நோக்கத் தக்கன. (171)

அரக்கர் சேனை குரக்குச் சேனையை வளைத்துக் கொள்ளுதல்

**7570.** எனவினி துரைக்கும் வேலை
யிராக்கதர் சேனை யென்னும்
கனைகடல் கவியின் ருனைக்
கடலினை வளைந்து கட்டி
முனைதொழில் முயன்ற தாக
மூவகை யுலகு முற்றத்
தனிநெடுந் தூளி யார்த்த
தார்த்தில பரவை தள்ளி.

என இனிது உரைக்கும் வேலை,
இராக்கதர் சேனை என்னும்
கனைகடல், கவியின் தானைக்
கடலினை வளைந்து கட்டி,
முனை தொழில் முயன்றதாக,
மூவகை உலகும் முற்றத்
தனி நெடுந் தூளி ஆர்த்தது
ஆர்த்தில, பரவை தள்ளி.

பொ :—என்று (இராமன்) இனிதாகச் சொல்லும் அளவில், அரக்கர் சேனை என்கின்ற ஒலிக்கின்ற கடல், குரங்குச் சேனையாகிய கடலினை வளைத்துக் கொண்டு நெருக்கிப் போர்த் தொழிலிலே முயன்றதாக, [மூவகை உலக முழுமையும் ஒப்பற்ற மிக்க புழுதி எழுந்து நெருங்கிற்று; கடல் தன் மேல் படிந்த அந்தப் புழுதியை நீக்கி ஆரவாரித்தல் இலவாயின.

கு :—இராக்கதர் சேனை யென்னும் கடல், கவியின் தானைக் கடல் என்பன உருவகம். முனை தொழில் என்றது போரினை. அரக்கர் சேனை போர் செய்யத் தொடங்கியதால் இலங்கையில் எழுந்த தூளி மூவுலகம் முழுமையும் நெருங்கிற்று என்றவாறு. ஆர்த்தல் இங்கு நெருங்குதலை உணர்த்தியது. கடல் எப்போதும் ஆரவாரிக்கும்

இயல்பினதாயினும் இப்போது தன்மேல் தூளி மிகுதியாகப் படிந்து விட்டமையால் அப்புழுதியைத் தள்ளிவிட்டு ஆரவாரிக்க இயலாததாயது என்பார், பரவை தள்ளி ஆர்த்தில என்றார். தூளி உலகு முற்ற ஆர்த்தது எனவும் பரவை தள்ளி ஆர்த்தில எனவும் இயையும். 'ஆர்த்தது ஆர்த்தில' என்பது முரண்டொடை. (172)

இச்செய்யுளுக்குப் பின் 52-ல் 167–1 ஆகப் பின்வரும் மிகைப் பாடல் காணப்படுகின்றது.

7571. (௧) சிலைபொழி பகழி வேல்வாள்
செறிசுடர்க் குலிசம் ஈட்டி
பலவகைப் படைகள் வாங்கி
நிருதர்கள் பல்போர் செய்தார்
மலையொடு மரங்கள் ஓச்சி
வயிரத்தோள் கொண்டு மாருக்
கொலை அமர் எடுத்து வாகை
குரங்குகள் மலைந்த அம்மா.

## போர்க்கள இயல்பு

**7571.** ஓடின புரவி வேழ
மோடின வுருளைத் திண்டே
ரோடின மலைக ளோட
வோடின வுதிரப் பேரா
றாடின கவந்த பந்த
மாடின வலகை மேன்மே
லாடின பதாகை யோங்கி
யாடின பறவை யம்மா.

ஓடின புரவி; வேழம் ஓடின; உருளைத் திண்தேர்
ஓடின; மலைகள் ஓட, ஓடின உதிரப் பேர் ஆறு;
ஆடின கவந்த பந்தம்; ஆடின அலகை மேல்மேல்;
ஆடின பதாகை; ஓங்கி ஆடின, பறவை அம்மா!

பொ :—(போர்க்களத்தில் அரக்கர்களின்) குதிரைப் படைகள் ஓடின; யானைகள் ஓடின; சக்கரங்களையுடைய திண்ணிய தேர்கள் ஓடின; போர்க்களத்தில் தோன்றிய இரத்தப் பேராறுகள் மலைகளும் மிதந்து ஓடுமாறு ஓடின; தலையற்ற முண்டங்களின் கூட்டம் ஆடத் தொடங்கின; அந்தக் கவந்தங்களோடு (இறைச்சியை வயிறார

உண்ட) பேய்கள் மேலும் மேலும் அடின; (தேர்களிலும் யானை களிலும் கட்டியிருந்த) பெருங்கொடிகள் விண்ணில் உயர்ந்து ஆடின; (அந்தக் கொடிகளோடு அங்கு இறைச்சி உண்ட பருந்து கழுகு முதலிய) பறவைகள் களித்து ஆடின.

கு:—குதிரை, யானை, தேர் ஆகிய முப்படையும் அரக்கர்க்கே உரியவை. உருளை - சக்கரம். உதிரப் பேராற்றின் பெருமை யுணர்த்த வேண்டி 'மலைகளோட ஓடின' என்றார். மலைகளுள்வழி இவ்வுதிர ஆறு செல்லும்போது அம்மலைகளும் இதனுடன் கலந்து ஓடும் என்க. கவந்தபந்தம் - தலையற்ற உடல்களின் கூட்டம். "கவந்த பந்தக் களிநடம் கண்டிட" (ஆரணிய. அகத்திய) என முன்னும் வந்தது. கவந்தம் ஆடுவதைக் கண்டு அங்கு இறைச்சி யுண்டு களித்த பேய்களும் ஆடுதல் இயல்பு. பதாகை - பெருங் கொடி. தேர் மேலும் யானைமேலும் கொடிகள் கட்டுதல் மரபு. அந்தக் கொடிகள் விண்ணில் உயர்ந்து பறந்து கொண்டிருந்தன; அங்கு இறைச்சியுண்ண வந்த கழுகு முதலிய பறவைகளும் அக் கொடிகளோடு வேறுபாடு தோன்றுதபடி விண்ணில் பறந்து ஆடின என்க. எல்லாவிடத்தும் ஓட்டமும் ஆட்டமுமே நிகழ்வதைக் கூறும் கவிஞரும் 'அம்மா' என்று கூறித் தன் வியப்பைப் புலப்படுத்தி யுள்ளார். (173)

அரக்கர் சேனையும் குரக்குச் சேனையும் அடைந்த நிலை

**7572.** மூளையுந் தசையு மென்புங்
குருதியு நிணமும் மூரி
வாளொடுங் குழம்பு பட்டார்
வாளெயிற் றரக்கர் மற்றவ்
வாளழி குருதி வெள்ளத்
தழுந்தின கவிக ளம்பொற்
றேரொடு மரனுங் கல்லுஞ்
சூலமும் வேலுந் தாக்க.

மூளையும், தசையும், என்பும்,
குருதியும், நிணமும், மூரி
வாளொடும் குழம்பு பட்டார்,
வாள் எயிற்று அரக்கர்; மற்றுஅவ்

ஆள் அழி குருதி வெள்ளத்து
அழுந்தின கவிகள்;— அம்பொன்
தோளொடு மரனும் கல்லும்
சூலமும் வேலும் தாக்க.

பொ :—ஒளிபொருந்திய பற்களையுடைய அரக்கர்கள், தம் அழகிய தோளோடு (வானரர் வீசிய) மரமும் கல்லும் வந்து தாக்கிய தால், மூளையும் தசையும் எலும்பும் இரத்தமும் கொழுப்பும் (ஆகித்) தம் கையிலேந்திய வாளோடும் குழம்புத் தன்மை அடைந்தார்கள் ; குரங்குகள் தம் அழகிய தோள்களோடு (அரக்கர் வீசிய) சூலப் படையும் வேற்படையும் தாக்கியதால் ஆள் மறைதற்கிடமான இரத்த வெள்ளத்தில் அழுந்தின.

கு :—அம்பொன் தோளொடு என்பதை அரக்கரொடும் கவிக ளொடும் கூட்டி, அரக்கர் அம்பொன் தோளொடு மரனுங் கல்லும் தாக்கக் குழம்பு பட்டார் எனவும், கவிகள் அம்பொன் தோளொடு சூலமும் வேலும் தாக்க வெள்ளத் தழுந்தின எனவும் இயைக்க. அரக்கர்கள் வடிவு புலப்படாமல் மூளையும் தசையும் முதலிய குழம்புப் பொருளாகத் திரிபுற்றார்கள் எனவும், குரங்குகள் வடிவம் அழியாமல் இரத்த வெள்ளத்தில் அழிந்தன எனவும் கொள்க. குரங்குகள் வீசிய மரனும் கல்லும் அரக்கர்களை உருக்குலைத்தன; அரக்கர்கள் வீசிய சூலமும் லேலும் குரங்குகளை உருக்குலையாமல் கொன்றன என வேறுபாடு காட்டி அரக்கர் எறிந்த படையினும் அரிகள் எறிந்த மரனும் கல்லும் சிறந்தன என்பது புலப்படுத்தியவாறு. குருதி வெள்ளத்தின் ஆழம் புலப்படுத்த வேண்டி 'ஆளழி குருதி வெள்ளம்' என்று சிறப்பித்தவாறு. ஆள் அழிதல் என்பது, வெள் ளத்தில் இறங்கிய ஆளின் தலைமறைதலை உணர்த்தியது. குழம்புத் தன்மை யடையாத அரக்கர்கை வாளும் இப்போது குழம்புத் தன்மை யடைந்தன எனக் குரங்குகள் வீசிய மலை முதலியவற்றின் சிறப்பு உணர்த்தியவாறு. (174)

அரக்கப் படையும் குரக்குப் படையும் செய்யும் போர்

**7573.** எய்தனர் நிருதர் கல்லா
லெறிந்தனர் கவிக ளேந்திப்
பெய்தன ரரக்கர் பற்றிப்
பிசைந்தன ரரிகள் பின்னு

வைதனர் யாது தானர்
வலித்தனர் வான ரேசர்
செய்தனர் பிறவும் வெம்போர்
திகைத்தனர் தேவ ரெல்லாம்.

எய்தனர், நிருதர்; கல்லால்
எறிந்தனர், கவிகள்; ஏந்திப்
பெய்தனர், அரக்கர்; பற்றிப்
பிசைந்தனர் அரிகள்; பின்ரு
வைதனர், யாதுதானர்;
வலித்தனர், வானரேசர்;
செய்தனர், பிறவும் வெம்போர்;
திகைத்தனர், தேவர் எல்லாம்.

பொ :—அரக்கர்கள் (அம்புகளை) எய்தார்கள்; வானரர்கள் (அரக்கர்களைக்) கல்லால் எறிந்தார்கள்; அரக்கர் அக்கற்களைக் கைகளில் பற்றி, மீண்டும் வானரர் மீது எறிந்தார்கள்; வானரர்கள் தம்மீது அரக்கர் எய்த அம்புகளைப் பற்றிக் கையில் கொண்டு பிசைந்து விட்டார்கள்; அரக்கர்கள் பின் வாங்காமல் வானரங்களை வைதார்கள்; வானரத் தலைவர்கள் தம்மை வைத அரக்கர்களைப் பற்றிப் போர்க்கு இழுத்தார்கள்; இவ்வாறன்றிப் பிறவாருகவும் கொடிய போர் செய்தனர்; இவர் போரைக் கண்ட தேவர்கள் எல்லாம் (அவர் செய்யும் போர்த் திறங்களைக் கண்டு) திகைக்கலாயினர்.

கு :—எய்தனர் என்ற சொல்லால் எய்யப்பட்டது அம்பு என்பது பெறப்படும். கவிகள் எறிந்த கல்லை அரக்கர் ஏந்தி அக்கவிகள் மேல் பெய்தனர் எனவும், நிருதர் எய்த அம்புகளைக் கவிகள் பற்றிப் பிசைந்தனர் எனவும் கொள்க. போர்க்கருவிகளால் குறைவிலாத அரக்கர், கவிகளால் எறியப்பட்ட கற்களைக் கையில் பற்றி மீண்டும் அக்கவிகள்மேல் எறிந்து படைக்கலங்களால் வறியர் என்பதைப் புலப்படுத்தா நிற்கவும், போர்க் கருவிகளில் குறைவுடைய வானரர் அங்ஙனம் செய்யாது, அரக்கர் எய்த அம்புகளைப் பற்றிப் பிசைந்து தம் வலிமையைக் காட்டியது சிறப்பினதாதல் காணலாம். அரக்கர் தம் வாயினுல் வைதல் செய்தார்களாக வானரர் கையினுல் அவர்களை இழுத்துத் தம் பெருமையைப் புலப்படுத்தியதும் காண்க. (175)

## கும்பகருணன் வருகை

7574. நீரினை யோட்டுங் காற்றுங்
காற்றெதிர் நிற்கு நீரும்
போரிணை யாக வேன்று
பொருகின்ற பூச னோக்கித்
தேரினை யோட்டி வந்தான்
றிருவினைத் தேவர் தங்க
ளூரினை நோக்கா வண்ண
முதிரவே னோக்கி யுள்ளான்.

நீரினை ஓட்டும் காற்றும், காற்று எதிர் நிற்கும் நீரும்,
போர் இணையாக ஏன்று பொருகின்ற பூசல் நோக்கி,
தேரினை ஓட்டி வந்தான் – திருவினைத் தேவர் தங்கள்
ஊரினை நோக்கா வண்ணம், உதிரவேல் நோக்கி உள்ளான்.

பொ :—(பெரிய நீர்நிலையில் உள்ள) நீரினை ஓட்ட முயலுகின்ற காற்றும், அந்தக் காற்றின் வேகத்தினைத் தாங்கி அதன் எதிர் ஓடாது நிற்கும் நீரும் தம் போருக்கு ஒப்பாகுமாறு (அரக்கரும் வானரரும்) எதிர்த்துச் செய்கின்ற போரினை—செல்வத்திற்குரிய திருமகளைத் தேவர்களுடைய ஊரையே நோக்காதபடி (அச்சுறுத்திக் கொண்டு) இரத்தக்கறை படிந்ததன் வேற்படையை எப்போதும் நோக்கிக் கொண்டிருப்பவனாகிய கும்பகருணன் - (சேய்மையிலேயே) பார்த்துத் தன் தேரினை ஓட்டிக்கொண்டு போர் நிகழும் அவ்விடத்திற்கு வந்தான்.

கு :—பெரிய நீர் நிலையிலுள்ள நீரைக் காற்று ஓட்ட முயல்கின்றது; காற்றின் வேகத்தால் ஓடாது அந்த நீர் எதிர்த்து நிற்கின்றது. ஒன்றினை ஒன்று வெல்லவும் இல்லை; ஒன்றற்கொன்று தோற்கவுமில்லை. இராமனுடைய அருட்காவலில் உள்ள வெண்ணிறமுடைய வானரர்கள் கரைக்குளடங்கிய வெண்ணிறமுடைய நீர் போன்றவர்கள்; வானரரை ஓட்ட முயலுகின்ற கருநிறமுடைய அரக்கர் நீரினை ஓட்ட முயலும் கரிய காற்றினைப் போன்றூர்கள், அவ்விருதிறத்தாரும் செய்யும் போரும் வெற்றியும் தோல்வியுமின்றி நிகழ்ந்து கொண்டிருந்தது எனவும், அவ்வாறு போர் நிகழுமிடத்திற்குக் கும்பகருணன் தேரில் வந்தான் எனவும் கொள்க. நீரின் நிறம் வெண்மை; காற்றின் நிறம் கருமை. "பொன் பார் புனல் வெண்மை பொங்கும் அனல் சிவப்பு, வன்கால் கருமை" (உண்மை விளக்கம்-5) எனத் திருவதிகை மனவாசகம் கடந்தார் கூறியுள்ளது

காண்க. செல்வம் அரக்கர்களாகிய தங்களையன்றித் தம் பகைவ ராகிய தேவர்களை அடையலாகாது என்ற நோக்கமுடையவன் கும்ப கருணன் என்பார், 'திருவினைத் தேவர்தங்கள் ஊரினை நோக்கா வண்ணம் உதிரவேல் நோக்கியுள்ளான்' என்ருர். தேவர் ஊரைத் திருமகள் நோக்கின் அவள் தன் வேலுக்கு இரையாக நேரும் என அச்சுறுத்தும் குறிப்பால் கும்பகருணன் தன் வேலையே நோக்கி யிருப்பான் என்றவாறு. திருவினை அச்சுறுத்திக் கொண்டு உதிர வேல் நோக்கியுள்ளான் என வருவித்துரைக்க. நல்வினை யுள்வழி யெல்லாம் செல்லும் இயல்பினளான திருவினையே தன் பகைவர் ஊரினை நோக்கலாகாது என்று அச்சுறுத்துகின்றவன் தன் தமை யனுல் சிறைவைக்கப் பெற்ற சீதையைத் தன் பகைவர்பால் சேர ஒருப்படுவனே? என்ற குறிப்பு இதனுல் புலப்படுத்தியவாறு. அக் குறிப்போடே போர் செய்ய வருகின்ருன் கும்பகருணன் என்றவாறு. (176)

## கும்பகருணன் வானரரைப் படுத்திய பாடு 7575-7577

**7575.** ஊழியிற் பட்ட காலி
னுலகங்கள் பட்டா லொப்பப்
பூழியிற் பட்டுச் செந்நீர்ப்
புணரியிற் பட்டுப் பொங்கும்
சூழியிற் பட்ட நெற்றிக்
களிற்ருெடுந் துரந்த தேரின்
ஆழியற் பட்ட வன்றே
யவனியிற் பட்ட வெல்லாம்.

ஊழியில் பட்ட காலின் உலகங்கள் பட்டால் ஒப்ப,
பூழியில் பட்டு, செந்நீர்ப் புணரியில் பட்டு, பொங்கும்
சூழியின் பட்ட நெற்றிக் களிற்ருெடும், துரந்த தேரின்
ஆழியில் பட்ட அன்றே – அவனியில் பட்ட எல்லாம்.

பொ :—ஊழி இறுதியில் தோன்றிய காற்றினுல் உலகங்கள் யாவும் அழிந்தாற்போல, இப்பூமியில் பொருந்திய வானரங்கள் எல்லாம் (போர்க்களத்து அப்பொழுது எழுந்த) புழுதியில் அகப் பட்டும், சிவந்த இரத்தக் கடலில் அகப்பட்டும், ஒளிமிக்க முகபடாத் தோடு பட்டமுங்கட்டியுள்ள நெற்றியையுடைய யானைகளின்கீழும், கும்பகருணன் செலுத்திய தேரின் சக்கரங்களின்கீழும் அகப்பட்டும் அழிந்தன.

கு :—அன்று, ஏ அசைநிலை. கும்பகருணன் வில் முதலிய போர்க் கருவிகளைக்கொண்டு கொல்ல வேண்டாது வானரங்கள் தாமே அவன் சேனையால் எழுப்பப்பட்ட புழுதியிலும் போரில் இறந்தோர் உடம்பில் பெருகிய இரத்தக் கடலிலும், அவன் யானைப்படைகளின்கீழும் அவன் தேர்ச் சக்கரத்தின்கீழும் அகப்பட்டுப் பெரும்பாலும் மாண்டன என்றவாறு. சூழி - முகபடாம். சூழியோடு பட்டத்தையும் உடைய நெற்றி என்க. துரத்தல் - செலுத்துதல். கும்பகருணன் செலுத்திய தேர் என்க. அவனியிற்பட்ட எல்லாம் எனப் பொதுவகையாற் கூறியிருப்பினும் ஏற்புழிக்கோடல் என்னும் உத்தி பற்றி வானர சேனைகளையே கொள்க. ஊழிக்காற்றால் உலகங்கள் அழிந்தாற்போலக் கும்பகருணனால் வானரங்கள் எல்லாம் பட்டன என்க. (177)

52ல் இப்பாடலுக்குப் பின் பின்வரும் மிகைப்பாடல்கள் காணப் படுகின்றன.

7575 (a) பற்றினன் வசந்தன் தன்னைப்
பனைத்தடக் கைகளாலே
எற்றினன் இவனை மீள
விடவொண்ணு தென்று சொல்லிக்
கொற்றமு முடைய னென்னுக்
குழம்பெழப் பிசைந்து கொண்டு
நெற்றியிற் றிலதமாக விட்டனன்
நிகரில் லாதான். (41, 54)

7575 (b) அளப்பில்வெங் கரிகள் பூத
மாளிவெம் பரிகள் பூண்டாங்
கிழுப்ப வந்துடைய தேர்விட்
டிருநிலத் திழிந்து வெம்போர்
களப்படக் கவியின் சேனைக்
கடல்வறந் துலையக் கையால்
குளப்படு கென்று வெய்யோன்
குறித்துளம் கனன்று புக்கான்.

7575 (c) நிகரறு கவியின் சேனை
நிலைகெடச் சிலவர் தம்மைத்
துகளெழக் கயக்கி யூதும்
சிலவரைத் துகைக்கும் காலின்
தகர்படச் சிலவர் தம்மைத்
தாக்கிடும் தடக்கை தன்னால்
புகவிடும் சிலவர் தம்மை
விசும்பிடைப் போக வெய்யோன்.

7575 (d) வலிதினின் சிலவர் தம்மை
வன்கையால் பற்றிப் பற்றித்
தலையொடு தலையைத் தாக்கும்
சிலவரைத் தனது தாளால்
நிலமதில் புதைய வூன்றி
மிதித்திடும் சிலவர் நெஞ்சைக்
கொலைநகப் படையின் கீறிக்
குருதிவாய் மடுத்துக் கொள்ளும்.

7575 (e) கடும்பிணக் குவையி னூடே
சிலவரைப் புதைக்கும் கண்ணைப்
பிடுங்குறுஞ் சிலவர் தம்மைச்
சிலவரைப் பிடித்து வெய்தின்
கொடுங்கொலை மறலி ஊரில்
போய்விழக் குறித்து வீசும்
நெடும்பெரு வாலிற் பற்றிச்
சிலவரைச் சுழற்றி நீக்கும்.

7575 (f) பருதிமண் டலத்திற் போகச்
சிலவரைப் பற்றி வீசும்
குருதிவாய் பொழியக் குத்திச்
சிலவரைக் குமைக்கும் கூவித்
திரிதரத் தேவர் நாட்டில்
சேர்த்திடும் சிலவர் தம்மை
நெரிதரச் சிலவர் தம்மைக்
கொடுங்கையின் நெருக்குமன்றே.

**7576.** குன்றுகொண் டெறியும் பாரிற்
குதிக்கும்வெங் கூலம் பற்றி
யொன்றுகொண் டொன்றை யெற்று
முதைக்கும்விட் டுழக்கும் வாரித்
தின்றுதின் றுமிழும் பற்றிச்
சிரங்களைத் திருகுந் தேய்க்கும்
மென்றுமென் றிழிச்சும் விண்ணில்
வீசுமேற் பிசைந்து பூசும்.

குன்றுகொண்டு எறியும்; பாரில்
குதிக்கும்; வெங்கூலம் பற்றி
ஒன்று கொண்டு ஒன்றை எற்றும்;
உதைக்கும்; விட்டு உழக்கும்; வாரித்
தின்று தின்று உமிழும்; பற்றிச்
சிரங்களைத் திருகும்; தேய்க்கும்;
மென்று மென்று இழிச்சும்;
விண்ணில்வீசும்; மேல் பிசைந்து பூசும்.

பொ :—(வானரர் வீசிய) குன்றினைக் கையில் கொண்டு அவ் வானரர்மேல் எறிவான்; பின்பு தேரிலிருந்து பூமியில் குதிப்பான்; கொடிய வாலைப் பற்றிக்கொண்டு ஒரு குரங்கைக்கொண்டு மற்றொரு குரங்கைத் தாக்குவான்; சில குரங்குகளைக் காலால் உதைப்பான்; குரங்குக் கூட்டத்தில் காலை விட்டுத் துகைப்பான்; சிலவற்றை வாயில் போட்டுத் தின்று தின்று பின் கீழே உமிழ்வான்; சிலவற்றின் சிரங்களைக் கையில் பற்றித் திருகுவான்; திருகி எடுத்த தலைகளைத் தரையிலிட்டுத் தேய்ப்பான்; சிலவற்றை வாயிலிட்டு மென்று மென்று துப்புவான்; சிலவற்றை விண்மேல் வீசுவான்; சில குரங்கு களைக் கையால் பிசைந்து சந்தனக் குழம்புபோல உடம்பின்மேல் பூசிக்கொள்வான்.

கு :—கும்பகருணன் தன்மேல் வானரர் வீசியெறிந்த குன்று களையே மீண்டும் அவர்கள்மேல் விழுமாறு எறிவான் என்க. மேல் 'தேரினையோட்டி வந்தான்' (176) எனக் கூறினமையால் இங்கு அவன் பாரில் குதித்துப் போர் செய்ததைக் கூறுகின்றார். கூலம் - வால். வானரங்களோடு கும்பகருணன் செய்யும் போர் விளையாட் டாக இருத்தலின் குரங்குகளின் வால்களைப் பற்றிக்கொண்டு ஒன்றன்மேல் ஒன்றைத் தாக்கிக் கொன்றான் என்றவாறு. உழக் குதல் இங்குத் துகைத்தலை உணர்த்தியது. குரங்குகளின் உடம்பு களைத் தின்று உமிழ்ந்தவன், அவர்கள் தலைகளைப் பல்லால் மென்று மென்று துப்பினன் அவற்றின் சுவையை அறிந்து. இழிச்சுதல் - துப்புதல். (178)

**7577.** வாரியி னமுக்குங் கையான்
மண்ணிடைத் தேய்க்கும் வாரி
நீரிடைக் குவிக்கு மப்பா
னெருப்பிடை நிமிர வீசும்

தேரிடை யெற்று மெட்டுத்
திசையினுஞ் செல்லச் சிந்தும்
தூரிடை மரத்து மோது
மலைகளிற் புடைக்குஞ் சுற்றி.

வாரியின் அமுக்கும் கையால் மண்ணிடைத் தேய்க்கும்; வாரி நீரிடைக் குவிக்கும்; அப்பால் நெருப்பிடை நிமிர வீசும்; தேரிடை எற்றும்; எட்டுத்திசையினும் செல்லச் சிந்தும்; தூரிடை மரத்து மோதும்; மலைகளில் புடைக்கும், சுற்றி.

பொ :—சிலவற்றைக் கடல்நீரில் அமிழ்த்துவான்; சிலவற்றை மண்மேல் வைத்துக் கையால் தேய்ப்பான்; சிலவற்றைக் கையால் வாரிக் கடல்நீரில் இட்டுக் குவிப்பான்; பின்னர் சிலவற்றைத் தன் தேர்மேல் மோதுவான்; சிலவற்றை எட்டுத் திசைகளிலும் செல்லு மாறு சிந்துவான்; மரத்தின் அடிப்பகுதியில் சிலவற்றை மோது வான்; சிலவற்றைச் சுழற்றி மலைகளில் அடிப்பான்.

கு :—வாரி - கடல். வாரி - கையால் வாரி. வாரிக் குவிக்கும் என இயையும். நெருப்பில் உடம்பு வீழின் அந்த நெருப்பு முன்னை யினும் நிமிர்ந்து எரியும் ஆதலின், நிமிர வீசும் என்றார். நெருப்பிடை வீசும் நிமிர வீசும் என இயையும். மரத்துத் தூரிடை மோதும் என மாறுக. தூர் - மரத்தின் அடிப்பகுதி. சுற்றி மலைகளில் புடைக்கும் என்க. புடைத்தல் - அடித்தல். சுற்றுதல் - சுழற்றுதல். (179)

52ல் 174–1 ஆகக் கீழ்வரும் மிகைப்பாடல் காணப்படுகின்றது.

7577 (a) ஆயிர கோடி மேலும்
அடல்குரங் கதனை வாரி
வாயிடைப் பெய்து மூட
வயிற்றிடைப் புகுந்து வல்லே
கூயுளம் திகைத்துப் பின்னும்
கொடியவன் செவியி னூடே
போவது வெளியில் மீண்டும்
புற்றிடைப் பறவை யென்றே.

அப்பொழுது போர்க்களத் தன்மை

**7578.** பறந்தன ரமர ரஞ்சிப்
பல்பெரும் பிணத்தின் பம்மல்
நிறைந்தன பறவை யெல்லா
நெடுந்திசை நான்கு நான்கும்

மறைந்தன பெருமை தீர்ந்த
மலைக்குலம் வற்றி வற்றிக்
குறைந்தன குரக்கு வெள்ளங்
கொன்றனன் கூற்றுங் கூச.

பறந்தனர் அமரர் அஞ்சி;
பல்பெரும் பிணத்தின் பம்மல்
நிறைந்தன பறவை எல்லாம்;
நெடுந்திசை நான்கும் நான்கும்
மறைந்தன; பெருமை தீர்ந்த,
மலைக்குலம்; வற்றி வற்றிக்
குறைந்தன, குரக்கு வெள்ளம்;
கொன்றனன், கூற்றும் கூச.

பொ :—(கும்பகருணன் செய்யும் அழிவைக் கண்டு) தேவர்கள் அஞ்சி ஓடினர்; பல பெரிய பிணத்தின் குவியலில் பறவைகள் எல்லாம் நிறைந்தன; நெடிதாகிய திசைகள் எட்டும் புலப்படாமல் மறைந்தன; (பிணமலைகளின் உயர்ச்சியால்) மலைகள் தம் பெருமை இழந்தன; குரங்குச் சேனையாகிய வெள்ளம் வற்றி வற்றிக் குறைந்து போயின; (இவ்வாறுகுமாறு) கும்பகருணன், எமனும் நாணுமாறு மிகுதியாகக் கொன்றான்.

கு :—பறத்தல் விரைந்து ஓடுதலை உணர்த்தியது. பம்மல் - செறிவு; இங்குப் பிணச் செறிவாகிய குவியலை உணர்த்தியது. பிணங்களின் நிணம் உண்பதற்காகக் கழுகு பருந்து முதலிய பறவைகள் பிணக் குவியல்களில் வந்து நிறைந்தன. பிணக் குவியலின் மிகுதியால் திசைகள் தெரிந்தில என்பார், 'நெடுந்திசை நான்கும் நான்கும் மறைந்தன' என்றார். மலைகளின் உயர்ச்சியினும் பிணக் குவியல்களின் உயர்ச்சி மிக்கது ஆகலின், 'மலைக்குலம் பெருமை தீர்ந்த' என்றார். குரங்குச் சேனையை வெள்ளமாகக் கூறியதற்கேற்ப அது குறைந்தமையை வற்றியதாகக் கூறினர். கும்பகருணன் கொன்று குவித்தமையால் குரங்குச் சேனை மிகவும் குறைந்தது என்றவாறு. கும்பகருணன் கொன்ற குரங்குகளின் உயிர்களை விரைந்து பற்ற முடியாமையால் கூற்றும் கூசியது என்க. உயிர்களைக் கவர்தலையே தொழிலாகக் கொண்ட எமனும் நாணுமாறு கும்பகருணன் கொன்றான் என்ற கருத்தைத் தோற்றுவித்தலின் கூற்றும் என்புழி உம்மை உயர்வு சிறப்பு. கூசுதல் - நாணுதல். (180)

23, 43, 67, 71 என்ற எண்ணுள்ள ஏடுகளில் பின்வரும் மிகைப் பாடல்கள் காணப்படுகின்றன.

**7578 (a)** அவ்வழி யரியின் சேனை
அதர்பட வசந்த னென்பான்
றவ்வழி வீர னாலு
வெள்ளத்தின் தலைவ னென்றான்
எவ்வழி பெயர்ந்து போவ
தெங்கென விருகுன் றேந்தி
வெவ்வழி யிசையக் கும்ப
கருணன்மேற் செல்ல விட்டான்.

**7578 (b)** விசைந்திடு குன்ற நின்ற
விண்ணவ ரிரியல் செல்ல
விசைந்திடு தோளி னேற்றான்
இற்றுநீ ருகிப் போக
வசந்தனைச் சென்று பற்றி
வாசங்கொண் டுவந்து கையால்
பிசைந்து சிந்தூர மாகப்
பெருநுதற் கணிந்து கொண்டான்.

## கும்பகருணனிடத்து வானரர் ஒன்றும் செய்ய இயலாமை 7579-7581

**7579.** மற்றினி யொருவன் மேலோர்
மரனெடும் கற்கள் வீசப்
பெற்றில மாது மன்றே
யின்றெடும் பெறுவ தாமேல்
அற்றன தீங்கு மென்ன
வரிக்குலத் தலைவர் பற்றி
எற்றின எறிந்த வெல்லா
மிணைநெடுந் தோளி னேற்றான்.

'மற்று இனி ஒருவன்மேல்
ஓர்மரனெடும் கற்கள் வீசப்
பெற்றிலம் ஆதும் அன்றே;
இன்றெடும் பெறுவது ஆமேல்
அற்றன தீங்கும்' என்ன
அரிக்குலத் தலைவர் பற்றி,
எற்றின எறிந்த, எல்லாம்
இணை நெடுந்தோளில் ஏற்றான்.

பொ :—(நம்மை வதைக்கின்ற இந்தக் கும்பகருணனாகிய) ஒருவன்மேல் ஒரு மரத்தையும் மலைகளையுமேனும் இதுகாறும் வீசப் பெருதவர்களாக இருக்கின்றேம் அன்றே? இனி, அந்த வாய்ப்பு நம்மால் பெறப்படுமானல், இன்றேடு தீங்கும் அற்றன' என்று சொல்லிக்கொண்டு வானரகுலத் தலைவர்கள் கையில் பற்றித் தாக்கின மரங்களும் வீசிய மலைகளும் ஆகிய எல்லாவற்றையும் (கும்பகருணன் தன்) நீண்ட இரு தோள்களிலும் ஏற்றுக் கொண்டான்.

கு :—கும்பகருணனால் அழிவது உறுதியென்ற எண்ணத்தால் வானரத் தலைவர்கள் இவ்வாறு சொல்லி மர முதலியவற்றைக் கொண்டு மோதலாயினர். பெருவலி பெற்ற கும்பகருணன் வானரங்களை அழிப்பது நிகழ்கின்றதே அன்றி அக் கும்பகருணன்மேல் ஒரு மரத்தையோ மலையையோ இதுகாறும் வானரங்கள் வீசும் வாய்ப்புக் கிட்டவில்லை. தம்மை யெதிர்க்கும் கும்பகருணனுக்குச் சிதைவு சிறிதேனும் உண்டாக்காமலே வானரங்கள் அவனால் இறந்துபடுமாயின், வீரமில்லாத வானரங்கள் என்று உலகம் பழிக்கும் தீங்கு நீங்காததாகிவிடும். எனவே அத்தீங்கு அறுமாறு கும்பகருணன்மேல் ஒரு மரத்தையோ மலையையோ வீச வேண்டும் என்று முடிவு செய்து மரங்களையும் மலைகளையும் பிடுங்கி வானரத் தலைவர் கும்பகருணன்மேல் வீசினர்; அவர் வீசியவற்றைக் கும்பகருணன் தன் இரு பெருந் தோள்களில் எளிதாக ஏற்றுக் கொண்டான் என்றவாறு. இதனால் கும்பகருணனுடைய பேராற்றலைப் புலப்படுத்தியவாறு. தாம் எற்றுகின்ற மரமும் எறிகின்ற மலையும் கும்பகருணனைச் சிறிதும் வருத்தாது என்பது உண்மையாயினும், வானரங்களும் தம்மாலியன்ற அளவு அவனைத் தாக்கின என்ற புகழையேனும் பெறலாமே என்ற கருத்தால் 'இன்றொடும் அற்றன தீங்கும்' என்று வானரத் தலைவர் கருதுவாராயினர். "யானை பிழைத்த வேல் ஏந்தல் இனிது" (குறள் - 772) என்பதற்கேற்பப் பெருவீரனாகிய கும்பகருணனை வருத்தினேம் என்ற புகழ்தானும் பெறுவிடில் வீரமற்றவர் வானரர் என்று உலகம்பழிக்கும் தீங்கினைச் செய்தவர்களாவோம் என்ற கருத்தினராதலின் 'இனிப் பெறுவதாமேல் அற்றன தீங்கும்' என்று கருதுவாராயினர். இனிப் பெறுவதாமேல் எனவும் இன்றொடும் தீங்கும் அற்றன எனவும் இயையும். கும்பகருணனால் தம்முடம்பு அழிவது திண்ணம் என்பதை அறிந்தவராகலின், அவ்வுடம்பொடு 'தீங்கும் அற்றன' என இறந்தது தழுவிய எச்சவும்மை கொடுத்துக் கூறினர். எற்றின எறிந்த என்பன வினையாலணையும் பெயர்களாய் எற்றின மரங்களையும் எறிந்த மலைகளையும் உணர்த்தின. (181)

7580. கல்லொடு மரனும் வேருங்
கட்டையுங் காலிற் றீண்டும்
புல்லொடு பிறவு மென்னப்
பொடிப்பொடி யாகிப் போன
இல்லைமற் றெறியத் தக்க
வெற்றுவ சுற்று மென்னப்
பல்லொடு பல்லு மென்று
பட்டன குரங்கு முட்டி.

கல்லொடு மரனும், வேரும், கட்டையும், காலில் தீண்டும் புல்லொடு பிறவும் என்ன, பொடிப்பொடி ஆகிப் போன, 'இல்லை, மற்று எறியத் தக்க, எற்றுவ, சுற்றும் என்ன, பல்லொடு பல்லுமென்று பட்டன குரங்கு முட்டி.

பொ :—(கும்பகருணன்மேல் நாம் வீசிய) மலைகளும் மரங்களும் வேர்களும் கட்டைகளும், காலில் மிதிக்கப்பெற்ற உலர்ந்த புல்லினையும் பிற எளிய பொருள்களையும் போல, பொடிப் பொடியாகி உதிர்ந்து அழிந்துபோயின; 'இனி அவன்மேல் எறியத்தக்க மலைகளும் தாக்கத்தக்க மரங்களும் நம்மைச் சுற்றியுள்ள எவ்விடத்தும் இல்லை' என்று கூறிக்கொண்டு (வேறு ஒன்றும் செய்ய இயலாமை நினைந்து) பல்லொடு பல்லைச் சேர்த்துக் கடித்துக்கொண்டு குரங்குகள் கும்பகருணனுடம்பை நேரே முட்டித்தாக்கி இறந்துபட்டன.

கு :—காலில் மிதித்த உலர்ந்த புல் முதலியன பொடிப் பொடியாகச் சிதறிப் போதல் போலக் கும்பகருணன்மேல் வீசிய மலையும் மரமும் பொடிப் பொடியாகிச் சிதறுண்டு போவதைக் கண்ட வானரங்கள், பின்னும் அவன்மேல் எறிதற்குரிய மலையோ மரமோ சுற்றிலும் இல்லாமை கண்டு, சினத்தால் பல்லைக் கடித்துக்கொண்டு கும்பகருணனை நேரே முட்டித் தாக்கி இறந்துபடுவனவாயின என்றவாறு. வேரும் கட்டையும் மரத்தின் பகுதிகளாயடங்கும். கும்பகருணனுடைய உடம்பின் வன்மையால் வானரங்கள் வீசிய மலையும் மரமும் பொடிப் பொடியாயின எனவும், பின்பு எறிதற்கு ஏதும் இல்லாமையால் குரங்குகள் தம்முடம்பு கொண்டே முட்டி அம் மலையும் மரமும் போலவே அழியலாயின எனவும் கொள்க. எறிதற்கு ஏதும் இல்லாமை கொண்டு புறங்காட்டி ஓடுதலாகிய இழிசெயலைச் செய்வதினும் கும்பகருணனைத் தாக்கி இறந்தோம் என்ற புகழொடு மாய்தல் நன்றென்று கருதி அங்ஙனம் செய்யலாயின. மற்று, பிறிது என்னும் பொருளது. எறியத்தக்க வெற்றுவ சுற்றுமில்லை என்ன என இயையும். (182)

**7581.** குன்றின்வீழ் குரீஇக் குழாத்திற்
குழாங்கொளக் குதித்துக் கூடிச்
சென்றுமே லெழுந்து பற்றிக்
கைத்தலந் தேயக் குத்தி
வன்றிற லெயிற்றாற் கவ்வி
வள்ளுகிர் மடியக் கீளா
ஒன்றுமா கின்ற தில்லை
யென்றிழிந் தோடிப் போன.

குன்றின் வீழ் குரீஇக் குழாத்தின்
குழாம் கொளக் குதித்துக் கூடி,
சென்று மேல் எழுந்து பற்றி,
கைத்தலம் தேயக்குத்தி,
வன்திறல் எயிற்றால் கவ்வி.
வள் உகிர் மடியக் கீளா,
ஒன்றும் ஆகின்றது இல்லை
என்று இழிந்து ஓடிப் போன.

பொ :—(சில வானரங்கள்) குன்றின் மேல் வீழ்கின்ற குருவிக் கூட்டத்தைப் போலத் துள்ளிக் குதித்துக் கூட்டமாகக் கூடிக் கொண்டு (கும்பகருணனது அருகில்) சென்று அவன்மேல் ஏறிப் பற்றிக்கொண்டு தம் கைகள் தேயுமாறு அவனைக் குத்தியும் மிக்க வலிமையுடைய பல்லால் கவ்விக் கடித்தும், கூரிய நகம் மடியுமாறு அவன் உடம்பைக் கிழித்தும் (முடிவில் நம்மால்) ஒன்றும் செய்ய முடியாது என்று கூறிக்கொண்டு அவனுடம்பிலிருந்து இறங்கி ஓடிப் போயின.

கு :—குன்று போன்றவன் கும்பகருணன்; குருவிக் கூட்டம் போன்றவர்கள் வானரங்கள். குருவிக் கூட்டம் பறந்து சென்று குன்றில் முட்டிக் கொண்டு வருந்தி மீளுதல் உண்டு. ' அப் பாயிரந் தான் தலையமைந்த யானைக்கு வினையமைந்த பாகன் போலவும் அளப் பரிய ஆகாயத்திற்கு விளக்கமாகிய திங்களும் ஞாயிறும் போலவும் நூற்கு இன்றியமையாச் சிறப்பிற்றாயிருத்தலின், அது கேளாக்காற் குன்று முட்டிய குரீஇப் போலவும் குறிச்சிபுக்க மான் போலவும் மாணாக்கன் இடர்ப்படுமென்க'' (தொல் – எழுத்து. சிறப்புப்பாயிரம்) என்று நச்சினார்க்கினியர் கூறியிருத்தல் இங்கு நினையத் தகும். குரங்குகள் கூட்டங் கூடும்போது குதித்துக் கொண்டு வரும் இயல்பு நினைந்து 'குதித்துக் கூடி' என்றார். மேலெழுந்து பற்றுதலாவது,

கும்பகருணனது குன்றுபோன்ற உடம்பின் மீது ஏறிப் பிடித்துக்கொள்வது, குரங்குகள் கையால் கும்பகருணனைக் குத்தும்போது குரங்குகளின் கை தேய்ந்ததே அன்றிக் கும்பகருணனைச் சிறிதும் வருத்தவில்லை என்பது புலப்பட, 'கைத்தலந் தேயக் குத்தி' என்றார். எயிறு தேயக்கவ்வி என அச்சொல்லைப் பின்னும் வருவிக்க. அவன் உடம்பில் குரங்குகள் நகத்தால் கிழித்தபோது நகம் மடிந்ததே யன்றி அவன் மேனி கிழிபடவில்லை என்க. குரங்குகள் கும்பகருணனைக் குத்தியும் கவ்வியும் கிழித்தும் பார்த்து அவனுடம்பில் சிறு பின்னமும் ஆகாமை கண்டு 'ஒன்றுமாகின்றதில்லை' என்று சொல்லிக் கொண்டு இறங்கி அஞ்சி ஓடிப் போயின என்றவாறு. குருவிக் கூட்டம் குன்றில் முட்டிக் கொண்டால் குருவிகள் வருந்துவதன்றிக் குன்றிற்கு வருத்தம் செய்ய இயலாது; அதுபோலக் கும்பகருணனைத் தாக்கிய குரங்குகள் வருந்தினவேயன்றிக் கும்பகருணனை வருத்த இயலவில்லை என்பதும் உவமையால் பெற வைத்தவாறு. (183)

## நீலன் பொருதல் 7582–7585

**7582.** மூலமே மண்ணின் மூழ்கிக்
கிடந்ததோர் பொருப்பை முற்றுங்
காலமே லெழுந்த கால்போற்
கையினுற் கடிதின் வாங்கி
நீலன்மே னிமிர்ந்த தாங்கோர்
நெருப்பெனத் திரித்து விட்டான்
சூலமே கொண்டு நூறி
முறுவலும் தோன்ற நின்றான்.

மூலமே மண்ணில் மூழ்கிக்
கிடந்தது ஓர் பொருப்பை, முற்றும்
காலம் மேல் எழுந்த கால்போல்,
கையினுல் கடிதின் வாங்கி,
நீலன், மேல் நிமிர்ந்தது ஆங்கு
ஓர் நெருப்பு எனத் திரிந்து விட்டான்;
சூலமே கொண்டு நூறி,
முறுவலும் தோன்ற நின்றான்.

பொ :—அப்போது நீலன் என்னும் வானரத் தலைவன், அடிப்பகுதி முழுமையும் மண்ணில் மறைந்து கிடந்ததாகிய ஒரு மலையை,

ஊழி இறுதியில் மேலெழுந்து வீசும் காற்றுப் போலக் கையினுல் விரைந்துபறித்து, மேலே நிமிர்ந்து எழும் நெருப்புப் போலச்சினந்து அம்மலையைச் சுழற்றிக் கும்பகருணன் மேல் விட்டான்; அம்மலையைக் கும்பகருணன் தன் சூலத்தால் பொடியாக்கிவிட்டு (எள்ளுங்குறிப்பால்) புன்சிரிப்பும் தோன்ற நின்ருன்.

கு :—மூலம் என்றது மலையின் அடிப்பகுதியை. முற்றும் காலம் என்றது எல்லாம் அழியும் காலமாகிய ஊழியிறுதியை. நீலன் மலையைப் பறிக்கும் விரைவிற்கு ஊழிக்காற்று உவமை; அவன் சினத்திற்கு நெருப்பு உவமை. திரித்தல் - சுழற்றுதல். நூறுதல் - பொடியாக்குதல். நீலன் எறிந்த மலையைப் பொடியாக்கிய எளிமை புலப்பட முறுவலும் செய்தான் கும்பகருணன் என்க. மலையைத் துகளாக்கியதே யன்றி என்று பொருள்படுதலின் முறுவலும் என்புழி உம்மை இறந்தது தழுவிய எச்சப் பொருளது. மலையை நெருப்பு என எண்ணுமாறு திரித்துவிட்டான் என்று பொருள் கூறலுமாம்.

(184)

**7583.** பெயர்ந்தொரு சிகரந் தேடி
னச்சமாம் பிறர்க்கு மென்னுப்
புயங்களே படைக ளாகத்
தேரெதி ரோடிப் புக்கா
னியங்களுங் கடலு மேகத்
திடிகளு மொழிய யாரும்
பயங்கொளக் கரங்க ளோச்சிக்
குத்தினு னுதைத்தான் பல்கால்.

'பெயர்ந்து ஒரு சிகரம் தேடின்,
அச்சம் ஆம் பிறர்க்கும்' என்னுப்
புயங்களே படைகள் ஆகத்
தேர் எதிர் ஓடிப் புக்கான்,
இயங்களும் கடலும் மேகத்து
இடிகளும் ஒழிய, யாரும்
பயம் கொளக் கரங்கள் ஓச்சிக்
குத்தினுன், உதைத்தான் பல்கால்.

பொ :—'மீண்டும் ஒரு மலையைத் தேடித் திரிந்தால் மற்ற அவனுக்கு அஞ்சித் திரிந்ததாகப் பிறர்க்குந் தோன்றும்,' என்று கருதித் தன் தோள்களே படைகளாகக் கருதிக் கும்பகருணன் தேரின்

எதிரே ஓடி அத்தேருள் புகுந்து முரச முதலிய வாச்சியங்களும், கடலும், மேகத்தில் தோன்றும் இடிகளும் பின்னிடவும் யாரும் அச்சம் கொள்ளவும், தன் கைகளை உயர்த்தி அத்தேரிலிருந்த கும்ப கருணனைப் பலமுறை குத்தினன்; பலமுறை காலால் உதைத்தான்.

கு :—நீலன் வேறு ஒரு மலையைத் தேடித் திரியின் கும்பகருண னுக்கு அஞ்சிச் சென்றதாகப் பிறர்க்குத் தோன்றும் என்று கருதி அது செய்யாது, தன் புயங்களையே கருவியாகக் கொண்டு கும்ப கருணனைத் தாக்கினன் என்க. சிகரம் ஆகுபெயராய் மலையை உணர்த்தியது. புக்கான் முற்றெச்சம். புக்குக் கரங்களோச்சிக் குத்தி னன் என இயையும். நீலன் கும்பகருணனைக் குத்திய ஒலி, முர சொலியையும் கடலொலியையும் இடி யொலியையும் அடக்கி உயர்ந் தது என்பார், இயங்களும் கடலும் மேகத்திடிகளும் ஒழியக் குத்தினன் என்றார். ஒழிதல் இங்குப் பின்னிடுதலை உணர்த்தியது, பல்கால் குத்தினன், பல்கால் உதைத்தான் என முன்னும் இயையும். பெரு வலியுடைய கும்பகருணனும் பயங்கொள என்பார் 'யாரும் பயங் கொள' என்றார். (185)

**7584.** கைத்தலஞ் சலித்துக் காலுங்
குலைந்துதன் கருத்து முற்றான்
நெய்த்தலை யழலிற் காந்தி
யெரிகின்ற நீலன் றன்னை
யெய்த்துயிர் பதைத்து வீழ
வெற்றினா னிடது கையால்
முத்தலைச் சூல மோச்சான்
வெறுங்கையா னென்ன வெள்கி.

கைத்தலம் சலித்து, காலும்
குலைந்து, தன் கருத்து முற்றான்,
நெய்த்தலை அழலின் காந்தி
எரிகின்ற நீலன் தன்னை,
எய்த்து உயிர் பதைத்து வீழ,
எற்றினன் இடது கையால்;
முத்தலைச் சூலம் ஓச்சான்,
வெறுங்கையான் என்ன வெள்கி.

பொ :—கைகள் சலிக்கக் கால்களும் வலிவிழக்க, தன் கருத்து நிறைவேறப் பெறானாய் நெய்யைத் தலையிலே பெய்யப் பெற்ற

நெருப்புப் போலச் சினத்தால் காந்துகின்ற நீலனை(க் கும்பகருணன்) ஆயுதமில்லாது வெறுங்கையனாக இருக்கின்றானே என்று நாணி, மூன்று தலைகளையுடைய சூலப்படையை எறியாமல் அவன் இளைத்து உயிர் பதைத்து வீழுமாறு இடது கையால் தட்டினான்.

கு:—நீலன், கையும் காலும் சலித்தாலும் மனம் சலியாமல் சினங்கொண்டு வருவதைக் கண்ட கும்பகருணன், இவன் படை தாங்காது வெறுங்கையனாக இருக்கின்றானே என்று நினைந்து, தன் சூலத்தை ஏவாமல் எளிமை புலப்படுத்த இடது கையால் அறைந்தான் என்க. சலித்து, குலைந்து என்பன செயவெனெச்சத்திரிபுகள். 'மழை பெய்து நெல் விளைந்தது' என்புழிப் போல. கும்பகருணனை வருத்த வேண்டும் என்ற நீலன் கருத்து நிறைவேறாமையால் மீண்டும் சினந்தான். நீலன் தனக்கு ஒப்பான வீரனல்லன் என்ற இகழ்ச்சிக் குறிப்புத் தோன்றக் கும்பகருணன் அவனை இடது கையால் எற்றினான். படையேதுமிலாதவன் மேல் படை தொடுத்தல் வீரமரபு அன்மை நினைந்து என்பார், 'வெறுங் கையான் என்ன வெள்கி' என்றார். நீலன் தன்னை வெறுங்கையான் என்னவெள்கி சூலம் ஓச்சானாய் இடது கையால் வீழ எற்றினான் என இயையும். ஓச்சான் முற்றெச்சம். (186)

52 ல் பின்வரும் மிகைப்பாடல் காணப்படுகின்றது (181–1)

186 (a) நீலனை யரக்கன் தேரால்
நெடுநிலத் திழியத் தள்ளிச்
சூலமங் கொருகை சுற்றித்
தொடர்ந்திடும் பகைஞ ராவி
காலனூர் தன்னி லேற்றிக்
கடிதிலென் தமையன் நெஞ்சில்
கோலிய துயருந் தீர்ப்பேன்
எனக் கொதித் தமரி னேற்றான்.

## அங்கதன் போர் 7585-7588

**7585.** ஆண்டது நோக்கி நின்ற
வங்கத னுண்டுச் சால
நீண்டதோர் நெடுந்திண் குன்ற
நிலமுது காற்ற வாங்கி

மாண்டன னரக்கன் றம்பி
யென்றுல கேழும் வாழ்த்தத்
தூண்டின னதனை யன்னு
னொருதனித் தோளி னேற்ருன்.

ஆண்டு, அது நோக்கி நின்ற
அங்கதன், ஆண்டுச் சால
நீண்டது ஓர் நெடுந்திண்குன்றம்
நில முதுகு ஆற்ற வாங்கி,
'மாண்டனன் அரக்கன் தம்பி'
என்று உலகு ஏழும் வாழ்த்தத்
தூண்டினன்; அதனை அன்னுன்
ஒருதனித் தோளின் ஏற்ருன்.

பொ :—அவ்விடத்துக் கும்பகருணன் நீலனை அடித்ததைப் பார்த்து, (அங்கு) நின்றுகொண்டிருந்த அங்கதன் அவ்விடத்து மிகவும் வளர்ந்திருந்த ஒரு நெடிய திண்ணிய மலையை நிலமகளின் முதுகு இளைப்பாறுமாறு 'பறித்து இராவணன் தம்பி மாண்டான்' என்று ஏழுலகத்தவரும் வாழ்த்தாநிற்க வீசினுன்; அம்மலையை அந்தக் கும்பகருணன் தன் ஒப்பற்ற ஒருதோளில் ஏற்றுக் கொண்டான்.

கு :—நில முதுகாற்ற வாங்கி என்றமையால், அது பூமியில் இருந்தபோது பூமியால் சுமக்க இயலாத பெரும் பாரமாய் இருந்தது என அதன் பெருமையைப் புலப்படுத்தியவாறு. நில முதுகாற்ற லாவது நிலமகள் இதுகாறும் சுமந்திருந்த சுமை நீங்கப்பெற்று முதுகு இளைப்பாறியிருத்தல். அம்மலையின் பெருமையைக் கண்ட ஏழுலகத்தவரும் கும்பகருணன் இம்மலையால் மாண்டு விடுவான் என்றே நம்பினுர்கள்; ஆனுல் கும்பகருணனே அம்மலையை மிக எளிமையாகத் தன் ஒரு தோளில் ஏற்றுக் கொண்டான். (187)

7586. ஏற்றபோ தனைய குன்ற
மெண்ணருந் துகள தாகி
வீற்றுவீற் ருகி யோடி
விழுதலுங் கவியின் வெள்ள

மூற்றமே தெமக்கென் றெண்ணி
யுடைந்தது குமர னுற்ற
சீற்றமுந் தானு நின்றான்
பெயர்ந்திலன் சிறிதும் பாதம்.

ஏற்றபோது அனைய குன்றம்
எண்ணருந் துகளது ஆகி,
வீற்று வீற்று ஆகி, ஓடி
விழுதலும், கவியின் வெள்ளம்,
'ஊற்றம் ஏது, எமக்கு!' என்று
எண்ணி, உடைந்தது; குமரன்உற்ற
சீற்றமும் தானும் நின்றான்;
பெயர்த்திலன் சிறிதும் பாதம்.

பொ:—(அவ்வாறு கும்பகருணன் தன் தோளில்) ஏற்றபோது அந்தக் குன்றம், எண்ணமுடியாத பல துகள்களாகிச் சின்னபின்னமாகி ஓடி விழுந்த அளவில், குரங்குச் சேனையாகிய வெள்ளம் எமக்கு (இவனை வெல்ல) வலிமை ஏது' என்று எண்ணித் தோற்றோடியது; அங்கதனாகிய குமரன் சிறிதும் பாதத்தைப் பெயர்க்காமல் பொருந்திய கோபமும் தானுமாய் நின்றான்.

கு:—கும்பகருணனது தோளின் வலிமையால் அக்குன்றம் துகள் துகளாய்ச் சின்னபின்னப்பட்டுப் பறந்தோடியது என்க. வீற்றுவீற்றுதல் உருத்தெரியாமல் பலதுண்டங்களாதல். ஊற்றம் - வலிமை. உடைதல்-தோற்றல். குமரன் என்றது அங்கத குமாரனை. சீற்றத்தின் மிகுதி தோன்ற அதைப் பண்பி போலக் கருதிச் சீற்றமும் தானும் நின்றான் எனப் பிரித்துக்கூறியவாறு. 'தனியும் தானும் அத்தையலுமாயினன்' (பால - 702) எனத் தனிமையாகிய பண்பை வேறு பிரித்துக் கூறியுள்ளமை நினைக. இலக்குவன் இராவணனுக்கு முன் அடி பெயராமல் நின்றதைக் கூறும்போதும் "சீற்றமுந் தானும் நின்றான் பெயர்ந்திலன் சிறிதும் பாதம்" (முதற்போர் - 156) என இவ்வடியே வந்துளது காணலாம். (188)

7587. இடக்கையா லரக்க னுங்கோர்
ரெழுமுனை வயிரத் தண்டு
தடுக்கலாந் தரத்த தல்லா
வலியது தருக்கின் வாங்கி

மடக்குவா யுயிரை யென்னு
வீசின னதனை மைந்தன்
தடக்கையாற் பிடித்துக் கொண்டான்
வானவர் தன்னை வாழ்த்த.

இடக்கையால் அரக்கன் ஆங்கு
ஓர் எழுமுனை வயிரத் தண்டு
தடுக்கலாம் தரத்தது அல்லா
வலியது, தடுக்கின் வாங்கி
'மடக்குவாய் உயிரை' என்னு,
வீசினன்; அதனை மைந்தன்
தடக்கையால் பிடித்துக் கொண்டான்,
வானவர் தன்னை வாழ்த்த.

பொ:—அப்போது கும்பகருணன் யாரும் தடுக்கும் தன்மையது அல்லா வலிமையுடையதாகிய ஏழு முனைகளையுடைய வயிரத்தாலாகிய ஒரு தண்டாயுதத்தைச் செருக்கோடு இடது கையால் எடுத்து 'இவன் உயிரை ஒழிப்பாயாக' என்று சொல்லி வீசினன்; அந்தத் தண்டாயுதத்தை அங்கதன் தன்னைத் தேவர்கள் வாழ்த்தும்படி பெரிய கையால் பிடித்துக் கொண்டான்.

கு:—அரக்கன் என்றது கும்பகருணனை. அரக்கன் வலியதாகிய வயிரத் தண்டினை இடக்கையால் தருக்கின் வாங்கி வீசினன் என இயையும். ஆங்கு - அப்போது. வலது கையால் தண்டினை எடுக்காமல் இடது கையால் எடுத்து வீசியது கும்பகருணனுடைய தருக்கினைப் புலப்படுத்தலின் 'தருக்கின் வாங்கி' என்ருர். உயிரை மடக்குதல் என்பது உயிரை ஒழித்தலை உணர்த்தியது. வாழ்த்த என்பதற்கு வாழ்த்தா நிற்க எனப் பொருள் கூறலும் ஆம். கும்பகருணன் வீசிய தண்டினல் தீங்குருது வாழ்க எனத் தேவர்கள் அங்கதனை வாழ்த்தினர்கள்; அவன் இராமனுக்குத் துணைசெய்பவன் என்பது கருதி. (189)

**7588.** பிடித்தது சுழற்றி மற்றப்
பெருவலி யரக்கன் றன்னை
யிடித்துரு மேறு குன்றத்
தெரிமடுத் தியங்கு மாபோ

லடித்துயிர் குடிப்பெ னென்னு
வனல்விழித் தார்த்து மண்டிக்
கொடித்தடந் தேரின் முன்னர்க்
குதித்தெதிர் குறுகி நின்ருன்.

பிடித்த அது சுழற்றி, 'மற்று
அப்பெருவலி அரக்கன் தன்னை,
இடித்து, உரும் ஏறு, குன்றத்து
எரிமடுத்து, இயங்குமாபோல்,
'அடித்து, உயிர்குடிப்பென்' என்னு,
அனல் விழித்து, ஆர்த்து, மண்டி,
கொடித்தடந் தேரின் முன்னர்க்
குதித்து, எதிர் குறுகி, நின்ருன்.

பொ :—அவ்வாறு பிடித்து, அத்தண்டினைச் சுழற்றிக் கொண்டு 'அந்தப் பெரிய வலிமையையுடைய அரக்கனுகிய கும்பகருணனை (இதனுல்) அடித்து அவனுயிரைப் போக்குவேன்' என்று கூறிக் கொண்டு, நெருப்புப் பொறி சிந்தக் கண்களை அகல விரித்து விழித்து ஆரவாரித்துக் கொண்டு, நெருங்கி, இடியேறு ஒன்று இடித்துக் கொண்டு மலையில் எரியைப் பரப்பிக் கொண்டு இயங்குவதைப் போலக் கும்பகருணனுடைய கொடி கட்டிய பெரிய தேரின் முன் குதித்து அவன் எதிரே நெருங்கி நின்ருன்.

கு :—பிடித்து என்று அனுவாதமாகக் கூறியவாறு. அங்கதன் இடியேறு போன்றவன்; அவன் ஆர்த்தது இடித்ததைப் போன்றது; அவன் அனல் விழித்துச் சென்றது இடி எரிமடுத்து இயங்குவதைப் போன்றது; கும்பகருணன் தேர் குன்றத்தை ஒத்தது என உவமையை விரித்துக் கொள்க. அது சுழற்றிக் கொண்டு தேரின் முன்னர்க் குதித்து எதிர் குறுகி நின்ருன் என்க. குறுகுதல் - நெருங்குதல். (190)

கும்பகருணன் – அங்கதன் உரையாடல்

**7589.** நின்றவன் றன்னை யன்னு
னெருப்பெழ நிமிர நோக்கிப்
பொன்றவந் தடைந்த தானைப்
புரவல னுருவன் ருனே

அன்றவன் மகனே வெம்மூ
ரனன்மடுத் தரக்கர் தம்மை
வென்றவன் ருனே யாரோ
விளம்புதி விரைவி னென்ருன்.

நின்றவன் தன்னை அன்னுன்
நெருப்பு எழ நிமிர நோக்கி,
'பொன்ற வந்து அடைந்த தானைப்
புரவலன் ஒருவன் தானே ?
அன்று அவன் மகனே ? எம் ஊர்
அனல் மடுத்து அரக்கர் தம்மை
வென்றவன் தானே ? யாரோ ?
விளம்புதி, விரைவின்' என்ருன்.

பொ :—(தன் எதிரே நெருங்கி வந்து) நின்ற அங்கதனைக் கும்ப கருணன் கண்ணில் நெருப்புப் பொறி எழுமாறு தலைதூக்கிப் பார்த்து, நீ, இறப்பதற்காகவே இங்கு வந்து சேர்ந்த வானர சேனைக்குத் தலைவனுகிய சுக்கிரீவன்ருனே? அல்லது, அவனுக்கு மகன் முறையினனுகிய அங்கதனே ? அல்லது, எம் ஊரை எரித்து அரக்கர்களை வென்றவனுகிய அனுமனே ? யாரோ ? விரைவாகச் சொல்வாயாக என்று வினவினுன்.

கு :—அஞ்சாது தன்னெதிரில் வந்து நின்றமைக்குச் சினந்த குறிப்பினன் ஆதலின் அவன் நோக்கும்போது நெருப்புப் பொறிகள் எழுந்தன என்பார், 'நெருப்பெழ நோக்கி' என்ருர். கும்பகருணன் உயரத்தினும் மிகவுயர்ந்த தோற்றமுடையவன் அங்கதன் ஆகலின் அவன் நிமிர நோக்கவேண்டியவனுனுன். தன் வலிவும் வந்தோன் மெலிவும் புலப்படுத்தவேண்டிப் 'பொன்றவந்தடைந்த தானைப் புரவலன் ஒருவன் தானே?' என்ருன் கும்பகருணன். சுக்கிரீவன், அங்கதன், அனுமன் என்ற மூவரையும் பற்றி முன்னரே கும்ப கருணன் அறிந்துள்ளமையால் இப்பொழுது வந்த இவன் அம் மூவரில் ஒருவனுகவே இருக்கவேண்டும் என்ற கருத்தால் இங்ஙனம் வினவலானுன். முதலடி அங்கதன் தூதிலும் வந்துளது காணலாம். அன்றி என்பது அன்று எனத் திரிந்தது, (191)

7590. நும்முனை வாலிற் சுற்றி
நோன்றிசை நான்குந் தாவி
மும்முனை நெடுவே லண்ணன்
முளரியஞ் சரணந் தாழ்ந்த
வெம்முனை வீரன் மைந்த
னின்னையென் வாலின் வீக்கித்
தெம்முனை யிராமன் பாதம்
வணங்கிடச் செல்வெ னென்றான்.

'நும்முனை வாலில் சுற்றி,
நோன்திசை நான்குந் தாவி,
மும்முனை நெடுவேல் அண்ணல்
முளரி அம் சரணம் தாழ்ந்த
வெம்முனை வீரன் மைந்தன்
நின்னை என் வாலின் வீக்கித்
தெம்முனை இராமன் பாதம்
வணங்கிடச் செல்வென்' என்றான்.

பொ :—'நின் அண்ணனாகிய இராவணனை வாலினால் சுற்றிக் கட்டிக் கொண்டு வலிய நான்கு திசைகளிலும் தாவிச் சென்று மூன்று முனைகளையுடைய நெடிய சூலப்படையையுடைய சிவபிரானுடைய தாமரை மலர் போன்ற பாதங்களை வணங்கிய, கொடிய போர் முனையில் வல்லவனாகிய வாலியின் மகன் யான்; நின்னை யானும் என் வாலினால் கட்டிக் கொண்டு பகைவரது போர்முனையில் பொருகின்ற இராமனுடைய பாதங்களை வணங்கிடச் செல்வேன்' என்றான்.

கு :—யாரோ என்ற கும்பகருணன் வினாவிற்கு விடையாக வெம்முனை வீரன் மைந்தன் என்பதைக் கூறியதோடு 'என்செய வந்தாய்' என இனி வினவுவானாயின் அதற்கும் விடையாகுமாறும் தன் வலிமை புலப்படுமாறும் 'நின்னை என் வாலின் வீக்கித் தெம்முனை இராமன் பாதம் வணங்கிடச் செல்வென்' என்றும் கூறினான். மும்முனை நெடுவேலண்ணல் என்றது சூலபாணியானாகிய சிவபிரானை. என் தந்தை மும்மூர்த்தியருள் ஒருவனாகிய சிவபிரானை வணங்கச் செல்லும்போது இராவணனைத் தன் வாலில் கட்டிக் கொண்டு போனது போல அவன் மகனாகிய யானும் இராவணன் தம்பியாகிய நின்னை வாலில் கட்டிக் கொண்டு அந்த மும்மூர்த்தியருள் ஒருவனாகிய திருமாலின் அமிசமான இராமன் பாதங்களை வணங்கி வாலியின் மகன் என்பதைக் காட்டுவேன் என்றவாறு. கொடிய போரில் வீரத்தைக் காட்டுபவன் வாலி ஆதலின், அவன் வெம்முனை வீரன்'

எனப்பட்டான். தெவ்முனை தெம்முனை என ஆயது. பகைவரது ஊராகிய இலங்கையில் நிகழும் போர்முனையில் நிற்கின்ற இராமன் என்பான் 'தெம்முனை இராமன்' என்றான். இராவணனை வாலி வாலினால் கட்டிக்கொண்டு வழிபட்டமை சிவபிரானுக்கு உவப்பான செயலன்றாயினும் நின்னை வாலினால் கட்டிக்கொண்டு வணங்கு வதைக் கண்டு உவப்பதற்குரியவன் என்பது புலப்படத் 'தெம்முனை இராமன்' என்று சிறப்பித்தான். எனவே தந்தை செயலினும் தன் செயல் ஏற்றமுடையதென்பது காட்டியவாறு. (192)

**7591.** உந்தையை மறைந்தோ ரம்பா
லுயிருண்ட வுதவி யோற்குப்
பந்தனைப் பகையைச் செற்றுக்
காட்டலை யென்னிற் பாரோர்
நிந்தனை நின்னைச் செய்வர்
நல்லது நினைந்தாய் நேரே
வந்தனை புரியா ரன்றே
வீரராய் வசையிற் றீர்ந்தார்.

'உந்தையை, மறைந்து, ஓர்
அம்பால் உயிர் உண்ட உதவியோற்குப்
பந்தனைப் பகையைச் செற்றுக்
காட்டலை என்னின், பாரோர்
நிந்தனை நின்னைச் செய்வர்;
நல்லது நினைந்தாய்; நேரே
வந்தனை புரிவர் அன்றே,
வீரராய் வசையில் தீர்ந்தார்.

பொ :—மறைந்திருந்து உன் தந்தையை ஓர் அம்பினால் கொன்ற உதவியாளனாகிய இராமனுக்குக் கட்டாகவுள்ள பகையை அழித்துக் காட்டாவிட்டால் இவ்வுலகத்தோர் நின்னை நிந்தனை செய்வார்கள்; நல்லதே செய்ய நினைத்தாய்; இந்த உன் நற்செயலைக் கண்டு வீர ராய் வாழ்ந்து பழியினின்றும் நீங்கிய மேலோர் நின்னை வந்தனை செய்வரல்லவா ?

கு :—இது வஞ்சப் புகழ்ச்சி. உந்தையைக் கொன்று உனக்குத் தீமை விளைவித்த இராமனுக்கு நீ உதவியாக நின்று அவன் பகை வரை அழிக்க எண்ணுவாயானால் உலகத்தோர் உன்னைப் பழிப்பர்; வீரர் உன்னை அவமதிப்பர்; ஆதலின் உன்செயல் நல்லதன்று;

என்று கூறிப் பகைவரோடு சேர்ந்துள்ள அங்கதனைப் பிரிக்கும் உபாயத்தால் கும்பகருணன் இங்ஙனம் குறிப்பால் இகழ்ந்து கூறிய வாறு. தந்தையின் உயிரை நீக்கியதை உதவி எனவும் அந்த உதவிக்குக் கைம்மாருகப் பகையைச் செற்றுக்காட்டலை என்னில் பாரோர் நிந்தனை புரிவர் எனவும் நல்லது நினைந்தாய் எனவும் வீரர் வந்தனை புரிவர் எனவும் கூறியவை புகழ்வதேபோலப் பழித்த குறிப்பின ஆதல் அறிக. வசை - பழி. பந்தனை - கட்டு; கூட்டம். வசையில் தீர்ந்தாராய வீரர் என மாற்றிக் கூறலுமாம். (193)

இச்செய்யுளுக்குப் பின் 71 என்ற எண்ணுள்ள ஏட்டுச்சுவடியில் பின்வரும் மிகைப்பாடல் காணப்படுகின்றது.

7591. (a) செய்துறு பகையை வெல்வார்
நின்னைப்போ லம்மை செய்து
வைதுறு வந்த போது
வலுமுகங் காட்டி யாங்கள்
கைதுறு வினையை வென்று
கடன்கொள்வார் மார்க்க முள்ளார்
எய்துறு மிதற்கென் போலுன்
றகைசிலை யுதவி யென்றான்.

**7592.** இத்தலை வந்த தென்னை
யிராமன்பால் வாலி னீர்த்து
வைத்தலை நுதலி யன்று
வானவர் மார்பிற் றைத்த
முத்தலை யயிலி னுச்சி
முதுகுற மூரி வால்போல்
கைத்தலங் காலுந் தூக்கக்
கிடத்தலைக் கருதி யென்றான்.

'இத்தலை வந்தது, என்னை
இராமன்பால் வாலின் ஈர்த்து
வைத்தலைக் கருதி அன்று;
வானவர் மார்பில் தைத்த
முத்தலை அயிலின் உச்சி
முதுகுஉற, மூரி வால்போல்
கைத்தலம் காலும் தூங்கக்
கிடத்தலைக் கருதி' என்றான்.

பொ :—' நீ இங்கு வந்தது, என்னை உன் வாலில் கட்டி இழுத்துக் கொண்டு போய் இராமனிடத்தில் வைப்பதை நினைத்து அன்று, முன்பு தேவர்தம் மார்பில் தைத்துப் பழகிய மூன்று தலைகளையுடைய சூலத்தின் உச்சியில் முதுகு தைத்துக் கிடக்கப் பெரிய வாலைப் போலக் கைகளும் கால்களும் தொங்கக் கிடப்பதை நினைத்துத்தான் என்று கும்பகருணன் கூறினன்.

கு :—அங்கதன் தன் ஆற்றலைச் சிறப்பித்துச் கூறியதை மறுத்துக் கும்பகருணன் தன் ஆற்றலைச் சிறப்பித்துக் கூறியவாறு. அங்கதன் இங்கு வந்தமையால் கும்பகருணன் தன் சூலப் படையால் அவனைக் குத்திச் சூலத்தோடு கையில் பிடிப்பான் என்பதும் அப்போது ' அங்கதன் முதுகு அந்தச் சூலத்தின் உச்சியில் இருக்கும் என்பதும் கைகளும் கால்களும் வாலும் கீழே தொங்கிக் கொண்டு இருக்கும் என்பதும் கூறியவாறு. மூரி - பெருமை. வால் தொங்குதல் இயல்பாதலின் அதனை உவமையாக்கி உயிர் நீத்த வழி அந்த வாலைப் போலவே கால்களும் கைகளும் கீழே தொங்கும் என்றவாறு. அயிலின் வலிமை தோன்ற ' வானவர் மார்பில் தைத்த முத்தலை அயில் ' என்றான். வானவர் தம் மார்பில் தைத்த சூலம் வானரத்தின் மார்பில் தைத்தல் சொல்ல வேண்டுமோ ? என்பது குறிப்பு; மார்பிற் குத்திய சூலத்தைத் தூக்கிப் பிடிக்கும்போது சூலத்தின் உச்சியில் முதுகு இருப்பதே இயல்பு ஆகலின் ' அயிலினுச்சி முதுகுற ' என்றான். கைத்தலமும் என உம்மை விரிக்க. நாலுதல் - தொங்குதல். (194)

## அங்கதன் வீசிய எழுமுனைத் தண்டு கும்பகருணன் மேற்பட்டுச் சிதைதல்

**7593.** அற்றவ னுரைத்த லோடு
மனல்விழித் தசனி குன்றத்
துற்றது போலு மென்னு
மொலிபட வுலக முட்கப்
பொற்றடந் தோளின் வீசிப்
புடைத்தனன் பொறியிற் சிக்கி
யிற்றது நூறு கூறு
யெழுமுனை வயிரத் தண்டு.

அற்று அவன் உரைத்தலோடும்,
அனல்விழித்து அசனி குன்றத்து
உற்றது போலும் என்னும்
ஒலிபட, உலகம் உட்க,
பொன்தடந் தோளின் வீசிப்
புடைத்தனன்; பொறியின் சிந்தி,
இற்றது நூறு கூருய்,
எழுமுனை வயிரத்தண்டு.

பொ:—அவ்வாறு அக்கும்பகருணன் சொன்ன அளவில் (அங்கதன்) நெருப்புப் பொறி புறப்படக் கண்களை அகலவிழித்துப் பார்த்து, இடி மலையில் வீழ்ந்ததுபோலும் என்று எண்ணுதற்குரிய ஒலி உண்டாகவும் உலகத்தோர் அஞ்சவும், (தண்டுகொண்டு) கும்ப கருணனுடைய இரும்பு போன்ற பெரிய தோள்மேல் வீசி அடித் தான்; அவ்வாறு அடித்தபோது அந்த எழுமுனை வயிரத்தண்டு நெருப்புப் பொறியைப் போலச் சிதறுண்டு நூறு துண்டங்களாகத் தகர்ந்து ஒழிந்தது.

கு:—முன் கும்பகருணனுல் எறியப்பட்டு அங்கதன் தன் கையால் பிடித்த வயிரத் தண்டினையே கொண்டு கும்பகருணன் தோள்மேல் தாக்கினுன்; அது நூறு துண்டங்களாகச் சிதைந்தது என்க; வயிரத் தண்டு இடிபோன்றது; கும்பகருணன் தோள் மலைபோன்றது என்க. பொன் என்றது இங்கு இரும்பினை. இரும்பொன் எனப்படும் இயைபு கருதி இங்ஙனம் கூறினுர் என்க. கும்பகருணன் தோளுக்கு உவமையாதற்கேற்புடையது இரும்பே யாதலும் நினைக. இனி, பொன் அழகெனக் கொண்டு உரைப்பாரும் உளர். பொறி என்றது நெருப்புப் பொறியை. தண்டு பொறியிற் சிந்தி நூறு கூருய் இற்றது என இயையும். கும்பகருணன் தோள்வலி இதனுல் புலப்படுத்திய வாறு. (195)

அங்கதன் வீழ அனுமன் வந்து எதிர்த்தல்

7594. தண்டிறத் தடக்கை யோச்சித்
தழுவியத் தறுகணனைக்
கொண்டிறப் புறுவ னென்னுத்
தலையுறக் குதிக்குங் காலைப்

புண்டிறப் புறவ லாளன்
கையினற் புகைந்து குத்த
மண்டிறப் பெய்த வீழ்ந்தான்
மாருதி யிமைப்பின் வந்தான்.

**தண்டு இறத் தடக்கை ஓச்சித் தழுவி, 'அத்தறுகணனைக் கொண்டு இறப்புறுவன்' என்னத் தலையுறக் குதிக்குங் காலைப் புண்திறப்புற வலாளன் கையினல் புகைந்து குத்த, மண்திறப்பு எய்த வீழ்ந்தான்; மாருதி இமைப்பின் வந்தான்.**

பொ:—எழுமுனைத் தண்டு சிதைந்து அழியவே (அங்கதன்) 'அந்தக் கொடியவனாகிய கும்பகருணனை என் பெரிய கைகளை வீசித் தழுவிப் பற்றிக்கொண்டு செல்வேன்' என்று கருதி அவன் தலையில் பொருந்தக் குதிக்கும் பொழுது, வலியவனாகிய கும்பகருணன் கோபித்து அங்கதனுடம்பில் புண் தோன்றுமாறு தன் கையினல் குத்த, (அங்கதன் அக்குத்தினைத் தாங்க மாட்டாமல்) நிலம் பிளக்கும்படி வீழ்ந்தான்; (அவன் வீழ்ந்ததை அறிந்து) அனுமன் இமைப் பொழுதில் அங்கு வந்து சேர்ந்தான்.

கு:—தறுகண் - கொடுமை. அத்தறுகணனைத் தடக்கை யோச்சித் தழுவிக்கொண்டு இறப்புறுவன் என இயையும். இறத்தல்- செல்லுதல். "மதித்திறப் பாரு மிறக்க மதியா, மிதித்திறப் பாரு மிறக்க" (நாலடியார் - 61) என்புழியும் இறத்தல் இப்பொருள்படுதல் காணலாம். தேரிலிருந்து போர்புரிகின்ற கும்பகருணனைத் தூக்கிக் கொண்டு செல்ல எண்ணி அவன் தலைமேல் துள்ளிக் குதித்த அங்கதனை அக்கும்பகருணன் குத்திப் புண் செய்து தரையில் விழச் செய்தான் என்றவாறு. முதற்போரில் இலக்குவனை இராவணன் எடுத்துச் செல்ல முயன்றமையும் இங்கு நினைக. புகைதல் இங்குச் சினத்தலை உணர்த்தியது. மண்திறப்பு எய்தலாவது, பிளத்தல். அங்கதன் வீழ்ந்த இடம் பிளந்துவிட்டது என அவன் உடம்பின் பெருமை புலப்படுத்தியவாறு. அங்கதன் வீழ்ந்தவுடன் அனுமன் அங்கு வந்து சேர்ந்த விரைவு புலப்படுத்த 'இமைப்பின் வந்தான்' என்றார். (196)

### அனுமன் கும்பகருணன்மேல் குன்றினை வீசுவது

**7595.** மறித்தவ னவனைத் தன்கை
வயிரவாட் சூல மார்பிற்
குறித்துற வெறிய லுற்ற
காலையிற் குன்ற மொன்று

பறித்தவ னெற்றி முற்றப்
பரப்பிடைப் பாக முள்ளே
செறித்தெனச் சுரிக்க வீசித்
தீர்த்தனை வாழ்த்தி யார்த்தான்.

மறித்தவனவனைத் தன்கை வயிர
வாள் சூலம் மார்பில்
குறித்துற எறியலுற்ற
காலையில், குன்றம் ஒன்று
பறித்து அவன் நெற்றிமுற்றப்
பரப்பிடைப் பாகம் உள்ளே
செறித்தெனச் சுரிக்க வீசித்
தீர்த்தனை வாழ்த்தி ஆர்த்தான்.

பொ :—இடைமறித்து வந்தவனாகிய அனுமனது மார்பில் பாயு மாறு கும்பகருணன் தன் கையிலிருந்த உறுதியான கூரிய சூலத்தை வீசியபோது, (அனுமன்) குன்றம் ஒன்றைப் பிடுங்கி அக்கும்பகருண னது நெற்றி முற்றமாகிய பரப்பிடத்தே அக்குன்றின் ஒரு பகுதியை உள்ளே நுழைத்தான் என்னுமாறு அழுந்த வீசிவிட்டுத் தூயவனாகிய இராமனை வாழ்த்திக்கொண்டு ஆரவாரித்தான்.

கு :—மறித்தவன் என்றது, அங்கத கும்பகருணர்க்கு நடுவே இடைமறித்து வந்த அனுமனை. மறித்தவனவனை எனச்சுட்டுப் பெயரும் உடன் வந்தது. வயிரம் - உறுதி. வாள் இங்குக் கூர்மையை உணர்த்தியது. மேலைச் செய்யுளில் வந்த வலாளன் என்பதையே இச் செய்யுளுக்கும் எழுவாயாகக் கொள்க. மறித்தவனவனை மார்பில் குறித்துற எறிய என்புழி அவனது மார்பில் என உருபு மயக்கமாக்கி விரிக்க. கிடந்தாங்கே வைத்து, 'முதலை ஐயுறின் சினையைக் கண்ணுறும்' என்ற விதியின்படி அவனை மார்பின்கண் சூலம் எறியலுற்ற காலையில் என விரித்துக் கூறலுமாம். அனுமன் எறிந்த குன்றின் ஒரு பாதி கும்பகருணன் நெற்றிப் பரப்பில் புதைந்துவிட்டது என்று கண்டோர் கருதுமாறு அழுந்த வீசினான் அனுமன் என்க. சுரித்தல் - சுழன்று அழுந்துதல். அனுமன் தான் வீசிய குன்று தன் குறிப்பின் படி கும்பகருணன் நெற்றியில் படுதற்கு இராமனது அருளே துணை செய்தது என்ற கருத்துடையனாதலின் அவ்விராமனை அப்போது வாழ்த்துவானாயினான். தீர்த்தன் என்றது, தூயவனாகிய இராமனை. அனுமன் வீசிய குன்றினால் கும்பகருணன் சூலத்தை எறியலுற்ற முயற்சி தடையுற்றது என்க. (197)

## கும்பகருணன் தன் தலையில் பட்ட மலையையே அனுமன் மேல் வீசுதல்

**7596.** தலையினிற் றைத்து வேரோர்
தலையென நின்ற வந்த
மலையினைக் கையின் வாங்கி
மாருதி வயிர மார்பி
னுலையுற வெந்த பொன்செய்
கம்மியர் கூட மொப்பக்
குலையுறு பொறிகள் சிந்த
வீசித்தோள் கொட்டி யார்த்தான்.

**தலையினில் தைத்து வேறு ஓர்தலை என நின்ற அந்த மலையினைக் கையின் வாங்கி, மாருதி வயிர மார்பின், உலைஉற வெந்த பொன்செய் கம்மியர் கூடம் ஒப்பக், குலைஉறு பொறிகள் சிந்த, வீசி, தோள் கொட்டி ஆர்த்தான்.**

பொ :—(கும்பகருணன்) தன் தலையில் தைத்துக் கொண்டு வேறோர் தலை என்னுமாறு நின்ற அந்த மலையினைக் கையினால் எடுத்து, அனுமானுடைய வயிரம் போன்ற மார்பில் உலைக்களத்தில் மிகுதியாக வெந்த இரும்பினைச் செய்கின்ற தொழிலாளரின் சம்மட்டி போல வீழ்ந்து திரளான நெருப்புப் பொறிகளைச் சிந்துமாறு வீசி விட்டுத் தன் தோள்களைத் தட்டி ஆரவாரித்தான்.

கு :—கும்பகருணன் தலையும் மலைபோன்றதாகலின் அத்தலையில் தைத்த மலை வேறோர் தலைபோல நின்றது என்றார். மாருதியின் மார்பில் மலை பட்டபோது நெருப்புப் பொறிகள் சிந்தின என்க. கூடம் - சம்மட்டி. பொன் என்றது இங்கு இரும்பினை. பொன்செய் கம்மியர் - கருமாரத் தொழிலாளர். பழுக்கக் காய்ச்சிய இரும்பினைச் சம்மட்டியால் அடிக்கும்போது நெருப்புப் பொறி சிதறுதல் இயல்பு. கருமான் போன்றவன் கும்பகருணன்; கூடம் போன்றது மலை; உலையுற வெந்த பொன்போன்றது அனுமன் மார்பு என உவமையை விரித்துக் கொள்க. குலை - கொத்து; இங்குத் திரளினை உணர்த்தியது. அனுமன் மார்பில் மலையை வீசிய மகிழ்ச்சியால் கும்பகருணன் தோள் கொட்டி ஆரவாரிக்கலானான். (198)

## அங்கதனை வானரம் எடுத்துச் செல்லுதல்

7597. அவ்வழி வாலி சேயை
யரிக்குல வீர ரஞ்சார்
வவ்வினர் கொண்டு போந்தார்
மாருதி வானை முற்றும்
கவ்விய தனைய தாங்கோர்
நெடுவரை கடிதின் வாங்கி
யெவ்வமி லாற்ற லானை
நோக்கிநின் றினைய சொன்னான்.

அவ்வழி வாலி சேயை
அரிக்குல வீரர் அஞ்சார்
வவ்வினர் கொண்டு போனார்;
மாருதி வானை முற்றும்
கவ்வியது அனையது ஆங்கு
ஓர் நெடுவரை கடிதின் வாங்கி,
எவ்வம் இல் ஆற்றலானை நோக்கி
நின்று, இனைய சொன்னான்.

பொ :—அப்போது அங்கதனை வானர வீரர்கள் அஞ்சாமல் எடுத்துக் கொண்டு போயினர்; அனுமன், விண் முழுவதையும் கவ்விக் கொண்டது போன்றதாகிய அங்கிருந்த ஒரு நெடிய மலையை விரைவாகப் பறித்து, துன்பமறியாத - வலிமைமிக்கவனாகிய கும்ப கருணனைப் பார்த்து இத்தகைய சொற்களைச் சொல்லலானான்.

கு :—கும்பகருணனோடு அனுமன் போர் செய்யும் அமையத்தில் குத்துப்பட்டுத் தரையில் கிடந்த அங்கதனை வானரர்கள் துணிந்து வந்து தூக்கிச் சென்றனர் என்றவாறு. கும்பகருணனோடு போர் செய்ய அனுமான் இருத்தலின் வானரர் அஞ்சாராயினர். மலையின் பெருமை புலப்பட ‘வானை முற்றும் கவ்வியதனையதாங்கோர் நெடு வரை’ என்றார். தன் வலிமையால் பிறர்க்குத் துன்பஞ் செய்வ தன்றித் தான் பிறரால் துன்புற்றறியான் கும்பகருணன் ஆதலின் அவனை ‘எவ்வமில் ஆற்றலான்’ என்று சிறப்பித்தார். (199)

அனுமனது வஞ்சினம்

7598. எறிகுவெ னிதனை நின்மே
லிமைப்புறு மளவி லாற்றல்
மறிகுவ தன்றி வல்லே
மாற்றினை யென்னின் வன்மை
யறிகுவ ரெவரும் பின்னை
யானுன்னே டமருஞ் செய்யேன்
பிறிகுவெ னுலகில் வல்லோய்
பெரும்புகழ் பெறுதி யென்ருன்.

எறிகுவென் இதனை நின்மேல்;
இமைப்புறும் அளவில் ஆற்றல்
மறிகுவது; அன்றி, வல்லே
மாற்றினை என்னின், வன்மை
அறிகுவர் எவரும்; பின்னை யான்
உன்னேடு அமரும் செய்யேன்;
பிறிகுவென்; உலகில், வல்லோய்!
பெரும்புகழ் பெறுதி என்ருன்.

பொ :—'இம்மலையை நின்மேல் எறிவேன்; இமைப்பொழுதில் உன் வல்லமை மாய்ந்து போகும்; அங்ஙனம் மாயாமல் விரைவாக இதனைத் தள்ளிஞய் ஆனல், உன் வல்லமையை எல்லாரும் அறிவார்கள்; பின்பு உன்னேடு போரும் செய்யமாட்டேன்; போய் விடுவேன்; வல்லவனே! நீ இவ்வுலகில் பெரிய புகழைப் பெறுவாய் என்று கூறினன்.

கு :—அனுமன் தான் எறியும் மலையால் கும்பகருணன் ஆற்றல் மாய்ந்து அழிவான் என்ற கருத்தினன் ஆதலின் இங்ஙனம் கூற லானன். மறிகுவது என்பது மறிதற்குரியதாகும் என்ற பொருளில் வந்தது. வல்லே - விரைவாக. தான் எறியுமலையைக் கும்பகருணன் தள்ளிவிட்டால் யாரும் அவன் வலிமையை அறிவார்கள்; அதனல், அவன் பெரிய புகழையும் பெறுவான் என்பது அனுமன் கருத்து. 'பின்னை யான் உன்னேடு அமரும் செய்யேன் பிறிகுவென்' என்பது அவன் வஞ்சின உரையாகும். (200)

## கும்பகருணனன் வஞ்சினம்

7599. மாற்றமஃ துரைப்பக் கேளா
மலைமுழை திறந்த தென்னக்
கூற்றுறழ் பகுவாய் விள்ளச்
சிரித்துநீ கொணர்ந்த குன்றை
யேற்றனெ னேற்ற காலத்
திறையதற் கொற்க மெய்தின்
தோற்றனெ னுனக்கென் வன்மை
சுருங்குமென் றரக்கன் சொன்னான்.

மாற்றம் அஃது உரைப்பக் கேளா,
மலைமுழை திறந்தது என்னக்
கூற்று உறழ் பகுவாய் விள்ள
நகைத்து, 'நீ கொணர்ந்த குன்றை
ஏற்றனென்; ஏற்ற காலத்து,
இறை அதற்கு ஒற்கம் எய்தின்,
தோற்றனென், உனக்கு; என்வன்மை
சுருங்கும்' என்று அரக்கன் சொன்னான்.

பொ :—(அனுமான் அத்தகைய சொல்லைச் சொல்லக் கேட்டுக் கும்பகருணனாகிய அரக்கன், மலையின் குகை திறந்தாற் போன்று தோன்றுமாறு, எமன் போன்ற தன் பிளவுபட்ட வாய்விரியச் சிரித்து, 'நீ கொண்டு வந்த மலையை ஏற்றவனாய் ஏற்ற காலத்தில் சிறிது அம்மலைக்குத் தளர்ச்சியுறுவேனாயின் உனக்குத் தோற்றவனாவேன் ; என் வலிமையும் நின் வலிமைக்குக் குறைந்ததாகும்' என்று சொன்னான்.

கு :—மலைமுழை திறந்ததென்ன விள்ள என்க. கூற்றுறழ் பகுவாய் என்றது கூற்றுவனது வாய் போன்ற பிளந்தவாய் என்றவாறு. உயிர்களை விழுங்குவதில் இரண்டும் ஒப்புமையுடையன. ஒற்கம் - தளர்ச்சி. இறை - சிறிது. அனுமன் வீசும் குன்றத்தை யேற்குங் காலத்துச் சிறிது தளர்வு கொண்டாலும் அவனுக்குத் தோற்றுவிட்ட தாகக் கும்பகருணன் கூறியது, "விழித்த கண் வேல் கொண்டெறிய வழித்திமைப்பின் ஓட்டன்றோ வன்க ணவர்க்கு" (குறள் - 775) என்ற குறளை நினைப்பிக்கின்றது. வன்மை சுருங்குதலாவது, தாழ்ந்தது ஆதல். (201)

## கும்பகருணன் தோள்மேல் ஏற்க மலை துகளாதல்

**7600.** மாருதி வல்லை யாகி
னில்லடா மாட்டா யாகின்
பேருதி யுயிர்கொண் டென்று
பெருங்கையா னெருங்க விட்ட
காருதிர் வயிரக் குன்றைக்
காத்திலன் றேண்மே லேற்றான்
ஓருதிர் நூறு கூறா
யுக்கதெவ் வுலகு முட்க.

மாருதி, 'வல்லை ஆகின்,
நில், அடா! மாட்டாய் ஆகின்,
பேருதி, உயிர்கொண்டு' என்று
பெருங்கையால் நெருங்க விட்ட
கார் உதிர் வயிரக்குன்றைக்
காத்திலன், தோள்மேல் ஏற்றான்;
ஓர் உதிர் நூறு கூறாய்
உக்கது, எவ் உலகும் உட்க.

பொ :— (அது கேட்ட) அனுமன், 'அடே! நீ வல்லமை உடையையானால் எதிர் நிற்பாயாக; வலிமையில்லாதவனாயின் உன் உயிரைப் பாதுகாத்துக் கொண்டு தப்பி ஓடிவிடு!' என்று கூறிக் கொண்டு பெரிய கையால் கும்பகருணனை நெருங்கு மாறுவிட்ட' மேகத்தையும் நிலைகுலையச் செய்யும் உறுதியான மலையை (தன் மேல் படாதபடி) பாதுகாத்துக்கொள்ளாதவனாய்த் தன் தோளின் மேல் ஏற்றான்; (அம்மலை அவன் தோள்மேல் பட்டவுடன்) எல்லா உலகங்களும் நடுங்குமாறு ஒருமுறை உதிர்விலேயே நூறு துகளாகச் சிதைந்து விழுந்தது.

கு :—மாருதி விட்ட குன்றைக் கும்பகருணன் காத்திலன் ஏற்றான் அது எவ்வுலகும் உட்க உக்கது என இயையும். 'இம்மலையைத் தாங்கற்கு வல்லமையுடையையானால் நில்' என்று முன்கூறிய சொல்லையே விரும்புகின்றவன் கும்பகருணன் ஆதலின், அக்குன்று தன்மேல் படாது விலகிநின்று தன்னைக் காத்துக் கொள்ளாமல் தோள்மேல் ஏற்றான் என்க. குன்றைக் காத்திலன் என்பது; புலியை ஓம்பிவா என்புழிப் போலக் குன்றம் தன்மேல் படாது தன்னைப் பாதுகாத்திலனாய் என்று பொருள்பட்டது. உகுதல் - சிந்துதல். மாருதி எறிந்த மலையையே துகளாக்கிய கும்பகருணன் தோள்,

மற்றவர்களை யாங்ஙனம் துன்புறுத்துமோ என்ற அச்சம் எல்லா உலகத்தார்க்கும் உண்டாயது என்பார், 'எவ்வுலகமும் உட்க உக்கது' என்றார். (202)

## தான் எறிந்த மலை துகளானது கண்டு அனுமன் பெயர்தல்

7601. இளக்கமொன் றின்றி நின்ற
வியற்கைபார்த் திவன தாற்ற
லளக்குறற் பாலு மாகா
குலவரை யமரி னாற்றா
துளக்குறு நிலைய னல்லன்
சுந்தரத் தோளன் வாளி
பிளக்குமேற் பிளக்கு மென்னா
மாருதி பெயர்ந்து போனான்.

இளக்கம் ஒன்று இன்றி நின்ற
இயற்கை பார்த்து, 'இவனது ஆற்றல்
அளக்குறற் பாலும் ஆகா;
குலவரை அமரின் ஆற்றா;
துளக்குறும் நிலையன் அல்லன்;
சுந்தரத் தோளன் வாளி
பிளக்குமேல், பிளக்கும்' என்னா,
மாருதி பெயர்ந்து போனான்.

பொ :—(தான் எறிந்த மலை தாக்கியும்) தளர்ச்சி சிறிதும் இல்லாமல் நின்ற கும்பகருணனுடைய இயல்பைப் பார்த்து அனுமன் - 'இவனுடைய வலிமை இவ்வளவு என அளத்தற்குரியதும் ஆகாது; எட்டுக் குலமலைகளும் போரில் இவன் வலிமைக்கு ஆற்றுவன அல்ல; எவராலும் அசைப்பதற்குரிய நிலையையுடையவன் அல்லன்; அழகிய தோள்களையுடைய இராமனது அம்பு பிளக்கும்' என்று கருதிக் கொண்டு அப்புறம் போனான்.

கு :—இளக்கம் - தளர்ச்சி. குலவரை என்றது, எட்டுத் திசையிலும் உள்ள குலமலைகளை. அம்மலைகளும் இவனை அழிக்கும் ஆற்றலுடைய அல்ல என்றவாறு. துளக்குதல் - அசைத்தல். இராமன் அம்பு தவிர மற்றெதுவும் இவனைப் பிளக்கும் ஆற்றலுடையது அன்று என்ற கருத்தால் சுந்தரத் தோளன் வாளி பிளக்குமேற் பிளக்கும், என்று நினையலானான். மேல், 'மாற்றினையென்னின்

பின்னையான் உன்னோடு அமருஞ் செய்யேன் பிறிவேன்' என்று வஞ்சினம் கூறியவாறே அனுமன் பெயர்ந்து போனான் என்க. (203)

52 ல் 198-1, 2 ஆகப் பின்வரும் மிகைப்பாடல்கள் காணப்படுகின்றன.

7601 (a) மாருதி போத லோடும்
வயப்படைத் தலைவர் மற்றோர்
மாருத மென்னப் பொங்கி
வரையொடு மரங்கள் வாரி
போரெதிர் புகக்கண் டன்னோர்
அனைவரும் புரண்டு போரில்
சோர்தரப் படைகள் வாரிச்
சொரிந்தட லரக்க னார்த்தான்.

7601 (b) மழுவொடு கணிச்சி சூலம்
வாள்மணிக் குலிச மீட்டி
யெழுவயி லெஃக மென்றிப்
படைமுத லெவையும் வாரி
மழையெனப் பொழிந்து நூறு
யோசனை வரைப்பில் மேவும்
அளவறு கவியின் சேனை
யறுத்தொரு கணத்தில் வந்தான்.

கும்பகருணன் ஆற்றலைக் கண்டு தேவர்கள்
கலங்குதலும் நடுங்குதலும்

**7602.** எழுபது வெள்ளத் துள்ளா
ரிறந்தவ ரொழிய யாரும்
முழுவது மாள்வ ரின்றே
யிவன்வலத் தமைந்த முச்சூற்
கழுவினி லென்று வானோர்
கலங்கினார் நடுங்கி னாரோர்
பொழுதினி னுலக மூன்றுந்
திரியுமென் றுள்ளம் பொங்கி.

'எழுபது வெள்ளத் துள்ளார்
இறந்தவர் ஒழிய, யாரும்
முழுவதும் மாள்வர், இன்றே
இவன் வலத்து அமைந்த முச்சூல்

கழுவினில்' என்று வானோர்
கலங்கினர், நடுங்கினர் ஓர்
பொழுதினில் உலகம் மூன்றும்
திரியும்' என்று உள்ளம் பொங்கி.

பொ :—'எழுபது வெள்ளம் என்ற அளவுபட்ட சேனையில் உள்ளவர்களில், இதுகாறும் இறந்தவர் ஒழிய மற்றை யாவரும் முழுவதும் இப்போதே, இவன் வலக்கையில் அமைந்த முத்தலைச் சூலப்படையால், மாள்வார்கள்' என்று தேவர்கள் கலங்கினர்கள், ஒரு முழுத்த நேரத்தில் உலகம் மூன்றும் நிலைமாறும் என்று கருதி மனம் கொதித்து நடுங்கினர்கள்.

கு :—ஒருவரும் உய்யார் என்பதை வற்புறுத்த, யாரும் முழுவதும் மாள்வர் என்றும், வேறு வீரரோ, வேறு படைக்கலமோ வேண்டா என்பார், இவன் வலத்தமைந்த முச்சூற்கழுவினில் மாள்வர் என்றும், காலமும் வேண்டா என்பார், இன்றே மாள்வர் என்றும் கூறினர். இன்றே - இப்போதே. சூலம் என்பது சூல் எனக் கடைக்குறைந்தது. கழு - வேல். முச்சூற்கழு என்றது முத்தலைச் சூலவேலை. ஓர் பொழுது என்றது ஒரு முழுத்தத்தை. மூன்றேமுக்கால் நாழிகை ஒரு முழுத்தம் எனப்படும். வானோர், யாரும் முழுவதும் மாள்வர் என்று கலங்குதலும், உலகம் மூன்றும் திரியும் என்று நடுங்குதலும் செய்தார் என்றவாறு. வானரர் யாரும் மாள்வர் என்றமையால் மனம் கலங்கிய தேவர்கள், அவர் மாள்வதால் உலகம் மூன்றுமே நிலைதிரியும் என்ற எண்ணத்தால் உடல் நடுங்கலானார்கள் என்க. உள்ளம் பொங்குதல் - மனங் கொதித்தல். (204)

### குரங்குகளின் அழிவும் கும்பகருணன் ஆண்மையும்

**7603.** தாக்கினர் தாக்கி னர்தங்
கைத்தலஞ் சலித்த தன்றி
நூக்கின ரொருவ ரில்லை
நோவுசெய் தாரு மில்லை
யாக்கினன் களத்தி னங்கோர்
குரங்கின தடியு மின்றிப்
போக்கின னாண்மை யாலே
புதுக்கினன் புகழை யம்மா.

தாக்கினர், தாக்கினர் தம்
 கைத்தலம் சலித்தது அன்றி,
நூக்கினர் ஒருவர் இல்லை;
 நோவு செய்தாரும் இல்லை
ஆக்கினன்; களத்தின் ஆங்கு
 ஓர் குரங்கினது அடியும் இன்றிப்
போக்கினன், ஆண்மையாலே;
 புதுக்கினன் புகழை அம்மா.

பொ :—(தன்னைத்) தாக்கினவர் தாக்கினவர்தம் கைகள் சலித்தனவேயன்றித் தன்னைத் தள்ளினவர் ஒருவரில்லை; சிறிது நோவு செய்தவரும் இல்லை என்னும்படி செய்தவனாகிய கும்பகருணன் போர்க்களமாகிய அவ்விடத்து ஒரு குரங்கினது அடிச்சுவடும் இல்லாமல் போக்கினவனாய்த் தன் ஆண்மையாலே புகழைப் புதுப்பித்து விட்டான்.

கு :—தாக்கினவர் பன்மை புலப்படத் தாக்கினர் தாக்கினர் என அடுக்கிக் கூறினர். தாக்கினவர் பலரே ஆயினும் அவர் அனைவரும் தம் கைசலித்தனரே அன்றி அவனை நின்ற நிலையில் நின்று தள்ளினவர் ஒருவரும் இல்லை; சிறிது நோவு செய்தவரும் இல்லை என்னும்படி ஆக்கினவனாகிய கும்பகருணன் என்க. ஆக்கினன் என்பது வினைப் பெயர். தன் வலிமை மிகுதியினால் தன்னை நூக்கினவரும் நோவு செய்தாரும் இல்லையாக்கினவன், தன் ஆண்மையாலே குரங்கினது அடியுமின்றிப் போக்கினனாய்ப் புகழைப் புதுக்கினன் என இயைப்பினும் ஆம். அம்மா, வியப்பு இடைச்சொல். இனி ஆண்மையாலே போக்கினன்; ஆண்மையாலே புகழைப் புதுக்கினன் என முன்னும் இயைத்து இடைநிலை விளக்காய்க் கொள்ளலும் ஆம். வலிமையால் தான் இடுக்கட்படாமையும் பகைவரை இடுக்கட்படுத்தலுமாகிய கும்பகருணன் செயல், என்றுமில்லாத புதுப்புகழை உண்டாக்கி விட்டது என்பார், 'புதுக்கினன் புகழை அம்மா' என்றார். அவன் பெரும்புகழ் நினைந்து கவிஞரே வியந்தவாறு. குரங்குகள் இறந்தனவும் போர்க்களத்தைவிடுத்து ஓடினவுமாகக் கழிதலின் 'ஆங்கோர் குரங்கினதடியுமின்றிப் போக்கினன்' என்றார். அடி என்றது அடிச்சுவட்டினை. (205)

## கும்பகருணன் ஆரவாரம்

**7604.** சங்கத்தார் குரங்கு சாயத்
தாபத ரென்னத் தக்கா
ரிங்குற்ரு ரல்ல ரோதான்
வேறுமோ ரிலங்கை யுண்டோ
எங்குற்ரு ரெங்குற் ருரென்
றெடுத்தழைத் திமையோ ரஞ்சத்
துங்கத்தோள் கொட்டி யார்த்தான்
கூற்றையுந் துணுக்கங் கொண்டான்.

'சங்கத்து ஆர் குரங்கு சாய,
தாபதர் என்னத் தக்கார்
இங்கு உற்ருர் அல்லரோதான்?
வேறும் ஓர் இலங்கை உண்டோ?
எங்குஉற்ருர் எங்குஉற்ருர்?' என்று
எடுத்து அழைத்து, இமையோர் அஞ்ச,
துங்கத் தோள்கொட்டி, ஆர்த்தான் —
கூற்றையும் துணுக்கம் கொண்டான்.

பொ :—எமனையும் நடுக்கம் கொள்வித்தவனுகிய கும்பகருணன், கூட்டமாக நிறைந்த குரங்குகள் அழியவும் தாபதர் என்னத் தக்கவர்களாகிய இராம இலக்குவர் இங்கு வந்தனரல்லரோ? அவர் பொருதற்குரியதாக வேறும் ஓர் இலங்கை உளதோ? எங்கே போனுர்கள், எங்கே போனுர்கள்? என்று உரத்த குரல் எடுத்துக் கூவித் தேவர்களும் அஞ்சுமாறு தன் வலிய தோள்களைக் கொட்டி ஆரவாரித்தான்.

கு :—சங்கம் - கூட்டம். ஆர்தல் - நிறைதல். தம்படை வீரராகிய குரங்குகள் அழிவுறும்போது தலைவர்களாகிய இராம இலக்குவர் விரைந்து வந்து உதவிப் பொருவதே முறையாகவும், அவர்கள் அங்கு இல்லாத இழிநிலையைப் புலப்படுத்த வேண்டித் 'தாபதர் என்னத்தக்கார் இங்குற்ருரல்லரோதான்' எனவும், வேறுமோரிலங்கையுண்டோ எனவும் எள்ளிக் கூறியவாறு. அவர்கள் இங்கு இல்லையாதலின் அவர்கள் முற்றுகையிட்டதாகக் கூறப்படும் இலங்கை வேருே? என்னலானுன். எடுத்தழைத்தல் என்றது உரத்துக் கூவுதலை. கூற்றத்தைக் கையால் விளிப்பதுபோல் ஆற்றல்மிக்க இராம இலக்குவரைக் கும்பகருணன் 'எங்குற்ருர் எங்குற்ருர்' என்று விளிப்பானுனன். துங்கம் - வலிமை. துணுக்கம் கொண்டான் என்புழி

கொள்வித்தான் என்பது கொண்டான் எனத் தன் வினையாக வந்தது. துணுக்கம் - நடுக்கம். (206)

## போர்க்களத்து இரத்தம் பெருகுதல்

**7605.** பறந்தலை தன்னில் வந்த
பலபெருங் கவியின் பண்ணை
இறந்தது கிடக்க நின்ற
விரிதலின் யாரு மின்றி
வறந்தது சோரி பாய
வளர்ந்தது மகர வேலை
குறைந்தது வாவுற் றோதங்
கிளர்ந்துமீக் கொண்ட தென்ன.

பறந்தலை தன்னில் வந்த பல பெருங் கவியின் பண்ணை
இறந்தது கிடக்க, நின்ற இரிதலின் யாரும் இன்றி
வறந்தது; சோரிபாய வளர்ந்தது, மகரவேலை —
குறைந்தது, உவாவுற்று ஓதம்கிளர்ந்து மீக்கொண்டது என்ன.

பொ :—போர்க்களம் - தன்னிடத்து வந்த பல பெரிய குரங்குகளின் கூட்டம் இறந்தது கிடக்க, எஞ்சி நின்றன அஞ்சி ஓடிவிட்டமையால் யாரும் இல்லாமல் வறிதாகத் தோன்றியது; இரத்தம் வெள்ளம் பாய்தலால் நிறைந்தது. கடல் - அலைகள் குறைந்திருந்தது, நிறைமதி தோன்றப் பெற்றதால் அலைகள் கிளர்ந்து மேலோங்கினாற் போன்று தோன்றியது.

கு:—பறந்தலை - யாருமின்றி வறந்தது, சோரிபாய வளர்ந்தது என இயையும். தன்னிடத்து வந்த குரங்குச் சேனையில் இறந்தவை பிணமாகக் கிடத்தலாலும் எஞ்சி நின்றவை அஞ்சி ஓடிவிட்டதாலும் வறந்து காணப்பட்ட போர்க்களம், பின்பு புண்பட்டோரின் இரத்தம் பாய்தலால் நிரம்பித் தோன்றியது என்றவாறு. அது அலைகள் குறைந்து அமைதியுற்றிருந்த கடல், உவாமதி உற்றதால் கிளர்ந்து பொங்கியது போன்றது என்பது உவமை. யாருமின்றி வறந்ததாகிய பறந்தலை, அலைகள் கிளராது அடங்கியிருந்த கடல்போன்றது; அப் பறந்தலை சோரிபாய நிறைந்தது, அக்கடல் உவாவுற்று ஓதம் கிளர்ந்து மீக்கொண்டது போன்றது என உவமையை விரித்துக் கொள்க. சோரி - இரத்தம். உவா - நிறைமதி. ஓதம் - அலை. (207)

## இலக்குவன் வந்து தாக்குதல்

**7606.** குன்றுங் கற்களு மரங்களுங்
குறைந்தன குரங்கின்
வென்றி யம்பெருஞ் சேனையோர்
பாதியின் மேலு
அன்று தேய்ந்ததென் றுரைத்தலு
மமரர்கண் டுவப்பச்
சென்று தாக்கின ணொருதனிச்
சுமித்திரை சிங்கம்.

'குன்றும் கற்களும் மரங்களும் குறைந்தன; குரங்கின்
வென்றி அம்பெருஞ்சேனை ஓர் பாதியின் மேலும்
அன்று தேய்ந்தது' என்று உரைத்தலும் அமரர் கண்டு உவப்பச்
சென்று தாக்கினன், ஒருதனிச் சுமித்திரை சிங்கம்.

பொ :—'(கும்பகருணன் போர் செய்த) அன்றைக்குக் குன்று களும் கற்களும் மரங்களும் குறைந்து போயின; குரங்குகளின் வெற்றிமிக்க அழகிய பெரிய சேனை ஒருபாதி அளவிற்கு மேலும் குறைந்துவிட்டது' என்று (தூதுவர்) சொன்ன அளவில் சுமித்திரையின் மகனாகிய சிங்கம் போன்ற இலக்குவன், தேவர்கள் கண்டு மகிழ, ஒரு தனியே சென்று கும்பகருணனைத் தாக்கினான்.

கு :—கும்பகருணனைத் தாக்குதற்காக வானரர்கள் குன்றுகள் முதலியவற்றை எடுத்தெறிதலின், 'குன்றும் கற்களும் மரங்களும் குறைவன ஆயின; கும்பகருணனால் கொல்லப்பட்டுப் பெருஞ் சேனையின் பாதியின்மேலும் தேய்ந்தது என்க. உரைத்தலும் என்ற வினைக்கேற்ற தூதுவர் என்ற எழுவாய் வருவிக்கப்பட்டது. முன் கும்பகருணன் குரங்குகளை அழிப்பது கண்டு கலங்கிய அமரர்கள் தன் செயல் கண்டு உவக்குமாறு இலக்குவன் கும்பகருணனைத் தாக்கினான் என்றவாறு. சுமித்திரை சிங்கம் என்றது, சுமித்திரை பெற்ற சிங்கம் போன்ற ஆண்மையுடையனாகிய இலக்குவனை. ஒரு தனியே சென்று தாக்கும் ஆண்மையுடைமையான் இலக்குவன் சிங்கமாக உருவகம் செய்யப்பெற்றான். (208)

## இலக்குவன் நாணொலி செய்தல்

**7607.** நாணெ றிந்தனன் சிலையினை
யரக்கியர் நகுபொற்
பூணெ றிந்தனர் படியிடை
யிடிபொடித் தென்னச்
சேணெ றிந்தன திசைசெவி
டெறிந்தன வலகை
தூணெ றிந்தன கையெடுத்
தாடின துணங்கை.

நாண் எறிந்தனன், சிலையினை; அரக்கியர் நகுபொன்
பூண் எறிந்தனர் படியிடை; இடி பொடித்தென்னச்
சேண் எறிந்தன; திசை செவிடு எறிந்தன; அலகை,
தூண் எறிந்தன கையெடுத்து, ஆடின துணங்கை.

பொ :—இலக்குவன் வில்லில் நாணினைத் தெறித்தான்; (அந் நாணொலி கேட்டவுடன்) அரக்கியர் தம் கணவர்கள் இனி மாண்டார்கள் என்ற துணிவினால் தத்தம் ஒளிவீசுகின்ற பொற்றாலியாகிய அணியினைக் கழற்றித் தரையில் வீசினார்கள்; இடி தோன்றினாற் போன்று விண்ணில் எதிரொலிகள் உண்டாயின; திசைகள் செவிடு பட்டன; பேய்கள் தம் தூண்போன்ற கைகளை விலாவில் எடுத்துத் தாக்கிக்கொண்டு துணங்கைக் கூத்து ஆடின.

கு :—நாண் என்றது வில்லின் நாணினை. சிலை - வில். நகுதல் இங்கு ஒளிவீசுதலை உணர்த்தியது. பொற்பூண் என்றது, தாலியை. முன்னரே நிகழ்ந்த அரக்கரழிவுகளைக் கண்டு தம் கணவர்கள் என்னுவாரோ என ஏங்கியிருந்த நிலையில், இலக்குவன் நாணொலி கேட்டவுடனே 'இத்தகைய நாணொலியைச் செய்தவன் நம் கணவரைக் கொல்லுவது தப்பாது என்று கருதி வருத்தமேலீட்டால் தாலியைக் கழற்றித் தரைமேல் எறிந்தார்கள் என்க. அந்நாணொலியின் எதிரொலி விண்ணில் இடி தோன்றுவது போன்று உண்டாயது; அதனால் திசைகள் உள்ளார் செவிகள் செவிடு ஆயின. அலகை - பேய். பேயின் கைக்குத் தூண் உவமை. நிறைய உணவு கிடைக்கும் என்ற மகிழ்ச்சியால் அலகை கையெடுத்துத் துணங்கை ஆடின என்க. துணங்கை என்பது ஒருவகைக் கூத்து. இதனை, 'பழுப் புடை யிருகை முடக்கியடிக்க, துடக்கிய நடையது துணங்கையாகும்' என்ற சூத்திரத்தால் அறியலாம். முடக்கிய இரு கைகளையும் விலாப்

புடைகளில் ஒற்றியடித்துக்கொண்டு அசைந்தாடுவது துணங்கைக் கூத்து என்பது அறியலாம். இதனுல் இலக்குவன் எறிந்த நாணெலியின் சிறப்புப் புலப்படுத்தியவாறு. (209)

## இலக்குவனது அம்புகளின் செயல் 7608

**7608.** இலக்கு வன்கடி தேவின
விரைபெரு திரைப்ப
சிலைக்க டுங்கணை நெடுங்கணஞ்
சிறையுடன் செல்வ,
உலைக்கொ டுங்கனல் வெதும்பிட
வாயெரிந் தோடிக்
குலக்க யங்களிற் குளித்தன
குடித்தன குருதி.

இலக்குவன் கடிது ஏவின, இரை பெருது இரைப்ப,
சிலைக் கடுங்கணை நெடுங்கணம் சிறையுடன் செல்வ,
உலைக்கொடுங்கனல் வெதும்பிட வாய் எரிந்து ஓடி,
குலக் கயங்களில் குளித்தன; குடித்தன, குருதி.

பொ :—இலக்குவனுல் விரைந்து ஏவப்பட்டனவும் இரை பெருமையால் பெருமூச்சு விடுகின்றனவுமாகிய, வில்லினின்று விடுபட்ட கடுமையான கணைகளின் நெடிய கூட்டம் சிறகுகளுடன் செல்வனவாய், உலைக்களத்துக் கொடிய நெருப்பும் வெதும்புமாறு வாயினுல் நெருப்பைக் கக்கிக்கொண்டு ஓடித் திசை யானைகளின் மத்தகங்களில் மூழ்கி இரத்தத்தைக் குடித்தன.

கு :—ஏவினவும் இரைப்பனவுமாகிய கணை நெடுங்கணம் செல்வனவாய் எரிந்தோடிக் குளித்தனவாய்க் குருதி குடித்தன என இயையும். இரை பெருமையால் இரைத்தலாவது பெருமூச்சு விடுதல். கணைகளின் வாய் எரி, உலைக்களத்துக் கனலிலும் மிக்க வெப்பமுடையது ஆதலின் அதை வெதும்பிடச் செய்யலாயிற்று. (210)

**7609.** அலைப டைத்தவா ளரக்கரைச்
சிலகழுத் தரிவ
சிலசி ரத்தினைத் துணித்தவை
திசைகொண்டு செல்வ

கொலேப டைத்தவெங் களத்திடை
விழாக் கொண்டு போவ
தலேப டைத்தன போன்றன
வாணெடுஞ் சரங்கள்.

அலே படைத்த வாள்
அரக்கரைச் சிலகழுத்து அரிவ;
சில சிரத்தினைத் துணித்து,
அவை திசைகொண்டு செல்வ;
கொலே படைத்த வெங்களத்திடை
விழாக் கொண்டு போவ;
தலே படைத்தன போன்றன
வாள், நெடுஞ் சரங்கள்.

பொ :—(இலக்குவன் விடுத்த) சில அம்புகள், பிறவுயிர்களே யெல்லாம் அலேக்கும் தன்மை படைத்த கொடிய அரக்கரைக் கழுத்து அரிவன; சில கூரிய நீண்ட அம்புகள், அவர்கள் தலேகளே அறுத்து அவற்றைத் திசைகளின் கடைசி யிடத்திற்குக் கொண்டு செல்லும் நோக்கத்தனவாய்க் கொலேத் தொழில் பொருந்திய போர்க் களத்தில் திருவிழாக்கொண்டு உலா வருபவை, தலேகளேப் படைத் தாற் போன்று காணப்பட்டன.

கு :—அலே என்பது முதனிலேத் தொழிற்பெயர். பிறவுயிர்களே அலேத்தலேயே தொழிலாகக் கொண்டவர்கள், இப்பொழுது இலக் குவன் கணேயால் சிரமரியப் பெறுகின்றார்கள் என நோயெல்லாம் நோய் செய்தார் மேலனவாதலே விளக்கியவாறு. அரிந்த சிரங்களேத் திசையெல்லேக்குக் கொண்டு செல்லும் நோக்கமுடைய சில கணேகள், அத்தலேகளேப் பலரும் அறியுமாறு போர்க்களத்தினேச் சுற்றிச் சுற்றி வருகின்றன என்பார், 'வெங்களத்திடை விழாக் கொண்டு போவ' என்றார். தலேகளேக் கவ்விக்கொண்டு திரியும் அம்புகளின் தோற்றம் தலேபடைத்தனபோலக் காணப்பட்டன என்றவாறு. வாள் - கொடுமை; கூர்மை. விழாக்கொண்டு போத லாவது போர்க்களத்துள்ளாரெல்லாம் காண உலாவுதல். (211)

**7610.** உருப்ப தங்களே யொப்பன
சிலகணே யோடைப்
பொருப்ப தங்களே யுருவிமற்
றப்புறம் போவ

செருப்ப தம்பெரு வரக்கர்தந்
தலைபல சிந்திப்
பருப்ப தங்கள்புக் கொளிப்பன
முழைபுகு பாம்பின்.

உருப் பதங்கனை ஒப்பன சிலகணை, ஓடைப்
பொருப்பதங்களை உருவி, மற்று அப்புறம் போவ;
செருப்பதம் பெரு அரக்கர்தம் தலைபல சிந்தி,
பருப்பதங்கள் புக்கு ஒளிப்பன முழைபுகு பாம்பின்.

பொ :—உருவம் சூரியனை ஒப்பனவாகிய சில அம்புகள், போர் செய்யும் செவ்வி பெறுமல் வருந்தியிருந்த அரக்கர்களுடைய தலைகள் பலவற்றைச் சிந்தச் செய்துவிட்டு, மலைகளில் புகுந்து ஒளித்தற்குரியனவாகிய குகையில் புகுகின்ற பாம்புகளைப்போல முகபட்டத்தையுடைய யானைகளின் உடம்பில் நுழைந்து ஊடுருவிச் சென்று அப்புறம் போவன ஆயின.

கு :—ஒளிமிக்க அம்புகள் என்பார், 'உருப்பதங்கனை ஒப்பன சில கணை' என்ருர். பதங்கன் - சூரியன். ஒளிமிகுதியால் சூரியனை ஒத்த அம்புகள், யானைகளின் உடம்புகளில் புக்கு உருவும் நிலையில் முழைபுகு பாம்புகளை ஒத்தன என்க. ஒளித்தற்குரிய முழை என்பார் ஒளிப்பன முழை என முழைக்கு அடை கொடுத்தார். இங்ஙனம் கொள்ளாமல் முழைபுகு பாம்பின் பருப்பதங்கள் புக்கொளிப்பன என்று இயைத்துப் பொருள் கொள்வோமாயின், இலக்குவன் கணைகள் மலையில் ஒளித்தன எனப் பொருள்பட்டு எங்கும் ஒளிக்க வேண்டாது செருக்கொடு திரிதற்குரிய இலக்குவன் கணைக்கு இழுக்கினைக் கற்பித்ததாதல் ஓர்க. ஓடைப் பொருப்பு என்றது முகபட்டத்தையுடைய யானையை. அது, பகுதிப் பொருள் விகுதி; அம் சாரியை. சிலகணை தலைபல சிந்தி முழைபுகு பாம்பின் ஓடைப் பொருப் பதங்களை உருவி அப்புறம் போவ என இயையும். அரக்கர் தலைகளைப் பலவாக வீழ்த்திவிட்டு யானை உடம்பிற் புகுந்து உருவிச் செல்லும் அம்புகளின் தோற்றம் மலைமுழையிற் புகும் பாம்பு போன்றது என்றவாறு. (212)

**7611.** மின்பு குந்தன பல்குழு
வாமென மிளிர்வ
பொன்பு குந்தொளிர் வடிம்பின
கடுங்கணை போவ

முன்பு நின்றவர் முகத்திற்குங்
கடைக்குழை முதுகின்
பின்பு நின்றவர் மிடற்றிற்கும்
விசையொக்கும் பிறழா.

மின் புகுந்தன பல்குழுவாம் என மிளிர்வ,
பொன் புகுந்து ஒளிர் வடிம்பின கடுங்கணை போவ,
முன்பு நின்றவர் முகத்திற்கும், கடைக்குழை முதுகின்
பின்பு நின்றவர் மிடற்றிற்கும், விசைஒக்கும், பிறழா.

பொ :—பல கூட்டமாகிய மின்னல்கள் ஓரிடத்துப் புகுந்தன என்னுமாறு ஒளிவீசுகின்றனவும், பொன் பொருந்தி ஒளிவீசுகின்ற விளிம்புகளையுடையனவுமான கடுமையான அம்புகள், (அரக்கர்மேல்) செல்கின்றவை, தூசிப்படையில் முன் நின்றவர்களின் முகத்திற்கும், கடைக் கூழையில் பின்புறத்தில் நின்றவர்களின் கழுத்திற்கும் விரைவு ஒத்தனவாக இருந்தன; சிறிதும் மாறுபடவில்லை.

கு :—முன்பு நின்றவரைத் தாக்கும்போது உள்ள வேகம் படையின் பின்பு கடைசியில் நின்றவரைத் தாக்கும்போது குறை தலே இயல்பாகவும், இலக்குவன் அம்பு, அதற்கு மாருக, முன்பு நின்றவர் முகத்தைத் தாக்கியபோது கொண்ட வேகத்தையே கடைக் கூழையின் பின்பு நின்றவர் மிடற்றைத் தாக்கும்போதும் கொண்டிருந்தது என அதன் விரைவு மிகுதியைப் புலப்படுத்திய வாறு. தொடக்கத்திலும் முடிவிலும் ஒரே வகையான வேகத்தைப் பெற்றிருந்தது என்க. பல்குழுவாம்மின் என இயையும். கடுங்கணை போவ, முகத்திற்கும் மிடற்றிற்கும் விசையொக்கும்; பிறழா. என இயையும். அம்பின் விளிம்புகளில் பொன்னிழைத்திருப்பது உண்டு ஆதலின், பொன் புகுந்தொளிர் வடிம்பின கடுங்கணை ' என்று சிறப்பித்தார். ' பொன்வடிம் பிழைத்த வான் பகழி '' (அயோத்தி-கிளை கண்டு - 38) என முன் வந்துள்ளமையும் காண்க. தொடக்கத்தில் முன்பு நின்றவர் முகத்தில் பாய்ந்த அம்பு அவ்வரிசையில் நின்ற பலரையும் ஊடுருவிக் கொன்று கொண்டே சென்று கடைக் கூழை யின் பின்பு நின்றவரைத் தாக்கும்போது முகத்தில் பாயாது மிடற்றில் பாய்தலே இயல்பாதல் புலப்படுத்தியவாறு. வேகத்தில் மாறுபா டில்லையாயினும் பாய்வதில் சிறிது வேறுபாடு உண்மை தெளியலாம். அம்பு முன்பு பாய்ந்த இடத்தினும் பின்பு பாயும் இடம் சிறிது தாழ்ந்த தாதலே இயல்பு. இதனை '' வேழம் வீழ்த்த விழுத்தொடைப் பகழி, பேழ்வா யுழுவையைப் பெரும்பிறி துறீஇப், புழற்றலைப் புகர்க்கலை யுருட்டி யுரற்றலைக். கேழற்பன்றி வீழ வயல, தாழற்புற்றத் துடும்பிற்

செற்றும், வல்வில்வேட்டம்" (புறநா - 152) என்று வன்பாணர் கூறுவதாலும் அறியலாம். உயர்ந்த யானையை வீழ்த்திய அம்பு, பின்பு புலியையும் அதன்பின் மானையும், அதன்பின் பன்றியையும் அதன்பின் புற்றில் உள்ள உடும்பினையும் துளைத்த செய்தி இதில் கூறப்படுதல் காணலாம். (213)

7612. போர்த்த பேரியின் கண்ணன
காளத்தின் பொகுட்ட
வார்த்த வாயன கையன
வானையின் கழுத்த
வீர்த்த தேரன விவுளியின்
றலையன வெவர்க்கும்
பார்த்த நோக்கன கலந்தன
விலக்குவன் பகழி.

போர்த்த பேரியின் கண்ணன, காளத்தின் பொகுட்ட,
ஆர்த்த வாயன, கையன, ஆனையின் கழுத்த,
ஈர்த்த தேரன, இவுளியின் தலையன, எவர்க்கும்
பார்த்த நோக்கன, கலந்தன — இலக்குவன் பகழி.

பொ :—இலக்குவன் அம்புகள் - தோல் போர்த்த பேரியின் கண்ணிடத்துப் பாய்வனவும், காளம் என்னும் ஊது கருவியின் பொகுட்டுப் போன்ற முனையில் பாய்வனவும், ஆரவாரித்த (காலாட் படையின்) வாயில் பாய்வனவும், போர்க் கருவிகளைப் பிடித்த அவர்கள் கைகளில் பாய்வனவும், ஆனைகளின் கழுத்தில் பாய்வனவும், குதிரையால் இழுக்கப்பட்ட தேரில் பாய்வனவும், குதிரையின் தலையில் பாய்வனவும், யார்க்கும் பார்க்கின்ற பார்வையிடங்களில் எல்லாம் பாய்வனவுமாய் எங்கும் கலந்தன.

கு :—பார்க்குமிடந்தோறும் நீக்கமற நிறைந்து நின்றன இலக்குவன் அம்புகள் என்றவாறு. பேரியைக் குறுந்தடியால் அடித்தற்குரிய இடம் கண் எனப்படும். பொகுட்டு என்பது தாமரைப் பூவிலுள்ள கொட்டையின் பெயர் அந்தக் கொட்டை போன்ற காளத்தின் முனையை உவமை யாகுபெயராய் உணர்த்தியது. யானையும், தேரும், குதிரையும் ஆகிய மூவகைப் படையினும் இலக்குவன் அம்பு பாய்ந்தமை வெளிப்படக் கூறியவர் காலாட் படையில் பாய்ந்தமை குறிப்பால் கொள்ளுமாறு 'ஆர்த்த வாயன, கையன' என்றார். ஆர்த்தவாய் என்றது காலாள் வீரர்களின் வாய்களை.

கையன என்றதும் அவர்தம் படை பற்றிய கைகளையேயாம். எவர்க்கும் பார்த்த நோக்கன என்றது, எத்தகையோரும் பார்த்த பார்த்த இடங்கள் தோறும் அவ்வம்புகள் கலந்தன என்றவாறு. பார்த்த நோக்கன என்றது பார்க்கப்பட்ட இடங்களையேயாம். கண்ணன, பொருட்ட, வாயன, கையன, கழுத்த, தோன, தலையன, நோக்கனவாய் இலக்குவன் பகழி கலந்தன எனக் குறிப்பு முற்றெச்சங்களாக்கி முடிக்க. (214)

யானைகள்

7613. மருப்பி ழந்தன களிறெலாம்
வால்செவி யிழந்த
நெருப்பு குங்கண்க ளிழந்தன
நெடுங்கரந் துணிந்த
செருப்பு குங்கடுங் காத்திர
மிழந்தன சிகரப்
பொருப்பு ருண்டன வாமெனத்
தலத்திடைப் புரண்ட.

மருப்பு இழந்தன; – களிறு
எலாம் – வால் செவி இழந்த;
நெருப்பு உகும் கண்கள்
இழந்தன; நெடுங்கரம் இழந்த;
செருப் புகும் கடுங்காத்திரம்
இழந்தன ; சிகரப்
பொருப்பு உருண்டனவாம்
எனத் தலத்திடைப் புரண்ட.

பொ :—யானைகள் எல்லாம் - கொம்புகளை இழந்தனவாகியும், வால்களையும் செவிகளையும் இழந்தனவாகியும், சினநெருப்பைச் சிந்துகின்ற கண்களை இழந்தனவாகியும், நீண்ட துதிக்கையை இழந்தனவாகியும், போர்க்குப் புகுகின்ற கடுமையான முன்னங்கால்களை இழந்தனவாகியும், சிகரத்தையுடைய மலைபுரண்டன என்னுமாறு நிலத்தில் புரண்டன.

கு :—களிறெலாம் இழந்தனவும் துணிந்தனவுமாய்த் தலத்திடைப் புரண்டன என இயையும். யானைகள் தரையில் புரண்ட தோற்றம் சிகரங்களையுடைய பெரிய மலைகள் புரண்டன போலக்

காணப்பட்டன என்றவாறு. செரு - போர். காத்திரம் என்றது யானையின் முன்னங் கால்களை. போர்க்குப் போக முற்பட்டு உதவுவது முன்னங்கால்களே ஆதலின், அவற்றை செருப்புகுங் கடுங் காத்திரம்' என்றார். "காத்திரங்களால் தலத்தொடுந் தேய்த்த தோர்களிறு" (பால - வரைக்காட்சி. 6) என முன்னும் இப் பொருளில் இச்சொல் ஆளப்பட்டிருத்தல் நினையலாம். மருப்பு முதலிய உறுப்புகள் உள்வழி மலையொடு யானைக்குள்ள வேறுபாடு காணப்பட்டது; அவற்றை இழந்த நிலையில் யானை மலையொடு வேறுபாடு சிறிதுமின்றி ஒத்திருந்தமை புலப்படுத்தி, 'பொருப்புருண்டன வாமெனத் தலத்திடைப் புரண்ட' என்றார். (215)

## குதிரைகள்

**7614.** நிரந்த ரந்தொடை நெகிழ்த்தலிற்
றிசையெங்கு நிறைந்த
சரந்த லைத்தலைப் படப்பட
மயங்கின சாய்ந்த
வுரந்த லத்துற வுழைத்தவாற்
பிழைத்த தொன்றில்லை
குரந்த லத்தினும் விசும்பினு
மிதித்திலாக் குதிரை.

நிரந்தரம் தொடை நெகிழ்த்தலின், திசை எங்கும் நிறைந்த
சரம் தலைத்தலைப் படப்பட மயங்கின சாய்ந்த;
உரம் தலத்துற உழைத்தவால்; பிழைத்தது ஒன்றுஇல்லை;
குரம் தலத்தினும் விசும்பினும் மிதித்திலாக் குதிரை.

பொ :—தரையிலும் விண்ணிலும் குளம்புகளால் மிதித்துச் செல்லாத (பறக்கின்ற) குதிரைகள் - இடைவிடாமல் (இலக்குவன்) தொடுத்து விடுத்தலினால் எத்திசையிலும் நிறைந்த அம்புகள் தமது தலைகள் தோறும் தைக்கத் தைக்க மயங்கினவாய்ச் சாய்ந்தவை, தம் மார்புகள் தரையில் பொருந்துமாறு வருந்தின ஆதலின் அவற்றுள் ஒன்றுதானும் உயிர்பிழைக்கவில்லை.

கு :—குரம் - குளம்பு. குரம் தலத்தினுவிசும்பினுமிதித்திலாக் குதிரை உரம் தலத்துற உழைத்தவால் என்றதால் குதிரைகளின் பெருமையையும் அவை அடைந்தசிறுமையையும்புலப்படுத்தியவாறு. அம்புகளை வில்லில் தொடுத்து விடுத்தலை இங்குத்தொடை நெகிழ்த்தலாகக் கூறினர். 'புள்ளியற் கலிமா' என்பதற்கேற்பப் பறக்கும்

இயல்புடையவாதலின் 'குரம் தலத்தினும் விசும்பினும் மிதித்திலாக் குதிரை' என்றார். உழைத்தல் - வருந்துதல். எல்லாக் குதிரைகளும் இலக்குவன் அம்புகளால் இறந்தன என்பார், 'பிழைத்த தொன்றில்லை' என்றார். இதனால் குதிரைப் படையின் அழிவு கூறிய வாறு. (216)

**7615.** பல்ல வப்படை படப்படு
புரவிய பல்கால்
வில்லு டைத்தலை யாளொடு
சூதரை வீழ்த்த
வெல்லை யற்றசெங் குருதியி
னீர்ப்புண்ட வல்லால்
செல்ல கிற்றில நின்றில
கொடிநெடுந் தேர்கள்.

பல்லவப்படை பட, படு புரவிய, பல்கால்
வில்லுடைத் தலையாளொடு சூதரை வீழ்த்த,
எல்லை அற்ற செங்குருதியின் ஈர்ப்புண்ட அல்லால்,
செல்ல கிற்றில, நின்றில – கொடி நெடுந் தேர்கள்.

பொ :—(இலக்குவன் விடுத்த), தளிர்போன்று செந்நிறமும் கூர்மையும் உடைய அம்புகள் தைத்தலால், இறந்துபட்ட குதிரைகளையுடையனவும், வில்லையுடைய தேர் வீரரையும் பாகரையும் பலமுறை வீழ்த்தினவும், ஆகிய, கொடிகள் கட்டப்பெற்ற தேர்கள், அளவிலாத சிவந்த இரத்த வெள்ளத்தால் இழுப்புண்டனவே அன்றித் தாமே செல்லவும் ஆற்றலற்றனவாய், ஓரிடத்தில் நிற்கவும் இயலாதன ஆயின.

கு :—பல்லவம் - தளிர்; அம்புக்குக் கூர்மையாலும் செந்நிறத்தாலும் உவமை ஆயிற்று. படுபுரவியவும், தலையாளொடு சூதரை வீழ்த்தவும் ஆய கொடி நெடுந் தேர்கள் செல்லகிற்றில; நின்றில என இயையும். தேரில் நின்று ஒருமுறை போர் செய்த தேர்த் தலைவரும் பாகரும் வீழ்ந்தவுடன் அத்தேரில் வேறொரு தலைவனும் பாகனும் அமர்ந்து போர் செய்தலும் உண்டு ஆகலின், பல்கால் தலையாளொடு சூதரை வீழ்த்த தேர்கள் என்றார். தலையாள் என்றது தேரில் இருந்து போர் செய்யும் தேர் வீரரை. சூதர் - தேர்ப்பாகர். முன்னது, படுபுரவிய தேர்கள், வீழ்த்த தேர்கள் என இயையும். முன்னது, குறிப்புப் பெயரெச்சம்; பின்னது தெரிநிலை வினைப்பெயரெச்சம்.

இறந்துபட்ட குதிரைகளையுடையனவும், தலையாளையும் பாகரையும் வீழ்த்தினவும் ஆய தேர்கள், செல்லுதல் கூடாமையின் ஓரிடத்தில் நின்றிருத்தலே இயல்பாகவும், எல்லையற்ற செங்குருதியின் ஈர்ப் புண்டவாகலின் நின்றிலவாயின என்பார், செல்லகிற்றில நின்றில' என்றார். ஈர்ப்புண்ட அல்லால் தாமே செல்லகிற்றில; குருதியி னீர்ப்பால் நிற்கும் இயல்பினவும் அல்ல ஆயின என்க. (217)

**7616.** பேழை யொத்தகல் வாயன
பேய்க்கண முகக்கும்
மூழை யொத்தன கழுத்தற
வீழ்ந்தன முறைசால்
ஊழை யொத்தன வொருகணை
தைத்தன வுதிரத்
தாழி யொத்தவெங் குருதியின்
மிதப்பன தலைகள்.

பேழை ஒத்து அகல் வாயன பேய்க்கணம் முகக்கும்
மூழை ஒத்தன கழுத்து அற வீழ்ந்தன, முறைசால்
ஊழை ஒத்தன ஒருகணை தைத்தன, உதிரத்
தாழி ஒத்த வெங்குருதியில் மிதப்பன, தலைகள்.

பொ :—(பயனைத் தவறாது தரும்) முறைமை மிக்க ஊழ்வினையை ஒத்ததாகிய (இலக்குவனது) ஒருகணை தைக்கப் பெற்றனவும், கழுத்து அறுதலால் வீழ்ந்தனவும், இரத்தக் குடத்தை ஒத்த வெவ்விய இரத்த வெள்ளத்தில் மிதப்பனவும் ஆய தலைகள்—பெட்டி யைப் போன்று அகன்ற வாயையுடைய பேய்க்கணங்கள், நிணக் கூழை முகக்கும் அகப்பையை யொத்தன.

கு :—தலைகள், முகக்கும் மூழை ஒத்தன என இயையும். போர்க் களத்தில் பேய்க்கணங்கள் பரணிக்கூழ் அட்டு அதனை அகப்பையில் முகந்து பகிர்ந்தளிக்கும் இயல்பு நினைந்து, கணை தைத்த தலைகள் பேய்க்கணம் முகக்கும் மூழை ஒத்தன என்றார். அகன்ற வாயை யுடையனவாய பேய்க்கணம் என்க. இலக்குவன் கணை பகைவரைக் கொல்லுதலில் தப்பாதது ஆதலின், முறைசால் ஊழை ஒத்தன ஓர் கணை என மற்றொன்று சூழினும் தான் முந்துறும் ஊழை உவமை கூறினர். கணை தைத்த தலையை மூழை போன்றதாக உவமித்த மையின் அம்மூழை முகத்தற்குரிய தாழிபோன்றதாகக் குருதிப் பரப் பைக் கூறினர். தாழி - மிடா. உடம்பினின்றும் வெளிவந்த கால

அணிமை புலப்பட 'வெங்குருதி' என்ருர். உடம்பில் நின்று வெளி வருங்கால் குருதி வெப்ப முடையதாதல் இயல்பு. கழுத்தற வீழ்ந் தனவும், ஒருகணை தைத்தனவும், குருதியில் மிதப்பனவுமாய தலைகள், பேய்க்கணம் முகக்கும் மூழை யொத்தன என இயையும். "இங்கே தலையின் வேல்பாய்ந்த இவை மூழைகளாக் கொள்ளீரே" (கலிங்கத்துப் - 563) என்று சயங்கொண்டார் கூறியுள்ளதும் இங்கு நினைக. (218)

**7617.** ஒட்டி நாயகன் வென்றிநாள்
குறித்தொளிர் முளைக
ளட்டி வைத்தன பாலிகை
நிகர்த்தன வழிந்து
நட்ட வாமென வீழ்ந்தன
துடிகளி னவைதீர்
வட்ட வான்கணில் வதிந்தன
வருணசா மரைகள்.

ஒட்டி நாயகன் வென்றிநாள் குறித்து ஒளிர்முளைகள்
அட்டி வைத்தன பாலிகை நிகர்த்தன – அழிந்து
நட்டவாம் என வீழ்ந்தன, துடிகளின் நவைதீர்
வட்ட வான் கணில், வதிந்தன வருண சாமரைகள்.

பொ :—அழிந்து நிலத்தில் நட்டாற்போல வீழ்ந்தனவாகிய உடுக்கைகளின் குற்றமற்ற வட்டமான பெரிய கண்களில் தங்கின வாகிய நல்லநிறமுடைய வெண்சாமரைகளின் தோற்றம்,—உலக நாயகனுகிய இராமன் (அரக்கரை வெல்வதற்கு முன்னமே) அரக்கரை வென்றி கொள்ளும் நாளைக் குறித்துச் சூள் செய்துகொண்டு (அவ் வெற்றிவிழாத் தொடக்கத்திற்கு) முளைகள் இட்டுவைத்தனவாகிய முளைப் பாலிகையை ஒத்து விளங்கின.

கு :—உடுக்கைகள் போரில் தம் இயல்பழிந்து தரையில் நட்டாற் போல் வீழ்கின்றன; அவ்வுடுக்கைகளின் கண்களில் சாமரைகள் வந்து வீழ்ந்து செங்குத்தாக நிற்கின்றன. இவற்றின் தோற்றம் முளைப் பாலிகை போலக் காட்சியளிக்கின்றன. கிழிந்த உடுக்கை, பாலிகை போன்றது; அதில் வதிந்த வெண்சாமரைகள் முளைகளைப் போன்றிருந்தன. போர்க்களத்தில் முளைப்பாலிகை வர இயைபு என்னை ? என்ற வினவை எழுப்பிக் கொண்டு அதற்குக் காரணம் கற்பித்துக் கூறுகின்ருர். இராமன் அரக்கரை வெல்வது உறுதி

என்ற எண்ணத்தால் சூள் செய்து கொண்டு, அவ்வெற்றிவிழாவின் தொடக்கமாக முளைகள் அட்டிவைத்த பாலிகை என்று தற்குறிப் பேற்றமாகக் கூறியவாறு. ஒட்டுதல் - சூள் செய்தல். வென்றி நாள் குறித்து ஒட்டி என்க. முளைகட்கு ஒளி வீசும் இயல்பு இருத்த லால் ஒளிர்முளை என்றார். அட்டிவைத்தல் - இட்டு வைத்தல். பாலிகை என்பது மண்ணுலியன்ற வாய் அகன்ற தட்டு. விழாத் தொடக்கத்தை உணர்த்த பாலிகையில் முளைகளை இட்டுவைப்பது மரபு. துடி - உடுக்கை; போரில் முழக்கும் ஒருவகை வாத்தியம். இலக்குவன் அம்பால் இவ்வுடுக்கை அழிந்து நிலத்தில் நட்டாற் போல வீழ்ந்துள்ளன என்க. வட்டம் குற்றமின்றி அமைந்திருந்தது என்பார், 'நவைதீர் வட்ட வான்கண்' என்றார். கண் என்பது முழக்குவதற்குரிய இடம். அதன் சிறப்புப் புலப்பட 'வான்கண்' என்றார். வதிதல் - தங்குதல். வருணம் - நிறம். இங்கு வெண்ணி றத்தையே வருணம் என்றார். (219)

**7618.** எரிந்த வெங்கணை நெற்றியிற்
 படுதொறும் யானை
யரிந்த வங்குசத் தங்கையிற்
 கல்வியி னமையா
திரிந்த வேகத்த பாகர்க
 டீர்ந்தன செருநேர்
புரிந்த வானரத் தானையிற்
 புக்கன புயலின்.

எரிந்த வெங்கணை நெற்றியில் படுதொறும், யானை,
அரிந்த அங்குசத்து அங்கையின் கல்வியின் அமையா,
திரிந்த வேகத்த, பாகர்கள் தீர்ந்தன, செருநேர்
புரிந்த வானரத் தானையில் புக்கன, புயலின்.

பொ :—(இலக்குவனது) எரியும் தன்மையுள்ள கொடிய அம்புகள் தம் நெற்றியில் படும் தோறும் யானைகள், உடம்பினை அரிந்து பழகிய அங்குசத்தையுடைய அழகிய கைகளின் கல்வியினால் அமையா வாய்(ப்பாகற்கு) மாறுபட்ட வேகத்தினையுடையவாய்த் தம் பாகர்களை நீங்கினவாய்ப் போரைத் தம் நேரில் செய்த குரங்குச் சேனைக்குள் மேகங்களைப்போலப் புகுந்தன.

கு :—அரக்கர் படையிலுள்ள யானைகள் தம் நெற்றியில் இலக்கு வனது அம்பு பட்டவுடனே பாகர்கள் தம் அங்குசம் ஏந்திய கைகளின்

கல்வியால் அமைதியுருவாய் அவர் கருத்திற்கு மேற்பட்ட வேகத்தை யடையனவாய் அப்பாகர்களை நீங்கினவாய் நேரே நின்று போர் புரிந்த வானரப் படைக்குள் புகுந்தன என்றவாறு. வெங்கணைபட்ட வேதனை மிகுதியால் வருந்திப் பாகரையும் தள்ளிவிட்டுப் பகைவர் சேனையை அடைந்தன என்றவாறு. புயலின் புக்க என இயையும். கரிய நிறம் பற்றி யானைக்கு மேகம் உவமை. பகைவர் படையில் புகுந்தால் தமக்கு வரும் ஏதத்தையும் எண்ணுமல் அங்குப் புகுந்தது, அங்கு உள்ளார் இலக்குவன் கணையால் துன்புருது இருந்தமை எண்ணிப் போலாம். அரிந்த அங்குசம் என்றது 'அரியும் இயல்பினது ஆகிய அங்குசம்' என்றவாறு. அங்குசத்தங்கை என்றது, அங்குசம் தாங்கிய அழகிய பாகர்களின் கையை. மாறுபட்ட வேகத்தை மேற்கொண்டமையால் பாகர்களையும் வீழ்த்தின என்பார், 'பாகர்கள் தீர்ந்தன' என்ருர். இதனுல் யானைப் படைகளைத் துன்புறுத்திய இலக்குவனது கணையின் பெருமை புலப்படுத்திய வாறு. (220)

**7619.** வேனி லானன்ன விலக்குவன்
  விடுகணை விலக்க
மான வெள்ளெயிற் றரக்கர்தம்
  படைக்கல வாரி
போன போனவன் றிசைதொறும்
  பொறிக்குலம் பொடிப்ப
மீனெ லாமுடன் விசும்பினின்
  றுதிர்ந்தென வீழ்ந்த.

வேனிலான் அன்ன இலக்குவன் விடுகணை விலக்க,
மான வெள் எயிற்று அரக்கர்தம் படைக்கல வாரி
போன போன வன்திசைதொறும் பொறிக்குலம் பொடிப்ப,
மீன் எலாம் உடன் விசும்பின் நின்று உதிர்ந்தென வீழ்ந்த.

பொ:—மன்மதனை ஒத்த அழகனுகிய இலக்குவன் விட்ட அம்புகள் விலக்கியதால் மானத்தையும் வெள்ளிய பற்களையும் உடைய அரக்கர் தம் படைக்கலங்களாகிய கடல், சென்ற சென்ற வலிய திசைகள் தோறும் நெருப்புப் பொறித்திரள் தோன்றுமாறு, விண்மீன்கள் எல்லாம் ஒருங்கே விண்ணில் நின்றும் தரையில் உதிர்ந்தன என்னுமாறு, தடைப்பட்டு வீழ்ந்தன.

கு :—இலக்குவனது கணை விலக்கியதால் தடைப்பட்டுப் போன படைக்கலங்கள் நெருப்புப் பொறி பறக்க வீழ்ந்த தோற்றம், விண் மீன்கள் எல்லாம் உதிர்ந்து வீழ்ந்தனபோல இருந்தன என்றவாறு. மானம் என்றது அபிமானத்தை. பொறி என்றது நெருப்புப் பொறியை. இலக்குவன் கணை விலக்கும்போது அரக்கர்படைக்கலம் தாக்குண்ட நிலையில் நெருப்புப் பொறிகள் சிந்தின என்க. அரக்கரின் படைக்கல மிகுதி புலப்படுத்தப் படைக்கலவாரி என உருவகம் செய் தார். வாரி - கடல். பொறிக்குலம் பொடிப்ப வீழ்ந்த என இயையும். பொடித்தல் - தோன்றுதல். (221)

**7620.** கரங் குடைந்தன தொடர்ந்துபோய்க்
கொய்யுளைக் கடுமாக்
குரங்கு டைந்தன வெரிநுறக்
கொடிநெடுங் கொற்றத்
திரங்கு டைந்தன வணிநெடுந்
தேர்க்குலங் குடைந்த
அரங்கு டைந்தன வயினெடு
வாளிக ளம்மா.

கரம் குடைந்தன, தொடர்ந்து
போய்க் கொய் உளைக் கடுமாக்
குரம் குடைந்தன, வெரிந்
உறக் கொடி நெடுங் கொற்றத்
திரம் குடைந்தன, அணி
நெடுந் தேர்க்குலம் குடைந்த,—
அரம் குடைந்தன அயில்
நெடு வாளிகள் அம்மா !

பொ :—அரத்தால் அராவப்பட்டனவாகிய கூரிய நெடிய அம்புகள், நாற்படையும் பின்னிடுமாறு யானைப் படைகளின் கரங் களைக் குடைந்தன; அதன் பின்பு தொடர்ந்து சென்று கத்திரித்த பிடரி மயிரினையுடைய, விரைவுமிக்க குதிரைகளின் குளம்புகளைக் குடைந்தன; காலாள் வீரர்களின் கொடி தாங்கிய நெடிய வெற்றிக் குரிய வலிமையைக் குடைந்தன ; அழகிய நீண்ட தேர்ப் படைகளைக் குடைந்தன.

கு :—நால்வகைப் படைகளும் பின்னிடுமாறு இலக்குவனது அம்பு குடைந்து வருத்தினமை புலப்படுத்தியவாறு. நால்வகைப்

படையுள் கொய்யுளைக் கடுமா எனக் குதிரையையும், தேர்க்குலம் எனத் தேரையும், வெளிப்படக்கூறிக், கரங்குடைந்தன என யானை களின் துதிக்கையைக் குடைந்தமையையும், கொற்றத்திரங் குடைந்தன எனக் காலாளினைக் குடைந்தமையையும் குறிப்பால் புலப்படுத்தியவாறு. போரில் கையால் பகைவரைத் தாக்கும் இயல்பினது யானையே யாதலும், வெற்றிக்கொடி யேந்துதற்குரிய கொற்றமுடையவர் காலாளே யாதலும் தெளிவு. குடைதல் என்பது துளைத்து வருத்துதலை உணர்த்தியது. வாளிகள், வெரிந் உறக் கரம், குரம், கொற்றத்திரம், தேர்க்குலம் குடைந்த என இயையும். அரம் ஒன்றினால் குடையப்பெற்ற வாளி, நாற்படைகளையும் குடைந் தன என்ற நயம் காண்க. அரம் குடைதல் ஆவது கூர்மையுற அராவுதல். கொற்றத்திரம் என்புழித் திரம் - வலிமை. (222)

## அரக்கர் துறக்கம் புகுதல்

**7621.** துரக்கு மெய்யுணர் விருவினை
 களையெனுஞ் சொல்லின்
கரக்கும் வீரதை தீமையை
 யெனுமிது கண்டோம்
இரக்க நீங்கின ரறத்தொடுந்
 திறம்பின ரெனினும்
அரக்க ராக்கையை யரம்பையர்
 தழுவினர் விரும்பி.

'துரக்கும், மெய்யுணர்வு இருவினைகளை எனும் சொல்லின்
கரக்கும் வீரதை தீமையை' எனும் இது கண்டோம்;
இரக்கம் நீங்கினர், அறத்தொடுந்திறம்பினர் எனினும்
அரக்கர் ஆக்கையை அரம்பையர் தழுவினர், விரும்பி.

பொ :—அரக்கர்கள், இரக்கம் இல்லாதவர்களாய்த் தருமத் தோடு மாறுபட்டவர்கள என்றாலும் (வீரமே நோக்கி) அவர்கள் உடம்பை விண்ணுலகத்து அரம்பை மாதர் விரும்பித் தழுவினார்கள்; (இதனால்,) மெய்யுணர்வு இரு வினைகளையும் போக்கிவிடும்' என்ற (ஆன்றோர்) சொல்லாகிய ஆகம அளவையைப் போலவே, வீரம் தீமையை மறைத்துவிடும் என்ற இவ்வுண்மையையும் காட்சியளவை யால் கண்டு கொண்டோம்.

கு :—வீரதை - வீரம். அறம் செய்தவரையே தழுவும் இயல்பின ரான அரம்பையர், அறத்தொடு மாறுபட்ட அரக்கரையும் தழுவியது,

அவர் தம் வீரப் பெருமையாலேயாகும் என்பது புலப்படுத்தியவாறு. மெய்யுணர்வு தலைப்பட்டார் ஒரோவழி இருவினைகளைச் செய்ய நேர்ந் தாலும் மெய்யுணர்வு அவ்வினைகள் தம் பயன்களை யூட்டாதபடி துரத்திவிடும் என்பது மேலோர் கொள்கை. “தீதில்லை மாணி சிவகருமஞ் சிதைத்தானைச், சாதியும் வேதியன் தாதைதனைத் தாளி ரண்டும், சேதிப்ப வீசன் றிருவருளால் தேவர் தொழப் பாதகமே சோறு பற்றினவா தோணோக்கம்” (திருவாசகம். திருத்தோ ணோக்கம் - 7) எனவும், “அரனடிக் கன்பர் செய்யும் பாவமும் அறம தாகும்” (சிவஞான சித்தியார்-119) எனவும், மெய்யுணர்வு பெற்றோர் செய்த பாவம் பாவப்பயனாய துன்பத்தைத் தாராது நீங்கினமை விளக்கப்பட்டிருத்தல் காணலாம். சொல் என்றது நூலளவையை. நூலளவையைப் படித்தறிவது போலவே, வீரதை தீமையைக் கரக்கும் என்னும் இதனைக் காட்சியளவையால் கண்டோம் எனக் கூறியதாகக் கொள்க. துரக்கும் - துரத்தும்; நீக்கும். மெய்யுணர்வு இருவினைகளை மறைப்பதுபோல, வீரம் பாவத்தை மறைத்தது என் பதை, இரக்கமில்லாமல் அறத்தொடு மாறுபட்ட செயலையே செய்து பழகிய அரக்கர்கள் பாவப்பயனைத் துய்த்தலே முறையாகவும், அவர்கள் போரில் காட்டிய தூய வீரத் திறமையால் அரம்பையர் தழுவுதற்குரிய வீர சுவர்க்கத்தை அடைந்தமை கொண்டு உணர்ந் தோம் என்றவாறு. (223)

### துறக்கமே பெரியது

**7622.** மறக்கொ டுந்தொழி லரக்கர்கண்
மறுக்கிலா மழைபோல்
நிறக்கொ டுங்கணை நெருப்பொடு
நிகர்வன நிமிர
விறக்க மெய்தினர் யாவரு
மெய்தின ரெனினத்
துறக்க மென்பதிற் பெரியதொன்
றுளதெனச் சொல்லேம்.

மறக் கொடுந் தொழில்
அரக்கர்கள், மறுக்கிலா மழைபோல்
நிறக் கொடுங்கணை நெருப்பொடு
நிகர்வன நிமிர,

இறக்கம் எய்தினர் யாவரும்,
எய்தினர் எனின், அத்
துறக்கம் என்பதின் பெரியது
ஒன்று உளது எனச் சொல்லேம்.

பொ :—தடுக்க முடியாத பெரிய மழையைப்போல, (இலக்குவன் விட்ட) ஒளிவாய்ந்த கொடிய அம்புகள் நெருப்பொடு நிகர்ப்பனவாய் நிமிர்ந்து வந்து தாக்க, இறந்தவர்களாகிய வீரத்தோடு கூடிய கொடிய தொழிலைச் செய்யும் அரக்கர் யாவரும் வீர சுவர்க்கத்தை அடைந்தார்கள் என்ருல், அந்த வீரசுவர்க்கம் என்னும் உலகத்தைக் காட்டிலும் பெரியது ஒன்று இருக்கின்றது என்று இனிச் சொல்ல மாட்டோம்.

கு :—இலக்குவன் அம்புகளால் இறந்த அரக்கர் கணக்கிட முடியாத பேரளவினர் ஆகலின், அத்துணை அரக்கரும் புகுதற்கு இடம் கொடுத்த துறக்கமே எல்லாவற்றினும் பெரியது என்று புகழ்ந்தவாறு. இறக்கம் - இறப்பு. இறக்கமெய்தினராகிய அரக்கர்கள் யாவரும் என இயையும். மறம் - வீரம். இலக்குவன் விட்ட அம்புகளின் மிகுதி புலப்பட மறுக்கிலா மழையையும் அவற்றின் கொடுமை புலப்பட நெருப்பையும் உவமை கூறியவாறு. நிறம்-ஒளி. நிமிர்தலாவது நிமிர்ந்து சென்று தாக்குதல். துறக்கம் என்றது. இங்கு வீரசுவர்க்கத்தை. 'யாவரும் எய்தின ரெனின்' என்பது வியப்புச் சுவையை விளக்கியது. (224)

## இலக்குவன் பகழி

**7623.** ஒருவ ரைக்கர மொருவரைச்
சிரமற்றங் கொருவர்
குரைக ழற்றுணே தோளிணே
பிறமற்றுங் கொளலால்
விரவ லர்ப்பெரு வெறுமைய
வாயின வெவ்வே
றிரவு கற்றன போன்றன
விலக்குவன் பகழி.

ஒருவரைக் கரம், ஒருவரைச் சிரம், மற்று அங்கு ஒருவர் குரை கழல்துணே, தோள் இணே, பிற மற்றும் கொளலால், விரவலர்ப் பெரு வெறுமைய ஆயின; வெவ்வேறு இரவு கற்றன போன்றன – இலக்குவன் பகழி.

பொ :—இலக்குவனுடைய அம்புகள் - ஒருவரைக் கையையும், ஒருவரைத் தலையையும், அங்கு மற்றொருவரை ஒலிக்கின்ற வீரக் கழலினை அணிந்த இரு கால்களையும் இரு தோள்களையும் அவை போன்ற பிறமற்றைப் பொருள்களையும் கொள்ளுதலால், பகைவரைப் பெறாத வெறுமையுடையவாயினவாய் அவை வேறு வேறு வகையில் இரத்தல் தொழிலைக் கற்றனவற்றைப் போன்றன.

கு :—பொருள் பெறாத இரவலர் அப்பொருள் உடையார் உள் வழிச் சென்று சிறுசிறு பொருள்களையும் பெற்றுத் திரும்புதல்போல, இலக்குவன் கணைகள், பகைவரைப் பெறாமல் வெறுமையடைந்து, கிடைத்த பகைவர்களின் கரமும் சிரமு முதலிய சில உறுப்புக்களை மட்டும் பெற்றுத் திரும்பின என்றவாறு. இலக்குவன் பகழி பிறமற்றுங் கொளலால் வேறு வேறு யாசிப்பதைக் கற்றவைபோலத் தோன்றின என்க. விரவலர் – பகைவர். இது ஏதுத்தற்குறிப் பேற்றவணி. (225)

**7624.** சிலவ ரைக்கரஞ் சிலவ
ரைச்செவி சிலர்நாசி
சிலவ ரைக்கழல் சிலவ
ரைக்கண்கொ ளுஞ்செ[யல]ால்
நிலவ ரைத்தரு பொருள்[வழி]த்
தண்டமிழ் நிரப்பும்
புலவர் சொற்றுறை புரிந்தவும்
போன்றன புங்கம்.

சிலவரைக் கரம், சிலவரைச் செவி, சிலர் நாசி,
சிலவரைக் கழல், சிலவரைக்கண், கொளும் செயலால்
நிலவரைத் தரு பொருள்வழித் தண் தமிழ் நிரப்பும்
புலவர் சொல் துறை புரிந்தவும் போன்றன – புங்கம்.

பொ :—(இலக்குவன் எய்த) அம்புகள்,-சிலரைக் கையையும், சிலரைக் காதையும், சிலரை மூக்கையும், சிலரை அடியையும், சிலரைக் கண்ணையும் கொள்ளும் செயலால், பூமி எல்லையில் தமக்குத் தரும் பொருளுக்குத் தக்க நெறியில் குளிர்ந்த தமிழ்ச் செய்யுளைப் பாடி நிரப்புகின்ற புலவர் தம் சொல் நெறியை விரும்பிப் பின்பற்றுவனவும் போன்றன.

கு :—இலக்குவன் அம்புகள் பகைவர்தம் உறுப்புக்களில் ஒவ்வொன்றைப் பெற்றுச் செல்லும் செயலுக்கு மேல் இரவு கற்றன

போன்றன என உவமை கூறியவர், இங்கு அச் செயலுக்கே 'புலவர் சொற்றுறை புரிந்தவும் போன்றன என வேறுமோர் உவமை கூறிய வாறு. செல்வரிடம் சென்று பொருள் பெற்றுத் தமிழ்பாடும் புன்புலவர், அவர் தந்த பொருளுக்கு ஏற்ப அவர் தம் உறுப்புகளில் ஏதோ ஒன்றைச் சிறப்பித்துப் பாடி நிரப்புகின்ற தன்மைபோல, இலக்குவன் அம்பு பகைவர்கள்பால் கிடைத்த உறுப்புக்களை மட்டுமே அறுத்துத் தம் செயலை நிரப்பிச் சென்றன என்றவாறு. புரிதல் - விரும்புதல். புங்கம் - அம்பு. 'தருபொருள்வழித் தண்டமிழ் நிரப்பும் புலவர்' என்றதால், இவர் பொருள் பெற்று அப் பொருளுக்கு ஏற்பச் சில சொற்களைச் செய்யுளாக நிரப்பித்தரும் இயல்பினர் என்பது புலப்படும். நிரப்புதலாவது தம் கருத்திற் கேற்பச் சொற்களை வலிந்து சேர்த்துச் செய்யுளாக நிரப்புதல். (226)

52-ல் 221-1, 2 ஆகக் கீழ்வரும் மிகைப் பாடல்கள் காணப்படு கின்றன.

7624 (a) இலக்கு வன்கொடு மரத்திடை யெறியும் வெம்பகழி
கலக்க மற்றிடும் அர . ்தும் கரங்களைக் கடிந்தே
முலைக்கு வட்டவர் கன்னியீர் முன்றிலின் எறிய
விலக்கரும்விற லாளிகண் டவருயிர் விளிந்தார்.

(b) வடிசு டர்ப்பெரும் பகழிகள் ஏற்றின வதனத்து
அடல ரக்கரும் சிலருளர் அவர்தலை அறுத்தாங்
குடனெ டுத்தவர் மனையினுக் குரியகன் னியர்பால்
இட வுவப்பொடும் புழுக்கினர் ஊனிவை யறியார்.

**7625.** அறத்தி னின்னுயி ரனையவன்
கணைபட வரக்க
ரிறத்து மிங்கிறை நிற்பினென்
றிரியலின் மயங்கித்
திறத்தி றம்படத் திசைதொறுந்
திசைதொறுஞ் சிந்திப்
புறத்தி னோடின ரோடின
குருதியே போல.

அறத்தின் இன் உயிர் அனையவன் கணைபட, அரக்கர் 'இறத்தும், இங்கு இறை நிற்பின்' என்று இரியலின் மயங்கி, திறத்திறம் படத் திசை தொறும் திசைதொறும் சிந்திப் புறத்தின் ஓடினர், ஓடின குருதியே போல.

பொ :—தருமத்தின் இனிய உயிர் போன்றவனாகிய இலக்குவன் எய்த அம்புகள் படுதலால் அரக்கர். 'இங்குச் சிறிது போது நிற்பினும் இறந்து படுவோம்' என்று கூறிக்கொண்டு நிலைகெட்டு ஓடத் தொடங்குகையில், பலப்பல கூறுபடத் திக்குகள் தோறும் திக்குகள் தோறும் அங்கு ஓடிய இரத்த வெள்ளம் போலச் சிதறிப் புறத்தே ஓடினர்.

கு :—அறத்தினைக் காக்க வந்தவனாகலின் இலக்குவன் அறத்தின் இன்னுயிரனையவன் எனப்பட்டான். திறத்திறம்படுதலாவது பலப்பல கூறுகளாகப் பிரிதல். ஓடுங்கால் ஒருசேர ஓடுவராயின் இலக்குவன் அம்பு வந்து தாக்குமே என்ற அச்சத்தால் பல கூறுகளாகப் பிரிந்து பல திசையிலும் வேறு வேறாக ஓடுவாராயினர். போர்க்களத்தில் இரத்த வெள்ளம் வரையறையின்றிப் பல திசையிலும் பிரிந்து ஓடுவதுபோல, அரக்கரும் வரையறையின்றிப் பல வழிகளிலும் அஞ்சி ஓடுவாராயினர் என்க. இரிதல் - கெட்டு ஓடுதல். (227)

52-ல் 222-1, 2 ஆகக் கீழ்வரும் மிகைப்பாடல்கள் காணப்படுகின்றன.

7625 (a) குஞ்சரத் தொகை தேர்த்தொகை
குதிரையின் தொகைமேல்
விஞ்சு வாளெயிற் றரக்கர்தம்
தொகையெனும் வெள்ளம்
பஞ்சினில் படும் எரியென
இலக்குவன் பகழி
அஞ்செனப் படு கணத்தவை
யனைத்தையு மழித்த.

(b) வந்த மாப்படை அளப்பில வெள்ளங்கள் மடிய
அந்தி வானெனச் சிவந்ததங் கடுகள மமரில்
சிந்தி யோடிய வரக்கரில் சிலர்தச முகனுக்கு
இந்த வற்புத முரைத்துமென் றேடின ரிப்பால்.

## இலக்குவன் வில்லாண்மையைக் கும்பகருணன் வியத்தல்

**7626.** செருவின் மாண்டவர் பெருமையு
மிலக்குவன் செய்த
வரிவி லாண்மையு நோக்கிய
புலத்தியன் மருமான்

திரிபு ரஞ்செற்ற தேவனு
மிவனுமே செருவின்
ஒருவி லாளரென் ருயிரங்
காலெடுத் துரைத்தான்.

செருவில் மாண்டவர் பெருமையும், இலக்குவன் செய்த
வரிவில் ஆண்மையும், நோக்கிய புலத்தியன் மருமான்,
'திரிபுரம் செற்ற தேவனும் இவனுமே செருவின்
ஒருவிலாளர்' என்று ஆயிரம்கால் எடுத்து உரைத்தான்.

பொ :—போரில் இறந்தவரின் பெருக்கத்தையும் இலக்குவன் செய்து காட்டிய கட்டமைந்த விற்போரின் ஆண்மையையும் நோக்கிய கும்பகருணன், திரிபுரத்தை எரித்து அழித்த சிவனும் இந்த இலக்கு வனுமே போரில் ஒரு தன்மையரான வில்லாளர்கள் என்று ஆயிரம் முறை எடுத்துச் சொன்னான்.

கு :—திரிபுரமெரித்த விரிசடைக் கடவுளின் வில்வீரம் போன்றது இலக்குவன் வில்வீரம் என்றது, 'தேவனும் இவனுமே செருவில் ஒரு விலாளர்' என்று கூறி இவ்விருவரும் ஒருவர்க்கொருவர் இதர விதர உவமம் ஆதற்குரியர் என்பது விளக்கி இலக்குவனைச் சிறப் பித்தவாறு. புலத்தியன் மருமான் என்றது, புலத்தியனுடைய வழித் தோன்றலாகிய கும்பகருணனை. ஒருவிலாளர் என்றது ஒரு தன்மை யரான வில்லாளர் என்றவாறு. வியப்பு மிகுதியால் ஒருமுறை இரு முறை கூறி நிறுத்தாது ஆயிரம் முறை எடுத்துக் கூறுவானானான். பகைவனையும் பாராட்டும் கும்பகருணனது பண்பு இங்கு மதித்தற் குரியதாதல் காண்க. (228)

52-ல் 223-1 ஆகப் பின்வரும் மிகைப்பாடல் காணப்படுகின்றது.

7626 (a) உரைத்து நெஞ்சழன் றெருகணத்
திவனுயிர் குடித்தென்
கருத்து முற்றுவெ னெனச்சினம்
கதுவிடக் கடுந்தேர்
பரித்த திண்திறல் பாகரைப்
பகைவனுக் கெதிரே
பொருத்து மென்றடல் கும்பகன்
பொருக்கெனப் புகன்றான்.

## கும்பகருணன் இலக்குவனெடு பொர வருதல்

**7627.** படர்நெ டுந்தடந் தட்டிடைத்
திசைதொறும் பாகர்
கடவு கின்றது காற்றினு
மனத்தினுங் கடிய
தடல்வ யங்கொள்வெஞ் சீயநின்
ருர்க்கின்ற தம்பொன்
வடபெ ருங்கிரி பொருவுதே
ரோட்டினன் வந்தான்.

படர் நெடுந் தடந்தட்டிடைத்
திசைதொறும் பாகர்
கடவு கின்றது, காற்றினும்
மனத்தினும் கடியது,
அடல் வயங்கொள் வெஞ்சீயம்
நின்று ஆர்க்கின்றது, அம்பொன்
வட பெருங்கிரி பொருவு
தேர் ஓட்டினன் வந்தான்.

பொ :—பரந்த உயர்ந்த பெரிய தேர்த்தட்டில் உள்ள பாகரால் திசைகள் தோறும் செலுத்தப்படுவதும், வாயு வேகத்தினும் மன வேகத்தினும் மிக்க வேகமுடையதும், வலிமையும் வெற்றியும் கொண்ட கொடிய சிங்கம் பூட்டப்பட்டு நின்று ஆரவாரிப்பதும், அழகிய பொன்மயமான வடமேரு மலை போன்றதும் ஆகிய தேரை ஓட்டிக்கொண்டு (கும்பகருணன் இலக்குவன்முன்) வந்தான்.

கு :—கும்பகருணனது தேரின் பெருமை புலப்படுத்தியவாறு. தேர் மிகப் பெரிதாகலின் கும்பகருணன் விரும்புந் திசையில் ஓட்டு தற்குப் பலபாகர் தேரின் எண்திசையினும் அமர்ந்திருந்தமை புலப் படத் ‘தட்டிடைத் திசைதொறும் பாகர் கடவுகின்றது’ என்ருர். விரைந்த செலவினுக்கு எடுத்துக் காட்டாக உள்ளவை காற்றும் மனமுமே ஆதலின், அவற்றினும் கடியது எனக் கும்பகருணனது தேரின் வேகத்தைப் புலப்படுத்தியவாறு. கடி என்னும் உரிச் சொல் இங்கு விரைவை யுணர்த்தியது. அடல் - வலிமை. வயம் - வெற்றி. *சீய* நின்று ஆர்க்கின்றது எனவே அவன் தேரில் சிங்கங் களே பூட்டப் பெற்றிருந்தன என்பது புலனும். “ஆயிரம் கோளரி ஆளியாயிரம், ஆயிரம் மதகரி, பூதம் ஆயிரம், மாயிரு ஞாலத்தைச் சுமப்ப வாங்குவது, ஏயிருஞ் சுடர்மணித் தேரொன் றேறினன்”

(கும்பகருணன் வதைப் - 104) என முன்வந்துள்ளது நினைக. தேரின் உயர்ச்சியும் நிறமும் புலப்பட அம்பொன் வட பெருங்கிரியை உவமை கூறினர். வடபெருங்கிரி என்றது மேருமலையை. இவ்வுவமையால் அவன் தேர் பொன் கொண்டிழைத்தது என்பதும் புலனும். (229)

## அனுமன் இலக்குவனைத் தோள்மேல் ஏறுக எனல்

**7628.** தொளைகொள் வாணுகச் சுடர்நெடுந்
தேர்மிசைத் தோன்றி
வளைகொள் வெள்ளெயிற் றரக்கன்வெஞ்
செருத்தொழின் மலையக்
கிளைகொ ளாதிக லென்றெண்ணி
மாருதி கிடைத்தான்
இளைய வள்ளலே யேறுதி
தோண்மிசை யென்ருன்.

தொளைகொள் வாள்நுகச் சுடர்
நெடுந் தேர்மிசைத் தோன்றி,
வளைகொள் வெள் எயிற்று
அரக்கன் வெஞ்செருத் தொழில் மலைய,
'கிளைகொளாது, இகல்' என்று
எண்ணி, மாருதி கிடைத்தான்,
'இளைய வள்ளலே! ஏறுதி
தோள்மிசை' என்ருன்.

பொ :—'தொளை பொருந்திய ஒளிமிக்க நுகத்தையுடைய சுடர்கின்ற பெரிய தேர்மேல் தோன்றி, வளைவுகொண்ட வெள்ளிய கோரப் பற்களையுடைய கும்பகருணனுகிய அரக்கன் கொடிய போர்த் தொழில் செய்யாநிற்க, (இவன் ஊர்தியின்றிப் பொருகின்ற) போர் ஒப்புமையுடையது ஆகாது' என்று எண்ணி அனுமன், இலக்குவனை நெருங்கி, 'இளைய வள்ளலே! என் தோள்மேல் ஏறுக' என்று வேண்டினன்.

கு :—கும்பகருணனது தேரில் உள்ள நுகம் பொன்னுலியன்றது ஆகலின் 'வாள் நுகம்' எனச் சிறப்பிக்கப் பெற்றது. வளைகொள் வெள்ளெயிற்றரக்கன் என்று கும்பகருணனை இழித்துக் கூறினமை யால் வனப்புமிக்க தெய்வத்தன்மையுடைய இலக்குவன் என்பன

வருவித்துரைக்க. கோரப் பல்லையுடைய அரக்கன் தேர்மேல் நின்று பொரும்போது, எழில்மிக்க தெய்வத்தன்மையுடைய இலக்குவன் தரையில் நின்று பொருதல் தகாது என்பது அனுமனது கருத்து. கும்பகருணனின் நுகமுடைய தேரினும் நுகமில்லாது செல்லும் தான் சிறந்த ஊர்தியாம் என்பது அனுமனது உட்கோள். அத்தேரினும் உயர்ந்தும் விரைந்தும் திரியும் ஆற்றல் அனுமனுக்கு உண்மையும் நினைக. இனம் என்னும் பொருளுடைய கிளை இங்கு ஒப்பு என்னும் பொருளில் வந்தது; இனம் என்றற்கு ஒப்புமை இன்றியமையாதது ஆதல் நினைக. (230)

## இலக்குவன் அனுமன் தோள்மேல் ஏறுதல்

**7629.** ஏறி னானிளங் கோளரி
யிமையவ ராசி
கூறி னாரெடுத் தார்த்தது
வானரக் குழுவும்
நூறு பத்துடைப் பத்தியி
னொறிற்பரி பூண்ட
ஆறு தேரினு மகன்றதவ்
வநுமன்தன் றடந்தோள்.

ஏறினான், இளங் கோளரி; இமையவர் ஆசி
கூறினார்; எடுத்து ஆர்த்தது வானரக் குழுவும்;
நூறு பத்துடைப் பத்தியின் நொறில்பரி பூண்ட
ஆறுதேரினும் அகன்றது, அவ்அனுமன்தன் தடந்தோள்.

பொ :—இளஞ்சிங்கம் போன்றவனாகிய இலக்குவன் (அனுமன் தோளில்) ஏறினான்; தேவர்கள் வாழ்த்துக் கூறினார்கள்; வானரக் கூட்டமும் (வெல்க! வெல்க! எனக்) குரல் எடுத்து ஆரவாரித்தது; (அவன் ஏறி அமர்ந்தவுடன்) அந்த அனுமனுடைய பெரிய தோள் – ஆயிரம் என்ற எண்ணிக்கையுடையவாய், வரிசையாக உள்ள. விரைவினையுடைய, பரிகள் பூண்ட முறையாகச் செய்யப்பட்ட (கும்பகருணனது) தேரினும் பெரிதாய்ப் பரவித் தோன்றியது.

கு :—நொறிற்பரி - விரைந்து செல்லும் குதிரை. இங்குப் பரி என்றது சிங்கத்தை. பரிபோலத் தேரில் பூட்டப்படும் இயைபு பற்றி அப்பெயர் பெற்றது. மேல் "ஆயிரம் கோளரி, ஆளி ஆயிரம், ஆயிரம் மதகரி, பூதம் ஆயிரம்" (104) எனக் கும்பகருணன் தேரில் பூட்டப்பட்ட ஊர்திகளைக் குறித்துள்ளதும், அவற்றுள் குதிரைகள்

கூறப்படாமையும் ஓர்க. '' அடல் வயங்கொள் வெஞ்சீயம் நின்றூர்க் கின்றது '' என (229) முன் கூறியதும் நினைக. இனிப் பின்னிரண் டடிகளில் கூறப்பட்ட தேர், கும்பகருண னது தேராகக் கொள்ளாமல் படைத்து மொழிந்த உறழ்ச்சியாகக் கொண்டு, ஆயிரம் குதிரைகள் பூண்ட ஆறு தேர்கள் வரிசையாக நிற்பின் அந்த ஆறு தேர்களின் பரப்பைக் காட்டிலும் அனுமன் தோள்கள் பரந்து விரிந்து தோன்றின எனக் கூறலும் ஆம். 'வைகல் எண்டேர் செய்யுந் தச்சன் திங்கள் வலித்த காலன்னோனே' (புறநா-87) என்றது நினைக. இராவண னாலும் எடுக்க வியலாத கனமுடைய இலக்குவன் ஏறி அமர்ந்த வுடனே அனுமன் தோள் முன்னையிலும் விசாலமாகப் பரவித் தோன்றியது என்றவாறு. (231)

## இலக்குவன் அனுமன்மேல் அமர்ந்த தோற்றம்

**7630.** தன்னி னேர்பிறர் தானலா
    தில்லவன் றோண்மேல்
துன்னு பேரொளி யிலக்குவன்
    றோன்றிய தோற்றம்
பொன்னின் மால்வரை வெள்ளிமால்
    வரைமிசைப் பொலிந்த
தென்னு மாறன்றிப் பிறிதெடுத்
    தியம்புவ தியாதோ.

தன்னின் நேர் பிறர் தான்
    அலாது இல்லவன் தோள்மேல்,
துன்னு பேர் ஒளி இலக்குவன்
    தோன்றிய தோற்றம்,
பொன்னின் மால்வரை வெள்ளி
    மால்வரை மிசைப் பொலிந்தது
என்னுமாறு அன்றி, பிறிது
    எடுத்து இயம்புவது யாதோ ?

பொ :—தனக்கு உவமை தானே அல்லது, தனக்கு உவமம் ஆவார் பிறரை இல்லாதவனாகிய அனுமனது தோள்மேல் நெருங்கிய பேரொளியையுடைய இலக்குவன் தோன்றிய தோற்றம், பொன்னாலான பெரிய மேருமலை, வெள்ளியாலாய பெரிய கயிலாய மலைமேலே விளங்கிற்று, என்று சொல்வதன்றி, வேறு ஒன்று எடுத்துச் சொல்வதற்கு யாது உளது ?

கு :—வெண்ணிறமுடைய அனுமன் தோள்மேல் பொன்னிற முடைய இலக்குவன் அமர்ந்த தோற்றம், வெள்ளிமலைமேல் பொன் மலை அமர்ந்தாற்போன்று இருந்தது என்றவாறு. இது தவிர வேறு உவமம் சொல்ல இயலாது என்பதை இறுதியடி விளக்குகின்றது. தன்னின் நேர்தானலாது பிறர் இல்லவன் என இயையும். அனுமன் தனக்குவமை யில்லாத தகுதிமிக்கவன் என்றவாறு. (232)

## கும்பகருணன் அம்பருத்தூணி கட்டிக்கொண்டு வில்லை வளைத்தல்

**7631.** ஆங்கு வீரனோ டமர்செய்வா
 னமைந்த வாளரக்கன்
தாங்கு பல்கணைப் புட்டிலுந்
 தகைபெறக் கட்டி
வீங்கு தோள்வலிக் கேயது
 விசும்பில்வில் வெள்க
வாங்கி னனெடு வடவரை
 புரைவதோர் வரிவில்.

ஆங்கு, வீரனோடு அமர் செய்வான்
 அமைந்த வாள் அரக்கன்,
தாங்கு பல்கணைப் புட்டிலும்
 தகைபெறக் கட்டி,
வீங்கு தோள்வலிக்கு ஏயது,
 விசும்பில் வில் வெள்க,
வாங்கினன், நெடு வடவரை
 புரைவது ஓர் வரிவில்.

பொ :—அப்போது இலக்குவனாகிய வீரனோடு போர் செய்வதற்கு அமைந்தவனாகிய கொடிய கும்பகருணன், பல கணைகளைத் தாங்கி யுள்ள புட்டிலையும் அழகுபெறத் தோளில் கட்டிக்கொண்டு பருத்த தன் தோள் வலிமைக்குப் பொருத்தமானதும், உயர்ந்த மேருமலை போன்றதும் ஆகிய ஒரு கட்டமைந்த வில்லினை, வானவில்லும் நாணுமாறு வளைத்தான்.

கு :—அரக்கன் என்றது கும்பகருணனை. தகை-அழகு. ஏயது புரைவது ஓர் வரிவில் விசும்பில் வில் வெள்க வாங்கினன் என இயையும். விசும்பில் வில் என்றது, மேகத்தில் தோன்றும் இந்திர

வில்லை. வெள்குதல்-நாணுதல். வான வில்லினும் பெரிய வில்லைக் கும்பகருணன் வளைத்தமையால் அவ் வானவில் தன் சிறுமை கண்டு நாணுவதாயிற்று. வாங்குதல்-வளைத்தல். (233)

52ல் 228–1 ஆகக் கீழ்வரும் மிகைப்பாடல் காணப்படுகின்றது.

7631 (a) நாண் தெறித்தனன் பகிரண்டப்
பரப்பொடு நவைபோய்
மாண்ட விண்ணவர் மணித்தலை
துளங்கிட வயப்போர்
பூண்ட வானரம் நின்றதும்
புவியிடை மறிய
தூண்டி மற்றவன் இலக்குவன்
தனக்கிவை சொல்வான்.

## கும்பகருணன் கூறுவது 7632–7633

**7632.** இராமன் றம்பிநீ யிராவணன்
றம்பிநா னிருவேம்
பொராநின் றேமிது காணிய
வந்தனர் புலவோர்
பராவுந் தொல்செரு முறைவலிக்
குரியன பகர்ந்து
விராவு நல்லமர் விளைக்குதும்
யாமென விளம்பா.

இராமன் தம்பி நீ; இராவணன் தம்பி நான்; இருவேம் பொராநின்றேம்; இது காணிய வந்தனர், புலவோர்; பராவும் தொல் செருமுறை வலிக்கு உரியன பகர்ந்து, விராவு நல் அமர் விளைக்குதும், யாம்' என விளம்பா.

பொ :—'நீ இராமன் தம்பி; நான் இராவணன் தம்பி; நாம் இருவேமும் போர் செய்தற்காக நின்றிருக்கின்றோம்; நமது இந்தப் போரைக் காண்பதற்குத் தேவர்கள் வந்துள்ளனர்; புகழத்தக்க பழமையான போர் முறையின்படி நம் வலிமைக்கு உரிய வீர வார்த்தைகளைச் சொல்லிக்கொண்டு, யாம் பொருந்திய சிறந்த போரைச் செய்வோம்' என்று சொல்லி,

கு :—'என்றான்' என அடுத்த செய்யுளில் முடியும். இருதிறப் படையிலும் போர்க்குரிய தலைவர்கள் இராமனும் இராவணனுமே

யாதலின் அவர்தம் தம்பியர் என்ற தகுதிபெற்ற நாம், தக்கவாறு சிறந்த போரைச் செய்வோம் என்பது கும்பகருணன் கருத்து. புலவோர் என்றது தேவரை. தேவர் காணச் செய்யும் நம் போர் சிறந்த முறையில் அமையவேண்டும் என்றவாறு. பொர நின்றேம் என்பது எதுகை நோக்கி பொரா நின்றேம் என நீட்டல் விகாரம் பெற்றது; இயல்பாகவே கொண்டு எதிர்காலம் நிகழ்காலமாகத் தெளிவுபற்றிக் கூறப்பட்ட காலவழுவமைதியாகவும் கொள்ளலாம்.

(234)

**7633.** பெய்த வத்தினோர் பெண்கொடி
யெம்முடன் பிறந்தாள்
செய்த குற்றமொன் றில்லவ
ணுசிவெஞ் சினத்தாற்
கொய்த கொற்றவ மற்றவள்
கூந்தலைத் டீர்த்த
கைத லத்திடைக் கிடத்துவென்
காக்குதி யென்றான்.

'பெய் தவத்தின் ஓர் பெண் கொடி,
எம்முடன் பிறந்தாள்,
செய்த குற்றம் ஒன்று இல்லவள்,
நாசி வெஞ்சினத்தால்
கொய்த கொற்றவ! மற்று அவள்
கூந்தல் தொட்டு ஈர்த்த
கை தலத்திடைக் கிடத்துவென்;
காக்குதி' என்றான்.

பொ :—'எம்மிடத்துத் தங்கிய நல்வினையால் ஒரு பெண் கொடி எங்களுடன் பிறந்தாள்; செய்த தவறு ஒன்றும் இல்லாதவள்; அத் தன்மை வாய்ந்தவளின் மூக்கினைக் கொடிய கோபத்தால் அறுத்த கொற்றவனே! அவள் கூந்தலைத் தொட்டு இழுத்த உன் கையைப் கொய்து தரையிடைக் கிடத்தப் போகின்றேன் ; (வல்லையாயின்) காத்துக்கொள்' என்றான்.

கு :—இராவணன், கும்பகருணன், வீடணன் என்ற ஆடவர் மூவரோடு பெண்டிர் பலர் பிறவாது சூர்ப்பணகை ஒருத்தியே பிறந்த அருமை புலப்படப் 'பெய்தவத்தினோர் பெண் கொடி எம்முடன் பிறந் தாள்' என்றான். பெய்தல் இங்கு இலக்கணையால் தங்குதலை

உணர்த்தியது. முன்னைப் புண்ணியம் இல்லையெனின் அவள் பிறந்திருக்கமாட்டாள் என்றவாறு. கும்பகருணன் இலக்குவனைக் கண்டவுடன் அவன் சூர்ப்பணகையின் மூக்கறுத்த குற்றச் செயலே முதற்கண் நினைவிற்கு வருதலின், அதனைக் கூறலானான். ஓர் பெண்ணின் மூக்கையறுத்தல் குற்றம்; அதற்கு மேலும் புண்ணியப் பயனாய் அரிதிற் பிறந்த அவள் மூக்கினை அறுத்தல் பெருங்குற்றம்; அதற்குமேலும் குற்றம் ஒன்றும் செய்யாதவளின் மூக்கினை அறுத்தல் மிகப் பெருங் குற்றம் என்பதை நிரல்படக் கூறிப் புலப்படுத்தியவாறு. அவள் நாசியை அறுத்தற்கு இலக்குவன் வெஞ்சினம் காரணமே யன்றி—அவள் செய்த குற்றமொன்றுமில்லை என்பது புலப்படுத்த 'நாசி வெஞ்சினத்தால் கொய்த' என்றும், பெண்ணின் மூக்கை அறுத்தல் கொற்றமன்று என்ற கருத்துப் புலப்பட இகழ்ச்சிக் குறிப்பால் 'கொய்த கொற்றவ' என்றும் கூறினான். பெண்டிர் கூந்தல் பிற ஆடவரால் தொடத் தகுவது அன்று ஆகலின், அவள் கூந்தல் தொட்டீர்த்த கை பெருங்குற்றம் செய்த கை என்பது புலப்படுத்தியவாறு. அக் குற்றத்திற்கு முதலில் தண்டனை கொடுப்பதே முறையாகலின், 'தொட்டீர்த்த கை தலத்திடைக்கிடத்துவென்' என்றான். வல்லையேல் காக்குதி எனச் சொல்லெச்சமாக வருவிக்க. (235)

### இலக்குவன் மறுமொழி

**7634.** அல்லி னாற்செய்த நிறத்தவ
னனையது பகர
மல்லி னாற்செய்த தோளினன்
மாற்றங்க ணும்பால்
வில்லி னாற்சொல்லி னல்லது
வெந்திறல் வெள்கச்
சொல்லி னாற்சொலக் கற்றிலம்
யாமெனச் சொன்னான்.

அல்லினால் செய்த நிறத்தவன் அனையது பகர,
மல்லினால் செய்த புயத்தவன், 'மாற்றங்கள் நும்பால்
வில்லினால் சொல்லின் அல்லது, வெந்திறல் வெள்கச்
சொல்லினால் சொலக் கற்றிலம், யாம்' எனச் சொன்னான்.

பொ:—இருளினாற் செய்தாற்போன்ற கரிய நிறத்தவனாகிய கும்பகருணன் அவ்வாறு சொல்ல, மற்போர்த் தொழிலால் செய்தாற்

போன்ற தோளையுடைய இலக்குவன்,—'நும்மிடத்து வில்லினுல் மறுமொழி சொல்வதன்றிக் கொடிய திறமை நாணுமாறு, சொல்லினுல் சொல்லுவதற்கு யாம் கற்றிலோம் எனச் சொன்ஞன்.

கு :—கும்பகருணனது கருநிறத்தின் அழுத்தம் புலப்பட 'அல்லினுற் செய்த நிறத்தவன்' என்றும், இலக்குவன் தோள்களின் மற்போர்ப் பயிற்சியின் மிகுதி புலப்பட 'மல்லினுற் செய்த தோளினன்' என்றும் கூறினுர். கொடிய அரக்கரிடத்து வில்லினுல் பேசுவதே பயனளிக்கும், அன்றிச் சொல்லினுல் மறுமொழி சொல்லின் பயன்படாது என்பான் 'சொல்லினுற் சொலக்கற்றிலம்' என்ருன். செயலில் வீரத்தைக் காட்டாது சொல்லில் காட்டுவது திறமையன்று என்பான் 'வெந்திறல் வெள்க' என்ருன். சொல்லாற் சொல்லின் ஆண்மையே நாணும் என்பது கருத்து. வில்லினுற் சொல்லுதல் என்பது விற்போரால் தன் திறமையைக் காட்டுதல் என்றவாறு. 'கற்றிலம்யாம்' என்பது மாறுபடு புகழ்நிலை; நீவிர் கற்றுளீர் என்பது குறிப்பு. (236)

## இருவரும் பொருதல் 7635–7644

**7635.** விண்ணி ரண்டுகூ றுயது
பிளந்தது வெற்பு
மண்ணி ரண்டுறக் கிழிந்ததென்
றிமையவர் மறுகக்
கண்ணி ரண்டினுந் தீயுகக்
கதிர்முகப் பகழி
எண்ணி ரண்டினே டிரண்டொரு
தொடைதொடுத் தெய்தான்.

விண் இரண்டு கூறு ஆயது;
பிளந்தது வெற்பு;
மண் இரண்டு உறக் கிழிந்தது
என்று இமையவர் மறுக,
கண் இரண்டினும் தீ உகக்,
கதிர்முகப் பகழி
எண் – இரண்டினேடு இரண்டு ஒரு
தொடை தொடுத்து எய்தான்.

பொ :—(அப்போது கும்பகருணன் தன்) கண் இரண்டிலும் நெருப்புப் பொறி சிந்த, 'அண்ட முகடு இரண்டு கூருகியது; மலை

பிளந்தது; நிலம் இரண்டாகக் கிழிந்தது' என்று எண்ணித் தேவர்கள் கலங்குமாறு, ஒளிவிடுகின்ற முனைகளையுடைய பதினெட்டு அம்புகளை ஒரு தொடுப்பில் தொடுத்து விடுத்தான்.

கு :—கும்பகருணன் அம்பு விடுத்தது கண்டு தேவர்கள் விண்ணும் மண்ணும் மலையும் எல்லாம் பிளவுபடும் என்று கருதிக் கலங்கினார்கள் என்றவாறு. கண்ணிரண்டினும் தீயுகுதல் சினமிகுதியாலாயது. கும்பகருணன் ஒரு தொடையில் பதினெட்டு அம்புகளைத் தொடுத்து இலக்குவன்மேல் விடுத்தான் என்க. மறுகுதல் - கலங்குதல். (237)

**7636.** கொம்பு நாலுடைக் குலக்கரி
கும்பத்திற் குளித்த
உம்ப ராற்றலை யொதுக்கிய
வுருமெனச் செல்வ
வெம்பு வெஞ்சினத் திராவணற்
கிளையவன் விட்ட
வம்பு பத்தினோ டெட்டையும்
நான்கினு லறுத்தான்.

கொம்பு நாலுடைக் குலக்கரி கும்பத்தில் குளித்த,
உம்பர் ஆற்றலை ஒதுக்கிய, உரும் எனச் செல்வ,
வெம்பு வெஞ்சினத்து இராவணற்கு இளையவன் விட்ட
அம்பு பத்தினோடு எட்டையும் நான்கினல் அறுத்தான்.

பொ :—நான்கு கொம்புகளையுடைய ஐராவதம் என்னும் சிறந்த யானையின் மத்தகத்தில் அழுந்தினவும், தேவர்கள் வலிமையைத் தள்ளினவும், இடிபோலச் செல்வனவுமாகிய,—வெம்புகின்ற கொடிய கோபத்தையுடைய இராவணனுக்குத் தம்பியாகிய கும்பகருணன் விட்ட அம்பு பதினெட்டையும் (இலக்குவன்) நான்கு அம்பினல் அறுத்துத் தள்ளினன்.

கு :—குளித்தனவும், ஒதுக்கினவும், செல்வனவுமாகிய அம்பு என்க. கும்பகருணன் அம்புகள், முன் தேவரோடு போர் செய்த போது ஐராவதத்தின் மத்தகத்தில் பாய்ந்தும், தேவர்களின் ஆற்றலை ஒதுக்கித்தள்ளியும், இடிபோலச் சென்றும் பழகியவை என்க. அத்தகைய பேராற்றலுடைய பதினெட்டு அம்புகளையே இலக்குவன் தன் நான்கு அம்புகளால் அறுத்தான். இதனல் இலக்குவன் ஆற்றல் மிகுதி புலப்படுத்தியவாறு. (238)

**7637.** அறுத்த காலையி னரக்கனு
மமரரை நெடுநா
ளொறுத்த தாயிர முருவது
திசைமுக னுதவப்
பொறுத்த தாங்கொரு புகர்முகக்
கடுங்கணைப் புத்தே
ளிறுத்து மாற்றிது வல்லையே
லென்றுகோத் தெய்தான்.

அறுத்த காலையின், அரக்கனும்
அமரரை நெடு நாள்
ஒறுத்தது, ஆயிரம் உருவது,
திசைமுகன் உதவப்
பொறுத்தது, ஆங்கு ஒரு புகர்
முகக் கடுங்கணைப் புத்தேள்
'இறுத்து மாற்றிது வல்லையேல்'
என்று கோத்து எய்தான்.

பொ :—(இலக்குவன் அவ்வாறு தான் எய்த அம்புகளை) அறுத்து ஒழித்தபோது கும்பகருணனும்,—தேவர்களை நெடுநாள் காறும் வருத்தியதும், ஆயிரம் உருவங்களையுடையதும், பிரமன் கொடுக்கக் கையில் தாங்கப்பெற்றதும் ஆகிய ஓர் ஒளிமிக்க முனையையுடைய கடுமையான அம்பு ஆகிய தெய்வத்தை வில்லில் கோத்து, 'நீ வல்லமையுடையையாயின் இதனை முறித்து மாற்றுவாயாக' என்று கூறிக்கொண்டு விடுத்தான்.

கு :—கும்பகருணன் எய்த அம்பின் பெருமை புலப்பட அதனைக் 'கடுங்கணைப் புத்தேள்' என்றார். புத்தேள் - தெய்வம். பிரமனால் கொடுக்கப்பெற்ற பெருமையது ஆதலும் நினைக. ஒறுத்தல் - வருத்துதல். கணை ஒன்றாயினும் ஆயிரம் வடிவங்கள் கொண்டு சென்று பகைவரை அழிக்கும் ஆற்றல் உடையது ஆகலின், 'ஆயிரம் உருவது' என்றார். பொறுத்தல் - தாங்குதல். ஆங்கு, அசை. புகர் ஒளி; புள்ளி எனலும் ஆம். முகம் என்றது முனையை. கடுங்கணைப் புத்தேள் கோத்து, 'வல்லையேல் இது இறுத்துமாற்று' என்று எய்தான் என இயையும். (239)

**7638.** புரிந்து நோக்கிய திசைதொறும்
பகழியின் புயலா
யெரிந்து செல்வதை நோக்கிய
விராமனுக் கிளையான்
தெரிந்து மற்றது தன்னையோர்
தெய்வவெங் கணையா
லரிந்து வீழ்த்தலு மாயிர
வுருச்சர மற்ற.

புரிந்து நோக்கிய திசைதொறும் பகழியின் புயலாய், எரிந்து செல்வதை நோக்கிய இராமனுக்கு இளையான், தெரிந்து, மற்று அது தன்னை ஓர் தெய்வ வெங்கணையால் அரிந்து வீழ்த்தலும், ஆயிர உருச்சரம் அற்ற.

பொ :—திரும்பிப் பார்க்கும் திசைகள்தோறும் அம்பின் மழையாய் எரிந்துகொண்டு செல்வதைப் பார்த்த இலக்குவன் ஆராய்ந்து, அக் கணையை ஒரு தெய்வத்தன்மையுடைய கொடிய அம்பினுல் அரிந்து வீழ்த்துதலும் அந்த ஆயிரம் உருவங்களையுடைய அம்பு அழிந் தொழிந்தது.

கு :—புரிதல் இங்குத் திரும்புதலை உணர்த்தியது. அம்பு ஒன்ரு யினும் திரும்பிப் பார்க்கும் இடந்தோறும் அம்பு மாரியாக எரிந்து கொண்டு சென்றது என்க. தெரிதல் - ஆராய்தல். இதனை எந்தக் கணையால் மாற்றலாம் என்பதை ஆராய்ந்து தெளிந்து என்க. அது கணைப்புத்தேள் ஆதலின் அதனை அழிப்பதற்குத் தெய்வ வெங் கணையை இலக்குவன் எடுத்தான். ஆயிர உருவங்களையுடைய அக் கணை சிறிதும் தங்காது அற்று ஒழிந்தது என்றவாறு. சரத்தின் ஆயிர உருவை நோக்கி 'அற்ற' எனப் பன்மையாற் கூறினர் போலும். ஒருமைப் பன்மை மயக்கமாகக் கொள்க. மற்று, அசை. (240)

52ல் 235–1 ஆகப் பின்வரும் மிகைப்பாடல் காணப்படுகின்றது.

7638 (a) அதுகண் டாரடல் வானவ
ராசிகள் கூறித்
துதிகொண் டாரிட லரக்கனும்
துணைவிழி சிவந்தாங்
கிதுகண் டேனினிக் கழிந்ததுன்
னுயிரெனக் கனன்றே
கொதிகொண் டானடல் சிலையினைக்
குழைவுற வளைத்தான்.

**7639.** ஆறி ரண்டுவெங் கடுங்கணை
யனுமன்மே லழுத்தி
யேறு வெஞ்சர மிரண்டிளங்
குமரன்மே லேற்றி
நூறு மைம்பது மொருதொடை
தொடுத்தொரு நொடியில்
கூறு திக்கையும் விசும்பையு
மறைத்தனன் கொடியோன்.

ஆறு – இரண்டு வெங்கடுங்கணை அனுமன்மேல் அழுத்தி,
ஏறு வெஞ்சரம் இரண்டு இளங்குமரன்மேல் ஏற்றி,
நூறும் ஐம்பதும் ஒரு தொடை தொடுத்து ஒரு நொடியில்,
கூறுதிக்கையும் விசும்பையும் மறைத்தனன், கொடியோன்.

பொ :—கொடியவனாகிய கும்பகருணன்,—பன்னிரண்டு வெவ்விய கடுமையான அம்புகளை அனுமன்மேல் அழுந்தச் செய்துவிட்டு, ஆற்றல் மிக்க கொடிய அம்புகள் இரண்டினை இளங்குமரனாகிய இலக்குவன்மேல் எய்துவிட்டு, நூற்றைம்பது அம்புகளை ஒரே தொடையில் தொடுத்துவிட்டு, ஒரு நொடிப்பொழுதில் எண்வகைப்பட்ட திசைகளையும் ஆகாயத்தையும் மறைத்தான்.

கு :—ஏறுதல்-மிகுதல்; இங்கு ஆற்றல் மிகுதியை யுணர்த்தியது. இளங்குமரன் என்றது இலக்குவனை. எண் கூறுகளாகத் திசைகள் கூறப்படுதலின், கூறு திக்கையும் என்றார். நூற்றைம்பது என்பதை நூறும் ஐம்பதும் எனப் பிரித்துக் கூறியவாறு. இறுதியில் விடுத்த நூற்றைம்பது அம்புகளும் மண்ணையும் விண்ணையும் மறைத்தன என்றவாறு.
(241)

**7640.** மறைத்த வாளிக ளெவற்றையு
மவற்றினுன் மாற்றித்
துறைத்த லந்தொறுந் தலந்தொறு
நின்றுதேர் சுமக்கும்
பொறைக்க மைந்தவெங் கரிபரி
யாளிமாப் பூதம்
திறத்தி றம்படத் துணித்தவன்
றேரையுஞ் சிதைத்தான்.

மறைத்த வாளிகள் எவற்றையும் அவற்றினுன் மாற்றி,
துறைத் தலந்தொறும் தலந்தொறும் நின்று தேர் சுமக்கும்
பொறைக்கு அமைந்த வெங்கரி, பரி, ஆளி, மாப் பூதம்,
திறத்திறம்படத் துணித்து, அவன் தேரையும் சிதைத்தான்.

பொ :—அவ்வாறு திசைகளேயும் விண்ணேயும் மறைத்த கும்ப கருணனது அம்புகள் எல்லாவற்றையும் (இலக்குவன்) தன் அம்பு களால் போக்கிவிட்டுப் பூட்டுதற்குரிய இடந்தோறும் இடந்தோறும் நின்று தேரைச் சுமக்கின்றவும் சுமத்தல் தொழிலுக்கு ஏற்றனவுமான கொடிய யானே, குதிரை, சிங்கம், பெரிய பூதம் ஆகியவற்றைப் பலவகையாகக் கூறுபடுமாறு துணித்து அவன் தேரையும் சிதையச் செய்தான்.

கு :—அவற்றினுல் என்ற சுட்டு அவ்வாளிகளே ஒத்த வாளிக ளால் என்னும் பொருளது. தேரின் நான்கு பக்கங்களிலும் இறங்கி யேறத் துறைகள் அமைக்கப்பட்டுத் தேரைத் திருப்பாமலே எத் திசையிலும் நினேத்தவுடன் விடுதற்கேற்றவாறு, ஒருபுறம் யானே களேயும், ஒருபுறம் குதிரைகளேயும், ஒருபுறம் யாளிகளேயும், மற்ருெரு புறம் பூதங்களேயும் பூட்டியிருந்தமை புலப்படுத்தியவாறு. தேர் சுமக்கும் கரி, பொறைக்கமைந்த கரி எனத் தனித்தனி கூட்டுக. திறம் - வகை. சிதைத்தலாவது உருவு குலேத்தல். (242)

**7641.** தேர ழிந்தது செங்கதிர்ச்
செல்வனேச் சூழ்ந்த
ஊர ழிந்தது போற்றுரந்
தூர்பவ ருலந்தார்
நீர ழிந்திடா நெடுமழைக்
குழாத்திடை நிமிர்ந்த
பார வெஞ்சிலே யழிந்தெனத்
துமிந்ததப் பருவில்.

தேர் அழிந்தது, செங்கதிர்ச் செல்வனேச் சூழ்ந்த
ஊர் அழிந்ததுபோல்; துரந்து ஊர்பவர் உலந்தார்;
நீர் அழிந்திடா நெடுமழைக் குழாத்திடை நிமிர்ந்த
பார வெஞ்சிலே அழிந்தெனத் துமிந்தது, அப்பருவில்.

பொ :—சிவந்த கிரணங்களாகிய செல்வத்தையுடைய சூரியனேச் சூழ்ந்த பரிவேடம் அழிந்ததுபோலக் கும்பகருணனேத் தாங்கியிருந்த

தேர் அழிந்தது; அத் தேரில் பூட்டிய குதிரை முதலியவற்றைச் செலுத்தி நடத்தும் பாகர்கள் அழிந்தார்கள்; நீர் நீங்கப்பெருத நீண்ட மேகக் கூட்டத்திற்கு இடையில் நிமிர்ந்து தோன்றிய பெரிய கொடிய வானவில் அழிந்ததுபோல அவன் கையிலிருந்த பருத்த வில் துணிந்தது.

கு :—ஊர் - ஊர்கோள்; பரிவேடம். துரத்தல் - செலுத்துதல். துரந்து ஊர்பவர் என்றது பாகரை. கும்பகருணனது வில்லின் பருமை புலப்பட 'மழைக்குழாத்திடை நிமிர்ந்த பாரவெஞ்சிலை யழிந் தென' என உவமை கூறினர். "வீங்கு தோள்வலிக் கேயது விசும்பில் வில் வெள்க வாங்கினு னெடுவடவரை புரைவதோர் வரிவில்" (223) என முன்னும் அவ் வில் சிறப்பிக்கப் பெற்றிருத்தல் காண்க. கரிய நிறத்தினனுன கும்பகருணன் தாங்கிய வில் கரிய மேகக் குழாத் திடைத் தோன்றிய இந்திர வில்லைப் போன்றது என்க. நீரோடு கூடிய கரிய மேகக் கூட்டத்தில் தோன்றும் இயல்பு வானவில்லுக்கு உண்டு. நெடு மழையின் குழாம்போன்றவன் கும்பகருணன்; அம் மழைக் கூட்டத்தில் தோன்றும் வானவில்லைப் போன்றது அவன் பருவில் என்க. துமிதல் - துணிதல். (243)

**7642.** செய்த போரினை நோக்கியித்
தேரிடைச் சேர்ந்த
கொய்யு ளைக்கடுங் கோளரி
முதலிய குழுவை
யெய்து கொன்றன ஞேநெடு
மந்திர மியம்பி
வைது கொன்றன ஞேவென
வானவர் மயர்ந்தார்.

செய்த போரினை நோக்கி, 'இத்தேரிடைச் சேர்ந்த கொய் உளைக் கடுங் கோளரி முதலிய குழுவை எய்து கொன்றனஞே? நெடு மந்திரம் இயம்பி, வைது கொன்றனஞே' என, வானவர் மயர்ந்தார்.

பொ :—இலக்குவன் செய்த போரைப் பார்த்துத் தேவர்கள், 'இந்தக் கும்பகருணனுடைய தேரில் பூட்டிய, கொய்த பிடரியினை யுடைய கடுமையான வலிய சிங்கம் முதலிய கூட்டத்தை அம்பு எய்துதான் கொன்ருஞே? அல்லது, சிறந்த மந்திரத்தைச் சொல்லிச் சபித்துத்தான் கொன்ருஞே? என்று திகைப்பு எய்தினர்.

கு :—கும்பகருணன் தேரில் கரி, பரி, யாளி, பூதம் என்ற இவை பூட்டப்பட்டிருந்தன என்பது முன்னரே கூறப்பட்டது ஆதலின், கோளரி முதலிய குழுவை என்றது, அந்த நான்கு வகையான ஊர்திகளையே என்பது பெறப்படும். கொய்யுளை என்றது, அரிக்கு அடை. இனி, கொய்யுளை குதிரை எனலும் ஆம். இலக்குவன் இவற்றைக் கொன்ற விரைவினை நோக்கி 'மந்திரம் இயம்பி வைது கொன்றனனோ ?' என்று திகைப்பாராயினர். வைதல் - சபித்தல். மயர்தல்- திகைத்தல். (244)

## கும்பகருணன் கொதித்து, சூலப்படை எடுத்தல்

**7643.** ஊன்று தேரொடு சிலையிலன்
கடல்கிளர்ந் தொப்பா
னேன்று மற்றிவ னின்னுயிர்
குடிப்பலென் றுலக
மூன்றும் வென்றமைக் கிடுகுறி
யென்னமுச் சிகைத்தாய்த்
தோன்றும் வெஞ்சுடர்ச் சூலவெங்
கூற்றினைத் தொட்டான்.

ஊன்று தேரொடு சிலை இலன்,
கடல் கிளர்ந் தொப்பான்,
'ஏன்று, மற்று இவன் இன் உயிர்
குடிப்பென்' என்று, உலகம்
மூன்றும் வென்றமைக்கு இடுகுறி
என்ன முச் சிகைத்தாய்த்
தோன்றும் வெஞ்சுடர்ச் சூல
வெங்கூற்றினைத் தொட்டான்.

பொ :—தங்குதற்கு உரிய தேரொடு வில்லும் இல்லாதவனைச் சினந்து கடல் பொங்கினாற் போன்றவனாய் 'எதிர்த்து நின்று இந்த இலக்குவனுடைய இனிய உயிரைக் குடிப்பேன்' என்று சொல்லி மூன்று உலகங்களையும் வென்றமைக்கு இட்ட அடையாளம் என்று சொல்லுமாறு மூன்று முனைகளையுடையதாய்த் தோன்றும் கொடிய ஒளியையுடைய சூலப்படையாகிய கொடிய எமனைக் கையிற் கொண்டான்.

கு :—ஊன்றுதல் - தங்குதல். தனக்குச் சார்பாகிய தேர் எனினும் ஆம். தேரும் வில்லும் இழந்த நிலையில் கும்பகருணன் கொண்ட சினத்தின் மிகுதி புலப்படுத்தக் கடல் கிளர்ந்தொப்பான் என்றார். கிளர்ந்த என்புழி அகரம் விகாரத்தால் தொக்கது. ஏன்று-எதிர்த்து. உயிரைக் குடித்தல் என்பது உயிரை நீக்குதலை உணர்த்தியது; இலக்கணை. கும்பகருணன் மூன்றுலகங்களையும் வென்றமைக்கு இட்ட குறி என்னுமாறு மூன்று தலைகளையுடைய சூலம் என்றது, தற்குறிப்பேற்றம். சூல வெங்கூற்று என அதன் கொடுமை புலப்பட உருவகம் செய்தவாறு. தொடுதல் இங்குக் கையில் எடுத்தலை உணர்த்தியது. (245)

## கும்பகருணன் தரையில் நிற்பது கண்டு இலக்குவனும் தரையில் நிற்றல்

**7644.** இழியப் பாய்ந்தன னிருநிலம்
பிளந்திரு கூருக்
கிழியப் பாய்புனல் கிளர்ந்தெனக்
கிளர்சினத் தரக்கன்
பழியப் பாலிவன் பதாதியென்
றனுமன்றன் படர்தோ
ளொழியப் பார்மிசை யிழிந்துசென்
றிளவலு முற்றான்.

இழியப் பாய்ந்தனன், இருநிலம்
பிளந்து இரு கூரு,—
கிழியப் பாய்புனல் கிளர்ந்தெனக்
கிளர்சினத்து அரக்கன் ;
'பழி, அப்பால் ; இவன் பதாதி'
என்று, அனுமன்தன் படர்தோள்
ஒழியப் பார்மிசை இழிந்து
சென்று, இளவலும் உற்றான்.

பொ :—பாயும் தன்மையுள்ள கடல்நீர் கிளர்ந்து எழுந்தாற் போன்று பொங்குகின்ற கோபத்தையுடைய கும்பகருணன், பெரிய நிலம் பிளந்து இரண்டு பகுதியாக ஆகுமாறு தாழப் பாய்ந்தான்; இலக்குவனும், இவன் ஊர்தியின்றிப் பதாதியாக இருக்கின்றமையால் (நாம் அனுமன் தோள்மேல் இருந்து பொருதால்) 'பிறகு பழியை விளைப்பதாகும்' என்று அனுமனுடைய பரவிய தோளில்

நின்றும் நீங்கித் தரையில் இறங்கிச் சென்று போர் செய்யப் பொருந்தினன்.

கு:—அரக்கன் பாய்ந்தனன்; இளவலும், இவன் பதாதி; அப்பால் பழி; என்று பார்மிசை இழிந்து சென்று உற்றான். என இயையும். புனல் என்றது, இங்குக் கடல் நீரை. 'கடல் கிளர்ந் தொப்பான்' என முன்னும் அவன் சினத்திற்கு உவமை கூறியுள்ளது நினைக. ஊர்தியில்லாது கும்பகருணன் தரைமிசை நின்று போர் செய்ய முயலும்போது, தான் மட்டும் அனுமன் தோள்மேல் நின்று போர் செய்தால் அது போர் முறைக்கு இழுக்காய்ப் பழியை விளைத்தலின் 'இளவலும் அப்பால்பழி' என்று பார்மிசை இழிவானாயினன். (246)

## இராவணன் தம்பிக்கு உதவ அனுப்பிய சேனை இலக்குவனை வளைத்தல்

**7645.** உற்ற காலையி னிராவணன்
றம்பிமா டுதவ
விற்ற தானையி னிருமடி
யிகற்படை யேவ
முற்றி யன்னது முழங்குமுந்
நீரென முடுகிச்
சுற்றி யார்த்தது சுமித்திரை
சிங்கத்தைத் தொடர்ந்து.

உற்ற காலையின், இராவணன், தம்பிமாடு உதவ
இற்ற தானையின் இருமடி இகல்படை ஏவ,
முற்றி அன்னது, முழங்கு முந்நீர் என முடுகிச்
சுற்றி ஆர்த்தது, சுமித்திரை சிங்கத்தைத் தொடர்ந்து.

பொ:—(அவ்வாறு இலக்குவன் தரையில்) நின்றபோது, இராவணன், தன் தம்பி கும்பகருணனிடத்து உதவுமாறு, முன் அழிந்த சேனைக்கு இரு மடங்கான வலிமை மிக்க சேனையை அனுப்ப, அச் சேனை சினமுதிர்ந்து, விரைந்து, சுமித்திரை பெற்ற சிங்கம் போன்ற வனாகிய இலக்குவனைத் தொடர்ந்து சுற்றிக்கொண்டு முழங்குகின்ற கடல்போல ஆரவாரித்தது.

கு:—கும்பகருணன் சேனை அழிந்தமை ஒற்றரால் அறிந்த இராவணன், மீண்டும் அதற்கு இருமடங்கு படையை அனுப்பினன்

என்க. இராவணன் இகற்படை ஏவ, அன்னது முற்றி, சிங்கத்தைத் தொடர்ந்து சுற்றி முந்நீர் என ஆர்த்தது என இயையும். முந்நீர் - கடல். ஆக்கல், காத்தல். அழித்தல் என்ற மூன்று தன்மையுடைமை யான் கடலுக்குக் காரணப் பெயராயிற்று என்பாரும், மழைநீர், ஊற்றுநீர், ஆற்றுநீர் என்ற மூன்று நீரை யுடைமை பற்றிக் கடலுக்குக் காரணப் பெயர் ஆயிற்று என்பாரும் இருதிறத்தார் ஆசிரியர். முற்றுதல் - சினம் முதிர்தல். (247)

**7646.** இருந்த வானர ரிரியல்போய்
மயங்கின ரெவரும்
சொரிந்த வெம்படை துணித்திடைத்
தடுப்பருந் தொழிலால்
பரிந்த வண்ணலும் பரிவில
னொருபுடை படரப்
புரிந்த வந்நெடுஞ் சேனையங்
கருங்கடல் புக்கான்.

இருந்த வானரர் இரியல்போய் மயங்கினர்; எவரும்
சொரிந்த வெம்படை துணித்திடைத் தடுப்பருந் தொழிலால்
பரிந்த அண்ணலும், பரிவு இலன் ஒருபுடை படரப்
புரிந்த அந்நெடுஞ் சேனை அம் கருங்கடல் புக்கான்.

பொ :—(அரக்கர் சேனை வந்ததைக் கண்டு) களத்தில் இருந்த வானரர் கெட்டு ஓடிப்போய் ஒருவரோடு ஒருவர் தடுமாறினர்; வந்த அரக்கர் யாவரும் சொரிந்த கொடிய படைகளைத் துணித்துவிட்டு நடுவே யாரும் தடுத்தற்கு அரிய தொழிலோடு விரைந்த பெருமை வாய்ந்த இலக்குவனும் இரக்கம் அற்றவனாகிய கும்பகருணன் தன் ஒரு பக்கத்தில் பரவி இருக்குமாறு செய்த அந்தப் பெரிய சேனையாகிய கரிய கடலில் புகுந்தான்.

கு :—கும்பகருணனுக்குத் துணையாக வந்த அரக்கர் படையைக் கண்டவுடனே அங்கிருந்த வானரர் எல்லாம் கெட்டோடத் தொடங்கினார்கள்; இலக்குவன் ஒருவன்மட்டுமே அவ்வரக்கர் சொரியும் படைகளை முறியடித்துக் கொண்டு அந்த அரக்கர் படையாகிய கடலுக்குள் நுழைவானாயினான் என்க. இரியல் போதல் - கெட்டு ஓடுதல். இலக்குவன் ஒருவன் மீது வந்த அரக்கர் அனைவரும் தம் படைகளைச் சொரிந்தார்கள் ஆதலின், அவற்றை யெல்லாம் துணித்து எறிந்து கொண்டு அவ்வரக்கர் சேனையில் இலக்குவன்

நுழைய வேண்டியவனுயினுன். யாரும் தடுத்தற்கரிய போர்த் தொழி லோடு என உடனிகழ்ச்சிப் பொருளதாக்குக. பரிதல் - விரைதல். பரிவிலன் - இரக்கமற்றவனுன கும்பகருணன். அளப்பருந் தன்மை யாலும் கருநிறத்தாலும் அரக்கர் சேனைக்கும் கடலுக்கும் ஒப்புமை யுண்மையால் அதனைக் கடலாக உருவகஞ் செய்தார். ஒருபுடைப் படரப் புரிதலாவது, ஒரு பக்கத்தே பரவி நிற்கச் செய்தல். (248)

52-ல் 243-1, ஆகப் பின்வரும் மிகைப்பாடல் காணப்படுகின்றது.

7646 (a) புக்க போதிலங்கிலக்குவன்
பொருக்கெனத் துயர் தீர்ந்து
அக்க ணம்தனி லரக்கர்தம்
பெரும்படை அவிய
மிக்க வார்சிலை வளைத்துரு
மேரெடு விசும்பும்
உட்க நாணெறிந் துகமுடி
வெனச்சரம் பொழிந்தான்.

## களத்தில் காணப்பட்ட அழிவுகள்

**7647.** முருக்கி னுண்மலர் முகைவிரிந்
தாலன்ன முரட்க
ணரக்கர் செம்மயிர்க் கருந்தலை
யடுக்கலி னணைகள்
பெருக்கி னுன்பெருங் கனலிடைப்
பெய்துபெய் தெருவை
யுருக்கி னுலன்ன குருதிநீ
ராறுக ளொதுங்க.

முருக்கின் நாள்மலர் முகைவிரிந்தால் அன்ன முரண்கண்
அரக்கர் செம்மயிர்க் கருந்தலை அடுக்கலின் அணைகள்
பெருக்கினுன் பெருங்கனலிடைப் பெய்துபெய்து, எருவை
உருக்கினுல் அன்ன குருதி நீர் ஆறுகள் ஒதுங்க.

பொ :—முருக்க மரத்தின் அன்று அலர்தற்குரிய மலராக அரும்பு விரிந்தாற்போன்ற முரண்பாட்டைத் தெரிவிக்கின்ற கண்ணையுடைய அரக்கர்களின் செம்பட்ட மயிர்க் குடுமியையுடைய பெரிய தலைகளால் இயன்ற மலைகளாகிய அணைகளை - பெரிய நெருப்பில் பெய்து பெய்து செம்பினை உருக்கினுற் போன்ற இரத்த நீராலாய ஆறுகள் ஒதுங்கிச் செல்லுமாறு பெருகச் செய்தான்.

கு :—அரக்கரின் சிவந்த கண்ணுக்கு முருக்கின் முகை விரிந்த நாண்மலர் உவமை. கருந்தலை என்புழிக் கருமை பெருமையை யுணர்த்தியது. அடுக்கல் - மலை. எருவை - செம்பு. குருதி நீரின் செம்மை புலப்படுத்த வேண்டிச் செம்புருக்கை உவமை கூறினர். தலைமலையாலாய அணைகளைப் பெருக்கியதால் ஓடவேண்டிய இரத்த ஆறுகள், தடைப்பட்டு ஒதுங்கிச் செல்வன ஆயின. (249)

**7648.** கரியின் கைகளும் புரவியின்
கால்களுங் காலின்
திரியுந் தேர்களின் சில்லியு
மரக்கர்தஞ் சிரமும்
சொரியுஞ் சோரியின் துறைதொறுந்
துறைதொறுஞ் சுழிப்ப
நெரியும் பல்பிணப் பெருங்கரை
கடந்தில நீத்தம்.

கரியின் கைகளும், புரவியின் கால்களும், காலின்
திரியும் தேர்களின் சில்லியும், அரக்கர்தம் சிரமும்,
சொரியும் சோரியின் துறைதொறும் துறைதொறும் சுழிப்ப,
நெரியும் பல்பிணப் பெருங்கரை கடந்தில, நீத்தம்.

பொ :—யானைகளின் கைகளும் குதிரைகளின் கால்களும், காற்றைப் போலச் செல்லும் தேர்களின் சக்கரமும், அரக்கர் தம் தலைகளும், புண்ணிலிருந்து சொரியும் இரத்தநீர் உள்ள இடந்தொறும் இடந்தொறும் சுழித்துக் கொண்டிருக்க, அந்த இரத்த வெள்ளங்கள், நெரிந்து கிடக்கின்ற பல பிணங்களாகிய பெரிய கரையைக் கடந்து செல்லாவாயின.

கு :—நால்வகைப் படைகளின் உறுப்புகள் இரத்த வெள்ளத்தில் சுழித்துக் கொண்டிருந்தன ; அந்த இரத்த வெள்ளம் பிணங்களாகிய கரையைக் கடக்க வியலாது தடைப்பட்டு நின்றன என்றவாறு. சில்லி – சக்கரம். பல்பிணங்களாலாய பெருங்கரை என்க. இரத்த வெள்ளத்திற்குக் கரைபோலப் பிணக் குவியல்கள் இருந்தன என்றவாறு. (250)

**7649.** கொற்ற வாளெழுத் தண்டுவேல்
கோன்மழுக் குலிசம்
மற்றும் வேறுள படைக்கல
மிலக்குவன் வாளி
சுற்று மோடுவ தொடர்ந்திடை
துணித்திடத் தொகையா
வற்ற துண்டங்கள் படப்படத்
துணிந்தன வனந்தம்.

**கொற்றவாள், எழு, தண்டு, வேல், கோல், மழு, குலிசம்,**
**மற்றும் வேறு உள படைக்கலம், இலக்குவன் வாளி**
**சுற்றும் ஓடுவ தொடர்ந்து இடை துணித்திட, தொகையாய்**
**அற்ற துண்டங்கள் படப்பட, துணிந்தன அனந்தம்.**

பொ :—வெற்றி பொருந்திய வாள், இருப்புலக்கை, தண்டாயுதம், வேல், அம்பு, மழுவாயுதம், வச்சிரப்படை, மற்றும் இவற்றிற்கு வேருக உள்ள அரக்கர்விட்ட படைக்கலங்களை யெல்லாம் இலக்குவனது அம்பு சுற்றிலும் ஓடுவனவாய்த் தொடர்ந்து சென்று நடுவே துணிக்கப் பெருந் தொகையாக அற்றுப்போன அப்படைகளின் துண்டங்கள் படுந்தோறும் மற்றும் துணிந்தவை பலப்பலவாம்.

கு :—இலக்குவன் அம்பினுல் துண்டாகப் பெற்ற ஆயுதங்கள் படுதலால் அனேகம் படைகள் துணிந்தன என்க. ஓடுவனவாய்த் தொடர்ந்து என முற்றெச்சமாக்கி முடிக்க. இலக்குவன் அம்பினுல் துணிபடாமல் நின்ற பலப்பல படைக்கலங்கள் துணிபட்ட துண்டங்கள் படுதலால் துணிந்தன என்றவாறு. இலக்குவன் வாளி, அரக்கர் படைக்கலங்கள் துண்டமாதற்கு நேரே ஏதுவானதே யன்றிப் பரம்பரையேதுவாகவும் ஆயின என்றபடி. (251)

**7650.** குண்ட லங்களு மோலியு
மாரமுங் கோவை
தண்டை தோள்வளை கடகமென்
றினையன தறுகட்
கண்ட கண்டங்க ளொடுகணை
துரந்தன கதிர்சூழ்
மண்ட லங்களை மாறுகொண்
டிமைத்தன வானில்.

குண்டலங்களும், மோலியும் ஆரமும், கோவை,
தண்டை, தோள்வளை, கடகம், என்று இனையன, தறுகண்
கண்ட கண்டங்களொடும் கணை துரந்தன, கதிர் சூழ்
மண்டலங்களை மாறுகொண்டு இமைத்தன, வானில்.

பொ :—அரக்கர் அணிந்த குண்டலங்களும், முடியும், முத்தாரமும், மணிக்கோவையும், வீரதண்டையும், தோள்வளையும் கடகமும் என்று சொல்லப்படுகின்ற இவைகள், அஞ்சாமையோடு செய்த துண்டம்பட்ட தன்மையோடு, (இலக்குவனது) அம்புகளால் துரத்தப் பட்டனவாய் ஒளிசூழ்ந்த சூரிய மண்டலம், சந்திரமண்டலம் முதலிய மண்டலங்களோடு மாறுபாடுகொண்டு வானில் ஒளிவீசின.

கு :—அரக்கர் அணிந்திருந்த குண்டலம் முதலிய அணிகளைத் துணித்ததோடு நில்லாமல் அத்துண்டங்களையும் பின்பற்றிவிடாது இலக்குவனது அம்புகள் துரத்தின என்க. ஒளியுடன் விண்ணில் விளங்கும் அத்துண்டங்கள், கதிர்சூழ் மண்டலங்களோடு மாறு கொண்டு ஒளிர்வனபோல இருந்தன என்றவாறு. தறுகண் கண்ட - அஞ்சாமையோடு செய்த. முடியணி சூரிய மண்டலம் போன்றும் குண்டலம் நட்சத்திரம் போன்றும், தோள்வளை சந்திரனைப் போன்றும் விளங்குதலின் இவ்வாறு கூறினர் போலும், (252)

**7651.** பரந்த வெண்குடை சாமரை
நெடுங்கொடி பதாகை
சரந்த குஞ்சிலை கேடகம்
பிச்சமொய் சரங்கள்
துரந்து செல்வன குருதிநீ
ராறுக டோறும்
நிரந்த பேய்க்கணங் கரைதொறுங்
குவித்தன நீந்தி.

பரந்த வெண்குடை சாமரை, நெடுங்கொடி, பதாகை,
சரம் தரும் சிலை, கேடகம், பிச்சம், மொய் சரங்கள்
துரந்து செல்வன, குருதிநீர் ஆறுகள் தோறும்
நிரந்த பேய்க்கணம் கரைதொறும் குவித்தன நீந்தி.

பொ :—இரத்த ஆறுகள் தோறும் தள்ளப்பட்டுச் செல்வனவாகிய பரவிய வெண்ணிறக்குடை, வெண்சாமரை. நெடுங்கொடி, பெருங்கொடி, அம்பு விடுதற்குரிய வில், கேடகம், பீலிக்குடை,

மொய்த்துக் கொண்டுள்ள அம்புகள் ஆகியவற்றைக் கரைகள் தோறும் வரிசையாக நின்ற பேய்க் கூட்டங்கள் நீந்திச் சென்று வாரிக் குவித்தன.

கு :—துரத்தல் - தள்ளுதல்; செலுத்துதல். குருதிநீர் ஆறுகள் தோறும் துரந்து செல்வனவாகிய வெண்குடை முதலியவற்றைப் பேய்க்கணம் நீந்திக் குவித்தன என இயையும். கரைதொறும் நிரந்த பேய்க்கணம் நீந்திக் கரைதொறும் குவித்தன என இடை நிலை விளக்காகக் கரைதொறும் என்பதை முன்னும் கூட்டுக. நெடுங்கொடிப் பதாகை என்ற பாடத்திற்கு நெடுங்கொடியாகிய பதாகை என இருபெய ரொட்டாக்கிப் பொருள் கொள்க. நிரத்தல்—வரிசைப்படுதல். (253)

## கும்பகருணன் வேறொரு திசையில் சுக்கிரீவனோடு பொருதல்

**7652.** ஈண்டு வெஞ்செரு வினையன
நிகழ்வுழி யெவர்க்கும்
நீண்ட வெள்ளெயிற் றரக்கன்மற்
றொருதிசை நின்றான்
பூண்ட வெஞ்செரு விரவிகான்
முளையொடும் பொருதான்
காண்ட கும்மென விமையவர்
குழுக்கொண்டு கண்டார்.

ஈண்டு வெஞ்செரு இனையன நிகழ்வுழி எவர்க்கும்,
நீண்ட வெள் எயிற்று அரக்கன், மற்று ஒருதிசை நின்றான்,
பூண்ட வெஞ்செரு இரவி கான்முளையொடும் பொருதான்;
'காண்தகும்' என இமையவர் குழுக்கொண்டு, கண்டார்.

பொ :—இவ்விடத்தில் கொடிய போர் இவ்வாறு நிகழும்போது, யாவர்க்கும் மேலாக நீண்டுள்ள வெண்மையான கோரப்பல்லை யுடைய கும்பகருணனாகிய அரக்கன், வேறு ஒரு திசையில் நின்று கொடிய போர்த்தொழிலில் ஈடுபட்டிருந்த சுக்கிரீவனோடு போர் செய்யலானான்; தேவர்கள் 'இப்போர் காணத்தகும் சிறப்புடையது' எனக் கூட்டம் கூடிக்கொண்டு பார்த்தார்கள்.

கு :—நின்றான், முற்றெச்சம். நின்று வெஞ்செருப்பூண்ட இரவிகான்முளை என்க. இரவிகான்முளை - சூரியனுக்கு மகனாகிய சுக்கிரீவன். வெஞ்செரு இனையன நிகழ்வுழி என்பது, இலக்குவன்,

கும்பகருணனுக்குத் துணையாக வந்த அரக்கர் சேனையோடு செய்த போரைக் குறிப்பிட்டவாறு. (254)

**7653.** பொறிந்தெழு கண்ணினன்
★ புகையும் வாயினன்
செறிந்தெழு கதிரவன்
சிறுவன் சீறினன்
முறிந்தன வரக்கன்மா
முரட்டிண் டோளென
வெறிந்தனன் விசும்பின்மா
மலையொன் றேந்தியே.

**பொறிந்து எழு கண்ணினன், புகையும் வாயினன்,**
**செறிந்து எழு கதிரவன் சிறுவன்—சீறினன்,**
**'முறிந்தன அரக்கன்மா முரண் திண் தோள்' என,**
**எறிந்தனன், விசும்பில், மாமலை ஒன்று ஏந்தியே.**

பொ :—சுக்கிரீவன் நெருப்புப் பொறிகள் கிளர்ந்து எழுகின்ற கண்களையுடையவனாய்ப் புகைகின்ற வாயினையுடையவனாய்க் கோபித்து, விண்ணளாவிய பெரிய மலை ஒன்றை ஏந்திக்கொண்டு, கும்பகருணனுடைய பெரிய வல்லமையுடைய திண்ணிய தோள்கள் முறிந்தன' எனக் கண்டோர் கருதுமாறு வீசினான்.

கு :—செறிந்தெழு கதிரவன் சிறுவன் என்றது சுக்கிரீவனை. நெருங்கியெழுகின்ற கிரணங்களையுடையவனான சூரியனுக்கு மகன் என்றவாறு. சிறுவன் என்றது மகன் என்னும் பொருளது. விசும்பின் மாமலை என்றது, விண்ணளாவிய பெரிய மலை என்றவாறு. தோள் முறிந்தன என எறிந்தனன் என்க. (255)

**7654.** அம்மலை நின்றுவந் தவனி யெய்திய
செம்மலை யனையவெங் களிறுஞ் சேனையின்
வெம்மலை வேழமும் பொருத வேறினி
யெம்மலை யுளவவற் கெடுக்கொ ணுதன.

**அம்மலை நின்று வந்து அவனி எய்திய**
**செம்மலை அனைய வெங்களிறும், சேனையின்**
**வெம்மலை வேழமும், பொருத; வேறு இனி**
**எம்மலை உள, அவற்கு எடுக் கொணுதன?**

பொ :—(சுக்கிரீவன் எறிந்த) அந்த மலையில் நின்றும் வந்து நிலத்தில் வீழ்ந்த செவ்விய மலை போன்ற கொடிய யானையும் அரக்கர் சேனையிலிருந்த கொடிய மலை போன்ற யானையும் போர் செய்தன; (யானைகள் வாழும் அப்பெரிய மலையை யெடுத்த) சுக்கிரீவனுக்கு எடுக்க ஒண்ணுதனவாக வேறு இனி எந்த மலைகள் உளளன ?

கு :—சுக்கிரீவன் வீசிய மலையின் பெருமை விளக்கியவாறு. அவன் எறிந்த மலையில் வாழ்ந்த யானைகள் நிலத்தில் வீழ்ந்து அரக்கர் சேனையிலுள்ள யானைகளோடு போர் செய்யலாயின என்றதால் சுக்கிரீவன் எடுத்த மலை என்ற இயைபு பற்றி அம்மலையில் வாழ்ந்த யானைகளும் அவன்பால் பற்றுக் கொண்டு அரக்கர் யானையோடு போர் செய்தமை அறியலாம். யானைகள் வாழும் பெரியமலையினையே எடுத்து எறிந்த சுக்கிரீவனுக்கு எடுக்க முடியாத மலைகளே இல்லை என்றவாறு. அவற்கு எடுக்கொணுதனவாக வேறு இனி எம்மலையுள ? என இயையும். (256)

**7655.** இவ்வகை நெடுமலை யிழிந்த மாசுணம்
கவ்விய நிருதர்தங் களிறுங் கட்டற
வவ்வகை மலையினை யேற்ருே ரங்கையால்
வவ்வின னரக்கன்வா ளவுணர் வாழ்த்தினுர்.

இவ்வகை நெடுமலை இழிந்த மாசுணம்
கவ்விய நிருதர்தம் களிறும் கட்டு அற;
அவ்வகை மலையினை ஏற்று ஓர் அங்கையால்
வவ்வினன், அரக்கன், வாள் அவுணர் வாழ்த்தினுர்.

பொ :—இவ்வகையான உயர்ந்த மலையினின்று இறங்கிய மலைப் பாம்புகள் அரக்கர்தம் யானைகளும் உடற்கட்டு அறுமாறு கவ்வின; அத்தகைய மலையினைக் கும்பகருணன் ஓர் உள்ளங்கையால் ஏற்றுக் கொண்டான். அதுகண்டு அவனுக்கு இனமான கொடிய அவுணர்கள் வாழ்த்தினுர்கள்.

கு :—இச்செய்யுளில் முதலிரண்டடியும் அம்மலையின் பெருமையையே கூறுகின்றன. அம்மலையிலிருந்து கீழிறங்கிய மலைப் பாம்புகள் அரக்கர் தம் யானைகளைக் கவ்விக் கொன்றன என்க. கட்டு - உடற்கட்டு ; உடல்வலிமை. வாள் அவுணர் - கொடிய அசுரர், அசுரரும் அரக்கரும் வேறு வேறு இனத்தவராயினும் நல்லோரை நலிவதில் ஒற்றுமையுடையவராதலின் கும்பகருணன் ஆற்றல்

கண்டு அவுணர் வாழ்த்துவாராயினர். மாசுணம் யானையை வலி யழிக்கும் இயல்பினது என்பதை; "மைந்துமலி சினத்த களிறுமத னழிக்கும் துஞ்சுமரம் கடுக்கும் மாசுணம்" (மலைபடுகடாம் - 260, 261) என்றதால் உணரலாம். (257)

**7656.** ஏற்றொரு கையினு லிதுகொ னீயடா
ஆற்றிய குன்றமென் றளவி லாற்றலான்
நீற்றினு நுணுகுறப் பிசைந்து நீங்கெனத்
தூற்றின னிமையவர் துணுக்க மெய்தினர்.

ஏற்று ஒரு கையினுல், 'இது கொல், நீ, அடா!
ஆற்றிய குன்றம்?' என்று அளவு இல் ஆற்றலான்,
நீற்றினும் நுணுகுறப் பிசைந்து, 'நீங்கு' என,
தூற்றினன்; இமையவர் துணுக்கம் எய்தினர்.

பொ :—அளவில்லாத ஆற்றலையுடைய கும்பகருணன் தன் ஒருகையினுல் அம்மலையை ஏற்றுக்கொண்டு 'அடா! நீ வலிமை கொண்டு வீசிய குன்றம் இதுதானே? என்று எள்ளி நீற்றினைவிடப் பொடியாக நுறுங்குமாறு அம்மலையைக் கையால் பிசைந்து 'செல்க' என்று அம்மலையின் துகளைத் தூற்றிவிட்டான். (அது கண்ட) தேவர்கள் (கும்பகருணனது பேராற்றலை யறிந்து) அச்சங் கொண் டார்கள்.

கு :—சுக்கிரீவன் அரிதிற் சுமந்து வந்து வீசிய மலையைக் கும்ப கருணன் எளிதாக ஒருகையால் பற்றிப் பிசைந்து பொடியாக்கித் தூற்றினுன் என்றவாறு. ஏற்றல் இங்குப் பற்றுதலை உணர்த்தி யது. அடா, நீ ஆற்றிய குன்றம் இது கொல்? என இயையும். ஆற்றுதல் என்பது அரிதிற்றூங்கி வீசியதை உணர்த்தியது. என்று என்பது எள்ளிக் கூறி என்னும் பொருளது. நீறு - பொடி. நுணுகுத லாவது நுறுங்குதல். நீங்கு என்றது செல்க என்றவாறு. மலை இப்போது பொடியாயினமையின் தூற்றினன் என்றார். தூற்றுத லாவது, காற்றில் பறக்க விடுதல். சுக்கிரீவன் வீசிய மலையைத் துகளாக்கித் தூற்றிய கும்பகருணன் பேராற்றலை அறிந்த தேவர்கள் இவனை மாய்த்தல் அரிது போலும் என அஞ்சுவாராயினர். (258)

## கும்பகருணன் சுக்கிரீவன்மேல் சூலத்தை எறிதல்

**7657.** செல்வெனே நெடுங்கிரி
யின்னுந் தேர்ந்தென
எல்லவன் கான்முளை
யுணரு மேல்வெயில்
கொல்லென வெறிந்தனன்
குறைவி னோன்பினோர்
சொல்லெனப் பிழைப்பிலாச்
சூலஞ் சோர்விலான்.

'செல்வெனே, நெடுங்கிரி இன்னும் தேர்ந்து?' என,
எல்லவன் கான்முளை உணரும் ஏல்வையில்,
'கொல்!' என எறிந்தனன், குறைவு இல் நோன்பினோர்
சொல் எனப் பிழைப்பு இலாச் சூலம், சோர்வு இலான்.

பொ :—சூரியன் மகனாகிய சுக்கிரீவன் (கும்பகருணன் மேல் எறிய) 'இன்னும் நெடிய மலையைத் தேடிக்கொண்டு செல்வேனோ ? என்று நினைக்கும் அளவில், சோர்வு இல்லாதவனாகிய கும்ப கருணன், குறைவிலாத தவத்தினையுடைய முனிவர்தம் சாபச் சொற்கள் போலத் தப்பாது சென்று தாக்குகின்ற சூலப்படையை எடுத்து, 'கொல்' என்று கட்டளையிட்டு அதனை வீசினான்.

கு :—மேலும் மலையைத் தேடிச் செல்வதில் பயன் இல்லையே என்ற கருத்தால், நெடுங்கிரி இன்னும் தேர்ந்து செல்வனோ? என்று எண்ணலானான் சுக்கிரீவன். சுக்கிரீவன் எறிந்த மலையை எளிதில் துகளாக்கிய உள்ளக் கிளர்ச்சியுடன் கும்பகருணன் இருந் தான் என்பது புலப்பட அவனைக் 'சோர்விலான்' என்றார். எல்லவன் - சூரியன். 'குறைவில் நோன்பினோர்' என்றது நிறை தவத்தினரை. தவத்தின் ஆற்றலால் அவர் சொல்லும் சொல் பிழைப்பது இல்லை என்பது உலகறிந்தது ஆகலின், கும்பகருண னின் பிழைப்பிலாச் சூலத்திற்கு அச்சொல்லை உவமை கூறினார். சோர்விலான் சூலம் எறிந்தனன் என இயையும். 'கொல்' என்றது, சூலத்திற்குக் கும்பகருணன் இட்ட கட்டளை. (259)

## அச் சூலத்தை அனுமன் ஒடித்தல்

**7658.** பட்டனன் பட்டன னென்று பார்த்தவர்
விட்டுலம் பிடநெடு விசும்பிற் சேறலும்

எட்டின னதுபிடித் திறுத்து நீக்கினுன்
ஒட்டுமோ மாருதி யறத்தை யோம்புவான்.

'பட்டனன் பட்டனன்' என்று, பார்த்தவர்
விட்டு உலம்பிட, நெடு விசும்பில் சேறலும்,
எட்டினன் அது பிடித்து, இறுத்து நீக்கினுன்;
ஒட்டுமோ, மாருதி, அறத்தை ஓம்புவான்?

பொ:—(சுக்கிரீவன்) 'இறந்தான் இறந்தான்' என்று பார்த்தவர் எல்லாம் வாய்விட்டுக் கதற, அச்சூலம் உயர்ந்த ஆகாயத்தில் செல்லுதலும், அச்சூலத்தை அனுமன் எட்டிப் பிடித்து ஒடித்துப் போட்டான். தருமத்தைப் பாதுகாப்பவனுகிய அனுமன். (அதற்குத் துணையாக வந்துள்ள சுக்கிரீவனைத் தாக்க) உடன்பட்டுப் பார்த்திருப்பானே?

கு:—பட்டனன் பட்டனன் என்பது அச்சப்பொருள் பற்றிய அடுக்கு. உலம்புதல் - ஆரவாரித்தல்; இங்குக் கதறுதலை உணர்த்தியது. சேறல் - செல்லுதல். இறுத்தல் - ஒடித்தல். அனுமன் அறத்தை ஓம்புகின்றவன் ஆதலின், அறத்திற்குத் துணை செய்யும் சுக்கிரீவனைச் சூலம் தாக்காமல் பாதுகாத்தான் என்றவாறு. ஒட்டுதல் - உடன்படுதல். அனுமன் நடுவே புகுந்து சூலத்தை முறித்தமைக்குக் காரணம் குறிப்பால் பெற வைத்தவாறு. (260)

### சூலம் ஒடிந்த பேரொலி

**7659.** சித்திர வனமுலைச் சீதை கேள்வனுர்
அத்திரு மிதிலையி லறிவு முற்றிய
பித்தனுர்வெஞ் சிலையினை யிறுத்த பேரொலி
ஒத்தது சூலமன் றிற்ற வோசையே.

சித்திர வனமுலைச் சீதை கேள்வனுர்,
அத்திரு மிதிலையில் அறிவு முற்றிய
பித்தன் வெஞ்சிலையினை இறுத்த பேர் ஒலி
ஒத்தது, சூலம் அன்று இற்ற ஓசையே.

பொ:—அப்போது அந்தச் சூலம் ஒடிந்ததனுல் உளதாகிய ஓசை, சந்தனக் கோலம் எழுதப் பெற்ற அழகிய கொங்கையினையுடைய சீதையின் கணவனுன இராமன், அந்த அழகிய மிதிலையில், யாரினும் முதிர்ந்த அறிவினையுடைய பித்தன் என்று பெயர் பெற்ற

சிவனுடைய கொடிய வில்லை ஒடித்த பெரிய ஓசையைப் போன்றிருந்தது.

கு :—சித்திரம் என்றது இங்குச் சந்தனக் கோலமாகிய தொய்யிலை. வனம் - அழகு, சிவன் யாவர்க்கும் மேலான ஞானமுடையனாக இருந்தே பித்தன் என்று பேசப்படும் முரண்பாட்டை புலப்படுத்த அறிவு முற்றிய பித்தன் என்றார். முற்றுதல் - முதிர்தல். பித்தன் வெஞ்சிலை என்றது தக்கனது யாகத்தை அழிக்க எடுத்த வில்லைச் சிவன் சினமாறி மிதிலை மன்னர்பால் வைத்துச் சென்ற வில்லை. அந்த வில்லை இராமன் ஒடித்த ஞான்று எழுந்த பேரொலியை ; 'ஆரிடைப் புகுதுநாமென் றமரர்கள் கமலத்தோன்றன், பேருடையண்ட கோளம் பிளந்ததென் றேங்கி நைந்தார், பாரிடையுற்றதன்மை பகர்வதென்பாரைத் தாங்கி, வேரிடைக் கிடத்த நாகம் இடியென வெருவிற்றன்றே'' (கார்முகம் - 35) என முன் விவரித்திருத்தலால் அறியலாம். சூலம் இற்ற ஓசை சிவன் சிலையிற்ற ஓசையை ஒத்தது எனவே அனுமன் கும்பகருணனது சூலத்தை ஒடித்த ஓசை பிரமனண்டம் பிளந்தது போன்றது என்பதும், ஆதி சேடனும் இடியோசை என அஞ்சத்தக்கதாக இருந்தது என்பதும், புலனும். (261)

அனுமனைக் கும்பகருணன் புகழ்தல்

**7660.** நிருதனு மனையவ னிலைமை நோக்கியே
கருதவு மியம்பவு மரிதுன் கைவலி
யரியன முடிப்பதற் கனைத்து நாட்டினு
மொருதனி யுளையிதற் குவமம் யாதென்றான்.

நிருதனும் அனையவன் நிலைமை நோக்கியே,
'கருதவும் இயம்பவும் அரிது, உன்கைவலி ;
அரியன முடிப்பதற்கு அனைத்து நாட்டினும்
ஒருதனி உளை ; இதற்கு உவமை யாது ?' என்றான்.

பொ :—கும்பகருணனும், அந்த அனுமனது வலிநிலைமையை நோக்கி (என் சூலத்தை முறித்த) உன் கையின் வலிமை, மனத்தால் நினைக்கவும் நாவால் சொல்லவும் முடியாததாகும் ; இவ்வுலகத்துள்ள எல்லா நாடுகளிலும் செயற்கு அரிய செயலைச் செய்து முடித்தற்கு ஒப்பற்ற ஒருவனாக நீ இருக்கின்றாய்; இப்படிப்பட்ட நின்னிலைமைக்கு யாது உவமம் கூறுவது? என்று வியந்தான்.

கு :—நிருதன் - அரக்கன், கும்பகருணன், அனுமனை மனவாசகம் கடந்தான் என்று புகழ்ந்தவாறு. இயம்பவும் கருதவும் அரிது என்பதே முறையாயினும் செய்யுளாதலின் மாறி நின்றது. அனுமன் தனக்குவமையில்லாதான் என்பான், 'ஒருதனியுளை யிதற் குவமம் யாது' என்ருன், இலங்கையாகிய தன்ஞட்டில் மட்டுமன்று என்பான் 'அனைத்து நாட்டினும் ஒருதனியுளை' என்ருன். விண்ணுடு முதலிய எந் நாட்டினும் அனுமனைப் போல்வார் இலர் என்பது காட்டியவாறு. (262)

## கும்பகருணன் போர் செய்ய அழைக்கவும் அது பழுது என அனுமன் அகலுதல்

**7661.** என்னெடு பொருதியே லின்னும் யானமர்
சொன்னன புரிவலென் றரக்கன் சொல்லலும்
முன்னினி யெதிர்க்கிலே னென்று முற்றிய
பின்னிகல் பழுதெனுப் பெயர்ந்து போயினுன்.

'என்னெடு பொருதியேல், இன்னும், யான் அமர்
சொன்னன புரிவல்' என்று, அரக்கன் சொல்லலும்,
'முன், "இனி எதிர்க்கிலேன்" என்று முற்றிய
பின் இகல் பழுது' எனுப் பெயர்ந்து போயினுன்.

பொ :—(மேலும் அனுமனை நோக்கி) 'இன்னும் என்னேடு போர் செய்வாயாளுல், யான் போர் நூலில் சொன்ன வகைகளை யெல்லாம் செய்வேன்' என்று கும்பகருணன் சொல்லுதலும், (அனுமன்) முன்பு "இனி நின்னை எதிர்த்துப் போர் செய்யேன்" என்று முடிவு செய்த பின்பு நின்னேடு போர் செய்தல் பழுதாகும்' என்று கூறிக் கொண்டு தானிருந்த இடத்தை விட்டு வேறிடத்திற்குப் போனுன்.

கு :—அமர் என்பது ஆகுபெயராய் அமர் நூலை உணர்த்தியது. போர்வீரர்கள் போர் நூலில் சொன்ன வகைகளை யெல்லாம் செய்து பொரும் பகைவரை விரும்புதல் இயல்பாகலின், சிறந்த வீரனுகிய அனுமன் தன்னேடு போர் செய்ய விரும்பவேண்டிக் கும்பகருணன் இங்ஙனம் கூறினுன். முன்பு, அனுமன் ஒரு பெருமலையை யேந்திக் கொண்டு, கும்பகருணனை நோக்கி இம்மலையைத் தள்ளிவிட்டால் யான் உன்னேடு அமருஞ் செய்யேன் (200) என்று கூறியிருந்தமை நினைந்து 'இனி எதிர்க்கிலேன் என்று முற்றிய பின் இகல் பழுது' என்று கூறுவானுயினுன். 'முற்றியபின்' என்புழிப்'பின்' வினையெச்சப் பொருளில் வந்தது ; முடிவு செய்து விட்டமையால் என்பது

பொருள். போயினுன் என்ற பயனிலேக்கு எழுவாயாகிய அனுமன் என்பது தோன்ருமல் நின்றது ; தோன்ரு எழுவாய். (263)

### சுக்கிரீவன் கும்பகருணனேக் குத்துதல்

**7662.** அற்றது காலேயி னரக்க ஞயுதம்
பெற்றிலன் பெயர்ந்தில னனேய பெற்றியில்
பற்றினன் பாய்ந்தெதிர் பருதி கான்முளே
யெற்றினன் குத்தின னெறுழ்வெங் கைகளால்.

அற்றது காலேயில், அரக்கன், ஆயுதம்
பெற்றிலன், பெயர்ந்திலன் ; அனேய பெற்றியில்,
பற்றினன் பாய்ந்து எதிர், பருதி கான்முளே
எற்றினன், குத்தினன், எறுழ்வெங் கைகளால்.

பொ :—(அனுமன் பெயர்ந்து சென்ற) அப்போது, கும்பகருணன் மற்ருெரு ஆயுதத்தை எடுக்கவுமில்லே ; இடம் விட்டுப் பெயரவுமில்லே அந்த நிலேமையில் சூரியன் மகனுகிய சுக்கிரீவன், அக்கும்பகருண னது எதிரில் பாய்ந்து அவனேப் பற்றிக்கொண்டு தன் வலிய கொடிய கைகளால் தாக்கினுன் ; பின்பு குத்தினுன்.

கு :—அது என்பது அற்றது எனச் சுட்டுப் பெயர் திரிந்து நின்றது ; அவ்வனேத்தும் என்பது அன்றியனேத்தும் (தொல் - சொல். 66) என்று திரிந்து நின்ருற்போல. தன் சூலப் படையை முறித்த அனுமனது வீரத்தையே வியந்து நின்ற நிலேயில் கும்ப கருணன் வேறு படை எடாமலும் இடம் விட்டுப் பெயராமலும் இருந் தான் ; அந்த நிலேமை கண்டு சுக்கிரீவன் அவன்மேல் பாய்ந்து பற்றிக் குத்தினுன் என்க. பருதிகான்முளே எதிர்பாய்ந்து பற்றின ஞய்க் கைகளால் எற்றினுன் ; பின் குத்தினுன் என்று இயையும். எறுழ் - வலிமை. (264)

### கும்பகருணன் சுக்கிரீவனே நெருக்கிப் பற்றுதல்

**7663.** அரக்கனு நன்றுநின் ஞண்மை யாயினும்
தருக்கினி யின்ருெடு சமையுந் தானெஞ
நெருக்கினன் பற்றின னீங்கொ ஞவகை
உருக்கிய செம்பன வுதிரக் கண்ணினுன்.

அரக்கனும்,—'நன்று, நின் ஆண்மை; ஆயினும்,
தருக்கு இனி இன்றொடும் சமையும்தான்' எனா,
நெருக்கினன், பற்றினன், நீங்கொணா வகை;—
உருக்கிய செம்பு அன உதிரக் கண்ணினான்.

பொ :—கும்பகருணனும், (சுக்கிரீவனை நோக்கி) 'நின் ஆண்மை நன்று; ஆயினும், உன் செருக்கு இனி இன்றோடு அடங்கிவிடும்' என்று சொல்லிக் கொண்டே, உருக்கிய செம்புபோல உதிரம் கக்கும் கண்களையுடையனாய் (சுக்கிரீவனை) நீங்கிச் செல்லாவண்ணம் பற்றி நெருக்கினான்.

கு :—தன்னை நெருங்க வியலாத சுக்கிரீவன் தன்மேல் பாய்ந்து குத்தின வீரத்தை நினைந்து 'நின்னாண்மை நன்று' எனக் கும்ப கருணன் புகழ்ந்தான் என்க. இனி போர்க்கு ஆயத்தமாகத்தான் இல்லாத நிலையில் தன்மேல் பாய்ந்து குத்தியது ஆண்மைச் செயலன்று என்ற கருத்தால் 'நின்னாண்மை நன்று' என இகழ்ச்சிக் குறிப்பால் கூறினான் எனலும் ஆம். சமைதல் - அடங்குதல். தான் - அசை. எனா உதிரக் கண்ணினனாய், நீங்கொணா வகை, பற்றி நெருக்கினன் என இயையும். தருக்கு - செருக்கு. தருக்கு இன்றொடு சமையும் என்றது சுக்கிரீவன் இன்றே தன் கையில் அகப்பட்டு அழிவான் என்ற கருத்தாலாகும். கும்பகருணன் சினமிக்கமையால் அவன் கண்களில் இரத்தம் பெருகிற்று; அது செம்புருக்குப் போன்று காட்சியளித்தது என்றவாறு. நிறத்தாலும் நெகிழ்ச்சியாலும் வெப்பத்தாலும் செம்புருக்கு உதிரத்திற்கு உவமையாயிற்று. (265)

## கும்பகருணனும் சுக்கிரீவனும் போர் செய்தல் 7664-7665

**7664.** திரிந்தனர் சாரிகை தேவர் கண்டிலர்
புரிந்தனர் நெடுஞ்செருப் புகையும் போர்த்தெழ
எரிந்தன வுருமெலா மிருவர் வாய்களும்
சொரிந்தன குருதிதா மிறையுஞ் சோர்ந்திலர்.

திரிந்தனர் சாரிகை; தேவர் கண்டிலர்;
புரிந்தனர் நெடுஞ் செரு; புகையும் போர்த்து எழ
எரிந்தன உரும் எலாம்; இருவர் வாய்களும்
சொரிந்தன, குருதி; தாம் இறையும் சோர்ந்திலர்,

பொ :—(கும்பகருணன் பற்றிய பற்றிலிருந்து சுக்கிரீவன் வெளி வந்த பின்) அவ்விருவரும் சாரிகை திரிந்தார்கள்; அவர் திரியும்

வேகத்தால் இவர் இன்னுர் என்பதை இமையா நாட்டமுடைய தேவருங் காணுராயினர்; அவ்வாறு சாரிகை திரிந்து அவ்விருவரும் போர் செய்தார்கள்; புகையும் உலகத்தைப் போர்த்துக் கொண்டு எழுமாறு இடிகள் எல்லாம் எரிந்தன; அவ்விருவர் வாய்களும் இரத்த நீரைச் சொரிந்தன; (ஆனுல்) அவர்தாம் சிறிதும் சோர்வுருது, போர் செய்யலாயினர்.

கு:—சாரிகையாவது போர் செய்யும் வீரர்கள் எதிர் எதிராக அடியிட்டு வட்டமாகச் சுற்றி வருதல். சாரிகை திரிந்த அவர் வேகத்தைப் பலப்படுத்தத் 'தேவர் கண்டிலர்' என்ருர். இமையாத கண்ணையுடைய தேவர்களும் காணமுடியாதவாறு விரைந்து திரிந்தனர் என்றவாறு. இவ்விருவர் தம் சினவனல்பட்டு விண்ணில் இடிகளும் எரிந்தன; புகையும் எழுந்து உலகைப் போர்த்தது என்றவாறு. ஒருவரை ஒருவர் தாக்கியதால் இருவாய்களும் இரத்தத்தைச் சொரிந்தன. தம் வாய்களில் இரத்தம் சோரவும் அவவிருவரும் சிறிதும் சோராமல் போர் செய்து கொண்டே யிருந்தனர் என்பார், "இறையும் சோர்ந்திலர்" என்ருர். (266)

**7665.** உறுக்கின ரொருவரை யொருவ ருற்றிகல்
முறுக்கினர் முறைமுறை யரக்கன் மொய்ம்பினுல்
பொறுக்கிலா வகைநெடும் புயங்க ளாற்பிணித்
திறுக்கின னிவன்சிறி துணர்வு மெஞ்சினுன்.

உறுக்கினர், ஒருவரை ஒருவர்; உற்று இகல்
முறுக்கினர், முறைமுறை; அரக்கன் மொய்ம்பினுல்
பொறுக்கிலாவகை நெடும் புயங்களால் பிணித்து
இறுக்கினன்; இவன் சிறிது உணர்வும் எஞ்சினுன்.

பொ:—ஒருவரை ஒருவர் அதட்டினராய் நெருங்கி முறைமுறையே போரைக் கடுமையாகச் செய்தனர்; (அவ்வாறு செய்யும் போது) கும்பகருணன் வலிமையோடு தன் நீண்ட தோள்களால் சுக்கிரீவனை வளைத்துக் கட்டி, அவன் பொறுக்க முடியாதபடி இறுக்கினுன்; அதனுல், இச்சுக்கிரீவன் சிறிது உணர்ச்சியற்றவனுக ஆனுன்.

கு:—உறுக்குதல் - அதட்டுதல். இகல் முறுக்குதலாவது, போரைக் கடுமையாகச் செய்தல். மொய்ம்பு - வலிமை. மொய்ம்போடு புயங்களாற் பிணித்து இறுக்கினன் என ஆல் உருபை உடனிகழ்ச்சிப் பொருளதாக்குக. பொறுக்கிலாவகை இறுக்கினன் என இயையும். பிணித்தல் - கட்டுதல். கும்பகருணனது இறுக்

கலைப் பொறுக்காமல் சுக்கிரீவன் உணர்விழந்தான் என்றவாறு. எஞ்சுதல் - குறைதல். உணர்வும் எஞ்சினுன் என்றது, மூச்சற்று மயங்கியதை. (267)

## சுக்கிரீவனைக் கும்பகருணன் தூக்கிச் செல்லுதல்

**7666.** மண்டம ரின்ருெடு மடங்கு மன்னிலாத்
தண்டலில் பெரும்படை சிந்துந் தக்கதோர்
எண்டரு கருமமற் றிதனி னில்லெனக்
கொண்டனன் போயின னிருதர் கோநகர்.

'மண்டு அமர் இன்ருெரு மடங்கும்; மன் இலாத்
தண்டல் இல் பெரும்படை சிந்தும்; தக்கது ஓர்
எண் தரு கருமம் மற்று இதனின் இல்' என,
கொண்டனன் போயினன் நிருதர் கோ நகர்.

பொ:—அரக்கர்கள் தலைவனுகிய கும்பகருணன், - (இச்சுக்கிரீவனைத் தூக்கிக்கொண்டு போய் விட்டால்) 'இருதிறத்தவரும் நெருங்கிச் செய்யும் போர் இன்ருேடு முடிந்துவிடும்; தலைவன் இல்லாமையால், நீங்குதலில்லாத பெரிய வானரப் படை சிதறியோடும்; (ஆதலால்) இதைக் காட்டிலும் தக்கதாகிய மதிக்கத்தக்க செயல் வேறு இல்லை" என்று சுக்கிரீவனைத் தூக்கிக்கொண்டு இலங்கை நகர்க்குப் போனுன்.

கு:—நிருதர்கோ என்றது கும்பகருணனை. இனி, இராவணன் எனக் கொண்டு அவனுக்குரிய இலங்கையை நிருதர் கோநகர் எனக் குறித்ததாகக் கொள்ளலும் ஆம். இதனின் என்புழிச் சுட்டு முன் வந்தது; செய்யுளாதலின். கொண்டு போதலாகிய இதனின் எண்டருகருமம் மற்றில்லை என்க. மண்டுதல் - நெருங்குதல். மடங்குதல் - முடிதல், அடங்கும் எனப் பிரித்தலும் ஆம். மன்னிலா என்புழி இலா என்ற ஈறுகெட்ட எதிர்மறை வினையெச்சம், காரணப் பொருளது. மன்னிலாப் பெரும் படை என இயைத்துப் பெயரெச்சமாகக் கொள்ளின் பெரும்படை சிதைதற்கு மன்னிலாமை காரணம் என்பது விளக்கம் பெருமையின் வினையெச்சமாக்குதலே பொருந்தும். தண்டல் - நீங்குதல். சுக்கிரீவனை விட்டு நீங்காத பெரிய வானரப் படை என்க. எண்ணுதல் - மதித்தல். தக்கதோர் கருமம், எண்டருகருமம் என இயையும். இதனின் தக்கதோர் எண்டரு கருமம் மற்றுஇல் என இயையும். கொண்டனன், முற்றெச்சம். கொண்டு போயினன் என்க. சுக்கிரீவனைத் தூக்கிச் சென்றுவிட்டால் போர் இன்ருேடு முடிவுறும்; வானரப் படையும் தலைவனில்லாமையால் சிதறி ஓடும்; ஆகலின், இதைவிடச் சிறந்த செயல் இல்லை

யென்று கும்பகருணன் எண்ணிச் சுக்கிரீவனைத் தூக்கிச் சென்றான் என்றவாறு. (268)

### வானரப்படை அதுகண்டு அரற்றுதல்

**7667.** உரற்றின பறவையை யூறு கொண்டெழச்
சிரற்றின பார்ப்பினிற் சிந்தை சிந்திட
விரற்றுறு கைத்தலத் தடித்து வெய்துயிர்த்
தரற்றின கவிக்குல மரக்க ரார்த்தனர்.

உரற்றின பறவையை ஊறு கொண்டு எழ,
சிரற்றின பார்ப்பினின் சிந்தை சிந்திட,
விரல்துறு கைத்தலத்து அடித்து, வெய்துயிர்த்து,
அரற்றின, கவிக்குலம்; அரக்கர் ஆர்த்தனர்.

பொ :—(தன் குஞ்சுகட்கு இடையூறு வாராதபடி) கூவிக் கொண்டிருந்த தாய்ப் பறவையை வல்லூறு எடுத்துக் கொண்டு போய்விட, (அது கண்டு) கதறிய குஞ்சுகள் போல வானரக் கூட்டம், (தம் தலைவனாகிய சுக்கிரீவனைக் கும்பகருணன் எடுத்துச் சென்றதைக் கண்டு) தம் மனம் முறிதலால், விரல்கள் நெருங்கிய கைகளால் அடித்துக்கொண்டு வெப்பமாகப் பெருமூச்சு விட்டுத் துன்ப ஆரவாரம் செய்தனர். அதுகண்டு அரக்கர் இன்ப ஆரவாரம் செய்தனர்.

கு :—உரற்றுதல் - அதட்டி ஆரவாரித்தல். வல்லூறு பறப்பதைக் கண்ட தாய்ப் பறவை தன் குஞ்சுகளை எடுத்துச் செல்லுமோ என்ற அச்சத்தால் அவ்வல்லூற்றினை அச்சுறுத்தும் முறையில் ஆரவாரித்தது; அவ்வாறு ஆரவாரித்த தாய்ப் பறவையையே வல்லூறு அடித்துக்கொண்டு போயது; தமக்குப் பாதுகாவலாக இருந்த தாய்ப் பறவையை பறிகொடுத்த குஞ்சுகள் துன்பக்குரல் எழுப்பி அரற்றுகின்றன; வானரர்கள் பார்ப்புகள் போன்றனர்; சுக்கிரீவன் தாய்ப் பறவை போன்றனன்; அவனை யெடுத்துச் சென்ற கும்பகருணன் வல்லூறு போன்றனன் என்று உவமையை விரித்துக் கொள்க. சிரற்றுதல் - துன்பத்தால் அரற்றுதல், பார்ப்பு- குஞ்சு. கைத்தலத்தால் வயிற்றில் அடித்துக் கொள்ளுதலும் வெய்துயிர்த்தலும் அரற்றுதலும் அவலச் சுவைக்குரிய இயல்பான செயல்களாகும். தம் பகைப் படையாகிய வானரங்களின் அவல நிலை கண்டு அரக்கர் மகிழ்ச்சியால் ஆரவாரிக்கின்றனர் என்க. பறவை என்றது இங்குப் பெட்டைக் கோழியை எனலாம். (269)

## சுக்கிரீவனைப் பிரிந்த வானரர் நிலை

**7668.** நடுங்கின ரமரரு நாவு லர்ந்துவேர்த்
தொடுங்கினர் வானரத் தலைவ ருண்முகிழ்த்
திடுங்கின கண்ணின ரெரிந்த நெஞ்சினர்
மடங்கின வாமுயிர்ப் பென்னு மாண்பினர்.

நடுங்கினர் அமரரும்; நா உலர்ந்து வேர்த்து
ஒடுங்கினர், வானரத் தலைவர்—உள் முகிழ்த்து,
இடுங்கின கண்ணினர், எரிந்த நெஞ்சினர்,
'மடங்கினவாம் உயிர்ப்பு' என்னும் மாண்பினர்.

பொ :—தேவர்களும் நடுங்கினர்; வானரத் தலைவர்கள் நா வற்றி உடம்பு வேர்த்து, உள்ளம் சுருங்கி, இடுங்கின கண்ணினராய், எரிந்த நெஞ்சினராய், 'இவர்கள் உயிர்ப்பு மடங்கினவாம்' என்று கண்டோர் கருதத்தக்க இயல்பினையுடையராய் மூர்ச்சித்தனர்.

கு :—சுக்கிரீவனைக் கும்பகருணன் எடுத்துச் சென்றது கண்ட தேவர்கள் ஒன்றும் செய்ய வியலாது அஞ்சி நடுங்கினர் என்றவாறு. அமரரும் என்புழி உம்மை உயர்வு சிறப்பு. வானவரே நடுங்குகின்ற போது வானரர் நிலை கூற வேண்டுமோ என்பது குறிப்பு. தம் மன்னவனைப் பிரிந்த வானரத் தலைவர்களின் துன்பமும் அன்பும் பின் மூன்றடிகளில் புலப்படுத்தியவாறு. அச்சமுற்ற காலத்து நாவற்றுதலும் உடம்பு வேர்த்தலும் கண் இடுங்குதலும் இயல்பு. தன் மன்னவனை எடுத்துச் சென்ற கும்பகருணனை ஒன்றும் செய்ய வியலாத நிலை நினைந்து நெஞ்சு எரிதலும், அதனால் மூச்சு அடங்குதலும் இயல்பாதல் காணலாம். வானரத் தலைவர் உலர்ந்து, வேர்த்து, முகிழ்த்து, இடுங்கின கண்ணினராய், எரிந்த நெஞ்சினராய், மாண்பினராய் ஒடுங்கினர் என இயையும். உள் முகிழ்த்தல் என்பது உள்ளம் அச்சத்தால் சுருங்குதலை உணர்த்தியது. ஒடுங்குதல் என்றது மூச்சறுதலை யுணர்த்தியது. (270)

## சுக்கிரீவனைக் கும்பகருணன் எடுத்துச் செல்லும் தோற்றம் 7669-7670

**7669.** புழுங்கிய வெஞ்சினத் தரக்கன் பேர்குவான்
அழுங்கலில் கோண்முகத் தரவ மாயினான்
எழுங்கதி ரிரவிதன் புதல்வ னெண்ணுற
விழுங்கிய மதியென மெலிந்து தோன்றினான்.

புழுங்கிய வெஞ்சினத்து அரக்கன் போகுவான்,
அழுங்கல் இல் கோள்முகத்து அரவம் ஆயினன் ;
எழும்கதிர் இரவிதன் புதல்வன், எண்ணுற
விழுங்கிய மதி என, மெலிந்து தோன்றினன்.

பொ :—(சுக்கிரீவனை எடுத்துச்) செல்பவனாகிய, மனம் புழுங்குதலால் உளதாகிய கொடிய கோபத்தையுடைய, கும்பகருணன்— துன்பமில்லாத கோளாகிய முகமட்டுமாகவுள்ள இராகுவென்னும் பாம்பு போலக் காட்சியளித்தான் ; எழுகின்ற கதிர்களையுடைய சூரியனுடைய மகனாகிய சுக்கிரீவன்—உலக மக்கள் கலங்கி நினையும் படி (அந்த இராகுவால்) விழுங்கப்பட்ட சந்திரனைப் போல மெலிந்து காணப்பட்டான்.

கு :—வெண்ணிறமுள்ள சுக்கிரீவனை எடுத்துச் செல்லும் கரியவனான கும்பகருணன், சந்திரனை விழுங்கும் கரும் பாம்பாகிய இராகுவைப் போன்றான்; கும்பகருணனது பிணிப்புக்குள் அடங்கி மயங்கியிருக்கும் சுக்கிரீவன், இராகுவால் விழுங்கப்பட்டு ஒளியும் பொலிவும் குறைந்த சந்திரனைப் போன்றான் என்றவாறு. மனம் புழுங்கியதால் உளதாவது கோபம் ஆதலின், 'புழுங்கிய வெஞ்சினம்' என்றார். போகுவானாகிய அரக்கன் அரவமாயினன்; இரவிதன் புதல்வன் மதி என மெலிந்து தோன்றினன் என்க. இராகு தான் வருந்தாமலிருந்தே சந்திரனைப் பிடித்து வருத்தும் இயல்பு புலப்பட, 'அழுங்கலில் கோள்முகத் தரவம்' என்றார். கோளாகிய அரவம், முகத்தரவம் எனத் தனித்தனி இயையும். தலையே இராகுவாதல் புலப்பட 'முகத்தரவம்' என்றார். முகம் என்றது தலையாதல் தெளிவு. சந்திரனை இராகு விழுங்குங்கால் உலக மக்கள் அச் சந்திரன் நிலையை நினைந்து இரங்கும் இயல்பு புலப்பட, 'எண்ணுற விழுங்கிய மதி' என்றார். "திங்களரவுறின் தீர்க்கல ராயினுந் தங்காதல் காட்டுவர் சான்றவர்" (கலி – 140) எனவும், "அங்கண் மதியம் அரவின்வாய்ப் பட்டெனப் பூசல் வாயாப் புலம்புமனைக் கலங்கி, யேதின் மாக்களும் நோவர்தோழி!யென்று நோவாரில்லைத் தெண்கடற் சேர்ப்ப னுண்டவென் னலக்கே" (தொல் - அகத். 3 சூ. நச். மேற்கோள்) எனவும் அரவு விழுங்கிய மதியைப் பற்றி மக்கள் எண்ணி வருந்தினமை கூறப்பட்டிருத்தல் காணலாம். (271)

**7670.** திக்குற விளக்குவான் சிறுவன் றீயவன்
மைக்கரு நிறத்திடை மறைந்த தன்னுரு
மிக்கதுங் குறைந்தது மாக மேகத்துப்
புக்கது புறத்ததா மதியும் போன்றனன்.

திக்கு உற விளக்குவான் சிறுவன், தீயவன்
மைக்கரு நிறத்திடை மறைந்த தன் உரு
மிக்கதும் குறைந்ததும் ஆக, மேகத்துப்
புக்கது புறத்தது ஆம் மதியும் போன்றனன்.

பொ :—(தன் ஒளிக் கதிர்களால்) திசைகளை யெல்லாம் மிகவும் விளங்கச் செய்கின்றவனாகிய சூரியனுடைய மகன் - சுக்கிரீவன், கொடியவனாகிய கும்பகருணனது மைபோன்ற கரிய மார்பினிடையே மறைந்த தன் வெள்ளுருவம் சிறிதுபோது மிகுதியாகவும் சிறிது போது குறைந்ததாகவும் தோன்றுதலால், கருமேகத்தில் புக்க தாய்ப்பின் வெளியே வருகின்ற சந்திரனையும் போன்றான்.

கு :—கும்பகருணனுடைய கரிய மேனியில் மறைக்கப்பட்டுச் செல்லும் வெண்ணிறச் சுக்கிரீவனுக்கு வேறும் ஓருவமை கூறுகின்றமையால், "மதியும் போன்றனன்' என இறந்தது தழுவிய எச்ச உம்மை கொடுத்துக் கூறியவாறு. திசைகளை யெல்லாம் விளக்கும் உலகப் பெருவிளக்காயுள்ள சூரியனுக்கு மகன், முகினுழை மதியம் போலக் கும்பகருணன் கையில் புகுந்து ஒளிகுன்றித் தோன்று கின்றானே என்று இரக்கந் தோன்றக் கூறியவாறு. கும்பகருண னது கரியமேனி சிறிது மறைக்கும்போது சுக்கிரீவன் உருவம் மிக்குத் தோன்றுகின்றது; அது மிகுதியாக மறைக்கும்போது அச்சுக்கிரீவன் உருவம் குறைந்து தோன்றுகின்றது என்க. மேகத்தால் சிறிது மறைக்கப்பட்ட சந்திரன் பெருகத் தோன்றுதலும், பெரிதும் மறைக் கப்பட்டபோது. அச்சந்திரன் சிறுகித் தோன்றுதலும் பலரும் கண்டது ஆகலின், அதனையே உவமை கூறினார். மேகத்துப் புக்கதாம் மதியும், புறத்ததாம் மதியும் என இயையும். மேகத்தால் மறைக்கப்பட்ட சந்திரன் ஒரு படித்தாய்த் தோன்றாமல் மிக்கும் குறைந்தும் தோன்றுவதுபோலக் கும்பகருணனால் எடுக்கப்பட்ட சுக்கிரீவன் ஒரு படித்தாய்த் தோன்றாமல் அவன் அசைவுக்கேற்ப மிக்கும் குறைந்தும் தோன்ற லாயினான் என்றவாறு. சந்திரன் மிக்குத் தோன்றுதலும் குறைந்து தோன்றுதலும் முகிலிற் புகும் போதும் நிகழலாம்; புறப்படும்போதும் நிகழலாம் ஆதலின், அவ்விருதிறமும் கூறினார். (272)

## அனுமன் கைபிசைந்துகொண்டு கும்பகருணன்பின் போதல்

**7671.** ஒருங்கமர் புரிகிலே னுன்னெடி யானென
நெருங்கிய வுரையினை நினைந்து நேர்கிலன்

கருங்கடல் கடந்தவக் காலன் காலன்வாழ்
பெருங்கரம் பிசைந்தவன் பின்பு சென்றனன்.

'ஒருங்கு அமர் புரிகிலேன், உன்னொடு யான்' என,
நெருங்கிய உரையினை நினைந்து, நேர்கிலன்,
கருங்கடல் கடந்த அக்காலன், காலன்வாழ்
பெருங்கரம் பிசைந்து, அவன் பின்பு சென்றனன்.

பொ :—கருங்கடலைத் தாண்டிச் சென்ற நீண்ட கால்களையுடைய அந்த அனுமன், (முன்பு கும்பகருணனை நோக்கி) "உன்னோடு யான் ஒருங்கே சேர்ந்து போர்புரிகிலேன்" என்று நெருங்கிச் சொன்ன சொல்லை நினைந்து (சுக்கிரீவனைத் தூக்கிச் செல்லும் கும்பகருணனை) எதிர்க்காதவனாய் எமன் வாழ்கின்ற தன் பெரிய கைகளைப் பிசைந்து கொண்டு அவன் பின்னே செல்வானானான்.

கு :—கும்பகருணனை அழித்தற்குரிய காலும் கையும் இருந்தும் அனுமன் அது செய்யாது கைபிசைந்து பின் சென்றது 'உன்னோடு யான் அமர்புரிகிலேன்' என முன்பு கூறிய சொல் தவறலாகாது என்ற வாய்மைப் பண்பாலாகும் என்பது இதனால் கூறப்பட்டது. நேர்தல் - எதிர்த்தல். காலன் காலன் வாழ் என்ற மடக்கு என்னும் சொல்லணியின் சிறப்பு நோக்கத் தக்கது கருங்கடலைக் கடந்த காலால் கும்பகருணனது கருவுடலை மிதித்தழித்தலோ, அல்லது எமன் வாழ்கின்ற அவன் பெருங் கைகளால் அப்பெருவுடலைப் பிசைந் தழித்தலோ அனுமனுக்கு அரிதன்று என்பது தோன்றக் கருங்கடல் கடந்த அக்காலன்' என்பதும் 'காலன் வாழ்' பெருங்கரம் என்பதும் அமைந்திருத்தல் காணலாம். அனுமன் கையில் அகப்பட்டவர் உயிரிழத்தல் உறுதி ஆதலின், அவன் கரம்' காலன் வாழ் பெருங் கரம்' எனச் சிறப்பிக்கப் பெற்றது. செய்வதறியாத நிலையில் கைபிசைதல் நிகழ்தல் இயல்பு. இதனால் அனுமனது சொற்பிழையாமை நன்கு புலப்படுதல் காண்க. (273)

### சுக்கிரீவனை அரக்கன் எடுத்துச் சென்றதைச் சிலர் இராமனுக்குச் சொல்லுதல்

**7672.** ஆயிரம் பெயரவ னடியில் வீழ்ந்தனர்
நாயக ரெமக்கினி யாவர் நாட்டினில்
காய்கதிர்ச் செல்வனைப் பிணித்த கையினன்
போயின னரக்கனென் றிசைத்த பூசலார்.

ஆயிரம் பெயரவன் அடியில் வீழ்ந்தனர்,
'நாயகர் எமக்கு இனி யாவர், நாட்டினில்?
காய்கதிர்ச் செல்வனைப் பிணித்த கையினன்,
போயினன், அரக்கன்' என்று இசைத்த பூசலார்.

பொ :—'வெயில் காய்கின்ற கதிரவனுக்குப் புதல்வனாகிய சுக்கிரீவனைத் தூக்கிச் கொண்ட கையையுடையனாய்க் கும்பகருணன் போய் விட்டான்; இனிமேல் நாட்டினில் எமக்கு நாயகர் யாருளர்?' என்று அரற்றுகின்ற துன்ப ஆரவாரமுடையராய்(ச் சிலவானரர்) இராமன் திருவடியில் வீழ்ந்தார்கள்.

கு :—ஆயிரம் பெயரவன் என்றது இங்குத் திருமாலின் அமிசமாய் வந்துள்ள இராமனை. தங்கட்கு மன்னவனாக இருந்த சுக்கிரீவன் அரக்கனால் கவரப்பட்டானாகலின், 'இனி எமக்கு நாயகர் யாருளர்?' எனக் கதறுவாராயினர் வானரர். நாட்டினில் யாவர் உளர் என ஒரு சொல் வருவிக்க. 'அரக்கன், காய்கதிர்ச் செல்வனைப் பிணித்த கையினனாய்ப் போயினன்; இனி, எமக்கு நாயகர் யாவர் என இசைத்த பூசலாராய் ஆயிரம் பெயரவன் அடியில் வீழ்ந்தனர்' எனக் கொண்டு கூட்டி முடிக்க. (274)

52-ல் இதற்குப்பின்.

7672 (a) காய்கதிர்ச் செல்வனைப் பிணித்த கையினன்,
போயின னரக்கனென் றுரைத்த போழ்தின்வாய்
நாயகன் பொருக்கென வெழுந்து, நஞ்சுமிழ்
தீயன வெகுளியன், இனைய செய்தனன்.

என்ற செய்யுள் காணப்படுகின்றது.

## இராமன் சினமிக்கு விரைந்து இலங்கை நகர் வாயிலை அடைதல்

**7673.** தீயினு முதிர்வுறச் சிவந்த கண்ணினன்
காய்கணை சிலையொடுங் கவர்ந்த கையினன்
ஏயெனு மளவினி லிலங்கை மாநகர்
வாயில்சென் றெய்தினன் மழையின் மேனியான்.

தீயினும் முதிர்வுறச் சிவந்த கண்ணினன்,
காய்கணை சிலையொடும் கவர்ந்த கையினன்,

'ஏ' எனும் அளவினில், இலங்கை மாநகர்
வாயில் சென்று எய்தினன்—மழையின் மேனியான்.

பொ :—மழைபொழியும் கார் முகில் போன்ற மேனியையுடையவ னாகிய இராமன் நெருப்பினைக் காட்டிலும் சிறப்புடையதாகச் சிவந்த கண்களையுடையனாய்க், கொல்லும் அம்புகளை வில்லினோடும் வாரிக் கொண்ட கையினையுடையனாய், ஏ என்று சொல்லும் இரண்டு மாத் திரைப் பொழுதில் இலங்கை மாநகரத்தின் வாயிலைச் சென்று அடைந்தான்.

கு :—கும்பகருணன் செயலைக் கேட்டவுடன் இராமனுக்குத் தோன்றிய வெகுளியும் விரைவும் புலப்படுத்துவது இப்பாடல். வாடிய பயிர்க்கு உதவச் செல்லும் கருமுகில் போலக் கும்பகருணன் கையிலகப்பட்டு வாடியுள்ள சுக்கிரீவனுக்கு உதவச் செல்லும் இராமனை 'மழையின் மேனியான்' என்றது பொருத்தமாதல் காண லாம். சினத்தால் சிவந்த இராமன் கண்ணுக்கு வெப்பத்தாலும் செம்மையாலும் நெருப்பு நிகராகாமை நினைந்து 'தீயினு முதிர்வுறச் சிவந்த கண்ணினன்' என்றார். முதிர்தல், சிறப்புடையதாதல். கேட்டவுடன் விரைந்து செல்லும் அவசரத்தில் அம்புகளையும் வில்லை யும் ஆய்ந்து தனித்தனி எடுத்தல் கூடாமையின் 'காய்கணை சிலை யொடுங் கவர்ந்த கையினன்' என்றார். இரண்டு மாத்திரை நேரத்தில் இலங்கை வாயிலை அடைந்தான் என்பார், 'ஏ' எனும் அளவினில் என்றார். ஏ என்று சொல்லும் கால அளவு இரண்டு மாத்திரைப் போது என்பது தெரிந்ததே. மேனியான், கண்ணினனாய் கையினனாய் வாயில் சென்று எய்தினன் என இயையும். (275)

### இராமன் அம்பு மாரியால் வாயிலை அடைத்தல்

**7674.** உடைப்பெருந் துணைவனை
யுயிரிற் கொண்டுபோய்க்
கிடைப்பருங் கொடிநக
ரடையிற் கேடெனத்
தொடைப்பெரும் பகழியின்
மாரி தூர்த்துற
அடைப்பெனென் றடைத்தன்
விசும்பி னறெலாம்.

'உடைப் பெருந் துணைவனை
உயிரின் கொண்டுபோய்
கிடைப்பருங் கொடிநகர்
அடையின், கேடு' என,
'தொடைப் பெரும் பகழியின்
மாரி தூர்த்து உற
அடைப்பென்' என்று, அடைத்தனன்,
விசும்பின் ஆறு எலாம்.

பொ:—என்னுடைய சிறந்த நண்பனை, என்னுயிரைக் கொண்டு போவது போலக் கொண்டுபோய், நெருங்குதற்கரிய காவலையுடைய கொடிகள் கட்டியுள்ள இலங்கை நகரை அடைவானாயின், கேடு பயப்பதாகும்' என்று கருதி, (இராமன்) 'தொடுத்தலையுடைய பெரிய அம்புமாரி பெய்து நிரப்பி வழியை அடைப்பேன்' என்று சொல்லி அவ்வாறே ஆகாய வழியையும் சேர்த்து அம்புகளால் அடைத்து விட்டான்.

கு:—சுக்கிரீவனை இராமன், 'தீயரே யெனினு முன்னோடு உற்றவ ரெனக்கு முற்றார்; உன்கிளை யெனது; என்காதல் சுற்றமுன் சுற்றம்; நீயென் இன்னுயிர்த் துணைவன்' (நட்புக்கோட்-27) என்று கூறி நட்புக்கொண்டவனாதலின் இங்கு அவனை 'உடைப்பெருந் துணைவனை' எனவும் 'உயிரிற் கொண்டுபோய்' எனவும் கூற லானான். கிடைத்தல் - நெருங்குதல். தொடை - தொடுத்தல். பெரும்பகழி என்றது ஆற்றலால் சிறந்த அம்பினை. நீர்மாரியை விலக்கப் பகழியின்மாரி என்றார். இன் தவிர்வழிச்சாரியை. தூர்த்தல் – நிரப்புதல். உற அடைத்தல் நன்றாக அடைத்தல். நகர வாயிலையேயன்றி விண்வழியையும் அம்புகளால் அடைத்தான்; அரக்கர் விண்வழியிலும் செல்லக்கூடுமாதலின். அம்புகளால் வழியை அடைத்தலாவது அம்புகளாலேயே சுவர் எழுப்பித் தடுத்தல். (276)

### இராமன் பெய்த சரமாரியின் விளைவு

**7675.** மாதிர மறைந்தன வயங்கு வெய்யவன்
சோதியின் கிளர்நிலை தொடர்த லோவின
யாதும்விண் படர்கில வியங்கு கார்மழை
மீதுநின் றகன்றன விசும்பு தூர்ந்ததால்.

மாதிரம் மறைந்தன; வயங்கு வெய்யவன்
சோதியின் கிளர்நிலை தொடர்தல் ஓவின;
யாதும் விண்படர்கில; இயங்கு கார்மழை
மீது நின்று அகன்றன; விசும்பு தூர்ந்ததால்.

பொ :—(இராமன் அவ்வாறு அம்புகளால் அடைத்ததால்) திசைகள் தோன்றாமல் மறைந்தன; விளக்கமுடைய சூரியனுடைய பேரொளியின் கிளர்ந்து வரும் கதிர்கள் தொடர்ந்து பூமிக்கு வருதலும் தடைப்பட்டு நீங்கின; விண்ணில் ஏதும் செல்லாதன ஆயின; இயங்கும் தன்மையுள்ள கரிய மேகம் மேலேயிருந்து இன்னும் மேலிடத்திற்கு அகன்று சென்றன; ஆகாயமே தூர்ந்து விட்டது.

கு :—இராமன் விட்ட அம்புகளால் ஏற்பட்ட விளைவுகளை விளக்கியவாறு. மாதிரம் - திசை. வெய்யவன் - சூரியன்; வெப்பத்தை விளைவிப்பவன் ஆதலின் அப்பெயர் பெற்றான். கிளர்நிலை தொடர்தல் என்றது, சூரியனது பேரொளியினின்றும் கிளர்ந்தெழும் ஒளிக்கதிர்கள் தொடர்ந்து பூமிக்கு வருதலை உணர்த்தியது. கார் மழை என்றது கரியமேகத்தை. அது இயங்கும் தன்மையது ஆதலின் அது முன்னின்ற இடத்தினின்று இன்னும் மேலே அகன்று சென்றது என்றவாறு. ஏனை நான்கு பூதங்கட்கும் இடம் கொடுத்தகன்றுள்ள ஆகாயமும் சரமழையால் தூர்ந்து போயது அற்புத நிகழ்ச்சியாதலின் அதனை இறுதியிற் கூறிச் சிறப்பித்தார். (277)

அம்புகளாலாய மதிலை நெருங்கிய கும்பகருணன்
அதனைக் கடக்க இயலாது திரும்பிப் பார்த்தல்

**7676.** மனத்தினுங் கடியதோர்
விசையின் வான்செல்வான்
இனக்கொடும் பகழியின்
மதிலை யெய்தினான்
நினைத்தவை நீக்குத
லருமை யின்றெனச்
சினக்கொடுந் திறலவன்
றிரிந்து நோக்கினான்.

மனத்தினும் கடியது ஓர் விசையின் வான் செல்வான்,
இனக் கொடும் பகழியின் மதிலை எய்தினான்;
'நினைத்தவை நீக்குதல் அருமை இன்று' என,
சினக் கொடுந் திறலவன் திரிந்து நோக்கினான்.

பொ :—சினத்தோடு கொடுமையான வலிமையுடைய கும்ப கருணன், மனத்தைக் காட்டிலும் கடுமையானதொரு வேகத்தோடு விண்வழி செல்கின்றவனுக்குக் கூட்டமான கொடிய அம்புகளாலான மதிலை நெருங்கி, இன்று அவற்றை நீக்குதல் அருமை என்று எண்ணி, (இம்மதிலைச் செய்தவர் யார் என்றறியத்) திரும்பிப் பார்த்தான்.

கு :—திறலவன் செல்வானுய், எய்தி நீக்குதல் அருமையென நினைத்துத் திரிந்து நோக்கினுன் என இயையும். செல்வான், எய்தினுன் என்பன முற்றெச்சங்கள். திரிந்து நோக்குதல் - திரும்பிப் பார்த்தல். இவ்வம்புமதிலை அமைத்தவர் யார் என அறியத் திரும்பி நோக்கினுன் என்க. வேகத்தில் சிறந்ததாக மதிக்கப்படுவது மனம் ஆதலின், அதை யெடுத்துக் கூறி உறழ்ந்தவாறு. (278)

## இராமன் வடிவத்தைக் கும்பகருணன் காணுதல்

**7677.** கண்டனன் வதனம்வாய் கண்கை காலெனப்
புண்டரீ கத்தடம் பூத்துப் பொற்சிலை
மண்டலந் தொடர்ந்துமண் வயங்க வந்ததோர்
கொண்டலிற் பொலிதரு கோலத் தான்றனை.

கண்டனன்–வதனம், வாய், கண், கை, கால், எனப்
புண்டரீகத் தடம் பூத்துப், பொன்சிலை
மண்டலம் தொடர்ந்து, மண் வயங்க வந்தது ஓர்
கொண்டலின் பொலிதரு கோலத்தான் தனை.

பொ :—(திரும்பிப் பார்த்த கும்பகருணன்) கண்டான்; (யாரை எனின்?) தாமரைத் தடாகம் போன்று முகம், வாய், கண், கை, கால் என்று பெயர் வழங்குமாறு (தாமரை மலர்கள் தன்னிடத்தில்) பூக்கப் பெற்று, அழகிய வில்வட்டம் தொடரப் பெற்று, மண்ணுலகம் விளங்குமாறு வந்ததொரு மேகத்தைப் போலப் பொலிகின்ற அழகிய திருமேனியையுடைய இராமனை.

கு :—நீலமேனியனுகிய இராமனுக்கு முகம், வாய், கண், கை, கால் ஆகிய உறுப்புக்கள் சிவந்திருத்தலின், நீலமேகம், தாமரை மலர்களைப் பூத்துக் கொண்டு வில்லை யேந்திக் கொண்டு விண்ணினை விடுத்து மண்ணில் விளக்கமுற வந்தது போன்றவன் என இல் பொருள் உவமை கூறி இன்புற்றவாறு. பகைவனுகிய கும்பகருணனையும் கவர்ந்த வடிவினன் இராமன் என்பதும் இதனுல் குறிப்பிட்டவாறு. 'கடல் கருமுகிலொளிர் கமலமதலரா, வடவரையுடன்வரு

செயலென' (பால - திருவவதா - 134) எனவும், கார்க்கடல் கமலம் பூத்த தெனப் பொலிவானைக் கண்டான் (யுத்த - வீடணனடைக் கலப் - 132) எனவும் இராமனது திருவுருவைப்பற்றி முன் கூறியுள் ளமை நினையத்தகும். மேகத்திற்கும் இந்திரவில் உளது ஆதலின், பொற்சிலை மண்டலம் தொடர்ந்து என்றது உள்பொருளே உவமித்த தாகக் கொள்க. மேகம் விண்ணில் நிற்பதன்றி மண்ணில் வருதல் இயல்பன்றாதலின் மண் வயங்க வந்ததோர் கொண்டலின் என இல் பொருள் உவமையாகக் கூறியவாறு. இராமனாகிய மேகம் வந்ததால் மண்ணுலகமே விளக்கம் பெற்றது என்ற குறிப்பும் தோன்ற 'மண் வயங்க வந்ததோர் கொண்டலின்' என்றார். (279)

## கும்பகருணன் இராமனைக் கண்டதும் வெகுண்டு அதட்டுதல்

**7678.** மடித்தவாய் கொழும்புகை வழங்க மாறிதழ்
துடித்தன புருவங்கள் சுறுக்கொண் டேறிடப்
பொடித்ததீ நயனங்கள் பொறுக்க லாமையால்
இடித்தவன் றெழிப்பினு லிடிந்த குன்றெலாம்.

மடித்தவாய் கொழும்புகை வழங்க, மாறிதழ்
துடித்தன ; புருவங்கள் சுறுக்கொண்டு ஏறிட
பொடித்ததீ, நயனங்கள் ; பொறுக்கலாமையால்—
இடித்தவன் தெழிப்பினுல், இடிந்த, குன்று எலாம்.

பொ :—(பகைவனாகிய இராமனைக் கண்டவுடன் கும்பகருண னுக்குப்) பொறுக்கமாட்டாமையால்,—மடித்தவாயானது கொழுவிய புகையை வெளிப்படுத்த, வாயின், மேல், கீழ் உதடுகள் துடித்தன ; புருவங்கள் சுடுநாற்றங்கொண்டு நெற்றிமேல் ஏறுமாறு, கண்கள் தீப்பொறிகளைக் கக்கின ; அவன் இடியொலி போன்று அதட்டிய வலிய ஒலியால் குன்றுகள் எல்லாம் இடிந்தன.

கு :—இராமனைக் கண்டு பெரிது வெகுண்ட கும்பகருணனது நிலையை விளக்கியவாறு. வாய் மடித்தலும், புகை தோன்றலும் வாயிதழ் துடித்தலும், புருவங்கள் ஏறுதலும், கண்கள் தீப்பொறி சிந்துதலும் அதட்டுதலும் சினத்தின் விளைவுகள். மனத்தில் தோன்றும் சினத்தீயின் புகை வாய்வழி வருகின்றது என்க. வாயின் கீழ் இதழையும் மேலிதழையும் மாறிதழ் என்றார், 'அவை கீழ் மேலாக மாறி நிற்கும் நிலை புலப்பட வேண்டி. நயனங்களில் தோன்றிய தீ, அக்கண்ணிற்கு மேலுள்ள புருவங்களைத் தீய்த்தமை 'புலப்படப் புருவங்கள் சுறுக் கொண்டேறிட' என்றார். சுறு - சுடு

நாற்றம். "கூந்தலின் சுறு நாறுகின்றது" (யுத்த - மந்திரப் - 13) என்புழியும் இச்சொல் இப்பொருள் படுதல் காணலாம். கோபம் உண்டாம்போது புருவம் மேலே உயர்தல் இயல்பு. "மீ நிவந்த கொழுங்கடைப் புருவம் நெற்றி முற்றச் சென்றன", (பால- கையடைப்) எனக்கோசிக முனியின் கோப நிகழ்ச்சி குறிக்கப்பட்டி ருத்தல் காணலாம். பொறுக்கலாமையால் மடித்தவாய் புகை வழங்க இதழ் துடித்தன; புருவங்கள் ஏறிட, நயனங்கள் தீ பொடித்த; தெழிப்பினுல் குன்றெலாம் இடிந்த என இயையும். தெழித்தல் - அதட்டுதல். கும்பகருணனது தெழிப்பு இடிபோன்றது என்பது புலப்படுத்த, 'தெழித்தவன் தெழிப்பு' என்னுது இடித்த வன் தெழிப்பு என்ருர். இடிஇடித்தாற் போன்ற, வன்மையான தெழிப்பு என்றவாறு. (280)

## கும்பகருணன் வீரச் சொல் 7679-7683

**7679.** மாக்கவந் தனும்வலி தொலைந்த வாலியாம்
பூக்கவர்ந் துண்ணியும் போலு மென்றெனைத்
தாக்கவந் தனையிவன் றன்னை யின்னுயிர்
காக்கவந் தனையிது காணத் தக்கதால்.

' "மாக் கவந்தனும், வலிதொலைந்த வாலிஆம்
பூக் கவர்ந்து உண்ணியும், போலும்" என்று, எனைத்
தாக்க வந்தனை; இவன் தன்னை இன் உயிர்
காக்க வந்தனை; இது காணத்தக்கதால்.'

பொ :—(நின் அம்பினுல்) வலிதொலைந்து மாய்ந்த பெரிய கவந்தனும், வாலியாகிய பூவைக் கவர்ந்து உண்ணும் இயல்புள்ள குரங்கும் போல்வான் என்று எனை எண்ணி, இச்சுக்கிரீவனது இனிய உயிரைக் காக்கும் பொருட்டு வந்து, என்னைத் தாக்குதற்கு வந்திருக்கின்ருய்; இது பின் காணத்தக்கதாகும்.

கு :—வலி தொலைந்த என்பது இடைநிலை விளக்கமாய்க் கவந்த னேடும் இயையும். மலை போன்ற பேருருவமுடையவன் ஆதலின், 'மாக்கவந்தன்' எனப்பட்டான். பூவும் காயும் கனியும் உண்ணுதல் குரங்கினத்தின் இயல்பாதலின் அதனை வாலிக்கும் ஏற்றி இகழ்ந்து கூறியவாறு. வலிமை, உணவுப் பொருளால் வளர்வது ஆதலின், எளிய பூவினை உண்ணும் குரங்கிற்கு வன்மை இன்மை புலப்படுத்தி அவ்வாலியைக் கொன்றது போல வலிய ஊனுணவால் வளர்ச்சி பெற்றுள்ள தன்னையுங் கொல்ல இயலாமை யுணர்த்தியவாறு.

சுக்கிரீவனைக் காத்தலும் தன்னைத் தாக்குதலும் போர்முண்டபின் தெளியத் தக்கதாகலின், 'இது காணத்தக்கது' என்றான். இவன் தன்னை இன்னுயிர் காக்க வந்தனையாய் என்னைத் தாக்க வந்தனை என இயையும். பெரிய கவந்தனையும் வாலியையும் கொன்றுளோம் என்ற துணிவினால்தான் தன்னைத் தாக்க இராமன் வந்துளான் என்பது கும்பகருணனது கருத்து. அவ்விருவரையும் கொன்றது போலத் தன்னைக் கொல்ல இயலாது என்ற கருத்தால் 'இது காணத் தக்கது' என்றான்.

இனி, 'இவன் தன்னை இன்னுயிர் காக்க வந்தனை' என்புழிச் சுட்டுச் சுக்கிரீவனைச் சுட்டியதாக்காமல் பிறன்போலத் தன்னையே சுட்டியதாகக் கொண்டு, என்னைத் தாக்க வந்தனை. அதனால் என் னுயிரைக் காக்க வந்தனை என்றும் பொருள் கூறுமாறு அமைந்து உண்மைப் பொருளையும் குறிப்பால் உணர்த்துதல் காணலாம். இராமனது அம்பால் இறத்தலே உயிர் உய்தி பெறுதற்குக் காரண மாதல் நினைக. பரமபதத்து வாயிற் காவலராயிருந்து துருவாசரது சாபம் பெற்றதால் முன் பிறப்பில் இரணியன் இரணியாக்கன் ஆகவும், இப்பிறப்பில் இராவணன் கும்பகருணனாகவும் பிறந்துளார் என்பதும் இப்பிறப்பை நீக்குதலே அவர்கள் இறைவனையடைதற்கு உதவியதாகும் என்பதும் இங்கு நினைதல் தகும். " இறப்பெனும் பயத்தை விட்டாய் இராமனென்பானைப் பற்றிப் பிறப்பெனும் புன்மை தீர்ந்தாய்" (33) என வீடணனிடம் கும்பகருணன் கூறிய தால் இராமன் பிறப்பறுக்கும் பெருமான் என்பதை அவன் உணர்ந்தே இருந்தான் என்பது தெளிவாதல் காண்க. (281)

**7680.** உம்பியை முனிந்திலே னவனுக் கூர்தியாம்
தும்பியை முனிந்திலேன் றோற்ற வாலிதன்
தம்பியை முனிந்திலேன் சமரந் தன்னில்யான்
அம்பியை சிலையினாய் புகழன் றாதலால்.

'உம்பியை முனிந்திலேன், அவனுக்கு ஊர்தியாம்
தும்பியை முனிந்திலேன், தோற்ற வாலிதன்
தம்பியை முனிந்திலேன், சமரம் தன்னில் யான்—
அம்பு இயை சிலையினாய்!—புகழ் அன்று ஆதலால்.

பொ :—அம்பு பூட்டிய வில்லையுடையவனே! ஒத்த வலிமை யுடையோரே செய்தற்குரிய போரில் யான், நின் தம்பி இலக்குவனை வெகுண்டு போர் செய்யவில்லை; அவனுக்கு வாகனமாக வந்த யானை போன்றவனாகிய அனுமனையும் வெகுளவில்லை; உனக்குத்

தோற்ற வாலியின் தம்பியாகிய சுக்கிரீவனையும் கோபிக்கவில்லை; (எனக்கு நிகராகாத அவர்களோடு போர் செய்வது) புகழ்க்குரிய செயலன்று ஆகலான்.

கு :—இலக்குவன் முதலியவரோடு இதுகாறும் கும்பகருணன் செய்த போர் விளையாட்டாகச் செய்ததே யன்றி உண்மையாக வெகுண்டு செய்த போரன்று என்பது இதனால் புலப்படுத்தியவாறு. "மாறன்மையின் மறம் வாடுமென் றிளையாரையு மெறியான்" (சீவக - 2261) என்பது இங்கு நினைதற்குரியது. சமரம் என்ற சொல்லே சமமானவர் செய்தற்குரியது என்ற காரணம் பற்றி வந்தது ஆகலின், அச்சொல்லையே இங்கு எடுத்துக் கூறி, தான் இலக்குவன் முதலியவரை முனியாமைக்குக் காரணம் குறிப்பால் புலப்படுத்தியவாறு. 'எனக்கு அவரெல்லாம் மாறன்மையின் அவர்களை வெகுண்டிலேன்' என்றமையால், எனக்கு நிகரான நின்னோடே போர் செய்வது புகழ் ஆகலின், செய்கின்றேன் என்பதும் எச்சமாய்ப் புலப்படச் செய்தவாறும் ஆயிற்று. தும்பி - யானை. அனுமன் யானை போன்ற பெருந் தோற்றத்தன் ஆகலின் அவனை உவமையாகு பெயரால் 'தும்பி' என்றான். இதனால், இலக்குவனும் அனுமனும், சுக்கிரீவனும் கும்பகருணனுக்கு வலிமையால் ஒப்புமை யுடையவரல்லர் என்பது புலப்படுத்தியவாறு. (282)

**7681.** தேடினென் றிரிந்தனெ னின்னைத் திக்கிறந்
தோடிய துன்படை யும்பி யோய்ந்தொரு
பாடுற நடந்தன னனுமன் பாறினன்
ஈடுறு மிவனைக்கொண் டெளிதி னெய்தினேன்.

'தேடினென் திரிந்தனென் நின்னை; திக்கு இறந்து
ஓடியது உன்படை; உம்பி ஓய்ந்து, ஒரு
பாடு உற நடந்தனன்; அனுமன் பாறினன்;
ஈடுறும் இவனைக் கொண்டு, எளிதின் எய்தினேன்.

பொ :—(எனக்கு நிகரான நின்னைத் தேடித் திரிந்தேன்; (நீ கிடைக்காமையால் விளையாட்டாகச் செய்த போரில்) உன் வானரப் படை திசைகளைக் கடந்து ஓடியது; உன் தம்பி வலிசாய்ந்து ஒரு பக்கமாக ஒதுங்கி நடந்தான்; அனுமன் வலிசிதைந்து போனான்; என்னோடு (ஈடுகொடுத்துப்) போர் செய்ய வந்த இவனைத் தூக்கிக் கொண்டு (தடுப்போரின்மையால்) எளிதாக இங்கு வந்தேன்.

கு :—கும்பகருணன் சுக்கிரீவனை எடுத்துக்கொண்டு இலங்கை புக முயன்றதும் தனக்கு நிகரான இராமனைக் கண்டு போர் செய்ய வேண்டும் என்ற எண்ணத்தால் தான் என்பது இதனல் புலப்படுத்தியவாறு. ஈடு உறுதல் என்பது போர் செய்ய வருதல் என்னும் பொருளது. ஈடு, சமம், போர் என்பன ஒரு பொருளனவாதல் ஓர்க. ஓய்தல் - வலிமை குறைதல். பாடு - பக்கம். பாறுதல் - ஓடுதல். முன்கூறிய வஞ்சினத்திற்கு மாருகப் போர் செய்யலாகாது என்று ஒதுங்கிச் சென்றதையே 'பாறினன்' என இழித்துக் கூறினன். (283)

**7682.** காக்கிய வந்தனை யென்னிற் கண்டவென்
பாக்கியந் தந்தது நின்னைப் பன்முறை
ஆக்கிய செருவெலா மாக்கி யெம்முனைப்
போக்குவென் மனத்துறு காதற் புன்கணோய்.

'காக்கிய வந்தனை என்னின், கண்ட என்
பாக்கியம் தந்தது, நின்னை ; பல்முறை
ஆக்கிய செரு எலாம் ஆக்கி, எம்முனைப்
போக்குவென், மனத்துறு காதல் புன்கண் நோய்.

பொ :—(இச் சுக்கிரீவனைக்) காப்பாற்றுதற்கு நீ வந்தாய் என்ருல், நின்னைக் காண எனது பாக்கியமே நின்னை இங்குக் கொணர்ந்து தந்தது என்று கருத வேண்டும்; இவ்வுலகில் பல முறை செய்து பயின்ற போர்த் துறைகளையெல்லாம் நின்னோடு செய்து, எம் அண்ணனுடைய மனத்தில் பொருந்திய காதலாகிய துன்ப நோயைப் போக்குவேன்.

கு :—காக்கிய – செய்யிய என்னும் வாய்பாட்டு வினையெச்சம். சுக்கிரீவனைக் காக்க இராமன் தான் காணுமாறு வந்தது தன் நல்வினையே என்று கும்பகருணன் பாராட்டுகின்ருன். இராமனைக் கண்டு போர் செய்யத் தேடித் திரிந்தவனுதலின் அவனைக் காணப்பெற்ற அருமை நினைந்து இங்ஙனம் கூறலானுன். அன்பர்க்கும் அல்லார்க்கும் இவ்வகையில் இராமன் ஒரு தன்மையனுகவே இருக்கின்ருன் என்பது இங்கு உணரத்தகும். இராமனைக் காணுதற்குப் பாக்கியம் இருக்க வேண்டும் என்று பகைவனுகிய கும்பகருணனே கருதுதல் நோக்கத் தகும். காண என் பாக்கியம் தந்தது. என எதிர்காலத்தால் கூறவேண்டிய சொல்லைக் 'கண்ட என் பாக்கியம்' என வியப்பினுல் மறந்து இறந்த காலத்தாற் கூறினுன். போர்வீரர்க்குப் போர்த்துறைகளைப் பயிலுதலும் பயின்ற போர்த் துறைகளை ஒத்த

வீரரோடு செய்ய விரும்புதலும் இயல்பு ஆதலின் 'பன்முறை ஆக்கிய செருவெலாம் ஆக்கி' என்ருன். எம்முனே மனத்துறு காதற் புன்கணேய் போக்குவென்' என இயையும். 'எம்முனே போக்குவென்' என்ற அமங்கலப் பொருளும் இயல்பாகத் தோன்றுமாறு இத்தொடர் அமைந்திருத்தல் காண்க. 'நின்னைக் கொன்று இராவணனைச் சீதை அடையுமாறு செய்வேன்' என்பதே கும்பகருணன் கருத்து. புன்கண் நோய் - துன்ப நோய் காதலாகிய துன்ப நோய் என்க. (284)

**7683.** ஏதிவெந் திறலினே யிமைப்பி லோரெதிர்
பேதுறு குரங்கையான் பிணித்த கைப்பிணி
கோதைவெஞ் சிலையினுற் கோடி வீடெனிற்
சீதையும் பெயர்ந்தனள் சிறைநின் ருமென்ருள்.

'ஏதி வெந்திறலினேய்! இமைப்பு இலோர் எதிர்,
பேது உறு குரங்கை யான் பிணித்த கைப் பிணி,
கோதை வெஞ்சிலையினல், கோடி வீடு எனின்,
சீதையும் பெயர்ந்தனள் சிறைநின்ரும்' என்ருன்.

பொ :—படைக்கலம் கொண்டு போர் புரியும் கொடிய திறமையுடையவனே! இமையா நாட்டமுடைய தேவர்கள் எதிரில் துன்புறுகின்ற இச்சுக்கிரீவனுகிய குரங்கை யான் பிடித்த கைப்பிடியில் நின்றும் நாணினையுடைய கொடிய வில்லினுல் - விடிவித்துக் கொள்வாய் என்ருல், சீதையும் சிறையினின்று மீண்டனள் ஆவள்' என்று கூறினுன்.

கு :—ஏதி - வாள். அது இலக்கணையால் படைக்கலம் என்ற பொதுப் பொருளைத் தந்தது. இராமன் கையிலாகாமையால் படைக்கலங்களை நம்பியுள்ளவன் என்று இழிவு கற்பிக்க 'ஏதிவெந்திறலினேய்' என்று விளித்தான். திறலினேய் என்பதும் குறிப்புச் சொல். 'குரங்கை யான் பிணித்த கைப்பிணியினின்றும் இமைப்பிலோர் எதிர் வீடு கோடி எனில் சீதையும் சிறையினின்றும் பெயர்ந்தனள் ஆம்' என இயையும். பேதுறுதல் - துன்புறுதல். சுக்கிரீவன் என்னுது குரங்கு என்றது, இழித்துக் கூறும் குறிப்பினுலாகும். தன் கையில் உள்ள சுக்கிரீவனையும் விடுதலை செய்ய முடியாது; சீதையையும் சிறையினின்று விடுதலை செய்ய முடியாது என்னும் கருத்தால் கும்பகருணன் இங்ஙனம் வஞ்சினம் கூறினுன். கோதை - வில்நாண். என் கையில் பிணித்த பிணியை நின் கையால் விடுவிக்க முடியாதது மட்டுமன்றி வில்லாலும் விடுவிக்க முடியாது என்பான், 'கைப்பிணி

சிலையினற் கோடி வீடெனில்' என்ருன். வீடு - விடுதலை. கோடி - கொள்ளுதி. சீதையும் என்புழி எதிரது தழுவிய உம்மையால் சுக்கிரீவன் பெயர்வதேயன்றி என்னும் பொருள் தோன்றுதல் காண்க. பெயர்ந்தனள் என எதிர்காலம் இறந்த காலமாகக் கூறியது தெளிவு பற்றி; தன் கையிலுள்ள சுக்கிரீவனை வீடு கொள்ளும் ஆற்றல் இராமனுக்கு இருந்தால், இராவணனை வென்று சீதையைச் சிறை வீடு செய்யவும் வல்லவனுவான் என்பது பெறப்படும் என்றவாறு. 285)

## இராமன் வஞ்சினம்

7684. என்றலு முறுவலித் திராமன் யானுடை
யின்றுணை யொருவனை யெடுத்த தோள்எனும்
குன்றினை யரிந்தியான் குறைக்கி லேனெனின்
பின்றினெ னுனக்குவிற் பிடிக்கி லேனென்ருன்.

என்றலும், முறுவலித்து, இராமன் 'யானுடை
இன்துணை ஒருவனை எடுத்த தோள் எனும்
குன்றினை அரிந்து யான் குறைக்கிலேன் எனின்,
பின்றினென் உனக்கு; வில்பிடிக்கிலேன்' என்ருன்.

பொ :—என்று கும்பகருணன் கூறுதலும், இராமன் புன்முறுவல் செய்து 'என்னுடைய இனிய துணையாக உள்ள சுக்கிரீவனைத் தூக்கிய நின் தோள் என்கின்ற மலையை யான் அரிந்து குறைக்க வில்லையாயின், உனக்குத் தோற்றவனுவேன்; இவ்வில்லையும் பிறகு பிடிக்கமாட்டேன்' என்று கூறினுன்.

கு :—யானுடை என்புழி எழுவாய் திரியாது நின்றது; 'யானுடைக் கற்பினை எப்பரிசிழைத்துக் காட்டுகேன்' (சுந்தர - 508) என முன்னும் வந்துளது நினைக. இன்துணை ஒருவன் என்றது சுக்கிரீவனை. தோளெனும் குன்று என்றது உருவகம். பின்றுதலாவது, பின்னிடுதல் - தோற்றல். சுக்கிரீவனை எடுத்த தோள்களைக் குறைக்காவிட்டால் அக்கும்பகருணனுக்குத் தோற்றதாகவே கருத வேண்டும் என்பது இராமன் வஞ்சினம். அதற்கு மேலும் வீரத்திற் குரிய வில்லையும் கையால் பிடிக்கமாட்டேன் என்றும் கூறினுன். தான் மேற்கொண்ட வஞ்சினத்தை முடிக்காதபோது வீரற்குரிய வில்லும் மிகை என்பது அவன் கருத்து. இதனுல் கும்பகருணனுடைய தோள்களைக் குறைத்தல் உறுதி என்பதைப் புலப்படுத்தியவாறு. குறைத்தலாவது சிறிதொழியச் சிதைத்தல். (286)

## இராமன் கும்பகருணன்மேல் அம்பு எய்தல்

**7685.** மீட்டவன் கரங்களால் விலங்க லாரையை
மூட்டற நீக்குவான் முயலும் வேலையில்
வாட்டமில் வைத்தலை வயங்கு வாளிகள்
சேட்டக னெற்றியி னிரண்டு சேர்த்தினன்.

மீட்டு அவன் கரங்களால் விலங்கல் ஆரையை
மூட்டு அற நீக்குவான் முயலும் வேலையில்
வாட்டம் இல் வைத்தலை வயங்கு வாளிகள்
சேட்டு அகல் நெற்றியின் இரண்டு சேர்த்தினன்.

பொ :—மீண்டும் அக்கும்பகருணன் தன் கைகளால் தன்னைத் தடுத்தலைச் செய்த அம்பு மதிலைக் கட்டுக்கோப்புக் கலையுமாறு நீக்குதற்கு முயலும் வேளையில், (இராமன்) மெலிவறியாத, கூரிய முனையோடு விளங்கும் அம்புகள் இரண்டினை அக்கும்பகருணனுடைய உயர்ந்து அகன்ற நெற்றியில் எய்தான்.

கு :—இராமன் அம்புகளால் அமைத்த மதிலைக் கும்பகருணன் தன் வலிமைச் செருக்கால் கைகளால் பெயர்க்க முயன்றுகை, அப்போது இராமன் இரண்டு கூரிய அம்புகளை அவன் நெற்றியில் நுழைய எய்தான் என்றவாறு. விலங்கல் - தடுத்தல்; குறுக்கிடுதல். ஆரை - மதில். மூட்டு - இணைப்பு; கட்டுக்கோப்பு. வை - கூர்மை. சேடு - பெருமை. (287)

## நெற்றியில் அம்புபட்ட கும்பகருணனது தோற்றம்

**7686.** சுற்றிய குருதியின் செக்கர் சூழ்ந்தெழ
நெற்றியி னெடுங்கணை யொளிர நின்றவன்
முற்றிய கதிரவன் முளைக்கு முந்துவந்
துற்றெழு மருணன துதயம் போன்றனன்.

சுற்றிய குருதியின் செக்கர் சூழ்ந்து எழ,
நெற்றியின் நெடுங்கணை ஒளிர நின்றவன்,
முற்றிய கதிரவன் முளைக்கும் முந்து வந்து
உற்று எழும் அருணனது உதயம் போன்றனன்.

பொ :—அம்பைச் சுற்றிலும் பீறிட்டு எழுகின்ற இரத்தமாகிய செவ்வானம் சுற்றி எழா நிற்க. நெற்றியில் நீண்ட அம்பு ஒளிவீச நின்ற கும்பகருணன்,-நிரம்பிய கதிர்களையுடைய சூரியன் முளைப்ப

தற்கு முன்பு வந்து பொருந்தி எழுகின்ற அருணனுக்கு இடமான உதயமலையை ஒத்துத் தோன்றினன்.

கு :—இராமனது அம்பு பட்டதால் நெற்றியில் பீறிட்டெழுகின்ற இரத்தத்தின் தோற்றம் காலையில் கீழ்த்திசையில் தோன்றும் செக்கர் வானத்தைப் போன்றிருந்தது ; நெற்றியில் தைத்துள்ள ஒளிமிக்க அம்பு அருணனது எழுச்சி போன்றிருந்தது ; அம்பை நெற்றியில் தாங்கியுள்ள கும்பகருணன், அருணனுக்கு இடமான உதயமலையைப் போன்றனன் என உவமையை விரித்துச் கொள்க. குருதிச் செக்கர் என்பது உருவகம்; இன் தவிர்வழிச்சாரியை. அருணனது உதயம் என்பது 'யானையது காடு' என்றாற்போன்று வாழ்ச்சிக்கிழமைக்கண் வந்த ஆறும் வேற்றுமை. அருணனுக்கு இடமான உதயமலை என்பது பொருள். கதிரவன் தோன்றுதற்கு முன்பு அவன் தேர்ப்பாகனாகிய அருணன் உதிப்பான் என்பது மரபு. "அருண னிந்திரன் றிசை யணுகினன் இருள்போய் அகன்றது உதயம் நின் மலர்த்திரு முகத்தின் கருணையின் சூரியன் எழ எழ" (திருவாசகம் - திருப்பள்ளி - 2) என்புழிச் சூரியன் எழுச்சிக்கு வேறாக அருணனது உதயம் கூறியிருப்பது காணலாம். இராமனது அம்பு ஒளிமிக்கது ஆகலின், அது அருணனை ஒத்ததாயிற்று. முற்றுதல் - நிரம்புதல். (288)

## சுக்கிரீவன் மயக்கம் தெளிந்தெழுதல்

**7687.** குன்றின்வீ ழருவியிற் குதித்துக் கோத்திழி
புன்றலைக் குருதிநீர் முகத்தைப் போர்த்தலும்
இன்றுயி லெழுந்தென வுணர்ச்சி யெய்தினன்
வன்றிற றோற்றிலான் மயக்க மெய்தினன்.

குன்றின்வீழ் அருவியின் குதித்துக் கோத்து இழி
புன்றலைக் குருதிநீர் முகத்தைப் போர்த்தலும்,
இன் துயில் உணர்ந்தென, உணர்ச்சி எய்தினன் ;
வன் திறல் தோற்றிலான் மயக்கம் எய்தினன்.

பொ :—மலையினின்றும் வீழ்கின்ற அருவிபோலக் கும்பகருணனது பொலிவற்ற தலையில் நின்றும் குதித்துக் கோத்துக் கொண்டு இறங்குகின்ற இரத்த நீர், (அவன் கையில் மயங்கிக் கிடக்கும் சுக்கிரீவனது) முகத்தைப் போர்த்துக் சொள்ளுதலும், அவன் இனிய உறக்கத்தினின்றும் எழுந்தாற்போல உணர்வு வரப் பெற்றான் ; இதுகாறும் வலிய திறமையால் தோல்வி காணாதவனாகிய கும்பகருணன் மயக்கம் அடைந்தான்.

45

கு :—கும்பகருணனது தலையினின்றும் இழிகின்ற இரத்த நீர்க்குக் குன்றின் வீழருவி உவமை, புன்றலையினின்றும் குதித்துக் கோத்து இழி குருதிநீர் என இயையும். கோத்தல் என்றது தொடர்ச்சி கொள்ளுதலை. தோற்றிலான் என்றது கும்பகருணனை. மயக்கம் எய்தினோர்க்கு முகத்தில் நீர்பட்டவுடன் தெளிவுண்டாதல் இயல்பு ஆதலின், முன் மயக்கமுற்றுக் கும்பகருணன் கையில் கிடந்த சுக்கிரீவன், அவ்வரக்கன் தலையிலிருந்து இழிந்த குருதிநீர்பட்டவுடன் துயிலினின்று எழுவதுபோல உணர்வபெற்று எழுந்தான் என்க. இராமன் அம்பு, நண்ணினவனுக்குத் தெளிவையும், நண்ணுதவனுக்கு மயக்கத்தையும் ஒரே கணத்தில் தந்தமை இதனால் புலப்படுத்தியவாறு. (289)

## தெளிந்த சுக்கிரீவன் இராமனைக் கண்டு தொழுது வாழ்த்துதல்

**7688.** நெற்றியி னின்றொளி நெடிதி மைப்பன
கொற்றவன் சரமெனக் குறிப்பி னுன்னினான்
சுற்றுற நோக்கினன் றொழுது வாழ்த்தினான்
முற்றிய பொருட்கெலா முடிவு ளான்றனை.

நெற்றியில் நின்று ஒளி நெடிது இமைப்பன
கொற்றவன் சரம் எனக் குறிப்பின் உன்னினான்;
சுற்றுற நோக்கினன், தொழுது வாழ்த்தினான்
முற்றிய பொருட்கு எலாம் முடிவுளான் தனை.

பொ :—'கும்பகருணனது நெற்றியில் நின்று நெடிது ஒளிவீசிக் கொண்டிருப்பவை இராமனது அம்பு' எனக் குறிப்பினால் தெளிந்தவனாய் (அவன் யாண்டுளன் எனச்) சுற்றிலும் நோக்குகின்றவன், உலகத்து நிரம்பியுள்ள பொருள்களுக்கெல்லாம் முடிவில் உள்ள பரம்பொருளின் அமிசமான இராமனை நினைந்து கைதொழுது வாழ்த்தினான்.

கு :—இமைத்தல் - ஒளிவீசுதல். கொற்றவன் என்றது இங்கு இராமனை. நோக்கினவன் முடிவுளான்றனை நினைந்து தொழுது வாழ்த்தினான் என ஒரு சொல் வருவித்து முடிக்க. உன்னினனாய் நோக்கினவன் வாழ்த்தினான் என முற்றெச்சமாகவும் வினைப்பெயராகவும் கொண்டு முடிக்க. கும்பகருணனது கையில் கிடந்தவன் ஆதலின், கண் விழித்துப் பார்த்ததும் கும்பகருணனது முகமே தோன்றக் கண்டு நெற்றியினின்றொளி நெடிதிமைப்பன கொற்றவன் சரம் என உய்த்துணர்ந்து, பின் அவன் யாண்டுளன் எனச் சுற்றுற நோக்குவானாயினன் என்க. (290)

## சுக்கிரீவன் கும்பகருணனது மூக்கையும் காதையும் கவர்ந்து செல்லுதல்

**7689.** கண்டன னாயகன்
றன்னைக் கண்ணுருத்
தண்டலின் மானமு
நாணுந் தாங்கினான்
விண்டவ னாசியுஞ்
செவியும் வேரொடும்
கொண்டன னெழுந்துபோய்த்
தமரைக் கூடினான்.

கண்டனன் நாயகன்தன்னை, கண்ணுரு,
தண்டல் இல் மானமும் நாணும் தாங்கினான்,
விண்டவன் நாசியும் செவியும் வேரொடும்
கொண்டனன், எழுந்துபோய்த் தமரைக் கூடினான்.

பொ :—பின்பு தன் தலைவனாகிய இராமனைக் கண்டான்; கண்டு, நீங்காத மானமும் நாணமும் கொண்டவனாய்ப் பகைவனாகிய கும்பகருணனது மூக்கையும் காதையும் அடியோடு கவர்ந்துகொண்டு எழுந்து சென்று தன் உறவினரோடு சேர்ந்தான்.

கு :—பகைவனுடைய கையில் அகப்பட்ட நிலையில் தன் தலைவனைக் காண நேர்ந்ததே என்பதால் சுக்கிரீவன் அவமானமும், நாணமும் அடைவானானான். விண்டவன் - பகைவன். தன்னைக் கவர்ந்து சென்ற கும்பகருணனுக்குத் தன்னாலியன்ற தீங்கு செய்யாமற் போகலாகாது என்ற எண்ணத்தால் அவன் மூக்கையும் காதையும் கவர்ந்து போனான் என்க. (291)

## கும்பகருணன் மூக்கையும் காதையும் இழந்தமை கண்டு ஆரவாரித்தல்

**7690.** வானர மார்த்தன மழையு மார்த்தன
தானமு மார்த்தன தவமு மார்த்தன
மீனரல் வேலையும் வெற்பு மார்த்தன
வானவ ரோடுநின் றறமு மார்த்ததே.

வானரம் ஆர்த்தன ; மழையும் ஆர்த்தன ;
தானமும் ஆர்த்தன ; தவமும் ஆர்த்தன ;

மீன் நரல் வேலையும் வெற்பும் ஆர்த்தன;
வானவரோடு நின்று அறமும் ஆர்த்ததே.

பொ:—தம் தலைவனுகிய சுக்கிரீவனுல் கும்பகருணன் உறுப்பு இழந்தமை கண்டு வானரங்கள் ஆரவாரித்தன; மேகங்களும் ஆரவாரித்தன; தானமும் தவமும் ஆரவாரித்தன; மீன்களையுடைய ஒலிக்கின்ற கடலும் மலையும் ஆரவாரித்தன; தேவர்களோடு நின்று தருமமும் ஆரவாரித்தது.

கு:—தம் தலைவனை இழந்து வருந்திய வானரங்கள் அவன் வருதலைக் கண்டதோடு கும்பகருணனது மூக்கையும் காதையும் கொண்டு வந்ததைக் கண்ட மகிழ்ச்சியால் ஆரவாரித்தன. உலகில் நிகழும் அறம் பாவங்களைக் கண்டு அதற்கேற்பப் பெய்யும் இயல் பினது மேகம் ஆதலின், அறச் சார்புடைய சுக்கிரீவன் உய்ந்ததும், பாவியாகிய கும்பகருணன் மூக்கிழந்ததும் கண்டு அவை ஆரவாரிக்க லாயின; கும்பகருணனுல் இடுக்கண்பட்டிருந்த தானங்களும் தவங் களும் அவனிடுக்கண்பட்டமை கண்டு மகிழ்ச்சியால் ஆரவாரிப்பன ஆயின. தானம் தவம் என்பன அவற்றைச் செய்வோரை யுணர்த்தி யதாகக் கொள்க. நரலுதல் - ஒலித்தல். கடலும் மலையும் அக் கும்ப கருணனுல் கலக்குண்டும் மிதியுண்டும் வருந்தினவையாதலின் அவன் அழிவு கண்டு ஆரவாரிப்பன ஆயின. தேவர்களும் அறமும் ஆரவாரித்ததும் தம் பகைவனது அழிவைக் கண்டேயாம். வானவ ரோடு என ஒடுக்கொடுத்துப் பிரித்தமையால் 'ஆர்த்ததே' என ஒருமையாற் கூறினர்; 'சிறப்பொடு பூசனை செல்லாது' (குறள்-18) என்புழிப்போல. (292)

## சுக்கிரீவன் விடுதலை பெற்றமை கண்ட இராமன் மகிழ்தல்

**7691.** காந்திக லரக்கன்வெங் கரத்து ணீங்கிய
ஏந்தலை யகமகிழ்ந் தெய்த நோக்கிய
வேந்தனுஞ் சானகி யிலங்கை வெஞ்சிறை
போந்தன ளாமெனப் பொரும னீங்கினுன்.

காந்து இகல் அரக்கன் வெங் கரத்துள் நீங்கிய
ஏந்தலை அகம் மகிழ்ந்து, எய்த நோக்கிய
வேந்தனும், சானகி இலங்கை வெஞ்சிறைப்
போந்தனளாம் எனப் பொருமல் நீங்கினுன்.

பொ:—கோபிக்கின்ற வலிய கும்பகருணனது கொடுமையான கையிலிருந்து நீங்கிய சுக்கிரீவனை மன மகிழ்ந்து முற்றும் நோக்கிய

இராமனும் சீதை இலங்கையிலுள்ள கொடிய சிறையில் நின்றும் மீண்டாளாம் என்று துன்பம் நீங்கினன்.

கு :—காந்துதல் - கோபித்தல். இகல் - வலிமை. ஏந்தல் - பெருமையுடையவன்; இங்குச் சுக்கிரீவனை உணர்த்தியது. அவன் உடம்பில் ஏதேனும் ஊறுபாடு உளதாயதோ என்னும் கருத்தால் எய்த நோக்கினன் என்க. எய்த - முற்ற. முன்பு கும்பகருணன், "பேதுறு குரங்கையான் பிணித்த கைப்பிணி கோதை வெஞ்சிலையினுற் கோடி வீடெனிற் சீதையும் பெயர்ந்தனள் சிறைநின்ரு மென்ருன்" (285) என்று கூறியதற்கேற்ப இங்கு இராமன், "சானகி இலங்கை வெஞ்சிறைப் போந்தனளாம் எனப் பொருமல் நீங்கினன்" எனக் கூறியது பொருத்தமாதல் காணலாம். சானகி சிறையினின்றும் மீண்டமை கண்டு மகிழ்வது போலச் சுக்கிரீவன் கும்பகருணனது கையில் நின்றும் மீண்டது கண்டு இராமன் மகிழ்ந்தான் என்றதால், அவன் தன்னைச் சார்ந்தார்பால் கொண்டுள்ள அன்பு மிகுதி புலப் படல் காணலாம். (293)

## கவிக் கூற்று

**7692.** மத்தகம் பிளந்துமா டுருவ வார்சிலை
வித்தகன் சரந்தொட மெலிவு தோன்றிய
சித்திரம் பெறுதலிற் செவியு மூக்குங்கொண்
டத்திசைப் போந்தன னல்ல தொண்ணுமோ.

மத்தகம் பிளந்து மாடு உருவ, வார்சிலை
வித்தகன் சரம்தொட, மெலிவு தோன்றிய
சித்திரம் பெறுதலின், செவியும் மூக்கும் கொண்டு
அத்திசைப் போந்தனன் அல்லது ஒண்ணுமோ?

பொ :—நெற்றியைப் பிளந்துகொண்டு மறு பக்கத்தில் ஊடுருவுமாறு, நீண்ட விற்போரில் வல்லவனாகிய இராமன் அம்பு எய்தமையால் மெலிவு தோன்றச் சித்திரம் போன்ற அசைவற்ற நிலையைக் கும்பகருணன் பெற்றதால் சுக்கிரீவன் அவனுடைய காதையும் மூக்கையும் கவர்ந்துகொண்டு அந்தப் பக்கம் பெயர்ந்து சென்ருன்; இல்லையேல் இயலுமோ? இயலாது.

கு :—மத்தகம் - நெற்றி. மாடு - பக்கம். சிலைவித்தகன் என்றது விற்போரில் சிறந்த இராமனை. சித்திரம் என்பது இங்கு சித்திரம் போன்ற அசைவற்ற நிலை என்ற பொருளில் வந்துளது. கும்பகருணன் இராமனது அம்பினுல் மெலிவடையாமலிருந்தால் சுக்கி

ரீவன் அக் கும்பகருணனுடைய மூக்கையும் காதையும் கவர்ந்துவர இயலாது எனக் கும்பகருணனின் வீரத்தையும் வலிமையையும் புலப் படுத்தியவாறு. அத்திசை என்றது, வானர சேனையுள்ள இடத்தை. தோன்றிய, செய்யிய வென்னும் வினையெச்சம். (294)

## கும்பகருணன் உணர்வு பெறுதல்

**7693.** அக்கணத் தறிவுவந் தணுக வங்கைநின்
றுக்கனன் கவியர சென்னு முண்மையும்
மிக்குயர் நாசியுஞ் செவியும் வேறிடம்
புக்கது முணர்ந்தன னுதிரப் போர்வையான்.

அக்கணத்து அறிவு வந்து அணுக, அங்கை நின்று
உக்கனன் கவிஅரசு என்னும் உண்மையும்,
மிக்கு உயர் நாசியும் செவியும் வேறு இடம்
புக்கதும் உணர்ந்தனன்—உதிரப் போர்வையான்.

பொ :—அந்தக் கணத்தில் (மயக்கம் தெளிந்து) அறிவு வந்து தோன்ற, இரத்தத்தால் போர்க்கப்பட்டவனாகிய கும்பகருணன்—தன் அகங்கையில் நின்றும் வானரத் தலைவனாகிய சுக்கிரீவன் நழுவிச் சென்றான் என்னும் உண்மையையும், தன் முகத்தில் மிக்கு உயர்ந்திருந்த மூக்கும், காதும் வேறு இடத்திற்குப் போய்விட்டதையும் உணர்ந்தான்.

கு :—இராமனது அம்பினால் குருதி சோர்ந்து மயங்கிக் கிடந்த கும்பகருணன், தன் மூக்கையும், காதையும் சுக்கிரீவன் கவர்ந்ததாலாய நோயினால் அக்கணத்து அறிவு பெற்று, சுக்கிரீவன் தன் கைப் பிடியினின்றும் போனதையும் தன் மூக்கும் காதும் கவரப்பட்டதையும் உணர்ந்தான் என்றவாறு. கும்பகருணனுக்கு மூக்கு மிகவும் உயர்ந்திருந்தது ஆகலின், 'மிக்குயர் நாசி' என்றார். "மேக்குயரு நெடுமூக்கு மடந்தையர்க்கு மிகையன்றோ" (ஆரணிய-சூர்ப்பணகை-130) எனச் சூர்ப்பணகை கூறியதும் இங்கு ஒப்புநோக்கத்தகும். வேறிடம் புக்கதும் என்பது, கவரப்பட்டதும் என்னும் பொருளில் நகைச்சுவை தோன்ற கூறியதாகும். உதிரப் போர்வையான் என்றது, சிவந்த போர்வை போர்த்ததுபோல இரத்தம் சொரிய நின்றான் என்னும் பொருளது. (295)

## குருதிசோர நின்ற கும்பகருணன் தோற்றம்

**7694.** தாதுரா கத்தடங் குன்றந் தாரைசால்
கூதிர்கா னெடுமழை சொரியக் கோத்திழி
ஊதையோ டருவிக ளுமிழ்வ தொத்தனன்
மீதுறு குருதியா றொழுகு மேனியான்.

தாது ராகத் தடங்குன்றம், தாரை சால்
கூதிர் கால் நெடுமழை சொரிய, கோத்து இழி
ஊதையோடு அருவிகள் உமிழ்வது ஒத்தனன்—
மீது உறு குருதி யாறு ஒழுகும் மேனியான்.

பொ:—தலையில் பொருந்திய ஆறுபோன்று இரத்தம் ஒழுகும் மேனியனாகிய கும்பகருணன்,—காவிக் கல்லினால் ஆகிய சிவந்த பெரிய மலை, தாரைகள் மிக்க, குளிரை வெளிப்படுத்துகின்ற, பெரிய மழைபொழிய வாடைக் காற்றோடு சேர்ந்து இறங்குகின்ற அருவிகளை உமிழ்வதுபோலத் தோன்றினான்.

கு:—தாது - காவிக்கல். ராகம் - சிவப்பு. மேனியான்,—குன்றம், ஊதையோடு அருவிகள் உமிழ்வது ஒத்தனன் என இயையும். குருதி தோய்ந்த மேனியையுடைய கும்பகருணன், காவிக் கல்லாலாய பெரிய மலையை ஒத்தான்; அவன் நெற்றியில் பெருகும் இரத்தம் வாடையோடு சேர்ந்து வீழும் அருவியை ஒத்தது என உவமையை விரித்துக் கொள்க. உவமையில் ஊதை கூறியதற்கேற்ப உவமேயத்தில் கும்பகருணன் விடும் பெருமூச்சினைக் கொள்ளலாம். தாரை சால் நெடுமழை, கூதிர்கால் நெடுமழை என்க. கூதிர் - குளிர். காலுதல் - வெளிப்படுத்தல். இனிக் கூதிர் காலத்துக் காற்றோடு கூடிய பெருமழை எனவும் பொருள் கொள்ளலாம். குன்றம் ஊதையையும் அருவிகளையும் உமிழ்வதுபோலக் கும்பகருணன் பெருமூச்சுடன் குருதியாறு ஒழுக நின்றான் என்றவாறு. இராமன் அம்பு துளைத்த கும்பகருணன் நெற்றியிலிருந்தும் மூக்கும் காதும் கவர்ந்த இடங்களிலிருந்தும் குருதி வெளிப்படுகின்றமையால் அருவிகள் உமிழ்வதொத்தனன் என்றார். (296)

## கும்பகருணன் தன் தன்மை நினைந்து இரத்தக் கண்ணீர் சொரிதல்

**7695.** எண்ணுடைத் தன்மைய னினைய வெண்ணிலாப்
பெண்ணுடைத் தன்மைய னுய பீடையால்

புண்ணுடைச் செவியொடு மூக்கும் போன்றவால்
கண்ணுடைக் குழிகளுங் குருதி கால்வன.

எண் உடைத் தன்மையன், இனைய, எண் இலாப்
பெண்ணுடைத் தன்மையன் ஆய பீடையால்,
புண் உடைச் செவியொடு மூக்கும் போன்றவால்—
கண்ணுடைக் குழிகளும் குருதி கால்வன.

பொ :—அறிவுடைய ஆண்மை மிக்கவனாகிய கும்பகருணன், இத் தகைய அறிவிலாத (சூர்ப்பணகை யென்னும்) பெண்ணின் தன் மையன் ஆகிய துன்பத்தால், அவன் கண்களின் குழிகளும் இரத்தம் கக்குவனவாய், (சுக்கிரீவனால் கவரப்பட்டு) புண்ணையுடைய செவிக் குழியையும் மூக்குக் குழியையும் போன்றன.

கு :—எண் - அறிவு. "தொக்கிருந் தெண்ணின னெண்ணப் படும்" (நான்மணிக்கடிகை-77) என்புழியும் இச் சொல் இப் பொருளில் வழங்கப்பட்டவாறு அறிக. எண்ணிலாப் பெண் என்றது, சூர்ப்பணகையை. அவள், சீதையைத் தூக்கிச் செல்ல முயன்று மூக்கு முதலிய உறுப்புக்களை இழந்தது போலவே, அவள் அண்ண னாகிய கும்பகருணனும் சுக்கிரீவனைத் தூக்கிச் செல்ல முயன்று மூக் கையும் காதையும் இழந்தமை நினைந்து மிகவும் வருந்தினமையால் அவன் கண்கள் இரத்தக் கண்ணீரைச் சொரிந்தன என்றவாறு. பீடை - துன்பம். "தன் பெருஞ் செவி மூக்கொடும் அற்ற எங்கை போல் என் முகம் காட்டி நின்று ஆற்றலென் உயிர் அம்மா" (325) எனக் கும்பகருணனே பின்பு கூறியிருத்தல் காணலாம். சுக்கிரீவனால் கவரப்பட்டுப் புண்ணான செவியின் துளையும் மூக்கின் துளையும் இரத்தம் சொரிவதுபோல, அவனால் கவரப்படாத கண்ணின் குழி களும் இரத்தம் சொரிகின்றமை இதனால் புலப்படுத்தியவாறு. 'புண்ணுடைச் செவியொடு மூக்கு' என்றது, அவை யிருந்த இட மாகிய குழிகளை. நாசியும் செவியும் வேறிடம் புக்கமையால் அவை அவன் முகத்தில் இன்மை தெளிவு. துன்ப மிகுதியால் அவன் கண்கள் குழிவிழுந்தமை புலப்பட 'கண்ணுடைக் குழிகளும்' என்றார். எண்ணிலாமையால் தன் தங்கையாகிய பெண்ணடைந்த பீடையை, எண்ணுடைய ஆடவனாகிய கும்பகருணனும் எய்தியது பொருந்தாது; என்ற கருத்தை முன் இரண்டடிகளால் புலப்படச் செய்து, அப் பொருந்தாமை நினைந்து எழுந்த துன்பத்தால் அவன் இரத்தக் கண்ணீர் சொரிந்ததைப் பின்னிரண்டடிகளால் விளக்கியவாறு. 'எண்ணிலாப் பெண்' என்றது, நுண்ணறிவுடையோர் நூலொடு பழகினும் பெண்ணறிவென்பது பெரும் பேதைமைத்தே என்பதை நினைப்பிக்கின்றது காணலாம். (297)

## கும்பகருணனது வெகுளியின் விளைவு

**7696.** ஏசியுற் றெழும்விசும் பினரைப் பார்க்குந்தன்
நாசியைப் பார்க்குமுன் னடந்த நாளுடை
வாசியைப் பார்க்குமிம் மண்ணைப் பார்க்குமால்
சீசியுற் றதுவெனத் தீயு நெஞ்சினன்.

ஏசியுற்று எழும், விசும்பினரைப் பார்க்கும் : தன்
நாசியைப் பார்க்கும் ; முன் நடந்த நாளுடை
வாசியைப் பார்க்கும் ; இம்மண்ணைப் பார்க்குமால்—
'சீசி, உற்றது !' எனத் தீயும் நெஞ்சினன்.

பொ :—(நமக்கு) நேர்ந்தது *சீசீ* என்று வெறுத்துத் தீகின்ற நெஞ்சையுடைய கும்பகருணன், பகைவனை ஏசிக்கொண்டு எழுவான்; விண்ணிலியங்கும் தேவரைப் பார்ப்பான் ; பின், தன் அகழப்பட்ட மூக்கைப் பார்ப்பான்; முன்பு கழிந்த நாட்களின் நிலைமையோடு இன்றை நிலைக்குள்ள வேறுபாட்டை மனத்தால் பார்ப்பான்; (இன்று நேர்ந்த இழிதகவை எண்ணி நாணமுற்றுத் தலைகுனிந்து) இம்மண்ணினைப் பார்ப்பான்.

கு :—*சீசீ* என்பது எதுகை நோக்கிச் *சீசி* எனக் குறுகிற்று. *சீசீ* - இகழ்ச்சிக் குறிப்பு. *சீசீ* என்று இகழத்தக்க நிலையை இங்குச் *சீசி* என்றார். இகழத் தக்க நிலையாவது மூக்கிழந்த நிலை. விசும்பினர்-தேவர். தேவர்கள் தன் இழிநிலையைப் பார்த்து விடுவார்களோ என்று விண்ணவரை நிமிர்ந்து பார்க்கின்றான் என்றவாறு. வாசியைப் பார்க்கும் என்பது நோக்கல் நோக்கம். இன்றடைந்த இழிநிலைக்கும் கழிந்த நாட்களில் அடைந்திருந்த உயர்நிலைக்கும் உள்ள வேறுபாட்டை நினைந்து பார்த்தலும், அவ்வாறு ஒப்பிட்டுப் பார்க்கும் போது இன்றைய இழிநிலை நாணத்தக்கதாக இருத்தலின் தலை குனிந்து மண்ணைப் பார்த்தலும், இயல்பு நிகழ்ச்சிகளாதல் காணலாம். வாசி - வேறுபாடு. 'ஈசனிலைமைக்கு மேனை யிமையோர் நிலைக்கும் வாசியுரை'' (ஏகாம்பர - உலா. 483) என்றது காண்க. இனி, வாசி - தகுதி எனலும் ஆம். (298)

## கும்பகருணன் போர்செய்ய வாளும் கேடகமும் எடுத்தல்

**7697.** என்முகங் காண்பதன் முன்னம் யானவன்
தன்முகங் காண்பது சரதந் தானெனப்
பொன்முகங் காண்பதோர் தோலும் போரிடை
வன்முகங் காண்பதோர் வாளும் வாங்கினன்.

'என்முகம் காண்பதன் முன்னம், யான் அவன்—
தன்முகம் காண்பது சரதம்தான்' என,
பொன்முகம் காண்பது ஓர் தோலும், போரிடை
வன்முகம் காண்பது ஓர் வாளும், வாங்கினுன்.

பொ :—'(மூக்கிழந்த நிலையில்) தான் என் முகத்தைப் பார்ப்பதற்கு முன்னே, அவன் முகத்தை (மூக்கிழந்ததாக) யான் செய்து காண்பது உறுதி' என்று எண்ணி, பொன் கொண்டிழைத்த முகப்புடன் காணப்படும் ஒரு கேடகத்தையும், போரில் (மடியாமல்) வலியவாயுடன் காணப்படும் ஓர் வாளினையும் கைக்கொண்டான் கும்பகருணன்.

கு :—அவன் என்றது இராமனை. மூக்கிழந்த தன் முகத்தை இராமன் காண்பதற்கு முன்னே அவன் முகத்தை அந்த நிலையுடையதாகக் கும்பகருணன் செய்து பார்ப்பது உறுதி என்ற எண்ணத்துடன் வாளும் கேடகமும் கைக் கொள்ளலானுன் என்றவாறு. காண்பது, (இரண்டாவது) செய்வது என்னும் பொருளது. சரதம் - உறுதி; சத்தியம். எனு, வாங்கினுன் என இயையும். வாங்குதல் - கைக்கொள்ளுதல்; எடுத்தல். தோல் - கேடகம். முகப்பில் பொன் கொண்டிழைத்திருத்தலின் 'பொன் முகம் காண்பதோர் தோலும்,' என்ருர். வன்முகம் என்றது, வலியதாகிய வாயை. போரில் பகைவரை வெட்டுங்கால் வாய் மடியாது வலிதாயிருக்கும் வாள் என்றவாறு. வாய் என்ற பொருளில் 'முகம்' வழங்கப்படுதல் உண்டு என்பதை வாயிலிடும் வாசத்தை 'முகவாசம்' என்று வழங்குவது கொண்டும் உணரலாம். (299)

**7698.** வீசினன் கேடகம் விசும்பின் மீனெலாம்
கூசின வமரருங் குடர்கு ழம்பினுர்
காய்சின வரக்கனுங் கனன்ற போதவன்
நாசியுஞ் செவியும்வெங் குருதி நான்றவே.

வீசினன் கேடகம், விசும்பின் மீன் எலாம்
கூசின; அமரரும் குடர் குழம்பினுர்;
காய்சின அரக்கனும் கனன்றபோது, அவன்
நாசியும் செவியும் வெங்குருதி நான்றவே.

பொ :—(கும்பகருணன்) கேடகத்தைத் தூக்கி வீசினுன்; வானத்தில் உள்ள விண்மீன்கள் எல்லாம் அதன் ஒலியைக் கண்டு நாணமடைந்தன; தேவர்களும் குடல் குழம்பப் பெற்ருர்கள்;

கொல்லும் கோபத்தை இயல்பாகக் கொண்டுள்ள கும்பகருணனும் மேலும் கோபித்தபோது, அவன் மூக்கும் காதும் வெப்பமான இரத்தத்தைச் சொரிந்தன.

கு :—கும்பகருணனது மிக்க கோபத்தால் அவனுடைய அறுபட்ட மூக்கு வழியாகவும் காது வழியாகவும் இரத்தம் பெருகியது என்க. (300)

**7699.** ஆயிரம் பேய்சுமந் தளித்த தாங்கொரு
மாயிருங் கேடக மிடத்து வாங்கினன்
பேயிரண் டாயிரஞ் சுமந்து பேர்வதோர்
காயொளி வயிரவாள் பிடித்த கையினன்.

ஆயிரம் பேய் சுமந்து அளித்தது, ஆங்கு ஒரு
மாயிருங் கேடகம் இடத்து வாங்கினன் ;
பேய் இரண்டு ஆயிரம் சுமந்து பேர்வது ஓர்
காய் ஒளி வயிரவாள் பிடித்த கையினன்.

பொ :—இரண்டாயிரம் பேய்கள் சுமந்து செல்லக் கூடிய எரிக்கின்ற ஒளியையுடைய வயிர வாளைப் பிடித்த கையையுடையவனாகிய கும்பகருணன் - ஆயிரம் பேய் சுமந்து கொண்டு வந்து ஆங்குக் கொடுத்த ஒரு மிகப் பெரிய கேடகத்தை இடது கையில் வாங்கிக் கொண்டான்.

கு :—முன்பிடித்த கேடகம் தன்னாற்றலுக்கு ஏலாத சிறுமையுடையது என்று வீசி யெறிந்தானாகலின், ஆயிரம் பேய் சுமந்து வந்து கொடுத்த வேறொரு கேடகத்தை வாங்கலானான் என்க. (301)

## கும்பகருணனது போர் ஆரவாரம்

**7700.** விதிர்த்தனன் வீசினன் விசும்பின் மீனெலாம்
உதிர்த்தன னுலகினை யனந்த னுச்சியோ
டதிர்த்தன னார்த்தன னாயி ரம்பெருங்
கதிர்த்தலஞ் சூழ்வட வரையின் காட்சியான்.

விதிர்த்தனன், வீசினன், விசும்பின் மீன் எலாம்
உதிர்த்தனன்; உலகினை அனந்தன் உச்சியோடு
அதிர்த்தனன்; ஆர்த்தனன் ஆயிரம் பெருங்
கதிர்த்தலம் சூழ் வடவரையின் காட்சியான்.

பொ :—கையில் பிடித்த வாளை விதிர்விதிர்த்து வீசி, விண்ணில் உள்ள மீன்கள் மண்ணில் வீழ உதிர்த்தவனாய், இம்மண்ணுலகத்தை ஆதிசேடன் தலையொடு அதிரச் செய்தானாய் ஆரவாரித்தவனாகிய கும்பகருணன் ஆயிரங் கதிர்களையுடைய பெரிய சூரியன் வலம் வருகின்ற வடமேருமலையினைப் போன்ற காட்சியனாகத் தோன்றினான்.

கு :—மலைபோன்ற தோற்றமுடைய கும்பகருணன் ஒளிவீசும் வாளினைச் சுழற்றும்போது மேருமலையைச் சூரியன் சுற்றி வருவது போலத் தோன்றியது என்பார், 'கதிர்த்தலஞ் சூழ்வடவரையின் காட்சியான்' என்றார். விதிர்த்தனன், வீசினன், உதிர்த்தனன் அதிர்த்தனன் என்பன எச்சப் பொருளன. வீதிர்த்து வீசி, உதிர்த்து அதிர்த்து ஆர்த்தவனாகிய கும்பகருணன், கதிர்த்தலம் சூழ் வடவரையின் காட்சியான் ஆயினன் என ஆக்கச் சொல் வருவித்து உரைக்க. காட்சியான் என்பது ஆக்கவினைக் குறிப்பு ஆகலின், அது ஆக்கமின்றி யியலாதாயிற்று. ஆர்த்தனன் என்பது வினைப் பெயர். இவ்வுலகினை, ஆதிசேடன் தலையில் சுமக்கின்றான் என்ற புராண மரபு கருதி 'உலகினை அனந்தனுச்சியோடு அதிர்த்தனன்' என்றார். உலகமும் உலகைத் தாங்கிய ஆதிசேடன் தலையும் அதிர்ந்தன என்க. கதிர்த்தலம் என்றது சூரியமண்டலத்தை. வடவரை-மேரு மலை. மேரு மலையைச் சூரியன் வலம் வருவதாகக் கூறுவது புராண மரபு. (302)

## கும்பகருணன் கேடகம் வீசுதல்

**7701.** வீசினன் கேடக முகத்து வீங்குகால்
கூசின குரக்குவெங் குமுவைக் கொண்டெழுந்
தாசைக டோறும்விட் டெறிய வார்த்தெழும்
ஓசையொண் கடலையுந் திடர்செய் தோடுமால்.

வீசினன் கேடகம்; முகத்து வீங்குகால்,
கூசின குரங்கு வெங்குழுவைக் கொண்டு எழுந்து,
ஆசைகள் தோறும் விட்டு, எறிய, ஆர்த்து எழும்
ஓசை ஒண் கடலையும் திடர்செய்து, ஓடுமால்.

பொ :—(கும்பகருணன்) கேடகத்தை வீசினானாக, அக்கேடகத்தினிடத்துப் பெருகியெழும் காற்று, அஞ்சின குரங்குகளின் கொடிய கூட்டத்தைக் கொண்டு சென்று திசைகள் தோறும் விட்டெறியா நிற்க, அக்கேடகம், அலைவீசுதலால் ஆரவாரித்து எழுகின்ற ஓசையுடைய சிறந்த கடலையும் திடராகச் செய்துகொண்டு ஓடா நிற்கும்.

கு :—கேடகத்தைக் கும்பகருணன் வீசியதால் உண்டாகிய காற்றின் செயலை விளக்கியவாறு. வீங்குகால் - பெருகிய காற்று. அஞ்சுகின்ற குரங்குகள் கனம் குறைந்தவை ஆதலின், அவற்றின் கூட்டத்தையே கொண்டுபோய்த் திசைகள் தோறும் வீட்டெறிந்தது என்க. வீங்குகால் குரக்குவெங்குழுவை ஆசைகள் தோறும் விட்டெறிய, அக்கேடகம் தன் வடிவத்தால் கடலையும் திடர் செய்து கொண்டு ஓடாநிற்கும் என்றவாறு. ஆசை - திசை. ஒண்கடல் என்புழி, ஒண்மை சிறப்பு என்னும் பொருளில் வந்தது. இனித் தன்பால் உள்ள மணிமுத்துகளினுல் ஒளியுடைய கடல் எனலும் ஆம். திடர் - மேடு. (303)

கீழ்வரும் பாடல்கள் சில சுவடிகளில் மிகைப்பாடலாகக் காணப் படுகின்றன.

7701 (a) கும்பகன் கொடுமையும் குலைகு லைந்துபோய்
வெம்புவெஞ் சேனையின் மெலிவு நோக்கிய
நம்பனு மரக்கன்கை நடுவட் பூட்டுறு
செம்பொனின் கேடகஞ் சிதைத்து வீழ்த்தினுன்.

(b) ஆயிரம் பெயரவ னறுத்து மாற்றுறப்
போயின கேடகம் புரிந்து நோக்கினுன்
பேயிரண் டாயிரஞ் சுமக்கப் பெற்றுடை
மாயிருங் கேடகம் வலிதின் வாங்கினுன்.

இவை சிறந்த ஏடுகளில் இல்லை என்பதும் கருதற்குரியது.

**7702.** போயின கேடகம் போக நோக்கினன்
ஆயிரம் பெயரவ னறியு முன்பவன்
பேயிரண் டாயிரம் பேணுங் கேடகம்
ஏயெனு மளவினி லெய்தச் சென்றதால்.

போயின கேடகம் போக நோக்கினன்
ஆயிரம் பெயரவன் அறியும் முன்பு; அவன்
பேய் இரண்டாயிரம் பேணும் கேடகம்
'ஏ' எனும் அளவினில் எய்தச் சென்றதால்.

பொ :—ஆயிரம் பெயர்கட்கு உரியவனுகிய இராமன், பிறர் அறிவதற்கு முன்னே வானத்தில் சென்ற கேடகத்தை(த் தன் வில்லின் திறலால்) போயழியச் செய்தான்; இரண்டாயிரம் பேய்கள் சுமந்து வந்த அவனது மற்றொரு கேடகம், 'ஏ' என்று சொல்வதற்குள் அவனை அடைந்தது.

கு :—முன்னை கேடகத்தினும் இரு மடங்கு பெரிய கேடகம் ஆதலின் இரண்டாயிரம் பேய் சுமக்கலாயின. போக நோக்குதலாவது அழியுமாறு செய்தல். ஏ என்பது இரண்டு மாத்திரை யளவு நேரத்தைக் குறித்தது; விரைவில் என்றபடி. இனி ஏ என்று விளித்துக் கூறுதற்குள் எய்தச் சென்றது எனலும் ஆம். (304)

### கும்பகருணன் வானரப் படையை அழிப்பது

**7703.** தோலிடைத் துரக்கவுந் துகைக்க வுஞ்சுடர்
வேலுடைக் கூற்றினுற் றுணிய வீசவும்
காலுடைக் கடலெனச் கிந்திக் கைகெட
வாலுடை நெடும்படை யிரிந்து மாய்ந்ததால்.

தோலிடைத் துரக்கவும், துகைக்கவும் சுடர்
வேலுடைக் கூற்றினுல் துணிய வீசவும்,
காலுடைக் கடலெனச் சிந்தி, கைகெட,
வாலுடை நெடும்படை இரிந்து மாய்ந்ததால்.

பொ :—வீசிய கேடகத்தால் துரத்துதலாலும், (காலால்) துகைத்தலாலும் ஒளி வாய்ந்த வாளின் வடிவுடைய எமனுல் துணியுமாறு வீசுதலாலும், பெருங்காற்ருல் உடையும் தன்மையுடைய கடலைப் போல, வாலையுடைய பெரிய வானர சேனை சிதறிச் செயல் அழிய ஓடி அழிந்தது.

கு :—தோல் - கேடகம். இடை என்ற ஏழனுருபின் பொருள்பட வந்த சொல். மூன்ரும் வேற்றுமைப் பொருள் தந்தது; உருபு மயக்கம். துகைத்தற்கேற்ற கால் என்னும் எழுவாய் வருவிக்கப் பட்டது. வேல் என்றது இங்கு வாள் என்னும் பொருளில் ஆளப் பட்டதாகக் கொள்க. என்னை? முன்பு "பொன்முகங் காண்பதோர் தோலும் போரிடை, வின்முகங் காண்பதோர் வாளும் வாங்கினுன்" என வாளையே கூறியிருத்தலான் என்க. மேலும் கேடகத்தோடு இயையுடையதும் துணித்தற்குரியதும் வாளேயாதலும் நினைக. வேல் சிறப்புப் பொருளை விடுத்துப் படை என்று பொதுப் பொருளில் வழங்கப்பட்டதாகக் கொள்க. கூற்றுவனைப் போல் கொல்லும் இயைபு கருதி வேலுடைக் கூற்று எனப்பட்டது. வாள் வடிவு கொண்ட கூற்று என்க. "வேண்டுருவங் கொண்டதோர் கூற்றங் கொல்" (கலித்தொகை - 56 - 9) என்பது இங்கு நினைவு கொளற் குரியது. காலுடை என்புழி உடை என்பதை இருமுறை ஓதி, உடைதலையுடைய கடல் எனப் பொருள் கூறப்பட்டது. காலுடை

கடல் என்ற இயல்பான பாடம் இருப்பின் சிறக்கும். கைகெட - செயலற. கும்பகருணனால் சிதறி ஓடி அழியும் வானரப்படையின் தோற்றம், பெருங் காற்றால் சிதைந்து ஓடுகின்ற கடலைப் போன்றிருந்தது என்றவாறு. கும்பகருணன் வானரப் படையைத் தோலாலும் காலாலும் வாளாலும் அழித்தான் என்க. (305)

**7704.** ஏறுபட் டதுமிடை யெதிர்ந்து ளோரெலாம்
கூறுபட் டதுங்கொழுங் குருதி கோத்திழிந்
தாறுபட் டதுநில மனந்த னுச்சியும்
சேறுபட் டதுமொரு கணத்திற் றீர்ந்தவால்.

ஏறுபட்டதும், இடை எதிர்ந்துளோர் எலாம்
கூறுபட்டதும், கொழுங் குருதி கோத்து இழிந்து
ஆறுபட்டதும், நிலம் அனந்தன் உச்சியும்
சேறுபட்டதும், ஒரு கணத்தில் தீர்ந்தவால்.

பொ :—கும்பகருணன் வீசிய வாளால் வானர சேனை ஏறுண்டதும்; அதனால், போர்க்களத்தின் நடுவே எதிர்ந்தவர்கள் எல்லாம் துண்டம்பட்டதும், அதனால், வெட்டுண்டவர் உடம்பிலிருந்து பெருகிய செழுமையான இரத்தம் ஒன்று சேர்ந்து இறங்கி ஆறாகப் பெருகியதும், அதனால், நிலத்துடன் ஆதிசேடன் தலையும் சேறு ஆகியதும், எல்லாம் ஒரு கணத்தில் நடைபெற்று முடிந்தன.

கு :—இச் செயல்கள் பலவும் ஒரு கணத்தில் நடந்து முடிந்தன எனக் காலச் சிறுமை கூறிக் கும்பகருணனின் வீரப் பெருமையை விளக்கியவாறு. வாள் ஏறுபட்டதும் என்க. ஏறுபட்டவை வானரப் படை. கூறுபடுதல் என்றது துண்டிக்கப்பட்ட நிலையை. ஏறுபட்டதால் கூறுபடுதலும், கூறுபடுதலால் ஆறுபடுதலும், ஆறுபடுதலால் சேறுபடுதலும் காரண காரிய முறையில் நிகழ்ந்தன என்றவாறு. சேற்றின் மிகுதி புலப்பட 'நிலம் அனந்தனுச்சியும் சேறுபட்டது' என்றார். நிலத்தைத் தாங்கும் ஆதிசேடன் தலைவரையில் நிலம் சேறாயிற்று என்றபடி. (306)

## சாம்பன் இராமனைத் தூண்டுதல்

**7705.** இடுக்கிலை யெதிரினி யிவனை யிவ்வழித்
தடுக்கிலை யாமெனிற் குரங்கின் றானையை

ஒடுக்கினே யரக்கனே யுயர்த்தி ஞயெஞ
முடுக்கின னிராமனேச் சாம்பன் முன்னியே.

'இடுக்கு இலே, எதிர்; இனி இவனே இவ்வழித்
தடுக்கிலேயாம் எனின், குரங்கின் தானேயை
ஒடுக்கினே, அரக்கரை உயர்த்திஞய்' எஞ
முடுக்கினன், இராமனேச் சாம்பன் முன்னியே.

பொ :—சாம்பவன் இந்நிலேயைச் சிந்தித்து, "இதற்கு ஒப்பான இடுக்கான நிலே இல்லே; இப்போதும் இக் கும்பகருணனே இவ் விடத்தில் நீ தடுக்க வில்லே என்ருல், குரங்கின் சேனேயை நீயே ஒடுங்கச் செய்து பகைவஞகிய அரக்கனே உயர்த்திஞய் ஆவாய்" என்று கூறிக்கொண்டு இராமனே(ப் போர்க்கு) முடுகச் செய்தான்.

கு :—இன்னும் சிறிது போழ்து இராமன் போர் செய்யாது இருந் தால், குரங்குச் சேனே முழுமையும் அழிவெய்தும்; கும்பகருணன் வெற்றி பெற்று உயர்வான்; ஆதலின், சாம்பன் இதனேச் சிந்தித்து இராமனேப் போர்க்கு விரையுமாறு செய்தான் என்றவாறு. இடுக்கு - நெருக்கடியான நிலே. எதிர் - ஒப்பது. இத் துன்ப நிலேக்கு நிகரான இடுக்கு இல்லே என வேண்டுஞ் சொல் வருவித்து முடிக்க. இவனே என்றது, கும்பகருணனே. அவனேத் தடுத்தலாவது அவன் படைகளே யழித்தலும் அவனேயே அழித்தலும் ஆம். கும்பகருணனே இராமன் தடுக்காமலிருப்பின், தன் சேனேயைத் தானே அழித்த வனும் பகைவனே உயர்த்தினவனும் ஆவான் என்றது, பரம்பரை ஏதுவாற் கூறியவாறு. குரங்கின் சேனேயை அழிக்கின்றவன் கும்ப கருணனே ஆயினும், அவனே அழிக்காமல் இராமன் பார்த்துக் கொண்டிருந்ததாலன்ருே அவன் அங்ஙனம் அச்சேனேயை அழித் தான், என்று நோக்கும்போது, வானர சேனேயின் அழிவுக்குப் பரம் பரையால் இராமன் காரணமாதல் காணலாம். தன் சேனேயைத் தானே அழித்தலும் தன் பகைவனுக்கு உதவியாய் உயர்த்தலும் யாரும் செய்யாரன்றே! அத்தகைய இழிசெயலே இராமன் செய்தவ ஞவான் என்று வேம்புங் கடுவும் போல்வன கூறிச் சாம்பன் இரா மனேப் போர்க்கு அனுப்பினுன். அவன் முதியவஞதலின் என்க. முன்னுதல் – சிந்தித்தல். (307)

## இராமன் கும்பகருணனே எதிர்த்தல்

**7706.** அண்ணலுந் தானேயி னழிவு மாங்கவன்
திண்ணெடுங் கொற்றமும் வலியுஞ் சிந்தியா

நண்ணின னடந்தெதிர் நமனை யின்றிவன்
கண்ணிடை நிறுத்துவெ னென்னுங் கற்பினன்.

அண்ணலும் தானையின் அழிவும், ஆங்கு அவன்
திண்நெடுங் கொற்றமும், வலியும் சிந்தியா,
நண்ணினன் நடந்து எதிர் – 'நமனை இன்று இவன்
கண்ணிடை நிறுத்துவென்' என்னும் கற்பினன்.

பொ :—(சாம்பவன் சொல்லக் கேட்ட) இராமனும் தன் சேனையின் அழிவையும், அக் கும்பகருணனது திண்ணிய நெடிய வெற்றியையும், வலிமையையும் சிந்தித்து 'எமனை இன்றைக்கு இவன் கண்ணில் நிறுத்துவேன்' என்னும் உறுதியான கொள்கை யுடையவனாய் நடந்து சென்று அக் கும்பகருணன் எதிரே நெருங்கினன்.

கு :—அண்ணல் - பெருமையுடைய இராமன். அண்ணலும் சிந்தியா கற்பினனாய் நடந்து எதிர் நண்ணினன் என இயையும். இன்று இவனை எமனுலகிற்கு அனுப்புவேன் என்பான், 'நமனை இன்றிவன் கண்ணெதிர் நிறுத்துவென்' என்றான். உடம்பைவிட்டு உயிர் நீங்குங் காலத்து எமனைக் காண்பதுண்டு ஆதலின், 'நமனை இவன் கண்ணெதிர் நிறுத்துவென்' எனக் கூறினன் எனலுமாம்.
(308)

## இராமனும் கும்பகருணனும் பொருதல் 7707-7710

**7707.** ஆறினோ டேழுகோ லசனி யேறென
ஈறிலா விசையின விராம னெய்தனன்
பாறுகு சிறையென விசும்பிற் பாறிட
நூறினன் வாளினா னுணங்கு கல்வியான்.

ஆறினோடு ஏழுகோல், அசனி ஏறு என,
ஈறு இலா விசையன இராமன் எய்தனன்;
பாறு உகு சிறை என விசும்பில் பாறிட
நூறினன் வாளினால், நுணங்கு கல்வியான்.

பொ :—பதின்மூன்று அம்புகள், இடியேறுபோல முடிவிலாத வேகத்தை யுடையவற்றை இராமன் எய்தான்; நுட்பமான போர்க் கல்வியைக் கற்ற கும்பகருணன், அவ்வம்புகள் பருந்து உகுத்த இறகுகளைப் போல விண்ணில் சிதறி ஓடுமாறு, தன் வாளினால் துகளாக்கினன்.

கு :—அசனி ஏறு என்றது, இடிகளுக்குள் பெரிதாய இடியினை. விரைந்து தாக்கும் இயல்பினது இடியாகலின் விரைந்து தாக்கும் இராமன் அம்புக்கு அதை உவமை கூறினார். பாறு - பருந்து. பாறுதல் - ஓடுதல். இராமன் எய்த பதின்மூன்று அம்புகளையும் கும்ப கருணன் தன் வாளினால் துண்டித்துத் துகளாக்கினான். நுணங்கு கல்வியான் என்றது கும்பகருணனை. கல்வியான் வாளினால் நூறினான் என இயையும். கல்வி என்றது போர்த்தொழிற் கல்வியை. அது மிக நுட்பமாக அறிதற்குரியதாகலின் 'நுணங்கு கல்வி' எனப் பட்டது. நுண்ணிய அறிவால் கற்பதற்குரிய கல்வியை 'நுணங்கு கல்வி' என்று தொகுத்துக் கூறியவாறு. (309)

**7708.** ஆடவர்க் கரசனுந் தொடர வவ்வழிக்
கோடையிற் கதிரெனக் கொடிய கூர்ங்கணை
ஈடுறத் துரந்தன னவையு மிற்றுகக்
கேடகப் புறத்தினாற் கிழியச் சிந்தினான்.

ஆடவர்க்கு அரசனும், தொடர, அவ்வழி,
கோடையின் கதிர் எனக் கொடிய கூர்ங்கணை
ஈடு உறத் துரந்தனன்; அவையும் இற்று உக,
கேடகப் புறத்தினால் கிழியச் சிந்தினான்.

பொ :—ஆண்மக்களுள் சிறந்தவனாகிய இராமனும் அவ்வம்பு களைப் பின்பற்றிச் செல்லுமாறு, அவ்விடத்தில் கோடைக்காலத்துச் சூரியன்போலக் கொடியவாகிய கூரிய அம்புகளை வலிமை பொருந்தச் செலுத்தினான்; அவையும் முறிந்து வீழுமாறும் கிழியுமாறும் கும்ப கருணன் தன் கேடகத்தின் புறத்தினால் சிதறடித்தான்.

கு :—புருடோத்தமன் என்பார், ஆடவர்க்கரசன் என்றார் என்றது இராமனை. கோடைகாலத்துச் சூரியனது வெப்பம்போன்ற வெப்பமுடையவாய்ப் பகைவரைத் தாக்குகின்ற கொடிய கூரிய அம்பு என்க. ஈடு - வலிமை. துரந்தனன் - செலுத்தினான். இற்றுகக் கிழியச் சிந்தினன் என மாற்றி முடிக்க. அவ்வம்புகளைக் கும்ப கருணன் பொருட்படுத்தாமை புலப்படக் 'கேடகப் புறத்தினால் சிந்தினான்' என்றார். (310)

**7709.** சிறுத்ததோர் முறுவலுந் தெரியச் செங்கணான்
மறித்தொரு வடிக்கணை தொடுக்க மற்றவன்
ஒறுத்தொளிர் வாளெனு முரவு நாகத்தை
அறுத்தது கலுழனி னமர ரார்க்கவே.

சிறுத்தது ஓர் முறுவலும் தெரிய, செங்கணுன்,
மறித்து ஒரு வடிக்கணை தொடுக்க, மற்று அவன்
ஒறுத்து ஒளிர் வாள் எனும் உரவு நாகத்தை
அறுத்தது, கலுழனின், அமரர் ஆர்க்கவே.

பொ :—சிவந்த கண்ணையுடையவனுகிய இராமன் சிறியதோர் புன்சிரிப்புந் தோன்ற மீண்டும் ஒரு கூரிய அம்பைவிட, (அவ்வம்பு) அக் கும்பகருணனுடைய வெட்டி ஒளி வீசுகின்ற வாள் என்கின்ற வலிய பாம்பினைத் தேவர்கள் ஆரவாரிக்கக் கருடனைப் போல, அறுத்து வீழ்த்தியது.

கு :—செங்கணுன் என்றது, இராமனை. கோபத்தால் சிவந்த கண்களையுடையவன் அக் கோபத்திற்கு மாருகப் புன்சிரிப்பும் தோன்ற அம்பு தொடுத்தான் என்க. உம்மை இறந்தது தழுவியது. இராமன் அம்புகளை வெட்டி வீழ்த்தியதை நினைந்து ஒறுத்து ஒளிர் வாள் என்ருர். வாள் எனும் நாகம் என்றது உருவகம். நாகம் போன்று கொடுமையுடைமை கருதி வாளினை நாகமாக உருவகம் செய்தார். அவ்வுருவகத்திற்கேற்ப அவ்வாளை அறுத்த இராமன் அம்பிற்குக் கலுழனை உவமித்தார். நாகத்தை அழிப்பது கலுழன் ஆகலின். தம் பகைவனது வாள் அறுபட்டது கண்டு அமரர் ஆர்ப்பாராயினர். (311)

**7710.** அற்றது தடக்கைவா ளற்ற தில்லென
மற்றெரு வயிரவாள் கடிதின் வாங்கினுன்
முற்றினன் முற்றின னென்று முந்துவந்
துற்றன னூழித்தீ யவிய வூதுவான்.

'அற்றது தடக்கை வாள் அற்றது இல்' என,
மற்று ஒரு வயிரவாள் கடிதின் வாங்கினுன்,
'முற்றினன் முற்றினன்' என்று, முந்து வந்து
உற்றனன் – ஊழித்தீ அவிய ஊதுவான்.

பொ :—ஊழிக் கடையில் எழும் தீயும் அவியுமாறு பெருமூச்சு விடுகின்றவனுகிய கும்பகருணன் - ஒடிந்துவிட்டதாகிய பெரிய கையி லிருந்த வாள் இன்னும் ஒடிந்திலது என்று கண்டோர் கருதுமாறு மற்றெரு உறுதியான வாளை மிக விரைவாக ஏந்திக் கொண்டவனுய். (எல்லோரையும்) 'முடித்துவிட்டேன், முடித்துவிட்டேன்' என்று கூறிக்கொண்டு முன்னே வந்து நின்ருன்.

கு :—இராமன் அம்பால் கும்பகருணனது வாள் அற்றது உண்மையே ஆயினும்; அது அற்றதில்லை என்று பார்ப்பவர்கள் கருதுமாறு விரைந்து மற்றொரு வாளை வாங்கினான் என்றவாறு. முற்றினன் - முடித்துவிட்டேன். அடுக்கு விரைவு குறித்து வந்தது. ஊதுதல் என்றது பெருமூச்சு விடுதலை. "கேழில் வெங் கொடியவன் உயிர்ப்புக் கேடிலா வாழிய வுலகெலாந் துடைக்கு மாருதம் ஊழியினிறுதி பார்த்துழல்வ தொக்கவே" (சுந்தர-ஊர்தேடு-127) என அவன் மூச்சுக்காற்றை முன்பு புகழ்ந்திருத்தல் நினைக. 'அற்றது தடக்கை; வாள் அற்றது இல்' என்பதற்கு. இப்போது என் வாள் ஒடியவில்லை. என் கையே ஒடிந்தது என அவ்வாளின் சிறப்பைப் புலப்படுத்தியதாகவும் கொள்ள இடமுண்டு. (312)

## இராமன் கும்பகருணனது வாள், கேடகம், கவசம் இவற்றைத் துணித்தல்

**7711.** அந்நெடு வாளையுந் துணித்த வாண்டகை
பொன்னெடுங் கேடகம் புரட்டிப் போர்த்ததோர்
நன்னெடுங் கவசத்து நாம வெங்கணை
மின்னொடு நிகர்ப்பன பலவும் வீசினான்.

அந்நெடு வாளையும், துணித்த ஆண்தகை
பொன் நெடுங் கேடகம் புரட்டி, போர்த்தது ஓர்
நல் நெடுங் கவசத்து, நாம வெங்கணை
மின்னொடு நிகர்ப்பன, பலவும் வீசினான்.

பொ :—அந்த நீண்ட வாளையும் முறியச் செய்த இராமன், (பின்பு) அவனுடைய பொன் கொண்டு இழைத்த கேடகத்தைப் புரளச் செய்து வீழ்த்து விட்டு, அவன் மார்பில் போர்த்திருக்கும் ஒப்பற்ற நல்லதாகிய நீண்ட கவசத்தின்கண், மின்னலோடு ஒப்பனவாகிய அச்சந்தரும் கொடிய அம்புகள் பலவற்றையும் வீசினான்.

கு :—ஆண்டகை என்றது புருடோத்தமனாகிய இராமனை. வாளையும் என்புழி உம்மை இறந்தது தழீஇயது. கேடகம் புரட்டி என்புழிப் புரட்டுதல், வீழ்த்தலை உணர்த்தியது. நிகர்ப்பனவாகிய கணைபலவும் கவசத்து வீசினான் என்க. நாமம் - அச்சம். கவசத்து வீசினான் என்புழி ஏழனுருபு தொக்கு நின்றது. (313)

52-ல் 306-1 ஆகப் பின்வரும் மிகைப்பாடல் காணப்படுகின்றது.

7711 (a) ஆலமுண் டவன்முத லளித்த தன்னவன்
சூலமுண் டளப்பில கோடி பேய்சுமந்
தோலமிட் டமரர்க ளோடி ஊழியில்
காலனைத் தவன்கரத் தளித்த தக்கணம்.

## அப்போது இராவணன் அனுப்பிய படை உதவிக்கு வருதல் 7712–7713

**7712.** அந்தர மன்னது நிகழு மவ்வழி
இந்திரன் றமரொடு மிரிய வெய்திடச்
சிந்துவுந் தன்னிலை குலையச் சேணுற
வந்தது தசமுகன் விடுத்த மாப்படை.

அந்தரம் அன்னது நிகழும் அவ்வழி,
இந்திரன் தமரொடும் இரியல் எய்திட,
சிந்துவும் தன்னிலை குலைய, சேண் உற
வந்தது தசமுகன் விடுத்த மாப்படை.

பொ :—அத்தன்மையான முடிவு நிகழ்கின்ற அப்போது, இந்திரன் தன் உறவினரோடு ஓடவும், கடலும் தன் நிலை குலையவும் சேய்மையிலிருந்து, இராவணன் அனுப்பிய பெரும்படை நெருங்க வந்தது.

கு :—அந்தரம் - முடிவு. அன்னதாகிய அந்தரம் என்க. வாளும் கேடகமும் கவசமும் துணிவுற்று முடிந்த நிலையையே அன்னது அந்தரம் எனவும் சுட்டியதாகக் கொள்க. அவ்வழி மாப்படை வந்தது என இயையும். அவ்வழி என்பதற்கு அவ்விடத்து என இடப் பொருள் கூறலும் ஆம். தசமுகன் - பத்து முகங்களையுடைய இராவணன். இராவணன் அனுப்பிய படையின் பெருமையும் ஆரவாரமும் புலப்பட இந்திரன் தமரொடும் இரிதலும், கடல் நிலைகுலைதலும் கூறப்பட்டன. சேண் - சேய்மை. உறவந்தது - நெருங்க வந்தது. (314)

**7713.** வில்வினை யொருவனு மிவனை வீட்டுதற்
கொல்வினை யிதுவெனக் கருதி யூன்றினான்
வல்வினை தீயன வந்த போதொரு
நல்வினை யொத்தது நடந்த தானையே.

வில்வினை ஒருவனும், 'இவனை வீட்டுதற்கு
ஒல்வினை இது' எனக் கருதி ஊன்றினன்;
வல்வினை தீயன வந்தபோது ஒரு
நல்வினை ஒத்தது, நடந்த தானையே.

பொ :—விற்போரில் ஒப்பற்றவனாகிய இராமனும், இக் கும்பகருணனைக் கொல்லுதற்கு ஏற்ற செயல் இது என்று நெஞ்சில் ஆழ்ந்து சிந்தித்தானாக; அப்போது (கும்பகருணனுக்கு உதவியாக) வந்து சேர்ந்த சேனை, வலியனவும் தீயனவும் ஆய வினைகள் ஒழிக்க வந்த போது (அவற்றைத் தடுத்து நிறுத்த) ஒரு நல்வினை வந்தது போன்றது.

கு :—கும்பகருணனது தீவினைகள் அவனை அழிக்க வந்தபோது அவற்றைத் தடுத்து நிறுத்த ஒரு நல்வினை வந்ததுபோல, இராமனது அம்பால் வாள் முதலியவற்றை இழந்த கும்பகருணன் கொலை படப்போகும் அச்சமயத்தில் அது நிகழாதபடி இராவணன் அனுப்பிய சேனை வந்தது என்றவாறு. வில்லினுக்கு இராமன் எனப் புகழ் பெற்றவன் ஆதலின் 'வில்வினை ஒருவன்' என இங்குச் சொல்லப் பட்டான். வீட்டுதல் - அழித்தல். ஒல்வினை - ஏற்ற செயல். கருதியூன்றினன் என்பதை ஊன்றிக் கருதினன் என மாற்றிப் பொருள் கொள்க. கும்பகருணனது வலிய தீவினை போன்றவன் இராமன்; அவன் நல்வினை போன்றது இராவணன் அனுப்பிய படை என்க. வல்வினை தீயன எனத் தீவினைகளைப் பலவாகவும், ஒரு நல்வினை என நல்வினையை ஒன்றாகவும் கூறி, ஒரு நல்வினை பல தீவினைகள் செய்யும் தீமையைச் சிறிதுபோது தடுத்து நிறுத்துமேயன்றி அறவே தடுக்க இயலாது என்பது புலப்படுத்தியவாறு. இவ்வுவமையால் இராவணன் அனுப்பிய படையும், கும்பகருணன் இறவாமல் சிறிது போழ்தே தடுத்து நிறுத்த வல்லது என்பதும் உணரலாம். (315)

## வந்த படையை இராமன் பொர அழைத்தல்

**7714.** கோத்தது புடைதொறுங் குதிரை தேரொடாள்
பூத்திழி மதமலை மிடைந்த போர்ப்படை
காத்தது கருணனைக் கண்டு மாயமாக்
கூத்தனும் வருகெனக் கடிது கூவினன்.

கோத்தது புடைதொறும் குதிரை தேரொடு ஆள்
பூத்து இழி மதமலை மிடைந்த போர்ப்படை
காத்தது கருணனை; கண்டு, மாயமாக்
கூத்தனும், வருக! எனக் கடிது கூவினன்.

பொ :—குதிரையும், தேரும் காலாளும், தோன்றிப் பெருகுகின்ற மதத்தையுடைய மலைபோன்ற யானையும் ஆகியவை நெருங்கிய, போர் செய்தற்குரிய நால்வகைப் படையும் பக்கந்தோறும் சூழ்ந்து கொண்டு கும்பகருணனைக் காத்து நின்றது; பெரிய மாயக் கூத்தனாகிய திருமாலின் அமிசமான இராமனும் அதைக் கண்டு போர்க்கு வருக என்று விரைந்து அழைத்தான்.

கு :—மிடைந்த போர்ப்படை புடைதொறும் கோத்துக் கருணனைக் காத்தது; மாயமாக் கூத்தனும் அப்படையைக் கண்டு வருகெனக் கூவினான் என இயையும். கோத்தது என்பது முற்றெச்சமாய்க் காத்தது என்ற வினைகொண்டு முடிந்தது. மதமலை என்றது யானையை. அடையடுத்த உவமை யாகுபெயர். மதத்தையுடைய மலைபோன்ற யானை என்பது பொருள். மதத்திற்கு அடையாய்ப் 'பூத்து இழி' என்ற தொடர் வந்துளது. பூத்தல் - தோன்றல். இழிதல் - பெருகுதல். கும்பகருணனை என்பதின் முதற்குறையாகக் 'கருணனை' என வழங்கினர். எவராலும் அறிய இயலாத மாய விளையாட்டையுடையவன் திருமால் ஆதலின், 'மாயமாக் கூத்தன்' எனப்பட்டான். இங்குத் திருமாலின் அமிசமாகப் பிறந்துள்ள இராமனுக்கும் அப்பெயரே கொடுக்கப்பட்டது. பிறரை மயங்க வைக்கும் மாயக்கூத்தன் இராமன் ஆதலின், அப்பெரும் படைகண்டு அஞ்சி மயங்காது அப்படையைப் பொருதற்கு வருமாறு கூவுவானானான் என்றவாறு. கூவுதல் - அழைத்தல். கடிது வருகென என மாற்றினும் அமையும். (316)

**7715.** சூழிவெங் கடகரி புரவி தூண்டுமால்
ஆழியந் தேரொடு மிடைந்த வார்கலி
ஏழிரு கோடிவந் தெய்திற் றென்பரால்
ஊழியி னொருவனு மெதிர்சென் றூன்றினான்.

சூழி வெங் கடகரி, புரவி, தூண்டுமால்
ஆழி அம் தேரொடு மிடைந்த ஆர்கலி
ஏழ் இருகோடி வந்து எய்திற்று என்பரால்;
ஊழியின் ஒருவனும், எதிர் சென்று ஊன்றினான்.

பொ :—முகபட்டத்தையும் விரும்பத்தக்க மதத்தையும் உடைய யானையும், குதிரையும், தூண்டிச் செலுத்துதற்குரிய பெரிய சக்கரத்தையுடைய அழகிய தேரோடு நெருங்கிய சேனைக்கடல் பதினான்கு கோடி என்னும் கணக்கினதாய் வந்து அடைந்தது என்று கூறுவர்;

ஊழிக்காலத்து ஒருவனாய் இருந்து பழகிய ஒருவனாகிய இராமனும் அப்படைக்கு எதிரே சென்று எதிர்த்தான்.

கு :—மேற்கூறிய படையின் எண்ணிக்கை இதுவெனக் கூறி அப்படையைத் தனியனாகிய இராமன் எதிர்த்து நின்றதைப் புலப் படுத்தியவாறு. சூழி - முகப்பட்டம். ஆர்கலி என்றது, இங்குச் சேனைக்கடலை. கரி புரவி தேரோடு மிடைந்த ஆர்கலி என்றதனால் இது புலப்படச் செய்தவாறு காணலாம். எண்ணும் ஆற்றலுடை யோர் பதினான்குகோடி வந்து எய்திற்று என்பர் என்றவாறு. ஊழி வெள்ளத்தில் தனியே இருந்து பழகியவனுக்கு இச்சேனைக் கடலில் தனியே நின்று பொருதல் அரிதன்று என்பார், 'ஊழியின் ஒருவனும் எதிர் சென்று ஊன்றினான்' என்றார். ஊன்றுதல் இங்கு எதிர்த்தலை உணர்த்தியது. கரி, புரவி, தேர் கூறவே இனம்பற்றிக் காலாளும் கொள்ளப்படும். (317)

### கும்பகருணன் சூலப்படை யேந்தி வருதல்

**7716.** காலமுங் காலனுங் கணக்கி றீமையு
மூலமூன் றிலையென வகுத்து முற்றிய
ஞாலமு நாகமும் விசும்பு நக்குறும்
சூலமொன் றரக்கனும் வாங்கித் தோன்றினான்.

காலமும், காலனும் கணக்கு இல் தீமையும்,
மூலம் மூன்று இலை என வகுத்து முற்றிய,
ஞாலமும் நாகமும் விசும்பும் நக்குறும்,
சூலம் ஒன்று அரக்கனும் வாங்கித் தோன்றினான்.

பொ :—ஆயுட் காலமும், எமனும், அளவில்லாத தீமையும் என்கின்ற மூலகாரணங்கள் மூன்றையும் மூன்று இலைகளாகச் செய்து முடித்ததும், மண்ணுலகமும் பாதலமாகிய நாகருலகமும் விண்ணுலகமும் ஆகிய மூன்றுலங்களையும் சுவைத்து அழிக்கின்றதுமான (மூவிலைச்) சூலம் ஒன்றினைக் கும்பகருணனும் கையில் கொண்டு தோன்றினான்.

கு :—சூலப்படையில் மூவிலைகள் இருப்பதற்குத் தற்குறிப்பேற்றமாகக் காரணம் கற்பித்து மூல மூன்றிலையென வகுத்து முற்றிய எனவும், மூவுலகும் நக்குறு சூலம் எனவும் கூறியவாறு. கும்ப கருணன் அளவில்லாத தீமை செய்து நல்லோரை நலிந்தானாயினும் எமன் உயிர் கவர்தலும் அவர் தம் ஆயுட்காலம் முடிந்திருத்தலும் வேண்டுமாதலின் அவ்விரண்டையும் சேர்த்துக் கூறினார்.

"காலனும் காலம் பார்க்கும்" (புறநா - 41) என்றது, காண்க. "சாற்று நாளற்ற தெண்ணித் தருமம்பார்த், தேற்றும் விண்ணெனன்ப தன்றி யிவளைப்போல், நாற்றங் கேட்டலுந் தின்ன நயப்பதோர், கூற்றுண்டோ சொலாய் கூற்றுறழ் வேலினய்" (பால-தாடகை-63) என முன் கூறியுள்ளதும் நினையலாம். கும்பகருணனது சூலப்படையிலுள்ள மூன்று முனைகளில் ஒருமுனை காலம், ஒருமுனை காலன், மற்றொருமுனை தீமையாக அமையச் செய்யப் பெற்றது என்க. எதிர்ந்தவர்களைக் கணக்கிலாத் தீச்செயல் செய்து காலனுதவியால் ஆயுளை முடிக்கும் ஆற்றலுடைய சூலம் என்றவாறு. இம்மண்ணுலகை அழிக்க ஒரு முனையும் பாதலத்தை அழிக்க ஒரு முனையும் விண்ணுலகை அழிக்க ஒரு முனையும் ஆய் மும்முனை அமைந்த சூலம் என்க. நக்குதல் என்றது இங்குச் சுவைகண்டு அழித்தலை உணர்த்தியது. (318)

52-ல் பின்வரும் மிகைப்பாடல்கள் காணப்படுகின்றன.

7716 (a) பிடித்தனன் வலக்கையில் சூலம் பெட்பொடு,
முடித்தனன் பூசனை மனத்தின் முன்னியே
விடுத்தனன் பகைவனை வென்று மீள்கெனு
தடுப்பரி தெனத்தளர்ந் தமரர் ஓடினர்.

(b) சூலமங் கதுவரும் துணிவை நோக்கியே
ஞால நாயகனரிக் கடவு ளேந்திய
காலவெங் கனற்படை கடிதி னேவியச்
சூலமற் றிரண்டெனத் துணித்து வீழ்த்தினன்.

(c) அழிந்தது சூலமங் கமரர் யாவரும்
தொழுந்தகை யமலனைப் புகழ்ந்து துள்ளியே
கழிந்ததெம் மனத்துயர் என்றுகண்ணன்மேல்
பொழிந்தன ரவன்பெயர் புகன்று பூமழை.

71-ல் மட்டும் காணப்படும் மிகைப்பாடல்:

(d) வந்தவெஞ் சேனைகள் வளைந்த வெல்லையில்
இந்திரன் முதலின ரேத்த வள்ளலும்
சுந்தர நெடுங்கணை மாரி தூவினன்
சிந்திய தப்பெருஞ் சேனை வெள்ளமே.

## இராமன் அம்பால் அரக்கர் இறந்து கிடத்தல்

**7717.** அரங்கி டந்தன வறுகுறை
★ நடிப்பன வல்லவென் றிமையோரும்
மரங்கி டந்தன மலைக்குவை
கிடந்தன வாமென மாருடிக்
கரங்கி டந்தன காத்திரங்
கிடந்தன கறைபடும் படிகவ்விச்
சிரங்கி டந்தன கண்டனர்
கண்டில ருயிர்கொடு திரிவாரை.

'அரங்கு இடந்தன, அறுகுறை நடிப்பன
அல்ல' என்று இமையோரும்,
'மரம் கிடந்தன, மலைக்குவை
கிடந்தனவாம்' என மாருடி,
கரம் கிடந்தன காத்திரம்
கிடந்தன, கறைபடும்படி கவ்விச்
சிரம் கிடந்தன; கண்டனர்;
கண்டிலர், உயிர்கொடு திரிவாரை.

பொ :—இமையாது பார்க்கும் தேவர்களும்,–தலையற்ற உடல்கள் நடிப்பன அல்ல; போர்க்களமாகிய அரங்கத்தைப் பிளந்து ஒளித்துக் கொள்ளப் பள்ளம் செய்கின்றன என்றும், (அரக்கர் உடம்புகளும் தலைகளும் கிடப்பதைக் கண்டு) மரங்கள் கிடந்தனவாம்; மலைகளின் குவியல்கள் கிடந்தனவாம் என்றும் (தமக்குள் விளையாட்டாக) மாறுபடப் பேசிக்கொண்டு, அரக்கர்களின் கைகள் பொருந்தியுள்ளனவாகிய உடம்புகள் கிடந்தனவற்றையும், இரத்தக்கறை தரையில் படும்படி அந்நிலத்தைக் கவ்விக்கொண்டு தலைகள் கிடந்தனவற்றையும் கண்டனரே அன்றி, (அங்கு) உயிர்கொண்டு திரிபவரைக் கண்டிலராயினர்.

கு :—இமையோரும் - கிடந்தனவாகிய காத்திரங்களையும் சிரங்களையும் கண்டனர்; உயிர் கொடு திரிவாரைக் கண்டிலர் என்க. இதனால் அன்று வந்த அரக்கர்கள் அனைவரும் இறந்துபட்டனர் என்பது புலப்படுத்தியவாறு. தலையற்ற உடம்புகள் - கவந்தங்கள் போர்க்களம் குழிபடுமாறு நடிப்பதைக் கண்ட தேவர்கள் அறுகுறை நடிப்பன அல்ல; அரங்கு இடந்தனவே என்று விளையாட்டாகப் பேசுகின்றனர். அரங்கு என்றது இங்குக் கவந்தம் நடிப்பதற்கு இடமாக உள்ள போர்க்களத்தை. அதை இடத்தலாவது பள்ளமாகப்

பெயர்த்தல். நடிப்பதுபோல நடித்துத் தரையைப் பள்ளமாக்கிக் கொண்டு பதுங்க நினைக்கின்ற வீரர் செயலே இது என்றவாறு. காத்திரம் - உடம்பு. கரங்கிடந்தனவாகிய காத்திரம் என அதற்கு அடையாக்குக. அரக்கர்களின் பெரிய உடம்புகள் கிடந்த தோற்றம் பெரிய மரங்கள் கிடந்தன போலவும் அவர்கள் தலைகளின் குவியல் கிடந்த தோற்றம் மலைக்குவை கிடந்தன போலவும் காணப்படு தலின் மரங்கிடந்தன மலைக்குவை கிடந்தனவாம் என்று தம்முள் விளையாட்டாக மாறுபடப் பேசிக்கொண்டு தேவர்கள், அக்களத்துக் கிடந்தனவாகிய உடம்புகளையும் தலைகளையும் கண்டனரே அன்றி உயிரோடு திரிபவரைக் கண்டிலர் என்க. இமையோரும் கண்டிலர் என்றமையால், இமைத்துப்பார்க்கின்ற ஏனையோர் எங்ஙனம் காண வியலும்? என்ற கருத்துப் புலப்படச் செய்தவாறு. 'ஊழியின் ஒருவனும் எதிர் சென்று ஊன்றினன்' என்றதன்றி, இராமன் அம்பு எய்தமை கூறவில்லையே எனின் அவன் விரைவால் யாரும் காண இயலாது போயமை புலப்படுத்தியவாறு. "தடுத்திமையாமல் இருந் தவர் தாளின் மடுத்ததும் நாணுதி வைத்ததும் நோக்கார்...இற்றது கேட்டார்" (பால-கார்முகப்-34) என்றது இங்கு நினைக. (319)

அரக்கர் படைக்கலம் அழிவுற்றுக் கிடத்தல்

**7718.** இற்ற வல்லவு மீர்ப்புண்ட
வல்லவு மிடையிடை முறிந்தெங்கும்
துற்ற வல்லவுந் துணிபட்ட
வல்லவுஞ் சுடுபொறித் தொகைதூவி
வெற்ற வெம்பொடி யாயின
வல்லவும் வேறொன்று நூறாகி
அற்ற வல்லவுங் கண்டிலர்
படைக்கல மடுகளந் திடராக.

இற்ற அல்லவும், ஈர்ப்புண்ட அல்லவும்,
இடை இடை முறிந்து எங்கும்
துற்ற அல்லவும், துணிபட்ட அல்லவும்,
சுடுபொறித் தொகை தூவி
வெற்ற வெம்பொடி ஆயின அல்லவும்,
வேறு ஒன்று நூறு ஆகி
அற்ற அல்லவும், கண்டிலர்
படைக்கலம்—அடுகளம் திடராக.

பொ :—கொல்லுகின்ற போர்க்களம் மேடு ஆகுமாறு, ஒடிந்தன அல்லாதனவும், இரத்த வெள்ளத்தால் இழுப்புண்டன அல்லாதனவும், இடையிடையே முறிபட்டு எல்லா விடங்களையும் தூர்த்தன அல்லாதனவும், துண்டுபட்டன அல்லாதனவும், சுடுகின்ற நெருப்புப் பொறிகளைத் தூவிய வண்ணம் வெறும் வெவ்விய பொடியாகிப் போயின அல்லாதனவும், ஒன்று வேறுபட்ட நூறு துண்டுகளாகி அற்றுப் போயின அல்லாதனவுமான படைக்கலங்களை (இமையோரும்) கண்டிலர்.

கு :—மேலைச் செய்யுளில் சொல்லப்பட்ட 'இமையோரும்' என்பதே இங்கும் எழுவாயாகக் கூட்டப்பட்டது. அரக்கர்களின் படைக்கலங்களில் சிதையாதிருந்த படைக்கலம் ஏதும் இல்லை என்றவாறு. அரக்கர்களின் படைக்கலம் யாவும் இராமன் அம்பினால், இறுதலும், முறிதலும், துறுதலும், துணிதலும் பொடியாதலும் நூறாகி அறுதலுமே உடையனவாயின ஆதலின் இமையோரும் (உருவு சிதையாத) படைக்கலம் கண்டிலர் ஆயினர் என்க. இவ்வாறு சிதைந்த படைக்கலங்களால் போர்க்களமே திடராக மாறியது என்பார். அடுகளம் திடராக இற்ற அல்லவும்.........அற்ற அல்லவும் கண்டிலர் என்றார். (320)

### யானைகளின் அழிவு

**7719.** படர்ந்த கும்பத்துப் பாய்ந்தன
பகழிகள் பாகரைப் பறிந்தோடிக்
குடைந்து வையகம் புக்குறத்
தேக்கிய குருதியாற் குடர்சோரத்
தொடர்ந்து நோயொடுந் துணைமருப்
பிறந்துதங் காத்திரந் துணியாகிக்
கிடந்த வல்லது நடந்தன
கண்டிலர் கிளர்மத கரியெங்கும்.

படர்ந்த கும்பத்துப் பாய்ந்தன
பகழிகள் பாகரைப் பறிந்து ஓடி,
குடைந்து, வையகம் புக்குறத்
தேக்கிய குருதியால் குடர்சோரத்
தொடர்ந்து, நோயொடும் துணைமருப்பு
இழந்து, தம் காத்திரம் துணி ஆகிக்
கிடந்த அல்லது நடந்தன கண்டிலர்—
கிளர் மதகரி எங்கும்.

பொ :—மதம் விளங்குகின்ற யானைகள் தம் பரவிய மத்தகத்தில் இராமன் அம்புகள் பாயப் பெற்றனவாய்த் தம் பாகரைக் கடந்து ஓடி நிலத்தைக் குடைந்துகொண்டு புகும்படி தேக்கிய இரத்தத்தோடு, குடலும் சோர, மரணநோயோடு தொடரப்பெற்று, இரண்டு கொம்பு களையும் இழந்து தம் உடம்பு துண்டமாக்கப் பெற்றுக் கிடந்தனவே யன்றி நடந்தனவாகிய யானைகளை எங்கும் (இமையோரும்) கண்டிலர்.

கு :—இராமன் அம்புகளால் துண்ட துண்டமாகி இறந்து கிடந்த யானைகளை அன்றி எங்கும் நடந்து செல்லும் யானைகளை இமை யோரும் காண்கிலர். யானைச் சேனை யாவும் இராமன் அம்புகளால் இறந்துபட்டன என்பது கருத்து. மதங்கிளர் கரி கும்பத்துப் பகழிகள் பாயப் பெற்றனவாய்ப் பாகரைப் பறிந்தோடிக் குருதியோடு குடர் சோர நோயொடும் மருப்பு இழந்து காத்திரம் துணியாகிக் கிடந்த வல்லது நடந்தன இமையோரும் கண்டிலர் என இயையும். பாய்ந்தன என்பது செயப்பாட்டு வினைப்பொருளில் வந்தது. வையகம் குடைந்து என மாறுக. குருதியால் என்புழி ஆல் உடனி கழ்ச்சிப் பொருளில் வந்தது. நடந்தனவாகிய கரிகளைக் கண்டிலர் என்க; நடந்தன வினைப்பெயர். இமையோரும் என்பது மேலதே எழுவாயாக வருவிக்கப்பட்டது. (321)

## தேர்களின் அழிவு

**7720.** வீழ்ந்த வாளன விளிவுற்ற
பதாகைய வெயிலுமி ழயிலம்பு
போழ்ந்த பன்னெடும் புரவிய
முறைமுறை யச்சொடும் பொறியற்றுத்
தாழ்ந்த வெண்ணிணந் தயங்குவெங்
குழம்பிடைத் தலைத்தலை மாருடி
ஆழ்ந்த வல்லது பெயர்ந்தன
கண்டில ரதிர்குரன் மணித்தேர்கள்.

வீழ்ந்த ஆளன, விளிவுற்ற பதாகைய,
வெயில் உமிழ் அயில் அம்பு
போழ்ந்த பல்நெடும் புரவிய,
முறை முறை அச்சொடும் பொறிஅற்று,
தாழ்ந்த வெள்நிணம் தயங்கு
வெங்குழம்பிடைத் தலைத்தலை மாறுஆடி,
ஆழ்ந்த அல்லது, பெயர்ந்தன
கண்டிலர்—அதிர்குரல் மணித் தேர்கள்.

பொ :—அதிர்கின்ற குரலையுடைய மணிகள் கட்டிய தேர்கள் - இறந்து வீழ்ந்த தேர்வீரரை யுடையனவும், அழிந்த கொடியை யுடையனவும், ஒளி வீசுகின்ற கூரிய (இராமனது) அம்பால் பிளக்கப் பட்ட பல நெடிய குதிரைகளையுடையனவும், முறை முறையே அச் சாணியோடு மூட்டு வாய்களும் அற்றனவாய், (அம்பினால் பிளவுண்ட உடம்புகளினின்றும்) வெளிவந்த வெண்மையான கொழுப்பு விளங்கு கின்ற வெவ்விய குழம்புக்கு நடுவே இடந்தோறும் இடந்தோறும் மாறுபட்டு ஆழ்ந்து விட்டன வல்லது, இயங்குகின்றனவற்றை (இமையோரும்) கண்டிலர்.

கு :—தேர்கள் - தம்மேலுள்ள வீரர்களை இழந்து கொடிகளை இழந்து, குதிரைகளை இழந்து, அச்சும் பொறியும் இழந்து, நிணக் குழம்பிடையே ஆழ்ந்து கிடந்தனவே அன்றி இயங்கும் நிலையிலுள்ள தேர் ஒன்று தானும் இல்லை என்றவாறு. ஆள் என்றது தேர்மேல் அமர்ந்த வீரனை. பதாகை - பெருங் கொடி. பொறி - மூட்டுவாய்; இணைப்பு. தாழ்தல் இங்குச் சொரிதலை யுணர்த்தியது. நிணக்குழம் பின் மிகுதியினால் தேர்கள் வழுக்குண்டு கீழ்மேலாய் மாருடி ஆழ்ந்து கிடந்தன என்க. (322)

## குதிரைப் படையின் அழிவு

**7721.** ஆட றீர்ந்தன வளைகழுத்
தற்றன வதிர்பெருங் குரனீத்த
தாடு ணிந்தன தறுகண்வெங்
கரிநிரை தாங்கிய பிணத்தோங்கற்
கோட மைந்தவெங் குருதிநீ
ராறுகள் சுழிதொறுங் கொணர்ந்துந்தி
ஓட லன்றிநின் றுகள்வன
கண்டில ருருகெழு பரியெல்லாம்.

ஆடல் தீர்ந்தன, வளைகழுத்து அற்றன,
அதிர் பெருங் குரல் நீத்த,
தாள் துணிந்தன, தறுகண் வெங்கரி
நிரை தாங்கிய பிணத்து ஓங்கல்
கோடு அமைந்த வெங்குருதி நீர்
ஆறுகள் சுழிதொறும் கொணர்ந்து உந்தி,
ஓடல் அன்றி, நின்று உகள்வன
கண்டிலர்—உருகெழு பரி எல்லாம்.

பொ :—அழகுமிக்க குதிரைகள் எல்லாம் - (தாள ஒற்றுக்கு ஏற்ப அடிபெயர்த்திட்டு) ஆடிச் செல்லும் தன்மை தீர்ந்தனவும், வளைந்த கழுத்து அறுபட்டனவும், அதிர்கின்ற பெரிய குரல் அடங்கப் பெற்றனவும், கால் துணியப் பெற்றனவும் ஆகி - அஞ்சாமையுடைய கொடிய யானைகளின் திரளைக்கொண்டு எழுந்த பிணமலைகளாகிய கரை அமைந்த வெப்பமான இரத்த நீராறுகளால் சுழிகள்தோறும் கொணர்ந்து உந்தப்பட்டு ஓடுதல் அன்றி, உயிரோடு நின்று துள்ளித் திரிவனவற்றை (இமையோரும்) கண்டிலர்.

கு :—ஆடல் என்றது, குதிரைகள் தாள ஒற்றுக்கு ஏற்ப அடி வைத்து ஓடும் இயல்பினை; அது, பெண்டிர் சதிமதித்து நடிப்பன போலுதலின் ஆடல் எனப்பட்டது. 'ஆடுவார் புரவி' (பால-நகரப்-148) என முன் கூறியிருத்தலும் நினைக. குருதிநீர் ஆற்றுக்கு அடையாக, தறுகண்வெங் கரிநிரை தாங்கிய பிணத்தோங்கற் கோடு அமைந்த என்பது வந்தது. யானைகளின் பிண மலையே கரையாக அமையக் குருதிநீர் ஆறு ஓடியது என்பதும், அவ்வாற்றால் உந்தித் தள்ளப்பட்டு ஓடுவனவாகிய குதிரைப் பிணங்களையன்றி. உயிரோடு துள்ளியோடும் குதிரைகளைக் காண இயலவில்லை என்பதும் விளக்கிக் குதிரைச் சேனை முழுதும் அழிந்தமை கூறியவாறு. கோடு - கரை. உகளுதல் - துள்ளுதல். (323)

### காலாட் படையின் அழிவு

**7722.** வேத நாயகன் வெங்கணை
வழக்கத்தின் மிகுதியை வெவ்வேறிட்
டோது கின்றதென் னும்பரு
மரக்கர்வெங் களத்துவந் துற்றுரைக்
காதல் விண்ணிடைக் கண்டன
ரல்லது கணவர்த முடனுடும்
மாதர் வெள்ளமே கண்டனர்
கண்டிலர் மலையினும் பெரியாரை.

வேத நாயகன் வெங்கணை வழக்கத்தின்
மிகுதியை வெவ்வேறு இட்டு
ஓதுகின்றது என்? உம்பரும்,
அரக்கர் வெங்களத்து வந்து உற்றுரைக்

காதல் விண்ணிடைக் கண்டனர்;
அல்லது கணவர்தம் உடல் நாடும்
மாதர் வெள்ளமே கண்டனர்;
கண்டிலர் மலையினும் பெரியாரை.

பொ:—வேதநாயகனாகிய இராமனுடைய கொடிய அம்புகளின் தொடுப்பு மிகுதிபற்றி வேறுவேறாகக் கூறுபடுத்திச் சொல்வது எதற்கு? (சுருங்கச் சொல்லின்) தேவர்களும்—வெவ்விய போர்க் களத்து வந்து அடைந்தவராகிய அரக்கரை (யாரும் விரும்புதற்குரிய) விண்ணுலகத்தில் கண்டனரே அன்றி, மலையினும் பெரிதாகிய தோற்றத்தையுடைய அரக்கரைப் போர்க்களத்தில் கண்டிலர்; தத் தம் கணவருடைய உடம்பைத் தேடுகின்ற அரக்க மாதரின் வெள் ளத்தையே கண்டார்கள்.

வேதங்களால் புகழப்படுகின்றவன் திருமால் ஆதலின், அவன் அமிசமாகிய இராமனை 'வேதநாயகன்' என்றார். இராமன் அம்புகளை மிகுதியாகத் தொடுத்தது பற்றிக் கூறின் விரியுமாதலின், அது அதன் விளைவினால் புலனாகும் என்ற கருத்தால் 'கணை வழக்கத்தின் மிகுதியை வெவ்வேறிட்டு ஓதுகின்றதென்' என்றார். உம்பரும் கண் டிலர் என இயையும். வெங்களத்து வந்துற்றாராகிய அரக்கரை என்க. பெரு வீரனாகிய இராமன் அம்பினால் இறந்த வீரஅரக்கர்கள் இறந்தவுடன் தெய்வவுடம்பு பெற்று வீர சுவர்க்கம் பெற்றாராகலின், விண்ணிடைக் கண்டனர் என்றும், மலையினும் பெரிய தோற்றத்தை யுடைய காலாள் வீரராகிய எவரும் உயிரோடு திரியக் கண்டிலர் என்பார், 'மலையினும் பெரியாரைக் கண்டிலர்' என்றும் கூறினர். கணவர் இறந்தது அறிந்த அரக்கப் பெண்டிர், அவர் உடம்பைத் தழுவி உயிர்விடும் எண்ணத்தால் அவர்தம் உடம்பைத் தேடுவா ராயினர். அரக்க வீரரே காணப்பட்ட போர்க்களத்தில் அரக்க மாதரே காணப்பட்டனர்; அரக்கர் யாரும் காணப்படவில்லை என்ற வாறு. மலையினும் பெரிய தோற்றம் இராமனது அம்பின் முன் பயன் படாது அழிந்ததே என்ற இரக்கந்தோன்ற மலையினும் பெரியாரைக் கண்டிலர் என்றார். (324)

52ல் 317–1 ஆகக் கீழ்வரும் மிகைப்பாடல் காணப்படுகின்றது.

7722 (a) இரண்டு பத்தெனும் படைவெள்ளம்
யற்றின்றொடு முடிவு எய்திப்
புரண்டு தத்துறப் பொழிந்தனர்
இருவர்தம் பொருசிலைக் கணைமாரி

இருண்ட தெத்திசை மருங்கினும்
பறவையின் இனம்பல படிமூடி
திரண்ட வச்சிரக் கதைகரத்
தெடுத்தனன் கும்பகன் சினமூள.

## இராமன் கும்பகருணனை நோக்கி இரங்கிக் கூறத் தொடங்குதல்

**7723.** பனிப்பட் டாலெனக் கதிர்வரப்
படுவது பட்டதப் படைபற்றார்
துனிப்பட் டாரெனத் துலங்கின
ரிமையவர் யாவர்க்கும் தோலாதான்
இனிப்பட் டானென வீங்கின
வரக்கரு மேங்கின ரிவனந்தோ
தனிப்பட் டானென வவன்முக
னேக்கியொன் றுரைத்தனன் றனிநாதன்.

பனிப் பட்டால் எனக் கதிர்வரப் படுவது
பட்டது, அப்படை; பற்றார்
துனிப் பட்டார் எனத் துலங்கினர்
இமையவர்; 'யாவர்க்குந் தோலாதான்
இனிப் பட்டான்' என, வீங்கின
அரக்கரும் ஏங்கினர்; 'இவன் அந்தோ,
தனிப் பட்டான்!' என, அவன் முகன்
நோக்கி ஒன்று உரைத்தனன், தனிநாதன்.

பொ :—துடும் என ஞாயிறு தோன்றினவுடனே பனி அழிவது போல, அவ்வரக்கர் படை (இராமனது அம்பினல்) அழிவுற்றது; தம் பகைவராகிய அரக்கர் துன்பமுற்றார் என்று தேவர்கள் மகிழ்ச்சியால் விளக்கம் பெற்றனர்; 'எவர்க்கும் தோலாதவனுகிய கும்பகருணன் இறந்தான்' என்று (கவலையுற்று) உடம்பு பருத்துள்ள அரக்கர்களும் இளைத்தார்கள்; இக் கும்பகருணன் ஐயோ தனிப் பட்டானே! என்று அவனது முகத்தைப் பார்த்து ஒப்பற்ற தலைவனுகிய இராமன் ஒன்று சொல்லலானுன்.

கு :—பட்டால் என்பது விரைவுக் குறிப்புணர்த்தும் சொல்; துடும், திடீர் என்பனபோல. பட்டால் எனக் கதிர்வரப் பனிபடுவது அப்படை பட்டது என்று இயையும். கதிர் - சூரியன். சூரியன்

போன்றது இராமனது அம்பு என்பது குறிப்பால் புலப்படுத்திய வாறு. பற்ருர் - பகைவர். பகைவர் துன்புறக் கண்டவர்கள் மகிழ்தல் இயல்பாதலின், தேவர்கள் தம் பகைவராகிய அரக்கர் துன் புற்ருர் என மகிழ்ச்சியால் விளக்கமுற்றுப் பொலிவாராயினர். துலங்குதல் - விளக்கம் பெறுதல். யாவர்க்கும் தோலாதான் என்றது கும்பகருணனே. பட்டான் என ஏங்கினர் என இயையும். மலை போன்ற தோற்றத்தினர் அரக்கர் ஆதலின், அவர்களை வீங்கின அரக்கர் என்ருர். ஏங்குதல் - இளைத்தல். 'இனிப்பட்டான்' என்புழித் துணிவினுல் எதிர்காலம் இறந்த காலமாகக் கூறப்பட்டது. பட்டான் என அரக்கர் ஏங்கியது காரண முந்துறும் காரிய நிலை யாகும். இராமன் ஒப்பற்ற தலைவனுதலின், இவன் தனிப்பட்டான் அந்தோ என இரங்கி அவன் முகம் நோக்கி உரைக்கலானுன். 'ஆற்றல் போற்றலர்க் குறித்தல் போலாம்' (கிட்கிந்தா - கார் காலம் - 63) என அவனே முன்கூறியுள்ளதும் நினையலாம். பகைவ ருடைய தளர்ச்சியை நினைந்து இரங்கும் ஆற்றலே சிறந்த ஆற்றல் என்றவாறு. (325)

### கும்பகருணனது விருப்பத்தை வினுவுதல் 7724-7725

**7724.** ஏதி யோடெதிர் பெருந்துணை
யிழந்தனை யெதிரொரு தனிநின்ருய்
நீதி யோனுடன் பிறந்தனை
யாகலி னின்னுயிர் நினக்கீவன்
போதி யோபின்றை வருதியோ
வன்றெனிற் போர்புரிந் திப்போதே
சாதி யோஉனக் குறுவது
சொல்லுதி சமைவுறத் தெரிந்தம்மா.

ஏதியோடு எதிர் பெருந்துணை இழந்தனை;
எதிர் ஒருதனி நின்ருய்;
நீதியோனுடன் பிறந்தனை ஆதலின்,
நின் உயிர் நினக்கு ஈவன்;
போதியோ? பின்றை வருதியோ?
அன்று எனின் போர்புரிந்து இப்போதே
சாதியோ? உனக்கு உறுவது
சொல்லுதி, சமைவுறத் தெரிந்து அம்மா!

பொ :—(யான் சொல்வதைக்) கேள் ; நின் வாளோடு, எம்மை எதிர்த்து வந்த பெரிய துணைப்படையையும் இழந்துவிட்டு என் எதிரில் ஒரு தனியே நின்றுளாய்! நீதியையுடைய வீடணனுடன் பிறந்தவன் நீ ஆதலின், நின் உயிரை (வாங்காது) நினக்குக் கொடுக்கின்றேன் ; ஊர்க்குத் திரும்பிப் போகின்றாயா ? போய் நாளை வருகின்றாயா ? இல்லையெனில் போர் செய்து இப்பொழுதே சாகின்றாயா ? நினக்குப் பொருத்தமானதைப் பொருந்த ஆராய்ந்து சொல்வாயாக !

கு :—ஏதி - வாள். கைவாளை இழந்ததோடு வந்த பெரும் படையையும் இழந்தாய் என்பான் 'ஏதியோடு எதிர்பெருந் துணையிழந்தனை' என்றான். நீதியோன் என்றது வீடணனை. 'வீடணனுடன் பிறந்தாய் என்ற காரணத்தால் 'உன்னைக் கொல்லாமல் விடுகின்றேன்' என்றது, இராமன் வீடணன்பால் கொண்ட அன்பினை உணர்த்துதல் காணலாம். 'அம்ம கேட்பிக்கும்' என்ற விதியால் அம்மா என்பதற்குக் கேள் எனப் பொருள் கூறப்பட்டது. அம்ம, நீட்டல்விகாரம் பெற்று அம்மா என ஆயது. சமைவுறத் தெரிதலாவது, பொருந்த ஆராய்தல். ஆயுதமும் படையும் இன்றித் தனியே நிற்பவனோடு வலிமை காட்டுதல் போரறம் அன்று ஆதலின் அவன் விருப்பத்தை அறிந்துகொள்ள முயன்றான் இராமன். கும்பகருணன் இப்போதே சாதற்கு விரும்பினால் அவ்விருப்பம் நிறைவேற்றப்படும் என்றவாறு. (326)

**7725.** இழைத்த தீவினை யிற்றில
தாகலின் யானுனை யிளையோனால்
அழைத்த போதினும் வந்திலை
யந்தக னாணையின் வழிநின்றாய்
பிழைத்த தாலுனக் கருந்திரு
நாளொடு பெருந்துயி னெடுங்காலம்
உழைத்து வீடுவ தாயினை
யென்னுனக் குறுவதொன் றுரையென்றான்.

'இழைத்த தீவினை இற்றிலது ஆகலின்,
யான் உனை இளையோனால்
அழைத்த போதினும் வந்திலை,
அந்தகன் ஆணையின்வழி நின்றாய்;

பிழைத்ததால் உனக்கு அருந்திரு,
நாளொடு; பெருந்துயில் நெடுங்காலம்
உழைத்து வீடுவது ஆயினை; என் உனக்கு
உறுவது ஒன்று? உரை என்றான்.

பொ :—'நீ முன் செய்த தீவினை முடிந்திலது ஆதலின், யான் உன்னை நின் தம்பி வீடணனைக் கொண்டு அழைத்தபோதும் வாராமல், எமனுடைய கட்டளைக்கு உட்பட்டு நின்றுவிட்டாய்; (எமனுலகம் செல்லவே விரும்பி நின்றாய்) ஆதலால், நின் ஆயுள் நாளோடு, பெறுதற்கு அரிய செல்வமும் உனக்கு இல்லாமல் தவறி விட்டது; பெருந்துயிலை நெடுங்காலம் செய்து இறப்பதற்கே உடன் பட்டு நின்றாய், உனக்கு எது பொருந்துவதோ அதைச் சொல்' என்றான்.

கு :—'தீவினை முடிந்து நல்வினை தொடங்கியிருக்குமாயின் என் அழைப்பினை ஏற்று வந்து என்னோடு சேர்ந்திருப்பாய்; ஆயுள் நாளும் நீடித்திருக்கும்; பெறுதற்கரிய இலங்கை அரசாட்சிச் செல்வ மும் உனக்குக் கிடைத்திருக்கும்' என்பான், 'இழைத்த தீவினை இற்றிலதாகலின் யானுனை இளையோனால் அழைத்த போதினும் வந்திலை' என்றான் அரக்கர் குலத்தை வேரறுக்க வந்துள்ள 'யான்' என்றும், பிறர்மனை நயந்த பேதையின் தம்பியாகிய 'உனை' என்றும் வேண்டும் சொல் வருவிக்கப்படும். என் அழைப்பிற்கு வாராததே அந்தகன் ஆணைவழி நின்றதாகும் என்றவாறு. 'நல்லதாகிய என் அழைப்பினும் தீயதாகிய எமனது ஆணை வலிமையுடையதாகலின் அவ்வாணையை மீறி வருதற்கு இயலாதவனானாய்' என்றலும் ஒன்று. என்பால் வந்திருந்தால் கிடைத்திருக்க வேண்டிய ஆயுளையும் பெருஞ் செல்வத்தையும் இழந்தாய் என்பான், 'பிழைத்ததாலுனக் கருந்திரு நாளொடு' என்றான். உழைத்தல் செய்தல் என்னும் பொது வினையை உணர்த்தி நின்றது. நின் வாழ்வில் கண்டபலன் பெருந்துயிலன்றிப் பிறிதில்லை என்பான், 'பெருந்துயில்' நெடுங் காலம் உழைத்து வீடுவதாயினை' என்றான். வீடுதல் - அழிதல். மேற்கூறிய மூன்றில் உனக்குப் பொருந்துவது ஒன்று கூறுக என மீண்டும் வினவியவாறு. (327)

இப்பாடலுக்குப் பின் சில ஏடுகளில் பின்வரும் பாடல் காணப் படுகின்றது.

7725 (a) என்ற போதினி லரக்கனு நோக்கின
னெம்பிரான் நுவல் மாற்றம்
நன்று நன்றெனச் சிரந்துளக்
குற்றுறு நனிசிறு நகை செய்யா

வென்றி தந்துதம் புறங்கொடுத்
தோடிய விண்ணுளோ ரெதிர்போரில்
பொன்று மாறிலைத் தின்றுபோய்
வருவனேல் புகழுடைத் ததுபோலாம்.

## கும்பகருணன் கூறுகின்றான் 7726-7729

**7726.** மற்றெ லாநிற்க வாசியு
மானமு மறத்துறை வழுவாத
கொற்ற நீதியுங் குலமுதற்
றருமமு மென்றிவை குடியாகப்
பெற்ற நுங்களா லெங்களைப்
பிரிந்துதன் பெருஞ்செவி மூக்கோடும்
அற்ற வெங்கைபோ லென்முகங்
காட்டிநின் றாற்றலெ னுயிரம்மா.

'மற்று எலாம் நிற்க; வாசியும்,
மானமும், மறத்துறை வழுவாத
கொற்ற நீதியும், குலமுதல் தருமமும்,
என்று இவை குடியாகப்
பெற்ற நுங்களால், எங்களைப் பிரிந்து,
தன் பெருஞ் செவி மூக்கோடும்
அற்ற எங்கைபோல் என்முகம் காட்டி
நின்று ஆற்றலென் உயிர் அம்மா!

பொ :--நீ கூறியதெல்லாம் இருக்கட்டும்; தகுதியும், மானமும், வீரத்துறையில் வழுவாத வெற்றி நெறியும், அரச குலத்திற்கு அடிப் படையான தருமமும் என்று சொல்லப்படுகின்ற இவை குடியிருக்கும் இடமாகப் பெற்ற உங்களால், எங்களைப் பிரிந்து சென்று தனது மூக்கோடு பெரிய காது அறுபட்ட என் தங்கை சூர்ப்பணகைபோல என் முகத்தையும் (மூக்கறுபட்டதாகக்) காட்டி நின்று உயிரோடு இருக்கப் பொறேன்.

கு :—அம்மா, மற்று - அசைநிலை, மற்றெலாம் நிற்க எங்கை போல் என் முகங் காட்டி நின்று ஆற்றலென் உயிர் என இயையும். வந்து சேர்ந்திருந்தால் பெறும் பயன் முதலியனவற்றை இங்கு 'மற்றெலாம்' என்றான். கழிந்தது பற்றிக் கூறிப் பயனில்லை என் பான் 'நிற்க' என்றான். உயிரோடு திரும்பிப் போதற்குத் தடையா யிருப்பது மூக்கறுபட்ட நிலையே என்பான் 'எங்கை போலென் முகங்

காட்டி நின்ருற்றலென் உயிர்' என்ருன். தன் தனிமை கண்டு இராமன் கூறிய இரக்க உரைகளால் அவன் தகுதி முழுமையும் அளந்தவனுதலின், கும்பகருணன் 'வாசியும் மானமும் மறத்துறை வழுவாத கொற்ற நீதியும் குல முதற்றருமமும் என்றிவை குடியாகப் பெற்ற நுங்களால்' என இராமனைப் புகழ்ந்துரைக்கலானுன். அரக்கர்பால் கண்டறியாத பண்புகளை இராமன்பால் கண்டு புகழ்ந்த வாறு. நுங்களால் அற்ற எங்கைபோல் என்றது, சூர்ப்பணகை இலக்குவனுல் மூக்கு முதலிய உறுப்பு அறுப்புண்ட நிலையை நினைந்து கூறியவாறு. அவள் மூக்கறுப்புண்ட முகங் காட்டியும் வாழ விரும்பினுள்; யான் அவள்போல மூக்கற்ற முகங்காட்டி உயிர் வாழப் பொறேன்' என்று தன் தங்கைக்கும் தனக்குமுள்ள வாசி புலப்படுத்தியவாறு. பகைவரும் புகழத்தக்க நீதியோன் இராமன் என்பது இங்குத் தெளிவுறுத்தியபடி. (328)

**7727.** நோக்கி ழந்தனர் வானவ
  ரெங்களா லவ்வகை நிலைநோக்கித்
தாக்க ணங்கனை யவள்பிறர்
  மனையெனத் தடுத்தனென் தக்கோர்முன்
வாக்கி ழந்ததென் றயர்வுறு
  வேன்செவி தன்னெடு மாற்ருரால்
மூக்கி ழந்தபின் மீளவென்
  ருலது முடியுமோ முடியாதாய்.

'நோக்கு இழந்தனர் வானவர், எங்களால்;
  அவ்வகை நிலை நோக்கி,
தாக்கணங்கு அனையவள், பிறர்மனை'
  எனத் தடுத்தனென் தக்கோர் முன்
வாக்கு இழந்தது என்று அயர்வுறுவேன்
  செவி தன்னெடு மாற்ருரால்
மூக்கு இழந்த பின் மீளல் என்ருல்,
  அது முடியுமோ?—முடியாதாய்!

பொ :—அழிவில்லாதவனே! தேவர்கள் எங்களால் பெருமை இழந்தனர்; அத்தகைய பெருமை மிக்க எமது நிலைமையை நினைந்து, (அந்நிலைமைக்குத் தாழ்வு வராமல்) தீண்டி வருத்தும் தெய்வம் போன்றவளாகிய சீதை பிறர் மனைவி, (ஆதலின், அவளை விரும்ப லாகாது) என்று தடுத்தேன்; (என் சொல்லை என் அண்ணன் கேளா மையால்) 'தக்கவர்களுக்கு முன்பு தலை நிமிர்ந்து பேசும் வாக்குப்

போயிற்று' என்று வருந்திக் கொண்டிருக்கின்ற யான், பகைவரால் காதோடு மூக்கையும் இழக்கப் பெற்றபின், 'ஊர்க்கு மீண்டுபோ' என்று நீ கூறினுல் அது முடியுமோ? (அது செய்ய முடியாது)

கு:—நோக்கு - பெருமை. மக்களினும் பெருமையுடையவராகிய தேவர்களும் தம் பெருமை இழத்தற்குக் காரணமான எங்கள் பெருந் தகைமையை நினைந்து, அப் பெருந்தகைமைக்கு மாருன பிறர்மனை நயத்தல் கூடாது என்று தடுத்தும் இராவணன் கேளாது விரும்பின தால் தக்கவர்க்குமுன் தலைநிமிர்ந்து பேசமுடியால் உருவில்லாத வாக்கு இழந்தமைக்கே வருந்துகின்ற யான் உருவமுடைய மூக் கிழந்தும் உயிர்வாழ விரும்பி ஊர்க்குத் திரும்புவேனே? திரும்ப மாட்டேன் எனக் கும்பகருணன் தன் கருத்தைக் காரணத்துடன் புலப்படுத்தியவாறு. தாக்கணங்கு - தீண்டி வருத்தும் தெய்வம். 'எனைத்துணையராயினு மென்னுந் தினைத்துணையுந் தேரான் பிறனில் புகல்' (குறள் - 144) என்றவாறு எல்லாப் பெருமையும் இழக்கச் செய்வது பிறர்மனை நயத்தல் ஆகலின், கும்பகருணன் இராவ ணனைத் தடுக்கலாயினன் என்றவாறு. தேவர்கட்கும் மேம்பட்ட பெருமை பிறர்மனை நயத்தலால் சிறுமையுறும் என்பதைக் கும்ப கருணன் முன்னரே நன்குணர்ந்திருந்தமை இதனுல் புலப்படுத்திய வாறு. அழகுமிக்க பெண்டிரை விரும்புதல் ஆடவர்க்கு இயல்பா யினும் பிறர்மனைவி ஆயவளை விரும்பல் அறத்திற்கு மாறுபட்டது ஆதலின் 'பிறர்மனை'யெனச் சொல்லித் தடுக்கலானுன் என்க. "வானமும் வையமும் வளர்ந்த வான்புகழ் போனதோ புகுந்ததோ பொன்றுங்காலமே" (79) என முன் கூறியுள்ளதும் நினைக. (329)

**7728.** உங்க டோடலை வாள்கொடு
துணித்துயிர் குடித்தெம்மு னுவந்தெய்த
நங்கை நன்னலங் கொடுக்கிய
வந்தநான் வானவர் நகைசெய்யச்
செங்கை தாங்கிய சிரத்தொடுங்
கண்ணினீர் குருதியி னெடுதேக்கி
வெங்கை போலெடுத் தழைத்துநான்
வீழ்வெனே விராவண னெதிரம்மா.

உங்கள் தோள்தலை வாள்கொடு துணித்து,
உயிர் குடித்து, எம்முன் உவந்து எய்த
நங்கைநல் நலம் கொடுக்கிய வந்தநான்,
வானவர் நகை செய்ய,

செங்கை தாங்கிய சிரத்தொடும்
கண்ணின் நீர் குருதியினெடு தேக்கி,
எங்கை போல் எடுத்து அழைத்து,
நான் வீழ்வெனே, இராவணன் எதிர் அம்மா!

பொ :—உம்முடைய தோள்களையும் தலைகளையும் என் வாளைக் கொண்டு துணித்து உம்முயிரைக் குடித்துவிட்டு எம் அண்ணன் மகிழ்ந்து அடையுமாறு சீதையின் அழகிய நலத்தைக் கொடுக்க வந்த யான், தேவர்கள் சிரிக்குமாறு சிவந்த கைகளைத் தாங்கிய தலையோடும் (தலைமேல் கை வைத்துக்கொண்டு) இரத்தத்தோடு கண்ணீர் தேக்கிக்கொண்டு என் தங்கை சூர்ப்பணகை போலக் கூவிக்கொண்டு இராவணன் எதிரில் வீழ்வேனே?

கு :—ஆண்மை காட்ட வந்த யான் பெண்மை காட்டிப் பெயர்வேனே? என்றவாறு. உயிர் குடித்தல் என்றது, உயிரை உடலில் நின்றும் போக்குதலை. உண்டற்குரியவல்லாப் பொருளை உண்டன போலக் கூறும் மரபுபற்றி 'உயிர்குடித்து' என்ருன். "இராமன் தோள்களை, வெல்லலாம் என்பது சீதை மேனியைப் புல்லலாம் என்பது போலுமாலையா" (81) என முன் கூறிய கும்பகருணன் இங்கு இவ்வாறு கூறியது, போர் வீரர் கூறும் மரபு பற்றிக் கூறியதாகும். சூர்ப்பணகை மூக்கறுப்புண்டு இராவணன் முன் வந்து வீழ்ந்தநிலை நினைந்து 'எங்கைபோ லெடுத்தழைத்து நான் வீழ்வெனே' என்ருன். 'தங்கையும் அவ்வழித் தலையில் தாங்கிய செங்கையள்' (மாரீசன்வதை : 24) என்பதும் 'செங்கை தாங்கிய சிரத்தொடும்' என்று இங்குக் கூறியதும் ஒத்திருத்தல் காணலாம். மூக்கறு பட்டதில் தங்கைக்கும் தனக்கும் ஒற்றுமையிருப்பினும் அண்ணனடியில் அழைத்து வீழ்தலில் ஒற்றுமை காணமுடியாது என்பது தேற்றியவாறு. அவள் பெண்ணுதலின் அது செய்தாள் கும்பகருணன் ஆண்மையன் ஆதலின் அது செய்யான் என்றவாறு. (330)

**7729.** ஒருத்த னீதனி யுலகொரு
மூன்றிற்கு மாயினும் பழியோரும்
கருத்தி னுல்வருஞ் சேவக
னல்லையோ சேவகர் கடனுேராய்

செருத்திண் வாளினுற் றிறத்திற
னுங்களை யமர்த்துறைச் சிரங்கொய்து
பொருத்தி னுலது பொருந்துமோ
தக்கது புகன்றிலை யோவென்ருன்.

'ஒருத்தன், நீ தனி உலகு ஒரு
மூன்றிற்கும் ஆயினும், பழிஓரும்
கருத்தினுல் வரும் சேவகன் அல்லையோ?
சேவகர் கடன் ஓராய்
செருத்திண் வாளினுல் திறத்திறன்
உங்களை அமர்த்துறைச் சிரம் கொய்து
பொருத்தினுல் அது பொருந்துமோ?
தக்கது புகன்றிலையோ?' என்ருன்.

பொ :—நீ மூன்று உலகங்கட்கும் ஒப்பற்ற ஒரு தலைவன் ஆயினும், வீரர் முறைமையை அறிந்திலை; (ஆதலின்,) எது பழி என்று ஆராய்ந்து அறியும் கருத்திஞேடு வரும் வீரன் அல்லையோ? போர் செய்தற்குரிய திண்ணிய வாளினுல் உங்களைப் போர்த் துறையில் வேறுவேருக தலையைக் கொய்துவிட்டுப் பின்பு பொருத் தினுல் அது பொருந்துமோ? (இறப்பதற்கென்றே போர்க்களத்திற்கு வந்து மூக்கறுபட்ட யான் மீண்டும் ஊர்க்குத் திரும்புவேனே) தகுதி யான சொல்லைச் சொல்லவில்லையே' என்ருன்.

கு :—மூவுலகிற்கும் தலைவனுகும் தகுதியிருந்தும் சேவகர் கடனை ஓர்ந்து கூருமையால், பழியோரும் கருத்தினுல் வரும் சேவகனல் லையோ? என்றும், தக்கது புகன்றிலையோ' என்றும் கும்பகருணன் ஐயுற்றுக் கூறியவாறு. சேவகர் - வீரர். சேவகர் கடனுவது, போரில் வெற்றி பெறுவதும், முடியாதபோது பொருது மாய்வதுமே ஆதலின், 'போதியோ?' என்று தன்னைக் கேட்ட இராமனுக்கு சேவகத்தன்மை இல்லையோ என்று கும்பகருணன் ஐயுறுவானுனன். வீரர்க்கு எது பழிபடு செயல் என்பதை அறிந்திருந்தால், கும்பகருணன் மூக்கறு பட்டுத் துணையின்றி நிற்கும் நிலையில் 'போதியோ' என்று இராமன் வினவலன் என்பது கருத்து. கொய்த சிரத்தைப் 'பொருத்தினுல் அது பொருந்தாதவாறு போல, அண்ணனுக்காகப் போர் செய்து இறக்கவேண்டும் என்றே வந்துள்ள யான் மீண்டும் அவன்பால் போகேன் என்றவாறு; இது பிறிது மொழிதல் என்னும் அணியின் பாற்படும். "வென்றிவன் வருவனென் றுரைத்திலேன் விதி, நின்றது பிடர்பிடித்துந்த நின்றது, பொன்றுவன்" (95) என்றும், 'அற்றதான் முகத்தினில் விழித்தல் ஆரிய' (98) என்றும் இராவண

னிடம் கும்பகருணன் கூறியுள்ளதும், வீடணனிடத்தில் "நீர்க்கோல வாழ்வை நச்சி நெடிதுநாள் வளர்த்துப் பின்னைப், போர்க்கோலஞ் செய்து விட்டாற் குயிர்கொடாதங்குப் போகேன்" (155) என்று கூறி யுள்ளதும் இங்கு நினையலாம். (331)

## கும்பகருணன் குன்றை இராமன்மேல் எறிதல்

**7730.** என்று தன்னெடுஞ் சூலத்தை
யிடக்கையின் மாற்றினன் வலக்கையால்
குன்று நின்றது பேர்த்தெடுத்
திருநிலக் குடர்கவர்ந் தெனக்கொண்டான்
சென்று விண்ணொடும் பொறியொடுந்
தீச்செலச் சேவகன் செனிநேரே
வென்று தீர்கென விட்டன
னதுவந்து பட்டது மேலென்ன.

என்று, தன் நெடுஞ் சூலத்தை
இடக்கையின் மாற்றினன்; வலக்கையால்
குன்று நின்றது பேர்த்து எடுத்து, இருநிலக்
குடர் கவர்ந்தெனக் கொண்டான்,
சென்று விண்ணொடு பொறியொடும்
தீச்செல, சேவகன் செனி நேரே,
'வென்று தீர்க' என விட்டனன்;
அது வந்து பட்டது மேல் என்ன.

பொ :—என்று சொல்லிவிட்டுத் தன் நீண்ட சூலத்தை வலக் கையிலிருந்து இடக்கையில் மாற்றிக் கொண்டவனாய், வலக் கையினால் அங்கு நின்றதாகிய ஒரு குன்றினைப் பெரிய நிலமாதின் குடலைக் கவர்ந்தாற்போலப் பேர்த்துக் கையில் கொண்டு, 'தீப் பொறியோடு தீயும் பரவுமாறு விண்வழியே வீரனாகிய இராமனுடைய தலைக்கு நேரே சென்று வென்று தீர்க' என்று கூறிவிட்டான்; அக் குன்று வந்து இராமன்மேல் பட்டது என்னுமாறு நெருங்க,

கு :—அடுத்த செய்யுளில் 'சிந்தினன்' என்ற வினையொடு முடியும். தரையில் ஆழ்ந்துகிடந்த மலையின் வேர்ப் பகுதியையும் விடாது அடியோடு பெயர்த்தெடுத்தமை தோன்ற, 'இருநிலக் குடர் கவர்ந்தெனப் பேர்த்து எடுத்துக் கொண்டனன்' என்றார். 'நிலக் குடர் கவர்ந்தென' என்பது தற்குறிப்பேற்றவணி, 'தீச்செலச்

சேவகன் செனிநேரே சென்று வென்று தீர்க' என்பது கும்ப கருணன் மலைக்கு இட்ட கட்டளை. கொண்டனுய் விட்டனன் என முற்றெச்சமாக்கி முடிக்க. வென்றே தீரவேண்டும் என்ற கருத்தால் 'வென்று தீர்க' என்றுன். வெல்லாமல் விடலாகாது என்றவாறு. (332)

இராமன் அக்குன்றைத் துகளாக்குதல்

**7731.** அனைய குன்றெனு மசனியை
யாவர்க்கு மறிவரு மரன்மேனி
புனையு நன்னெடு நீறென
நூறிய புரவலன் பொரவென்று
நினையு மாத்திரை யொருகைநின்
றொருகையி னிமிர்கின்ற நெடுவேலைத்
தினையின் மாத்திரைத் துணிபட
வரன்முறை சிந்தினன் சரஞ்சிந்தி.

அனைய குன்று எனும் அசனியை,
யாவர்க்கும் அறிவு அரும் அரன்மேனி
புனையும் நல் நெடு நீறு என
நூறிய புரவலன், பொர என்று
நினையும் மாத்திரை ஒருகைநின்று
ஒருகையில் நிமிர்கின்ற நெடுவேலை,
தினையின் மாத்திரைத் துணிபட,
வரன்முறை சிந்தினன், சரம் சிந்தி.

பொ :—அந்தக் குன்று என்கின்ற, இடியை, எத்தகைய ஞானி யர்க்கும் அறிதற்கு அரியவனுகிய சிவபிரான் மேனியில் பூசுகின்ற நல்ல மிகுதியான திருநீறு என்னுமாறு துகளாக்கிய இராமன்,— தன்னைத் தாக்குதற்கென்று கும்பகருணன் நினைக்கின்ற அளவில் அவனது இடக்கையினின்றும் வலக்கையில் மாறி நிமிர்ந்து தோன்று கின்ற சூலத்தைத் தினையின் அளவுள்ள சிறிய துண்டங்களாகுமாறு தன் அம்புகளை வரன்முறையாக எய்து சிந்தச் செய்தான்.

கு :—குன்றின் கொடுமை புலப்படக் 'குன்றெனுமசனியை' என உருவகித்தவாறு. சிவபிரான் யாவர்க்கு மேலாம் அளவிலாச் சீருடையான் ஆதலின், 'யாவர்க்குமறிவருமரன்' என அவனைப் புகழ்ந்தவாறு. பதியாகிய அரன் அல்லாத பிறர் யாவரும் பசுக்

களே ஆதலின் அப்பசுக்கள் தம் ஞானத்தால் அறிதற்கு அரியவன் அரன் என்பது புலப்படுத்தியவாறு. பாச ஞானத்தாலும் பசு ஞானத்தாலும் பார்த்தற்கரியனுய்ச் சிவஞானம் ஒன்ருலேயே பார்த்தற்குரியவன் சிவபிரான் என்ற சித்தாந்த சைவ சாத்திரங் களின் முடிவை இங்குச் சுருங்கச் சொல்லி விளங்கவைத்தவாறு. "மெய்யெலாம் வெண்ணீறு சண்ணித்த மேனியான்" (தேவா-4-5-1) எனச் சொல்லப்படுதலின், 'அரன்மேனி புனையு நன்னெடு நீறென' என்ருர். நீரென நூறிய என்ற எதுகை நயமும் காண்க. நெடுமை இங்கு மிகுதியை யுணர்த்தியது. நூறுதல் - துகளாக்குதல். புரவலன் என்றது இராமனை. அரசன் என்றவாறு; அரசுக்கு உரிமை யுடையவன் ஆதலின் இராமன் இங்குப் புரவலன் எனப்பட்டான். தான் எறிந்த குன்று, துகளானவுடன் சூலத்தால் தாக்குதற்கென்று கும்பகருணன் நினைக்கின்ற அளவில் அவன் இடக்கையிலிருந்த சூலம் வலக்கையில் மாறி நிமிர்ந்து தோன்றுகின்றது; அச்சூலத்தை இராமன் அம்புகள் சிந்திச் சிதறச் செய்கின்ருன் என்க. இராமன் அம்பினுல் அந்தச் சூலம், தினை என்னும் கூலத்தின் அளவு சிறு சிறு துகளாகத் துணிபட்டது என்பார், 'நெடு வேலைத் தினையின் மாத்தி ரைத் துகள்படச் சிந்தினன்' என்ருர். புரவலன் சரம் சிந்தி நெடு வேலைச் சிந்தினன் என இயையும். 'பொர' செயவெனெச்சம். பொர நினையு மாத்திரை என்க; பொர - தாக்குதற்கு. சிந்துதல் - சிதறச் செய்தல். கும்பகருணன் சூலத்தைக் கொண்டு தாக்க நினைந்து அதனை வலக்கையில் வாங்கிய அளவில் இராமன் அம்பு சிந்தி அச்சூலத்தைச் சிந்தினுன் என்றமையால் இராமன் அம்பு எய்யும் விரைவு புலப்படுத்தியவாறு. (333)

## இராமன் அம்பு கும்பகருணனது கவசத்தைக் கடக்க முடியாமை

**7732.** அண்ணல் விற்கொடுங் கால்விசைத்
 துகைத்தன வலைகடல் வறளாக
உண்ண கிற்பன வுருமையுஞ்
 சுடுவன மேருவை யுருவிப்போய்
விண்ண கத்தையுங் கடப்பன
 பிழைப்பில வெய்யவன் மேற்சேர்ந்த
கண்ணு தற்பெருங் கடவுடன்
 கவசத்தைக் கடந்தில கதிர்வாளி.

அண்ணல் வில் கொடுங்கால் விசைத்து
உகைத்தன, அலைகடல் வறளாக
உண்ண கிற்பன, உருமையும் சுடுவன,
மேருவை உருவிப் போய்
விண்ணகத்தையும் கடப்பன, பிழைப்பு இல
வெய்யவன் மேல் சேர்ந்த
கண்ணுதல் பெருங் கடவுள் தன்
கவசத்தைக் கடந்தில கதிர்வாளி.

பொ :—பெருமையுடைய இராமன், வில்லாகிய வளைந்த தண்டில் நின்று விசையுடன் செலுத்தப்பட்டனவாகிய—அலைகளை யுடைய கடல் வறண்டு போமாறு அதன் நீரை உண்ணவல்லனவும், இடியையும் சுடத்தக்கனவும், மேருமலையை ஊடுருவிச் சென்று விண்ணுலகத்தையும் கடக்கவல்லனவும், தவறுதல் இல்லாதனவு மான—ஒளி வாய்ந்த அம்புகள், கும்பகருணனது உடம்பின்மேல் சேர்ந்திருந்ததும் கண்ணைத் தாங்கியுள்ள நெற்றியையுடைய சிவனாகிய பெரிய கடவுள் கொடுத்ததுமாகிய கவசத்தைப் பிளந்து கடக்க முடியாதன ஆயின.

கு :—உகைத்தல் - செலுத்துதல். கடலை வறளச்செய்து இடி யைச் சுட்டெரித்து மேருவைப் பிளந்து விண்ணுலகத்தையும் கடக்க வல்ல பிழையாத இராமன் அம்பு, கும்பகருணன் அணிந்த சிவன ளித்த கவசத்தைக் கடந்து செல்லும் வல்லமை இல்லனவாயின என அக் கவசத்தின் உறுதி புலப்படுத்தியவாறு. பிழைப்பில என்றது, குறிதவருதன என்றவாறு. 'தாடகை தன் னுரமுருவி, மலையுருவி, மரமுருவி மண்ணுருவிற் றுருவாளி' (பால - குலமுறை - 26) என இராமன் அம்பு புகழப்படுதல் இங்கு நினையலாம். வெய்யவன் என்றது கும்பகருணனை. வெய்யவன்மேற் சேர்ந்ததாயினும் கொடுத் தவனாகிய கண்ணுதற்பெருங் கடவுளின் ஆணையால் கவசம் இராம பாணத்தால் கடக்கமுடியாத உரம் பெற்றிருந்தது என்றவாறு. அண்ணல் உகைத்தனவாகிய கதிர்வாளி, கவசத்தைக் கடந்தில என இயையும். கடல் வறளாக உண்ணகிற்பன, உருமையுஞ் சுடுவன, மேருவை யுருவிப்போய் விண்ணகத்தையும் கடப்பன, பிழைப்பில, கதிர்வாளி என வாளிக்கு அடையாக்குக. வில்லாகிய கொடுங்கால் எனப் பண்புத் தொகையாக்குக. வில்லுக்குக் 'கொடு மரம்' என்ற பெயரும் உண்டு; அதனையே இங்குக் கொடுங்கால் என்றார். (334)

## சங்கரன் கவசத்தைச் சங்கரன் படையால் அறுத்தல்

**7733.** தாக்கு கின்றன நுழைகில
தலையது தாமரைத் தடங்கண்ணன்
நோக்கி யிங்கிது சங்கரன்
கவசமென் றுணர்வுற நுனித்துன்னி
ஆக்கி யங்கவ னடுபடை
தொடுத்துவிட் டறுத்தன னதுசிந்தி
வீக்கி ழந்தது வீழ்ந்தது
வரைசுழல் விரிசுடர் வீழ்ந்தென்ன.

தாக்குகின்றன நுழைகில தலை;
அது, தாமரைத் தடங்கண்ணன்
நோக்கி, இங்கு இது சங்கரன் கவசம்'
என்று உணர்வுற நுனித்து உன்னி,
ஆக்கி அங்கு அவன் அடுபடை
தொடுத்துவிட்டு அறுத்தனன்; அது சிந்தி
வீக்கு இழந்தது வீழ்ந்தது,
வரைசுழல் விரிசுடர் வீழ்ந்தென்ன.

பொ :—(தான் விட்ட அம்புகள் கும்பகருணனது கவசத்தைத்) தாக்குகின்றனவாய் முனை நுழைகிலவாயின; அத்தன்மையைத் தாமரை மலர்போன்ற பெரிய கண்ணையுடையவனாகிய இராமன் பார்த்து இங்குள்ள இது, சிவன் கொடுத்த கவசம் என்ற உணர்வு தோன்ற, (அதை எப்படி அழிப்பது என்று) நுண்ணிதாக ஆராய்ந்து, அந்தச் சங்கரனுடைய கொல்லும் தன்மையுள்ள பாசுபதமாகிய அம்பினைப் பூசித்து வில்லில் தொடுத்துவிட்டு அக் கவசத்தை அறுத்தான்; அக் கவசம் சிதறிக் கட்டுக்கோப்பு இழந்ததாய், மலையில் சுழன்று எழுகின்ற விரிந்த சுடரையுடைய சூரியன் வீழ்ந்தாற்போலப் பேரொளியுடன் தரையில் வீழ்ந்தது.

கு :—தலை நுழைகில என்க. தலை என்றது, அம்பின் முனையை. அம்பு தாக்கியும் முனை நுழையாதிருக்கும் நிலையை இராமன் நோக்குகின்றான். இது சங்கரன் கவசம் என்ற உணர்வு தோன்றுகின்றது. அதை அறுக்குமுறையை நுனித்து உன்னுகின்றான். அச் சங்கரன் அம்பினாலன்றி அக் கவசம் அறுபடாது என்பதை உணர்கின்றான். பாசுபதத்தை எடுத்துப் பூசை செய்து தொடுத்து விடுகின்றான். கவசம் சிதைந்து சூரியனைப் போன்ற ஒளியுடன் தரையில் வீழ்கின்றது. ஆக்குதல் என்றது, இங்குப் பூசித்தலை. அங்கு என்பது

அசைநிலை. உதயமலையில் சுழன்றுகொண்டு தோன்றிய சூரியன், அம்மலையை விடுத்துத் தரையில் வீழ்ந்ததுபோல, மலைபோன்ற கும்பகருணனது மார்பிலிருந்து ஒளிமிக்க கவசம் அறுபட்டுத் தரையில் வீழ்ந்தது என உவமையை விரித்துக் கொள்க. தற்குறிப் பேற்ற உவமை. மலைபோன்றவன் கும்பகருணன்; சூரியனைப் போன்றது கவசம். வீக்கு - கட்டு. விரிசுடர் என்றது வினைத் தொகை நிலைக்களனாகத் தோன்றிய அன்மொழித் தொகையாய்ச் சூரியனுக்குப் பெயராயிற்று. அது சிந்தி விரிசுடர் வீழ்ந்தென்ன வீழ்ந்தது என இயையும். இது சங்கரன் கவசம் என நோக்கி யுணர்தற்கு ஏற்புடைமை தோன்ற இராமனைத் 'தாமரைத் தடங் கண்ணன்' என்ற பெயரால் குறித்தவாறு. இனித் தன் கண்ணாகிய தாமரை மலரை அருச்சித்துச் சக்கரப்படையைப் பெற்ற திருமாலின் அமிசமானவன் இராமன் ஆதலின், அந்நிகழ்ச்சியைக் குறிப்பால் தெரிவித்துச் சங்கரன் கவசத்தின் பெருமையை யுணர்தற்குரிமை யுடைமை புலப்படுத்தியவாறாகவும் கொள்ளலாம். (335)

### கவசமிழந்த கும்பகருணன் தண்டு கொண்டு வானரப் படையை அரைத்தல்

**7734.** காந்து வெஞ்சுடர்க் கவசமற்
　　றுகுதலுங் கண்டொறுங் கனல்சிந்தி
யேந்து தன்னெடுந் தோள்புடைத்
　　தார்த்தங்கொ ரெழுமுனை வயிரப்போர்
வாய்ந்த வன்னெடுந் தண்டுகைப்
　　பற்றினன் வானரப் படைமுற்றும்
சாந்து செய்குவ னாமென
　　முறைமுறை யரைத்தனன் றரையோடும்.

காந்து வெஞ்சுடர்க் கவசம் அற்று
　　உகுதலும், கண்தொறும் கனல்சிந்தி,
ஏந்து தன் நெடுந் தோள்புடைத்து ஆர்த்து,
　　அங்கு ஓர் எழுமுனை வயிரப் போர்
வாய்ந்த வல்நெடுந் தண்டு
　　கைப்பற்றினன்; வானரப்படை முற்றும்
சாந்து செய்குவனாம்' என
　　முறைமுறை அரைத்தனன், தரையோடும்.

பொ :—ஒளிவீசுகின்ற வெவ்விய சூரியனைப்போன்ற கவசம் அற்றுச் சிந்துதலும் தன் கண்தோறும் நெருப்புப் பொறிகளைச் சிந்திக்கொண்டு உயர்ந்த தனது நெடிய தோள்தட்டி ஆரவாரித்துக் கொண்டு, அங்கிருந்ததோர் எழுமுனைகளையுடையதும் வயிரத்தா லியன்றதும் போர்க்கு வாய்ப்புள்ளதுமான வலிய நெடிய தண்டா யுதத்தைக் கையில் பற்றினவனாய் 'வானர சேனை முழுவதையும் சேர்த்து அரைத்துச் சாந்து செய்குவன் போலும்' என்னுமாறு முறைமுறையே தரையோடு சேர்த்து அரைக்கலானான்.

கு :—கவசம் அற்றவுடன் தண்டாயுதத்தைக் கையிற்கொண்டு கும்பகருணன் வானர சேனையை அழித்த நிலையைக் காண்பவர்கள், வானர சேனை முழுவதையும் சாந்தாக அரைத்து விடுவான்போலும் என்று எண்ணுவார்கள் என்றவாறு. ஏழு முனைகளையுடைய தண்டு என்க. "இடக்கையா லரக்கனுங்கோர் எழுமுனை வயிரத்தண்டு தடுக்கலாம் தரத்ததல்லா வலியது என (184) முன்னும் இத்தண்டு கூறப்பட்டிருத்தல் நினையலாம். அரைத்தல், தரையில் வைத்துத் தேய்த்தல். (336)

### அம்புகள் பல படவும் அடங்காது கும்பகருணன் சாரிகை திரிதல்

**7735.** பறப்ப வாயிரம் படுவன
வாயிரம் பகட்டெழி லகன்மார்பம்
திறப்ப வாயிரந் திரிவன
வாயிரம் சென்றுபுக் குருவாது
மறைப்ப வாயிரம் வருவன
வாயிரம் வடிக்கணை யென்ருலும்
பிறப்ப வாயிடைத் தெழிப்புறத்
திரிந்தனன் கறங்கெனப் பெருஞ்சாரி.

பறப்ப ஆயிரம், படுவன ஆயிரம்,
பகட்டு எழில் அகல் மார்பம்
திறப்ப ஆயிரம், திரிவன
ஆயிரம், சென்றுபுக்கு உருவாது
மறைப்ப ஆயிரம், வருவன ஆயிரம்,
வடிக்கணை என்ருலும்,
பிறப்ப வாயிடைத் தெழிப்பு உறத் திரிந்தனன்
கறங்கு எனப் பெருஞ்சாரி.

பொ :—இராமன்விட்ட கூரிய அம்புகள் கும்பகருணன்மேல் பறந்து கொண்டிருப்பன ஆயிரம், அவன் உடம்பில் படுவன ஆயிரம், அவனது பெரிய அழகிய அகன்ற மார்பத்தைப் பிளப்பன ஆயிரம், பிளக்க இடமின்றித் திரிபவை ஆயிரம், சென்று அவனுடம்பில் புகுந்து உருவாமல் மறைத்துக் கொண்டிருப்பவை ஆயிரம், புதுவதாக வருவன ஆயிரம், என்றாலும் (இவ்வம்புகளுக்கிடையே அஞ்சாமல்) வாயில் அதட்டுதல் பிறக்கக் காற்றாடிபோலப் பெரிய சாரிகை திரிந்தனன் கும்பகருணன்.

கு :—வடிக்கணை என்பது இறுதிநிலை விளக்காய் எல்லாவற்றோடும் இயையும். பகடு - பெருமை. மார்பம் திறத்தலாவது, பிளத்தல். சென்று தைப்பதற்கு அவனுடம்பில் இடமில்லாமையால் இங்குமங்குந் திரிவனவாயின; என்றது, புதுவதாக விடப்பட்டு வரும் அம்புகளை. இவ்வளவு கூரிய கணைகளுக்கு இடையேயும் கும்பகருணன் அதட்டிக்கொண்டு சாரிகை திரிந்தான் என அவன் திறமை புலப்படுத்தியவாறு. தெழிப்பு - அதட்டுதல். கறங்கு - காற்றாடி.

(337)

கும்பகருணன் தண்டு அற வாளும் கேடகமும் எடுத்தல்

**7736.** தண்டு கைத்தலத் துளதெனி
 னுளதன்று தானையென் றதுசாயக்
கொண்ட லொத்தவன் கொடுங்கணை
 பத்தொரு தொடையினிற் கோத்தெய்தான்;
கண்ட முற்றது மற்றது
 கருங்கழ லரக்கனுங் கனன்றாங்கோர்
மண்ட லச்சுட ராமெனக்
 கேடகம் வாங்கினன் வாளோடும்.

'தண்டு கைத்தலத்து உளது எனின்,
 உளதன்று தானை' என்று, அது சாயக்
கொண்டல் ஒத்தவன், கொடுங்கணை
 பத்து ஒரு தொடையினில் கோத்து எய்தான்;
கண்டம் உற்றது மற்று அது; கருங்கழல்
 அரக்கனும், கனன்று ஆங்கு ஓர்
மண்தலச் சுடராம் எனக்
 கேடகம் வாங்கினன் வாளோடும்.

பொ :—தண்டாயுதம் இவன் கையில் உளது என்ருல், நம வானரசேனை உளதன்று, (அழிவுறும்) என்று கருதி அத்தண்டு அழியுமாறு கொண்டல் வண்ணனுகிய இராமன், கொடுமையான அம்பு பத்தினை ஒரு தொடையில் தொடுத்து எய்தான்; அத்தண்டு துண்டமாயிற்று; வலிய கழலணிந்த கும்பகருணனும் வெகுண்டு, மண்ணின்மேல் வந்த ஒரு சூரியன் என்னுமாறு ஒளிமிக்க கேடகத்தை வாளோடு ஏந்தினன்.

கு :—அது சாய என்புழிச் சுட்டுத் தண்டினை உணர்த்தியது. கொண்டலொத்தவன் என்றது இராமனை. கருமை இங்கு வலிமை உணர்த்தியது. விண்தலச் சுடரை நீக்குதற்கு 'மண்டலச் சுடர்' என்ருர். இது இல்பொருளுவமை. "வானத்தின் மிசையன்றி மண்ணின் வளர் மதிக்கொழுந்தை" (பெரியபு-ஞானசம்பந்தர்-728) என்பது இங்கு ஒப்புநோக்கத்தகும். கேடகத்தின் பேரொளியைப் புலப்படுத்த வேண்டி 'மண்டலச் சுடராமெனக் கேடகம் வாங்கினன்' என்ருர். வாங்கினன் என்பதற்கு ஏவலர் கொடுக்க வாங்கினன் எனலுமாம். (338)

## இராமன் கும்பகருணனது தோளில் அம்பு எய்தல்

**7737.** வாளெ டுத்தலும் வானர
வீரர்கண் மறுகினர் வழிதோறும்
தாளெ டுத்தனர் கழித்தனர்
வானவர் தலையெடுத் திலர்தாழ்ந்தார்
கோளெ டுத்தது மீளவென்
றுரைத்தலுங் கொற்றவன் குன்ருெத்த
தோளெ டுத்தது துணித்தியென்
ருெருசரந் துரந்தனன் சுரர்வாழ்த்த.

வாள் எடுத்தலும், வானர வீரர்கள்
மறுகினர், வழிதோறும்
தாள் எடுத்தனர், கழிந்தனர்; வானவர்
தலை எடுத்திலர், தாழ்ந்தார்;
'கோள் எடுத்தது, மீள' என்று
உரைத்தலும், கொற்றவன், 'குன்றுஒத்த
தோள் எடுத்தது துணித்தி' என்று,
ஒரு சரம் துரந்தனன், சுரர்வாழ்த்த.

பொ :—கும்பகருணன் கையில் வாளை எடுத்தவுடன் வானர வீரர்கள் கலங்கினவராய்(க் கிடைத்த) வழிதோறும் கால் எடுத்து ஓடிச் சென்றனர்; தேவர்கள் துன்பத்தால் தலைதூக்காதவர்களாய்க் குனிந்தனர் ; மீண்டும் உயிர்க் கொள்ளை தொடங்கிற்று என்று (துணைவர்) சொன்ன அளவில் இராமன், 'வாளை எடுத்ததாகிய குன்றை ஒத்த அவன் தோளைத் துணிப்பாயாக' என்று ஓர் அம்பினைத் தேவர்கள் வாழ்த்துமாறு விடுத்தான்.

கு :—மறுகினராய் எடுத்தனராய்க் கழிந்தனர் என முற்றெச்சமாக்கி முடிக்க. மறுகுதல் - மனங்கலங்குதல். தாளெடுத்தனர் என்றது, கால் விசைத்து ஓடினர் என்றவாறு. தேவர்கள் துன்பத்தால் குனிந்த தலை நிமிர்ந்திலர் என்பார், 'தலையெடுத்திலர் தாழ்ந்தார் என்றார். எடுத்தது ஆகிய குன்றொத்த தோள் துணித்தி' என இயையும். கோள் என்றது இங்கு உயிர்க் கொள்ளையை. உரைத்தலும் என்ற வினைக்கு ஏற்புடைய துணைவர் என்ற எழுவாய் வருவிக்கப்பட்டது. துரத்தல் - செலுத்துதல். (339)

### கும்பகருணனது கை அறுதல்

**7738.** அலக்க ணுற்றது தீவினை
நல்வினை யார்த்தெழுந் ததுவேர்த்துக்
கலக்க முற்றன ரிராக்கதர்
காலவெங் கருங்கடற் றிரைபோலும்
வலக்கை யற்றது வாளொடுங்
கோளுடை வானமா மதிபோலும்
இலக்கை யற்றதவ் விலங்கைக்கு
மிராவணன் றனக்குமென் றெழுந்தோடி.

அலக்கணுற்றது தீவினை ; நல்வினை
ஆர்த்து எழுந்தது ; வேர்த்துக்
கலக்க முற்றனர், இராக்கதர்—
'கால வெங்கருங்கடல் திரைபோலும்
வலக்கை அற்றது, வாளொடும் ;
கோளுடை வானமா மதிபோலும்;
இலக்கை அற்றது, அவ் இலங்கைக்கும்
இராவணன் தனக்கும்' என்று எழுந்து ஓடி.

பொ :—ஊழிக்காலத்து உலகெலாம் பரவும் வெவ்விய கரிய கடலின் அலை போன்றதாகிய கும்பகருணனது வலதுகை, இராகு வென்னும் கோளால் பற்றப்பட்ட, விண்ணி லியங்கும் பெரிய சந்திரனைப் போலும்படி வாளோடும் அற்றது; (அது கண்டு) தீவினை துன்புற்றது; நல்வினை ஆராவாரித்தெழுந்தது; இராக்கதர்,—அந்த இலங்கைக்கும் இராவணனுக்கும் பாதுகாப்பு அற்று விட்டதே என்று எழுந்து கலங்கி ஓடி வேர்த்துக் கலக்கம் அடைந்தனர்.

கு :—கும்பகருணனது கையின் பெருமைக்கு ஏற்பக் 'காலவெங் கருங்கடற்றிரை போலும் வலக்கை' என உவமை கூறப்பட்டது. அந்தக் கரிய கை ஒளிமிக்க வாளோடு அற்று வீழ்ந்த தோற்றம், கதிர்மதி இராகுவால் பற்றப்பட்டது போலத் தோன்றிற்று என்றவாறு. வாள் ஒளியுடையதாகலின் அதற்குச் சந்திரனையும், அவ்வாளைப் பற்றிய கும்பகருணனது கை கருநிறத்ததாகலின், அதற்குக் கரும் பாம்பாகிய இராகு என்னும் கோளையும் உவமை கூறினர். வலக்கை மதிபோலும்படி வாளொடும் அற்றது; அது கண்டு தீவினை அலக்கண் உற்றது; நல்வினை ஆர்த்தெழுந்தது; இராக்கதர்—இலங்கைக்கும் இராவணன் தனக்கும் இலக்கை அற்றது என்று ஓடி, வேர்த்து, கலக்கமுற்றனர் எனக் கொண்டு கூட்டி முடிக்க. இலக்கை - பாதுகாவல். கும்பகருணன் வலக்கையே இலங்கையையும் இராவணனையும் இதுகாறும் பாதுகாத்து வந்தது ஆதலின், இராக்கதர் அங்ஙனம் கூறினர். இருவினைக்கும் அதிதெய்வமுண்டு என்பது மரபு ஆகலின், தீவினை அலக்கணுற்றது என்புழி அத்தீவினையின் அதிதெய்வமே அலக்கணுற்றதாகக் கொள்க. நல்வினைக்கும் ஈது ஒக்கும். (340(

கவிக்கூற்று

**7739.** மற்றும் வீரர்க ளுளரெனற்
கெளிதரோ மறத்தொழி லிவன்மாடு
பெற்று நீங்கின ராமெனி
னல்லது பேரெழிற் றேரோடு
மற்று வீழ்ந்தகை யருதவெங்
கையினு லெடுத்தவ ஞர்த்தோடி
எற்ற வீழ்ந்தன வெயிறிளித்
தோடின வானரக் குலமெல்லாம்.

மற்றும் வீரர்கள் உளர் எனற்கு எளிது அரோ,
'மறத்தொழில் இவன் மாடு
பெற்று நீங்கினர் ஆம்' எனின் நல்லது;
பேர் எழில் தோளோடும்
அற்று வீழ்ந்த கை அறாத வெங்கையினால்
எடுத்து அவன் ஆர்த்து ஓடி
எற்ற, வீழ்ந்தன, எயிறு இளித்து
ஓடின, வானரக் குலம் எல்லாம்.

பொ :—அக் கும்பகருணன், அற்று வீழ்ந்த தன் போர் செய்தற்குரிய அழகிய தோளோடு கையை அறாத மற்றொரு கையினால் எடுத்து ஆரவாரித்துக்கொண்டு ஓடித் தாக்கினமையால் வானரக் கூட்டம் எல்லாம் தரையில் வீழ்ந்தனவும் பல்லை இளித்துக்கொண்டு ஓடினவுமாயின; (ஆதலால்) வீரத்தொழிலை இவனிடத்துப் பெற்றுச் சென்றவர்களே வீரர்கள் ஆவர்; எனின் அல்லது, வேறும் வீரர்கள் உளர் என்பதற்கு எளிதோ?

கு :—தன் கை அற்று வீழ்ந்தபோது அதற்குத் துன்புறாமையோடு அற்ற கையை அறாத கையினால் எடுத்துப் பகைவரைக் கொல்லும் வீரம் இவ்வுலகில் இதுகாறும் யார் மாட்டும் இருக்கக் கண்டிலம் ஆதலின், மற்றும் வீரர்கள் உளர் எனின் அவர்கள் இக் கும்பகருணன்பால் மறத்தொழில் பயின்றவர்களாகவே இருப்பர் என்றவாறு. அவன் கைகொண்டு ஏற்றுதலால் அகப்பட்ட வானரங்கள் வீழ்ந்தன; மற்றவை ஓடின என்றவாறு. ஓடுங்கால் அஞ்சி அழுதுகொண்டு சென்றமை புலப்பட 'எயிறிளித்தோடின' என்றார். பல் தோன்றுதல் அழுகையிலுமுண்டு. (341)

7740. வள்ளல் காத்துட னிற்கவும்
வானரத் தானையை மறக்கூற்றம்
கொள்ளை கொண்டிடப் பண்டையின்
மும்மடி குமைக்கின்ற படிநோக்கி
வெள்ள மின்றொடும் வீந்துறு
மென்பதோர் விம்மலுற் றுயிர்வெம்ப
உள்ள கையினு மற்றவெங்
கரத்தையே யஞ்சின வுலகெல்லாம்.

வள்ளல் காத்து உடன் நிற்கவும்,
வானரத் தானையை மறக்கூற்றம்
கொள்ளை கொண்டிட, பண்டையின்
மும்மடி குமைக்கின்ற படிநோக்கி
'வெள்ளம் இன்றொடும் வீந்துறும்'
என்பதோர் விம்மலுற்று உயிர்வெம்ப,
உள்ள கையினும் அற்ற
வெங்கரத்தையே அஞ்சின, உலகு எல்லாம்.

பொ :—வள்ளலாகிய இராமன் (துன்பம் வந்தடையாமல்) காத்துக் கொண்டு உடன் நிற்கவும், வானர சேனையைக் கொடிய எமன் கொள்ளை கொண்டு உண்ணுமாறு, (கும்பகருணன்) முன்னையினும் மும்மடங்கு அதிகமாக அழிக்கின்ற தன்மையைப் பார்த்து, வானர சேனையாகிய வெள்ளம் இன்றொடும் அழிவுறும் என்கின்ற ஒரு துன்பமுற்று உயிர்கள் வெதும்பா நிற்க, அவனுடைய அருதுள்ள கைக்கு அஞ்சுவதைக் காட்டிலும் அற்று வீழ்ந்த கையினுக்கே உலகெல்லாம் அஞ்சலாயின.

கு :—வள்ளல் என்றது இராமனை ; பிறர்க்கென வாழும் பெருமை புலப்பட அப்பெயரால் குறித்தவாறு. கூற்றுடன்று மேல்வரினும் அஞ்சாது எதிர்க்கும் ஆற்றலுடைய இராமன் காத்துடன் நிற்கும் போது உயிர் விம்மலுற்று வெதும்புதல் பொருந்தாது ஆயினும். கும்பகருணன் கை அறுபடாத முன்னைய நிலையினும் கையறுபட்ட பின் மும்மடங்கு அதிகமாகக் கொன்று குமைக்கின்ற தன்மையை நோக்கும்போது உயிர்கள் வெம்ப வேண்டியவாயின என்றவாறு. வலக்கை அருத முன் அக்கையால் இறந்த உயிர்களினும் அது அற்ற பின் அதனுல் இறந்த உயிர்கள் மும்மடங்கு ஆகப் பெருகின ஆதலின், உள்ள கையினும் அற்ற கைக்கு உலகம் அஞ்சுவதாயிற்று; அற்ற கையே கருவியாக நின்று வானரங்களைத் தாக்கி அழிக்கின் றமை நினைந்து இங்ஙனம் அஞ்சினர் என்க. வீந்துறும் ஒரு சொன் னீர்மைத்து; வீயும் என்பதே பொருள். வள்ளல் காத்துடன் நிற் கவும் விம்மலுற்றுயிர் வெம்ப உலகெலாம் அஞ்சின என இயையும். (342)

## கும்பகருணன் இராமன்மேல் ஓடுதல்

**7741.** மாறு வானரப் பெருங்கட
லோடத்தன் ருேணின்று வார்சோரி
யாறு விண்டொடும் பிணஞ்சுமந்
தோடமே லமரரு மிரிந்தோடக்

கூறு கூறுபட் டிலங்கையும்
விலங்கலும் பறவையுங் குலைந்தோட
வேறு சேவகன் மேலெழுந்
தோடினன் மழைக்குல மிரிந்தோட.

மாறுவானரப் பெருங்கடல் ஓட,
தன் தோள்நின்று வார்சோரி
ஆறு விண்தொடும் பிணம் சுமந்து
ஓட, மேல் அமரரும் இரிந்துஓட,
கூறு கூறுபட்டு இலங்கையும்
விலங்கலும் பறவையும் குலைந்து ஓட,
ஏறு சேவகன்மேல் எழுந்து ஓடினன்,
மழைக்குலம் இரிந்து ஓட.

பொ :—தனக்கு மாறுபட்ட வானர சேனையாகிய பெரிய கடல் அஞ்சி ஓடுமாறு தன் (வெட்டுண்ட) தோளிலிருந்து ஒழுகுகின்ற குருதியாறு, விண்ணைத் தொடுமாறு உயர்ந்த பிணமலைகளைச் சுமந்து ஓடா நிற்கவும், மேலுள்ள தேவர்களும் அஞ்சி ஓடவும், இலங்கையிலுள்ளாரும் அங்குள்ள மலையிலுள்ளாரும் பறவைகளும், நிலைகுலைந்து பலவகையாகப் பிரிந்து ஓடா நிற்கவும், மேகக் கூட்டங்கள் அஞ்சி ஓடவும், கும்பகருணன் சிங்கவேறு போன்ற வீரனாகிய இராமன்மேல் சினந்து எழுந்து ஓடினான்.

கு :—வானரப் பெருங் கடலோடுமாறு சோரியாறு ஓடியது என மருட்கைச் சுவைபடக் கூறியவாறு. பெரிய கடல் அஞ்சி ஓடுமாறு சிறிய ஆறு ஓடுதல் வியப்பிற்குரியதாதல் காணலாம். கும்பகருணன் சினந்தெழுந்து இராமன்மேல் போர் தொடுக்க ஓடும்போது அறுபட்ட அவன் தோளிலிருந்து பெருகிய குருதியாறு அங்குள்ள பிண மலைகளைக் கொண்டு விரைந்து ஓடுதலைக் கண்ட வானர சேனையாகிய கடல் அஞ்சி ஓடியது என்க. இராமன்மேல் செல்லும் கும்பகருணனைக் கண்ட தேவர்கள் தமக்கு என்ன நேருமோ என்று அஞ்சி ஓடலாயினர் என்றவாறு. இலங்கை, விலங்கல் என்பன இடவாகுபெயராய் அங்கு வாழ்வோரை உணர்த்தியதாகக் கொள்க. இலங்கை நகரத்திலும் திரிகூட மலையிலும் உள்ளவர்களும், பறவைகளும் கும்பகருணன் சினந்து செல்வது கண்டு அஞ்சி நிலை குலைந்து பலவகையாகப் பிரிந்து ஓடலாயினர், என்றவாறு. மழைக்குலம் - மேகக் கூட்டம். மேகக் கூட்டமும் கும்பகருணனது சினங்கண்டு அஞ்சி ஓடியது என்க. ஏறு சேவகன் - சிங்க ஏறுபோன்ற வீரனாகிய இராமன். தேவர்களும் மேகமும் பறவைகளுங்கூடக் கும்பகருணன் சினவேகங் கண்டு அஞ்சினமை புலப்படுத்தியவாறு. (343)

## கும்பகருணனது மற்ருெரு கையையும் இராமன் அம்பினுல் துணித்துக் கடலிலிடுதல்

**7742.** ஈற்றுக் கையையு மிக்கணத்
தரிதியென் றிமையவர் தொழுதேத்தத்
தோற்றுக் கையகன் ருெழிந்தவ
ஞளவை தொலேயவுந் தோன்ருத
கூற்றுக் கையமு மச்சமுங்
கெடநெடுங் கொற்றவன் கொலேயம்பால்
வேற்றுக் கையையும் வேலேயி
லிட்டனன் வேறுமோ ரணேமான.

'ஈற்றுக் கையையும் இக்கணத்து அரிதி'
என்று இமையவர் தொழுது ஏத்த,
தோற்றுக் கையகன்று ஒழிந்தவன்
நாள் அவை தொலேயவும், தோன்ருத
கூற்றுக்கு ஐயமும் அச்சமும் கெட,
நெடுங்கொற்றவன் கொலே அம்பால்,
வேற்றுக் கையையும் வேலேயில்
இட்டனன், வேறும்ஓர் அணேமான.

பொ :—"இடது கையையும் இந்தக் கணத்தில் அரிவாயாக" என்று தேவர்கள் தொழுது துதித்து வேண்டாநிற்க.—தனக்குத் தோற்று வலது கை வெட்டுண்டு நீங்கப் பெற்றவனுகிய கும்ப கருணனது ஆயுள்நாள் முடியவும், வந்து தோன்ருத எமனுக்கு ஐயமும் அச்சமும் கெடுமாறு, பெரிய வெற்றி வீரனுகிய இராமன், தனது கொலே செய்யும் அம்பினுல் அவனது மற்ருெரு கையையும் அரிந்து, வேறுமோர் அணே போலும்படிக் கடலில் இட்டான்,

கு :—இரு கைகளில் வலக்கை முன்னரே அறுபட்டமையின் இடக் கை ஈற்றுக்கை எனப்பட்டது. கடைசி கை என்றவாறு. இமையவர் ஏத்தக் கொற்றவன் அம்பால் வேற்றுக் கையையும் வேலேயில் இட்டனன் என இயையும். சாற்று நாளற்றவுடன் வந்து உயிர் கவர்தற்குரிய எமன், கும்பகருணனது ஆயுள் நாள் தொலே யவும், அவனது வலக்கை அற்ருெழியவுங்கூட என் செய்வானே? என்ற ஐயமும் அச்சமும் அகலாதவனுய் மறைந்தே இருக்கின்ருன் ஆகலின், 'நாளவை தொலேயவுந் தோன்ருத கூற்றுக்கு' என்ருர். கூற்றுவனுடைய ஐயத்திற்கும் அச்சத்திற்கும் காரணம் மற்ருெருகை இருத்தலே ஆதலின், 'கூற்றுக் கையமும் அச்சமும் கெட வேற்றுக்

கையையும் வேலையில் இட்டனன்' என்றார். கும்பகருணனது கையின் நீட்சியும் பெருமையும் புலப்பட வேறுமோ ரணைமான வேலையில் இட்டனன் என்றார். வானரங்கள் மலைகளைக்கொண்டு கட்டி முடித்த சேது என்னும் அணை முன்னமே கடலில் திகழ்தலின் 'வேறு மோரணைமான' என்றார். கும்பகருணனது கை கடலில் அணைபோல நீண்டு கிடந்தது என்றவாறு. (344)

கடலில் கிடந்த கையின் தோற்றம் 342, 343

**7743.** சந்தி ரப்பெருந் தூணொடு
சார்த்திய ததினொன்றுந் தவருகா
தந்த ரத்தவ ரலைகட
லமிழ்தெழக் கடைவுறு மந்நாளில்
சுந்த ரத்தடந் தோள்வளை
மாசுணஞ் சுற்றிய தொழில்காட்ட
மந்த ரத்தையுங் கடுத்தது
மற்றவன் மணியணி வயிரத்தோள்.

சந்திரப் பெருந்தூணொடு சார்த்தியது,
அதில்ஒன்றும் தவறு ஆகாது,
அந்தரத்தவர் அலைகடல் அமிழ்து
எழக் கடைவுறும் அந்நாளில்,
சுந்தரத் தடந்தோள்வளை மாசுணம்
சுற்றிய தொழில் காட்ட,
மந்தரத்தையும் கடுத்தது, - மற்றவன்
மணியணி வயிரத் தோள்.

பொ :—அழகிய பெரிய தோளில் அணிந்த வளை, (வாசுகி என்னும்) பாம்பு சுற்றியிருந்த தன்மையைக் காட்டாநிற்க, அக் கும்பகருணனது மணிகள் பதித்த அணிகளை அணிந்த உறுதியான தோள்.—அந்தக் கடை தொழிலில் ஒன்றும் தவறு உண்டாகாமல் தேவர்கள் அலைகளையுடைய பாற்கடலில் அமிழ்தம் எழுமாறு கடைந்த அந்த நாளில் சந்திரனாகிய பெரிய தூணொடு சார்த்திய தாகிய மந்தர மலையாகிய மத்தினையும் ஒத்தது.

கு :—தோள்வளை மாசுணம் சுற்றிய தொழில் காட்ட, வயிரத் தோள்,—அதின் ஒன்றும் தவருகாது அந்தரத்தவர் அலைகடல் அமிழ் தெழக் கடைவுறும் அந்நாளில் சந்திரப் பெருந் தூணொடு சார்த்

தியது ஆகிய மந்தரத்தையும் கடுத்தது என இயையும். சந்திரப் பெருந் தூணெடு சார்த்தியது என்பது மந்தரத்திற்கு இயற்கை அடை. கருங்கடல் பாற்கடல் போன்றது; அக் கடலில் வீழ்ந்துள்ள தோள் மந்தரமலை போன்றது; தோள்வளை வாசுகி ஆகிய தாம்பு போன்றது என உவமையை விரித்துக் கொள்க. கடலில் வீழ்ந் துள்ள (கும்பகருணனது) தோளுக்கு மந்தரமலையை உவமையாக்க வந்தவர், அம் மந்தரமலையைப் பாம்பு சுற்றியிருந்தது போல இவன் தோளையும் தோள்வளை சுற்றியிருப்பது நினைந்து 'சுந்தரத்தடந் தோள்வளை மாசுணஞ் சுற்றிய தொழில் காட்ட' என்ருர். (345)

**7744.** சிவண வண்ணவான் கருங்கடற்
கொடுவந்த செயலினுஞ் செறிதாரைச்
சுவண வண்ணவெஞ் சிறையுடைக்
கடுவிசை முடுகிய தொழிலானும்
அவண வண்ணல தேவலி
னியற்றிய வமைவினு மயில்வாளி
உவண வண்ணலை யொத்தது
மந்தர மொத்ததவ் வுயர்பொற்றேள்.

சிவண வண்ணவான் கருங்கடல்
கொடுவந்த செயலினும், செறிதாரைச்
சுவண வண்ண வெஞ்சிறையுடைக்
கடுவிசை முடுகிய தொழிலானும்,
அவண அண்ணலது ஏவலின்
இயற்றிய அமைவினும் அயில்வாளி
உவண அண்ணலை ஒத்தது; மந்தரம்
ஒத்தது, அவ்வுயர் பொன்தோள்.

பொ—(தனக்குத்தானே) ஒப்பாகும்படி அழகிய சிறந்த கரிய கடலின் கரை (கையைக்) கொண்டு வந்த செயலினுலும், நெருங்கிய ஒழுங்குடைய பொன்நிறமுள்ள கொடிய சிறகுகளையுடையதாய் மிக்க வேகத்துடன் விரைந்து சென்ற தொழிலினுலும், அவ்விடத்துள்ள இராமனது ஏவலின்படி (ஏவுதலால்) அதைச் செய்த அமைதியாலும், கூரிய அம்பு, கருடனுகிய அண்ணலை ஒத்தது; அந்த உயர்ந்த அழகிய தோள் மந்தர மலையை ஒத்தது.

கு:—கருடனுக்கும் இராமன் அம்பிற்கும் மூன்று வகையால் ஒப்புமை உண்டு என்று ஏதுக்காட்டி உவமித்தவாறு. கருடன்

மந்தர மலையைக் கடையு மத்தாகக் கடலில் கொண்டு வந்து சேர்த்தது போல இராமனது அம்பும் கும்பகருணனது தோளைக் கடலில் கொணர்ந்து சேர்த்தது. கருடன் பொன்னிறச் சிறகுடைய வனாய் விசையுடன் முடுகி வந்ததுபோல அம்பும் சிறகுகளையுடைய தாய் விசையுடன் முடுகி வந்தது. கருடன் திருமாலின் ஏவலின்படி செய்தது போல இவ்வம்பும் இராமனது ஏவலின்படி இயற்றியது என உவமையை விரித்துக் கொள்க. 'ஏவலின் இயற்றிய அமை வினும் என்புழி ஏவல் எய்தல்' என்ற பொருளுக்கும் ஏற்புடையதாய் அமைந்திருத்தல் காணலாம். திருமால் திருப்பாற்கடல் கடையக் கருடனை அனுப்பி மந்தரமலையைக் கொணரச் செய்தான் என்ற வரலாறு உண்டு என்பது இச் செய்யுளால் புலனாகின்றது. அம்பு களுக்கும் இறகு கட்டுதல் உண்டு. தாரை - ஒழுங்கு. உவணம் - கருடன். (346)

## கைகளை இழந்த கும்பகருணன் ஆரவாரித்துக்கொண்டு காலால் வானர சேனையைக் கலக்குதல்

**7745.** பழக்க நாள்வரு மேருவை
யுள்ளுறத் தொளைத்தொரு பணையாக்கி
வழக்கி னாுல களந்தவ
னமைத்ததோர் வான்குணில் வலத்தேந்தி
முழக்கி னாலென முழங்குபே
ரார்ப்பினன் வானர முந்நீரை
உழக்கி னான்றசை தோலெலும்
பெனுமிவை குருதியொ டொன்றாக.

பழக்க நாள்வரு மேருவை
உள்ளுறத் தொளைத்து, ஒருபணையாக்கி,
வழக்கினால் உலகுஅளந்தவன் அமைத்தது
ஓர் வான்குணில் வலத்து ஏந்தி,
முழக்கினால் என முழங்குபேர்
ஆர்ப்பினன், வானர முந்நீரை
உழக்கினான், தசை தோல் எலும்பு
எனும் இவை குருதியொடு ஒன்றாக.

பொ :—முன்னாளில் தோன்றிய மேருமலையை உள்ளே பொருத்த மாகக் குடைந்து ஒரு முரசம் ஆக்கி, முறைமையினால் மூவுலகையும் அளந்தவனாகிய திருவிக்கிரமன் ஏற்புறச் செய்த சிறந்த குறுந்தடியை

வலக்கையில் ஏந்திக்கொண்டு அடித்து முழக்கினுற்போல, முழங்கு கின்ற பேராரவார முடையவனுகிய கும்பகருணன் வானர சேனை யாகிய கடலைத் தசையும் தோலும் எலும்பும் ஆகிய இவை இரத்தத் தோடு ஒன்ருகுமாறு (கால்களால்) கலக்கினுன்.

கு :—பழைய நாளில் தோன்றிய மேரு என்பார், 'பழக்க நாள் வரு மேரு' என்ருர். 'மேருமலை பூமி தோன்றிய காலத்தில் உடன் தோன்ருது பின்னெரு காலத்துத் தோன்றியது என்பது நிலநூல் வல்லார் கருத்துமாகும். மேரு என்றது இமயமலையை. முரசம் உள் குடைவுடையதாக இருத்தல் முறை ஆதலின், பணையாக்குதற்கு உள்ளுறத் தொளைத்தல் கூறப்பட்டது. பணை - முரசு. கும்பகருண னுடைய பேராரவாரத்திற்கு உவமையாக்க உலகப் பொருள்கள் ஏதும் இன்மையால், இல்பொருளைக் கற்பனை செய்து உவமித்தவாறு; இது விகார உவமை. மேருமலையாகிய முரசத்தை முழக்குதற்கு மூவுலகளந்தவனே தக்கவனுகலின், அவன் குணிலைவலத்தே ஏந்தி முழக்கினுற்போலக் கும்பகருணன் ஆரவாரித்தான் என்றவாறு. அப் பெருமுரசின் ஒலியும் கும்பகருணன் ஆர்ப்பும் ஒக்கும் என்றபடி. "கலஞ்செய் கோவே! கலஞ்செய் கோவே !!.........கொடி நுடங்கு யானை நெடுமா வளவன், தேவருலக மெய்தினனுதலின், அன்னேற் கவிக்குங் கண்ணகன்ருழி, வனைதல் வேட்டனையாயி னெனையதூஉம், இருநிலந் திகிரியாப் பெருமலை, மண்ணு வனைதலொல்லுமோ நினக்கே" (புறநா - 228) என்ற ஐயூர் முடவனுர் பாடலை இப் பாடல் நினைப்பிக்கின்றது. நெடுமா வளவன் உடம்பை வைப்பதற் குரிய தாழி மிகப் பெரிதாக இருக்க வேண்டும் என்பார், பெரிய பூமியே மட்கலத்திகிரியாக, மேருமலையே மண்ணுகக்கொண்டு தாழி வனைதல் இயலுமோ? எனக் கலஞ்செய்வானைப் புலவர் வினவுதல் காணலாம். வானர முந்நீர் என்றது உருவகம். உழக்குதல் - கலக் குதல். உழக்குதற்குக் கருவி கால் எனக் கொள்க. குரங்குகளின் தசையும் தோலும் என்பும் குருதியோடு சேர்ந்து ஒரு குழம்பாகுமாறு கலக்கினுன் என்க.

(347)

இராமன் கும்பகருணனுடைய வலக்காலைத் தடிதல்

**7746.** நிலத்த கால்கனல் புனலென
விவைமுற்று நிருதன துருவாகிக்
கொலத்த காததோர் வடிவுகொண்
டாலென வுயிர்களைக் குடிப்பானைச்

சலத்த காலனைத் தறுகணர்க்
கரசனைத் தருக்கினிற் பெரியானை
வலத்த காலையும் வடித்தவெங்
கணையினூற் றடிந்தனன் றனுவல்லான்.

நிலத்தகால், கனல், புனல், என
இவை முற்றும் நிருதனது உருவுஆகி,
கொலத் தகாதது ஓர் வடிவு
கொண்டாலென உயிர்களைக் குடிப்பானை,
சலத்த காலனை, தறுகணர்க்கு
அரசனை, தருக்கினின் பெரியானை,
வலத்த காலையும், வடித்த வெங்
கணையினூல் தடிந்தனன் – தனுவல்லான்.

பொ :—நிலத்தின் கண்ணதாகிய காற்றும் நெருப்பும் நீரும் எனப்படும் இவை முழுதும் அரக்கனுடைய உருவமாய்க் கொல்ல இயலாததோர் வடிவு கொண்டாற்போலத் தோன்றி, உயிர்களை யெல்லாம் குடிக்கின்ற கும்பகருணனை—கோபத்தையுடைய எமன் போன்றவனை—அஞ்சாமை யுடையவர்க்குத் தலைவனை—செருக்கில் பெரியவனை—வலப்பக்கத்துக் காலையும்—வில்லில் வல்லவனாகிய இராமன், கூரிய கொடிய அம்பினால் அறுத்தான்.

கு :—'நிலத்த' என்பது, கண்ணென் வேற்றுமை நிலப்பொருட் கண் வந்த அகரவீற்றுக் குறிப்புப் பெயரெச்சம். 'சலத்த' என்பது அதுச் சொல் வேற்றுமை யுடைமைப் பொருட்கண் வந்த அகர வீற்றுக் குறிப்புப் பெயரெச்சம். நிலத்தின் கண்ணதாகிய காற்று என்றும்; சலத்தையுடைய காலனை என்றும் விரிக்க வேண்டும். சலம் - கோபம். கும்பகருணன் கைகளை இழந்த நிலையில் விடும் பெருமூச்சும், கண்வழி பிறக்கும் கோபக் கனற் பொறியும், அறுபட்ட இடத்தில் பெருகும் இரத்தநீரும் காணின், கும்பகருணன் காற்று வடிவினன் எனவும், கனல் வடிவினன் எனவும், புனல் வடிவினன் எனவும் சொல்லத் தோன்றும் என்பார், 'கால் கனல் புனல் என இவை முற்றும் நிருதனது உருவாகிக் கொலத்தகாததோர் வடிவு கொண்டாலென' என்றார். காற்றும் கனலும் புனலுமாகக் காட்சி தருகின்ற வடிவு கொல்லுதற்கேற்றதன்று ஆதலின், கொலத்தகாத தோர் வடிவு என்றார். பெருமூச்சு விட்டுக்கொண்டு கண்ணில் தீப் பொறி பறக்கக் குருதிசோரும் உடம்போடு குரங்குகளையெல்லாம் கொல்லுகின்ற கும்பகருணனின் வலது காலையும் இராமன் அறுத் தான் என்றவாறு. குடிப்பானை, காலனை, அரசனை, தருக்கினிற்

பெரியானை என்பன ஒருபொருட் பல பெயர். உயிர்களையெல்லாம் கொல்லும் கோபமுடைமையால் காலன் போன்றவன் ஆதலின் காலனை என்றும் கைகளை இழந்தும் அஞ்சாது நின்று போர் செய் கின்றமையால் தறுகணார்க்கு அரசன் என்றும், தன்னைக் காட்டிலும் மிக்க வீரர் இலர் என்ற செருக்குடையவன் ஆதலின் 'தருக்கினிற் பெரியான்' என்றும் கும்பகருணனைச் சிறப்பித்தவாறு. இராமன் தனுவல்லானாதலின் அவனது வலது காலைக் கணையினால் தடிந்தான்; ஏனையோர்க்கு அரிது; என்ற குறிப்பும் புலப்படத் 'தடிந்தனன் தனுவல்லான்' என்றார். வடித்தல் - கூர்மையாக்குதல். (348)

வலக்காலற்றும் கும்பகருணன் குந்திவந்து பொர வருதல்

**7747.** பந்தி பந்தியின் பற்குல
மீன்குலம் பாடுபாடுறப் பாகத்
திந்து வெள்ளெயி றிமைத்திடக்
குருதியா றொழுக்கல்கொண் டெழுசெக்கர்
அந்தி வந்தென வகனெடு
வாய்விரித் தடியொன்று கடிதோட்டிக்
குந்தி வந்தன னெடுநிலங்
குழிபடக் குரைகடல் கோத்தேற.

பந்தி பந்தியின் பற்குலம்
மீன்குலம் பாடுபாடுஉற, பாகத்து
இந்து வெள்எயிறு இமைத்திட,
குருதியாறு ஒழுக்கல் கொண்டு எழுசெக்கர்
அந்தி வந்தென, அகல் நெடு
வாய்விரித்து, அடிஒன்று கடிது ஓட்டி,
குந்தி வந்தனன், நெடுநிலம்
குழிபட, குரைகடல் கோத்து ஏற.

பொ :—வரிசை வரிசையாகத் தோன்றும் பற்களின் கூட்டம் விண்மீன் கூட்டம்போலப் பலவகையாகப் பக்கத்தில் பொருந்தி விளங்கவும், பிறைச்சந்திரன் போன்ற வெண்மையான கோரப் பல் ஒளி வீசவும், ஒழுகுதல்கொண்டு எழுகின்ற இரத்த வெள்ளமாகிய செவ்வானத்தையுடைய அந்திப்போது வந்தாற்போல, அகலமான நீண்ட வாயை விரித்துக்கொண்டு, ஒரு காலை விரைவாகச் செலுத்தி, நெடிய பூமி குழிபடும்படியும் அக் குழியில் ஒளிக்கின்ற கடல் நீர் பரவி ஏறும்படியும் குந்தி நடந்துகொண்டு போர் செய்ய வந்தான்.

கு :—கும்பகருணன் அறுபடாத ஒரு காலில் குந்தி நடந்து, வாய் திறந்து ஆர்த்து வந்த காட்சி, அந்திப்போது வந்ததுபோலத் தோன்றிற்று என்றவாறு. மாலை அந்தியில் விண்மீன்களும், பிறைச் சந்திரனும், செவ்வானமும் காணப்படுதல் போலக் கும்பகருணன் பற்களாகிய வீண்மீன்களும், கோரப் பல்லாகிய பிறைச் சந்திரனும், குருதிப் பெருக்காகிய செவ்வானமும் காணப்படுதலின், அந்தி வந்தென வாய் விரித்துக் குந்தி வந்தனன் என்றார். பந்தி - வரிசை. பாகத்து இந்து என்றது பிறைச் சந்திரனை. குருதியாறாகிய செக்கர், என்க. ஒழுக்கல் கொண்டெழு குருதியாறு ஆகிய செக்கர் என்க. ஓரடி கொண்டு குதித்து நடக்கின்றபோது கும்பகருணனது உடற் பாரத்தைத் தாங்கலாற்றாது நிலம் குழி ஆயிற்று எனவும் அக் குழியில் கடல் வந்து பரவி ஏறியது எனவும் கொள்க. இச் செய்யுள் சிறப்புருவகவணி. (349)

### மற்றொரு காலையும் துணித்தல்

**7748.** மாறு காலின்றி வானுற
நிமிர்ந்துமா டுளவெல்லாம் வளைத்தேந்திச்
சூறை மாருத மாமெனச்
சுழித்துமேற் றொடர்கின்ற தொழிலானை
யேறு சேவக னெரிமுகப்
பகழியா லிருநிலம் பொறைநீங்க
வேறு காலையுந் துணித்தன
னறத்தொடு வேதங்கள் கூத்தாட.

மாறுகால் இன்றி வானுற நிமிர்ந்து,
மாடுஉள எலாம் வளைத்து ஏந்தி,
சூறை மாருதம் ஆம் எனச் சுழித்து,
மேல் தொடர்கின்ற தொழிலானை,
ஏறு சேவகன் எரிமுகப் பகழியால்,
இருநிலம் பொறை நீங்க,
வேறு காலையும் துணித்தனன்,
அறத்தொடு வேதங்கள் கூத்தாட.

பொ :—மாற்றி ஊன்றுதற்குரிய கால் இல்லாமல் ஒரு காலில் விண் அளாவ நிமிர்ந்து நின்று தன் பக்கத்தில் உள்ள எல்லாவற்றையும் (தன் வாயினால்) வளைத்து அவற்றை ஏந்திக்கொண்டு சுழல் காற்றைப் போலச் சுழன்று மேலும் கொல்லுதற்குத் தொடர்ந்து

செல்கின்ற தொழிலையுடைய கும்பகருணனை, பகைவரைக் கண்டு ஏறுகின்ற வீரத்தையுடைய இராமன், நெருப்பை முகத்திலே கொண்ட அம்பினால், பெரிய நிலத்திற்குப் பாரம் நீங்குமாறும், தரும தேவதையோடு வேதங்களும் மகிழ்ச்சியால் கூத்தாடா நிற்கவும், மற்றொரு காலையும் துண்டித்தான்.

கு :—வளைத்து ஏந்தி என்ற வினைக்கு ஏற்பக் கருவியாக வாய் வருவிக்கப்பட்டது. சூறை மாருதம் - சுழல் காற்று. ஏறு சேவகன் என்றது, பகைவரைக் கண்டு வளர்கின்ற வீரமுடைய இராமனை. பகைவரும் பாராட்டுமாறு ஏற்றம் பெறும் வீரமுடையவன் எனலும் ஆம். சேவகன் பகழியால் வேறு காலையும் துணித்தனன் என இயையும். நிலம் பொறை நீங்க, அறத்தொடு வேதங்கள் கூத் தாட, வேறு காலையும் துணித்தனன் என்க. கும்பகருணன் தன் பாவச் செயலால் பூமிக்குப் பெரும் பாரமாக இருந்தமையால் நிலம் பொறை நீங்கத் துணித்தனன் என்றார். அறத்திற்கும் வேதங்கட்கும் அதிதேவதைகள் இருத்தலின் அவையே மகிழ்ச்சியால் கூத்தாடிய தாகக் கொள்க. அருவமாகிய அறமும் வேதமும் கூத்தாட இயலாமை நினைக. தருமத்திற்கும் வேத நெறிக்கும் பகைவனாகிய கும்பகருணன் அழிகின்றான் என்பது நோக்கி மகிழ்ச்சியால் அறமும் மறையும் மகிழ்ந்து கூத்தாடின என்றவாறு. நெருப்பைக் கக்கிக் கொண்டு செல்லும் பகழி ‘எரிமுகப்பகழி’ எனப்பட்டது. (350)

**7749.** கையி ரண்டொடுங் கால்களுந்
துணிந்தன கருவரை பொருவுந்தன்
மெய்யி ரண்டுநூ றுயிரம்
பகழியால் வெரிநுறத் தொளைபோய
செய்ய கண்பொழி தீச்சிகை
யிருமடி சிறந்தது தெழிப்போடு
பெய்யும் வானிடை யிடியினும்
பெருத்தது வளர்ந்தது பெருஞ்சீற்றம்.

கை இரண்டொடு கால்களும்
துணிந்தன; கருவரை பொருவும் தன்
மெய் இரண்டு நூறுயிரம் பகழியால்
வெரிந் உறத் தொளை போய,

செய்ய கண்பொழி தீச்சிகை
இருமடி சிறந்தது; தெழிப்போடு
பெய்யும் வானிடை இடியினும்
பெருத்தது; வளர்ந்தது, பெருஞ்சீற்றம்.

பொ :—கும்பகருணனுடைய கைகள் இரண்டுடனே இரண்டு கால்களும் துணிவுற்றன; கரிய மலையை ஒக்கின்ற அவன் உடம்பு இரு நூருயிரம் அம்புகளால் முதுகின் வழியே வெளிப்படத் தொளை உண்டாயது; (அதனுல்) சிவந்த அவன் கண்கள் பொழிகின்ற தீக்கொழுந்து இருமடங்கு பெருகியது; மழை பெய்கின்ற மேகத்துத் தோன்றும் இடியினும் பெருத்ததாகிய அதட்டுதல் ஒலியோடு அவனது பெருங்கோபம் வளர்ச்சி பெற்றது.

கு :—கைகளும் கால்களும் அற்றவுடன் கும்பகருணன் சீற்றம் மேலும் பெருகியது ஆதலின் அவன் கண்கள் பொழிகின்ற தீக்கொழுந்து இருமடியாயது என்ருர். இடியினும் பெருத்ததாகிய தெழிப்போடு பெருஞ்சீற்றம் வளர்ந்தது என இயையும். அவன் தெழிப்பொலி இடி ஒலியினும் பெருத்திருந்தது என்பது கருத்து. தெழித்தல் - அதட்டுதல். (351)

## கும்பகருணன் வாயினுல் கடித்தெடுத்த மலைகளை வீசி வானரங்களை அழித்தல்

**7750.** பாதங் கைகளோ டிழந்தவன்
படியிடை யிருந்துவன் பகுவாயால்
காத நீளிய மலைகளைக்
கடித்திறுத் தெடுத்துவெங் கனல்பொங்கி
மீது மீதுதன் னகத்தெழு
காற்றினுல் விசைகொடு திசைசெல்ல
ஊத ஊதப்பட் டுலந்தன
வானர முருமின்வீ ழுயிரென்ன.

பாதம் கைகளோடு இழந்தவன்,
படியிடை இருந்து, தன்பகுவாயால்
காதம் நீளிய மலைகளைக் கடித்து
இறுத்து எடுத்து, வெங்கனல் பொங்கி,

மீது மீதுதன் அகத்து எழுகாற்றினுல்
விசைகொடு திசை செல்ல
ஊத ஊதப்பட்டு, உலந்தன வானரம்
உருமின் வீழ் உயிர் என்ன.

பொ :—கைகளோடு கால்களே இழந்தவனுகிய கும்பகருணன் கொடிய கோபக்கனல் மிக்கு, நிலமிசை இருந்துகொண்டு தன் வலிய பிளவுபட்ட வாயினுல் காத தூரம் வரை நீண்டுள்ள மலேகளேக் கடித்து ஒடித்து எடுத்து, மேலும் மேலும் தன் உள்ளிருந்து எழுகின்ற காற்றினுல் விசைகொண்டு திசையிறுதி வரை செல்லுமாறு ஊத ஊத, அம்மலேகள் பட்டு வானரங்கள், இடியினுல் அழிந்து வீழ்கின்ற உயிர்களேப்போல அழிந்தன.

கு :—இழந்தவன், வெங்கனல் பொங்கிப் படியிடையிருந்து, வாயால் மலேகளேக் கடித்தெடுத்துத்தன் அகத் தெழுகாற்றினுல் ஊத ஊத, அம்மலேகள் பட்டு வானரம் உருமின் வீழ் உயிர் என்ன உலந்தன என இயையும், அகத்தெழு காற்று என்றது உந்தியினின்று மேலெழுகின்ற உள்வளியை. அகத்தெழு காற்றினுல் ஊதுந்தோறும் அம்மலேகள்பட்டு வானரங்கள் அழிந்தன என்றவாறு- உருமினுல் அழிந்து வீழ்கின்ற உயிர்கள்போல அம்மலேகள் பட்டு வானரங்கள் அழிந்தன என்பது உவமையணி. உலத்தல் – அழிதல். உருமு - இடி. இன் ஏதுப்பொருளது. (352)

### கும்பகருணன் காலினுல் குன்றினே எடுத்து வீச இராமன் கைவிதிர்த்தல்

7751. தீயி னுற்செய்த கண்ணுடை
யானெடுஞ் சிகையினுற் றிசைதீய
வேயி னுற்றிணி வெற்பொன்று
நாவினுல் விசும்புற வளேத்தேந்திப்
பேயி னுர்ப்புடைப் பெருங்கள
மிரிந்தெழப் பிலந்திறந் ததுபோலும்
வாயி னுற்செல வீசினன்
வள்ளலு மலர்க்கரம் விதிர்ப்புற்ருன்.

தீயினுல் செய்த கண்ணுடையான்,
நெடும் சிகையினுல் திசை தீய
வேயினுல் திணி வெற்பு ஒன்று
நாவினுல் விசும்புற வளேத்து ஏந்தி,

பேயின் ஆர்ப்புடைப் பெருங்களம்
இரிந்து எழ, பிலம்திரிந்தது போலும்
வாயினுல் செல, வீசினன்;
வள்ளலும் மலர்க்கரம் விதிர்ப்புற்ருன்.

பொ :—தீயினுல் செய்தாற்போன்ற கண்களையுடைய கும்ப கருணன் (தன்னிடத்திலிருந்து எழுகின்ற) நீண்ட சுவாலையால் நாலு திசையும் தீயுமாறு மூங்கில்களால் நெருங்கப்பெற்ற மலை ஒன்றை நாவினுல் வளைத்து, விண்ணளாவ ஏந்தி, பிணம் தின்னும் பேயின் ஆரவாரத்தையுடைய பெரிய போர்க்களத்துள்ளோர் எழுந்து ஓடுமாறு, பிலம் திறந்தாற்போன்ற பெரிய வாயினுல் செல் லும்படி வீசினுன்; வள்ளலாகிய இராமனும் வியப்பினுல் தன் மலர் போன்ற கைகளை அசைத்தான்.

கு :—தீப்பொறிகளின் மிகுதி தோன்றத் 'தீயினுற் செய்த கண்' என்ருர். நாவினுல் வளைத்து விசும்புற ஏந்தி என மாறுக. 'இரிந்து எழ' என்ருரேனும் எழுந்து இரிய என்று மாற்றுக. பெருங்களம் என்பது இடவாகு பெயராய்க் களத்துள்ளோரை உணர்த்தியது. கும்பகருணன் வீசிய மலை தம்மேல் படாதவாறு எழுந்து ஓடினர் களத்திருந்தோர் என்க. கும்பகருணனது வாயினகலம் புலப்படப் 'பிலம் திறந்தது போலும் வாய்' என்ருர். பிலம் என்றது பாதலத் திற்குச் செல்லும் வழியை; குகை எனலும் ஆம். கும்பகருணன் வலிமை கண்டு பெருவீரனுகிய இராமனும் வியந்து கைகளை அசைத் தான் என்றவாறு. (353)

52-ல் 346-1 ஆகக் கீழ்வரும் பாடல் காட்டப்பட்டுளது,

7751 (உ) இனைய திண்புற லரக்கனுக்
கவ்வழி யிதயத்தில் பெருஞான
நினைவெ ழுந்ததிங் கிவன்பெருங்
கடவுள் மற்றிவன்பத நிழல்காண
வினையறுந்தது வேறினிப் பிறப்பிலை
யென்றுதன் மனவேகம்
தனைமறந்தனன் மறந்தவன் தன்மையை
நினைந்தனன் கருத்தோடும்.

## கும்பகருணன் இராமனாற்றலைப் புகழ்ந்து இராவணனது அழிவுக்கு அழுங்கல்

**7752.** ஐயன் விற்றொழிற் காயிர
மிராவண ரமைவில ரந்தோயான்
கையுங் கால்களு மிழந்தனன்
வேறினி யுதவலாந் துணைகாணேன்
மைய னோய்கொடு முடிந்தவா
தானென்றும் வரம்பின்றி வாழ்வானுக்
குய்யு மாறரி தென்றுந்தன்
னுள்ளத்தி லுணர்ந்தொரு துயருற்றான்.

'ஐயன் வில்தொழிற்கு ஆயிரம்
இராவணர் அமைவிலர்; அந்தோ! யான்
கையும் கால்களும் இழந்தனன்; வேறு
இனி உதவல் ஆம் துணை காணேன்;
மையல் நோய்கொடு முடிந்தவா தான்!'
என்றும், வரம்பு இன்றி வாழ்வானுக்கு
உய்யுமாறு அரிது என்றும் தன்
உள்ளத்தின் உணர்ந்து ஒரு துயர்உற்றான்.

பொ:—இராமனுடைய வில்லின் ஆற்றலுக்கு ஆயிரம் இராவணர் இருந்தாலும் அமைவிலர் ஆவர்; ஐயோ! யான் கையும் காலும் இழந்துவிட்டேன்; இனி அவ்விராவணனுக்கு உதவுதற்குரிய வேறு துணையைக் காணேன்; காம நோய் கொண்டு அவன் முடிந்த வாறு தான் என்னே! என்றும், 'காலவரம்பு இன்றி வாழவேண்டிய வனான இராவணனுக்கு இனி உய்யும் நெறி அரிது' என்றும், தன் உள்ளத்தில் உணர்ந்து ஒரு துன்பத்தை அடைந்தான்.

கு:—ஐயன் என்றது இராமனை. தலைவன் என்ற பொருளுடைய அச்சொல்லை இராமனது ஆற்றல் அறிந்து அவனுக்குப் பெயராக்கினான். ஆயிரம் இராவணர் எதிர்ந்தாலும் இராமனுடைய வில்வீரத்திற்குப் போதாது என்பான். 'ஆயிரம் இராவணர் அமைவிலர்' என்றான். இராவணனுக்குத் துணையாயிருந்த தான் கையும் காலும் இழந்தமையால் இனி அவனுக்குத் துணையாவார் இலர் என்பான், 'வேறினி யுதவலாந் துணை காணேன்' என்றான். காலவரம் பின்றி வாழத்தக்க இராவணனுக்கு இனி உய்யும் வழியில்லை என்றும், மையல் நோய் கொண்டு அவன் முடிந்தவாறுதான் என்னே என்றும் கும்பகருணன் தன் அண்ணனது கேடு நினைந்து

துயருற்ருன் என்க. இதுவரை இத்தகைய துயரை உருதவன், கும்பகருணன் ஆகலின், 'ஒரு துயர் உற்ருன்' என்ருர். இனி 'ஒப்பற்ற பெருந்துயர் உற்ருன்' எனப் பொருள் கூறலுமாம். இராவணன், பிறர்மனை நயந்த மையல் நோய் உடையவனுதலின் முடிப் பார் பிறரின்றியே முடியத்தக்கவனுயினன் என்பான் 'மையனேய் கொடு முடிந்தவா தான்' என்று அவன் வினையாகக் கூறினுன். தெளிவு பற்றி 'முடிந்தவா' என எதிர்காலம் இறந்தகாலமாகக் கூறப்பட்டது; காலவழுவமைதி. மூன்றரைக்கோடி ஆண்டு ஆயுள் உடையவன் இராவணன் ஆதலின், அவனை 'வரம்பின்றி வாழ்வான் என்ருன். (354)

## கும்பகருணன் இராமனது முகநோக்கிச் சொல்லுதல் 7753–7758

**7753.** சிந்துரச்செம் பசுங்குருதி
★ திசைகடொறுந் திரையாரு
எந்திரத்தேர் கரிபரியா
ளீர்த்தோடப் பார்த்திருந்த
கந்தரப்பொற் கிரியாண்மைக்
களிறனையான் கண்ணின்ற
சுந்தரப்பொற் ருேளானை
முகநோக்கி யிவைசொன்னுன்.

சிந்துரச் செம் பசுங்குருதி
திசைகள் தொறும் திரை ஆரு,
எந்திரத்தேர் கரி, பரி, ஆள்,
ஈர்த்து ஓடப் பார்த்திருந்த
கந்தரப் பொன் – கிரி ஆண்மைக்
களிறு அனையான், கண் நின்ற
சுந்தரப் பொன் – தோளானை
முகம் நோக்கி, இவை சொன்னுன்.

பொ:—சிந்துரப் பொடி போன்ற சிவந்த புதிய இரத்தம் திசைகள் தோறும் அலைகளையுடைய ஆருகிப் பெருகி, எந்திரத்தை யுடைய தேர்களையும், யானைகளையும், குதிரைகளையும், காலாட் படையையும் இழுத்துக் கொண்டு ஓடாநிற்க, அதைப் பார்த்துக்கொண்டிருந்த, தலையமைந்த அழகிய மலையையும் ஆண்மையுடைய களிற்றியானையையும் ஒத்தவனுகிய, கும்பகருணன், தன் கண்முன் நின்ற

அழகிய பொன்போன்ற தோளையுடைய இராமனை முகம் பார்த்து இவற்றைச் சொன்னான்.

கு:—பசுங்குருதி என்புழிப் பசுமை புதுமையை யுணர்த்தியது. குருதி, ஆறு, ஈர்த்தோடப் பார்த்திருந்த களிறனையான் சொன்னான் என இயையும். ஆற்றின் பெருமை புலப்படத் 'திரையாறு' என்றார். அலைகள் வீசும் பேராறாக என்றவாறு. எந்திரத்தேர் என்றமையால் பூணியின்றியும் பொறியினியங்கும் மாண்வினைத் தேரும் அக்காலத் திருந்தமை புலப்படுத்தியவாறு. கந்தரப் பொற்றிகிரி என்றது தலையையுடைய அழகிய மலை என்றவாறு இல்பொருளுவமை. கந்தரம் - தலை. கும்பகருணனது வடிவத்தைக் கண்டார், தலை அமைந்த மலையே எனக் கருதுவர் என்றபடி. வடிவத்தால் மலையையும் ஆண்மையால் களிற்றையும் போன்றவன் என்க. கண் என்பது முன் என்ற பொருளில் வந்தது. இவை என்றது, வருஞ் செய்யுட்களில் கூறப்படும் கருத்துக்களை. (355)

**7754.** புக்கடைந்த புறவொன்றின்
 பொருட்டாகத் துலைபுக்க
மைக்கடங்கார் மதயானை
 வாள்வேந்தன் வழிவந்தீர்
இக்கடன்க ளுடையீர்நீ
 ரெம்வினைதீர்த் தும்முடைய
கைக்கடைந்தா னுயிர்காக்கக்
 கடவீரென் கடைக்கூட்டால்.

'புக்கு அடைந்த புறவு
 ஒன்றின் பொருட்டாகத் துலைபுக்க
மைக்கடங்கார் மதயானை வாள்
 வேந்தன் வழி வந்தீர்!
இக்கடன்கள் உடையீர் நீர்
 எம் வினைதீர்த்து, உம்முடைய
கைக்கு அடைந்தான் உயிர்
 காக்கக் கடவீர், என்கடைக் கூட்டால்.

பொ:—தன் அரண்மனையில் புகுந்து தன்னை அடைந்த ஒரு சிறிய புறவின் பொருட்டுத் தராசு தட்டில் புகுந்து தன்னையே தந்த கரிய மதநீரை மேகம் போல் பொழியும் மதயானைப் படையையும் வாளையும் உடைய, சிபி என்ற வேந்தன் வழியிலே பிறந்தவர்களே!

(தன்னை அடைக்கலமாகப் புக்கோரைக் காக்கும்) இந்தக் கடமைகளைச் செய்தற்குரியீராகிய நீர், அரக்கராகிய எம் தீவினைகளை நீக்கி விட்டு உம்முடைய கையில் வந்தடைந்தவனாகிய வீடணன் உயிரைக் காக்கக் கடவீராக ! (இது) என் கடைசி விருப்பமாகும்.

கு :—தன்னை அடைக்கலமாக அடைந்த ஒரு பறவையின் பொருட்டுத் தன்னையே கொடுத்த சிபியின் மரபில் தோன்றிய நீங்கள், அவன் செய்தாற் போன்ற அறச் செயலைச் செய்தற்குரியவராகின்றீர், என்று அவர் மரபு பற்றிய பெருமையை நினைவுறுத்திக் கும்பகருணன் தன் விருப்பத்தைத் தெரிவிக்கின்றான் என்க. "தன்னகம்புக்க குறுநடைப் புறவின் தபுதியஞ்சிச் சீரைபுக்க, வரையா வீகை யுரவோன்" (புறநானூறு 3) எனச் சிபியின் பெருமை பேசப் படுதல் காணலாம்; தன்னை அடைந்த ஒரு சிறிய பறவைக்காகத் தன்னையே கொடுத்த சிபியின் வழிவந்தவராகிய நீர் நும்மைச் சரணடைந்த வீடணனுயிரைக் காத்தற்குச் சொல்ல வேண்டுமோ என்றவாறு. வீடணன் அடைக்கலம் புக்கபோதே இராமன், "பிறந்தநாட் டொடங்கி யாரும் துலைபுக்க பெரியோன் பெற்றி மறந்தநா ளுண்டோ" (வீடணனடைக் - 110) எனச் சிபியின் வரலாற்றை நினைப்பித்தமை ஈங்கு நினையலாம். 'எம்வினை தீர்த்து' என்றது, அரக்கராகிய எமக்குரிய தீவினையை நீக்கி என்றவாறு. 'கள்ள நீர் வாழ்க்கை யேமைக் கைவிட்டுக் காலும்விட்டான்' (169) என முன் இவனே கூறியிருத்தலும், 'பிறப்பு மாறினை' (8) என இராவணன் கூறியிருத்தலும் நினையலாம். 'உங்கையிற் பிள்ளையாய் உமக்கே யடைக்கலமாய் அடைந்தவன் வீடணன்' என்பான், 'உம் முடைய கைக்கடைந்தான்' என்றான். என்கடைக் கூட்டு என்றது, என் கடைசி விருப்பம் என்றவாறு. கூட்டு என்பது பற்று; விருப்பம் என்ற பொருளில் வந்தது. எம்வினை தீர்த்து அடைந்தான் என்றதால் உங்களால் கொல்லத் தக்கவன் அல்லன் என்பதும் உம்முடைய கைக்கடைந்தான் என்றதால் பிறராலும் கொல்லத் தக்கவன் அல்லன் என்பதும் குறிப்பிட்டவாறு. (356)

**7755.** நீதியால் வந்ததொரு
நெடுந்தரும நெறியல்லால்
சாதியால் வந்தசிறு
நெறியறியா னென்றம்பி

யாதியா யுனையடைந்தா
னரசருருக் கொண்டமைந்த
வேதியா வின்னுமுனக்
கடைக்கலம்யான் வேண்டினேன்.

'நீதியால் வந்ததொரு
நெடுந்தரும நெறி அல்லால்,
சாதியால் வந்தசிறு
நெறி அறியான், என் தம்பி;
ஆதியாய்! உனை அடைந்தான்;
அரசர் உருக் கொண்டு அமைந்த
வேதியா! இன்னும் உனக்கு
அடைக்கலம் யான் வேண்டினேன்.

பொ:—முதற் கடவுளே! அரசர் உருவம் கொண்டு அமைந்த வேதநெறி யொழுகும் அந்தணனே! முறைமையால் தொன்று தொட்டு வந்ததாகிய ஒப்பற்ற பெரிய தரும வழி ஒழுகுவதல்லாமல், அரக்கர் சாதியில் பிறந்தமையினுல் வருதற்குரிய சிறுமையுள்ள பாவ நெறியை அறியாதவனுகிய என் தம்பி வீடணன், உன்னைச் சரணுக அடைந்தான்; இன்னும் அவன் உனக்கு அடைக்கல மாவன் என்று யானும் அவன் பொருட்டு வேண்டினேன், (காப்பாற்றுக).

கு:—இராமன் உருவத்தால் அரசனுய் ஒழுக்கத்தால் வேதியனுக இருக்கின்றுன் என்பான், 'அரசருருக் கொண்டமைந்த வேதியா' என விளித்தான். வீடணனும் இராமன் போலவே பிறப்பும் ஒழுக்க மும் வேறுபட விளங்குகின்றவன் என்பான், 'நெடுந்தரும நெறி யல்லால் சாதியால் வந்த சிறு நெறியறியான் என் தம்பி' என்றுன். அனுமனும், "நிந்தனை நறவமும் நெறியி லூன்களும், தந்தன கண்டிலேன் தரும தானமும், வந்தனை நீதியும் பிறவும் மாண் பமைந்து, அந்தண ரில்லெனப் பொலிந்ததாமரோ" (வீடண னடைக்-100) என்று கூறியுள்ளது இங்கு நினைவுகூரின் இக்கும்ப கருணன் கூற்றுக்கு அது விளக்கமாக அமைதல் காணலாம். 'என் தம்பி' என்ற கும்பகருணன் சொல் அவன் அன்புரிமையைத் தெளி வாக்குகின்றது. 'ஆதியாய்' என்ற விளி ஆதிமூலமே என்று விளித்த கசேந்திரனைக் காத்த நீ, இவ்வீடணனையும் தீதுவாராமல் காப்பாற்ற வேண்டும் என்ற குறிப்புணர்த்துதல் காணலாம். வீடணன் அடைக்கலம் வேண்டியதே யன்றி அவன் பொருட்டு இன்னும் யானும் வேண்டினேன் என்றவாறு. இறந்தது தழுவிய

எச்ச உம்மை விகாரத்தால் தொக்கது. காப்பாற்றுக என்பது எச்சமாக வருவிக்கப்பட்டது. (357)

7756. வெல்லுமா நினைக்கின்ற
வேலரக்கன் வேரோடும்
கல்லுமா முயல்கின்று
னிவனென்னுங் கறுவுடையான்
ஒல்லுமா றியலுமே
லுடன்பிறப்பின் பயனோரான்
கொல்லுமா லவனிவனைக்
குறிக்கோடி கோடாதாய்.

'வெல்லுமா நினைக்கின்ற வேல்
அரக்கன்' வேரோடும்
கல்லுமா முயல்கின்றான் இவன்"
என்னும் கறுவுடையான்;
ஒல்லுமாறு இயலுமேல்,
உடன்பிறப்பின் பயன் ஓரான்;
கொல்லுமால், அவன் இவனை;
குறிக்கோடி, கோடாதாய்!

பொ :—அறநெறியில் மாறுபடாதவனே! (நின்னை) வெல்லுமாறு நினைக்கின்ற வேல் தாங்கிய இராவணன் 'இவ்வீடணன். அரக்கர் குலத்தை வேரோடு கல்லும்படி முயலுகின்றான்' என்னும் கறுவுடையனாக இருக்கின்றான்; (இவனைக் கொல்லக்) கூடிய வாய்ப்பு நேருமானால், உடன்பிறப்பின் பயனை ஆராயாதவனாய் இவனைக் கொன்று விடுவான் அவ்விராவணன். ஆதலால் இவனைக் கருத்துட்கொண்டு காப்பாயாக.

கு :—கும்பகருணன் இப்போது அரக்கர் தன்மையில் நீங்கி இரக்கத்தன்மையில் நின்று இராமனை வேண்டுகின்றான் ஆகலின், இராவணனை 'அரக்கன்' என்று சாதிப் பெயரால் கூறி இழிவு படுத்துகின்றான், வீடணனைக் கொல்லுதற்குரிய படையுடன் எப்போதும் இராவணன் விளங்குகின்றமை புலப்பட 'வேலரக்கன்' என அடைகொடுத்துக் கூறினான். வேரொடு கல்லுதல் என்றது, அரக்கர் குலத்தை அடியோடு அழித்தலை. இராவணன் பக்கமுள்ள இரகசியங்களை யெல்லாம் இராமனுக்குக் கூறி எளிதில் வெல்ல வகை செய்பவன் வீடணனே ஆதலின், இராவணன் இவ்வாறு

இவன்மேல் கறுவுடையனுயினுன். கறு - உள்ளடக்கிய கோபம். உடன்பிறப்பின் பயனை ஓர்தற்குரிய அறிவு இராவணனுக்கு இப் போது இல்லையாதலின் கொல்லுவான் என்றவாறு. தம்பி உயிருடன் இருந்தால், அரக்கர் குலத்தின் வழி இவ்வுலகில் அழியாமல் இருக்கும் எனவும், நாம் இறந்தபின் இறுதிக்கடன் கழிப்பான் எனவும் ஓர்ந்து வீடணனைக் கொல்லாது விடவேண்டும் என்பது கும்பகருணனது கருத்து. "ஐயநீ அயோத்தி வேந்தற் கடைக்கலமாகி யாங்கே, உய்கிலை யென்னின் மற்று இவ் வரக்கரா யுள்ளோ மெல்லாம், எய்கணை மாரியாலே யிறந்துபாழ் படுதும் பட்டால், கையினுல் எள்நீர் நல்கிக் கடன் கழிப்பாரைக் காட்டாய்" (137) என வீடணனை நோக்கிக் கும்பகருணன் கூறியது இக் கருத்தினுலன்றே? (358)

**7757.** தம்பியென நினைந்திரங்கித்
தவிரானத் தகவில்லான்
நம்பியிவன் றனைக்காணிற்
கொல்லுமிறை நல்கானுல்
உம்பியைத்தா னுன்னைத்தா
னனுமனைத்தா னெருபொழுதும்
எம்பிபிரி யானுக வருளுதி
யான் வேண்டினேன்.

'தம்பி என நினைந்து, இரங்கித்
தவிரான் அத்தகவு இல்லான்,
நம்பி! இவன்தனைக் காணின்
கொல்லும்; இறை நல்கானுல்;
உம்பியைத்தான், உன்னைத்தான்
அனுமனைத்தான், ஒரு பொழுதும்
எம்பி பிரியானுக அருளுதி,
யான் வேண்டினேன்.

பொ :—நம்பி! அத்தகவிலியாகிய இராவணன் இவனைத் தம்பி என நினைந்து மனம் இரங்கிக் கொல்லுதல் தவிரான், இவனைக் கண்டால் கொன்று விடுவான்; சிறிதும் அருளான்; ஆதலால், உன் தம்பியையோ, உன்னையோ, அனுமனையோ, என் தம்பி ஒருபோதும் பிரியாதவனுக இருக்க அருள் செய்வாய்; (இறக்கும் நிலையிலுள்ள) யான் வேண்டினேன்.

கு :—வீடணனை இராவணன் கண்டால் கொல்லாது விடான் என்பதை வற்புறுத்த, 'தம்பியென நினைந்திரங்கித் தவிரான்' எனவும் 'காணின் கொல்லும் இறை நல்கான்' எனவும் எதிர்மறையானும் உடன்பாட்டானும் கூறியவாறு. இராம இலக்குவரும் அனுமனும் யாரினும் வலியர் என்பதைக் கும்பகருணன் கண்டானாதலின், அம்மூவரில் ஒருவரை வீடணன் பிரியாதிருந்தால் இராவணன் அவனைக் கொல்ல இயலாமை நினைந்து 'ஒருபொழுதும் எம்பி பிரியானாக அருளுதி' என்று வேண்டிக்கொண்டான். மூவரையும் ஒருபொழுதும் எம்பி பிரியானாக அருளுதி என்று பொருள் கூறின், இம்மூவரும் சேர்ந்த வழியே இராவணன் அஞ்சுவான் என்று பொருள்பட்டு அவர்க்குச் சிறுமை யுண்டாக்குதல் காணலாம். யான் என்றது, இறக்கும் நிலையிலுள்ள யான் என்றவாறு. இறக்கும் நிலையிலுள்ளோர் வேண்டுகோள் மருது செய்தற்குரியதாதல் நினைந்து 'யான் வேண்டினனே' என்று கூறினன் என்க. 'உடன் பிறப்பின் பயனோரான் கொல்லுமால் அவன் இவனைக் குறிக்கோடி' என முன்னைச் செய்யுளில் கூறியதையே அனுவதித்துக் குறிக்கொள்ளும் வகையை இங்கு விளக்கியவாறு. இவ்வாறு வேறொரு பயனை விளைத்தலின் இது கூறியது கூறலன்று. (359)

**7758.** மூக்கிலா முகமென்று
முனிவர்களு மமரர்களும்
நோக்குவார் நோக்காமை
நுன்கணையா லென்கழுத்தை
நீக்குவாய் நீக்கியபின்
னெடுந்தலையைக் கருங்கடலுள்
போக்குவா யிதுநின்னை
வேண்டுகின்ற பொருளென்றான்.

"மூக்கு இலா முகம் என்று
முனிவர்களும் அமரர்களும்
நோக்குவார் நோக்காமை
நுன் கணையால் என் கழுத்தை
நீக்குவாய்; நீக்கியபின்,
நெடுந்தலையைக் கருங்கடலுள்
போக்குவாய்; இது நின்னை
வேண்டுகின்ற பொருள்" என்றான்.

பொ :—'இந்தப் போர்க்களத்தை நோக்கிக் கொண்டிருப்பவ ராய முனிவர்களும் தேவர்களும், 'இது மூக்கில்லாத முகம்' என்று நோக்கியுணராதவண்ணம் நின் அம்பினுல் என்னுடைய கழுத்தை அறுத்து நீக்குவாயாக; அவ்வாறு நீக்கியபின் அந்த நீண்ட தலை யைக் கரியகடலுள் போகச் செய்வாயாக; இதுவே யான் உன்னை வேண்டிக் கொள்கின்ற வரம்' என்று சொல்லி முடித்தான்.

கு :—முனிவரும் அமரரும் போர்க்கள நிகழ்ச்சிகளை விண்ணி லிருந்து நோக்கிக் கொண்டிருத்தல் இயல்பு. பகைவராய்த் தனக்கு அடங்கியிருந்தவர்கள் 'மூக்கில்லா முகம்' என்று நோக்கி இகழ்வார் ஆதலின், தன் தலையைக் கடலில் சேர்க்குமாறு கும்பகருணன் வேண்டிக் கொண்டான். இராமன் கணையால் உயிர்நீங்க வேண்டும் என்ற அவாவினுல் 'நுன்கணையால் நீக்குவாய்' என்ருன். நுன் என்பது திசைச் சொல் என்பர் நச்சினுர்க்கினியர். (360)

## இராமன் அவன் வேண்டுகோளின்படி செய்தல்

**7759.** வரங்கொண்டா னினிமறுத்தல்
வழக்கன்றென் றொருவாளி
யுரங்கொண்ட தடஞ்சிலையி
னுயர்நெடுநா ணுட்கொளுவாச்
சிரங்கொண்டான் கொண்டதனைத்
திண்காற்றின் கடும்படையால்
அரங்கொண்ட கருங்கடலி
னழுவத்து ளழுத்தினுன்.

'வரம் கொண்டான்; இனி மறுத்தல்
வழக்கு அன்று' என்று ஒருவாளி
உரம் கொண்ட தடஞ்சிலையின்
உயர் நெடுநாண் உள் கொளுவா,
சிரம் கொண்டான்; கொண்டதனைத்
திண் காற்றின் கடும் படையால,
அரம் கொண்ட கருங்கடலின்
அழுவத்துள் அழுத்தினுன்.

பொ :—(அது கேட்ட இராமன், 'இக்கும்பகருணன் வரம் வேண்டிக் கொண்டான் (ஆதலின்) இனி அதை மறுத்தல் மரபன்று' என்று ஒரு கணையை வலிமை கொண்ட பெரிய வில்லின் சிறந்த

நாணில் பூட்டி விடுத்து, அவன் தலையைக் கொய்தான்; கொய்து கொண்ட தலையைத் திண்ணிய கடுமையான வாயுவாத்திரத்தினால், ஒலிக்கும் தன்மை கொண்ட கரிய கடற்பரப்பில் அழுந்துமாறு செய்தான்.

கு :—கும்பகருணன் தலையை ஒரு கணையால் அறுத்து, அத்தலையை வாயுக் கணையால் கடலுள் அழுத்தினான் இராமன் என்றவாறு. ஒருவாளி கொளுவா விடுத்துச் சிரங்கொண்டான் என ஒரு சொல் வருவித்து முடிக்க. அரவம் - ஒலி. அரவங்கொண்ட என்பது, ஏதுகை நோக்கி அரங்கொண்ட என மருவியது. அழுவம் - பரப்பு. (361)

## கும்பகருணன் தலை கடலில் மூழ்குதல்

**7760.** மாக்கூடு படர்வேலை
மறிமகரத் திரைவாங்கி
மேக்கூடு கிழக்கூடு
மிக்கிரண்டு திக்கூடு
போக்கூடு தவிர்த்திருகண்
புகையோடு புகையுயிர்க்கு
மூக்கூடு புகப்புக்கு
மூழ்கியதம் முகக்குன்றம்.

மாக்கூடு படர்வேலை மறிமகரத் திரை வாங்கி,
மேக்கூடு, கிழக்கூடு, மிக்கிரண்டு திக்கூடு
போக்கூடு தவிர்த்து, இருகண் புகையோடு புகை உயிர்க்கும்
மூக்கூடு புகப்புக்கு மூழ்கியது அம் முகக் குன்றம்.

பொ :—கருநிறம் பொருந்திய பரவிய கடலின் மடங்கி வீசுகின்ற மகரமீன் போன்ற பெரிய அலைகள் உள்வாங்கி, மேற்கிலும் கிழக்கிலும் மிக்குள்ள இரண்டு திசைகளிலும் போகின்றதை இடையே நிறுத்தி, இரண்டு கண்களில் எழும் புகையோடு பொருந்தப் புகையுண்டாகுமாறு பெருமூச்சு விடுகின்ற அறுபட்ட மூக்கினுள்ளே புகுதலால், அம் முகமாகிய குன்றம் கடலினுள் புகுந்து மூழ்கியது.

கு :—திரை வாங்கி, தவிர்த்து மூக்கூடுபுக அம்முகக் குன்றம் புக்கு மூழ்கியது என இயையும். மா - கருமை. கருங்கடல் என்பார், 'மாக்கூடு படர் வேலை' என்றார். மகரமீன் போன்ற பெரிய அலைகள் நாற்றிசையிலும் செல்லும் போக்குத் தவிர்ந்து, அத்தலை வீழ்ந்த

வேகத்தால், உள்வாங்கி, மூக்குத்துளையுள் புகுதலால், நீர் நிரம்பப் பெற்ற அம் முகக்குன்றம் கடலுள் புக்கு மூழ்கியது என்க. மூக்குத் துளையுள் நீர் நிறையாதாயின் மிதக்கத்தக்கது ஆகலின், திரை வாங்கி மூக்கூடுபுகப் புக்கு மூழ்கியது என்றார். முன்னைய சினத்தால் கண்ணில் தோன்றும் புகையோடு பொருந்தப் புகை யுண்டாகுமாறு உயிர்க்கும் மூக்கு என மூக்கிற்கு அடையாக்குக. மேற்கூடு என்பது எதுகை நோக்கி மேக்கூடு என மருவியது. நாற்றிசையினும் செல்லத்தக்க அலைகள் அச் செலவைத் தவிர்த்துப் புகை உயிர்க்கும் மூக்குடு புகுந்தன என்க. அறுபட்ட மூக்கு வெளித்தோன்றுதபடி கவிழ்ந்து வீழ்ந்தது தலை. அறுபட்ட மூக்குவழியே யுள்ளிழுக்கும் மூச்சுக் காற்றோடு சேர்ந்து கடல் நீர் அத் தலையுள் புகுந்தமையால் அத்தலை கனமுடையதாய்க் கடலினுள் அழுந்தி மூழ்கியது என்க. இச் செய்யுளில் மாக்கூடு, மேக்கூடு, போக்கூடு, மூக்கூடு எனத் திரிபு என்னும் சொல்லணியும், ஊடு என்ற சொல் பன்முறை வரத் தொடுத்தமையால் சொற் பின்வருநிலை என்னும் பொருள் அணியும் அமைந்து அழகு செய்தல் காணலாம். (362)

### கும்பகருணன் இறந்தமை கண்டு வானவர் முதலியோர் மகிழ்தலும் அரக்கர் இராவணனுக்கு உணர்த்த ஓடுதலும்

**7761..** ஆடினார் வானவர்க
ளரமகளி ரமுதவிசை
பாடினார் மாதவரும்
வேதியரும் பயந்தீர்ந்தார்
கூடினார் படைத்தலைவர்
கொற்றவனைக் குடர்கலங்கி
யோடினா ரடலரக்க
ரிராவணனுக் குணர்த்துவான்.

ஆடினார் வானவர்கள்; அரமகளிர் அமுத இசை
பாடினார் மாதவரும் வேதியரும் பயம் தீர்ந்தார்;
கூடினார் படைத் தலைவர் கொற்றவனை; குடர்கலங்கி
ஓடினார், அடல் அரக்கர், இராவணனுக்கு உணர்த்துவான்.

பொ:—(கும்பகருணன் இறந்ததை அறிந்து) தேவர்கள் ஆடினார்கள்; அரம்பை மாதர் அமுதம் போன்ற இனிய இசையைப் பாடினார்கள்; பெரிய தவமுனிவரும் அந்தணர்களும் அச்சம் நீங்கினார்கள்; வானரப் படைத் தலைவர்கள் (மகிழ்ச்சியுற்று) வெற்றி வீர

ஞகிய இராமனைக் கூடினர்கள்; வலிமை மிக்க அரக்கர்கள் (கும்ப கருணன் இறந்த செய்தியை) இராவணனுக்கு உணர்த்தும் பொருட்டுக் குடர் கலங்கி ஓடினர்கள்.

கு:—கும்பகருணன் வீழ்ச்சிக்குப்பின் உலகில் பல திறத்தான் நிகழ்ந்தவற்றைத் தொகுத்துக் கூறியவாறு. தேவர்கள் மகிழ்ச்சி மீக் கூர்ந்தமையால் ஆடத் தொடங்கி விட்டார்கள். அத் தேவர் களின் மனைவிமார்கள் அவர் ஆடலுக்கு ஏற்றவாறு மகிழ்ந்து பாடு கின்ருர்கள்; மாதவரும் வேதியரும் அச்சம் தீர்ந்து அமைதியுடன் இருந்தார்கள். ஆடலும் பாடலும் ஆன்றவிந்தடங்கிய அவர் தகு திக்கு ஏற்புடையன அல்லவாதலின் அவர் அவை செய்திலர் என்க. முன் ஒதுங்கி நின்ற வானரப் படைத் தலைவர்கள் இப்போது இராம னுள்ள இடத்திற்கு வந்து சேர்ந்தார்கள். அரக்கர்கள் இச் செய் தியை இராவணனுக்கு உணர்த்தச் செல்லும் வேகத்தாலும் இராம னம்பு நம்மை என்ன செய்யுமோ என்ற அச்சத்தாலும் அவர் களுக்குக் குடர் கலங்குவதாயிற்று என்க. (363)

கும்பகருணன் வதைப் படலம் முற்றிற்று.

# விடுபட்ட மிகைப்பாடல்கள்

பின்வரும் பாடல்கள் அடியிற் குறித்த தொடரெண்ணுள்ள பாடல்களின் உரையிறுதியில் மிகைப் பாடல்களாகச் சேர்த்தற்கு உரியன:—

## அணிவகுப்புப் படலம்

**7083.** 'அளந்தறிவரியராய' என்ற பாடலுக்குப்பின் 52-ஆம் பிரதியில் 11-1 ஆக ஒரு பாடல் உளது.

7083. (a) இறைவன் மற்று இதனைக் கூற,
எறுழ்வலி அமைச்சர் பொங்கி,
'பிறைமுடிப் பரமனோடும்
பெருவரை எடுத்த மேலோய்!
உறு சமர்க்கு எம்மைக் கூவி,
ஏவிடா தொழிந்தாய்; யாமும்
சிறுதொழில் குரங்கு அது என்ற
திறத்தினும் தாழ்த்தது' என்றார்.

7084. 'எழுபது வெள்ளத்துற்ற' என்ற பாடலுக்குப்பின் 52-ல் 12-1 ஆக ஒரு பாடல் உளது:—

7084. (a) அமைச்சர் மற்று இதனைக் கூறி,
'அரச! நீ விடைதந் தீமோ?
இமைப் பிடைச் சென்று, வந்த
குரங்கு இனப் படையை எல்லாம்
கமைப்பு அறக்கடிது கொன்றே
களைகுவம்' என்ற போதில்,
சுமைத்தட வரைத்தோள் கும்ப
கருணன்சேய் நிகும்பன் சொல்வான்.

7089. 'என்புழி' என்ற பாடலுக்குப்பின் 52-ல் 17-1 ஆகப் பின்வரும் பாடல் உளது:—

7089. (a) எரி நெருப்பு என்னப் பொங்கி,
இராவணன் என்னும் மேலோன்
உரை செறி அமைச்சரோடும்,
உறு படைத் தலைவரோடும்,

கரி, பரி, இரதம், காலாள்,
கணக்கு அறும் வெள்ளச் சேனை
மருவுற, திசை நான்கு உம்பர்
வகுத்து, அமர் புரியச் சொன்னான்.

7094. 'கடகரி' என்ற பாடலுக்குபின் 52-ல் 22-1 ஆகப் பின்வரும் பாடல் உளது :—

7094. (a) இம் முறை அரக்கர் கோமான்
அணி வகுத்து, இலங்கை மூதூர்,
மும் மதில் நின்ற தானை
நிற்க, மூதமைச்சரோடும்
விம்முறு சேனை வெள்ளத்
தலைவர்க்கு விடையும் நல்கி,
கம் மெனக் கமழும் வாச
மலர் அணை கருகச் சேர்ந்தான்.

## அங்கதன் தூதுப் படலம்

7107. 'அறந்தரு' என்ற பாடலுக்குப்பின் 31, 52-ஆம் பிரதிகளில்,

7107. (a) 'சூளுறும் வஞ்சனாகத் தோன்றிய
இலங்கை வேந்தன்
கோளுறும் சிறையை நீக்கி,
குரைகழல் வணங்கும் ஆகில்,
வீழுறும் இலங்கைச் செல்வம்
வீடணற்கு அளிப்பன் எம்பி
ஆளுறும் அயோத்தி தன்னை
இராவணற்கு அளிப்பென்' என்றான்

என்ற பாடலும், இதன்பின் 41, 52-ல்

7107. (b) 'தப்பு இல வீடணற்கு இலங்கை, தானமாச்
செப்பிய வாய்மைதான் சிதைய லாகுமோ?
இப்பொழுது இராவணன் ஈங்கு வந்திடில்
அப்பொழுது அயோத்திநாடு அளிப்பென் ஆணையே'

என்ற பாடலும் உள்ளன.

7117. 'இன்றிவன்' என்ற பாடலுக்குப்பின் 52-ல் 17-1 ஆகப் பின்வரும் பாடல் உளது :—

7117. (a) அரி முதல் தேவர் ஆதி
அமரிடைக் கலந்த போதும்
வரிசிலை இராமன் வாளி வந்து
உயிர் குடிப்பது அல்லால்
புரம் ஒரு மூன்றும் தீயப்
பொடிசெய்தோன் தன்னொடு, அந்நாள்,
அரு வரை எடுத்த வீரன்
ஆண்மைக்கும் அவதி உண்டோ ?

7119. 'நெடுந்தகை' என்ற பாடலுக்குப்பின் 9, 41, 52:ஆம் பிரதிகளில் பின்வரும் பாடல் உளது :—

7119. (a) வந்ததென் குரங்கொன்றில்லை யடைத்ததென்
கடல் வாய் மந்தி
சிந்தையின் களியா லென்பேர்
தெரியுமோ தெரியா வாகில்
இந்தவெம் பதியைக் காக்கும்
இறைவனே அறிதும் எங்கள்
விந்தைஎம் பெருமான் வாழி
வீடணன் என்னும் வேந்தன்.

7120. 'நின்றவன்' என்ற பாடலின்பின் 9, 41, 52–ஆம் பிரதிகளில் பின்வரும் மிகைப்பாடல் உளது :—

7120. (a) முந்த ஓர் தசக்கிரீபன்
யாக்கையை மொய்ம்பால் வீக்கும்
அந்த வாயிரந் தோள்தன்னை
யரக்கிய மழுவலாளன்
வந்தெதிர் கொள்ள வீரச்
சிலையும் வெவ்வலியும் வாங்கும்
சுந்தரத் தோளன் விட்ட
தூதன்நான் என்னச் சொன்னான்.

7136. 'மறிப்புண்ட' என்ற பாடலின்பின், 31, 41, 52–ஆம் பிரதிகளிற் பின்வரும் பாடல் உளது :—

7136. (a) பசையறு சிந்தை யானைத்
தமரொடும் படுத்த போதும்
இசையெனக் கில்லை யென்றே
யென்பதோ ரிகழ்வுங் கொண்டாய்

வசைபுறம் வளைக்க வூரை
வளைக்கவும் வந்திலா தாய்
திசையினை வென்ற வென்றி
வரவரச் சீர்த்த தன்றே.

7143. 'உற்றபோதவன்' என்ற பாடலின்பின் 52ல் 43-1 ஆகப் பின்வரும் பாடல் உளது :—

7143. (a) ஆதி அம்பரன், அங்கதன் ஓதல்கேட்டு
'ஈது அவன்கருத்து என்றிடின் நன்று'என்று,
சோதியான் மகன் ஆதித் துணைவருக்கு
ஓதினான், அங்கு அமரர்கள் உய்யவே.



# ஒப்பு நோக்கப்பெற்ற சுவடிகளும், அச்சுப்பிரதிகளும் அவற்றின் குறியீடுகளும்

| குறி யீடு | சுவடி பெற்ற இடம் | சுவடி எண் | குறிப்பு |
|---|---|---|---|
| *1 | தஞ்சை சரஸ்வதி மகால் | 367-8 | |
| 2 | ,, | 369 | |
| 9 | ,, | 382 | |
| 10 | ,, | 1387 | |
| 11 | ,, | 394-5 | |
| 18 | மதுரைத் தமிழ்ச் சங்கம் | 677 | |
| 19 | திரு. தெய்வசிகாமணிக் கவுண்டர், ஈரோடு. | | |
| 21 | ,, | | |
| 23 | அண்ணுமலைப் பல்கலைக் கழகம் | T.R.D.L. 1150 | |
| 25 | திரு. தெய்வசிகாமணிக் கவுண்டர், ஈரோடு. | | |
| 26 | மதுரைத் தமிழ் சங்கம் | 27 | |
| 29 | ,, | 41 | |
| 31 | அரசாங்கக் கையெழுத்துப் புத்தகசாலை, சென்னை. | 514 | |
| 39 | மதுரைத் தமிழ்ச் சங்கம் | 40 | |
| 40 | | | ஆழ்வார் திருநகரி பிரதிகளின் படி பெரியன் ஸ்ரீநிவாசையங்கார் பதிப்பித்தது 1942. |
| 41 | | | வை. மு. கோபாலகிருஷ்ண மாசாரியர்உரைப்பதிப்பு.1955 |
| 42 | | | கவித்தலம் துரைசாமி மூப்பனர் பதிப்பு 1888. |
| 43 | அண்ணுமலைப பல்கலைக் கழகம் | T.R.D.L. 1147 | |
| 44 | ,, | 1148 | |

* இங்குக் குறிக்கப்படாத எண்ணுள்ள பிரதிகளில் யுத்த காண்டம் இல்லை.

| குறியீடு | சுவடி பெற்ற இடம் | சுவடி எண் | குறிப்பு |
|---|---|---|---|
| 45 | | | உ. வே. சாமிநாதையர் நூல் நிலையப் பதிப்பு, அடையாறு. |
| 46 | | | பூமகள் விலாசம் பதிப்பு 1928 |
| 48 | | | வெ. ப. சுப்பிரமணிய முதலியார் பதிப்பு—கம்பராமாயண சாரம் 1955. |
| 52 | | | மலிவுப் பதிப்பு (எஸ். ராஜம் வெளியிட்டது) 1958. |
| 54 | மதுரைத் தமிழ்ச் சங்கம் | 37 | |
| 60 | ,, | 673 | |
| 61 | ,, | 29 | |
| 62 | ,, | 43 | |
| 63 | ,, | 32 | |
| 64 | அண்ணுமலைப் பல்கலைக் கழகம் | | கடல் காண் படலம். மந்திரப் படலம் 77ஆம் பாடல் வரையுள்ளது. |
| 65 | திரு. தெய்வசிகாமணிக் கவுண்டர், ஈரோடு. | | |
| 66 | ஸ்ரீ வேங்கடேசுவரர் கீழ்த் திசைக் கல்லூரி, திருப்பதி. | 6583 | |
| 67 | திரு. தெய்வசிகாமணிக் கவுண்டர், ஈரோடு. | | |
| 68 | | | வி. கோவிந்தப் பிள்ளை பதிப்பு நாகபாசப் படலம் வரையுள்ளது. |
| 70 | அண்ணுமலைப் பல்கலைக் கழகம் | | மந்திரப் படலம் முதல் இராவணன் தேரேறு படலம் வரையுள்ளது. |
| 71 | மதுரைத் தமிழ்ச் சங்கம் | 31 | |
| 73 | திரு. R. குழந்தைவேலு | | வீடணன் அடைக்கலப் படலம் முடிய உள்ளது |

| குறி யீடு | சுவடி பெற்ற இடம் | சுவடி எண் | குறிப்பு |
|---|---|---|---|
| 74 | திரு. R. குழந்தைவேலு | | ஒன்னூர் வலியறி படலம் (இலங்கை கேள்விப் படலம்) முதல் உத்தரகாண்டம் சம்பூகன் வதைப் படலம் வரை யுள்ளது. |

## குறிப்பு

இப்பதிப்பில் மூலத்தில் எடுத்துக்கொண்ட பாடங்கள், செய்யுட்களின் தொடரெண் முறைப்படி அடிமுறையாகவும் சீர்முறையாகவும் தடித்த முதலெழுத்தோடு முன்னே காட்டப்பெற்றுள்ளன. அவற்ருேடு வேறுபட்ட பாடங்கள் அவற்றின்பின் முறையே சேர்க்கப்பெற்றுள்ளன. பாடங்களின் பின்னே குறிக்கப்பட்டுள்ள எண்கள், அப்பாடங்கள் உள்ள சுவடிகளின் குறியீடுகள். 40, 41, 45, 48 என்ற எண்கள், அக்குறியீடுள்ள அச்சுப்புத்தகங்களிலுள்ள மூலபாடங்களுக்கும், அப்புத்தகங்களில் பிரதிபேதங்களாகக் காட்டப்பட்ட பாடங்களுக்கும் உரியன. '46—' என்னும் குறியீடு, 46 என்னும் எண் இட்டுக்காட்டிய அச்சுப்புத்தகத்தோடு ஒத்த பாடம் டைய ஏடுகளின் எண்களேயும் குறிக்கும். பிழைபட்ட பாடங்களும் அவற்றைக் காட்டும் சுவடிகளின் எண்களும், சிதைந்த சுவடிகளின் எண்களும் விரிவஞ்சிக் குறிக்கப்படவில்லை.

# 6. யுத்த காண்டம்

## பாட வேறுபாடு

### 10. இராவணன் வானரத்தானை காண் படலம்

**6987**

I கவடுகப்பொருத; 46—
கவடுகப்பொருது; 21, 25, 62.
கவடுகப்பொரு; 2, 9, 26, 31, 39, 44, 65, 66, 70.
கவடுகப்பொருவு; 23, 29, 41, 43.
கவடுறப்பொருத; 40, 41.
கமடுறப்பொருத; 60.
சுவடுகப்பொருத; 41.

காய்களிறன்னான்; 46—
காயக்களிற்றன்ன; 2.

II அவடுயக்கின்; 46—
அவடுவக்கின்; 9, 19, 21, 25, 26, 40, 41, 60–62, 65, 66.

மலரம்புற; 46—
மலரப்புற; 41.

III பொருவிரேள்கொடு; 46—
பொருவிரேளின்; 40, 41. 60.
பொருவிரேளொடு; 41.
பொருதோள்கொடு; 31, 39,
பொருவுரேள் கொடு; 11.
பெரியதோள்கொடு; 9.
அனேகம்; 19, 21, 26, 31, 39, 41.

அனேகக்; 41.
அநேகம்; 46—

IV தனியொர்குன்றென; 46—
தனியோர்குன்றென; 41.
தனிக்குன்றென; 26, 44, 70.

**6988**

I பொலிந்ததாமினிது; 46—
பொலிந்ததாமிகு; 9, 66.
பொலிந்ததாமிதுவோ; 1.
பொலிந்ததாமிதுவொர்; 2, 11, 63.
பொலிந்ததாமினிப்; 26, 44, 70.
பொலிந்ததாகுமிகு; 19, 21, 25, 29, 62, 65.
பொலிந்ததாகுமிது; 41.
பொலிந்ததாலிது; 31.
பொலிந்ததாலினிது; 39.

II மலிந்தநங்கை; 46—
மெலிந்தநங்கை; 26, 44, 70.
நலிந்தநங்கை; 2, 9, 11, 21, 25, 29, 31, 39–41, 52, 60–62, 65, 66.

வலிநாளும்; 46—
மிகநாளும்; 9, 19, 21, 25, 29, 41, 62, 66.
மிகுநாளும்; 65.

III தோள்கள்வடமேருவின்; 46—
தோள்கள்விடமேருவின்; 25.
தோள்வடமேருவின்; 31.

IV வலிந்துசெல்ல; 46—
வலிந்துசெல்லும்; 18, 40, 41, 44, 60.
மலிந்துசெல்ல; 1. 2, 9, 11, 19, 21, 25, 29, 62, 65, 66.

மலிந்துசேர்வ; 61.
மலிந்துவெல்ல; 41.

மிசைசெல்லும்மனத்தான்; 46—
மிசைசெல்லுமானத்தான்; 66.
மிசைச்செல்லுமனத்தான்; 41.
மிசைசொல்லுமனத்தான்; 60, 63.
மிகைசெல்லுமனத்தான்; 23, 26, 31, 39, 41, 43, 44, 70.

## 6989

I மௌலிசிகரங்கள்; 46—
மௌலிசிரங்கள்; 9, 19, 21, 23, 25, 26, 29, 31, 39, 43, 44, 60–63, 65, 66, 70.
மௌலிச்சிகரங்கள்; 41.
மௌலிகொள்சிரங்கள்; 1, 2.
மௌலிகொள்சிரங்கொள்; 11.
மௌலிகொள்சிரங்கள்; 41.
மோலிசிரங்கள்; 18, 40.
மௌலியசிகரங்கள்; 41.

தயங்க; 46—
தயங்கும்; 18, 40, 41, 60, 61.

III வெம்புகாலினை; 46—
வெம்புகாலனை; 25, 41.
வெம்புகாலை; 9, 31, 39, 41, 66.

விழுங்கிடமேனுள்; 46—
விழுங்கிடமேன்மேல்; 1, 2, 9, 11, 18, 19, 21, 23, 25, 26, 29. 31, 39–41, 43, 44, 60–63, 65, 66, 70.

IV உம்பர்மீதுநிமிர்; 46—
உம்பர்மீதினிமிர்; 41, 52.
உம்பர்மேலுநிமிர்; 9, 11, 21, 25, 29, 41, 62, 65.
உம்பர்மேனிமிர்; 23, 31, 39, 43, 44.
உம்பர்மேனிமிரும்; 26.

## 6990

I தொக்கபூதமவை; 46—
மிக்கபூதமவை; 9, 19, 21, 25, 29, 39, 62, 65.

ஐந்தொடுதுன்னிட்டு; 46—
ஐந்தொடிதுள்ளிட்டு; 1, 2, 11, 41, 63.
ஐந்தொடுமெய்யுற்று; 41.
ஐந்தையுமெய்யுற்று; 9, 19, 21, 29, 39.
ஐந்தையுந்தூசுற்று; 41.
ஐந்தையுந்துன்னிட்டு; 41.
ஐந்தையுந்துன்னுற்று; 66.
எந்தையுமெய்யுற்று; 25, 62, 65.

II ஒன்பதொடொன்றும்; 46—
ஒன்பதுமொன்றும்; 31, 39.

III பக்கமுந்நிழல்; 46—
பக்கமுன்னிழல்; 41, 63.

பரப்பிவியப்பால்; 46—
பரப்பியதிப்பால்; 1, 9, 11, 41, 63.
பரப்பியதிப்பார்; 19, 23, 26, 40, 41, 43, 44, 61, 70.
பரப்பியநிர்ப்பான்; 2.
பரப்பியவிப்பால்; 21, 25, 29, 39, 65, 66.
பரப்பிவிப்பால்; 62,

IV மிக்குநின்றகுடை; 1, 2, 9, 18, 21, 23, 25, 26, 29, 40, 41, 43, 52, 60–63, 66, 70.
மிக்கநின்றகுடை; 46—
மிக்குநின்றகொடை; 11.

## 6991

I வீசியகாலால்; 46—
வீசியகாலின்; 18, 40, 41, 60, 61.
வீசியசால்வாய்; 41.

II நெய்த்திருண்டுயரும்; 46—
நெய்த்திருண்டுயர்; 9, 19, 21, 23, 25, 26, 29, 39, 43, 44, 62, 65, 66, 70.
நெய்த்திருண்டுயர; 41.

III வீழுமருவித்திரள்; 18, 23, 41, 60,
வீழருவியின்றிரள்; 46—
வீழருவியின்திரை; 41.
வீழருவித்திரள்; 26, 40, 44.

சாலும்; 9, 19, 21, 25, 29, 41. 62, 65, 66.
சால; 46—
சால்முத்து; 1.
சால்போர்; 31, 39.
சான்ற; 23, 26, 43, 44, 70.

IV உத்தரீகநெடு; 46—
உத்தரீயநெடு; 19, 21, 25, 29, 65.
முத்துநார்கணெடு; 2.
முத்தரீகநெடு; 11.

மார்பினுலாவ; 46—
மார்பிலுலாவ; 19, 21, 25, 62.
மார்பினிலாவ; 31.
மார்வினுலாவ; 2.

## 6992

I வானகத்தமுது; 1, 2, 11, 18, 23, 26, 31, 39–41, 43, 44, 60, 61, 63, 70.
வானகத்தினில்; 46—
வானகத்த; 9, 41, 66.
வானகத்தன; 19, 21, 25, 29, 41, 62, 65.
வானகத்துறும்; 41, 52.
வானகத்தரும்; 41.

உருப்பசிவாசத்; 46—
உருப்பசிவானத்; 9, 23, 43.

II தேனகத்திரு; 41.
தேனகத்தரு; 46—
தேனகத்த; 66.
தேனகத்தமிர்; 63.
தேனகத்தன; 19, 21, 25, 29, 62, 65.
தேனகைத்தரு; 2, 41, 52.
தேனகைத்ததரு; 1.
தேனகைத்த; 9.
தேனகைத்தன; 41.
தேனகைத்திரு; 31, 39.
தேனெனத்தகு; 23, 43, 44, 70.
தேனெனத்தரு; 26.

III ஏனகைக்குயிலின்; 29.
ஏனகைக்குல; 46—
ஏனகைக்குயில்; 1, 2, 11, 18, 23, 26, 41, 43, 44, 63, 70.
மேனகைக்குல; 52, 65.
மேனகைக்குயில்; 40, 60, 61.
மேனகைக்குயிலின்; 19, 21, 25, 41, 62, 66.
மேனகைக்குயின்; 31, 39.
மேனகைக்குரிய; 9.

மென்மையர்யாரும்; 9, 19, 21, 25, 29, 41, 65, 66.
அரம்பையர்யாரும்; 46—
அரம்பையர்மேலாம்; 41, 52.
வன்மயிலாரும்; 41.
மென்மயிலாரும்; 18, 40, 60, 61.
மேன்மையர்யாரும்; 31, 39.

IV சானகிக்கழகுகுத்தயல்; 1, 2, 63.
சானகிக்கழகுதந்து; 46—
சானகிக்கழகுகுற்றயல்; 11, 44, 70.
சானகிக்கழகுய்த்தயல்; 26.

## 6993

I வீழியின்கனி; 46—
வீழியின்கணை; 44
விழியன்கனி; 11.

இதழ்ப்பணைமென்றோள்; 46—
இதழ்ப்பணைமென்ருள்; 18.
இதட்பணைமென்றோள்; 1, 11, 26, 44, 63, 70.

II ஆழிவந்த; 46—
ஆழிசைத்த; 31, 39.

ஐஞ்ஞூற்று; 46—
அஞ்ஞூற்று; 2, 18, 62, 65.
ஐஞ்ஞூறு; 1, 9, 26, 63, 70.

அஞ்ஞூறு; 11, 19, 21, 29, 44, 66.

III ஏழிரண்டினினிரண்டு; 46—
ஏழிரண்டினினிரட்டி; 52,
ஏழிரண்டினினிரட்டிப்; 40.
ஏழிரண்டினினிரட்டியர்; 19, 21, 23, 25, 29, 43, 62, 63, 65.
ஏழிரண்டினிரட்டியின்; 41.
ஏழிரண்டினதிரட்டி; 1, 26, 61.
ஏழிரண்டினவிரட்டி; 31, 39.
ஏழிரண்டனதிரட்டி; 11.
ஏழிலிரண்டினிரட்டி; 60.
ஏழிரண்டினிரட்டியர்; 9, 41, 66.
ஏழிரண்டினிரட்டி; 2, 18, 44, 70.

பயின்றோர்; 46—
பயின்ருர்; 18, 26, 40. 60, 61.
அன்பாற்; 9, 19, 21, 23, 25, 29, 43, 62, 65, 66.
நின்றோர்; 41.

IV சூழிரண்டுபுடையும்முறை; 46—
சூழிரண்டுபுடைகொண்டனர்; 9, 19, 21, 25, 29, 41, 62, 65, 66.
சூழிரண்டுபுறமும்மயல்; 41.

## 6994

I முழைபடிந்தபிறை; 46—
முழைபடிந்தமறை; 19, 21, 25, 62.
முழைபடிந்தபடி; 23, 43.

முள்ளெயிறு; 46—
முள்ளெயிற்று; 21, 44, 62, 66, 70.

II இழைபடிந்தவிள; 46—
இழைபடிந்தவகிர்; 9.
இழைபடிந்தவவிர்; 19, 21, 25, 29. 41, 62, 66.
இழைபடிந்தவின; 26, 70.
இழைதடிந்தவிள; 2.

III குழைபடிந்ததொரு; 46—
குழைபடிந்தனைய; 9, 18, 19, 21, 25, 29, 40, 41, 60-62, 65, 66.

குன்றின்முழங்கா; 46—
குன்றின்முழங்கும்; 31, 39.

## 6995

I ஓதநூல்கள்; 1, 2, 11, 41, 52, 62.
ஓதுநூல்கள்; 46—
ஓதுநூல்கொள்; 29, 40, 60, 61, 65, 66.
ஓதநூல்கொள்; 9, 19, 21, 25, 41, 63.
ஓதைநூல்கள்; 41.

செவியின்வழி; 1, 2, 9, 11, 18, 19, 21, 23, 25, 26, 29, 39-41, 43, 44, 52, 60-63, 65, 66, 70.
வழியின்செவி; 46—

உள்ளம்; 1, 2, 18, 23, 26, 31, 39, 41, 43, 44, 52, 60, 70.
உள்ளும்; 46—

II சீதைசீதையென; 18, 40, 41, 52, 60, 61, 66.
சீதைசீதையெனும்; 46—

III நாரதர்பாட; 46—
நாரதநார்தம்; 1.
நாரதனுர்தம்; 2, 9, 11, 18, 19, 21, 23, 25, 26, 29, 31, 39, 41, 43, 44, 52, 60, 62, 63, 65, 66, 70.
நாரதன்நாதம்; 40.
நாரதர்பாடும்; 61.

IV வேதகீதவமிழ்து; 46—
வேதகீதவமுது; 18, 19, 21, 23, 25, 26, 29, 43, 44, 52, 60-63, 65, 66, 70.
வேதகீதமும்; 41.
வேதகீதவமிர்து; 68.

### 6996

I வெங்கரத்தரயில்; 46—
வெங்கரத்தயிலர்; 1, 9, 11, 19, 21, 23, 25, 29, 41, 43, 62, 65.
வெங்கரத்தயில்; 2, 18, 26, 40, 41, 44, 66.
வெங்கரத்தியைய; 41.

வாளினர்வில்லோர்; 46—
ஆளினர்வில்லோர்; 2.
வாளினர்வில்லர்; 9.
வாளினரல்லோர்; 11.
வாளினர்வேகச்; 19, 21, 25, 29, 41, 62, 65, 66.

II சங்கரற்கும்வலி; 46—
சங்கரற்கும்வலி; 1.
சங்கரற்குவலி; 13, 31, 39, 65.
கிங்கரற்கும்வலி; 41.

சாய்வில்வலத்தோர்; 46—
சாய்வில்சலத்தோர்; 41.
சாய்வில்தவத்தோர்; 41.
சாய்வில்தரத்தோர்; 63.
சாய்வில்மனத்தோர்; 1, 2, 11, 41.
சாயல்சலத்தோர்; 61.
சார்வில்வலத்தோர்; 41.
சார்வில்சலத்தோர்; 18, 40, 60.
கேடில்வலத்தோர்; 41.

III அங்கரக்கர்; 46—
அங்கமைச்சர்; 1, 2, 11, 41.

அமைந்தோர்; 46—
அமைந்தார்; 9, 19, 21, 25, 29, 62, 65, 66.

IV பொங்கரத்தவிழி; 46—
பொங்கரத்தம்விழி; 39.
பொங்கரக்குவிழி; 18, 40, 41, 60, 61.
பொங்கரக்கர்மிடல்; 1, 2, 11, 26, 41, 44, 70.

சூழ; 46—
சுற்ற; 9.

### 6997

I உலகங்கவர்கிற்போர்; 46—
உலகங்கள்கடப்போர்; 18, 23, 26, 40, 41, 43, 44, 60, 61, 70.
உலகங்கவல்கிற்போர்; 66.

II முதலோர்; 46—
தனிலோர்; 65.

நவையில்லோர்; 46—
நகையில்லோர்; 23, 26, 44, 61, 70.

III சொல்லிலங்கொர்; 9, 18, 19, 21, 41.
சொல்லிலங்கர்; 46—
சொல்லிலங்கு; 41.
சொல்லிலங்கை; 41.
சொல்லிதோர்; 65.
தொல்லிலங்கர்; 1, 11, 63.
கொல்லிலங்கர்; 2.

தொடர்ந்தோர்; 46—
தொடர்ந்தார்; 66.
துடர்ந்தோர்; 26, 29, 44, 60, 63, 70.
துடந்தோர்; 11.
துடர்ந்தோ; 65.

### 6998

I பாரியங்குநர்; 46—
பாரியங்கு; 44, 66, 70.
பாரியங்கிய; 19 21, 25, 29, 41, 62, 65.
பாரியங்கினர்; 40, 41, 60.
பாரியங்குறு; 39.
பாரியங்குரை; 26.

பரந்தோர்; 46—
படர்ந்தோர்; 9, 23, 26, 40, 41, 43, 44, 52, 60, 70.

II குரல்மானும்; 46—
குரன்மானப்; 41.
குலமானும்; 1, 2, 9, 11, 23, 25, 26, 39, 43, 44, 65, 70.

குலமென்னப்; 18, 40, 41, 60, 61.
குழுமானும்; 63.

III பேரியங்கண்முருடாகுளி; 46—
பேரியங்கமுருடாகுளி; 65.
பேரியங்குமுருடாகுளி; 2, 18, 26, 31, 39–41, 44, 70.
பேரியெங்குமுருடாகுளி; 60,
பேரியேங்குமுருடாகுளி; 41, 52.

பெட்கும்; 46—
பெட்பும்; 19, 21, 41, 62, 65.
பெட்பின்; 41.
பேர்க்கும்; 39.

IV தூரியங்கடலினின்று; 46—
தூரியங்கடனின்று; 44, 70.
தூரியங்கடலின்று; 65.
தூரியங்கடைநின்று; 31, 39, 41.
தூரியங்கடையினின்று; 1, 2, 41.
தூரியங்கடையினின்ற; 11.
காரியங்கடனின்று; 60.

## 6999

I நஞ்சுமஞ்சுவிழி; 46—
நஞ்சுமஞ்சும்விழி; 9, 18, 19, 21, 23, 25, 29, 43, 52, 61–63, 65, 70.

நாகியர்நாணி; 1, 11, 19, 21, 23, 25, 26, 29, 41, 43, 44, 61–63, 65 66, 70.
நாகியர்நாண; 46—
நாகியர்நாகர்; 18.
நாகியர்ஞால; 31.
நாரியர்நாணி; 9, 62, 63.
நாரியர்நாகர்; 39, 40, 52, 60.

II வஞ்சியஞ்சுமிடை; 46—
வஞ்சியஞ்சிமிடை; 70.
வஞ்சியஞ்சுவிடை; 65.

விஞ்சையர்வானத்து; 9, 19, 21, 23, 25, 29, 41, 43, 65.
மங்கையர்வானத்து; 46—
மங்கையர்மானத்து; 44.
வஞ்சியர்வானத்து; 18, 40, 41, 60.
விஞ்சையர்மாதர்; 23, 43.

III அஞ்சொலின்சுவை; 1, 2, 9, 18, 19, 21, 25, 29, 31, 39–41, 44, 52, 60–63, 65, 70.
அஞ்சொலிஞ்சொலின்; 46—
அஞ்சலின்சுவை; 11, 66.
அஞ்சிலோதியர்; 23, 43.

அரம்பையரோடும்; 46—
அரம்பையர்மெல்லென்; 23, 26, 43, 44, 70.
அரம்பையராடிப்; 18, 40, 41, 52, 60, 61.
அரம்பையர்யாரும்; 63.

IV பஞ்சமஞ்சிவணும்; 46—
பஞ்சமஞ்சிவணின்; 19, 21, 25, 29, 65.
பஞ்சகஞ்சிவணும்; 26, 44.
பஞ்சரஞ்சிவணும்; 18, 39–41, 60, 61.

இன்னிசைபாட; 46—
இன்னிசைபாடி; 61.

விஞ்சைமங்கையர்மின்னிசைபாட; 41.
பஞ்சமஞ்சினமணினின்னிசைபாட; 41.

## 7000

I நஞ்சுகக்கியெரி; 46—
நஞ்சுகக்குமெரி; 9, 18, 19, 21, 25, 29, 40, 41, 60, 65, 66,
நஞ்சுநக்கியெரி; 2.

கண்ணினர்; 46—
கண்ணினன்; 39.

நாமக்; 46—
நாண; 9, 39, 62 65, 66.
நாணு; 19, 21, 25, 41.
நாணுக்; 29, 41.

II கதைபற்றியகையர்; 46—
கதைபற்றியகையார்; 18.

கசைபற்றியகையர்; 21, 23, 26, 29, 31, 39, 41, 43, 65, 66, 70.
கசைபற்றியகையார்; 9, 40, 44, 60.
கசைபற்றுறுகையர்; 63.

III குமுறுசொல்லினர்· 46—
குமிறுசொல்லினர்; 2. 9, 11, 18, 19, 21, 23, 25, 26, 29, 40, 43, 44, 60–62, 65, 66, 70.

வல்வாய்க்; 9, 19, 21, 26, 29, 39, 41, 52.
வல்வாய்ச்; 46—
வல்வாய்த்; 1, 2, 11, 18, 40, 60, 61, 63.
வல்வாய்; 44, 65, 66, 70.

IV கிஞ்சுகத்தர்; 62.
சிஞ்சுகத்தின்; 46—
சிஞ்சுகத்த; 9, 23, 43, 52.
சிஞ்சுகத்தர்; 19, 21, 29.
கிஞ்சுகத்தின்; 25.
கிஞ்சுகத்த; 65, 66.
கிஞ்சுகத்தி; 41.

கிரியொத்தனர்சுற்ற; 9, 19, 21, 25, 29, 41, 62, 66,
விசையோர்திசைசெல்ல; 46—
இசையோர்திசைசெல்ல; 60.
கிரியொத்தனசுற்ற; 65.
கிரியொத்தனர்கிட்ட; 52.
சிகையோர்திசைசெல்ல; 23, 43.
மிசையோர்திசைசெல்ல; 1, 2, 11, 26, 41, 61, 63, 70.

## 7001

I கூயுரைப்ப; 46—
கூயுரைப்பர்; 11, 31, 39.
கூயுரைப்பு; 41.
கூஉயுரைப்ப; 66.
கூயிரைப்ப; 18.

குலமால்வரையேனும்; 46—
குலமால்வரையென்னும்; 1, 19, 21, 25, 41, 62, 63, 65, 66.
குலமால்வரைபேணும்; 41.
குலமால்வரையேயும்; 41.
குலமால்வரையோனும்; 2.
குளிர்மால்வரையென்னும்; 9.

II சாயுரைப்பரியவாய; 46—
சாயுரைப்பரியதாய; 41.
சாயுரைப்பரிதாய; 66.
தாயுரைப்பரிதாய; 9, 21, 29, 65.
தாயுரைப்பரியவாய; 41, 63.
தாயுரைப்பரியதாய; 25, 62.

III கலவைக்களிவாசம்; 46—
கலவைகளிவாசம்; 11.
கலவைத்திணிவாசம்; 9, 19, 21, 25, 29, 62.
கலவைத்தனிவாசம்; 41, 66.

IV வந்துவிளம்ப; 46—
வந்துவிளங்க; 31, 39.
வந்துவிளம்பும்; 63,
எங்கும்விளம்ப; 41.
எங்கும்விளங்க; 66

## 7002

I எரிவீசிவிழிக்கும்; 46—
எரிவீசவிழிக்கும்; 18, 39–41, 60.
எரிவீசவிசிக்கும்; 61.
எரிவீடுவிழிக்கும்; 41.
எதிர்வீசிவிழிக்கும்; 26, 44, 70.

II நேத்திரத்தர்; 46—
நேத்திரத்து; 66.

இறைநின்றுழிநில்லாக்; 46—
இறைநின்றுழிநில்லார்; 9.
நிறைநின்றுழிநில்லாக்; 41.

IV பதிஞயிரர்சுற்ற; 46—
பதிஞயிரசுற்ற; 1.
பதிஞயிரச்சுற்ற; 25.

## 7003

I தோரணத்த; 1, 9, 11, 18, 19, 21, 23, 25, 29, 40, 41, 43, 44, 52, 60–63, 65, 66, 70.
தோரணத்தின்; 46—
தோரணத்தன்; 2.
தோரணத்தர்; 26.

மணிவாயின்மிசைச்சூல்; 46—
மணிவாசன்மிசைச்சூல்; 18, 40‘ 63.
மணிவாசன்மிசைச்சூழ்; 2, 11, 70.

II நீரணைத்த; 46—
நீரணைத்து; 41.
நீரணத்த; 41.

முகிலாமென நின்ருன்; 46—
முகிலாமென நின்ருர்; 2, 23, 43.
முகிலாமென நின்ற; 9, 19, 21, 25, 41, 62, 65.

III ஆரணத்தையரியையம்; 46—
ஆரணத்தையரியை; 65, 66, 70.
ஆரணத்தையமுதை; 18, 40, 60, 61.
ஆரணத்தமறையை; 41.
ஆரணத்தமுதை; 41, 52.
ஆரணத்தரியைம்; 2.
ஆரணப்பொருளை; 31, 39.
ஆரணத்தையறிவை; 63.

மறைதேடும்; 1, 2, 9, 11, 19, 21, 23, 25, 26, 29. 42, 43, 62, 63, 65, 66, 68, 70.
மறைநேடும்; 46—
மறைசொல்லும்; 18, 40, 60, 61.
அம்மறைதேடும்; 31, 39, 52.
அரிதேடும்; 41.
அம்மறைசொல்லும்; 41.

IV கண்கொடுகண்டான்; 46—
கண்ணினிற்கண்டான்; 1, 2. 11, 63.
கண்ணெதிர்கண்டான்; 9, 19, 21, 25, 29, 41, 52, 62, 65, 66.

## 7004

I மடித்தவாயினன்; 46—
மடித்தவாயின்; 31, 66.
மடித்தவாயின· 41.
மடித்தவாயன்; 1, 2, 11, 23, 26, 43, 44, 70.

II பொடித்திழிந்தவிழியன்; 46—
பொடித்தழன்றவிழியன்; 9, 18, 19, 21, 25, 29, 40, 44, 60–62, 65, 66.
பொடித்திழிந்தவிழியின்; 41.

அதுபோழ்தின்; 46—
அதுபோழ்தில்; 26, 44, 70,
அதுபோதில்; 1, 2, 11, 19, 21, 23, 29, 43.
அதுபோதின்; 25, 39, 61, 62, 65.

III இடித்தவன்றிசை; 46—
இடித்தவானம்; 9, 66.
இடித்தவானகம்; 19, 21, 25, 29, 41, 62, 65.

எரிந்ததுநெஞ்சம்; 1, 2, 11, 18, 23, 40, 41, 43, 52, 60–63.
எரிந்தனநெஞ்சம்; 46—
எரிந்தனநெஞ்சு; 9, 25, 29.
எரிந்துநெஞ்சு; 19, 21, 31, 39, 65, 66.

IV கண்ணிஞெடு; 41, 52.
கண்ணிேனெடு; 46—
கண்ஞெடு; 1, 2, 11, 26, 31, 39, 41, 44, 70.
கண்ணின்; 9, 66.
கண்ணினன்; 41.
கண்களோடு; 63.

இடத்திரடோள்கள்; 46—
இடந்திரடோள்கள்; 2, 11, 31, 39, 41, 62, 63.
இடந்திரடோள்களே; 1.

## 7005

I அவ்வழிகண்டான்; 46—
அவ்வழிக்கண்டான்; 41.

II மாகராகநிறை; 46—
மாகராகநிற; 9, 18, 19, 21, 23, 25, 31, 39-41, 43, 60-63, 66.

வாளொளியோனே; 46—
வாளொளியானே; 23, 43.
வாளொளியோனும்; 63.

III ஏகராசியினின்; 46—
ஏகராசியினில்; 2, 9, 11, 18, 19, 21, 23, 25, 26, 39, 40, 43, 44, 60-62, 65, 66, 70.

எய்தவெதிர்க்கும்; 46—
எய்தவுயிர்க்கும்; 9, 19, 21, 23, 25, 29, 41, 43, 62, 65, 66.
எய்திலெதிர்க்கும்; 1.
எய்திவெதிர்க்கும்; 52.
எய்தியெதிர்க்கும்; 41.

## 7006

I ஏனேயோனிவனிராமன்; 46—
ஏனேயோனவனிராமன்; 19, 21, 25, 62, 65, 66.
ஏனேயோனவ்விராமன்; 9, 41, 63.
ஏனேயோனேயவ்விராமன்;
ஏனேயோரனவிராமன்; 41.

II உரைசெய்கின்றது; 46—
உரைசெய்தது; 23, 26, 43, 70.
உரைக்கின்றது; 9, 21, 25, 29, 41, 62, 65, 66.

வென்றிச்; 46—
வீர; 31, 39, 61, 62.
வேறிச்; 9, 18, 19, 21, 23, 25, 26, 40, 41, 43, 52, 60, 66, 70.
வேறினிச்; 29, 65.

III சேனேவீரரையும்; 1, 2, 11, 26.
சேனேவீரர்படையைத்; 46—
சேனேவீரர்தமைத்; 23, 43.
சேனேவீரரையுரைத்; 63.
சேனேவீரருளரைத்; 31, 39.
சேனேவீரபெயரைத்; 44, 70.
சேனேயோரையடையத்; 18, 40, 41, 52, 60.

தெரிக்கென்று; 1, 11.
தெரியென்று; 46—
தெரிகென்று; 2, 23, 26, 43.
தெரியென்ன; 31, 39.
தெரியென்னுத்; 61.
சேனேவீரரைத்தெரிந்துரையென்று; 41.
சேனேவீரரைச்செப்பிடுகின்றெனத்; 9, 66.
சேனேவீரரைச்செப்பிடுகென்னத்; 19, 21, 29, 62.
சேனேவீரர்தமைச்செப்பிடுகென்றே; 41.
சேனேவீரர்தமைச்செப்பிடுகென்னத்; 41.

IV தான்வினவவெதிர்; 46—
தான்வினவமிகு; 61.

## 7007

I இங்கிவன்படை; 46—
இங்கிவன்பண்டு; 41.
இங்கிவன்முன்; 9. 19, 21, 25, 29, 41, 62, 66.
இங்கிவன்றனி; 31, 39.
இங்கிவர்படை; 41.
இங்கிவர்முன்; 65.
இங்குக்கொல்படை; 41.
இங்கவன்படை; 63.

இலங்கையர்மன்னன்; 46—
இலங்கையமன்னன்; 65.
இலங்கையான்மன்னன்; 70.

II என்னலுமுதிர்ந்த; 46—
என்னவுமுதிர்ந்த; 19, 21, 25, 29, 41, 62, 65.
என்னனமுதிர்ந்த; 9, 66.

என்னுமுதிர்ந்த; 2.
என்றலுமுதிர்ந்த; 1, 11, 18, 31, 39–41, 52, 60, 61, 63.

சலத்தால்; 46—
சலத்தான்; 63.
சினத்தான்; 41.

III வாள்கொடவளாகம்; 46—
வாள்கொடுமுங்கை; 66.
வாளுருவியங்கை; 39.
வாளுருவியுங்கை; 19, 21, 25, 29 31, 41, 62, 63, 65.
வாளதுகொடுங்கை; 9.
வாளொடவளாகம்; 1, 2, 11, 41.

விளங்கும்; 46—
விளக்கும்; 1, 11, 41, 60.
வளர்க்கும்; 2.
அரற்றக்; 9, 19, 21, 25, 29, 31, 41, 62, 63, 65, 66.

IV நாசிசெவிகொய்து; 46—
நாசிசெவியோடு; 1.
நாசியொடுகொய்து; 31, 39.

## 7008

I அறக்கணல்லதொரு; 18, 19, 21, 25, 29, 31, 39–41, 52, 60–62, 65, 66.
அறக்கணெனபதொரு; 46—

கண்ணிலனுகி; 46—
கண்ணினனுகி; 1, 2, 11, 23, 26, 41, 44, 63, 70.
கண்ணுளனுகி; 41.

II நிறக்கருங்கடலுள்; 46—
நிறக்கருங்கடல்; 9, 19, 21, 25, 29, 62, 65, 66.
நிறக்கருங்கடலின்(ல்); 31, 41.
நிறக்கடறுயில்; 41.
நிறக்கடுந்தகை; 26, 70,
நிறக்கடுந்தகைமை; 18, 40, 41, 60, 64.
நிறக்கடுந்தகைய; 1, 2, 11, 23, 41, 43, 63.
நிறக்கடுந்தகையன். 63.
நிறத்தருந்தகைய; 44.

நேமியினின்று; 46—
நேமியினின்றும்; 60.
நேமியினீடு; 9, 19, 21, 25, 29, 41, 62, 65, 66.
நேமியனின்ற; 39.
நீதியினின்று; 1, 2, 11, 23, 26, 43, 44, 63, 70.
நீதியினின்றும்; 18, 40, 41, 61.
உண்மையினின்று; 44.

III துறக்கமெய்தியவரும்; 46—
துறக்கமெய்திமலரும்; 1.
துறக்கமெய்தியெவரும்; 23, 44,
துறக்கமெய்தினரும்; 25.
துறக்கமேயினரும்; 9, 19, 21, 29, 62, 65, 66.
துறக்கவேயினர்களும்; 41.

IV உறக்கமென்பதனே; 46—
உறக்கமென்பதை; 9, 19, 21, 25, 29, 62, 65, 66.

## 7009

I கையவன்; 26, 41, 52, 61, 62, 65, 66, 68, 70.
கய்யவன்; 46—

தொடவமைந்த; 46—
தொடவமைத்த; 44.
தொடதழைத்த; 23.
தொடவழைத்த; 26, 70.

கரத்தான்; 46—
தரத்தார்; 11.
கரத்தன்: 31.

ஐயவன்றெடமைந்தகரத்தான்; 2.
கையவன்றெடமைந்தகரத்தன்; 63

II ஐய; 18, 26, 40, 41, 52 60, 61.
நய்ய; 46—
நைய; 41.

அய்ய; 1, 19, 21, 29, 31, 65, 66.
அய்யன்; 9.
இவ்வண்டம்; 1, 2, 9, 11, 26, 29, 40, 41, 44, 52, 60, 61, 63, 65, 70.
இவண்டம்; 46—
இவ்வண்டர்; 66.

III செய்தவன்; 46—
செய்ததிண்மை; 61.
செய்யவன்; 1, 2, 9, 11, 62.
செய்யதிண்மை; 18, 60.
செய்யதிண்மைச்; 40, 41.
செய்யும்வன்; 23, 26, 44.
செயுமவன்; 70.

செருவினிற்றிகழ்கின்ருன்; 46—
செருவினின்றிகழ்கின்ருன்; 52.
செருவிற்றிகழ்கின்ருன்; 2, 9, 11, 18, 19, 21, 23, 25, 26, 29, 31, 39, 41, 44, 60–62, 65, 66, 70.

IV வெய்யவன்புதல்வன்; 46—
வெய்யவன்மகன்; 9, 19, 21, 25, 29, 41, 62, 65, 66.

வெய்யான்; 46—
வெய்யோன்; 2, 11, 18, 23, 31, 39, 40, 60, 61.

## 7010

I தந்தைமற்றையவன்; 46—
தந்தைமற்றவன; 52, 68.
தந்தைமற்றுவந்து; 31, 39.
மைந்தன்மற்றவர்; 41.
மைந்தன்மற்றிவன்; 41.
மைந்தன்மற்றையவன்; 41.
சார்வில்வலத்தோன்; 23, 40, 41, 43, 44, 68, 70.
சார்வில்வலத்தோர்; 46—
சார்வின்வலத்தோன்; 18, 60, 61.
சார்வில்சலித்தே; 25.
சார்பில்வலத்தோள்; 26.
சாயவலத்தோர்; 63.
என்பர்சலித்தே; 9. 19, 21, 29, 41, 65, 66.
என்பர்சலித்தோர்; 31, 39, 41.
என்பர்வலத்தோர்; 62.
மாள்வில்வலத்தோர்; 41.

II அந்தரத்தரமுதார்கலி; 46—
அந்தரத்தர்முதலார்கலி; 26, 70.
அந்தரத்தர்கடையார்கலி; 23.
அந்தரத்திமிழ்தடார்கலி; 39.
அந்தரத்தரமிழ்தடார்கலி; 31.
அந்தரத்திலமுதார்கலி; 18, 40, 41, 60, 61.
அந்தரத்திலுளார்வலி; 41.
அந்தரத்திலுள்ளார்வலி; 9, 19, 21, 25, 29, 62, 65.
அந்தரத்தினமுதார்கலி; 2, 41, 44 ,63.
அத்தரத்தினமுதார்வலி; 1.
அந்தரத்தினுள்ளார்வலி; 66.

காண; 46—
கால; 18, 23, 26, 31, 39–41, 43, 44, 60–62, 70.
ஈய; 1, 2, 11, 41.
சாய; 9, 19, 21, 25, 29, 41, 65, 66.

III மந்தரத்தினெடும்; 46—
மந்தரத்தினெடு; 2, 11, 18, 26, 31, 39, 40, 44, 70.
மந்தரத்தொடும்; 9, 19, 21, 25, 29, 41. 62, 65, 66.
மந்திரத்தினெடும்; 63.
கந்தரத்தினெடும்; 23, 43.

வாசுகியோடும்; 46—
வாசுகியோடு; 44.
வாசுகிசுற்றிச்; 18, 40, 41, 60, 61.

